உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீ கந்தபுராணம்.

## மகேந்திரகாண்டம்

(வடமொழியில் 387 சுலோகங்களுள்ள)

மூலமும், (1178 பாடல்கள்)

மதுரைத்தமிழ்ச்சங்கவித்துவானும் இந்துமதப்பிரசாரகரும் ஆகிய
யாழ்ப்பாணம் காரை
**பிரமஸ்ரீ. கா. சிவசிதம்பரஐயரவர்கள்**
இயற்றிய
**பதவுரையும்.**

இவை
யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்
**ஸ்ரீமாந். அ. குமாரசுவாமிப்புலவரவர்களால்**
பரிசோதிக்கப்பெற்று,
உரையாசிரியர்புதல்வராகிய
**சிவஞானசுந்தரசர்மாவால்**

சென்னபட்டணம்
சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.
சாதாரண௵ கார்த்திகைமீ. (1910) 16-11-1910 to 14-12-1910
இதன்விலை ரூபா - உ.

ஸ்ரீமத். சுவாமிநாதபண்டிதரவர்கள் யான்கேட்டுக்கொண்டபடி, இதனையச்சிடுதற்கண், கல்வியறிவுமுதலியவற்றாற்செய்த பேருபகாரங்கள்பல. அவை, அவர்கள், எமது தந்தையாரவர்களிடத்துவைத்திருக்கின்ற நட்பின் மிகுதியையும், பிறருந்தம்மைப்போலவே எல்லா நன்மைகளையும் அடைதல்வேண்டுமென்னுங் கருத்து அவர்களிடத்தென்று முண்மையையும் நன்குவிளக்கின.

இங்ஙனம்,

சிவஞானசுந்தரசர்மா.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ கந்தபுராணம்.

## மகேந்திரகாண்டம்

### மூலமு முரையும்.



மகா + இந்திரம் - மகேந்திரம். பெருந்தலைமையையுடைய தென்பது பொருள். மகேந்திரத்தின் சரித்திரங்களை உணர்த்திய பகுதி மகேந்திரகாண்டமெனப்படும்.

---

## வீரவாகுகந்தமாதனஞ்செல்படலம்.



1. விரிஞ்சன்மாறேவராலும்வெலற்கரும்விறலோனாகிப்
பெருஞ்சுரர்பதமும்வேதவொழுக்கமும்பிறவுமாற்றி
யருஞ்சிறையவர்க்குச்செய்தவவுணர்கோனாவிகொள்வான்
பரஞ்சுடருருவாய்வந்தகுமரனைப்பணிதல்செய்வாம்.

இதன்பொருள்: விரிஞ்சன் (ஆலும்) - பிரமாவினாலும்,—மால் (ஆலும்) - விஷ்ணுவினாலும்,—தேவராலும் - (இந்திராதி) தேவர்களாலும்,— வெலற்கு அரும் விறலோன் ஆகி - வெல்லுதற்கரிய வலிமையையுடையவனாய்,—பெரும் சுரர் பதமும் - பெருமை பொருந்திய வத்தேவர்களுடையபதவியையும்,—வேத ஒழுக்கமும் - வைதிகவொழுக்கத்தையும்,—பிறவும் - மற்றுள்ளனவற்றையும்,—மாற்றி - நீக்கி,—அவர்க்கு அரும் சிறை செய்த - அத்தேவர்களுக்குச் (சகித்தற்) கரிய (வேதனையைத்தருகின்ற) சிறையை நியமித்தவனாகிய,—அவுணர் கோன் - அசுரர்க் கரசனானசூரபன்மனது,—ஆவிகொள்வான் - உயிரைக்கவரும்படி,—பரம் சுடர் உருவாய் - பரஞ்சோதியாகிய சிவபெருமானே உருவமாய்,—வந்தகுமரனை - தோன்றியருளிய குமாரஸ்வாமியை,—பணிதல் செய்வாம் - (யாம்) வணங்குவாம். என்றவாறு.

விரிஞ்சன் என்பது அன்னப்பறவையையுயர்த்தியவனென்னும் பொருளையுடையது. வி - பறவை. ரிச் - ஊர்தல். (படைப்பவனெனவும் பொருள்படும்; அதற்குப்பகுதி ரச்; அது செய்தல் என்னும் பொருளையுடையது. வி - உபசர்க்கம்) மாலென்பது பெருமையையுடையவனென்னும் பொருளது. தேவரென்பது விண்ணுலகத்தில் வசிப்பவரென்னும் பொருளுடையது. அது திவ்வென்னும் பகுதியிலிருந்து பிறந்தது; விண்ணுலகம் என்பது பொருள். விரிஞ்சன் மாலென முன்னர்வைத்தெண்ணப்பட்டமையால் தேவர் என்றது இந்திராதி தேவரையென்க. விரிஞ்சன்மாலாகிய தேவரெனினும் அமையும். தேவராலும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு. சிவபிரானுடைய வரத்தினாலே எவரையும் வெல்லும் வலிமையுடையனாயினனென்பது போதர 'விறலோனாகி' என ஆக்கமொடு

ளைந்தார், "செயற்கைப்பொருளை யாக்கமொடு கிளத்தல்" என்பதோத்தாகலின். பெருஞ்சுரர் மேற்குறிக்கப்பட்ட பிரமவிஷ்ணுக்கள் முதலிய தேவரெனக்கொள்க. பதமென்றது வரிசையையும் பதவியையும்; வரிசை - மேன்மை; பதவி - உலகம்;இவற்றை விரிஞ்சனாதிதேவர்கட்கேற்றபெற்றிகொள்க. பதமும் என்னும் உம்மை ஒழுக்கமும், பிறவும் என்பவற்றோடியைந்து எண்ணுக நின்றது. வெலற்கரும் விறலோனாதல் பதமுதலியவற்றை மாற்றுதற்குக் காரணமாதலின் ஆகி என்னும் வினையெச்சங்காரணப்பொருட்டு. பிறவும் என்பது சிவார்ச்சனை அதிகார முதலியவற்றை. வேதவொழுக்கம் - வைதிகநெறியிலொழுகுதல். அவை செபம், தபம், ஓமம் முதலியன. சிறை என்பது கட்டுப்பாடு என்னும் பொருளையுடையது. பிரமாவுக்குத்தினந்தோறும் பஞ்சாங்கம் சொல்லுதன் முதலிய கட்டுப்பாடும், விஷ்ணுவுக்கு நினைத்தவுடனே வரவேண்டுமென்னுங் கட்டுப்பாடும், சயந்தன்முதலியதேவர்கட்குப் பாடிகாவலிற் பட்டுக்கிடத்தல்வேண்டுமென்னும் கட்டுப்பாடுமடங்க அருஞ்சிறையவர்க்குச் செய்த என்றார்; அருமை - சகிக்கமுடியாமை. அது பிரம விட்டுணுக்களுக்கு நித்தியகன்மானுட்டான முதலியவற்றிற் கிடையூறு விளைத்தமையாலும் சயந்தன் முதலியோர்க்குக் கடுந்தண்டம் புரிந்தமையாலுமுளதாயது. அவுணரென்னும்பதம் அசுரரென்னும் பதம்போல அமிர்தவுணவை யிழந்தவரென்னும் பொருளையுடையதாம். தன்காலத்தசுரர்க் கரசனாதலோடு முன்னும்பின்னும் உள்ள அவுணர்யாரினும் மேம்பட்டவனாதலின் 'அவுணர் கோன்' என்றார். அவுணர்கோனுவிகொள்வான் வந்தகுமரனென்பது அவுணர்கோனுக்கு முற்பிறப்பிற்கொடுத்தருளிய வரத்தின்படி அவனுடைய ஆவியை ஆட்கொண்டருளவந்த குமரனென மற்றுமொருபொருடோன்ற நின்றது. இன்னும் மேலான அக்கினிப்பொறிவடிவாயவதரித்த குமரனெனவும் பொருள் கொள்ளப்படும்; மேலானவக்கினி - பூதாக்கினிக்கு மேலாகிய ஞானாக்கினி. குமரனென்பது இழிவாகிய பாவங்களை நீக்கியருளுகின்றவரென்னும் பொருளையுடையது. இனி என்ஞான்றும் ஒருபடித்தாய குமாரப்பருவத்தையுடையவரெனவும் பொருள்படும். கொள்வானென்னும் வினையெச்சம் வந்த என்பதனோடியைந்து காரியப்பொருட்டாய்நின்றது.

காண்டவாரம்பமாகலின் வழிபடுகடவுள் வணக்கங் கூறினார்; ஏனையகாண்டங்கட்கு மிவ்வாறுரைத்துக்கொள்க. (க)

2. இந்திரனாதியானவமரருமேனையோரும்
புந்தியினுவகைபூத்துப்புடைதனிலொழுகிப்போற்றச்
செந்திமாநகரந்தன்னிற்சீயமெல்லணைமேல்வைகுங்
கந்தவேளருளினீராலினையனகருதலுற்றான்.

இ — ள். இந்திரன் ஆதி ஆன அமரரும் - இந்திரன்முதலிய தேவர்களும்,—ஏனையோரும் புந்தியி னுவகை பூத்து - வீரவாகுதேவர் முதலியோரும் மனசிற் சந்தோஷம் மிகுந்து,—புடைதனில் ஒழுகிப் போற்ற - பக்கத்தில் வந்து (நின்று) துதிக்க,—செந்தி மாநகரம் தன்னில் - திருச்செந்தூரென்னுஞ் சீரிய திருப்பதியிலே,—சீயம் மெல் அணை மேல் வைகும் கந்தவேள் - சிங்கத்தாற் சுமக்கப்படுகின்ற மெல்லிய ஆசனத்தின்மீது எழுந்தருளியிருக்கின்ற கந்தஸ்வாமி,—அருளின் நீரால் இனையன கருதல் உற்றான் - தமதருளாகிய குணத்தினாலே இவ்வாறு திருவுள்ளத்திற் சிந்திப்பாராயினார். எ - று.

தன் இரண்டும் சாரியை. உம்மைகள் எண். இன் தவிர்வழி வந்த சாரியை. (உ)

3. நான்முகனாதியானநாகருமுனிவரும்போன்
மேன்முறையவுணராகும்வியன்றொகையவருமெங்கோன்
கான்முளைநெறியரேனுங்கடியரைமுடிவுசெய்த
ஞான்முறையியற்கையாகுநுவலருமறனுமஃதே.

இ — ள். நான்முகன் ஆதி ஆன நாகரும் முனிவரும் போல் - பிரமன் முதலிய தேவர்களையும் முனிவர்களையும் போல,—மேல் முறை - மேன்மையான முறையினையுடைய,—அவுணர் ஆகும் வியன் தொகையவரும்-அவுணராகிய பெருங்கூட்டத்தவரும்,—எம்கோன் கான்முளை நெறியர் - எம்பெருமானுக்குப் புத்திரமுறைமை உள்ளவர்கள்,—எனும் - அங்கனமெனினும்,—கடியமை முடிவு செய்தல் - கொடியவர்களைச் சங்கரித்தல்,—நூல்முறை இயற்கை ஆகும் - நீதிசாத்திரத்திலே விதிக்கப்பட்ட முறைமையாகிய இயல்பாகும்,—நுவல அரும் அறனும் அஃதே - (அதுவுமன்றிச்) சொல்லுதற்கரிய தருமமுறையும் அவ்வாறேயாம். எ — று.

ஏகாரம் தேற்றம். மேன்முறை நெறியர் என்பது "ஓஒ பெரியம்" என்புழிப்போல இகழ்ச்சி. தொகையவரும் அறனும் என்பவற்றில் உம்மை இறந்தது தழீஇயவெச்சம். ஏனையவற்றில் எண். (௩)

4. இற்றிது துணிபாமேனுமெண்ணெழிற்சூரன்றன்னை
யற்றமில்சிறப்பின்வைகுமவன்றமர்தம்மையெல்லாஞ்
செற்றிடன்முறையதன்றுற்றேவர்தஞ்சிறைவிட்டுய்ய
மற்றவன்றனக்கோரொற்றைவல்லையில்விடுத்துமன்றே.

இ — ள். இற்று இது துணிபாம் - இங்ஙனமாய இதுவே நிச்சயம்,—எனும் - ஆயினும்,—எண் எழில் சூரன் தன்னை - (எவர்களும்) மதிக்கத்தக்க செல்வச்சிறப்பினையுடைய சூரபன்மனையும்,—அற்றம் இல் சிறப்பில் வைகும் அவன்தமர் தம்மை எல்லாம் செற்றிடல் முறையது அன்று - குறைவில்லாத சிறப்புடன் வாழ்கின்ற அவனது உறவினர்களையும் எல்லாம் கொல்லுதல் முறைமையன்று,—தேவர்தம் சிறைவிட்டு உய்ய அவன்தனக்கு - (ஆகையால்) தேவர்களது சிறையை விடுத்து உய்யும்பொருட்டு அச்சூரபன்மனுக்கு (நீதியையெடுத்துப்போதித்தற்கு),—ஓர் ஒற்றை வல்லையில் விடுத்தும் - ஒரு தூதனை விரைவாக (யாம்) அனுப்புவோம். எ — று.

ஆல், மற்று, மன், ஓ அசை. தன் இரண்டும் அகரமும் தம் இரண்டும் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. உம்மை உயர்வுசிறப்பு. (௪)

5. தூண்டுநம்மொற்றன்மாற்றஞ்சூரனுமவுணன்கேளா
வீண்டிடுசிறையினீக்கியமரரைவிடுப்பனென்னில்
மாண்டிடலின்றியின்னும்வாழியமறுத்துளானே
லாண்டுசென்றடுதுமீதேயறமெனவகத்துட்கொண்டான்.

இ — ள். தூண்டு நம் ஒற்றன் மாற்றம் - நாம் அனுப்புகின்ற தூதனது நீதிமொழியை,—அவுணன் ஆம் சூரன் கேளா - அவுணனாகிய சூரபன்மன் கேட்டு,—வீண்டிடு சிறையின் அமரரை நீக்கி விடுப்பன் என்னில் - வீழ்ந்துகிடக்கும் சிறையினின்றும் தேவரை நீக்கிவிடுவானாயின்,—மாண்டிடல் இன்றி இன்னும் வாழிய - இறவாமல் இன்னும் (பலகாலம்) வாழ்க,—மறுத்து உளான் எல் - உடன்படாது மறுத்துளானாயின்,—ஆண்டு சென்று அடுதும் - (யாம்) அவ்விடத்துச்சென்று (அவனைக்) கொல்வோம்,—ஈதே அறம் என அகத்துள் கொண்டான் - இதுவே தருமசாஸ்திரமுறைமையென்று திருவுள்ளத்திற் சிந்தித்தார். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை இறந்ததுதழீஇய வெச்சம். (௫)

6. வடித்தசெங்கதிர்வேலண்ண்ணன்மாலயன்மகவானாதி
யடுத்தபண்ணவரைநோக்கியவுணர்தங்கிளேயையெல்லா
முடித்திடப்பெயர்துநாளேமுன்னமோர்தூதன்றன்னை
விடுத்தனமுணர்தல்வேண்டும்வெய்யசூர்கருத்தையென்றான்.

இ — ள். வடித்த செம் கதிர் வேல் அண்ணல் - கூரிய செவ்வொளிபொருந்திய வேலாயுதத்தினையுடைய குமாரக்கடவுள்,—அடுத்த மால் அயன் மகவான் ஆதி பண்ண வரை நோக்கி - சமீபத்தினிற்கின்ற விஷ்ணு பிரமதேவர் இந்திரன்முதலிய தேவர்களைப்பார்த்து,—அவுணர்தம் கிளையையெல்லாம் முடித்திட நாளை பெயர்தும் - அசுரர் கூட்டங்களையெல்லாம் அழிக்கும் பொருட்டு நாளைக்குப்போவேம்,—முன்னம் ஓர் தூதன் தன்னை விடுத்தனம் - (அதற்கு) முன்னமே யோர் தூதவனையனுப்பி,—வெய்ய சூர் கருத்தை உணர்தல் வேண்டும் என்றான் - கொடியவனாகிய சூரபன்மனது (மன) எண்ணத்தை யறிதல்வேண்டுமென்று கூறியருளினார். எ — று.

அடுத்தபண்ணவர் என்பதற்கு சரணாக அடைந்த தேவரெனினுமமையும். தம், தன் சாரியை. (சு)

7. கடலுடைக்கடுவையுண்டோன்காதலனினையசெப்ப
மடலுடைப்பதுமப்போதில்வைகினோன்மாயன்கேளா
வடலுடைப்பெரும்போரெந்தையாற்றுமுன்சூரன்முன்னோர்
மிடலுடைத்தூதன்றன்னைவிடுத்தலேயறத்தாறென்றார்.

இ - ள். கடல் உடைக் கடுவை உண்டோன் காதலன் இனைய செப்ப-(திருப்பாற்) கடலினது விஷத்தையுண்டருளிய சிவபெருமானது திருக்குமாரராகிய கந்தஸ்வாமி இவைகளைச் சொல்ல,—மடல் உடைப் பதுமம் போதில் வைகினோன் மாயன்கேளா - இதழையுடைய தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியுங் கேட்டு,—எந்தை - எம்பெருமானே,—அடல் உடைப் பெரும்போர் ஆற்றுமுன் - கொல்லுந் தொழிலையுடைய பெரும்போரைச் செய்தற்குமுன்,—சூரன் முன் ஓர் மிடல் உடைத் தூதன் தன்னை விடுத்தலே அறத்து ஆறு என்றார் - சூரபன்மனிடத்திலே வலிமையையுடைய ஒரு தூதவனையனுப்புதலே தருமமுறையென்று கூறினார்கள். எ - று.

திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்தில் மந்தரமாகிய மத்திற்கு தாம்பாயிருந்தவாசுகி அதனுள்ளுகுத்த நஞ்சைக் கடலுடைக் கடு என்றது உபசாரம். தன் அத்து சாரியை. ஏகாரம் தேற்றம். (எ)

8. என்றலுங்குமாரமூர்த்தியிப்பெருந்திறலோர்தம்முள்
வென்றிகொள்சூரன்றன்பால்வீரமாமகேந்திரத்துச்
சென்றிடவிடுத்தும்யாரைச்செப்புதிரென்னலோடு
நன்றெனவதனைநாடிநான்முகனவிறலுற்றான்.

இ — ள். என்றலும் - பிரமாவும் விஷ்ணுமூர்த்தியும்(இவ்வாறு) கூறியவுடனே,— குமரமூர்த்தி - குமாரக்கடவுள் (அவர்களைப்பார்த்து),—இப்பெரும் திறலோர் தம்முள் - இங்குவந்திருக்கும் பெரிய பலசாலிகளுக்குள்,—வென்றிகொள் சூரன் தன்பால் - வெற்றிபொருந்திய சூரபன்மனிடத்தில்,—மாவீர மகேந்திரத்து சென்றிட - இலட்சுமிவிலாசம்பொருந்திய வீரமகேந்திரபுரத்துக்குப் போகுமாறு,—யாரை விடுத்தும் செப்புதிர் என்னலோடும் - (தூதாக) யாரையனுப்புவோம் சொல்லுங்கள் என்றவுடனே,—நன்று என நான்முகன் அதனைநாடி நவில்தல் உற்றான் - நல்லதென்று பிரமதேவர் அதனையாலோசித்துச் சொல்லத்தொடங்கினார். எ - று.

நன்றென என்பதற்குக் கேட்டோர் இதுமிக நல்லதென்று கூறவெனப் பொருள் கொள்ளுதலுமொன்று. தம் தன் சாரியை. (அ)

9. மெல்லெனவுலவைக்கோனும்வீரமாமகேந்திரத்திற்
செல்லரிதெனக்குமற்றேசெய்பணிநெறியாலன்றி
யொல்லையிலங்கணேகியொன்னலர்க்கடந்துமீள
வல்லவனினையவீரவாகுவேயாகுமென்றான்.

இ — ள். செய்பணி நெறி ஆல் அன்றி - செய்கின்றபணி முறை காரணமாய ன்றி,—உலவைக்கோனும் மெல்லென மாவீரமகேந்திரத்தில் செல் அரிது - வாயுதேவ னும் மிருதுவாகச் சிறந்த வீரமகேந்திரத்திலே போகக்கூடாது,—எனக்கும் அற்று ஏ - எனக்கும் அப்படியேயாகும் (ஆதலால்),—அங்கண் ஒல்லையில் ஏகி - (அவ்வளவுகட்டுக் காவலோடுகூடிய) அந்தவீரமகேந்திரத்திலே விரைவாகச்சென்று,—ஒன்னலர்க் கடந்து மீள வல்லவன் - பகைவராகிய அசுரரைவென்று திரும்பிவரத்தக்க வலிமையுடையவ ன்,— இனையவீரவாகுவே ஆகும் என்றான் - இந்தவீரவாகு தேவரேயாம் என்றார்.எ-று

பிரமதேவரும் பஞ்சாங்கஞ் சொல்லுந்தொழிலுக்காக உட்போகலாமேயன்றிவேறு காரணங்களால் உள்ளே போகப்படாது என்பது கருத்து.

ஏகாரம் அற்றே என்பதில் தேற்றமும் வாகுவே என்பதில் தேற்றமும் பிரிநிலையு மாம். உம்மைகள் உயர்வுசிறப்பு. (கூ)

10. சதுர்முகனினையவாற்றாற்சண்முகனுளத்துக்கேற்பக்
கதுமெனவுரைத்தலோடுங்கருணைசெய்தழகிதென்று
மதுமலர்த்தொடையல்வீரவாகுவின்வதனநோக்கி
முதிர்தருமுவகைதன்னாலித்திறமொழியலுற்றான்.

இ — ள். சதுர்முகன் இனைய ஆற்றால் - பிரமதேவர் இவ்வண்ணமாக,—சண்முகன் உளத்துக்கு ஏற்ப - அறுமுகப்பெருமானது திருவுள்ளத்திற் கிசையுமாறு,—கதுமென உரைத்தலோடும் - விரைவாகச்சொல்லுதலும்,—கருணைசெய்து இது அழகு என்று - (அப்பிரமதேவர்மீது) அருள்கூர்ந்து இக்கருத்து நல்லதென்றுகூறி,—மதுமலர் தொடை யல் வீரவாகுவின் வதனம் நோக்கி - தேன்பொருந்திய மலர்மாலையணிந்த வீரவாகுதேவ ரது முகத்தைப்பார்த்து,—முதிர்தரும் உவகைதன்னால் இத்திறம் மொழியல் உற்றான் நிறைந்தமகிழ்ச்சியோடும் இவ்வண்ணங்கூறத்தொடங்கினார். எ — று. தன் சாரியை. ()

11. மயேந்திரமூதூரேகிவல்லைநீயமலனல்குஞ்
சயேந்திரஞாலத்தேரோன்றனையடுத்தொருநாற்றந்தக்
கயேந்திரன்மதலைவானோர்காப்பைவிட்டறத்தாறுன்னி
நயேந்திரவளத்திேனாடுமுறைகெனநவிறியன்றே.

இ — ள். நீ மயேந்திர மூதூர் வல்லை ஏகி - (வீரவாகுவே) நீ வீரமகேந்திரமாகிய மூதூருக்குச் சீக்கிரஞ்சென்று,—அமலன் நல்கும் சயம் இந்திர ஞாலம் தேரோன்தனை அடுத்து - சிவபெருமான் கொடுத்தருளிய வெற்றிபொருந்திய இந்திரஞாலத்தேரையு டைய சூரபன்மனையடைந்து,—ஒருநால் தந்தம் கயம் இந்திரன்மதலை வானோர் காப்பை விட்டு - ஒப்பில்லாத நான்கு கொம்புள்ள (ஐராவதம் என்னும் வெள்ளை) யானையையுடை யவனாகிய இந்திரனது மக(னை சயந்த) னையும் மற்றையதேவர்களையுஞ் சிறையினின்

றும் நீக்கி,—அறத்து ஆறு உன்னி - தருமசாத்திரமுறையைச் சிந்தித்து,—நயம் இந்திர வளம் ஒடு - நன்மையாகிய விந்திரசம்பத்தோடும்,—உறைக என நவிலுதி - இருந்துவாழ்வாயாக வென்று சொல்லு. எ - று.

அன்று ஏ அசை. தன் அத்து சாரியை. (கக)

12. அம்மொழிமறுத்துளானேல்வுணநின்கிளையையெல்லா
மிம்மெனமுடித்துநின்னையெஃகவேற்கிரையாநல்கத்
தெம்முனைகொண்டுநாளைச்செல்லுதும்யாமேயீது
மெய்ம்மையதென்றுகூறிமீள்கெனவீரன்சொல்வான்.

இ — ள். அம்மொழி மறுத்து உளான் எல் - அந்நீதிவார்த்தையை (யொப்புக்கொள்ளாது) மறுத்திருப்பானேயாயில்,—அவுண நின் கிளையை எல்லாம் - சூரபன்மனே! உனது வம்சங்களெல்லாவற்றையும்,—இம்மென முடித்து - விரைவாக அழித்து,—நின்னை எஃக வேற்கு இரையா நல்க - உன்னையுங் கூரிய வேலாயுதத்துக்கு இரையாகக் கொடுக்கும்படி,—தெம் முனை கொண்டு - பகையையும் போரையும் மேற்கொண்டு,—யாமே நாளை செல்லுதும் - நாமே நாளைக்குவருவேம்,—ஈது மெய்ம்மையது என்று கூறி - இவ்விஷயம் உண்மை வார்த்தை யென்றுசொல்லி,—மீள்க என வீரன் சொல்வான் - திரும்பிவருவாயாக வென்று (குமாரக்கடவுள்) கூறியருளலும் வீரவாகுதேவர்(இவ்வாறு) விண்ணப்பஞ்செய்வாராயினர். எ — று.

தெம்முனை உம்மைத்தொகை; முனை - போர். ஏகாரம் அசை. (கஉ)

13. வெந்திறலவுணரீண்டும்வீரமாமகேந்திரத்திற்
சுந்தரத்திருவின்வைகுஞ்சூரபன்மாவின்முன்போ
யெந்தைநீயருளிற்றெல்லாமிசைத்தவனுள்ளநாடி
வந்திடுகின்றேனென்னுவணங்கியேதொழுதுபோனான்.

இ — ள். வெம் திறல் அவுணர் ஈண்டும் மா வீரமகேந்திரத்தில் - மிக்கவலிமையையுடைய அவுணர்கள் நெருங்கி யிருக்கப்பெற்ற சிறந்த வீரமகேந்திரத்திலே,—சுந்தரம் திருவின் வைகும் சூரபன்மாவின் முன்போய் - அழகிய செல்வத்துடன் வாழ்கின்ற சூரபன்மனுக்கு எதிரேபோய்,—எந்தை நீ அருளிற்று எல்லாம் இசைத்து - எமது பிதாவே தேவரீர் கட்டளையிட்டருளிய வனைத்தையுங் கூறி,—உள்ளம் நாடி - அவனது கருத்தையறிந்து,—வந்திடுகின்றேன் என்னு - வருகின்றேன் என்று,—வணங்கியே தொழுதுபோனார் - வணங்கியஞ்சலித்து (விடைபெற்றுக்கொண்டு) சென்றார். எ — று.

உள்ளம் ஆகுபெயர். ஏகாரம் அசை. (கஉ)

14. கூர்ந்திடுகுலிசத்தண்ணல்குமரவேளொற்றன்றன்பின்
போர்ந்தனன்சென்றுவீரபெருந்திறற்சூரன்மூதூர்
சார்ந்தனைசிறையில்வானோர்சயந்தனோடிருந்தாரங்கட்
சேர்ந்தனைதேற்றிப்பின்னுன்செயலினைமுடித்தியென்றான்.

இ — ள். கூர்ந்திடு குலிசத்து அண்ணல் - கூரியவச்சிராயுதத்தையுடைய இந்திரன்,—குமரவேள் ஒற்றன் தன் பின்போர்ந்தனன் சென்று - குமாரக்கடவுளுடைய தூதுவராகிய வீரவாகு தேவருக்குப் பின்னே நடந்து சென்று,—வீர - வீரனே!—பெரும் திறல் சூரன் மூதூர் சார்ந்தனை - மிக்க வலிமையையுடைய சூரபன்மனது பழையநகரத்தையடைந்து,—வானோர் சயந்தனோடு சிறையில் இருந்தார் - அங்கே தேவர்கள் சயந்த

னோடு சிறையிலடைக்கப்பட்டிருக்கிறார்கள்,—அங்கண் சேர்ந்தனை - (அவர்களிருக்கின்ற) அவ்விடத்துக்குச் சென்று,—தேற்றி - (அவர்களுக்குப்) புத்திகளைச் சொல்லித் தெளிவித்து,—பின் உன் செயலினை முடித்தி என்றான் - பின்பு உம்முடைய காரியத்தை நிறைவேற்றுவீராகவென்றான். எ — று. தன் சாரியை. (கச)

15. அவ்வழியமரர்கோமானனையனவறைதலோடுஞ்
செவ்விதுநிற்றியற்றேசெய்வனென்றவனைநீங்கி
யெவ்வமிறுணைவராகுமெண்மருமிலக்கத்தோரு
மெய்வருந்தொடர்பிற்செல்லக்கண்ணுறீஇவிடலைசொல்வான்.

இ — ள். அவ்வழி அமரர்கோமான் அனையன அறைதலோடும் - அவ்விடத்திற்றேவராஜனாகிய இந்திரன் அவ்வாறாகச்சொல்லுதலும்,—செவ்விது நிற்றி - நல்லது நில்,—அற்றே செய்வன் என்று - அப்படியே செய்கின்றேனென்று,—அவனைநீங்கி - அவனை விட்டு நீங்கி,—எவ்வம் இல் துணைவர் ஆகும் எண்மரும் இலக்கத்தோரும் - குற்றமில்லாத தம்பிமார்களாகிய எட்டுவீரரும் இலக்ஷவீரரும்,—மெய்வரும் தொடர்பில் செல்ல - உண்மையாகிய அன்புடன்பின்றொடர்ந்துவர,—விடலை கண் உறீஇ சொல்வான் - வீரவாகு தேவர் (அவர்களைப்) பார்த்துக் கூறுகின்றார். எ - று. ஏகாரம் தேற்றம். (கரு)

16. நீயிர்கள்யாருங்கேண்மினெடுந்திரைப்பரவைவாவித்
தீயதோர்மகேந்திரத்திற்சென்றுசூர்முன்போய்நந்த
நாயகன்பணித்தமாற்றநவிலுவன்மறுத்துளானே
லாயவன்மூதூர்முற்றுமட்டபின்மீள்வனம்மா.

இ — ள். நீயிர்கள்யாரும் கேண்மின் - நீங்களெல்லீருங் கேளுங்கள்,—நெடும் திரை பரவை வாவி - பெரிய அலைகளையுடைய இக்கடலைத்தாண்டி,—தீயது ஓர்மகேந்திரத்திற் சென்று - கொடிய மகேந்திரபுரத்திற் சென்று,—சூர்முன்போய் - சூரபன்மாவுக்கு முன்னாகப்போய்,—நம்தம் நாயகன் பணித்த மாற்றம் நவிலுவன் - நமது பெருமான் கட்டளையிட்டருளிய(நீதி)வசனங்களைச் சொல்லுவேன்,—மறுத்து உளான் ஏல்-மறுத்துச் சொல்வானாயின்,—ஆயவன் மூதூர் முற்றும் அட்டபின் மீள்வன் - அச்சூரபன்மனிருக்கின்ற பழைய நகரம் முழுதும் அழித்தபின்பு திரும்பிவருவேன். எ — று.

ஓர், அம்மா அசை. தம் சாரியை. உம்மை முற்று. இனி, தீயது ஓர் என்பதற்கு தீமையையுடைய ஒப்பில்லாத எனக் கூறினும் அமையும்; தீயது ஓர் சூர் எனக்கூட்டித் தீமையைக் கருதுகின்ற சூர் என்றலு மொன்று. (கசு)

17. என்றலும்வியந்துபின்னோர்யாவருமிறைஞ்சலோடும்
பொன்றிகழாகத்தூடுபொருந்துறப்புல்லிக்கொண்டு
வன்றிறற்பூதர்தம்முண்மன்னவரோடுமங்க
ணின்றிடவருளிவல்லேநெடுங்கடல்வேலைபோந்தான்.

இ — ள். என்றலும் வியந்து பின்னோர் யாவரும் இறைஞ்சலோடும் - என்று இவ்வாறு (வீரவாகுதேவர்) கூறுதலும் ஆச்சரியங்கொண்டு தம்பிமார்களனைவரும் வணங்க,—பொன்திகழ் ஆகத்து ஊடு பொருந்துறப் புல்லிக்கொண்டு - (அவர்களைத்தமது) அழகுவிளங்காநின்ற மார்பிலே பொருந்தும்படி அணைத்துத் தழுவிக்கொண்டு,—வன்திறல் பூதர் தம் உள் மன்னவரோடும் அங்கண்நின்றிட அருளி - மிக்க வலிமை பொருந்திய பூதர்களுக்குள் தலைவராக வுள்ளவர்களோடு அவ்விடத்து நிற்கும்பொருட்டு அனுமதிகொடுத்து,—வல்லே நெடும் கடல் வேலைபோந்தான் - விரைவாகப் பெரிய கடற்கரையிலே போனார். எ — று. தம் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. (கஎ)

18. அலங்கலந்திரைகொணேமியகன்கரைமருங்கின்மேரு
விலங்கலினுயர்ந்தகந்தமாதனவெற்புத்தன்னிற்
பொலங்குவடுச்சிமீதுபொள்ளெனவிவர்தலுற்றான்
கலன்கலன்கலனென்றம்பொற்கழலமர்கழல்களார்ப்ப.

இ—ள். அலங்கல் அம் திரைகொள் நேமி அகல்கரைமருங்கில் - அசைகின்ற அலைகளையுடைய கடலினது அகன்ற கரையோரத்தில்,—மேரு விலங்கலின் உயர்ந்த கந்தமாதன வெற்புத்தன்னில் பொலம் குவடு உச்சிமீது - மேருமலையிலும் பார்க்க உயர்ந்த கந்தமாதன மலையிலுள்ள பொன்மயமான சிகரத்தினுச்சியின்மீது (வீரவாகுதேவர்),—அம் பொன்கழல் அமர்கழல்கள் கலன் கலன் கலன் என்று ஆர்ப்ப - அழகிய பொன்மயமான பாதங்களிலணிந்த வீரக்கழல்கள் கலீர் கலீர் கலீர் என்று ஒலிக்க,—பொள்ளென இவர்தல் உற்றான் - விரைந்து ஏறினர். எ—று.

தன் சாரியை. கழல் அமர் அம்பொற் கழல்களென உரைப்பாருமுளர். (௧௮)

19. புஞ்சமார்தமாலச்சூழல்பொதுளியபொதும்பர்சுற்றி
மஞ்சுநின்றறாதகந்தமாதனப்பிறங்கலும்பர்
விஞ்சுநுண்பொடிதோய்மேனிமேலவனிவரும்பான்மை
யஞ்சனவரைமேல்வெள்ளியடுக்கல்சென்றனையதன்றே.

இ—ள். புஞ்சம் ஆர் தமாலம் சூழல் பொதுளிய பொதும்பர் சுற்றி - கூட்டமாகிய பச்சிலைமரக்கூட்டங்கள் தளிர்த்திருக்கின்ற சோலையினாற் சூழப்பட்டு,—மஞ்சு நின்று அறாத - மேகம் படிந்து நீங்காத,—கந்தமாதனம் பிறங்கல் உம்பர் - கந்தமாதனமலையினுச்சியில்,—விஞ்சு நுண் பொடி தோய் மேனி மேலவன் - மேலான நுண்ணிய விபூதியைத் தரித்த மேனியையுடைய வீரவாகுதேவர்,—இவரும்பான்மை - ஏறிச்செல்லுந்தன்மை,—அஞ்சனவரை மேல் வெள்ளி அடுக்கல் சென்ற அனையது - நீலமலையின்மேல் வெள்ளி மலையேறிச்சென்றதையொத்தது. எ—று. அன்று, ஏ அசை. (௧௯)

20. கடுங்கலிமான்றேர்வெய்யோன்கையுறநிவந்தசெம்பொ
னெடுங்கிரிமிசைபோய்வீரனிற்றலும்பொறையாற்றாது
நடுங்கியதுருமுற்றென்னநனிபகிர்வுற்றதங்க
ணொடுங்கியமாவும்புள்ளுமொல்லெனவிரிந்தவன்றே.

இ—ள். கடும் கலிமான் தேர் வெய்யோன் கை உற - வேகமாகச்செல்லுகின்ற கடிவாளமிட்ட குதிரைகள் பூட்டிய தேரையுடைய சூரியன் பொருந்தும்படி,—நிவந்த செம்பொன் நெடும் கிரிமிசை போய் நிற்றலும் - உயர்ந்த செம்பொன்மயமாகிய நெடிய கந்தமாதனமலையின்மீது (வீரவாகுதேவர்) ஏறிநிற்கவும்,—பொறை ஆற்றாது நடுங்கியது - (அம்மலை) யவரைச் சுமக்கலாற்றாது நடுங்கியது,—உருமு உற்றென்ன நனிபகிர்வு உற்றது - இடிவிழுந்தாற்போலப் பெரிதும் பிளந்தது,—அம் கண் ஒடுங்கிய மாவும் புள்ளும் ஒல்லென இரிந்த - அம்மலையில்வாழ்ந்திருந்த மிருகங்களும் பட்சிகளும் விரைவாகச் சிதறியோடின. எ—று. அன்று, ஏ அசை. உம்மைகள் எண். (௨0)

21. உண்ணிறைபுள்ளுமாவுமோலிடவொலிமேல்கொண்டு
துண்ணெனவருவிதூங்கத்தோன்றியகுடுமிக்குன்ற
மண்ணலைத்தரிக்கலாற்றேனளியனேனந்தோவென்னாக்
கண்ணிடைவாரிசிந்தக்கலுழ்தல்போலுமாதோ.

இ — ள். உள்நிறை புள்ளும் மாவும் ஒலிட - உள்ளேயிருக்கின்ற பறவைகளும் விலங்குகளும் ஆரவாரஞ்செய்ய,—ஒலிமேல் கொண்டு - மிக்க வோசையுடனே,—தண்ணென அருவி தூங்க - விரைவாக அருவிசொரிய,—தோன்றிய குடுமி குன்றம் - காணப்படுகின்ற சிகரங்களையுடைய (அக்கந்தமாதன) மலை,—அளியேன் அந்தோ அண்ணலைத் தரிக்கல் ஆற்றேன் என்று - ஏழையாகிய நான் ஐயோ (இவ்) வீரவாகுதேவரைச் சுமக்கத்தக்க வலிமையுடையவனல்லேனென்று,—கண் இடை வாரிசிந்த - கண்ணிலிருந்து நீர் சொரிய,—கலுழுதல் போலும் - அழுவதை யொக்கும். எ — று.

மாது, ஒ அசை. உம்மைகள் எண். (உக)

22. அடல்கெழுதிண்டோள்வீரனடிகளின்பொறையாற்றாது
விடர்கெழுகுடுமிவெற்புவெருவலுமாண்டைவைகும்
படவரவுமிழ்ந்தசெய்யபருமணிசிதறும்பான்மை
யுடல்கெழுகுருதிதுள்ளியுகுக்குமாறொப்பதன்றே.

இ - ள். அடல்கெழு திண் தோள் வீரன் அடிகளின் பொறை ஆற்றாது - வலிமை பொருந்திய திண்ணிய புயங்களையுடைய வீரவாகுதேவரது பாதங்களின்சுமையைத் தாங்கமாட்டாமல்,—விடர்கெழு குடுமி வெற்பு வெருவலும் - குகைகள்பொருந்திய சிகரங்களையுடைய அக்கந்தமாதனம் நடுங்குதலும்,—ஆண்டைவைகும் பட அரவு உமிழ்ந்த செய்யபருமணி சிதறும்பான்மை - அவ்விடத்திலிருக்கின்ற படத்தையுடைய பாம்புகள் கக்கிய செந்நிறம்பொருந்திய பருத்த இரத்தினங்கள்சிதறுந்தன்மை(எதுபோலெனின்),- உடல்கெழு குருதி துள்ளி உகுக்குமாறு ஒப்பது - தன்னுடம்பிற்பொருந்திய இரத்தத் துளிகளைச்சிதறுந்தன்மையையொத்தது. எ — று. அன்று, ஏ அசை. (உஉ)

23. அறைகழலண்ணனிற்பவவ்வரையசையவங்க
ணுறைதருமாக்களஞ்சியொருவிலவெருவிவிண்மேற்
பறவைகள்போயதுன்பம்பட்டுழிப்பெரியர்தாமுஞ்
சிறியருநட்டோர்க்காற்றுஞ்செயன்முறைகாட்டுகின்ற.

இ — ள். அறைகழல் அண்ணல்நிற்ப - ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த (கால்களையுடைய) வீரவாகுதேவர் (ஏறி) நின்றவுடன்,—அவ்வரை அசைய - (அக்கந்தமாதன) மலையசைதலும்,—அங்கண் உறைதருமாக்கள் அஞ்சி ஒருவில - அம்மலையில்வாழ்ந்திருந்த மிருகங்கள் பயந்து ஓடிப்போகாமலிருந்தன.—பறவைகள் வெருவி விண்மேல்போய - பட்சிகள்பயந்து ஆகாயத்திற் பறந்துசென்றன. (எத்தன்மையவெனின்),—துன்பம்பட்டுழி - துன்பமுண்டாயவிடத்து,—பெரியர்தாமும் சிறியரும் - மேன்மக்களுங் கீழ்மக்களும்,—நட்டோர்க்கு ஆற்றும்செயல்முறைகாட்டுகின்ற - சினேகிதர்களுக்குச் செய்யுஞ் செய்கையின் முறைமையைக் காட்டாநின்ற தன்மையையுடையன. எ — று.

தாம் சாரியை. உம்மைகள் எண். கீழ்மக்கள் தமது சினேகிதர்களுக்கு இடர்வருங்கால் அஞ்சியோடுந் தன்மையைப்போல இங்கே பறவைகள் மலையசைந்து நடுங்கும்போது சென்றனவென்றும், மேன்மக்கள் தமதுநண்பர்களுக்கு இடர்வருங்கால் அவரை விட்டுப்போகாமல் நின்று தம்மால் இயன்றவளவு உதவுந்தன்மையைப்போல அம்மலையிலுள்ளமிருகங்கள் அவ்விடம் விட்டுச் செல்லாதிருந்தனவென்றும் கூறினர். (உங)

24. மழையுடைக்கடமால்யானைவல்லியமடங்கலெண்கு
புழையுடைத்தடக்கையாளிபொருப்பசைவுற்றகாலை
முழையிடைத்தவறிவீழ்வமுதியகாலெறியப்பட்ட
தழையுடைப்பொதும்பர்பைங்காய்தலைத்தலையுதிர்க்குமாபோல்.

இ—ள். மழை உடை கடம் மால் யானை வல்லியம் மடங்கல் எண்கூ புழையுடை தடம் கையாளி - மழைபோலும் மதநீரைச்சொரிகின்ற பெரிய யானைகளும் புலிகளுஞ் சிங்கங்களும் கரடிகளும் துவாரம்பொருந்திய பெரியகையினையுடைய யாளிகளும்,—பொருப்பு அசைவுற்றகாலை முழையிடை தவறி வீழ்வ - அம்மலையசைந்தபோது முழைஞ்சுகளினிடத்தே தவறி விழுகின்றன.—(அங்ஙனம் அவைகள்விழுகின்ற தன்மை யெதுபோலெனின்),—முதியகால் எறியப்பட்ட தழையுடைபொதும்பர் பைங்காய் தலை தலை உதிர்க்குமாபோல் - பெருங்காற்றடிக்கப்பட்டபோது தழைகளையுடைய சோலை இடந்தோறும் இடந்தோறும் பசியகாய்களையு முதிர்க்குந் தன்மையைப்போலாகும். எ — று.(உச)

25. நன்றிகொள்பரிதிப்புத்தேணகுசிரமாகவென்றாழ்
துன்றிருஞ்சடிலமாகச்சுரநதிதோயத்திங்க
ளொன்றொருபாங்கர்செல்லவோங்கிரும்பிறங்கலுச்சி
நின்றதோர்விசயத்தோளானெற்றியங்கண்ணன்போன்றான்.

இ — ள். நன்றிகொள் பரிதி புத்தேள் நகு சிரம் ஆக - நன்மைபொருந்திய தேவனாகிய சூரியன் சிரிக்கின்ற வெண்டலையாகவும்,—என்றாழ் துன்று இரும் சடிலம் ஆக - கிரணங்கள் நெருங்கிய பெரியசடைகளாகவும்,—சுரநதிதோய - ஆகாயகங்கை மேலே படியவும்,—திங்கள் ஒன்று ஒருபாங்கர் செல்ல - சந்திரன்பொருந்தி யொருபுறத்திற் போகவும்,—ஓங்கு இரும்பிறங்கல் உச்சிநின்றது ஓர்விசயம் தோளான் - உயர்ந்தபெரிய மலையினுச்சியில் நின்ற ஒப்பில்லாதவராகிய வீரவாகுதேவர்,—நெற்றி அம் கண்ணன் போன்றான் - நெற்றியில் அழகியகண்ணையுடைய சிவபெருமானை யொத்தார். எ — று.

ஓர் அசையெனினுமாம். மலையிலேறி நின்ற வீரவாகுதேவர் சிவபெருமானை யொத்தார் என்பது கருத்து. (உரு)

26. வலமிகுமொய்ம்பின்மேலோன்மலர்க்கழலுறைப்பவாற்று
தலமருகுவட்டினிற்றலன்றுதீமுனிவருய்த்த
கொலைகெழுமுயலகன்மெய்குலைந்திடப்புறத்துப்பொற்று
ணிலவணிசடையோனூன்றிநின்றிடுநிலைமைநேரும்.

இ—ள். வலமிகு மொய்ம்பின் மேலோன் மலர்கழல் உறைப்ப ஆற்றுது அலமரு குவட்டின்நிற்றல் - வீரவாகுதேவர் மலர்போன்ற தமதுகாலினால் அழுத்தும்பொழுது அதனைப்பொறுக்கலாற்றாது அசைகின்ற மலையின்மீது நிற்குந்தன்மை,— அன்றுதீமுனிவர் உய்த்த கொலைகெழு முயலகன் மெய்குலைந்திட - முற்காலத்தில் தாருகாவனத்து முனிவர்கள் அனுப்பியகொலைத் தொழில் பொருந்திய முயலகனதுசரீரம் நடுங்கும்படி,—புறத்து பொன் தாள் நிலவு அணி சடையோன் ஊன்றி நின்றிடு நிலைமை நேரும் -(அவனது) முதுகின்மீது பொன்மயமாகிய திருவடியைச் சந்திரனைத்தரித்த சடையினையுடைய சிவபெருமான் ஊன்றிநிற்றலையொக்கும். எ — று. உறைத்தல் - ஊன்றுதல். (உசு)

7. மாசிருள்செறியுந்தெண்ணீர்மறிதிரையளக்கர்வேலைப்
பாசடைப்பொதும்பர்வெற்பிற்பண்ணவன்றாதனிற்றல்
காசியிலாற்றத்தள்ளிக்களிறாடல்பதைப்பக்கம்மே
லீசனன்றடிகளூன்றியிருத்தியவியற்கைபோலும்.

இ—ள். மாசு இருள் செறியும் தெள்நீர் மறிதிரை அளக்கர் வேலை பாசு அடைபொதும்பர் வெற்பில் - களங்கம் பொருந்திய இருள்நெருங்கிய தெளிந்தநீரையும் அலைகின்ற அலைகளையுமுடைய கடற்கரையில் பசிய இலைகளையுடையசோலைசூழ்ந்த கந்தமாதனமலை

யில்,—பண்ணவன் தூதன் நிற்றல் - கந்தஸ்வாமியின் தூதுவராகிய வீரவாகுதேவர் நிற்கும் தன்மை (யெதுபோலெனின்),—காசியில் களிறு உடல் பதைப்ப அரற்ற தள்ளி - காசிப்பதியில் கயமுகாசுரனது உடல்துடிக்க அழும்படி கீழேதள்ளி,—தம்மேல் - (அவனது) தலையின்மீது,—ஈசன் அன்று அடிகள் ஊன்றி இருத்திய இயற்கை போலும் - சிவபெருமான் முற்காலத்தில் திருவடியூன்றிக் கீழே இருத்தியதன்மையையொப்பாகும்.

28. தாரகன்படைஞர்பல்லோர்சமரிடையிரிந்துபோனோர்
பாரிடையுறாமேயந்தப்பருவரைமுழைக்கணுற்றார்
வீரமொய்ம்புடையோனங்கண்மேவலுமவற்கண்டேங்கி
யாருயிருலந்தார்தீயோர்க்காவதோரரணமுண்டோ.

இ - ள். தாரகன் படைஞர் பல்லோர் - தாரகாசுரனது சேனைகளிற் பலர்,—சமரிடை இரிந்து போனோர் - போரிலே புறங்கொடுத்துப் போனவர்களாய்,—பாரிடை உறாமே அந்த பருவரை முழைக்கண் உற்றார் - பூமியில்வராமல் அந்தப்பெரிய கந்தமாதனமலையிலுள்ள முழைஞ்சுகளிலே மறைந்திருந்தார்கள்,—வீரமொய்ம் புடையோன் அங்கண் மேவலும் - வீரவாகுதேவர் அவ்விடத்திற்கு வருதலும்,—அவன் கண்டு ஏங்கி - அவரைக்கண்டு பயந்து ஏக்கங்கொண்டு,—ஆர் உயிர் உலந்தார் - அரியவுயிரை விட்டார்கள்,—தீயோர்க்கு ஆவது ஓர் அரணம் உண்டோ - கொடியவர்களுக்கு எவ்விடத்தாவது (தம்மைக்காத்தற்குரிய) இருப்பிடம் கிடைக்குமா? (கிடையாது). எ - று.

ஓகாரம் எதிர்மறை. அலங்காரம் வேற்றுப்பொருள்வைப்பு. (உஅ)

29. அனையதோர்சிமயக்குன்றமசைதலுமங்கணுற்ற
வனைகழல்விஞ்சைவேந்தர்மங்கையரூடன்மாற்றி
யினிதுமுன்கலந்தாரஞ்சியின்புறாதிடைக்கணீத்து
வினைவிளைவுன்னிநொந்துவிண்மிசையுயிர்த்துச்சென்றார்.

இ - ள். அனையது ஓர் சிமயம் குன்றம் அசைதலும் - அத்தன்மையாகிய சிகரங்களையுடைய கந்தமாதனமலை யசைதலும்,—அங்கண் உற்ற கழல்வனை விஞ்சைவேந்தர் - அவ்விடத்திலிருந்த வீரக்கழலைத்தரித்த வித்தியாதரவரசர்,—மங்கையர் ஊடல் மாற்றி இனிது முன் கலந்தார் - பெண்களது பிணக்கைநீக்கிச் சந்தோஷத்தோடு முன்புணர்ந்தவர்கள்,—அஞ்சி இன்பு உறாது இடைக்கண் நீத்து - பயந்து இன்பத்தையனுபவியாமல் இடையில் விட்டு,—வினைவிளைவு உன்னி நொந்து விண்மிசை உயிர்த்து சென்றார் - விதிவசத்தை நினைந்து வருந்தி ஆகாயத்திலே பெருமூச்சுவிட்டுச் சென்றார். எ - று. ()

30. வரைமிசைநின்றவண்ணல்வனைகழலவுணர்கோமான்
பொருவருநகர்மேற்செல்லப்புந்திமேற்கொள்ளாவெந்தை
திருவுருவதனையுன்னிச்செங்கையாற்றொழுதுமாலும்
பிரமனும்வியந்துநோக்கப்பேருருக்கொண்டுநின்றான்.

இ - ள். வரைமிசை நின்ற அண்ணல் - மலையின்மேல்நின்ற வீரவாகுதேவர்,—கழல்வனை அவுணர் கோமான் பொருவரு நகர்மேல் செல்ல புந்தி மேல் கொள்ளா - வீரக்கழலையணிந்த அசுரராஜனாகிய சூரபன்மனது ஒப்பற்ற நகரத்துள்ளே போகும்படி மனசில் நினைத்து,—எந்தை திரு உரு அதனை உன்னி - எமதுபிதாவாகிய சுப்பிரமணியப்பெருமானது திருமேனியைத் தியானித்து,—செம் கையால் தொழுது - சிவந்தகைகளைக்குவித்து வணங்கி,—மாலும் பிரமனும் வியந்து நோக்க - விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் அதிசயித்துப்பார்க்கும்படி,—பேர் உரு கொண்டு நின்றான் - பெரியவடிவத்தைக்கொண்டு நின்றார். எ - று. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மைகள் எண். (௩0)

31. பொன்பொலியலங்கற்றோளான்பொருப்பின்மேற்பொருவிலாத
கொன்பெருவடிவங்கொண்டுகுலாய்நிமிர்கொள்கைசெவ்வேள்
முன்பொருஞான்றுமேருமுடியில்வந்தமரர்க்கெல்லாந்
தன்பெருவடிவங்காட்டிநின்றதோர்தன்மையாமால்.

இ — ள். பொன்பொலி அலங்கல் தோளான் - பொன்மயமாக விளங்குகின்ற மாலையையணிந்த வீரவாகுதேவர்,—பொருப்பின்மேல் பொருவு இலாத கொன் பெரு வடிவம் கொண்டு - கந்தமாதனமலையின்மீது ஒப்பில்லாத பெருமைபொருந்திய பெரிய திருவுருவங் கொண்டு,—குலாய்நிமிர் கொள்கை - மேலாகவெழுந்து நிற்கின்றதன்மை,—முன்பு ஒரு ஞான்று - முன்னொருகாலத்தில்,—செவ்வேள் - குமாரக்கடவுள்,—மேரு முடியில் வந்து - மகாமேருவின்சிகரத்தில் வந்து,—அமரர்க்கு எல்லாம் - தேவர்களெல்லாருக்கும்,—தன் பெரு வடிவம் காட்டி நின்றது ஓர் தன்மை ஆம் - தமது விசுவரூபத்தைக் காண்பித்து நின்ற ஒருதன்மையை யொப்பாகும். எ — று. ஆல் அசை. (௩௧)

32. ஆண்டகைநெடுந்தோள்வீரனண்டமேன்மவுலிதாக்க
நீண்டிடுமெல்லையன்னானின்றிடுகுன்றஞாலங்
கீண்டதுபிலத்திற்சேறல்கேடில்சீர்முனிகையூன்ற
மீண்டுபாதலத்திற்புக்கவிந்தமேபோலுமாதோ.

இ—ள். ஆண் தகை நெடும் தோள் வீரன் - ஆண்டன்மையிற்சிறந்தபெரியபுயங்களையுடைய வீரவாகுதேவர்,—அண்டம் மேல் மவுலி தாக்க - அண்டகோளகையில் தமது மகுடம்பட,—நீண்டிடும் எல்லை - உயர்ந்துசெல்லுஞ் சமயத்தில்,—அன்னான் நின்றிடு குன்றம் - அவர்நிற்கின்ற வம்மலை,—ஞாலம் கீண்டது பிலத்திற் சேர்தல் - பூமியைப் பிளந்துகொண்டு கீழே செல்லுதல்,—கேடு இல் சீர் முனி கை ஊன்ற - அழியாத சிறப்பினையுடைய வகஸ்தியமுனிவர் கையினாலூன்றும்பொழுது,—மீண்டு பாதலத்தில் புக்க விந்தம் போலும் - கீழேதாழ்ந்து பாதலத்திற்சென்ற விந்தமலையையொத்தது. எ — று.

மாது, ஓ அசை. ஏகாரம் தேற்றம். இக்கதை முன்னர் அசுரகாண்டத்திற் கூறப்பட்டது. (௩௨)

33. விண்ணவருய்த்ததேர்மேன்மேவலர்புரநீறாக்கும்
பண்ணவனொருதாளூன்றப்பாதலம்புகுந்தவாபோற்
கண்ணகன்வரையும்வீரன்கழல்படவழுந்திற்றம்மா
வண்ணலந்தாதைவன்மையருள்புரிமகற்குறாதோ.

இ — ள். விண்ணவர் உய்த்த தேர் மேல் - தேவர்களாலே கொண்டுவந்து நிறுத்தப்பட்ட தேரின்மீது,—மேவலர் புரம் நீறு ஆக்கும் பண்ணவன் - சத்துருக்களின் மூன்று நகரங்களையுமெரித்து நீறாக்கிய சிவபெருமான்,—ஒருதாள் ஊன்ற - ஒருதிருவடியினாலூன்றும்பொழுது,—பாதலம் புகுந்தவாபோல் - அது பாதாளத்தைநோக்கிச் சென்றதைப்போல,—கண் அகன் வரையும் - இடமகன்ற கந்தமாதனமலையும்,—வீரன்கழல்பட அழுந்திற்று - வீரவாகுதேவரது கால்பட்டமாத்திரத்தில் கீழ்தாழ்ந்தது.—அண்ணல் அம் தாதை வன்மை - வலிமையிற்சிறந்தவராகிய பிதாவின்வல்லபம்,—அருள்புரி மகற்கு உறாதோ - அவராற்பெறப்பட்ட புத்திரருக்கில்லாது போகுமா. எ — று.

அம்மா அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை இறந்ததுதழீஇய வெச்சம். (௩௩)

34. கன்றியவரிவிற்செங்கைக்காளைபொற்றாளுமந்தண்
குன்றொடுபிலத்துட்செல்லக்குறிப்பொடுவிழிக்குறாமே
சென்றிடமுடியுஞ்சேண்போய்த்திசைமுகத்தயனுமாலு
மன்றடிமுடிகாணாதவசலமும்போலநின்றான்.

இ — ள். வரிவில் கன்றிய செம் கை காளை - கட்டப்பட்ட விற்றழும்புபொருந்திய சிவந்த கைகளையுடைய வீரவாகுதேவர்,—பொன் தாளும் - அழகியபாதங்களும்,—அம் தண் குன்றொடு பிலத்துட் செல்ல-நீரருவியினாலே குளிர்ச்சிபொருந்திய மலையுடன் பாதலத்திற்போக,—குறிப்பொடு விழிக்கு உறாமே முடியும் சேண் போய் சென்றிட - கருத்துக்குங் கண்ணுக்கும் எட்டாதபடி முடியும் ஆகாயத்திலே போய் அப்பாலுஞ் செல்லுதலால்,—திசை முகத்து அயனும் மாலும் அன்று அடி முடி காணாத அசலமும் போல நின்றான் - நான்முகங்களையுடைய பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் அக்காலத்தில் அடியையும் முடியையுந்தேடி யறியாத (அக்கினிமயமாகிய) அருணாசலத்தையும் போல நின்றார். எ — று.

உம்மை பொற்றாளும் என்பதில் உயர்வு சிறப்பும், முடியும் என்பதில் இறந்தது தழீய வெச்சமும், அசலமும் என்பதில் இறந்தது தழீஇய வெச்சமும் உயர்வு சிறப்பும், ஏனையவற்றில் எண்ணுமாம். (௩௪)

5. ஆளரியன்னோன்றாளுமடுக்கலுமழுந்தும்பாரி
னீளிருமுடிசேர்வானினிரந்தமாப்பறவைபோதல்
சூளுடையிமையோர்புள்ளுமாவுமாய்த்தோமில்வீரன்
றாளொடுமுடியுநாடிச்சார்தருந்தகைமைத்தாமால்.

இ — ள். ஆளரி அன்னோன் தாளும் - சிங்கத்தையொத்த வீரவாகுதேவரது கால்களும்,—அடுக்கலும் அழுந்தும் பாரில் - மலையாகியகந்தமாதனமும் சென்ற பாதாள பூமியிலும்,—நீள் இரு முடி சேர் வானில்-(அவரது) மிகப்பெரிய முடிபொருந்திய ஆகாயத்திலும் (முறையே),—நிரந்த மா பறவை போதல் - நிறைந்திருக்கின்ற மிருகங்களும் பறவைகளும் (மேலுங் கீழுமாகப்) போகுதல்,—சூள் உடை இமையோர் புள்ளும் மாவும் ஆய் - சபதஞ் செய்துகொண்ட தேவர்கள் பறவைகளும் மிருகங்களுமாய்,—தோம் இல் வீரன் - குற்றமில்லாத வீரவாகுதேவரது,—தாளொடு முடியும் - அடியையும் முடியையும்,—நாடி சார்தரும் தகைமைத்து ஆம் - தேடிச்செல்லுந்தன்மையையொப்பாகும்.

ஆல் அசை. அத்து சாரியை. உம்மைகள் எண். (௩௫)

36. அந்தமில்வலியோனிற்பவாயிடைத்துஞ்சும்பாந்த
டந்தொகைவீழுறாதுதழீஇமருங்காகக்கீழ்போய்
முந்துயர்கமடஞ்சேர்ந்துமுழங்குதெண்டிரைக்கண்வைகு
மந்தரமென்னக்கந்தமாதனந்தோன்றிற்றம்மா.

இ — ள். அந்தம் இல் வலியோன் நிற்ப - அளவற்ற வலிமையையுடைய வீரவாகுதேவர் நின்றவுடனே,—ஆய் இடை துஞ்சும் பாந்தள் தம் தொகை வீழ்வு உறாது தழீஇ மருங்கு ஆக - அங்கே உறங்கியிருந்த பாம்புக்கூட்டங்கள் கீழேவிழாமல் பக்கமாகச் சுற்றிக்கொண்டு,—கீழ்போய் - பாதலத்திற்சென்று,—முந்து உயர் கமடம் சேர்ந்து-முதன்மையோடும் உயர்ந்த ஆதிகூர்மம் இருக்கும் இடத்தையடைந்து,—முழங்கு தெண் திரைக்கண் வைகும் மந்தரம் என்ன - ஒலிக்கின்ற தெளிந்த அலைகளையுடைய பாற்கடலின்நடுவே நின்றமந்தரமலையைப்போல,—கந்தமாதனம் தோன்றிற்று-கந்தமாதனமலை தோன்றியது.

தம் சாரியை. அம்மா அசை.

மந்தரமலை கடலைக்கடையும்போது விஷ்ணுமூர்த்தி கொண்ட கூர்ம உருவத்தின் மீது தானின்று வாசுகிப்பாம்பாகிய கயிற்றினாற் சுற்றப்பட்டதுபோலக் கந்தமாதனமும் பாம்பினாற் சுற்றப்பட்டு ஆதி கூர்மத்தின் மீது சென்று நின்றமையால் மந்தரத்தோடொ த்தது என்றார். (௩௬)

37. பதுமநேர்கண்ணன்வேதாப்பலவகைமுனிவர்தேவர்
கதிபடருவணர்சித்தர்கந்தருவத்தரொண்கோண்
மதியுடுக்கதிர்களேனோர்வான்பதமுற்றுமோங்கு
மதிர்கழல்வீரன்பல்வேறாரமாயொளிரநின்றான்.

இ—ள். பதுமம் நேர் கண்ணன் வேதா பலவகை முனிவர் தேவர் கதிபடர் உவணர் சித்தர் கந்தருவத்தர் ஒள்கோள் உடு மதி கதிர்கள் ஏனோர் வான்பதம் முற்றும் - தாமரை மலரிதழ்போன்ற கண்களையுடைய விஷ்ணுவும் பிரமதேவரும் பலவகை இருடிகளும் தேவர்களும் விரைந்து செல்லுகின்ற கருடர்களும் சித்தர்களும் கந்தருவர்களும் ஒளி பொருந்திய கிரகங்களும் நட்சத்திரங்களும் சந்திரசூரியர்களும் மற்றவர்களுமாகிய இவர் களது மேற்பதவிகளெல்லாம்,—பல் வேறு ஆரமாய் ஒளிர - பலவிதமான வேறுபாட்டை யுடைய வாரமாய் விளங்கும்படி,—ஓங்கும் அதிர் கழல் வீரன் நின்றான்-உயர்ந்த ஒலிக் கின்ற வீரக்கழலைத்தரித்த வீரவாகுதேவர் நின்றார். எ — று.

உம்மை முற்று. கந்தருவத்தர் என்பதில் அத்து சாரியை. எண்ணும்மையும் ஆறனு ருபும் விகாரத்தாற் றொக்கன. (௩௭)

38. எண்டிசைமுழுதுநேமியெழுதிறத்தனவுமற்றைத்
தெண்டிரைக்கடலும்பாருஞ்சேண்கிளராழிவெற்பு
மண்டமுமுலகம்யாவுமகன்விழிபரப்பிநோக்கிக்
கண்டனனமலன்வைப்புங்கைதொழுதையனின்றான்.

இ - ள். ஐயன் - வீரவாகுதேவர்,—எண் திசை முழுதும் நேமி எழுதிறத்தனவும் - அட்டதிக்கு முழுவதையும் ஏழுகடல்களையும்,—மற்றை தெண் திரை கடலும்-இவைய ன்றித்தெளிந்த அலைகளையுடையபெரும்புறக்கடலையும்,—பாரும் - பூமியையும்,—சேண் கிளர் ஆழிவெற்பும் - மேலாக உயர்ந்து விளங்குகின்ற சக்கிரவாளகிரியையும்,—அண்ட மும் உலகம் யாவும் - அண்டத்தையும் மற்றையவெல்லா வுலகங்களையும்,—அகன் விழி பரப்பி நோக்கி-விசாலித்தகண்களைப் பரப்பிப்பார்த்து,—அமலன் வைப்பும் கண்டனன் - சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருக்கைலாச மலையையும் பார்த்து,—கைதொழுது நின்றான் - கைகுவித்து வணங்கி நின்றார். எ - று.

உம்மை வைப்பும் என்பதில் இறந்தது தழீஇய எச்சமும்,முழுதும் யாவும் என்பன வற்றில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம். இரண்டனுருபுகள் விகாரத்தாற் றொக்கன. (௩௮)

39. ஆணமில்சிந்தைவீரனச்சுதன்முதலோர்வைகுஞ்
சேணகர்நோக்கிச்சூழுந்திசைநகர்நோக்கிப்பாரின்
மாணகர்நோக்கிவீரமகேந்திரநோக்கிச்சூர
னீணகரிதற்கியாவுநிகரிலைபோலுமென்றான்.

இ — ள். ஆணம் இல் சிந்தைவீரன் - அகங்காரமில்லாத மனசையுடைய வீரவாகு தேவர்,—அச்சுதன் முதலோர் வைகும் சேண் நகர் நோக்கி - விஷ்ணு மூர்த்தி முதலிய தேவர்கள் வசிக்கின்ற மேலாகிய (வைகுந்தம் முதலிய)உலகங்களையும் பார்த்து,—சூழும்

திசைநகர் நோக்கி - சுற்றிலுமுள்ள(அமராவதிமுதலிய)திசைநகரங்களையும் பார்த்து,— பாரின் மாண் நகர் நோக்கி - பூமியிலுள்ள மாட்சிமைபொருந்திய(காஞ்சிமுதலிய)நகரங்களையும் பார்த்து,—வீரமகேந்திரம் நோக்கி - வீரமகேந்திரபுரத்தையும் பார்த்து,—சூரன் நீள் நகர் இதற்கு - இந்தச்சூரபன்மனது பெரியநகரத்திற்கு,—யாவும் நிகரில்லை என்றான்- எந்தநகரமுஞ் சமானமில்லையென்று கூறினர். எ – று.

போலும் அசை. உம்மை முற்று. (௩௯)

40. விண்ணுலாம்புரிசைவெஞ்சூர்வியனகரதனைநோக்கி
புண்ணிலாவெகுளிகொண்டானொருகரமங்கணோச்சி
நண்ணலார்யாருந்துஞ்சநாமறப்பிசைகோவென்னு
வெண்ணினன்சிறையிலுற்றோர்க்கிரங்கியவ்வெண்ணமீட்டான்.

இ – ள். விண் உலாம் புரிசை வெம் சூர் வியன் நகர் அதனை நோக்கி - ஆகாயம்வரைக்கும் உயர்ந்து விளங்குகின்ற மதில்சூழ்ந்த கொடிய சூரபன்மனது பெரிய நகரத்தைப்பார்த்து,—உள் நிலா வெகுளி கொண்டான் - மனசிற்பொருந்திய கோபமுடையவராய்,—ஒருகரம் அங்கண் ஓச்சி - (தமது) ஒருகையை அந்தநகரத்திலேநீட்டி,—நண்ணலார் யாரும் துஞ்ச நாம் அறப்பிசைகோ என்னு - சத்துருக்களாகிய அசுரர்களெல்லாரையும் இறக்கும்படி பெயருமில்லாமல் பிசைவேனென்று,—எண்ணினன் சிறையில் உற்றோர்க்கு இரங்கி அ எண்ணம் மீட்டான் - நினைத்துப் (பின்பு அந்நகருள்ளே) சிறையிலிருக்கின்ற தேவர்களும் (இறந்துபோவார்களேயென்று) இரக்கங்கொண்டு அந்தவெண்ணத்தைத்திருப்பினர். எ – று.

நகர் அதனை என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி; அன் சாரியை. ஓகாரம் வினு. உம்மை முற்று. நாமம் என்பது நாம் என இடை குறைந்து நின்றது. (௪0)

41 விஞ்சையரியக்கர்சித்தர்வியன்சிறையுவணர்திங்கள்
செஞ்சுடர்ப்பரிதிநாள்கோடெய்வதகணத்தர்யாரும்
வஞ்சினத்தடுதோள்வீரன்மாலுருநோக்கலாற்ரு
தஞ்சினர்வெருவச்செங்கையமைத்தனனழுங்கலென்றே.

இ – ள். விஞ்சையர் இயக்கர் சித்தர் வியன்சிறை உவணர் திங்கள் செம் சுடர் பரிதி நாள் கோள் தெய்வத கணத்தர் யாரும் - வித்தியாதரரும் இயக்கரும் சித்தரும் பெரிய இறகுகளையுடைய கருடர்களும் சந்திரனும் செவ்வொளிபொருந்திய சூரியனும் நட்சத்திரங்களுங் கிரகங்களும் ஆகிய தேவகூட்டத்தார்யாவரும்,—வஞ்சினத்து அடு தோள் வீரன் - சபதங்கூறித் (தப்பாது சத்துருக்களைக்) கொல்லுகின்ற புயங்களையுடைய வீரவாகுதேவரது,—மால் உரு நோக்கல் ஆற்ருது அஞ்சினர் வெருவ - பெரிய வடிவத்தைப்பார்க்கச் சகிக்கலாதவர்களாய் மிகப்பயப்பட (அதனைநோக்கி),—அழுங்கல் என்று செம் கை அமைத்தனன் - பயப்படவேண்டாமென்று செப்பமாகிய கையினால் அபயங்கொடுத்தார். எ – று.

உம்மை முற்று. எண்ணும்மைவிகாரத்தாற்றொக்கன. ஏகாரம் அசை. (௪௧)

42. கோளியல்கருடர்தாம்வீழ்மாதரைவிழைந்துகூடி
வாளுறுநகத்தினூறுமதிக்கிலர்மயங்கித்துஞ்சி
வேளெனுநெடியோனூன்றும்வெற்பொடும்பிலத்திற்சென்று
கேளுடனெழுந்துநாகர்கிளைதனக்கணங்குசெய்தார்.

இ — ள். கோள் இயல் கருடர் தாம் வீழ் மாதரை விழைந்து கூடி - வலிமைபொருந்திய கருடர்கள் தாம் விரும்பியபெண்களை விரும்பிச் சேர்ந்து,—வாள் உறு நகத்தின் ஊறு மதிக்கிலர் - வாள்போலுங் கூரிய நகத்தினுல்வைக்கின்ற தழும்பை மதியாதவர்களாய்,—மயங்கி துஞ்சி - (போகத்தினயர்வினுல்) மயங்கித் தூக்கமாகி,—வேள் எனும் நெடியோன் ஊன்றும் வெற்பொடும் - மன்மதன் என்று சொல்லத்தக்க அழகினையுடைய வீரவாகுதேவர் தமது காலினுல் ஊன்றப்பட்டமலையோடும்,—பிலத்தில் சென்று - பாதலத்திற்சென்று,—கேள் உடன் எழுந்து - தங்கள் உறவினருடன் (உணர்ந்து) எழுந்து,—நாகர் கிளை த்னக்கு அணங்கு செய்தார் - (பாதலத்திலுள்ள) நாககூட்டத்தார்களுக்குத் துன்பத்தைச் செய்தார்கள். எ — று.

கிளைதனக்கு என்பதில் தன், அ என்பன சாரியைகள். கருடர் நாககூட்டத்தாருக்குப்பகைவராதலின் 'அணங்குசெய்தார்' என்றுர். (சஉ)

43. ஆதியங்குமரன்றூதனுற்றலாலூன்றிநிற்பப்
பூதலங்கீண்டுவெற்புப்பொள்ளெனவாழ்ந்துகீழ்போய்ப்
பாதலங்குறுகவங்கட்பயிலராத்தொகையைநாகர்
காதலங்கேண்மைநாடிக்கலந்தனர்விருந்துசெய்தார்.

இ — ள். ஆதி அம் குமரன் தூதன் - முதற்கடவுளாகிய அழகையுடைய குமாரஸ்வாமியினது தூதுவராகிய வீரவாகுதேவர்,—ஆற்றலால் ஊன்றி நிற்ப - வலிமையுடன் ஊன்றிக்கொண்டுநிற்க,—வெற்பு பூதலம் கீண்டு பொள்ளென ஆழ்ந்து கீழ்போய் பாதலம் குறுக - கந்தமாதனமலை பூமியைப்பிளந்துகொண்டு விரைவாகக்கீழே சென்று பாதாளத்தையடையும்பொழுது,—அம் கண் பயில் அரா தொகையை - அம்மலையிலிருக்கின்ற பாம்புகளை,—நாகர் காதல் கேண்மை நாடி - (அப்பாதாளத்திலுள்ள) பாம்புகள் அன்புடன் சுற்றமென்னும் முறையையுத்தேசித்து,—கலந்தனர் விருந்து செய்தார் - (வந்தவர்களை யுபசரிக்கவேண்டுமென்னும் முறைமைபற்றித்) தழுவிக்கொண்டு விருந்து செய்தார்கள். எ — று.

அம் அசை. ஆதி அம் குமரன் என்பதற்குச் சிவபெருமானது புதல்வரெனினுமாம்.

44. தேன்றிகழ்தெரியல்வாகைச்சேவகன்கழல்கள்வெற்பி
னூன்றலுமனையபாங்கரொருசிலாரக்கர்நோற்று
ரான்றுயர்பதத்தைவெஃகியாங்கவர்பிலத்துள்வீழ்ந்து
மான்றனரிரங்கலுற்றுர்வன்கணூர்க்குய்வுமுண்டோ.

இ — ள். தேன் திகழ் தெரியல் வாகை சேவகன் கழல்கள் வெற்பின் ஊன்றலும் - தேனேடுவிளங்குகின்ற மாலையணிந்த புயங்களையுடைய வீரவாகுதேவரது பாதங்கள் மலையிலழுந்தியவுடனே,—அனையபாங்கர் ஆன்று உயர் பதத்தை வெஃகி ஒருசில அரக்கர் நோற்றுர் - அம்மலையின் ஒருபுறத்திலே உயர்ந்த மாட்சிமைதங்கிய பதவியைவிரும்பிச் சில அரக்கர்கள் தவஞ்செய்துகொண்டிருந்தார்கள்;—அவர் பிலத்துள் வீழ்ந்து இரங்கல் உற்றுர் - அவர்கள் அம்மலையுடன் பாதாளத்தில் விழுந்து மயங்கினுர்கள்,—வன்கணூர்க்கு உய்வும் உண்டோ - கொடியவர்களுக்குப் பிழைக்கும்வழியுண்டோ (இல்லை). எ-று.

சேவகன் கழல்களால் வெற்பில் ஊன்றும்பொழுது எனப்பொருள்கொள்ளினும் அமையும். அலங்காரம் வேற்றுப்பொருள் வைப்பு. ஆங்கு அசை. ஓகாரம் எதிர்மறை.()

45. புண்டரீகற்றுவள்ளல்புரையுருத்தேவர்நோக்கி
மண்டலம்புகழும்வீரமகேந்திரஞ்சேறற்கன்றுற்
கொண்டவிவ்வுருவநோக்கிற்குரைகழலவுணர்தம்மை
யண்டமுமிடித்துச்சாடுநினைவுகொலையற்கென்றுர்.

இ — ஃ. புண்டரம் நீற்று வள்ளல் புரை உரு தேவர் நோக்கி - விபூதியைத் திரிபுண்டரமாகத் தரித்த (நெற்றியையுடைய) வீரவாகுதேவரது பெரியவடிவத்தைத் தேவர்கள்பார்த்து,—மண்டலம் புகழும் வீரமகேந்திரம் செல்தற்கு அன்று - உலகத்தாராற் புகழப்படுகின்ற வீரமகேந்திரத்திற் போதற்கு அல்ல,—கொண்ட இ உருவம் நோக்கில் - (இவர்) கொண்ட இவ்வடிவத்தைப் பார்க்கும் பொழுது,—ஐயற்கு குரை கழல் அவுணர் தம்மை - (நமது) ஐயராகிய வீரவாகுதேவருக்கு (வேறண்டங்களிலுமிருக்கின்ற) ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த அவுணர்களை,—அண்டமும் இடித்து சாடும் நினைவு கொல் என்றார் - அண்டகோளத்தையுமிடித்து(அப்பாற்சென்று) கொல்லவேண்டுமென்னுங் கருத்துத்தானோ என்று கூறினார்கள். எ - று.

தம் சாரியை. கொல் ஐயம். ஆல் அசை. உம்மை இறந்ததுதழீஇய வெச்சம்.(சரு)

46. வீரமாமகேந்திரத்திலவுணரும்வீற்றுவீற்றுச்
சாருறுமவுணர்தாமுஞ்சயங்கெழுபுயத்துவள்ளல்
பேருருநோக்கியிங்ஙன்பிறந்தசொற்சழக்கேயின்னுந்
தேருவதுண்டுநந்தந்திறல்வரைப்புணர்ப்பிதென்றார்.

இ - ள். மா வீரமகேந்திரத்தில் அவுணரும் - இலட்சுமிவிலாசம் பொருந்திய வீரமகேந்திரத்திலிருக்கின்ற அசுரரும்,—வீற்று வீற்று சார் உறும் அவுணர் தாமும் - வேறுவேறாக வருகின்ற அவுணர்களும்,—சயம் கெழு புயத்து வள்ளல் பேர் உரு நோக்கி - வெற்றிபொருந்திய புயத்தையுடைய வீரவாகுதேவரது பெரியவடிவத்தைப் பார்த்து,—இங்ஙன் பிறந்த சொல் சழக்கே - இவ்விடத்திலுண்டான சொல் வீணேயாம்,—இன்னும் தேருவது உண்டு - இன்னும் ஆலோசிக்கவேண்டியது இருக்கின்றது,—இது - இந்தப்பெரிய வடிவம்,—நம்தம் திறல் வரை புணர்ப்பு என்றார் - நமதுவலிய கிரவுஞ்சமலையின் மாயமே யென்று கூறினார்கள். எ — று.

தாம் தம் இரண்டும் சாரியை. இங்ஙன் பிறந்த சொல்லாவது சுப்பிரமணியக்கடவுளால் கிரவுஞ்சம் அழிந்தது என்னுஞ்சொல். மா என்பதற்குப் பெருஞ்செல்வமுள்ள எனப்பொருள் கூறினும் அமையும். ஏகாரம் தேற்றம். உம்மை முன்னையவை எண்; பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம். (சசு)

47. ஒலிகழல்வீரவாகுவோங்கலையூன்றியிந்த
நிலைமையினிற்றலோடுநெடியமால்சுதனும்விண்ணோர்
தலைவனும்பிறருமன்னோனம்பியரளப்பிலோருங்
கலிகெழுபூதர்யாருங்கண்டுவிம்மிதத்தினார்த்தார்.

இ — ள். ஒலி கழல் வீரவாகு - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த வீரவாகுதேவர்,—ஓங்கலை ஊன்றி இந்த நிலைமையில் நிற்றலோடும் - கந்தமாதனமலையை யூன்றிக்கொண்டு இத்தன்மையாக நிற்கவும்,—நெடியமால் சுதனும் விண்ணோர் தலைவனும் பிறரும் அன்னோன் தம்பியர் அளப்பிலோரும் கலி கெழு பூதர் யாரும் கண்டு - (அதனை) உயர்ந்த விஷ்ணுமூர்த்தியின் புத்திரராகிய பிரமதேவரும் தேவராஜனாகிய இந்திரனும் மற்றவர்களும் அவ்வீரவாகுதேவருடைய அளவற்ற தம்பிமார்களும் பலசாலிகளாகிய பூதர்களும் (ஆகிய) எல்லோரும் பார்த்து,—விம்மிதத்தின் ஆர்த்தார் - ஆச்சரியத்தினாலே யாரவாரித்தார்கள். எ — று. உம்மை யாரும் என்பதில் முற்றும் ஏனையவற்றில் எண்ணுமாம். ()

48. தேவர்கண்முனிவரேனைத்திறத்தவர்யாருந்தத்த
மோவரும்பதத்தினின்றேயொல்வதோருறுப்பின்மேவக்
காவருகடிமென்பூத்தூய்க்கைதொழுதையவெஞ்சூர்
மேவருநகர்சென்றெங்கள்வியன்றுயரகற்றுகென்றார்.

இ — ள். தேவர்கள் முனிவர் ஏனை திறத்தார்கள் யாரும் - தேவர்களும் முனிவர்களும் மற்றுள்ளவர்களும் (ஆகிய) யாவரும்,—தத்தம் ஓ அரும் பதத்தில் நின்று - அவரவர்களது அழிவில்லாத பதவிகளினின்று,—ஒல்வது ஓர் உறுப்பின் மேவ - தகுதியாகிய (அப்பெரிய) திருவுருவத்திற் படும்படி,—கா வரு கடி மெல் பூ தூய் கை தொழுது ஐய - கற்பகவிருக்ஷத்திற் றோன்றிய வாசனை பொருந்திய மெல்லிய பூக்களைத் தூவிக் கைகுவித்து வணங்கி ஐயனே,—வெம் சூர் மேவரு நகர் சென்று - கொடிய சூரபன்மனிருக்கின்ற நகரத்திலே போய்,—எங்கள் வியன் துயர் அகற்றுக என்றார்கள் - எங்கள் பெருந்துன்பத்தை நீக்குவீராக என்றார்கள். எ - று.

ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. அகற்றுக என்றதில் அகரம் தொகுத்தல்விகாரம். சூர் மேவரு நகர் சென்று என்பதற்குச் சூரபன்மனது பிறரால் அடைதற்கரிய நகரத்தையடைந்து எனப்பொருள் கூறினும் அமையும். (சஅ)

49. ஆவதோர்காலையெந்தையாறிருதடந்தோள்வாழ்க
மூவிருவதனம்வாழ்கமுழுதருள்விழிகள்வாழ்க
தூவுடைநெடுவேல்வாழ்கதொல்படைபிறவும்வாழ்க
தேவர்கடேவன்சேயோன்றிருவடிவாழ்கவென்றான்.

இ — ள். ஆவது ஓர்காலை - அச்சமயத்தில் (வீரவாகுதேவர்),—எந்தை மூ இரு வதனம் வாழ்க - எம்பெருமானது ஆறு திருவதனங்களும் வாழுக,—ஆறு இரு தடம் தோள் வாழ்க - பன்னிரண்டு பெரிய திருப்புயங்களும் வாழுக,—முழுது அருள் விழிகள் வாழ்க - நிறைந்த அருள்வெள்ளத்தைப் பொழியாநின்ற திருக்கண்களும் வாழுக,—தூ உடை நெடு வேல் வாழ்க - பரிசுத்தமாகிய நெடிய வேலாயுதமும் வாழுக,—பிற தொல் படையும் வாழ்க - மற்றுள்ள பெரும்படைக்கலங்களும் வாழுக,—தேவர்கள் தேவன் சேயோன் திருவடி வாழ்க என்றான் - தேவதேவராகிய சிவபெருமானது திருக்குமாரராகிய கந்தஸ்வாமியினது திருவடிகளும் வாழுக என்று துதித்தார். எ — று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம்.

குமாரக்கடவுளுக்கு விழிகள்பதினெட்டு என்று வடநூற்காந்தத்திலும் அவரது மாலாமந்திரத்திலுங் கூறப்படுதலால் ஈண்டுப் பதினெட்டுக்கண்களென்றே கொள்ளற்பாலன. தூ உடை நெடு வேல் என்பதற்குத் தசைப்பற்றுப் பொருந்திய நெடியவேல் என்பாரும் உளர். கந்தஸ்வாமியினது வேல் ஏனையாது வேலைப்போலாகாது சத்துருக்களைச் சங்கரித்தவுடனே ஆகாயகங்கையிற் றோய்ந்து பரிசுத்தமடைவது வழக்கமாதலின் அப்பொருள் பொருந்தாதெனமறுக்க. (சகூ)

50. ஆண்டகைதொழுதபாணியணிமுடிக்கொண்டிவ்வாற்றா
லீண்டுசீர்க்குமரவேளையேத்தலுமன்பின்கண்ணீர்
வீண்டுதெண்கடலுளேகிவெள்ளமிக்குவரைமாற்றப்
பூண்டகண்டிகையைமானத்தோன்றினபொடிப்பின்பொம்மல்.

இ - ள். ஆண் தகை தொழுத பாணி அணி முடிகொண்டு இ ஆற்றால் ஈண்டு சீர் குமரவேளை ஏத்தலும் - ஆண்டன்மையிற் சிறந்த வீரவாகுதேவர் (குவித்து) வணங்கிய கைகளை அழகிய முடிமேல் வைத்து இத்தன்மையாகப் பெருஞ்சிறப்பினையுடைய குமரமூர்த்தியைத் துதித்தலும்,—அன்பின் கண்ணீர் வீண்டு - ஆனந்தக்கண்ணீர் ஒழுகி,—தெண் கடலுள் ஏகி - தெளிந்த நீரையுடைய கடலிற் சென்று,—வெள்ளம் மிக்கு - பிரவாகமாய்,—உவரை மாற்ற - அந்நீரின் உவர்த்தன்மையை நீக்க,—பூண்ட கண்டிகையை மான - தரித்துக்கொண்ட உருத்திராக்கமாலையைப்போல,—பொடிப்பின் பொம்மல் தோன்றின - உரோமாஞ்சிதக்கூட்டந் தோன்றின. எ — று.

பொம்மல் பொலிவு எனினும் அமையும். மனிதருடைய கண்ணீர் உப்புநீராகவே காணப்படுகின்றது. வீரவாகுதேவருடைய கண்ணீர் உவரைமாற்றினதாகக் கூறப்படுதலால் அவர்கண்ணீருக்கு உப்பில்லையென்பது இதனால் அறியப்படுகின்றது. (௫0)

51. மீதுகொள்பொடிப்புமூடமெய்ப்புலன்சிந்தையொன்ற
வோதுவதவறவென்புமுருகியசெருகநாட்டங்
கோதில்பேரருளின்மூழ்கிக்குதூகலித்திடுதலோடு
மூதுலகனைத்துமாவிமுழுவதுமகிழ்ந்தவன்றே.

இ — ள். மீது கொள் பொடிப்பு மூட - மேனியிற் றோன்றும் புளகிதமானது (அம்மேனியை) மறைக்கவும்,—மெய் புலன் சிந்தை ஒன்ற - அறிவும் மனமும் ஒடுங்கவும்,—ஓதுவ தவற - சொல்லுகின்ற சொற்கள் தடுமாறவும்,—என்பும் உருகிய - (அவைகளேயன்றிக் கடினமாகிய) எலும்புதானும் (நெகிழ்ந்து) உருகவும்,—நாட்டம் செருக - கண்கள் செருகவும்,—கோது இல் பேர் அருளின் மூழ்கி - (சுப்பிரமணியப்பெருமானது) குற்றமில்லாத கிருபாவெள்ளத்திலே யமிழ்ந்தி,—குதூகலித்திடுதலோடும் - பெருங்களிப்படைதலினாலே,—மூது உலகு அனைத்தும் ஆவி முழுவதும் மகிழ்ந்த - பழமையாகிய உலகம் முழுவதும் (அவ்வுலகங்களிலிருக்கின்ற) உயிர்கள் முழுவதும் பெருமகிழ்ச்சியடைந்தன. எ — று. அன்று ஏ அசை. உம்மை என்பும் என்பதில் உயர்வுசிறப்பும் ஏனையவற்றில் முற்றுமாம். (௫க)

52. அவ்வகைநிகழச்செவ்வேளாரருளதனைப்பெற்று
மொய்வரைமீதுநின்றோன்முழுதுலகளந்துசேண்போ
மிவ்வுருவோடுசெல்லினிறந்திடுமுலகமீது
செவ்விதன்றென்னுவேண்டுந்திருவடிவமைந்தானன்றே.

இ — ள். அவ்வகை நிகழ - (மேலே சொல்லப்பட்ட) அக்குணங்கள் தோன்ற,—செவ்வேள் ஆர் அருள் அதனை பெற்று - கந்தஸ்வாமியினது திருவருளைப்பெற்று,—மொய் வரை மீது நின்றோன் - வலிய மலையின்மீது நின்றவராகிய வீரவாகுதேவர்,—முழுது உலகு அளந்து சேண் போம் இ உருவோடு செல்லின் - எல்லாவுலகங்களையுங் கடந்து மேலேபோன இந்த வடிவத்தோடு போவோமாகின்,—உலகம் இறந்திடும்-(இவ்)வுலகம் அழியும் (ஆதலால்),—இது செவ்விது அன்று என்னு - இது முறைமையல்லவென்று நினைத்து,—வேண்டும் திரு வடிவு அமைந்தான் - (அங்கேபோதற்குத்) தக்க அழகிய வடிவத்தைக் கொண்டார். எ — று.

அன்று ஏ அசை. அருள் அதனை என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. அன் சாரியை. நின்றோன் வினையாலணையும்பெயர். நிகழ என்பது விளங்க எனினுமாம். மொய்வரை என்பதற்கு யானைகள் வசிக்கப்பெற்றமலையெனப்பொருள் கூறுவாருமுளர். ()

53. கிரிமிசைநின்றவண்ணல்கிளர்ந்துவானெழுந்துசென்னிக்
குருமணிமகுடமண்டகோளகைபுடைப்பவீர
னுருகெழுசீற்றச்சிம்புளுருவுகொண்டேகிற்றென்ன
வரைபுரைமாடவீரமகேந்திரமுன்னிப்போந்தான்.

இ — ள். கிரிமிசை நின்ற அண்ணல் - மலையின்மீது நின்ற வீரவாகுதேவர்,—கிளர்ந்து வான் எழுந்து - மேலாக ஆகாயத்திலெழும்பி,—சென்னி குரு மணி மகுடம் அண்ட கோளகை புடைப்ப - தலையிலுள்ள நிறம்பொருந்திய இரத்தினமயமாகிய கிரீ

டம் அண்டகோளகையை முட்ட,—வீரன் - வீரபத்திரக்கடவுள்,—உருகெழு சிற்றம் சிம்புள் உருவு கொண்டு எகிற்று என்ன - (பிறருக்கு அச்சத்தை வருவிக்கின்ற கோபம் பொருந்திய சரபவடிவங்கொண்டு சென்றதுபோல,—வரை புரை மாட வீரமகேந்திரம் முன்னி போந்தான் - மலையையொத்த மாடங்களையுடைய வீரமகேந்திரத்தைக்குறித் துப் போயினர். எ – று. (கூ)

வீரவாகுகந்தமாதனஞ்செல்படல முற்றிற்று.

---

# கடல்பாய்படலம்.

1. அழுங்கியகழற்கால்வீரனவ்வழியவனிக்கீழ்போய்
விழுங்கிரிநிலைமைநோக்கிமீண்டுநீயெழுதியென்று
வழங்கினன்வழங்குமெல்லைவல்லையிற்கிளர்ந்துதோன்றி
முழுங்கிருங்கடலின்மாடேமுந்துபோனின்றதன்றே.

இ – ள். அழுங்கிய கழல்கால் வீரன் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த காலினையுடைய வீரவாகுதேவர்,—அவ்வழி அவனி கீழ்போய் விழும் கிரி நிலைமைநோக்கி - அப்பொழுது பூமிக்குக் கீழேபோய் விழுந்துகிடக்கும் கந்தமாதனத்தின் நிலைமையைப் பார்த்து,—நீ மீண்டு எழுதி என்று வழங்கினன் - நீ திரும்ப எழுந்திருக்கக் கடவையென்று கூறினர்,—வழங்கும் எல்லை - (அங்ஙனங்) கூறியவுடனே,—வல்லையில் கிளர்ந்து தோன்றி - விரைவாக மேலேகிளர்ந்து,—முழங்கும் இரும் கடலின் மாடே - சத்திக்கின்றபெரிய கடற்கரையில்,—முந்துபோல் நின்றது - பழையபடியே நின்றது. எ – று.

அன்று, ஏ அசை. ஏகாரம் அசையும் தேற்றமுமாம். (க)

2. வீரனங்கெழுலுமன்னோன்விண்படர்விசைப்பின்காலாற்
பாருறுவரைகள்யாவும்படர்ந்தனபாங்கராகச்
சாரதத்தலைவரேனைத்தம்பியரிலக்கத்தெண்ம
ராருமங்கவன்றன்பாலாயணிந்துடன்சேறலென்ன.

இ – ள். சாரதர் தலைவர் ஏனை தம்பியர் இலக்கத்து எண்மர் ஆரும் அவன் தன் பாலாய் அணிந்து உடன்சேறல் என்ன - பூதத்தலைவர்களும் மற்றைய தம்பிமார்களாகிய இலட்சத்தெட்டுவீரரும் ஆகிய எல்லாரும் அவ்வீரவாகுதேவரது பக்கத்தில் அணிவகுத்து உடன் சென்றாற்போல,—வீரன் அங்கு எழலும் - வீரவாகுதேவர் அவ்விடத்திலே மேற்கிளம்பிச் செல்லுதலும்,—விண்படர் விசைப்பின் காலால் - வானத்தி லுண்டான விசைக்காற்றால்,—பார் உறு வரைகள்யாவும் - பூமியிலுள்ள மலைகளெல்லாம்,—பாங்கர் ஆக படர்ந்தன - (அடிபறிந்து) பக்கத்திலே யுடன்பறந்து சென்றன. எ – று.

அங்கு அசை. அத்து, தன் சாரியை. உம்மைகள் முற்று. (உ)

3. விரைந்துவான்வழிக்கொள்வீரன்விசைத்தெழுகாலினண்டந்
திரிந்தனவுயிர்கண்முற்றுந்தெருமாலுற்றதெண்ணீர்
சுரந்திடுகொண்டல்யாவுஞ்சுழன்றனவடவையுண்ண
விருந்திடுமூழிக்காலுமாற்றலாதிரியல்போன.

இ – ள். விரைந்து வான்வழி கொள் வீரன் விசைத்து எழுகாலின் - விரைவாக ஆகாயவழியாகச் செல்லுகின்ற வீரவாகுதேவரிடத்து எழுகின்ற விசைக்காற்றினால்,—அண்டம் திரிந்தன - அண்டங்கள் சுழன்றன,—உயிர்கள் முற்றும் தெருமால் உற்ற -

எல்லாவுயிர்களுஞ்சுழன்றன,—தெள் நீர் சுரந்திடு கொண்டல் யாவும் சுழன்றன - தெள்ளியநீரைப் பொழிகின்ற மேகங்களெல்லாஞ் சுழன்றன,—வடவை உண்ண இருந்திடும் ஊழிகாலும் ஆற்றலாது இரியல்போன - வடவாமுகாக்கினியையுண்ணுதற்கிருந்த (பிரளயகாலத்து வருகின்ற) பிரசண்டவாயுவும் பிற்பட்டு ஒடியது. எ — று.

உம்மை காலும் என்பதில் உயர்வு சிறப்பும் ஏனையவற்றில் முற்றுமாம். பிரளய காலத்திலே வடவாமுகாக்கினி பரந்து உலகத்தையழித்தவுடனே அதையழிக்கத் தோன்றுங் காற்றே யூழிக்காற்று. (௩)

4. பெருமிடல்பூண்டதோன்றல்பெயர்தலும்விசைப்பினூதை
பரவினவெம்மைமாற்றிப்பரிதியைக்கனலைத்திங்கள்
வருணனதியற்கையாக்கிவடவையின்முகத்துத்தோன்றித்
திரைகடலிருந்தவூழித்தீயையுமவித்துச்சென்ற.

இ — ள். பெருமிடல் பூண்ட தோன்றல் பெயர்தலும் - மிக்க வலிமை பொருந்திய வீரவாகுதேவர் (விரைந்து) செல்லலும்,—விசைப்பின் ஊதை - (அவர்போகும்) வேகத்தாலுண்டான குளிர்காற்றானது,—வெம்மை மாற்றி பரவின - வெப்பத்தை மாற்றி (யெங்கும்) பரவிற்று (இதுவன்றியும்),—பரிதியை கனலை திங்கள் (அது) வருணன் அது இயற்கை ஆக்கி - சூரியனையும் அக்கினியையும் சந்திரனது தன்மையாகவும் வருணனது தன்மையாகவுஞ்செய்து,—வடவையின் முகத்து தோன்றி - பெண்குதிரையின் முகத்திற்றோன்றி,—திரைகடல் இருந்த ஊழி தீயையும் அவித்து சென்ற - திரைபொருந்திய கடலின் மத்தியிலிருந்த ஊழித்தீயையும் தணித்துச்சென்றது. எ — று.

உம்மை உயர்வு சிறப்பு.

வீரவாகுதேவரது நடையினு லுண்டான விசைக் காற்றானது சூரியனைச் சந்திரன் போலவும் அக்கினியை வருணன்போலவும் வடவையை யில்லாமலும் ஆக்கினது.

சென்ற என்றது ஒருமைக்கண் வந்த பன்மைமயக்கம். சென்றது என்றேபொருள் கொள்ளல் வேண்டும். "அ ஆ வீற்றபலவின் படர்க்கை" என்பது நன்னூல். (௪)

5. விரைசெறிநீபத்தாரோன்விரைந்துசெல்விசைக்காறள்ளத்
திரைகடல்சுழித்துள்வாங்கித்திறன்மகேந்திரத்திற்சேற
லரசியல்புரிவெஞ்சூரனனிகங்களவன்மேற்சென்று
பொருமுரணின்றித்தம்மூர்புகுவனவிரிவபோலாம்.

இ — ள். விரை செறி நீபம் தாரோன் - மணம் பொருந்திய (வெண்கடப்ப மலர்மாலையணிந்த வீரவாகுதேவர்,—விரைந்து செல் விசை கால் தள்ள - விரைவாகச் செல்லுதலா லுண்டான விசைக் காற்றானது ஒதுக்க,—திரைகடல் சுழித்து உள்வாங்கி திறல் மகேந்திரத்தில் சேறல் - (அதனால்) திரைகின்ற கடல் சுழித்து உள்வளைந்து வெற்றி பொருந்திய மகேந்திரபுரிக்குட்போதல்(எப்படியெனில்),—அரசு இயல் புரி வெம் சூரன் அனிகங்கள் - அரசாட்சி செய்கின்ற கொடிய சூரபன்மனது சேனைகள்,—அவன் மேல் சென்று - அவ்வீரவாகு தேவரிடத்திலே சென்று,—பொரு முரண் இன்றி - போர் செய்ய வாற்றலில்லாது,—இரிவ தம் ஊர் புகுவன போலாம் - தோற்பவைகளாய்த் தங்களூருக்குச் செல்லுதலைப் போலாகும். எ — று. (௫)

6. விடைத்தனியாற்றல்சான்றவிடலைகால்வெற்பினோடும்
படித்தலங்கீண்டுமுன்னம்பாதலங்காட்டிற்றன்று
னடற்படுவிசையின்காலுமளியதோவலியதன்றோ
கடற்புவிகீண்டுநாகருலகினைக்காட்டிற்றன்றே.

இ — ள். விடை தனி ஆற்றல் சான்ற விடலை கால்-இடபம்போலும் ஒப்பற்ற தைரியம் மிகுந்த வீரவாகுதேவரது பாதங்கள்,—வெற்பினோடும் படி தலம் கீண்டு முன்னம் பாதலம் காட்டிற்று - மலையுடனே பூமியைப் பிளந்து முன்னே பாதாளத்தைக் காட்டிற்று,— அன்னான் அடல் படு விசையின் காலும் அளியதோ - அவரது வலிமை பொருந்திய விசைக்காற்றும் இலேசானதோ?—வலியது அன்றோ - வலிமையான தல்லவா? (ஆதலால்),—கடல் புவி கீண்டு நாகர் உலகினை காட்டிற்று - கடல்சூழ்ந்த பூமியைக்கிழித்து நாகலோகத்தைக் காட்டிற்று. எ — று.

அன்று, ஏ அசை. ஓகாரம் இரண்டும் எதிர்மறை. உம்மை இறந்தது தழீஇய வெச்சம்.

7. பாசிழையலங்கற்றோளான்படர்தலும்விசையின்காலைக்
காய்சினவுயிர்ப்புச்செந்தீக்கலந்துடன்றழீஇக்கொண்டேகி
மாசுறுசூரன்வைகும்வளர்நகர்சுற்றியன்னோன்
றூசியதென்னமுன்னங்கொளுவியதூமஞ்சூழ.

இ — ள். பாசு இழை அலங்கல் தோளான் படர்தலும் - பசியவாபரணங்கள் விளங்கும் புயங்களையுடைய வீரவாகுதேவர் செல்லுதலும்,—காய் சினம் உயிர்ப்பு செம் தீ - கோபத்தால் விடுகின்ற சுவாசமாகிய சிவந்த அக்கினி,—விசையின் காலை கலந்து உடன்தழீஇக்கொண்டு - வேகத்தின்காற்றைச் சேர்ந்து ஒருங்குதழுவிக்கொண்டு,—அன்னோன் தூசியது என்ன முன்னம் ஏகி - அவ்வீரவாகுதேவரது தூசிப்படையைப் போல முன்னேசென்று,—மாசு உறு சூரன் வைகும் வளம் நகர் சுற்றி - குற்றம்பொருந்திய சூரபன்மனிருக்கின்ற வளப்பம் பொருந்திய நகரத்தைச் சூழ்ந்து,—தூமம் சூழ கொளுவிய - புகைசூழும்படி பற்றிக்கொண்டது. எ — று.

அது பகுதிப் பொருள் விகுதி. பசுமை யென்னும் பண்புச்சொல் மைவிகுதி கெட்டு முதல் நீண்டது. இழையையும் அலங்கலையும் அணிந்த தோளான் எனினும் அமையும். அலங்கல் - விளங்குதல், மாலை. காய்சின உயிர்ப்பு செம்தீ என்பதற்கு வெம்மையாகிய கோபத்தினால் விடுகின்ற சுவாசத்தி னின்றுந் தோன்றிய செந்தீயெனக் கொள்ளினும் அமையும். (எ)

8. பூஞ்சிலம்பரற்றுந்தாளான்போதுமுன்விரைவினோதை
வேய்ஞ்சிலம்படுதோட்சூரன்வீரமாமகேந்திரத்தி
னாஞ்சிலம்புரிசைபொன்செய்நளிர்வரைகுளிர்பூங்கிள்ளை
தாஞ்சிலம்புற்றசோலையலைத்தனதரையிற்றள்ளி.

இ — ள். பூம் சிலம்பு அரற்றும் தாளான் போதுமுன் - அழகிய சிலம்பொலிக்கின்ற கால்களையுடைய வீரவாகுதேவர் செல்லுமுன்,—விரைவின் ஓதை—வேகத்தின் காற்றோசை,—வேய் சிலம்பு அடு தோள் சூரன் மா வீர மகேந்திரத்தில் - மூங்கில்களையுடைய மலையைப் (பலத்தினாலே) வென்ற புயங்களையுடைய சூரபன்மனது வீரமகேந்திரத்திலுள்ள,—நாஞ்சில் அம் புரிசை பொன் செய் நளிர் வரை-உறுப்புகளமைந்த அழகிய மதில்களையும் பொன்னாற் செய்த குளிர்ச்சி பொருந்திய கட்டுமலைகளையும்,—பூம் கிள்ளை சிலம்பு உற்ற குளிர் சோலை - அழகிய கிளிகள் பேசிக்கொண் டிருக்கின்ற குளிர்ந்த சோலைகளையும்,—தரையில் தள்ளி அலைத்தன - கீழேதள்ளிக் கெடுத்தன. எ - று.

தாம் அசை. சிலம்பல் - ஒலித்தல். தரை - பூமி. (அ)

9. உறைபுகுநெடியவேலானுயிர்ப்புறுகனன்முன்னோடிச்
செறுநனூர்கொளுவவன்னான்சென்றிடுவிரைவின்கால்போ
யெறிபுனற்கடலைத்தாக்கவிடைந்துமற்றதுதானேகி
முறைமுறைதிரைக்கைநீட்டிமூண்டிடாதவித்துப்போமால்.

இ — ள். உறைபுகு நெடிய வேலான் உயிர்ப்பு உறுகனல் முன் ஓடி செறுநன் ஊர் கொளுவ - உறையி லிருக்கின்ற நீண்ட வேலினையுடைய வீரவாகு தேவரது சுவாசத்தி னின்றுந் தோன்றிய தீயானது முன்னே சென்று பகைவனாகிய சூரபன்மனது நகரத் திற் பற்றிக் கொள்ளவும்,—அன்னான் சென்றிடு விரைவின் கால்போய் - அவர்செல் லும் விசைக்காற்றானது சென்று,—எறி புனல் கடலை தாக்க - அலைவீசுகின்ற நீரினையு டைய கடலைமோதவும்,—அது இடைந்து ஏகி - அக்கடல் விலகிச்சென்று,—முறை முறை திரை கைநீட்டி - வரிசை வரிசையாக அலைகளென்னுங் கைகளைநீட்டி,—மூண் டிடாது அவித்து போம் - அத்தீ மூளாமல் அவித்துக்கொண்டு செல்லும். எ - று.

மற்று, தான், ஆல் அசை. (௯)

10. அண்ணலங்காலையேகவுயிர்த்தகாலவன்செல்லோதை
கண்ணழறுண்டமோச்சுங்கடுங்கனலெதிராதோடு
முண்ணிறைபுணரியாவுமொன்னலன்பதிமேற்சென்று
விண்ணிலமொழிந்தபூதமடுதலின்விளைத்தபூசல்.

இ — ள். அண்ணல் அம் காலை ஏக - பெருமையிற் சிறந்த வீரவாகுதேவர் செல் லும் பொழுது,—உயிர்த்தகால் - (அவர்) விட்ட சுவாசக்காற்றும்,—அவன் செல் ஓதை- அவர் செல்லுதலா லுண்டான விசைக்காற்றும்,—கண் அழல் - கண்ணிலிருந்து(தோன் றிய) அக்கினியும்,—துண்டம் ஓச்சும் கடும் கனல் - மூக்குவிடுத்த சுவாசத்தி னின்றுந் தோன்றிய வெம்மை யாகிய அக்கினியும்,—எதிராது ஓடும் - காற்றின் வழியே செல்லு கின்ற,—உள் நிறை புணரியாவும் - உள்ளாக நிறைந்த கடனீர் முதலிய வெல்லாம்,— ஒன்னலன் பதிமேல் சென்று - பகைவனாகிய சூரபன்மனது வீர மகேந்திர புரிக்குட் போய்,—விண் நிலம் ஒழிந்த பூதம் அடுதலின் பூசல் விளைத்த - ஆகாயமும் பூமியும் ஒழிந்த பூதங்கள் அழித்தலைப் போலச் சண்டை யிட்டன. எ — று.

உம்மை முற்று. எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன. (௧0)

11. வெள்வரைக்குவவுத்திண்டோள்வெலற்கருந்திறலோனெண்காற்
புள்விசைகொண்டுசெல்லப்புறந்தரப்புணரியங்க
ணுள்வளைந்துலாயசின்னையொண்சுறுப்பனைமீனூறை
தெள்விளித்திருக்கைதந்திதிமிங்கிலமிரிந்துபாய்ந்த.

இ — ள். வெள் வரை குவவு திண் தோள் வெலற்கு அரும் திறலோன் - வெள்ளி மலையைப் போலக் குவிந்த திண்ணிய புயங்களையும் (பகைவரால்) வெல்லுதற்கரிய வலிமையையு முடைய வீரவாகுதேவர்,—எண்கால் புள் விசை கொண்டு செல்ல — எட்டுக் கால்களை யுடைய சரபத்தைப் போல் விசையாகச் செல்லுதலும்,—புணரி புற ந்தர - (அவர் போதலா லுண்டான காற்றினால்) கடல் விலகியோட,—அம் கண் உள்வ ளைந்து உலாய சின்னை ஒண் சுறு பனைமீன் நூறை தெள்விளி திருக்கை தந்தி திமிங்கி லம் இரிந்து பாய்ந்த - அவ்விடத்தில் உள்ளே வளைந்து உலாவிய சின்னை மீன்களும் ஓசை காட்டுகின்ற திருக்கை மீன்களும் யானை மீன்களும் திமிங்கிலமீன்களும் விலகிப் பாய்ந்தன. எ — று. விபூதி விளங்குந் தோளாதலின் வெள்வரையையுவமைகூறினர். தெள்விளி ஓசை. (௧௧)

12. நாயகன்றூதனேகநளிர்கடலெதிர்ந்திடாது
சாய்வதுமீனமுற்றுந்தரங்கவெண்கரங்கடாங்கித்
தீயசூர்மூதூருய்த்துச்சென்றதுபொன்றுவோர்க்கு
மேயினவிச்சையுண்டிமிகத்தமர்வழங்குமாபோல்.

இ — ள். நாயகன் தூதன் ஏக - அறுமுகப்பெருமானது தூதராகிய வீரவாகுதேவர் செல்லும்பொழுது,—களிர்கடல் எதிர்ந்திடாது - குளிர்ச்சி பொருந்திய கடல் எதிரே வராமல்,—சாய்வது - (அவர் போகும் வழியே) சாய்வதாகி,—மீனமுற்றும் தரங்கம் வெண்கரங்கள் தாங்கி தீயசூர் மூதூர் உய்த்து சென்றது - (தன்னிடத்துள்ள) பலசாதிமீன்கள் முழுவதையும் அலைகளாகிய வெள்ளிய கைகளிற் றாங்கிக் கொடிய சூரபன்மனது பழைய மகேந்திர புரத்திலே கொண்டு போய்க் கொடுத்துச் சென்றது. (எதுபோலெனின்),—பொன்று வோர்க்கு இச்சைமேயின உண்டி மிக தமர் வழங்குமாபோல் - இறக்கின்றவர்களுக்கு விருப்பம் பொருந்திய உணவுகளை மிகவும் நெருங்கிய உறவினர்கள் கொடுப்பது போலாம். எ — று.

உம்மை முற்று. தாங்கி பொன்று வோர்க்கு***வழங்குமாபோல் சென்றது என எழுவா யெடுத்துப் பொருண் முடிப்பினும் பொருந்தும். (கஉ)

13. காழ்தருதடக்கைமொய்ம்பன்கடுமைசால்செலவினோதை
சூழ்தருகின்றகாலைத்துண்ணெனத்துளங்கிவிண்மீன்
வீழ்தரவேலைதன்னில்வேலையுமறிந்துசெல்ல
வாழ்திரையெறிமீன்முற்றுமந்தரம்புகுவமாறாய்.

இ - ள். காழ் தரு தடம் கை மொய்ம்பன் செலவின் கடுமை சால் ஓதை சூழ்தருகின்ற காலை - வலிமை பொருந்திய பெரிய கைகளையுடைய வீரவாகுதேவர் செல்லுதலாலுண்டான அதிவேகத்தி னொலியானது சூழ்ந்து கொண்ட சமயத்தில்,—விண் மீன் துண் என துளங்கி வேலை தன்னில் வீழ்தர - நட்சத்திரங்க ளாகிய மீன்கள் விரைவாக நடுங்கிக் கடலிலே யுதிர,—வேலையும் அறிந்து - சமுத்திரமுந் (தன்னிடத்து நட்சத்திரங்கள் விழுவதை) யறிந்து,—செல்ல ஆழ்திரை எறிமீன்முற்றும்-செல்லும்படி பெரிய திரைகளா லெறிகின்ற மீன்களெல்லாம்,—மாறாய் அந்தரம் புகுவ - பதிலாய் ஆகாயத்திற் செல்லுகின்றன. எ - று.

உம்மை முன்னையது உயர்வு சிறப்பு; பின்னையது முற்று. தன் சாரியை. வேலை உம் மறிந்து செல்ல - நீர் மேலே பொங்கிச் செல்லுதலாலே,—வாழ் மீன் முற்றும் - (அக்கடலில்) வசிக்கும் மீன்களெல்லாம்,—திரை எறி - அலைவீசுதலால்,—மாறாய் அந்தரம்புகுவ - (முன்விழுந்த வான் மீன்களுக்குப்) பதிலாக ஆகாயத்திற் செல்லுகின்றன எனப்பொருள் கூறுவாருமுளர். உம் - மேல். (கங)

14. காமருநயக்குங்காளைகதுமெனச்செல்லப்பாங்கிற்
றூமலர்க்கரத்திலிட்டசுடர்மணிக்கடகவாள்போய்
நேமியங்குவடுசூழ்ந்துநிமிர்தருதிமிரமோட்டி
யேமநல்லண்டவில்லோடெதிர்ந்துபோயிகல்செய்கின்ற.

இ — ள். காமரும் நயக்கும் காளை கதுமென செல்ல - மன்மதனும் விரும்பத்தக்க (அழகையுடைய) வீரவாகுதேவர் விரைவாகச்செல்ல,—பாங்கில் - பக்கத்திலுள்ள,—தூமலர்கரத்தில் இட்ட சுடர்மணி கடகம் வாள்போய் - பரிசுத்தமானமலர்போன்ற கைகளிற்றரித்த ஒளிபொருந்திய மணிகளிழைத்த வளையின் ஒளி சென்று,—நேமி அம் குவடு சூழ்ந்து - சக்கரவாளகிரியைச் சூழ்ந்து,—நிமிர்தரு திமிரம் ஓட்டி - மிகுந்தவிருளை நீக்கி,—நல் ஏமம் அண்டவில்லோடு - மாற்றுயர்ந்த பொன் மயமாகிய அண்டச் சுவரின் ஒளியோடு,—எதிர்ந்துபோய் இகல் செய்கின்ற - எதிர்ந்துசென்று போர் செய்கின்றது. எ — று.

அம் அசை. உம்மை உயர்வு சிறப்பு. கடகம் அஸ்தகடகம். (கச)

15. விண்ணவர்யாருந்தேரும்படையுமாய்விரவமேலோ
னண்ணலர்புரமேலோச்சுநகையழல்போதலொத்தான்
கண்ணழற்செலவும்போன்றான்கார்முகம்பூட்டியுய்த்த
மண்ணுலகிடந்தகூர்வாய்வாளியுமென்னச்சென்றான்.

இ — ள். விண்ணவர் யாருந்தேரும் படையுமாய் விரவ - (வீரவாகுதேவர்) தேவர்களெல்லாந் தேருஞ் சேனையு மாயுதங்களு மாகப் பொருந்திவர,—மேலோன் நண்ணலர் புரம் மேல் ஓச்சும் நகை அழல் போதல் ஒத்தான் - சிவபெருமான் பகைவர்களுடைய முப்புரங்களின் மீது விட்ட புன்சிரிப்பினால் அக்கினி போதலை யொத்தார்,—(அதுவுமன்றி) கண் அழல் செலவும் போன்றான் - (அச்சிவபெருமானது) திருக்கண்களிற் றோன்றிய கோபாக்கினி செல்லுதலையும் ஒத்தார்,—(அதுவன்றியும்) கார் முகம் பூட்டி உய்த்த மண் உலகு இடந்த கூர்வாய் வாளியும் என்ன சென்றான் - (மேருவாகிய) வில்லிற் றொடுத்து விட்ட பூமியைக்கிழித்த கூரிய வாயை யுடைய (விஷ்ணுவாகிய) அம்பின் வேகத்தைப் போலவும் போனார். எ — று. கூர்வாயை வாளிக்கு அடையாக்கினுமாம். உம்மை யாரும் என்பதில் முற்றும், செலவும் வாளியும் என்பனவற்றில் இறந்தது தழீஇய வெச்சமும், ஏனையவற்றில் எண்ணுமாம். (கரு)

16. தரைதனையலைத்துநோற்குந்தாபதர்க்கலக்கண்செய்து
சுரர்திருக்கவர்ந்துவாட்டுஞ்சூரனைக்கிளையினோடும்
விரைவுடன்முடிப்பான்முன்னிவெகுண்டுசெவ்வேளங்குய்த்த
வொருதனிச்சுடர்வேல்போன்றும்போயினனுயர்திண்டோளான்.

இ — ள். தரை தனை அலைத்து நோற்கும் தாபதர்க்கு அலக்கண் செய்து - பூமியை வருத்தித் தவஞ் செய்கின்ற முனிவர்களுக்குத் துன்பத்தை யுண்டாக்கி,—சுரர்திரு கவர்ந்து - தேவர்களுடைய செல்வங்களை யபகரித்து,—வாட்டும் சூரனை கிளையினோடும் - வருத்துகின்ற சூரபன்மனைச் சுற்றத்தவர்களுடன்,—விரைவுடன் முடிப்பான் முன்னி - சீக்கிரமாக அழிக்கும்படி நினைத்து,—வெகுண்டு செவ்வேள் அங்கு உய்த்த - கோபங்கொண்டு குமாரக்கடவுள்(அவனிருக்கின்ற)மகேந்திரபுரத்துக்கு அனுப்பிய,—ஒரு தனி சுடர் வேல் போன்றும் - ஒப்பற்ற ஒளிபொருந்திய வேலாயுதத்தைப் போலவும்,—உயர் திண் தோளான் போயினன் - உயர்ந்த வலிய புயங்களை யுடைய வீரவாகுதேவர் சென்றார். எ — று.

தன் இன் என்பன சாரியை. உம்மை இறந்தது தழீஇய வெச்சம். (கசு)

17. இமிழ்தருதரங்கப்பாலினெறிகடன்மதித்துவானோர்க்
கமிர்தினையளிப்பான்வேண்டியகிலமுமுண்டுதொன்னா
ளுமிழ்தருதிருமாலுன்னவுணர்ந்துமந்தரமாமோங்கு
னிமிர்தருபுணரிசெல்லுநிலைமைபோல்வீரன்போந்தான்.

இ — ள். இமிழ்தரு தரங்கம் எறி பாலின் கடல் மதித்து - ஒலிக்கின்ற அலைவீசாநின்ற பாற்கடலைக் கடைந்து,—வானோர்க்கு அமிர்தினை அளிப்பான் வேண்டி - தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுக்கும் பொருட்டு விரும்பி,—அகிலமும் தொல் நாள் உண்டு - உலக மெல்லாவற்றையும் முற்காலத்திலுண்டு,—உமிழ்தரு திருமால் உன்ன - உமிழ்ந்த திருமாலானவர் நினைக்க,—மந்தரம் ஆம் ஓங்கல் உணர்ந்து - மந்தரமாகிய மலை (யதனை) யறிந்து,—நிமிர்தரு புணரி செல்லும் நிலைமைபோல் வீரன் போந்தான் - உயர்ந்த(பாற்) கடலிற் செல்லுந் தன்மையைப் போலவும் வீரவாகுதேவர் சென்றார். எ — று.

உம்மை முற்று. (கஎ)

18. சேண்டொடருலகும்பாருந்தெருமரவனலம்வீசிக்
காண்டருவிடத்தையீசன்களத்திடையடக்கிவைப்ப
வீண்டெமைவிடுத்தியென்றேத்தலுமவனங்குய்ப்ப
மீண்டதுகடல்போந்தென்னவீரருள்வீரன்சென்றான்.

இ — ள். சேண் தொடர் உலகும் பாரும் தெருமர - ஆகாயத்திலுள்ள உலகங்களும் பூமியுஞ்சுழலும்படி,—அனலம் வீசி காண் - அக்கினிச் சுவாலையை வீசிக்கொண்டு வந்த, தருவிடத்தை - மேலான (ஆலகால) விஷத்தை,—ஈசன் களத்திடை அடக்கிவைப்ப - சிவபெருமான் (தமது) கண்டத்தி லடக்கி வைக்கவும்,—ஈண்டு எமை விடுத்தி என்று ஏத்தலும் - (அவ்விஷம் சிவபெருமானைப் பார்த்து) இப்பொழுது என்னைவிட் டருள்வீராக வென்று துதிக்கவும்,—அவன் அங்கு உய்ப்ப - அப்பெருமான் (அவ்விஷத்தை) அக்கண்டத்தினின்றும் (வெளியில்) விட,—அது மீண்டு கடல் போந்து என்ன - அந்த ஞ்சானது திரும்பிக் கடலை நோக்கி வந்தாற் போலவும்,—வீரருள் வீரன் சென்றான் - வீரர்களுக்குட் சிறந்த வீரவாகுதேவர் சென்றார். எ — று. உம்மைகள் முற்று. (கஅ)

19. பொலங்கழல்வீரவாகுபுணரிமேலிவ்வாறேகி
யலங்கலந்திண்டோள்வெஞ்சூரணிநகர்வடாதுபாலின்
விலங்கலில்வீரன்யாளிவியன்முகத்தவுணன்போற்று
மிலங்கையந்தொல்லைமூதூரணித்தெனுமெல்லைசென்றான்.

இ — ள். பொலம் கழல் வீரவாகு புணரிமேல் இவ்வாறு ஏகி - பொன்மயமாகிய வீரக்கழலைத் தரித்த வீரவாகுதேவர் கடலின்மே லிவ்விதமாகச் சென்று,—அலங்கல் அம் திண் தோள் வெம் சூர் அணிநகர் வடாது பாலின் - மாலையணிந்த வலிய புயங்களையுடைய கொடியவனாகிய சூரபன்மனது அழகிய நகரத்துக்கு வடபுறத்திலே,—விலங்கல் இல் வீரன் வியன் யாளிமுகத்து அவுணன் - நீங்காதிருக்கின்ற வீரனாகிய பெரிய யாளி முகத்தை யுடைய அசுரனாலே,—போற்றும் - காக்கப்படுகின்ற,—இலங்கை அம் தொல்லை மூதூர் அணித்தெனும் எல்லை சென்றான் - இலங்கை யென்னும் (பெயரினை யுடைய) சிறந்த பழைய பெரிய நகரத்தின் சமீபமான எல்லையின் வழியாகச் சென்றார்.

அலங்கல் அம் என்பதில் அம் அசை. (கசு)

கடல்பாய்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எஉ.

---

## வீரசிங்கன்வதைப்படலம்.

1. அன்னதோர்வேலைமுன்னமகன்றலையாளிப்பேரோன்
றுன்னுபல்லனிகத்தோடுஞ்சூரனைக்காண்பானேக
மன்னதிவீரனென்னுமதலையாயிரமாம்வெள்ளந்
தன்னொடுமிலங்கைவைகித்தணப்பறப்போற்றியுற்றான்.

இ — ள். அன்னது வேலை - (வீரவாகுதேவர்) அவ்வாறுசெல்லும்போது,—முன்னம் - முன்னே,—அகன் தலை யாளி பேரோன் - பெரிய தலைகளையுடைய யாளிமுகன் என்பவன்,—துன்னுபல் அனிகத்தோடும் - நெருங்கிய பலசேனைகளுடன்,—சூரனை காண்பான் ஏக - சூரபன்மனைக் காணும் பொருட்டுப் போக,—மன் அதிவீரன் என்னும்

மதலை - நிலைபெற்ற அதிவீரனென்னும் மகன்,—ஆயிரம் ஆம் வெள்ளம் தன்னொடும் - ஆயிரக்கணக்காகிய வெள்ளஞ் சேனைகளுடன்,—இலங்கைவைகி - இலங்கைமா நகரத்தி லிருந்து,—தணப்பு அற போற்றி உற்றான் - விடாமல் காவல் செய்தான். எ — று.

ஓர் அசை. அத்து, தன் சாரியை. (க)

2. ஆனதோர்மிக்கவீரத்தாண்டகையவுணர்போற்ற
மாநகர்க்கோயிலண்ணவடதிசைவாயிறன்னின்
மேனிமிரவுணர்தானைவெள்ளமைஞ்ஞூறொடுன்னான்
சேனையந்தலைவன்வீரசிங்கனாந்திறலோனுற்றான்.

- ள். ஆனது மிக்க வீரத்து ஆண் தகை - அத்தன்மையாகிய மிக்க வீரத்தினை யுடைய அதிவீரனாகிய தலைவன்,—அவுணர் போற்ற - அசுரர்கள் துதிக்க,—மாநகர் கோயில் அண்ண - பெரிய (இலங்கா) நகரத்திலுள்ள அரண்மனையி லிருக்க,—வடதிசை வாயில தன்னில் - வடக்குத் திக்கு வாசலில்,—அன்னான் சேனை அம் தலைவன் வீரசிங்கன் ஆம் திறலோன் - அவன் சேனாதிபதியான வீரசிங்கன் என்னும் பலசாலி,—மேல் நிமிர் அவுணர்தானை வெள்ளம் ஐஞ்ஞூறொடு உற்றான் - உயர்ந்த ஐஞ்ஞூறு வெள்ளஞ் சேனைகளோ டிருந்தான். எ — று.

ஓர், அம் அசை. தன் சாரியை. மேல் நிமிர் - ஒருபொருட்பன் மொழி. மேலாக எனினுமமையும். (உ)

3. உற்றதோர்வீரசிங்கனொண்சிறைச்சிம்புளேபோல்
வெற்றியந்திண்டோளேந்தல்விரைந்துசென்றிடலுங்காணூஉச்
சற்றுநங்காவலெண்ணான்றமியன்வந்திடுவான்போலு
மற்றிவன்யாரையென்னாச்சீறினன்வடவையேபோல்.

இ — ள். உற்றது ஓர் வீரசிங்கன் - (அங்ஙனம் வடக்குவாசலி) லிருந்த (சேனாதிபதியாகிய) வீரசிங்கன்,—ஒண் சிறை சிம்புளே போல் - அழகிய இறகுகளை யுடைய சிம்புட் பட்சியைப்போல,—வெற்றி அம் திண் தோள் ஏந்தல் - வெற்றி பொருந்திய அழகிய வலிய புயங்களை யுடைய வீரவாகுதேவர்,—விரைந்து சென்றிடலும் காணூஉ - விரைந்து செல்லுதலைப் பார்த்து,—நம் காவல் சற்றும் எண்ணான் - நமது காவலைச் சற்றும் மதியாதவனாய்,—தமியன் வந்திடுவான் போலும் - தனித்தவனாக ஒருவன் வருவான் போலும்,—இவன் யாரை என்ன வடவையே போல் சீறினன் - இவன் யாவனென்று வடவாமுகாக்கினியைப் போலக் கோபித்தான். எ — று.

ஓர், மற்று அசை. யாரை என்பதில் ஐ சாரியை. ஏகாரம் இரண்டும் தேற்றம். (ந)

4. உண்குவனிவன்றனாவியொல்லையென்றுன்னிக்காலு
மெண்கிளர்மனமும்பின்னரெய்துமாறெழுந்துநேர்போய்
விண்கிளர்செலவிற்றானைவெள்ளமைஞ்ஞூறுஞ்சுற்ற
மண்கிளர்கடல்போல்வீரவாகுவின்முன்னஞ்சென்றான்.

இ — ள். இவன் தன் ஆவி ஒல்லை உண்குவன் என்று உன்னி - இவனது உயிரை விரைவில் வாங்குவே னென்று நினைத்து,—காலும் எண்கிளர் மனமும் பின்னர் எய்துமாறு எழுந்து நேர் போய் - வாயுகதியும் நினைக்கின்றமனோகதியும் பின்னிடும்படி யெழும்பி நேரே போய்,—விண் கிளர் செலவில் ஐஞ்ஞூறு வெள்ளம் தானை சுற்ற - ஆகாயமார்க்கமாகக் கிளர்ச்சி கொள்ளுஞ் செல்லுகையையுடைய ஐஞ்ஞூறு வெள்ளஞ் சேனைகள் (தன்னைச்) சூழ,—மண் கிளர் கடல்போல் - பூமியிலிருந்து கிளம்புகின்ற சமுத்திரம் போல,—வீரவாகுவின் முன்னம் சென்றான் - வீரவாகுதேவருக்கு முன்னே போனான்.

எண்கிளர் - எண்ணுதற் கரிய ஊக்கமான எனினும் அமையும். உம்மை முன்னையவை எண்; பின்னையது முற்று. (ச)

5. சென்றிடுவீரசிங்கன்றிறல்கெழுபுயனைப்பாரா
வின்றளவெமதுகாப்புளேகினரில்லையார்நீ
யொன்றொருதமியன்போந்தாயுயிர்க்குநண்பில்லாய்நின்னைக்
கொன்றிடுமுன்னீவந்தசெயன்முறைகூறுகென்றான்.

இ — ள். சென்றிடு வீரசிங்கன் திறல் கெழு புயனை பாரா - (அவ்வாறு) சென்ற வீரசிங்கன் வீரவாகுதேவரைப்பார்த்து,—இன்று அளவு எமது காப்புள் ஏகினர் இல்லை- இதுவரையும் எமது காவலுக்குள்ளே (எல்லைகடந்து) வந்தவர்களில்லை,—நீயார் - நீ யாவன்,—ஒன்று ஒருதமியன் போந்தாய் - ஒரே யொருவனாக வந்திருக்கின்றாய்,—உயிர்க்கு நண்பு இல்லாய் - உயிரிடத்துப் பற்றற்றவனே,—உன்னை கொன்றிடுமுன் - உன்னைக் கொல்லுவதற்கு முன்னே,—நீ வந்த செயல் முறை கூறுக என்றான் - நீவந்தகாரியத்தை முறைப்படி சொல்வாயாக வென்றான். எ — று. (ரு)

6. பொன்னியறிண்டோள்வீரன்புகலுவானிலங்கைவாவி
மன்னியல்சூரன்வைகுமகேந்திரஞ்சென்றுமீள்வா
னுன்னினன்போந்தேனீதென்னுறுசெயல்வலியையென்னி
னின்னினிவேண்டிற்றொன்றையியற்றுதிகாண்பனென்றான்.

இ — ள். பொன் இயல் திண் தோள் வீரன் புகலுவான் - (அங்ஙனம் வீரசிங்கன் கேட்ட பொழுது) அழகு பொருந்திய வலிய புயங்களையுடைய வீரவாகுதேவர் சொல்லுகின்றார்,—இலங்கை வாவி மன் இயல் சூரன் வைகும் மகேந்திரம் சென்று மீள்வான் உன்னினன் போந்தேன் - (யான் இவ்)விலங்கையைக் கடந்து அரசுரிமை நடாத்துகின்றசூரபன்மனிருக்கும் வீரமகேந்திரத்திற் சென்று வரும் பொருட்டு நினைத்து வந்தேன்,—ஈது என் உறுசெயல் - இது தான் நான் வந்த காரியம்,—வலியை என்னில் - (நீ) வலிமையுடையவனானால்,—இன்னினி - இப்பொழுது,—வேண்டிற்று ஒன்றை - உன்னாலான தொன்றை,—இயற்றுதி காண்பன் என்றான் - செய் பார்க்கின்றேன் என்று சொன்னார். எ - று.. (சு)

7. திறன்மிகுசிங்கனன்னோன்செப்பியமொழியைக்கேளா
விறையுநம்மவுணராணையெண்ணலன்வலியன்போலு
மறிகுதுமீண்டுசேறலழகிதன்றென்னவுன்னிக்
குறுகியபடைஞர்தம்மையிவனுயிர்கோடிரென்றான்.

இ — ள். திறல் மிகு சிங்கன் - தைரியம் மிகுந்த வீரசிங்கன்,—அன்னோன் செப்பிய மொழியை கேளா - அவ்வீரவாகுதேவர் கூறியமொழிகளைக் கேட்டு,—இறையும் நம் அவுணர் ஆணை எண்ணலன் - (இவன்) சற்றும் நமது அசுரருடையகட்டளையை மதிக்கின்றானில்லை,—வலியன் போலும் - (இவன் ஓர்) பலசாலிபோலும்,—மீண்டு சேறல் அறிகுதும் - (இவன்போய்த்) திரும்பி வருதலை யறிவோம்,—இது அழகு அன்று என்ன உன்னி - இது நன்மையல்ல வென்று நினைத்து,—குறுகிய படைஞர் தம்மை - (தன்னுடன்) வந்த சேனாவீரர்களைப் (பார்த்து),—இவன் உயிர் கொள்திர் என்றான் - இவனது உயிரை வாங்குங்களென்றான். எ — று. தம் சாரியை. உம்மை உயர்வு சிறப்பு. (எ)

8. என்றலுமரியதொன்றையெயினர்கள்வேட்டைக்கானிற்
சென்றனர்திரண்டுசுற்றிச்செருவினையிழைப்பதேபோற்
பொன்றிகழ்விசயவாகுப்புங்கவன்றன்னைச்சீற்ற
வன்றிறலவுணர்யாரும்வளைந்தமர்புரியலுற்றார்.

இ — ள். என்றலும் - என்று (வீரசிங்கன்)கூறியவுடனே,—அரி அது ஒன்றை எயினர்கள் வேட்டை கானில் சென்றனர் திரண்டு சுற்றி செருவினை இழைப்பதே போல் - ஒருசிங்கத்தை வேடர்கள் வேட்டையாடுங் காட்டிற்சென்று திரளாகச் சூழ்ந்து சண்டைசெய்வதுபோல,—பொன் திகழ் விசயவாகு புங்கவன் தன்னை - இலட்சுமிவிலாசம் விளங்குகின்ற வெற்றிபொருந்திய புயங்களையுடைய வீரவாகுதேவரை,—சீற்றம் வன்திறல் அவுணர் யாரும் வளைந்து அமர் புரியல் உற்றார் - கோபத்தையும் மிக்க வலிமையையுமுடைய அவுணர்களனைவரும் சுற்றிக்கொண்டுபோர்செய்யத்தொடங்கினார்கள்.

பொன் அழகெனினும் அமையும். அரியது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி; தன் சாரியை. எகாரம் அசை. உம்மை முற்று. (அ)

9. வேலினைவிடுப்பர்தண்டம்வீசுவர்முசலந்தூர்ப்பர்
சாலமதெறிவராலந்தன்னையோச்சிடுவர்வார்விற்
கோல்வகைதொடுப்பர்நாஞ்சிற்கொடும்படைதூரப்பர்வெய்ய
சூலமதுய்ப்பர்கொண்டதோமரஞ்சொரிவரம்மா.

இ — ள். வேலினை விடுப்பர் - (அசுரர்கள்) வேலாயுதத்தை விடுவார்கள்,—தண்டம் வீசுவர் - தண்டாயுதங்களையெறிவார்கள்,—முசலம் தூர்ப்பர் - இருப்புலக்கைகளையெறிவார்கள்,—சாலமது எறிவர் - வலைகளைவீசுவார்கள்,—ஆலம் தன்னை ஓச்சிடுவர் - மழுக்களையெறிவார்கள்,—வார் வில் கோல்வகை தொடுப்பர் - நீண்டவிற்களிலே அம்புகளை வைத்துத்தொடுப்பார்கள்,—கொடும் நாஞ்சில் படை தூரப்பர் - வளைந்த கலப்பையாகிய ஆயுதத்தை விடுவார்கள்,—வெய்ய சூலமது உய்ப்பர் - கொடிய சூலங்களையெறிவார்கள்,—கொண்ட தோமரம் சொரிவர் - வைத்திருந்த பெருஞ் சவளங்களை விடுவார்கள். எ - று.

அம்மா அசை. சாலமது சூலமது என்பனவற்றில் உள்ள அது இரண்டும் பகுதிப்பொருள்விகுதி. வேலினை என்பதில் இன்னும் ஆலந்தன்னை என்பதில் தன்னுஞ் சாரியை. (கூ)

10. கிளர்ந்தெழுபரிதிதன்னைக்கேழ்கிளருருமுக்கொண்மூ
வளைந்தெனவவுணர்வீரன்மருங்குசூழ்ந்தாடல்செய்யத்
தளர்ந்திலனெதிர்ந்துதன்கைத்தாரைவாளுறையினீக்கி
யுளந்தனின்முனிந்தன்னோரையொல்லைசூழ்ந்தடுதல்செய்தான்.

இ - ள். கிளர்ந்து எழு பரிதி தன்னை - ஒளியுடன் உதிக்கின்ற சூரியனை,—கேழ் கிளர் உருமு கொண்மூ வளைந்தென - ஒளிவிளங்குகின்ற இடியோடுகூடிய மேகங்கள் சூழ்ந்துகொண்டாற் போல,—அவுணர் வீரன் மருங்கு சூழ்ந்து ஆடல் செய்ய - அசுரர்கள் வீரவாகுதேவரின் பக்கத்திற் சூழ்ந்து போர்செய்ய,—தளர்ந்திலன் எதிர்ந்து தன் கை தாரைவாள் உறையின் நீக்கி - (அவ்வீரவாகுதேவர் சற்றுந்) தளர்ச்சியடையாதவராய் (அவர்களுடன்) எதிர்த்துத் தமது கையினால் கூரியவாட்படையை உறையினின்றும் எடுத்து,—உளம் தனில் முனிந்து - மனசிற்கோபங்கொண்டு,—அன்னோரை ஒல்லை சூழ்ந்து அடுதல் செய்தான்-அவர்களை விரைவாகச்சுற்றிக் கொல்லத்தொடங்கினார். எ-று.

தன் இரண்டும் சாரியை. (கo)

11. அரக்குருக்கொண்டவெற்பினடுகனற்கடவுளெய்தி
யுருக்கியேயதனையெல்லாமொல்லையினுடைக்குமாபோ
னெருக்கியவவுணர்தானைநீத்தமதுடையவீரன்
றிருக்கிளர்வாளொன்றேந்திச்சென்றுசென்றடுதல்செய்தான்.

இ - ள். அரக்கு உரு கொண்ட வெற்பின் அடுகனல் கடவுள் எய்தி - மெழுகினுலேயுருவமாகவமைக்கப்பட்ட மலையில் (எல்லாவற்றையும்) அழிக்கின்ற அக்கினிதேவன் புகுந்து,—அதனை எல்லாம் உருக்கியே ஒல்லையின் உடைக்குமாபோல் - அம்மலை முழுவதையும் உருக்கி விரைவாக அழிக்குந்தன்மையைப்போல,—நெருக்கிய அவுணர் தானை நீத்தமது உடைய - (தம்மைச்சூழ்ந்து) நெருங்கிய ஐஞ்ஞூறுவெள்ளம் அவுண சேனைகளும் அழியும்படி,—வீரன் திரு கிளர் வாள் ஒன்று ஏந்தி - வீரவாகுதேவர் ஒளி விளங்குகின்ற ஒருவாளைக் கையிலேதாங்கி,—சென்று சென்று அடுதல் செய்தான் - (அவர்கள்நிற்குமிடங்களினெல்லாம்) போய்ப் போய்க் கொன்றார். எ — று.

அது பகுதிப்பொருள்விகுதி. ஏகாரம் அசை. (கக)

12. பனிபடர்குழுமறன்னைப்பாயிருட்செறிவையங்கிக்
கனிபடர்பொற்பிற்றோன்றுங்காய்கதிர்முடிக்குமாபோ
னனிபடரவுணர்தானைநைந்திடச்சுடர்வாளொன்றாற்
றனிபடர்வீரவாகுதடிந்தனன்றிரிதலுற்றான்.

இ — ள். பனிபடர் குழுமல் தன்னை - விரிந்தபனிக்கூட்டத்தையும்,—பாய் இருள் செறிவை - பரவியவிருட்கூட்டத்தையும்,—அங்கி கனிபடர் பொற்பின் தோன்றும் காய் கதிர் முடிக்குமாபோல் - அக்கினிப்பழம்போலப் பரந்த பொலிவோடுந் தோன்றுகின்ற சுடுங்கிரணங்களையுடைய சூரியன் அழிக்குந்தன்மைபோல,—நனிபடர் அவுணர் தானை நைந்திட - மிகுதியாகவந்த அசுரசேனைகள் வருந்தும்படி,—தனிபடர் வீரவாகு - தனித்துவந்த வீரவாகுதேவர்,—சுடர் வாள் ஒன்றால் - ஒளிபொருந்திய ஒருவாளினால்,—திரிதலுற்றான் தடிந்தனன் - சுற்றிச்சுற்றிவெட்டிக்கொன்றார். எ — று.

தன் சாரியை. (கஉ)

13. உறைந்தனகுருதிவாரியொல்லையிலுவரித்தெண்ணீர்
மறைந்தனவவுணர்தானைமால்கரிபரிதேர்முற்றுங்
குறைந்தனகரந்தாண்மொய்ம்புகொடுமுடிதுணிந்துவீழ்ந்த
நிறைந்தனவலகையீட்டநிரந்தனபரந்தபூதம்.

இ — ள். உறைந்தன குருதி வாரி ஒல்லையில் தெள் உவரி நீர் மறைந்தன - உறைந்தனவாகிய இரத்தவெள்ளம் (பரவியோடுதலினால்)கடலிலுள்ள தெளிந்த உப்புநீர் மறைந்தன,—அவுணர் தானை மால் கரி பரி தேர் முற்றும் குறைந்தன - அசுரசேனைகளும் பெரியயானைகளுங் குதிரைகளும் தேருமாகிய வெல்லாம் குறைந்தன,—கரம் தாள் மொய்ம்பு கொடுமுடி துணிந்து வீழ்ந்த - கைகளுங் கால்களும் புயங்களும் வளைந்தமுடிகளும் வெட்டுண்டு விழுந்தன,—அலகை ஈட்டம் நிறைந்தன - பேய்க்கூட்டங்கள் நிறைந்தன,—பரந்த பூதம் நிரந்தன - பரம்பிய பூதங்கள் நிரம்பின. எ - று. உம்மை முற்று.()

14. வெள்ளநூறவுணர்தானைவிளிந்திடவினையபாலால்
வள்ளல்சென்றடுதல்செய்யமற்றுளவவுணர்யாரு
முள்ளநொந்திரங்கித்தத்தமுயிரினையோம்பல்செய்து
பொள்ளெனநிலனும்வானும்புலந்தொறுமிரியல்போனார்.

இ — ள். இனையபாலால் - இவ்வண்ணமாக,—நூறு வெள்ளம் அவுணர் தானை விளிந்திட - நூறுவெள்ளம் அசுரசேனைகளிறக்கும்படி,—வள்ளல் சென்று அடுதல் செய்ய - வீரவாகுதேவர் சென்று கொல்லவும்,—மற்றுள அவுணர் யாரும் - எஞ்சிய (நானூறுவெள்ளஞ்சேனைகளாகிய) அவுணர்களனைவரும்,—உள்ளம் நொந்து இரங்கி தத்தம் உயிரினை ஓம்பல் செய்து - மனம்நொந்து வருந்தி தங்கள்தங்கள் பிராணனைக் காத்துக்

கொண்டு,—பொள்ளென நிலனும் வானும் புலம் தொறும் இரியல் போனார் - விரைவாக ஆகாயத்தினும் பூமியினும் உள்ள இடங்கடோறும் புறங்கொடுத்தோடினார்கள். எ - று.

உம்மை முன்னையது முற்று; பின்னையது எண். (௧௪)

15. போதலும்வீரசிங்கன்பொள்ளெனச்சினமேற்கொண்டு
மாதிரங்கடந்துமேல்போய்வளர்தரும்வாகைமொய்ம்பன்
மீதொருசூலந்தன்னைவிட்டனன்விட்டகாலை
யேதியங்கதனாலன்னதிருதுணிபடுத்தியார்த்தான்.

இ - ள். போதலும் - (அங்ஙனஞ் சேனைகள் புறங்கொடுத்தோடிப்) போதலும்,—வீரசிங்கன் பொள்ளென சினம் மேற்கொண்டு-வீரசிங்கன் விரைவாக மிக்க கோபங்கொண்டு,—மாதிரம் கடந்து மேல் போய் வளர்தரும் வாகை மொய்ம்பன் மீது - திக்குகளையுங் கடந்து மேலாகச் சென்று வளர்ந்துள்ள புயங்களையுடைய வீரவாகுதேவர் மேல்,—ஒரு சூலம் தன்னை விட்டனன் - ஒருசூலத்தை (யெடுத்து) விட்டான்;—விட்டகாலை - விட்டபொழுது,—ஏதி அதனால் - வாளினால்,—அன்னது இரு துணி படுத்தி ஆர்த்தான் - (வீரவாகுதேவர்) அதனையிருதுண்டாகவெட்டி யாரவாரித்தார். எ - று.

அங்கு அசை. தன் சாரியை. ஏதி அதனால் என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. அன் சாரியை. (௧௫)

16. ஆர்த்தலுமடங்கற்பேரோனாண்டகைவீரன்மேன்மை
பார்த்தனன்றனதுபாணிபற்றியபடைகடம்மிற்
கூர்த்ததோர்குலிசம்வீசக்குறுகிவாளதனான்மாற்றிப்
பேர்த்தொருபடையெடாமுன்பெயர்ந்தவன்முன்னஞ்சென்றான்.

இ - ள். ஆர்த்தலும் - (வீரவாகுதேவர் அவ்வாறு) ஆரவாரிக்க,—மடங்கல் பேரோன் - வீரசிங்கன்,—ஆண் தகை வீரன் மேன்மை பார்த்தனன் - ஆண்டன்மையிற் சிறந்த அவரது மேன்மையைப் பார்த்தவனாகி,—தனது பாணி பற்றிய படைகள் தம்மில் - தன் கைகளிற் பிடித்துள்ளவாயுதங்களுள்,—கூர்த்தது ஓர் குலிசம் வீச-கூரியவொருவச்சிராயுதத்தையெறிய,—குறுகி வாள் அதனால் மாற்றி-சென்று வாளினால் (அதனை) வெட்டி,—பேர்த்து ஒருபடை எடாமுன் - (அவன்) திரும்ப ஒரு ஆயுதத்தை யெடுக்க முன்னரே,—பெயர்ந்து அவன் முன்னம் சென்றான் - நடந்து அவ்வீரசிங்கனுக்கு எதிரேபோனார். எ - று. தம் சாரியை. வாள் அதனால் என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. அன் சாரியை. பேர்த்தொருபடை என்பதற்கு வேறொருபடை எனினுமொக்கும்.

17. சென்றுதன்மணிவாளோச்சிச்செங்கைகடுமித்துத்தீயோ
னொன்றொருமுடியுங்கொய்தேயுவர்க்கடலிடையேவீட்டி
நன்றுதன்னுறையுட்செல்லநாந்தகஞ்செறித்துமுன்னோர்
வென்றிகொண்டகன்றானென்பவேலவன்விடுத்ததூதன்.

இ - ள். வேலவன் விடுத்த தூதன் - கந்தஸ்வாமியனுப்பிய தூதராகிய வீரவாகுதேவர்,—சென்று தன் மணிவாள் ஓச்சி - போய்த் தமது ஒளிபொருந்திய வாளினால் வீசி,—செம் கைகள் துமித்து - (அவ்வீரசிங்கனது) செவ்விய கைகளைவெட்டி,—தீயோன் ஒன்று ஒரு முடியும் கொய்து - கொடிய அவனது ஒருதலையையும் அறுத்து,—உவர் கடல் இடையே வீட்டி - உப்புக்கடலிற்றள்ளி,—நன்று தன் உறையுள் செல்ல நாந்தகம் செறித்து - நன்றாய்த் தமது உறைக்குட்போகும்படி வாளைச்செலுத்தி,—

முன் ஓர் வென்றி கொண்டு அகன்றான் என்ப - முதலிலோர் வெற்றியைக் கொண்டு சென்றார். எ — று.

என்பவும் ஏகாரங்களும் அசை. என்ப வென்பதனை அசையாக்காமல் என்று முதனூலாசிரியர் கூறுவரெனினுமொக்கும். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௧௭)

வீரசிங்கன்வதைப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௯.

# இலங்கைவீழ்படலம்.

1. மலங்கொடுசுறவுதூங்குமறிகடன்மீதுமேரு
விலங்கல்சென்றிட்டதென்னவிண்ணிடந்தன்னினீங்கி
யலங்கலந்திண்டோள்வள்ளலவுணர்தம்மிருக்கையாகு
மிலங்கையங்குவடுமூன்றிலிடைப்படுசிகரம்பாய்ந்தான்.

இ — ள். மலங்கொடு சுறவு தூங்கும் மறிகடல் மீது - விலாங்குகளுடன் சுறா மீன்களும் உலாவப்பெற்ற அலைமறிகின்ற கடலின் மீது,—மேரு விலங்கல் சென்றிட்டது என்ன - மேருமலை சென்றாற் போல,—விண்ணிடந் தன்னில் நீங்கி - ஆகாய வழியிற் செல்வதைவிட்டு,—அலங்கல் அம் திண் தோள் வள்ளல் - மாலை யணிந்த அழகிய வலிய புயங்களையுடைய வீரவாகுதேவர்,—அவுணர் தம் இருக்கை ஆகும் இலங்கை அம் குவடு மூன்றில் - அசுரர்களுக்கிருப்பிடமாகிய இலங்கைமா நகரின் மூன்று சிகரங்களுக்குள்,—இடைப்படு சிகரம் பாய்ந்தான் - நடுவிலுள்ள சிகரத்திற் குதித்தார். எ — று.

இலங்கை அம் என்பதில் அம் அசை. தன் தம் சாரியை. தூங்குதல் - கிடத்தல் எனினும் இழுக்காது. மறிதல்-மடங்குதல்; அது அலையென்னுஞ்சொல்லையவாவிநின்றது.

இறுதியிலுள்ள அம் என்பது குவட்டுக்கு விசேஷண பதமாகக் கொண்டு அழகிய எனப்பொருள் கூறினும் பொருந்தும். ஈண்டு முக்குவடென்றது அந்நகரத்தின் பிரதானமான மூன்றுகோபுரங்களை அவைகளில் நடுவிலுள்ள கோபுரத்தின் மீது குதித்தார் என்பது கருத்து. சிகரம் ஆகுபெயர். (௧)

2. நெடுவரை தன்னைவேலானீறுசெய்திட்டவண்ணல்
விடவருதமியோன்றொல்லையிலங்கையின்மீதுபாய
வடலதிவீரனேனையவுணர்கள்கலங்கியேங்கி
யிடியுறுபுயங்கமென்னயாருமெய்பனித்துவீழ்ந்தார்.

இ — ள். நெடுவரை தன்னை வேலால் நீறு செய்திட்ட அண்ணல் விடவரு தமியோன் - நெடிய (கிரவுஞ்ச) மலையை வேற்படையினாற் றூளாக்கி யழித்த கந்தஸ்வாமியனுப்ப வருகின்ற வீரவாகுதேவர்,—தொல்லை இலங்கையின்மீது பாய - பழமையாகிய இலங்கைமா நகரின் மீது குதித்தலும்,—அடல் அதிவீரன் ஏனை அவுணர்கள் கலங்கி யேங்கி - (அதிலிருந்த) வலிமையையுடைய அதிவீரனும் மற்றைய வசுரருங் கலங்கி ஏக்கங் கொண்டு,—இடி உறு புயங்கம் என்ன - இடிவிழப்பெற்ற பாம்பைப் போல,—யாரும் மெய் பனித்து வீழ்ந்தார் - யாவருஞ் சரீரம் நடுங்கிக் (கடலிலே) யாழ்ந்தார்கள். எ — று

தன் சாரியை. உம்மை முற்று. எண்ணும்மை விகாரத்தாற் றொக்கன. (௨

வே று.

3. வைப்புறுமகேந்திரவடாதுபுலமாகி
யிப்புறமிருந்திடுமிலங்கைதனிலேந்தல்
குப்புறுதலுங்குலைகுலைந்தவுணரோடு
முப்புறுகடற்படிதல்கண்டுவகையுற்ருன்.

இ - ள். வைப்பு உறு மகேந்திரம் வடாது புலம் ஆகி - பெருமை பொருந்திய மகேந்திரபுரிக்கு வடக்கிலுள்ளதாய்,—இ புறம் இருந்திடும் இலங்கைதனில் - இப்பா லிருக்கின்ற இலங்கையின் மீது,—ஏந்தல் குப்புறுதலும் - வீரவாகு தேவர் குதிக்க,—குலைகுலைந்து அவுணரோடும் உப்பு உறு கடல் படிதல் கண்டு உவகை உற்ருன் - (அவ்விலங்கைமாநகரம்) நடுநடுங்கியசுரர்களுடன் உவர்க்கடலு ளழுந்துவதைப்பார்த்து மகிழ்ச்சிகொண்டார். எ — று.

தன் சாரியை. வைப்பு - விசாலம் எனினும் அமையும்; இனி சேமநிதியைப்போன்ற மகேந்திரமென்றலு மொன்று; வைப்பு - சேமநிதி; ஆகுபெயர். உறு உவமவுருபு.

4. தந்திமுகமாமதலைதன்னடிவணங்கா
தந்தரவிண்ணேர்கடலலைத்திடலுமன்னேன்
சிந்தைமுனிவெய்தவிடைசேர்த்தகயிருேடு
மந்தரநெடுங்கிரிமறிந்தபடிமானும்.

இ — ள். (இலங்கைமாநகரம் கடலுளழுந்துந் தன்மை யெப்படி யெனின்) அந்தரவிண்ணேர் - ஆகாயத்திலுள்ள தேவர்கள்,—தந்தி முகம் மா மதலை தன் அடி வணங்காது - யானை முகத்தையுடைய மூத்த பிள்ளையாரது திருவடிகளை வணங்காமல்,—கடல் அலைத்திடலும்-(திருப்பாற்) கடலைக் கடைதலும்,—அன்னேன் சிந்தை முனிவு எய்த - அவர் திருவுள்ளத்திற் கோபங் கொண்டமையால்,—இடைசேர்த்த கயிருேடும் - நடுவிற் சுற்றியிருந்த (பாம்பாகிய) கயிறுடன்,—நெடும் மந்தரகிரி மறிந்தபடி மானும்-(மத்தாகிய) நெடிய மந்தரமலை(கடலுள்ளே)யழுந்தியதன்மையை யொப்பாகும். எ—று தன் சாரியை.

5. ஆடல்கெழுமொய்ம்பினனடித்தலமதூன்ற
மூடுதிரைவேலையிடைமூழ்கியவிலங்கை
கூடுமகவண்ணல்குலிசந்தொடரநேமி
யூடுபுகலுற்றிடுமைநாகவரையொக்கும்.

இ — ள். ஆடல்கெழு மொய்ம்பினன் அடித்தலம் அது ஊன்ற-வெற்றிபொருந்திய புயங்களையுடைய வீரவாகுதேவர் காலூன்றுதலால்,—திரை மூடு வேலை இடை மூழ்கிய இலங்கை - திரைகளால் மூடப்பட்ட கடலில் அழுந்திய இலங்கைமா நகரம்,—கூடுமக அண்ணல் குலிசம் தொடர - போருக்குவந்த இந்திரனது வச்சிராயுதமானது (தனது இறகுகளை யறுத்தற்கு) வருதலும்,—நேமி ஊடுபுகல் உற்றிடு மைநாகவரை ஒக்கும் - (அதனைக்கண்டுபயந்து) கடலினிடத்தே புகுந்து ஒளித்த மைநாகமலையை யொப்பாகும். எ — று.

அது பகுதிப்பொருள் விகுதி. கூடுமகம்-மிக்கயாகமுமாம்;என்றது நூறுயாகத்தை.

6. மாமறைகடம்மைமுனம்வஞ்சனைபுரிந்தே
சோமுகன்மறைந்ததிரைதூங்குகடலூடே
யேமமுறுபேருருவெடுத்ததொருமாண்சேல்
போமதெனவாழ்ந்ததுபொலங்கெழுமிலங்கை.

இ — ள். மா மறைகள் தம்மை முனம் வஞ்சனை புரிந்தே - மகிமைபொருந்திய வேதங்களை முன்னம் திருடிக்கொண்டு,—சோமுகன் மறைந்த திரை தூங்குகடல் ஊடு- சோமுகாசுரன் ஒளித்திருந்த திரைபொருந்திய கடலுக்குள்,—ஏமம் உறு பேர் உரு எடுத்தது ஒரு மாண் சேல் - மகிழ்ச்சியைத் தருகின்ற பெரிய வடிவத்தை யெடுத்த ஒப்பற்ற (திருமாலாகிய) மாட்சிமை பொருந்திய சேல்மீன்,—போம் அது என - போனதைப்போல,—பொலம் கெழும் இலங்கை ஆழ்ந்தது - பொன்னொளிவிளங்குகின்ற இலங்கைமாநகரம் (கடலினுள்ளே) யாழ்ந்தது. எ — று.

தம் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. ஏகாரம் இரண்டும் அசை. (௬)

7. தொல்லைதனிலோர்விதிதுயின்றகடைநாளி
னெல்லையதிகந்துகடலேழுமெழவங்க
ணொல்லைபிலமுற்றபுவியுய்ப்பவொருகேழல்
செல்லுவதினாழ்ந்ததுதிரைக்கடலிலங்கை.

இ — ள் தொல்லைதனில் ஓர்விதி துயின்ற கடைநாளில் - முற்காலத்திலே யொரு பிரமதேவர் நித்திரை செய்த (இரவாகிய) பிரளயத்தில்,—எல்லை இகந்து கடல் ஏழும் எழ - கரைகளைக் கடந்து ஏழு கடல்களும் பெருக,—அம் கண் ஒல்லை பிலம் உற்ற புவி உய்ப்ப - (அதனால்) அவ்விடத்து விரைவாகப் பாதாளத்தை யடைந்த பூமியை(ப்பிரளய முடிவில்) மேலே கொண்டு வரும் பொருட்டு,—ஒருகேழல் செல்லுவதின் - (திருமாலாகிய) ஒப்பற்றபன்றி (கடலினுள்ளே) சென்றதைப் போல,—இலங்கை திரை கடல் ஆழ்ந்தது - இலங்கைமா நகரம் திரைபொருந்திய கடலுக்குள்ளே யமுந்தியது. எ — று.

தன் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. ஓர் என்பது அசை யெனினுமாம். உம்மை முற்று. (எ)

8. சிந்துவினகன்கரையொர்திண்கிரியழுந்த
வந்தமிலிலங்கையுமழுந்தியிடுதன்மை
முந்தொருமடக்கொடிவிருப்பின்முனிமூழ்க
விந்திரனுநேமியினிடைப்புகுதல்போலும்.

இ — ள். சிந்துவின் அகன்கரை ஓர் திண் கிரி அழுந்த - சமுத்திரத்தின் பெரிய கரையில் வலிய ஒருமலையாகிய கந்தமாதனம் (முன்னே) யழுந்த,—அந்தம் இல் இலங்கையும் அழுந்தியிடு தன்மை - அழிவில்லாத இலங்கையும் (அதன்பின்னே) யழுந்துந் தன்மை,—முந்து ஒரு மடம் கொடிவிருப்பில் முனி மூழ்க - முற்காலத்திலே யோரிளங் கொடி போன்றவளாகிய அகலிகை யிடத்துவைத்த விருப்பத்தால் கௌதம முனிவர் (கடனீருள்ளே) மூழ்க (அவரைப்போலவே),—இந்திரனும் நேமியின் இடைப் புகுதல் போலும் - இந்திரனும் கடலுக்குட் புகுந்து அமிழ்ந்தியதை யொப்பாகும். எ — று.

கொடி உவமவாகுபெயர். உம்மைகள் இறந்தது தழீஇய வெச்சம்.

பிரமன் அகலிகை என்பாளைப் பேரழகுடையளாகச் சிருட்டித்து, ஆயிரம் வருடங்கடலிலாழ்ந்து சுவாசம் அடக்கித் தவஞ்செய்வார்க் கிவளுரியள் என்றுகூற, இருடிகளனைவரும் அவளுடைய பேரழகைக் கண்டு ஆசையுற்றுப் பிரமன் கூறியபடி தவஞ்செய்தும் அது முடிவுபெறுமையி னொழிந்தனர். அதனையறிந்த கௌதமர் பிரமன் கூறிய படி கடலிலாழ்ந்து தவஞ் செய்யும்பொழுதில், இந்திரனும் அவளைப்பெறும்பொருட்டு, ஓரிருடி வடிவங்கொண்டு, தவஞ் செய்வானைப்போல நடித்துக் கடலிலாழ்ந்து பல முறை எழுந்தெழுந்து வஞ்சனைபுரிந்தான் எனவுணர்க. (அ)

9. உலங்கொள்புயவீரனடியூன்றுதலுமுன்னோர்
விலங்கல்பணிதன்னுலகமேவியதுகேளா
வலங்கல்பெறுவாகையவனாற்றலதுதாங்கி
யிலங்கையதுகாண்பலெனவேகியதுபோலும்.

இ — ள். உலம் கொள் புயம் வீரன் அடி ஊன்றுதலும் - திரண்ட கல்லைப்போன்ற புயங்களையுடைய வீரவாகுதேவர் காலினாலூன்றும் போது,—முன் ஓர் விலங்கல் பணி தன் உலகம் மேவியது கேளா - முன் ஒருமலை நாகலோகத்திற் சென்றதைக் கேள்வியுற்று,—அலங்கல் பெறு வாகை அவன் ஆற்றல் அதுதாங்கி - வெற்றிமாலையணிந்த அவ்வீரவாகு தேவரது சகாய வலிமையைக்கொண்டு,—இலங்கை - இலங்கைமாநகரம்,—அது காண்பல் என ஏகியது போலும் - அந்நாகலோகத்தைக் காண்பேனென்று சென்றதைப் போலும். எ — று. தன் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. (௯)

10. இலங்கையிதுபான்மையினிருங்கடலுண்மூழ்கக்
குலங்களொடுவைகியகொடுந்தகுவர்யாருங்
கலங்கினரழுங்கினர்கவன்றனர்துவன்றி
மலங்கினர்புலம்பினர்மருண்டனர்வெருண்டார்.

இ — ள். இலங்கை இதுபான்மையின் இரும் கடலுள் மூழ்க - இலங்கைமா நகரம் இத்தன்மையாகப் பெரிய கடலுள்ளே யழுந்தவும்,—குலங்களொடு வைகிய கொடும் தகுவர் யாரும்-சுற்றத்தாருடன் வாழ்ந்திருந்த கொடிய அசுரர்களெல்லோரும்,—கலங்கினர்-அழுதார்;—அழுங்கினர் - வருந்தினார்;—கவன்றனர் - கவலைகொண்டார்;—துவன்றி மலங்கினர் - நெருங்கி மனங்கலங்கினார்;—புலம்பினர் - சத்தமிட்டார்;—மருண்டனர் - மயக்கமடைந்தார்;—வெருண்டார்-திகைத்தார். எ—று.புலம்பு-அச்சமுமாம்.உம்மை முற்று.

11. அற்றமுறுதானவர்களாழவனையோரைச்
சுற்றியவளப்பிலசுறுவுழுவைமீனம்
பற்றியவளைந்தனபலப்பலதிரண்டே
செற்றியதிமிங்கிலதிமிங்கிலகிலங்கள்.

இ — ள். அற்றம் உறு தானவர்கள் ஆழ-சோர்வடைகின்ற அசுரர்கள் (அக்கடலுள்) அழுந்தவும்,—அனையோரை - அவர்களை,—அளப்பில சுறு உழுவை மீனம் சுற்றிய - அளவற்ற சுறுமீன்களும் உளுவை மீன்களுஞ் சுற்றிக்கொண்டன;—பலபல திமிங்கில திமிங்கிலகிலங்கள் திரண்டு செற்றிய - அனேகம் திமிங்கிலங்களும் திமிங்கிலகிலங்களும் திரளாய்வந்து நெருங்கி,—பற்றிய வளைந்தன - பிடிக்கும்பொருட்டு வளைந்தன. எ — று.

அற்றம் வருத்தமெனினும் பொருந்தும். எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன. ஏகாரம் அசை. (௧௧)

12. கையதனையீர்ப்பசிலகால்கள்சிலவீர்ப்ப
வெய்யதலையீர்ப்பசிலமிக்கவுயர்தோள்கண்
மொய்யுடையமார்பதனையீர்ப்பசிலமொய்த்தே
சையமுறழ்யாக்கையுளதானவரைமீனம்.

இ — ள். சையம் உறழ் யாக்கையுள தானவரை-மலைகளையொத்த சரீரங்களையுடைய அசுரர்களை,—மொய்த்து - மொய்த்துக்கொண்டு,—சில மீனம் கை அதனை ஈர்ப்ப - சில மீன்கள் கைகளைப் பிடித்திழுக்கின்றன,—சில (மீனம்) கால்கள் ஈர்ப்ப - சில மீன்கள்

கால்களைப் பிடித்திழுக்கின்றன,—சில (மீனம்) வெய்ய தலை ஈர்ப்ப - சில மீன்கள் கொடிய தலைகளையிழுக்கின்றன,—சில (மீனம்) மிக்க உயர் தோள்கள் மொய் உடைய மார்பு அதனை ஈர்ப்ப - சிலமீன்கள் மேலான உயர்ந்த புயங்களையும் வலிமையையுடைய மார்பையும் பிடித்திழுக்கின்றன. எ — று.

கை அதனை, மார்பு அதனை என்பனவற்றில் அது இரண்டும் பகுதிப்பொருள் விகுதி. அன் இரண்டுஞ் சாரியை. ஏகாரம் அசை. (கஉ)

13. அத்தனொடியாயைமனையன்பின்முதிர்சேயைக்
கொத்தினொடுகொண்டுசிலர்கூவியெழுகின்றா
ரெய்த்தனர்கள்செய்வதெனிரும்படையும்விட்டுத்
தத்தமுயிர்கொண்டுசிலர்தாமுமெழலுற்றார்.

இ — ள். அத்தனொடு யாயை - பிதாவையும் மாதாவையும்,—அன்பின் முதிர் மனையை சேயை - அன்பினால் மேம்பட்ட மனைவியையும் குழந்தையையும்,—கொத்தினொடு கொண்டு - கூட்டமாகக் கொண்டு,—சிலர் கூவி எழுகின்றார் - சில அசுரர்கள் கூவிக்கொண் டெழுகின்றார்கள்,—சிலர் எய்த்தனர்கள் செய்வது என் இரும்படையும் விட்டு தம் தம் உயிர்கொண்டு தாமும் எழலுற்றார் - சில அசுரர்கள் இளைத்தவர்களாகி என்ன செய்வ தென்று பெரிய ஆயுதங்களையுமிழந்து தங்கள் தங்கள் உயிரைமாத்திரங் கொண்டு எழுந்தார்கள். எ — று.

மனையை என்பதில் ஐயுருபு விரிக்கப்பட்டது. தாம் சாரியை. உம்மைகள் இழிவு சிறப்பு. இன் உருபு ஏதுப்பொருளில் வந்தது. எண்ணும்மை விகாரத்தாற் றொக்கன.

14. உற்றசிலதானவரையொய்யெனவளாவித்
திற்றிவிழைவானனிதிரண்டனர்களெல்லாம்
பற்றுழிதனித்தனிபறித்ததுபொருட்டாற்
பொற்றைபுரைமீன்கள்பெரும்போர்வினைபுரிந்த.

இ — ள். பொற்றை புரை மீன்கள் - மலையை யொத்த மீன்கள்,—திற்றி விழைவால் - தின்னப்படுவனவாகிய வுணவின்மேற்கொண்ட விருப்பத்தினால்,—உற்ற சில தானவரை - அங்குவந்துபொருந்திய சில அசுரரை,—ஒய் என அளாவி - விரைவில் அளாவி,—நனி திரண்டனர்கள் எல்லாம் பற்றுழி - மிகத்திரளா யகப்பட்ட அவ்வசுரரெல்லாரையும் பிடிக்கும் பொழுது,—தனி தனி பறித்து - ஒன்றையொன்று பிடுங்கி,- அது பொருட்டால் - அவ்வுணவின் விருப்பத்தால்,—பெரும் போர்வினை புரிந்த - பெரும் போர்த்தொழிலைச் செய்தன. எ — று. (கச)

15. தானவர்களோர்சிலவர்தம்முணல்குறித்தே
வானிமிருமோதையெனவந்துதமையெற்றப்
பூநுனையவாள்சுரிகைபோரயில்கள்கொண்டே
மீனமொடுவெஞ்சினம்விளைத்தமர்புரிந்தார்.

இ — ள். தானவர்கள் ஓர் சிலவர் - சில அசுரர்கள்,—தம் உணல் குறித்து - தங்களைத்தின்ன உத்தேசித்து,—வான் நிமிரும் ஓதையெனவந்து தமை எற்ற - மேகத்திற் றோன்றும் இடி முழக்கம்போலச் (சத்தித்துக்கொண்டு சிலமீன்கள்) வந்து தங்களை வாலினாலடிக்க,—பூநுனையவாள் சுரிகை போர் அயில்கள் கொண்டு - கூரிய நுதியினை யுடைய வாள்களினாலும் உடைவாள்களினாலும் போர் செய்தற்குரிய வேலாயுதங்களினாலும்,—மீனமொடு வெம் சினம் விளைத்து அமர் புரிந்தார் - (அம்) மீன்களுடன் கொடிய கோபங்கொண்டு போர் செய்தார்கள். எ — று. ஏகாரம் இரண்டும் அசை.

நிமிர்தல் - எழும்புதல். பூ - அழகு எனினுமாம். சாணை பிடித்துத் தைலமிட்டுப் பளபளப்பாக்கி யிருக்கும் வாளென்பார் "பூநுனையவாள்" என்றார். எண்ணும்மை விகாரத்தாற் றொக்கன. கொண்டு என்பதனைச் சுரிகைக்கும் வாளுக்குங் கூட்டுக. (கசு)

16. சீர்த்திகொளிலங்கைகடல்சென்றிடலுமங்க
ணார்த்திபெறுமங்கையர்களங்கையவைபற்றி
யீர்த்தபிறரில்லுறவிசைந்துகரம்பற்றுந்
தூர்த்தரைநிகர்த்தனசுறாமகரமீனம்.

இ—ள். சீர்த்திகொள் இலங்கை கடல் சென்றிடலும் - சிறப்புப் பொருந்திய இலங்கைமா நகரம் கடலிலே யாழுதலும்,—அம் கண் ஆர்த்திபெறு மங்கையர்கள் அம் கை அவைபற்றி ஈர்த்த சுறா மகரமீனம் - அக்கடலிலே வீழ்ந்து துன்பமடைகின்ற பெண்களது கைகளைப்பிடித்திழுத்த சுறாமீன்களும் மகரமீன்களும்,—பிறர் இல் உற இசைந்து கரம் பற்றும் தூர்த்தரை நிகர்த்தன - பிறருடைய மனைவியர்களைப் புணரவிரும்பி (அவர்களது) கைகளைப் பிடித்திழுக்கின்ற காமுகர்களை யொத்தன. எ—று.

எண்ணும்மை விகாரத்தாற் றொக்கன.

காமம் எல்லாரிடத்து மிருப்பினும் தூர்த்தர்கள் மனைவியரைப்போல ஒருங்கே மாதாவையும் மகளையும் சகோதரியையுங் கூட விரும்பத்தக்கவர்களென்பதுணர்த்துவார் அறிவற்ற மீன்களுக்குக் காமுகர்களை யுவமையாகக் கூறினர். (கசு)

17. மீனொருகைபற்றியிடவேறொருகரத்தைத்
தானவர்வலித்தொருதடக்கைகொடிசிப்ப
மானனையகண்ணியர்வருந்திடுதலோரைந்
தானபுலனீர்ப்பவுளழுங்குவதுபோலும்.

இ—ள். மீன் ஒரு கை பற்றியிட வேறு ஒரு கரத்தை தானவர் வலித்து ஒரு தடம் கை கொடு இசிப்ப மான் அனைய கண்ணியர் வருந்திடுதல் - மீன் ஒருகையைப்பிடித்துக் கொள்ள மற்றொருகையை அசுரர்கள் தமது பெரிய கைகளினாலே வலிந்துபிடித்திழுக்க மான் பார்வைபோலும் பார்வையையுடைய அசுரமாதர்கள்வருந்துந் தன்மை,—ஓர் ஐந்து ஆனபுலன் ஈர்ப்ப உள் அழுங்குவது போலும் - பஞ்சேந்திரியங்களினால் விஷயங்களிலிழுக்கப்பட்ட பொழுது மனமானது வருந்துதலை யொப்பாகும். எ—று.

அமைவு பெறாத மனம் பஞ்சேந்திரியவசப்பட்டு ஒருகணத்துள்ளே யெவ்வளவோ மாறுபாட்டையடைந்து கஷ்டப்படுவது வழக்கம் ஆதலின், அவைகளை யடக்காவழி வருந் துன்பம் இப்படிப்பட்டதென்பதை யுணர்த்துவார் பெண்களுக்கு மனசையும் மீன்களுக்கு இந்திரியங்களையும் உவமையாக்கிக் கூறினர். (கஎ)

18. திண்டிறல்வலம்படுதிருக்கைசுறமீன
மண்டியதிமிங்கிலம்வருந்தகுவர்சூழல்
கண்டுமிசையெற்றிடுதலுங்கடிதுவாளாற்
றுண்டமுறவேயவைதுணித்தெழுநர்சில்லோர்

இ—ள். திண் திறல் வலம் படு திருக்கை சுற மீனம் மண்டிய திமிங்கிலம் - மிக்க வலிமையும் வெற்றியும் பொருந்திய திருக்கைமீன்களும் சுறாமீன்களும் நெருங்கிய திமிங்கிலமீன்களும்,—வரும் தகுவர் சூழல் கண்டு - நேரேவருகின்ற அசுரர்கள் சுற்றிக்கொள்வதைப்பார்த்து.—மிசை எற்றிடுதலும் - (தங்கள்) மேல் (வால்முதலியவற்றால்) அடித்தலும்,—சில்லோர் - சில அசுரர்கள்,—கடிது - விரைவாக,—வாளால் அவை

துண்டம் உற துணித்து எழுநர் - வாளினால் அவைகளைத் துண்டாகும்படிவெட்டி யெழும்புகின்றார்கள். எ - று. எண்ணும்மை விகாரத்தாற்றொக்கன. ஏகாரம் அசை.

வலம் - கனமெனவும் பொருள்படும். தனக்குக் கீழ்ப்பட்ட எந்தமீன்களையும் வாலி னாலடித்துக்கொல்லுந்தன்மையுடைமையால் "வலம்படுதிருக்கை" என்றார். (௧௮)

19. கட்டல்விழிச்சுறவுகாரவுணர்தம்மை
யட்டுணல்குறித்துவரவன்னவர்கணீவித்
தொட்டனர்பிடித்தகடுதூரும்வகைபேழ்வா
யிட்டனர்மிசைந்தனரெழுந்தனர்கள்சில்லோர்.

இ — ள். கட்டு அழல் விழி சுறவு கார் அவுணர் தம்மை அட்டு உணல் குறித்து வர - மிகவுந் தீப்பொறிகளைக்கக்குகின்ற கண்களையுடைய சுறாமீன்கள் கருநிறம்பொருந் திய வடிவினையுடைய அசுரரைக்கொன்று தின்னும்படியுத்தேசித்து வருதலும்,—அன் னவர்கள் சில்லோர் நீவி தொட்டனர் பிடித்து - சில அசுரர்கள் தடவித்தொட்டெடு த்து,—அகடு தூரும் வகை - வயிறு நிரம்பும்படி,—பேழ்வாய் இட்டனர் - பெரியவாயி லிட்டு,—மிசைந்தனர் எழுந்தனர்கள் - உண்டுகொண்டு கரையேறினார்கள். எ - று.

தம் சாரியை. அசுரர்கள் வெகுபோசனமுள்ளவர்களும் அபக்குவமான மாமிசாதி களைப் புசிப்பவர்களுமாதலின் அகடுதூரும்வகை என்றார். (௧௯)

20. ஏற்றபுனலூடுதெரிவின்றியெமரென்றே
வேற்றொருமடந்தையர்வியன்கையதுபற்றிப்
போற்றியெழவங்கவர்புறத்தவர்களாக
மாற்றினரிசைந்துசிலர்வாழ்க்கைமனம்வைத்தார்.

இ — ள். சிலர் - சில அசுரர்கள்,—ஏற்ற புனலூடு தெரிவு இன்றி எமர் என்றே - மிகுந்த நீரினிடத்தில் தெரியாமையினால் எம்மனைவியரென்று,—வேற்று ஒரு மடந்தை யர் வியன் கையது பற்றி போற்றி எழ - வேறுபெண்களுடைய பெரிய கைகளைப் பிடி த்துப் பாதுகாத்துக்கொண்டு கரையேறுதலும்,—அவர் புறத்தவர்களாக - அவர்கள் பிறர்மனைவியர்களாக விருக்கக் (கண்டு),—மாற்றினர் - (தாங்கொண்டுவந்த பெண்களை அவர்களுக்குரிய நாயகர்கள் கையிற்) கொடுத்துத் (தம்மனைவியர்களை அவர்கள் கையினி ன்றும்) வாங்கிக்கொண்டு,—இசைந்து வாழ்க்கை மனம் வைத்தார் - ஒத்துவாழ்தற்கு மனமிசைந்தார்கள். எ—று. அங்கு அசை. அது பகுதிப்பொருள்விகுதி. ஏகாரம் பிரிநிலை.

மாற்றினரிசைந்து வாழ்க்கை மனம்வைத்தார் என்பதற்குப் (பிறர்மனைவியரெ ன்னும் எண்ணத்தை) நீக்கி (அவர்களுடன் கூடி) வாழுதற்கு மனம்வைத்தார்கள் எனப் பொருள்கூறுவாருமுளர். (௨0)

21. இல்லிவரெனப்பிறரையேந்தியெழவன்னோர்
புல்லுதனியன்பர்புடைபோகவொருசில்லோ
ரல்லலுறுவார்தமையடைந்ததொருகன்னி
மெல்லவயல்போந்துழிமெலிந்துழலுவார்போல்.

இ — ள். தமை அடைந்தது ஒரு கன்னி - (தானாகவே) தம்மைவந்து சேர்ந்த ஒரு பெண்ணானவள்,—மெல்ல அயல் போந்துழி - மெதுவாகத் (தம்மைவிட்டுப்) பிறரைச் சேர்ந்தபொழுது,—மெலிந்து உழலுவார் போல் - (அதன்பொருட்டு) மெலிந்து வருந் துகின்றவரைப்போல,—ஒரு சில்லோர் - சில அசுரர்கள்,—இவர் இல் என பிறரை

ஏந்தி எழ - இவர் (தமது) மனைவியர்களென்று பிறர்மனைவியரைத் (தோளிற்) சுமந்து கரையேறுதலும்,—அன்னோர் புல்லு தனி அன்பர் புடைபோக - அவர்கள் (தாங்) தழுவுகின்ற ஒப்பற்ற நாயகரிடத்திலே போகக் (கண்டு),—அல்லலுறுவார் - துன்பமடைகின்றார்கள். எ — று.

கன்னி என்பது இங்கே பருவங்குறியாது பெண்ணென்னும் பொருளாய்நின்றது. விவாகமுடியாத வொருபெண் முதலில் எவனைச்சேருவாளோ அவள் அவனுக்கே உரியவளாக, மங்கலியதாரணத்துக்குமுன் அவள் வேறொருவனை விரும்பி அவனிடஞ்செல்லின் அவனுக்கு அதிக துக்கம் உண்டாவதுபோல,நீரிலுள்ளே தாழ்ந்தபெண்களைத் தம் மனைவியரென்றே நினைத்துத் தோளிற் சுமந்துகொண்டு கரையில் வந்தவுடன் அவர்கள் இவர்களை விட்டுத் தம்நாயகரிடஞ்சென்றது அவர்களுக்குப் பெருந்துக்கத்தையுண்டாக்கினமையால் "அடைந்ததொருகன்னி மெல்லவயல்போந்துழி மெலிந்துழலுவார்போல் அல்லலுறுவார்" என்றார். (உக)

22. தீமைபுரிமால்களிறுதிண்புரவியாவு
மேமருசுறுத்தொகுதியீர்த்துவிரைந்தேகித்
தோமறுபிணுமகரந்துய்ப்பவுதவுற்ற
காமர்கெழுபெண்மயல்கடக்கவெளிதன்றே.

இ - ள். தீமை புரி மால் களிறு திண் புரவி யாவும் - துன்பத்தைச்செய்கின்ற மயக்கம்பொருந்திய யானைகளும் வலிய குதிரைகளும் (ஆகிய) எல்லாவற்றையும்,—ஏமரு சுறு தொகுதி ஈர்த்து விரைந்து ஏகி - மகிழ்ச்சியையுடைய ஆண்மகரமீன் கூட்டங்கள் இழுத்து விரைந்து சென்று,—தோம் அறு பிணுமகரம் துய்ப்ப உதவுற்ற - குற்றமற்ற பெண் மகரமீன்கள் உண்ணும்படி கொடுத்தன (ஆதலால்),—காமர் கெழு பெண் மயல் கடக்க எளிதன்று - அழகு பொருந்திய பெண்ணாசையை (எத்துணைப் பெரியாருங்) கடத்தல் எளிதன்று. எ — று. உம்மை முற்று. ஏகாரம் தேற்றம்.

மதமேலீட்டால் நன்மையுந் தீமையும் யானைகளுணரா என்பார் மால்களிறு என்றார். முனிவர் முதலிய மகான்களாலுங் கடக்கக் கூடாத காமத்தை மீன்கள் கடக்கத்தக்கவைகளோ வென்பார் "கடக்கவெளிதன்று" என விசேடித்தார். மயல் - ஆசை. (உஉ)

23. மாற்றறுசுறுச்சிலமடப்பிடிகைபற்றி
யேற்றபெண்வழிச்செலவெதிர்ந்ததனைநோக்கி
வேற்றோர்பெடையாயதெனவேர்வுறுகைகையர்க்
காற்றுமுபகாரவியல்பாகியதையன்றே.

இ — ள். மாற்று அறு சில சுறு மடப்பிடி கை பற்றி ஏற்ற பெண்வழி செல - ஒப்பற்ற சில மகரமீன்கள் பெண்யானையின் கையைப்பிடித்துக்கொண்டு தகுதியாகிய பெண் மகரமீன்கள் இருக்குமிடத்திற்குச் செல்லுதலும்,—எதிர்ந்து அதனை நோக்கி - (அவை) எதிரேவந்து அதனைப்பார்த்து,—வேறு ஓர் பெடை ஆயது என வேர்வுறுகை - வேறொருபெண் சுறு வந்ததென்று கருதிக் கோபங் கொள்ளுதல்,—கையர்க்கு ஆற்றும் உபகார இயல்பாகியது-கீழ்மக்களுக்குச் செய்யும் உபகாரங்களைப்போலப் பயனற்றதாயது. எ-று.

அன்று, ஐ அசை. ஐகாரம் சாரியை.

தீயகுண முள்ளவர்களுக்குச் செய்யும் உபகாரம் அபகாரமாகவே முடியு மென்பார் கையர்க்காற்று முபகார வியல்பாகியது என்றார். மடப்பிடி - பிடிபோலு நடையையுடைய பெண்க ளெனினுமாம். பிடி உவமவாகு பெயர். (உந)

24. சிந்துவதன்மீதிலெழுசில்லவுணராயோர்
கந்தன்முருகேசன்விடுகாளைசெயல்காணு
நந்தமையுநின்றிடினலிந்திடுவன்யாங்க
ளுய்ந்திடுதுமென்றுகடிதோடியயல்போனார்.

இ — ள். சிந்து அதன் மீதில் எழு சில் அவுணர் ஆயோர் - கடலின் மீது எழுந்த சில அசுரர்கள்,—கந்தன் முருகேசன் விடு காளை செயல் காணு - கந்தஸ்வாமி யனுப்பிய வீரவாகுதேவருடைய செய்கையைப் பார்த்து,—நின்றிடின் நம் தமையும் நலிந்திடுவன் - நின்றால் (இவன்) நம்மையுங் கொல்லுவான்,—யாங்கள் உய்ந்திடுதும் என்று கடிது ஓடி அயல்போனார் - (ஆகையால்) நாங்கள் பிழைத்துக் கொள்வே மென்று (அவ்விடத்தினின்றும்) விரைந்தோடி வேறிடங்களிற் சென்றார்கள். எ — று.

தம் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். ()

25. பீடுசெறிதங்கணவரைப்பிரிகலாமே
கூடும்வழியாழ்ந்தசிலகோற்றொடிமின்னார்க
ளாடைபுனலூடுபுகவல்குறமகையான்
மூடியெழுவார்முலைமுகத்தின்முகம்வைத்தே.

இ — ள். பீடு செறி தம் கணவரை பிரிகலாமே கூடும்வழி - பெருமை பொருந்திய தமது நாயகரை விடாமற் கூடுகின்ற சமயத்தில்,—ஆழ்ந்த சில கோல் தொடி மின்னார்கள் - (கடலுள்ளே) ஆழ்ந்த அழகியவளையலையணிந்த கைகளையுடைய சிலபெண்கள்,—ஆடை புனலூடு புக - (தாம் உடுத்திருந்த) சேலைகள் நீரிலே போக (அதனாலே),—முலைமுகத்தில் முகம் வைத்து அல்குல் தம கையால் மூடி எழுவார் - முலைமுகத்தில் முகத்தை வைத்துக்கொண்டு வெளிப்பட்ட நிதம்பத்தைத் தமது கையினால் மறைத்து எழும்புவார்கள். எ — று. ஏகாரம் தேற்றம்.

நாணமுடையோர் அபிநயத்தில் தலையைத் தனமேற் சாய்த்து நிற்றலுமொன் றாதலால் பெண்டன்மை யுணர்த்துவார் "முலை முகத்தின் முகம்வைத்து" என்றார். (உடு)

26. சேண்டொடரிலங்கைகடல்சென்றுழியதன்பா
லாண்டசிலமாதர்களரத்தவுடைகொண்டார்
மீண்டெழலுநீர்படவெளிப்படுவதல்குல்
காண்டகையசெம்மதிகளங்கமடைந்தென்ன.

இ — ள். சேண் தொடர் இலங்கை கடல் சென்றுழி - தேவர்கள் தொடர்ந்து வருதற்குக் (காரணமாகிய சிறப்பினையுடைய) ஆகாயத்தை யளாவிய இலங்கைமாநகரங் கடலுள்ளே தாழ்ந்த பொழுது,—அரத்த உடை கொண்டார் - சிவப்புச்சேலையையுடுத்தவர்களாய்,—அதன்பால் ஆழ்ந்த சில மாதர் - அக்கடலினுள்ளே அமுழ்ந்திய சிலபெண்கள்,—மீண்டு எழலும் - திரும்ப எழுதலும்,—நீர்பட - (அவர்கள்சேலைகளில்) நீர்படுதலினாலே,—காண் தகைய செம்மதி களங்கம் அடைந்த என்ன - காணப்படும் அழகையுடைய செந்நிறம் பொருந்திய சந்திரன் களங்க மடைந்தாற் போல,—அல்குல் வெளிப்படுவது - (அவர்களுடைய) கடிப்பிரதேசம் வெளிப்படுகின்றது. எ—று.

சேண்-ஆகுபெயர். அல்குல் களங்கத்துக்கும் வஸ்திரம் சந்திரனுக்கும் ஒப்பாதலால் செம்மதி களங்கமடைந்தென்ன அல்குல் வெளிப்படுவது என்றார். அடைந்தது என்பதில் துவ்வீறுகுறைந்தது. (உசு)

27. காரவுணர்மாதர்சிலர்காமர்கடல்வீழ்வார்
நீரமெழவேயுடைநெகிழ்ந்தொருவியேக
மூரன்முகமல்லுருவுமுற்றுறமறைத்தே
தேரையெனவொண்புனல்செறிந்துதிரிவுற்றார்.

இ — ள். காமர் கடல் வீழ்வார் - அழகிய கடலிலே வீழ்ந்தவர்களாகிய,—கார் அவுணர் மாதர் சிலர் - கரிய நிறம்பொருந்திய சில அசுரப்பெண்கள்,—நீரம் எழவே - வெள்ளத்தின்மே லெழுந்த பொழுது,—உடைநெகிழ்ந்து ஒருவி ஏக - (உடுத்த) ஆடை கழன்று அகன்றமையால் (கரையில் ஏறுவதற்கு வெட்கங் கொண்டு),—மூரல் முகம் அல் உருவு முற்றுற மறைத்து - பல்வரிசைகளை யுடைய (வாயோடுகூடிய) முகந்தவிர மற்றைய அவயவங்க ளெல்லா வற்றையும் மறைத்துக் கொண்டு,—தேரை என ஒண்புனல் செறிந்து திரிவு உற்றார் - தேரையைப்போல மிகுந்த வெள்ளத்திலே நெருங்கி யுலாவினார்கள். எ — று.

ஏகாரம் இரண்டும் அசை. (உஎ)

28. ஆசுறுமரைத்துகிலகன்றிடவெழுந்தே
தேசுறுமடந்தையரிலோர்சிலவர்சேண்போய்
மாசுறுபுயற்குழுவைவல்லைகரம்பற்றித்
தூசினியல்பானடுவுசுற்றியுலவுற்றார்.

இ — ள். தேசு உறு மடந்தையரில் ஓர் சிலவர் - அழகு பொருந்திய பெண்களிற் சிலர்,—ஆசு உறும் அரை துகில் அகன்றிட எழுந்து - சிறுமையாகிய இடையிலுள்ள ஆடை நீருள்ளே விலகிப்போக எழும்பி,—சேண் போய் மாசு உறு புயல் குழுவை வல்லை கரம்பற்றி - ஆகாயத்திலேபோய்க் கருநிறம்பொருந்திய மேகக்கூட்டங்களை விரைவாகக் கையினாற் பிடித்து,—தூசினியல்பால் நடுவு சுற்றி உலவுற்றார் - வஸ்திரத்தைப் போல் இடையிற் சுற்றிக்கொண்டு சஞ்சரித்தார்கள். எ — று. ஏகாரம் அசை. (உஅ)

இலங்கைவீழ்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கக௭.

---

# அதிவீரன்வதைப்படலம்.

1. அன்னதொர்பான்மைகளாகவிலங்கை
முன்னுறுவார்கடலாழ்ந்ததுமூழ்க
வின்னகர்போற்றியிருந்திடுகின்ற
மின்னுனைவேலதிவீரனுணர்ந்தான்.

இ — ள். அன்னது ஓர் பான்மைகள் ஆக - (மேற்சொல்லப்பட்ட) அத்தன்மைகளாக,—இலங்கை முன் உறு வார் கடல் ஆழ்ந்தது மூழ்க-இலங்கைமாநகரம் எதிரிலுள்ள நெடிய கடலிலே ஆழ்ந்து முழுகுதலும்,—இ நகர் போற்றி இருந்திடுகின்ற - இந்த நகரத்தை (அப்பொழுது) காத்துக்கொண்டிருந்த,—மின் நுனை வேல் அதிவீரன் உணர்ந்தான் - விளங்குகின்ற நுதிபொருந்தியவேற்படையையுடைய (யாளிமுகனதுமகனாகிய) அதிவீரன் அறிந்தான். எ — று. ஓர் அசை. (க)

2. தனதுபுரங்கடல்சாருதல்காணு
நனிதுயரெய்தினனாணுமடைந்தான்
சினவியுயிர்த்தழல்சிந்தநகைத்தா
னனையவனின்னதகத்திடைகொண்டான்.

இ - ள். அனையவன் - அவ்வதிவீரனானவன்,—தனது புரம் கடல் சாருதல் காணு - தனது நகரமாகிய இலங்கையானது கடலிலமுழ்ந்துதலைக்கண்டு,—நனிதுயர் எய்தினன் - மிகத்துன்பங்கொண்டு,—நாணும் அடைந்தான் - நாணமு மடைந்தவனாகி,—சினவி உயிர்த்து அழல் சிந்த நகைத்தான் - கோபித்துப் பெருமூச்செறிந்து தீப்பொறிகள் சிதறும்படி சிரித்து,—இன்னது அகத்து இடை கொண்டான் - இவ்வெண்ணத்தைத் (தன்) மனசில் நினைத்தான். எ — று. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௨)

3. சுந்தரமேவருசூரபன்மாவோ
வந்தமிறம்பியரோவனையார்தம்
மைந்தர்களோமதியேனவரல்லா
லிந்தவியற்கையையார்புரிகிற்பார்.

இ — ள். சுந்தரம் மேவரு சூரபன்மாவோ - அழகு பொருந்திய சூரபன்மாவாகிய (எங்கள் இராஜனோ,—அந்தம் இல் தம்பியரோ-அழிவற்ற (அவனது) தம்பிமார்களோ,—அனையார்தம் மைந்தர்களோ - அவர்களுடைய பிள்ளைகளோ,—மதியேன் - தீர்மானமாக அறிகின்றேனில்லை,—அவர் அல்லால் இந்த இயற்கையை யார் புரிகிற்பார் - அவர்களல்லாமல் இப்படிப்பட்ட காரியத்தை யார் (துணிந்து) செய்யவல்லவர். எ — று.

தம் சாரியை. ஓகாரம் மூன்றும் ஐயம். (௩)

4. ஆயவரென்னினுமாங்கதுசெய்தற்
கேயதொரேதுவுமின்றுதம்மூர்க்குத்
தீயதுசெய்கலர்சிந்தையதன்றான்
மாயையுமீதுமதிக்கிலள்போலும்.

இ — ள். ஆயவர் என்னினும் - (மேற்சொல்லப்பட்ட) அவர்களென்றாலும்,—அது செய்தற்கு - இத்துர்ச்செயலைச் செய்தற்கு,—ஏயது ஓர் ஏதுவும் இன்று - பொருந்திய ஒருகாரணமுமில்லை (அதுவன்றியும்),—தம் ஊர்க்கு தீயது செய்கலர் - தங்களூருக்குத் (தாங்களே) தீமைசெய்யார்கள் (ஆதலால்),—அது சிந்தையது அன்று - அதுகருத்தன்று,—மாயையும் ஈது மதிக்கிலள் - (இவர்தாயாகிய) மாயவளும் இப்படிச்செய்ய நினையாள். எ — று.

ஆங்கு, ஆல், போலும் அசை. அது பகுதிப்பொருள் விகுதி. உம்மை முன்னையது உயர்வு சிறப்பு. பின்னையவை இறந்ததுதழீஇயவெச்சம். (௪)

5. மூவருமிச்செயன்முன்னலர்பின்னர்த்
தேவர்கள்யாரிதுசெய்திடவல்லா
ரேவருநஞ்சிறையெய்தினர்வேள்விக்
காவலனாருயிர்காத்துமறைந்தான்.

இ — ள். மூவரும் இ செயல் முன்னலர் - (அயன் அரி அரன் என்னும்) மூவர்களும் இக்காரியத்தைச் செய்தற்கு நினையார்கள்,—பின்னர் தேவர்கள் யார் இதுசெய்திட வல்லார் - பின்பு தேவர்களுக்குள் யார் இந்தச்செயலைச்செய்தற்குவல்லவர்கள்,—எவரும்

நம் சிறை எய்தினர் - (தேவர்கள்) அனைவரும் நமது சிறைச்சாலையி லிருக்கின்றனர்,—வேள்வி காவலன் ஆர் உயிர் காத்து மறைந்தான் - யாகபதியாகிய இந்திரன் (தனது) அரிய உயிரைக்காத்து ஒளித்திருந்தான். எ – று. உம்மைகள் முற்று. (ரு)

6. மாதிரமேலவர்வானிடைவைப்பின்
மேதகும்விண்ணவர்விஞ்சையர்சித்த
ராதியர்நம்மிறையாணையினீங்கா
ரீதுபுரிந்திடவெண்ணுவர்கொல்லோ.

இ – ள். மாதிரம் மேலவர் வான் இடை வைப்பின் மேதகும் விண்ணவர் விஞ்சையர் சித்தர் ஆதியர் - திக்குப்பாலகர்கள் ஆகாயத்திலுள்ள (பதவிகளாகிய) இடங்களிலிருக்கின்ற மேன்மைபொருந்திய தேவர்கள் வித்தியாதரர்கள் சித்தர்கள் முதலானவர்கள்,—நம் இறை ஆணையின் நீங்கார் - எங்கள் இராஜனாகிய சூரபன்மனது ஆணையைக் கடவார்கள்,—ஈது புரிந்திட எண்ணுவர் கொல்லோ - இத்தீயசெய்கையைச் செய்ய நினைப்பார்களா (நினைக்கமாட்டார்கள்.) எ – று.

கொல் ஐயம். ஓகாரம் எதிர்மறை. (சு)

7. தவ்வறவீண்டமர்தானவராற்ற
மெய்வலிமாயைகண்மேவினரேனுந்
தெவ்வடுசூர்முதறிண்படையஞ்சி
யிவ்வியறன்னையிழைக்கலர்போலும்.

இ – ள். தவ்வற ஈண்டு அமர்தானவர் - குறைவில்லாமல் இவ்விடத்தி லிருக்கின்ற அசுரர்கள்,—ஆற்ற மெய்வலி மாயைகள் மேவினரேனும்-மிகவும் சரீரவலிமையும் மாயா வல்லபமும் அடைந்துள்ளவர்களாயினும்,—தெவ் அடுசூர்முதல் திண்படை அஞ்சி-பகைவர்களை வெல்லும் (மேன்மைபடைத்த) சூரபன்மனது வலிய ஆஞ்ஞா சக்கரத்துக்குப் பயந்து,—இ இயல்தன்னை இழைக்கலர் - இப்படிப்பட்ட காரியத்தைச் செய்ய மாட்டார்கள். எ – று.

போலும் அசை. தன் சாரியை. அடுதல் - அழித்தல் எனினுமாம். (எ)

8. ஆதலினன்னவராற்றலரென்னி
லீதொருசெய்கையிழைத்தவர்யாரோ
தாதையகன்றுழிதானவரோடுங்
காதலனிந்நகர்காத்ததுநன்றால்.

இ – ள். ஆதலின் அன்னவர் ஆற்றலர் என்னில் - ஆகையால் அவர்கள் இவ்வாறு செய்ய மாட்டார்களென்றால்,—ஈது ஒரு செய்கை இழைத்தவர்யாரோ - இப்படிப்பட்ட ஒருகாரியத்தைச் செய்தவர்கள் யாரோ,—தாதை அகன்றுழி தானவரோடும் காதலன் இ நகர் காத்தது நன்று - (எனது) பிதா (மகேந்திரபுரிக்குச்) சென்றபொழுது அசுரசேனைகளோடும் மகனாகிய நான் இந்நகரத்தைக்காத்தது நன்றாகவிருந்தது. எ – று.

ஆல் அசை. ஓகாரம் ஐயம். (அ)

9. காயமொடுங்குகனற்சிரமூடு
போயதுவல்லைபுறஞ்செலநோற்று
மாயைபெரும்படைவன்மைகள்வேத
னீயமுன்வாங்கியவென்செயனன்றால்.

இ — ள். காயம் ஒடுங்கு கனல் சிரம் ஊடுபோயது வல்லை புறம் செல நோற்று - சரீரத்தில் ஒடுங்கியிருந்த அக்கினியானது கபாலத்தினூடுபோய் விரைந்து வெளியே செல்லும்படி தவஞ்செய்து,—மாயை பெரும்படைவன்மைகள் - மாயவித்தைகளையும் உயர்ந்த பிரமாஸ்திரத்தையும் சரீர வலிமையையும்,—முன் வேதன் ஈய வாங்கிய என்செயல் நன்று - முன்னே பிரமதேவர்தரப் பெற்றுக்கொண்ட எனது செய்கை நன்றாக விருந்தது. எ — று. ஆல் அசை. (௯)

10. தந்தையுறாதுதணந்துழியாங்கோர்
மைந்தனிருந்துதன்மாநகரோடு
மந்திலகன்கடலாழ்ந்தனனென்றா
னந்தமரென்னைநகைப்பர்களன்றே.

இ — ள். தந்தை உறாது தணந்துழி - பிதாவாகிய யாளி முகன் (இங்கே) யில்லாமற் பிரிந்தபொழுது,—ஆங்கு ஓர்மைந்தன் இருந்து - அந்நகரத்தில் ஒருமகன் இருந்து,—தன்மாநகரோடும் - தனது பெரிய நகரத்துடனே,—அகன் கடல் ஆழ்ந்தனன் என்றால் - அகன்ற கடலில் மூழ்கினான் என்றால்,—நம் தமர் என்னை நகைப்பர்கள் - நமது சுற்றத்தவர்கள் (இவன் அசுரகுலத்திற் பிறந்தும் தவம் வலிமைமுதலியவற்றையடைந்தும் இவ்வாறானானென்று) என்னைப் (பரிகாசஞ்செய்து) சிரிப்பார்கள். எ — று.

அந்தில், அன்று, ஏ அசை. (௧0)

11. மன்னவனீதுமதித்திடின்மற்றென்
றன்னையடும்பெறுதாதையுமற்றே
பின்னுளரெள்ளுவர்பெற்றியிதாமே
லென்னியனன்றெனவெண்ணியினைந்தான்.

இ — ள். மன்னவன் ஈது மதித்திடின் - அரசனாகிய சூரபன்மன் இக்காரியத்தையறிந்தால்,—என் தன்னை அடும் - என்னைக்கொன்று விடுவான்,—பெறு தாதையும் அற்றே - என்னைப்பெற்ற பிதாவும் அங்ஙனமே செய்வார்,—பின் உளர் எள்ளுவர் - மற்றுள்ளவர்கள் இகழ்ச்சிபண்ணுவார்கள்,—இது பெற்றி ஆம் எல் - இவ்விதமாயின்,—என் இயல் நன்று என எண்ணி இனைந்தான் - எனது தன்மை நன்றாயிருந்தது என்று நினைத்து வருத்தமுற்றான். எ - று.

மற்று அசை. தன் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம்

12. இனைந்ததிவீரனெனுந்திறன்மைந்தன்
கனைந்திடுகின்றகடற்கிடையாழ்வோ
னனந்தரமூழ்வினையாற்றலினன்னான்
மனந்தனிலீதொருதன்மைமதித்தான்.

இ — ள். கனைந்திடுகின்ற கடற்கு இடை ஆழ்வோன் - ஒலிக்கின்ற கடல்வெள்ளத்திலேயாழுகின்றவனாகிய,—அதி வீரன் எனும் திறல் மைந்தன் - அதிவீரனென்னும் வலியபுதல்வன்,—இனைந்து - வருத்தமுற்று,—அனந்தரம் ஊழ்வினை ஆற்றலின் - பின்பு ஊழ்வினைவலியால்,—அன்னான் மனந்தனில் ஈது ஒருதன்மை மதித்தான் - அவன் தன் மனசில் இத்தன்மையாகிய வொருகாரியத்தை நினைந்தான். எ — று. தன் சாரியை.(௧௨)

13. ஒல்லொலிசேருவரிக்கடன்மீதாய்ச்
செல்லுவன்யாரிதுசெய்தனரொன்றே
வல்லையிலோர்குவன்மற்றவர்தம்மைக்
கொல்லுவன்மெய்ப்படுசோரிகுடிப்பன்

இ — ள். ஓல் ஒலிசேர் உவரி கடல் மீதாய் செல்லுவன் - ஓல்லென்னும் ஒலிபொருந்திய உப்புக்கடலுக்கு மேலாகச் சென்று,—யார் இது செய்தனர் என்று வல்லையில் ஓர்குவன் - யார் இக்காரியத்தைச் செய்தார்களென்று விரைவாக அறிந்து,—அவர் தம்மை கொல்லுவன் - அவர்களைக்கொன்று,—மெய் படு சோரி குடிப்பன் - (அவர்கள்) சரீரத்திலுள்ள இரத்தத்தைக்குடிப்பேன். எ — று.

முற்றுக்கள் எச்சப்பொருளன. மற்று, ஏ அசை. தம் சாரியை. (கங)

14. என்றதிவீரனிரும்படையாவு
மொன்றறவாரியுருத்தனிகத்து
ணின்றுளர்தங்களைநேடுபுகொண்டே
வன்றிரைவேலையின்மீமிசைவந்தான்.

இ — ள். என்று அதிவீரன் இரும் படையாவும் ஒன்று அற வாரி - என்று சொல்லியதிவீரன் (தனது) பெரிய ஆயுதங்களெல்லாவற்றையும் ஒன்றுமில்லாமல் வாரியெடுத்துக்கொண்டு,—உருத்து அனிகத்துள் நின்றுளர் தங்களை நேடுபு கொண்டு - கோபித்து சேனைகளுள் (இறந்தவர்கள்போக எஞ்சி) நின்றவர்களைத் தேடியழைத்துக்கொண்டு,—வன் திரை வேலையின் மீமிசை வந்தான் - வலிய அலைகளையுடைய கடற்கரையின் மேல் வந்தான். எ — று.

தம் சாரியை. உம்மை முற்று. ஏகாரம் அசை. (கச)

வே று.

15. விடலைதிருமுன்னமதிவீரனனிகங்கள்
புடையில்வரநீரின்மிசைபொள்ளெனவெழுந்தா
னடுதொழிலியற்றியிடுமாதிதனையெய்தக்
கொடியவிடம்வார்கடல்குலாய்நிமிர்வதேபோல்.

இ — ள். அடு தொழில் இயற்றியிடும் ஆதிதனை எய்த கொடிய விடம் வார்கடல் குலாய் நிமிர்வதேபோல் - சங்காரத்தொழிலைச்செய்கின்ற கருத்தாவாகிய சிவபெருமானையடைதற்குக் கொடிய ஆலகாலவிஷம் நெடிய கடலினின்றுந் தோன்றிவருவது போல,—விடலை திருமுன்னம் - வீரவாகுதேவருக்கு முன்னாக,—அதிவீரன் - அதிவீரனென்பவன்,—அனிகங்கள் புடையில் வர நீரில் மிசை பொள்ளென எழுந்தான் - சேனைகள்பக்கத்திலே சூழ்ந்துவரக் கடன்மீது விரைவாக எழுந்தான். எ — று.

தன் சாரியை. ஏகாரம் அசை. (கரு)

16. விழுந்திடுமிலங்கைதனின்மேவுமதிவீர
னெழுந்துதனதானையொடிருங்கடலுளங்கிக்
கொழுந்துமிசைசென்றனையகோலமொடுநின்ற
செழுந்திறல்கொண்மொய்ம்புடையசெம்மனிலைகண்டான்.

இ - ள். விழுந்திடும் இலங்கை தனில் மேவும் அதிவீரன் - கடல்வெள்ளத்திலழுந்திய இலங்கைமாநகரத்திலிருந்த அதிவீரன்,—தன தானையொடு எழுந்து - தனது சேனைகளுடனே (அக்கடலினின்றும்) எழுந்து,—இரும் கடலுள் அங்கி கொழுந்து மிசை சென்ற அனைய கோலம் ஒடு நின்ற - பெரியகடல்நடுவிலுள்ள வடவாமுகாக்கினியின்கொழுந்து மேலேசென்றாற்போன்ற வடிவத்தோடும் நின்ற,—செழும் திறல்கொள் மொய்ம்பு உடைய செம்மல் நிலை கண்டான் - மிக்க வலிமைபொருந்திய புயங்களையுடைய வீரவாகுதேவரது நிலைமையைக்கண்டான். எ - று. தன் சாரியை. (கசு)

17. கண்டனன்வெகுண்டிதழ்கறித்துநகைசெய்யா
வண்டர்குழுவானிவனொராண்டகைநம்மூதூர்
தெண்டிரையிலாழும்வகைசெய்துமிவணின்று
னெண்டிசைதொழுந்தகுவராணையினிதென்றான்.

இ — ள். கண்டனன் வெகுண்டு இதழ் கறித்து நகை செய்யா - (அங்ஙனங்) கண்டவனாகிய அதிவீரன் கோபங்கொண்டு (பற்களால்) அதரத்தைக்கடித்துச்சிரித்து,— அண்டர் குழுவான் இவன் ஒரு ஆண்டகை - தேவர்கூட்டத்தானாகிய இவன் ஒரு ஆண்மகன்,—நம்மூதூர் தெண்திரையில் ஆழும்வகை செய்தும் இவண் நின்றான் - நமது இலங்காநகரம் தெளிந்த அலைகளையுடைய சமுத்திரத்தில் தாழும்படி செய்தும் இவ்விடத்தினின்றான்,—எண் திசை தொழும் தகுவர் ஆணை இனிது என்றான் - எட்டுத் திக்குகளிலுமுள்ளவர்கள் வணங்குகின்ற அசுரர்களுடைய அதிகாரம் நன்றாக விருந்தது என்று கூறினான். எ — று. உம்மை உயர்வு சிறப்பு. (கஎ)

18. என்றுமொழியாவிரைவில்யாளிமுகன்மைந்தன்
கொன்றிவனதாருயிர்குடிப்பனெனவுன்னிச்
சென்றிடலுமாழ்ந்தவர்செயற்கையதுகாண்பா
னின்றதொருபேரறிஞனீர்மையதுகண்டான்.

இ — ள். என்று மொழியா - என்று கூறி,—விரைவில் யாளி முகன் மைந்தன் - விரைவாக யாளிமுகனது புத்திரனாகிய அதிவீரன்,—கொன்று இவனது ஆர் உயிர் குடிப்பன் என உன்னி சென்றிடலும் - கொன்று இவனது அரிய உயிரை வாங்குவேனென்று நினைத்து வருதலும்,—ஆழ்ந்தவர் செயற்கையது காண்பான் நின்றது ஒருபேர் அறிஞன் அது நீர்மை கண்டான் - கடலினுள்ளே ஆழ்ந்தவர்களது செயல்களைப் பார்க்கும் பொருட்டு நின்ற பேரறிவுடையராகிய வீரவாகுதேவர் அவ்வதிவீரன்வருந் தன்மையைக் கண்டார். எ — று.

ஒரு அசை. செயற்கையது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (கஅ)

19. ஆனபொழுதத்தினிலவன்புடையில்வந்த
தானவர்கள் சூழ்ந்தனர்சமர்த்தொழிலியற்ற
மானவிறலோன்றனதுவாளுறைகழித்தே
யூனொடுயிர்சிந்தியிடவொல்லையடல்செய்தான்.

இ — ள். ஆனபொழுதத்தினில் அவன்புடையில்வந்த தானவர்கள் சூழ்ந்தனர் சமர்த்தொழில் இயற்ற - அவ்வாறானசமயத்தில் அவன்பக்கத்தில் (சேனைகளாக) வந்த அசுரர்கள் சூழ்ந்து போர்த்தொழிலைச்செய்ய,—மானவிறலோன் தனதுவாள் உறைகழித்து-பெருமைபொருந்திய வீரவாகுதேவர் தமதுவாளை உறையினின்றும் வெளியில் எடுத்து,—ஊனொடு உயிர் சிந்தியிட ஒல்லை அடல் செய்தான் - (அவர்களது) உடலும் உயிரும் சிதறும்படி விரைந்து கொல்வாராயினர். எ — று.

அத்து, இன் சாரியை. ஏகாரம் அசை. (கசு)

20. அற்றனசிரத்தொகுதியற்றனகரங்க
ளற்றனபுயத்தொகுதியற்றன்பதங்க
ளற்றனபெரும்புறமுமற்றவுடன்முற்று
மற்றனர்கள்யாருமுயிரற்றதவர்பூசல்.

இ — ள். சிரம்தொகுதி அற்றன - (வீரவாகுதேவர் வெட்டியவுடனே) அனே கந்தலைக ளறுபட்டன,—கரங்கள் அற்றன - (அனேகங்) கைக ளறுபட்டன,—புயம் தொகுதி அற்றன - அனேகம் புயங்க ளறுபட்டன,—பதங்கள் அற்றன (அனேகங்) கால்களறுபட்டன,—பெரும்புறமும் அற்றன - பெரியமுதுகுகளும் அறுபட்டன,—உடல் முற்றும் அற்ற - சரீரங்கள் முழுவதும் அறுபட்டன,—யாரும் உயிர் அற்றனர்கள்-எல் லாரும் உயிரிழந்தார்கள்,—அவர்பூசல் அற்றது-அவர்களுடையபோரும் ஒழிந்தது. எ-று.

உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையவை முற்று. (உ0)

21. பங்கிசெறிசெந்தலைகள்பாய்குருதிநீர்மே
லெங்கணுமிதப்பனவிருங்கடலினூடே
செங்கொடிபடர்ந்திடுசெழும்பவளவைப்பி
லங்கமலமானவையலர்ந்திடுதல்போலும்.

இ — ள். பாய் குருதி நீர்மேல் எங்கணும் மிதப்பன செம் பங்கி செறி தலைகள் - ஓடுகின்ற இரத்தவெள்ளத்தின்மேல் எவ்விடத்தும் மிதப்பனவாகிய சிவந்த மயிர்நிறைந்த தலைகள்,—இரும் கடலின் ஊடே செம் கொடி படர்ந்திடு செழும் பவளவைப்பில் - பெரிய கடலிடத்தில் சிவந்த கொடியாகப் படர்ந்த செழுமையாகிய பவள மிருக்கின்ற விடத்தில்,—அம் கமலம் ஆனவை அலர்ந்திடுதல் போலும் - அழகிய (செந்) தாமரை மலர்கள் விரிந்திருப்பதை யொப்பாகும். எ — று. ஏகாரம் அசை. உம்மை முற்று. (உக)

22. அற்றமகல்வீரனவுணப்படைதுணிப்பச்
செற்றியபிணத்தொகைதிரைப்புணரிதூர்த்து
மற்றுமிசைபோந்துமணியாலுமொரிலங்கைப்
பொற்றையதியற்றியதுபோன்றுளதுமாதோ.

இ — ள். அற்றம் அகல்வீரன் அவுணர் படை துணிப்ப - சோர்வில்லாத வீரவாகு தேவர் அசுரசேனைகளைக்கொல்லுதலும்,—செற்றிய பிணம் தொகை - நெருங்கிய பிண க்கூட்டங்கள்,—திரை புணரி தூர்த்து - அலைகளையுடைய சமுத்திரத்தை நிரப்பி,—மற் றும் மிசை போந்து - பின்னும் மேலாகப் போய்,—மணியாலும் ஒரு இலங்கை பொற் றையது இயற்றியது போன்றுளது - இரத்தினங்களாலும் ஒரு இலங்கைமலையைச் செய்ததுபோன்றிருந்தது. எ — று.

மாது, ஓ அசை. அது பகுதிப்பொருள் விகுதி. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம் முன்னுள்ள இலங்கைபொன்மயமானதால், பின் பிணமலையா லுண்டாகிய மேடு மணி களாற் செய்த இலங்கையைப்போல என்றார். பிணம் இரத்தந்தோய்ந்து செந்நிறமுறு தலால் மணி என்றது மாணிக்கத்தையென்க; நீலமணியெனினுமிழுக்காது. (உஉ)

23. தன்படைவிளிந்துசலதிக்கடலுள்வீழ
முன்பனதிவீரன்முனியாவதனைநோக்கி
யென்புடையினோரையெறிந்தாய்கடிதினின்னைத்
தின்பனதுகாண்டியெனவேசெருமுயன்றான்.

இ — ள். தன் படை விளிந்து கடல் சலதியுள் வீழ - தன் சேனைகளெல்லாம் இற ந்து கடல்வெள்ளத்தில் விழ,—முன்பன் அதிவீரன் அதனை நோக்கி முனியா - வலியோ னாகிய அதிவீரன் அதனைப் பார்த்துக் கோபங் கொண்டு,—என்புடையினோரை எறிந் தாய் - (நீ) என்பக்கத்தில் வந்தவர்களைக்கொன்றாய்,—கடிதின் நின்னை தின்பன்-விரை வாக உன்னை உண்பேன்,—அது காண்டி என - அதனைப்பாரென்று கூறி,—செரு முய ன்றான் - போர் செய்யத் தொடங்கினான். எ — று. ஏகாரம் அசை. (உ௩)

24. சொல்லுமதிவீரன்வருதோற்றமதுகாணு
வல்லைவருகென்றுதிறல்வள்ளலுமழைப்ப
வெல்லையதனிற்செருவினேற்றிவனையின்னே
கொல்லுகெனவங்கணொருகுந்தமதெறிந்தான்.

இ — ள். சொல்லும் அதிவீரன் வரு தோற்றம் அது காணு - (இவ்வாறு) சொல்லும் அதிவீரன் வருகின்ற இறுமாப்பைப்பார்த்து,—வல்லைவருக என்று திறல் வள்ளலும் அழைப்ப - சீக்கிரம் வருக வென்று வீரவாகுதேவரும் அழைக்க,—எல்லை அதனில் செருவில் ஏற்று - அப்பொழுது போரில் எதிர்த்து,—இவனை இன்னே கொல்லுக என - இவனை யிப்பொழுதே கொல்லுக வென்று,—அங்கண் ஒரு குந்தம் அது எறிந்தான் - அவ்விடத்து ஒரு வேலாயுதத்தை யெறிந்தான். எ — று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். அது மூன்றும் பகுதிப்பொருள்விகுதி. எல்லை அதனில் என்பதில் அன் சாரியை. ஏகாரம் தேற்றம். (உ௪)

25. உய்த்ததொருகூரயிலுரத்தினுறுமுன்னர்
மத்தகயநேர்விடலைமற்றதுதெரிந்தே
கைத்தலமிருந்திடுகனற்புரையும்வாளா
லத்துணையிரண்டுதுணியாய்விழவெறிந்தான்.

இ — ள். உய்த்தது ஒரு கூர் அயில் உரத்தின் உறும் முன்னர் - (அதிவீரன்)விட்ட கூரிய வேலாயுதம் மார்பில் வந்து படுதற்கு முன்னமே,—மத்த கயம் நேர் விடலை அது தெரிந்து - மதயானையையொத்த வீரவாகுதேவர் அதனைப்பார்த்து,—கை தலம் இருந்திடும் கனல்புரையும் வாளால்-கையிலிருக்கின்ற அக்கினியையொத்த வாளினால்,—அதுணை இரண்டுதுணி ஆய் விழ எறிந்தான் - அப்பொழுது(அது)இரண்டு துண்டாக விழும்படி வெட்டினர். எ — று. மற்று, ஒரு, ஏ அசை. (உ௫)

26. கண்டமுறஞாங்கரதுகண்டுதிறன்மைந்தன்
றண்டம்விரைந்தொன்றொருதடக்கைகொடெடுத்தே
மண்டமர்செயுன்னுயிரைவாங்குமிஃதென்னு
வண்டர்புகழ்காளைதனதாகமுறவிட்டான்.

இ — ள். ஞாங்கர் கண்டம் உற திறல் மைந்தன் அதுகண்டு -(தான்விடுத்த) வேலாயுதம் இரண்டு துண்டாக வெட்டுப்பட அதிவீரன் அதனைப்பார்த்து,—ஒரு தடம் கைகொடு தண்டம் ஒன்று விரைந்து எடுத்து - (தனது) பெரிய கையொன்றினால் ஒருதண்டத்தை விரைவாக எடுத்து,—மண்டு அமர் செய் உன் உயிரை இஃது வாங்கும் என்னு- பெரும் போர்செய்கின்ற உன் உயிரை இத்தண்டம் வாங்கிவிடுமென்று,—அண்டர் புகழ் காளை தனது ஆகம் உற விட்டான் - தேவர்கள்புகழுகின்ற வீரவாகுதேவரது மார்பிற்படும்படி எறிந்தான். எ — று. தன் சாரியை. ஏகாரம் அசை. (உ௬)

வே று.

27. விட்டகாலையத்தண்டினைவெலற்கருந்திறலோ
னட்டிடான்றனிவாளினாலேற்றனனகலம்
பட்டமற்றதுநுண்டுகளாகவப்பதகன்
மட்டிலாதவோர்விம்மிதமெய்தினன்மறுகி.

இ — ள். அ தண்டினை விட்டகாலை-(அதிவீரன்) அத்தண்டை யெறிந்தபொழுது,—வெலற்கு அரும் திறலோன் - (எவர்களாலும்) வெல்லுதற்கரிய வலியை யுடையவராகிய வீரவாகுதேவர்,—தனி வாளினால் அட்டிடான் - (தமது)ஒப்பற்றவாளினாலேவெட்டாத

வராகி,—அகலம் ஏற்றனன் - மார்பில் ஏற்றூர்,—அது பட்டு நுண் துகள் ஆக-(உடனே) அத்தண்டம் (மார்பிற்) பட்டு நுண்ணியதுகளாய்ப் போக,—அ பதகன் மறுகி மட்டு இலாதது ஓர் விம்மிதம் எய்தினன் - (அதுகண்ட) அக்கீழ்மகன் ஆகிய அதிவீரன் (மனஞ்) சுழன்று அளவில்லாத ஆச்சரியமடைந்தான். எ — று.

மற்று, ஓர் அசை. (உஎ)

28. வேறோர்முத்தலைப்படையதுகொண்டதிவீரன்
மாறிலாவிறன்மொய்ம்பினன்றன்மணிமார்பி
னூறுசெய்திறமோச்சலுங்கண்டுநம்முரவோன்
சீறியாங்கதுபற்றினன்செங்கையாலிறுத்தான்.

இ — ள். அதிவீரன் வேறு ஓர் முத்தலை படை அதுகொண்டு - அதிவீரன்(பின்பு) வேறொரு சூலத்தை யெடுத்து,—மாறு இலா விறல் மொய்ம்பினன் தன் மணிமார்பில் ஊறுசெய்திறம் ஓச்சலும் - ஒப்பில்லாத வீரவாகுதேவரது அழகியமார்பை யூறுபடுத்தும் படி யெறிதலும்,—நம் உரவோன் கண்டு - நமது வீரவாகுதேவர் பார்த்து,—சீறி அது செம் கையால் பற்றினன் இறுத்தான் - கோபித்து அச்சூலத்தைத் (தமது) சிவந்தகையி ஞற் பிடித்து முறித்தார். எ — று.

ஆங்கு அசை. தன் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. (உஅ)

29. இறுத்தகாலையிலிலங்கையில்யாளிமாமுகன்சேய்
செறுத்துமற்றிவன்றனையடலரிதெனச்சிந்தை
குறித்துமற்றொருநாந்தகமேந்தினன்குறுகி
வெறித்தகொண்டலுட்கொட்புறுமின்னெனவிதிர்த்தான்.

இ — ள். இறுத்த காலையில் - (வீரவாகுதேவர் சூலத்தை) முறித்தவுடன்,—இலங்கையில் யாளி மாமுகன் சேய் செறுத்து - இலங்கையிலுள்ள யாளிமுகனது மகனாகிய அதிவீரன் கோபித்து,—இவன் தனை அடல் அரிதென சிந்தை குறித்து - இவனைக் கொல்லுதலரிதென்று மனசில் நினைத்து,—ஒரு நாந்தகம் ஏந்தினன் குறுகி - ஒருவாட்படையை யேந்திக் கொண்டு (எதிரில்) வந்து,—வெறித்த கொண்டலுள் கொட்புறு மின் என விதிர்த்தான் - அச்சத்தை விளைவிக்கின்ற மேகத்தினுள்ளே சுழலுகின்ற மின்னலைப்போலச் சுழற்றினன். எ — று.

மற்று இரண்டும் அசை. தன் சாரியை. (உகூ)

30. கறங்கினிற்பெருவட்டணைபுரிந்துதன்கரமே
னிறங்கொள்வாளினையிடம்வலந்திரித்தனனெறியே
பிறங்குமார்கலித்தெண்டிரையலைதரப்பெரிது
மறங்கொணாந்தகமீனுகண்டலமரும்வகைபோல்.

இ — ள். கறங்கினில் பெரு வட்டணை புரிந்து - (அதிவீரன்) காற்றாடியைப்போல இடம் வலமாக மிகச்சுற்றி,—பிறங்கும் ஆர்கலி தெண் திரை அலைதர - விளங்குகின்ற கடலிலுள்ள தெளிவாகிய அலைகள் அலையும்படி,—பெரிது மறம் கொள் நாந்தகமீன் உகண்டு அலமரும் வகைபோல் - மிக வலிமைபொருந்திய வாளைமீன் பாய்ந்து சுழலுந் தன்மையைப்போல,—தன் கரமேல் நிறம் கொள் வாளினை நெறியே இடம் வலம் திரித்தனன் - தனது கையிலுள்ள ஒளிபொருந்திய வாளை முறையே இடமாகவும் வலமாகவுஞ் சுழற்றினன். எ — று.

ஏகாரம் அசை. உம்மை உயர்வு சிறப்பு. (ஙo)

31. ஏதியிங்கிதுநான்முகன்றந்துளதெவர்க்கும்
பேதகஞ்செயலரியதாலன்னதுபிடித்தேன்
சாதிதிண்ணநீவருகெனுமிகைமொழிசாற்றிக்
கோதில்வீரன்முன்னணுகலுமனையவன்கூறும்.

இ — ள். இது ஏதி நான்முகன் தந்துளது - இந்தவாள் பிரமதேவரால் (எனக்குத்) தரப்பட்டது,—எவர்க்கும் பேதகம் செயல் அரியது - (இதனை) எவர்களுக்கும்பேதித்தல் முடியாது,—அன்னது பிடித்தேன் - அப்படிப்பட்டவாளை (நான் கையிற்)பிடித்திருக்கின்றேன்,—நீ சாதி திண்ணம்-(ஆதலால்) நீ சாவாய் (இது) நிச்சயம்,—வருக எனு மிகை மொழி சாற்றி - (எனக்கு நேரே) வருவாயாக வென்று தருக்குவசனங்களைக் கூறிக் கொண்டு,—கோது இல் வீரன் முன் அணுகலும் - குற்றமில்லாத வீரவாகுதேவருக்கு முன்னே வருதலும்,—அனையவன் கூறும் - அவர் சொல்லுகின்றார். எ — று.

இங்கு, ஆல் அசை. உம்மை முற்று. (௩௧)

32. நன்றுநன்றுநின்னாற்றலுமாண்மையுநம்மை
வென்றியேயெனின்யாவருமேலுனைவியப்பார்
நின்றுநீசிலமொழிவதென்கடிதுநேருதியால்
வென்றிவீரருந்தமைப்புகழ்கிற்பரோவென்றான்.

இ — ள். நின் ஆற்றலும் ஆண்மையும் நன்று நன்று - உன்வலிமையும் ஆண்மையும் நல்லது நல்லது,—நம்மை வென்றியே எனில் யாவரும் மேல் உனை வியப்பார் - நீ நம்மை வெல்லுவாயாகில் பின்பு உன்னை எல்லாரும் புகழ்வார்கள்,—நின்று நீ சிலமொழிவது என் - நீ (தூரத்தில்) நின்று சில தருக்குவசனங்களைப்பேசுவதென்னை,—கடிது நேருதி - விரைந்து (வந்து) எதிர்ப்பாயாக,—வென்றி வீரரும் தமை புகழ்கிற்பரோ என்றான் - வெற்றிபொருந்திய வீரர்களும் தம்மைப் புகழ்வார்களோ (புகழமாட்டார்கள்) என்று (வீரவாகுதேவர்) சொன்னார். எ — று.

ஆல், ஏ அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை யாவரும் என்பதில் முற்றும் வீரரும் என்பதில் உயர்வுசிறப்பும் ஏனையவற்றில் எண்ணுமாம். (௩௨)

33. என்னவொன்னலன்கிடைத்தனன்வீரனுமெதிர்ந்தா
னன்னபான்மையர்வாளமராடினரகல்வான்
மின்னுமாமுகிற்றோன்றியேயெதிரெதிர்விரிந்து
பின்னருள்புகுந்துடனுடன்செறிந்தபெற்றிமைபோல்.

இ — ள். என்ன ஒன்னலன் கிடைத்தனன் - என்றிப்படி (வீரவாகுதேவர்) சொல்லுதலும் அதிவீரன்நெருங்கிவந்தான்,—வீரனும் எதிர்ந்தான் - வீரவாகுதேவரும் எதிர்த்தார்,—அகல் வான் மாமுகில் மின்னு தோன்றியே எதிர் எதிர் விரிந்து - அகன்ற ஆகாயத்திலேயுள்ள பெரிய மேகங்களில் மின்னலானது தோன்றி நேர் நேராக மின்னி,—பின்னர் உள்புகுந்து உடன் உடன் செறிந்த பெற்றிமை போல் - பின்பு அவற்றுள் மறைந்து உடனுடனே யொடுங்குந் தன்மையைப்போல,—அன்ன பான்மையர் வாள் அமர் ஆடினர் - அங்ஙனங்கூறியெதிர்த்த வவ்விருவர்களும் வாட்போர்செய்தார்கள்.

மின்னு என்பதில் உகரம் சாரியை. ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇய வெச்சம். (௩௩)

34. சென்னிநாடுவர்களத்தினைநாடுவர்செவிதாள்
கன்னநாடுவர்புயங்களைநாடுவர்கரங்க
ளுன்னிநாடுவருரத்தினைநாடுவருகளப்
பொன்னின்வார்கழனாடுவர்வாளமர்புரிவார்.

இ — ள். வாள் அமர் புரிவார் - வாட்போர்செய்கின்ற அவ்விருவர்களும்,—சென்னிநாடுவர் - (ஒருவருக்கொருவர்) தலையைநாடுவார்கள்,—களத்தினை நாடுவர் - கழுத்தையும் நாடுவார்கள்,—செவி தாள் கன்னம் நாடுவர் - காதுகளையுங் கால்களையும் கன்னத்தையும் நாடுவார்கள்,—புயங்களை நாடுவர் - புயங்களையும் நாடுவார்கள்,—கரங்கள் உன்னிநாடுவர் - கைகளையுங்குறித்துநாடுவார்கள்,—உரத்தினை நாடுவர் - மார்பையும் நாடுவார்கள்,—பொன்னின் வார் உகளம் கழல் நாடுவர் - பொன்னாற்செய்த நெடிய இரண்டு வீரக்கழல்களையும் நாடுவார்கள். எ — று.

எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன. நாடுதல் - இலக்குப்பார்த்தல். (ருச)

35. இணங்குநீரவரிருவருமினையனவுறுப்பி
லணங்குசெய்திடுமரபினாலாயிடையுய்ப்பார்
நுணங்குவிஞ்சையின்வன்மையானொய்தின்மாற்றிடுவார்
மணங்கொள்செந்நிறவாள்கொடேவட்டணைவருவார்.

இ — ள். இணங்கு நீரவர் இருவரும் இனையன உறுப்பில் அணங்கு செய்திடு மரபினால் ஆயிடை உய்ப்பார் - ஒத்ததன்மையையுடையாராகிய இருவீரரும் மேற்சொல்லப்பட்ட உறுப்புகளிலே வருத்தஞ்செய்யும் முறையாக அவ்வவ்வுறுப்புகளில் வீசுவார்கள்,—நுணங்கு விஞ்சையின் வன்மையால் நொய்தில் மாற்றிடுவார் - நுட்பமாகிய வித்தையின் வலிமையால் விரைவாகவிலக்குவார்கள்,—மணம் கொள் செந்நிற வாள் கொடு வட்டணை வருவார் - புலவுநாறுகின்ற செந்நிறம்பொருந்திய வாள்களைக் கையிற்பிடித்தபடியே வட்டமாகச்சுழன்று வருவார்கள். எ — று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. இணங்குநீரவரிருவரும் என்பதற்கு எதிர்த்தநீர்மையையுடைய இருவரும் என்றலுமொன்று. (ருரு)

36. போதமின்னதிலெம்பிரான்றூதுவன்பொருவா
னேதிகொண்டுளான்றன்னையான்வலிந்திடலியல்போ
வாதலாலிவன்படைமுறைவெல்வதேயறனென்
றோதிசேருளங்கொண்டனனிடைதெரிந்துற்றான்.

இ — ள். போதம் இன்னதில் - இவ்வாறு யுத்தஞ்செய்கின்ற சமயத்தில்,—எம்பிரான் தூதுவன் - வீரவாகுதேவர்,—பொருவான் ஏதி கொண்டுளான் தன்னை - போர்செய்தற்கு வாளைக்கையிலேந்திய இவனை,—யான் வலிந்திடல் இயல்போ-நான் (வாட்போர் முறைதவறி) வலாற்காரமாகக் கொல்லுதல் முறைமையோ (முறைமையன்று),—ஆதலால் இவன் படை முறை வெல்வதே அறன் என்று - ஆகையினால் இவனது படைமுறையாக வெல்லுவதே தருமம் என்று,—ஓதி சேர் உளம் கொண்டனன் இடை தெரிந்து உற்றான் - ஞானம்பொருந்திய மனசிற் சிந்தித்துச் சமயம்பார்த்து நின்றார்.

தன் சாரியை. ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் பிரிநிலை. (ருசு)

37. இடைபுகுந்ததிவீரனதடிகளோரிரண்டு
முடியுமாகமுந்தோள்களுமாங்கொருமுறையே
சுடர்பிறங்கியவாளினாலண்டகைதுணித்துக்
கடிதுவீட்டினனடுவன்வந்தவனுயிர்கவர்ந்தான்.

இ - ள். இடைபுகுந்து - சமயம்பார்த்துச்சென்று,—அதிவீரனது அடிகள் ஓர் இரண்டும் முடியும் ஆகமும் தோள்களும் ஒருமுறையே - அதிவீரனது இரண்டுகால்க ளையும் தலையையும் மார்பையும் தோள்களையும் ஒரேதரத்தில்,—சுடர் பிறங்கிய வாளி னால் ஆண்டகை துணித்து - ஒளிவிளங்குகின்ற வாளினாலே வீரவாகுதேவர் வெட்டி,— கடிது வீட்டினன் - விரைந்து கொன்றார்,—நடுவன் வந்து அவன் உயிர் கவர்ந்தான் - (உடனே) யமன் வந்து அவனது உயிரைக்கவர்ந்தனன். எ - று.

ஓர், ஆங்கு அசை. ஏகாரம் தேற்றம். உம்மைகள் எண். (௬௭)

அதிவீரன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௫௪..

---

# மகேந்திரஞ்செல்படலம்.

1. வீரவாகுநின்றவ்வதிவீரனைவீட்டித்
தாரைவாளுறைசெலுத்தியேவெஞ்சமர்தணித்து
நேரில்வீரமாமகேந்திரம்போவதுநினைந்தே
யேருலாவருமிலங்கையினெல்லைநீத்தெழுந்தான்.

இ - ள். வீரவாகு நின்று அ அதிவீரனை வீட்டி - வீரவாகுதேவர் (அவ்விடத்து) நின்று அந்த அதிவீரனைக்கொன்று,—தாரை வாள் உறை செலுத்தி - (பின்பு) கூர்மை பொருந்தியவாளை உறையிற் புகுத்தி,—வெம் சமர் தணித்து - கொடியபோர்செய்வதை விட்டு,—நேர் இல் மா வீரமகேந்திரம் போவது நினைந்து - ஒப்பில்லாத வீரமகேந்திரத் திற்குப்போகும்படி நினைத்து,—ஏர் உலா வரும் இலங்கையின் எல்லை நீத்து எழுந்தான்- அழகுபரந்த இலங்காபுரியின் எல்லையைக்கடந்து (மேலாக) எழுந்தார். எ - று.

ஏகாரம் இரண்டும் அசை. (௧)

2. எழுந்துவான்வழிச்சேறலுமார்கலியிடையே
விழுந்துகீழுறுமிலங்கைமீண்டெழுந்ததுவிரைவிற்
கழிந்ததொல்பரநீங்கியகாலையிற்கடலூ
டழுந்துகின்றபொற்றோணிமீச்சென்றிடுமதுபோல்.

இ - ள். எழுந்து வான் வழி சேறலும் - (அங்ஙனம்வீரவாகுதேவர்) எழுந்து ஆகா யமார்க்கமாகச் செல்லுதலும்,—கழிந்த தொல் பரம் நீங்கிய காலையில் - மிகுந்த பெரிய பாரம்நீங்கிய பொழுது,—கடல் ஊடு அழுந்துகின்ற பொன் தோணி மீ சென்றிடும் அதுபோல் - கடலிலே அழுந்துகின்ற அழகிய தோணி மேலாகவெழும்புகின்ற தன்மையைப்போல,—ஆர்கலி இடையே விழுந்து கீழ் உறும் இலங்கை விரைவில் மீண்டு எழுந்தது - கடலில் விழுந்து கீழாக அழுந்துகின்ற இலங்கையானது விரை விலே மேலாகவந்து நின்றது. எ - று.

ஏகாரம் அசை. (௨)

3. வார்த்தயங்கியகழலவன்வான்வழிக்கொளலு
மீர்த்ததெண்கடனீத்தமேலெழதருமிலங்கை
சேர்த்தநான்முகனுறங்குழிச்சிந்துவூடழுந்திப்
பேர்த்துஞாலம்விட்டெழுதருமேருவிற்பிறழும்.

இ - ள். வார் தயங்கிய கழலவன் வான் வழி கொளலும் - வாரோடுவிளங்குகின்ற வீரக்கழலைத்தரித்த வீரவாகுதேவர் ஆகாயமார்க்கமாகச் செல்லுதலும்,—ஈர்த்த தெண் கடல் நீத்தம் மேல் எழு தரும் இலங்கை - குளிர்ச்சிபொருந்திய தெளிவாகிய கடல்வெள்ளத்தின்மேலெழுந்து நின்ற இலங்கைமாநகரம்,—சீர்த்த நான்முகன் உறங்குழி - சிறப்புப்பொருந்திய பிரமதேவர் நித்திரைசெய்கின்ற பிரளயகாலத்திலே,—சிந்து ஊடு அழுந்தி - கடலினுள்ளேயழுந்தி,—பேர்த்து ஞாலம் விட்டு எழுதரு மேருவில் பிறழும் - மறுபடியும் (அந்) நிலத்தைவிட்டு எழும்புகின்ற மேருமலையைப்போல விளங்கும்.

4. எள்ளுநீரரைப்பற்பகலாற்றலினிலங்கை
கொள்ளைவெம்பவமாசிருளடைந்ததுகுறைதீர்
வள்ளறாள்படநீத்ததுபவந்துகண்மாற்றத்
தெள்ளுநீர்க்கடல்படிந்தெழுந்தாலெனத்திகழும்.

இ - ள். எள்ளும் நீரரை பல் பகல் ஆற்றலின் - இகழ்ச்சிபண்ணுதற்குரிய துர்க்குணங்களையுடைய அசுரர்களை அனேககாலமாகச் சுமந்துநிற்றலால்,—இலங்கை வெம்பவம் கொள்ளை மாசு இருள் அடைந்தது - இலங்கையானது கொடிய பாவத்திரளாகிய கரிய விருளையடைந்தது,—குறை தீர் வள்ளல் தாள்பட பவம் நீத்தது - குற்றமில்லாத வீரவாகுதேவரது பாதங்கள் (தன்மீது) பட்டமையால் (அப்) பாவத்தினின்று நீங்கினது,—துகள் மாற்ற - (ஆதலால் எஞ்சிநின்ற) அழுக்கையும் நீக்கவேண்டுமென்று (நினைத்து),—தெள்ளு நீர் கடல் படிந்து எழுந்தால் என திகழும் - தெளிந்த கடல்வெள்ளத்திலே மூழ்கி யெழுந்தாற்போல விளங்காநிற்கும். எ - று. (௪)

5. கந்தரந்தவழ்தெண்புனற்கருங்கடனடுவட்
சுந்தரஞ்செறிபொன்சுடரிலங்கைதோன்றியது
முந்துகாலையிலெம்பிரானருள்வழிமுராரி
யுந்திநின்றெழுபிரமன்மூதண்டமொத்துளதால்.

இ - ள். கந்தரம் தவழ் தெண்புனல் கரும் கடல் நடுவண் - மேகங்கள் (நீருண்ணும் பொருட்டுச்)செல்லுகின்ற தெளிந்த நீரினையுடைய கரிய கடல்மத்தியில்,—சுந்தரம் செறி பொன் சுடர் இலங்கை தோன்றியது - அழகுபொருந்திய பொன்னொளிவீசுகின்ற இலங்கைமாநகரந்தோன்றியதன்மை,—முந்து காலையில் எம்பிரான் அருள்வழி - முற்காலத்தில் எமது சிவபெருமானுடைய திருவருளினால்,—முராரி உந்தி நின்று எழு பிரமன் மூது அண்டம் ஒத்துளது - திருமாலினது உந்திக்கமலத்தினின்றுந் தோன்றிய பிரமதேவர் (படைத்த) பெரிய அண்டத்தையொத்தது. எ - று. ஆல் அசை.

முன்னொருகற்பத்தில் உலகமெல்லாமழிந்து நீர்மயமானது. அப்போது சிவபெருமான் திருமாலைப்புணர்ந்தனர். அவரது புணர்ச்சியால் திருமாலின் உந்திக்கமலத்தின் வழியாய்ப் பிரமன் தோன்றினன். அவன் நீரின்மேல் அண்டவடிவான பூமியைப்படைத்தான். அவ்வண்டம் நீர்நடுவில் பொன்வண்ணமாகக் காணப்பட்டதென்று இலிங்கபுராணங் கூறும். (௫)

6. இன்னதாகியவிலங்கைமாபுரத்தைநீத்தெழுந்து
பின்னுமாயிரம்யோசனைவானிடைப்பெயர்ந்து
பொன்னுலாவுறுவாகையம்புயத்தவன்புலவோ
ரொன்னலானுறைமகேந்திரவரைப்பின்முன்னுற்றான்.

இ - ள். பொன் உலாவுறு வாகை அம் புயத்தவன் - இலட்சுமிவிலாசம்பொருந்திய வீரவாகுதேவர்,—இன்னது ஆகிய இலங்கை மா புரத்தை நீத்து எழுந்து - இப்படிப்

பட்ட சிறப்பினையுடைய இலங்கைமாநகரத்தைவிட்டெழுந்து,—பின்னும் ஆயிரம் யோசனை வான் இடை பெயர்ந்து - மேலும் ஆயிரம்யோசனைதூரம் ஆகாயத்திற் சென்று,—புலவோர் ஒன்னலான் உறை மகேந்திர வரைப்பின் முன் உற்றான் - தேவர்களுக்குப் பகைவனாகிய சூரபன்மனிருக்கின்ற மகேந்திரபுரத்துக்கு முன்னாகப் போனார்.

உம்மை இறந்தது தழீஇய வெச்சம். (௬)

7. நெற்றிநாட்டத்துநந்திதன்கணத்தவனேமிப்
பொற்றையாமெனச்சூழ்ந்துயர்மகேந்திரப்புரிசைச்
சுற்றுஞாயிலும்வாயில்கடொறுந்தொறுந்தோன்றுங்
கற்றைமாமணிச்சிகரியுநுனித்துமுன்கண்டான்.

இ — ள். நெற்றி நாட்டத்து நந்திதன் கணத்தவன் - நெற்றிக்கண்ணையுடைய நந்தி கணத்தவராகிய வீரவாகுதேவர்,—நேமி பொற்றை என - சக்கரவாளகிரியைப்போல,—சூழ்ந்து உயர் மகேந்திரம் புரிசை சுற்று ஞாயிலும் - சூழ்ந்துயர்ந்த மகேந்திரத்தின் மதிலிற்சூழ்ந்திருக்கின்ற உறுப்புகளையும்,—வாயில்கள் தொறும் தொறும் தோன்றும் கற்றை மாமணி சிகரியும் முன் நுனித்து கண்டான் - வாயில்கடோறுந் தோன்றுகின்ற கூட்டமாக மாணிக்கங்களழுத்தப்பட்ட கோபுரங்களையும் முன்னர் உற்றுப் பார்த்தார். எ — று.

ஆம் அசை. உம்மைகள் எண். (எ)

8. சேரலாரமர்மகேந்திரநகர்வடதிசையில்
வாரிவாய்தலுட்கோபுரத்தெற்றியின்மாடே
கோரனேயதிகோரனேயெனப்படுங்கொடிய
வீரர்தானையோடிருந்தனர்காவல்கொள்வினையால்.

இ — ள். சேரலார் அமர் மகேந்திர நகர் வடதிசையில் - பகைவராகிய அசுரர்களிருக்கின்ற மகேந்திரபுரியின் வடதிக்கிலுள்ள,—வாரி வாய்தலுள் - கதவோடுகூடிய வாயிலுக்குள்ளே,—கோபுரம் தெற்றியின் மாடே - கோபுரத்தின் திண்ணையினது பக்கத்திலே,—கோரனே அதிகோரனே எனப்படும் கொடிய வீரர் - கோரன் அதிகோரன் என்று சொல்லப்படுகின்ற கொடிய சேனாவீரர்கள்,—காவல் கொள் வினையால் தானையோடு இருந்தனர் - காத்தற்றொழிலோடு சேனைகளுடனிருந்தார்கள். எ - று.

ஏகாரம் கோரனே யதிகோரனே என்பனவற்றில் எண்ணும், மாடே என்பதில் அசையுமாம். வாரி - மதில் எனினுமாம். (அ)

9. கரிகளாயிரம்வெள்ளமேதேருமக்கணிதம்
பரிகளாங்கதற்கிருதொகையத்தொகைபதாதி
யுரியவப்பெருந்தானையம்பெருங்கடலுலவா
விரவிமேவரவிருந்தனர்காத்திடும்வீரர்.

இ - ள். ஆயிரம் வெள்ளம் கரிகள் அ கணிதம் தேரும் அதற்கு இருதொகை பரிகள் அ தொகை பதாதி - ஆயிரம் வெள்ளம் யானைகளும் ஆயிரம் வெள்ளந் தேர்களும் இரண்டாயிரம்வெள்ளம் குதிரைகளும் இரண்டாயிரம்வெள்ளஞ் சேனைகளும் (ஆகிய),—உரிய அ பெரும் தானை அம் பெரும் கடல் - (போருக்) குரிய அந்தப்பெரிய (சதுரங்க) சேனையெனப்படும் பெருங்கடலானது,—உலவா விரவி மேவர - நீங்காமல் நெருங்கிச் சூழ,—காத்திடும் வீரர் இருந்தனர் - காவல்செய்கின்ற (அவ்) வீரர்கள் இருந்தார்கள்.

அம், ஏ, அசை. உம்மை இறந்தது தழீஇயவெச்சம். (௯)

10. பகுதிகொண்டிடுதானையஞ்சூழலாம்பரவைத்
தொகுதிகண்டனன்விம்மிதங்கொண்டனன்றுன்னூர்
மிகுதிகொண்டுறைகாவலுங்கண்டனன்வியனூர்
புகுதிகொண்டிடுமுணர்வினானினையனபுகல்வான்.

இ - ள். வியன் ஊர் புகுதி கொண்டிடும் உணர்வினான் - மேன்மைபொருந்திய வீரமகேந்திரத்தினுள்ளே போகவேண்டும் என்னுங் கருத்தினையுடைய வீரவாகுதேவர்,— பகுதி கொண்டிடு தானை அம் சூழல் ஆம் பரவை தொகுதி கண்டனன் - சதுரங்கமாகப் பகுக்கப்பட்டிருக்கின்ற சேனைக் கூட்டமாகிய கடற்றொகுதியைப்பார்த்து,—விம்மிதம் கொண்டனன் - ஆச்சரியங்கொண்டு,—துன்னூர் மிகுதி கொண்டு உறை காவலும் கண்டனன் - பகைவர்களாகிய அசுரர் மிகுதியாக இருந்து காக்குந்தன்மையையுங் கண்டு,— இனையன புகல்வான் - இவ்வாறானவசனங்களைச் சொல்வாராயினார். எ - று.

அம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௧௦)

11. ஈண்டுசெல்லினித்தானைசூழ்ந்தமர்செயும்யானு
மூண்டுநேரினுமுடிப்பவோர்பகலெலாமுடியு
மாண்டதென்னினுமுலவுமோமாநகரிடத்து
மீண்டும்வந்திடுங்கரிபரிபதாதிதேர்வெள்ளம்.

இ — ள். ஈண்டு செல்லின் இ தானை சூழ்ந்து அமர் செயும் - (யான்) இவ்வழியே போவேனேயாயின் இச்சேனைகள் சூழ்ந்து போர் செய்யும்,—யானும் மூண்டு நேரினும்- யானுங் (கோபம்) மூண்டு எதிர்ப்பினும்,—முடிப்ப ஓர்பகல் எல்லாம் முடியும் - (இவர் களுடன் போர்செய்து) கொல்லுவதற்கு ஒருநாண்முழுதுங் கழியும்,—மாண்டது என் னினும் - (இச்சேனை) அழிந்ததென்றாலும்,—உலவுமோ - (இத்துடன்போர்)முடியுமோ (முடியாது),—மா நகர் இடத்து - பெரியநகரத்தினின்றும்,—கரி பரி பதாதி தேர் வெள் ளம் மீண்டும் வந்திடும் - யானைகளும் குதிரைகளும் சேனைகளுந் தேர்களும் வெள்ளக்க ணக்காகப்பின்னும் வரும். எ — று.

ஓகாரம் எதிர்மறை. உம்மை நேரினும் என்னினும் என்பனவற்றில் உயர்வுசிறப் பும், ஏனையவற்றில் இறந்ததுதழீஇயவெச்சமுமாம். (௧௧)

12. வந்தவந்ததோர்தானவப்படையொடேமலைவுற்
றெந்தைகந்தவேளருளினால்யானொருவேனுஞ்
சிந்திநிற்பனேலிந்நகர்த்தானைகள்சிதைய
வந்தமில்பகல்சென்றிடுமெளியரோவவுணர்.

இ — ள். வந்த வந்தது ஓர் தானவர் படையொடே மலைவுற்று - (இவ்வாறு) வந்த வந்த அசுரசேனைகளுடனே போர்செய்து,—எந்தை கந்தவேள் அருளினால் - எம் பிதா வாகிய கந்தஸ்வாமியினுடைய திருவருளால்,—யான் ஒரு வேனும் சிந்திநிற்பனேல் - ஒருவனாகிய நானும் கொன்று நிற்பேனேயாகில்,—இ நகர் தானைகள் சிதைய அந்தம் இல் பகல் சென்றிடும் - இந்நகரத்திலுள்ள சேனைகள் அழிய அளவில்லாதகாலஞ் செல்லும்,—அவுணர் அளியரோ - அவுணர்கள் எளியவர்களோ அன்று. எ — று.

ஓர், ஏ அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை இழிவு சிறப்பு. (௧௨)

13. எல்லையில்பகல்செல்லினுஞ்செல்லுகவினைய
மல்லன்மாநகரவுணர்மாப்பெருங்கடல்வறப்ப
வொல்லுநீர்மையால்யானடல்செய்வனேனுருத்துத்
தொல்லைமைந்தரைத்துணைவரையுய்க்குவன்சூரன்,

இ — ள். எல்லை இல் பகல் செல்லினும் செல்லுக - (அவ்வாறே), அனேககாலஞ் சென்றாலுஞ் செல்லட்டும்,—இனைய மல்லல் மாநகர் அவுணர் மா பெரும் கடல்வறப்ப - இந்த வளம்பொருந்திய பெரிய நகரத்திலுள்ள அசுரராகிய மிகப்பெரிய கடலானது வற்ற,—ஒல்லும் நீர்மையால் யான் அடல் செய்வனேல் - (என்றால்) இயன்றவரையில் நான் போர்செய்வேனானால்,—சூரன் உருத்து தொல்லை மைந்தரை துணைவரை உய்க்குவன் - சூரபன்மன் கோபங்கொண்டு பழைமையாகிய மக்களையும் தம்பிமாரையும் அனுப்புவான். எ — று.

உம்மை எதிர்மறை. (கங)

14. உய்த்தமைந்தர்கள்சூழ்ச்சியின்றுணைவர்களொழிந்தோ
ரத்திறத்துளோர்யாரையும்வெலற்கரிதயில்வேற்
கைத்தலத்தவன்வலிகொடேபற்பகல்காறு
மித்தலைச்சமராற்றியேமுடிக்குவனெனினும்.

இ — ள். உய்த்த மைந்தர்கள் சூழ்ச்சியின் துணைவர்கள் ஒழிந்தோர் அ திறத்துளோர் யாரையும் வெலற்கு அரிது - (அங்ஙனம் அவனால்) அனுப்பப்பட்ட மக்களும் மந்திரிமார்களும் மற்றுமுள்ள அசுரருமாகிய அக்கூட்டத்தார்யாவரையும் வெல்லுவது அரிதாகும்,—அயில் வேல் கைத்தலத்தவன் வலி கொடே - கூரிய வேற்படையைத்தரித்த திருக்கரத்தையுடைய கந்தஸ்வாமியினது (திருவருள்) வலிமையால்,—பல் பகல் காறும் இ தலை சமர் ஆற்றி முடிக்குவன் எனினும் - அனேகநாள்வரைக்கும் இவ்விடத்தினின்று போர்செய்து (அவர்களைக்) கொல்லுவேன் என்றாலும். எ — று.

ஏகாரம் இரண்டும் தேற்றம். உம்மை முன்னையது முற்று; பின்னையது உயர்வு சிறப்பு. (கச)

15. ஏவரும்வெலற்கரியசூர்பின்னர்வந்தெதிர்க்கு
மோவில்வெஞ்சமர்பற்பகலாற்றியானுறினும்
வீவதில்லையாலங்கவன்மேலைநாட்டவத்தாற்
றேவதேவன்முன்னருளியவரங்களின்சீரால்.

இ — ள் ஏவரும் வெலற்கு அரிய சூர் பின்னர் வந்து எதிர்க்கும் - எவர்களாலும் வெல்லுதற்கரிய சூரபன்மன் பின்பு வந்து எதிர்ப்பான்,—ஓவில் வெம் சமர் பல் பகல் ஆற்றி யான் உறினும் - ஒழிவில்லாமற் கொடியபோரை நான் அனேக காலஞ் செய்து நின்றாலும்,—அவன் மேலை நாள் தவத்தால் தேவ தேவன் முன் அருளிய வரங்களின் சீரால் வீவது இல்லை - அச்சூரபன்மன் முன்னாளிற் செய்த தவத்தின்பொருட்டுச் சிவபெருமான் முன் கொடுத்தருளிய வரங்களின் மிகுதிப்பாட்டால் அவன் இறப்பதில்லை.

ஆல், அங்கு அசை. உம்மை முன்னையது முற்று; பின்னையது உயர்வு சிறப்பு. ()

16. அன்னவன்றனைமாலயன்றனக்கும்வெல்லரிதா
லின்னுமாங்கவனாணைக்கும்வெருவியேயிருந்தார்
பின்னையாரவன்றன்னைவென்றிடுவர்கள்பெருநாட்
டுன்னியான்சமராற்றினுந்தொலைகிலன்சிறிதும்.

இ — ள். அன்னவன் தனை மால் அயன் தனக்கும் வெல்ல அரிது - அச்சூரபன்மனைப் பிரமவிஷ்ணுக்களுக்கும் வெல்லமுடியாது,—இன்னும் அவன் ஆணைக்கும் வெருவியே இருந்தார் - (அவர்கள்) இன்னும் அவனது ஆஞ்ஞைக்கும் பயந்திருந்தார்கள்,—

பின்னை யார் அவன் தன்னை வென்றிடுவர்கள் - பின்பு யார் அவனை வெற்றி கொள்பவர்கள்,—பெருநாள் துன்னியான் சமர் ஆற்றினும் சிறிதும் தொலைகிலன் - நெடுங்காலமாக எதிர்த்து நான் போர் செய்தாலும் சற்றும் பின்னிடான். எ — று.

ஆல், ஆங்கு அசை. தன் மூன்றும் அகரமும் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை இன்னும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமும், ஏனையவற்றில் உயர்வுசிறப்புமாம். ()

17. தொலைந்துபோகிலன்சூரமரியற்றிடிற்றுன்னிக்
கலந்தயான்விறலின்றிமீண்டேகுதல்கடனோ
மலைந்துநிற்கவேவேண்டுமோலாயினும்வறிது
மலந்தலைப்படுஞ்சுரர்சிறையகன்றிடவற்றோ.

இ — ள். அமர் இயற்றிடில் சூர் தொலைந்து போகிலன் - (யான் நின்று) போர் செய்வேனே யாகில் சூரபன்மன் (எனக்குத்) தோற்றுப் போகின்றவனல்லன்,—துன்னி கலந்த யான் விறல் இன்றி ஏகுதல் கடனோ - (அவனோடு) எதிர்த்துப் (போரிற்) கலந்துநின்றயான் வெற்றியில்லாமல் திரும்பிப்போகுதல்முறைமையோ(முறைமையன்று),— மலைந்து நிற்கவே வேண்டும் - (பின்பு) போர் செய்து நிற்கவே வேண்டும்,—ஆயினும் வறிதும் அலந்தலை படும் சுரர் சிறை அகன்றிட வற்றோ - ஆனாலும் வீணாகத் துன்பப்படுகின்ற தேவர்களுடைய சிறை நீங்க வல்லதோ (அன்று.) எ — று.

ஆல் அசை. ஏகாரம் தேற்றம். ஓகாரம் இரண்டும் எதிர்மறை. உம்மைகள் உயர்வு சிறப்பு. (கஎ)

18. மற்றிந்நீர்மையிற்பற்பகலவனொடுமலைந்து
வெற்றிகொண்டிலனின்னுமென்றமரினைவீட்டி
யொற்றினீர்மையையுணர்த்துதலொல்லுமோவுலவா
தெற்றைவைகலுமமர்செயவேண்டுமாலெனக்கே.

இ — ள். இ நீர்மையில் பல் பகல் அவனொடு மலைந்து இன்னும் வெற்றி கொண்டிலன் என்று - இத்தன்மையினால் பலகாலம் அவனோடு போர் செய்து இன்னும்வெற்றி பெற்றே னில்லை யென்று,—அமரினை வீட்டி ஒற்றின் நீர்மையை உணர்த்துதல் ஒல்லுமோ - போர்த்தொழிலை விட்டுத் தூதுவந்த விஷயத்தை அறிவிப்பது இயையுமோ (இயையாதாகலான்),—உலவாது - நீங்காமல்,—எனக்கு எற்றைவைகலும் அமர் செய வேண்டும் - எனக்கு எப்பொழுதும் (இவனுடனே) போரையே செய்து நிற்கவேண்டும்.

மற்று, ஆல், ஏ அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது இறந்தது தழீஇய வெச்சம்; பின்னையது முற்று. (கஅ)

19. போதநாயகன்பரம்பொருணயகன்பொருவில்
வேதநாயகன்சிவனருணயகன்விண்ணோர்க்
காதிநாயகனறுமுகநாயகனமலச்
சோதிநாயகனன்றியார்சூரனைத்தொலைப்பார்.

இ — ள். போதநாயகன் - ஞானநாயகரும்,—பரம் பொருள் நாயகன் - பரம் பொருளாகிய நாயகரும்,—பொருவு இல் வேதநாயகன் - ஒப்பில்லாத வேதநாயகரும்,—சிவன் அருள் நாயகன்-சிவபெருமான் பெற்றருளிய நாயகரும்,—விண்ணோர்க்கு ஆதிநாயகன் - தேவர்களுக்கு முதற்கடவுளும்,—அறுமுகநாயகன் - அறுமுகப் பெருமானும்,—அமலம் சோதிநாயகன் அன்றி - களங்கமற்ற பரஞ்சோதி நாயகரும் (ஆகிய) சுப்பிரமணியஸ்வாமியல்லாமல்,—சூரனை தொலைப்பார் யார் - சூரபன்மனைக் கொல்லத் தக்கவர்கள் யாவர் ஒருவருமில்லை. எ — று. (கக)

20. இம்பர்சூரொடுபொருதுநின்றிடுவனேயென்னி
னம்பிரானறுமாமுகன்பின்னர்மேனண்ணி
வெம்புசூரனைவேலினாற்றடிந்துவெஞ்சிறையி
லும்பர்யாரையுமீட்டிடவேண்டுமேலொருநாள்.

இ — ள். இம்பர் சூரொடு பொருது நின்றிடுவனே என்னில் - இவ்விடத்துச் சூரபன்மனோடுபோர்செய்து நிற்பேனாயின்,—நம் மா அறுமுகன் பிரான் - நமது அழகிய அறுமுகப் பெருமான்,—பின்னர் மேல் ஒருநாள் நண்ணி - பின்பு இனி ஒருநாள் வந்து,—வெம்பு சூரனை வேலினால் தடிந்து - கொடியவனாகிய சூரபன்மனை வேலாயுதத்தாற் கொன்று,—வெம் சிறையில் உம்பர் யாரையும் மீட்டிடவேண்டும் - கரோமான சிறையிலிருக்கின்ற தேவர்களெல்லாரையும் (அச்சிறையினின்றும்) விடுவிக்கவேண்டும். எ — று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை முற்று. (உ௦)

21. ஆதலாலமராற்றுதன்முறையதோவஃதான்
றீதுநம்பெருமான்றனதருளுமன்றினைய
தூதர்செய்கடனாங்கொலோவமர்பெறுத்தொடர்பாற்
போதலேகடனென்றனன்பொருவில்சீரறிஞன்.

இ — ள். ஆதலால் அமர் ஆற்றுதல் முறை அது ஓ - ஆகையால் போர் செய்வது முறைமையோ (முறைமையன்று),—அஃதான்று - அதுவல்லாமலும்,—ஈது நம் பெருமான் தனது அருளும் அன்று - இப்போர்த்தொழில் எம்பெருமானாகிய கந்தஸ்வாமியினது அனுமதியுமன்று,—இனைய தூதர் செய் கடன் கொலோ - இப்போர்த்தொழில் தூதர்செய்யும் முறைமையோ (முறைமையன்று),—அமர் பெறு தொடர்பால் போதலே கடன் என்றனன் பொருவு இல் சீர் அறிஞன் - போரில்லாத தன்மையாகப் போதலே முறை என்று கருதினார் ஒப்பில்லாத சிறந்த அறிவினையுடையவராகிய வீரவாகுதேவர்.

தன் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. கொல் அசை. ஏகாரம் தேற்றம். ஓகாரம் இரண்டும் எதிர்மறை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (உக)

வேறு.

22. இப்பால்வாய்தலினெல்லைநீங்கிய
துப்பார்தானைகடுற்றுநின்றவா
லப்பாலெய்தரிதாமருங்குபோய்
வைப்பார்கீழ்த்திசைவாயினண்ணுவேன்.

இ — ள். இப்பால் வாய்தலின் எல்லை நீங்கிய துப்பு ஆர் தானைகள் துற்று நின்ற - இப்புறமாகிய (வடக்கு) வாயிலில் அளவற்ற சேனைகள் நெருங்கிநின்றன (ஆதலால்),—அப்பால் எய்த அரிதாம் - அப்புறம் போதற்கு முடியாது. [எனவே இந்த வடக்குவாயில் வழியாகப் போதல் அருமையென்பது],—மருங்கு போய் வைப்பு ஆர் கீழ் திசை வாயில் நண்ணுவேன் - (இதன்) பக்கமாகச் சென்று பெருமை பொருந்திய கிழக்கு வாயிலை அடைவேன். எ — று. ஆல் அசை. (உஉ)

23. என்னாவுன்னியியன்றவுத்தரப்
பொன்னார்வேலிபுகாதுபாங்கர்போய்க்
கொன்னார்கின்றகுணக்குவாய்தலின்
முன்னாவேகினன்மொய்ம்பின்வீரனே.

இ — ள். என்னா உன்னி - என்றுநினைத்து,—உத்தரம் இயன்ற பொன் ஆர் வேலி புகாது - வடதிசையிற் செய்யப்பட்ட பொன்மயமாகிய மதிலின்கணுள்ள வழியாகப்போ

காது,—பாங்கர் போய் - (அதன்) பக்கமாகச் சென்று,—கோண் ஆர்கின்ற குணக்கு வாய்தலின் முன்னு மொய்ம்பின் வீரன் ஏகினன் - பெருமை பொருந்திய கீழ்த்திசை வாயிலின் முன்னாக வலிமையையுடைய வீரவாகுதேவர் சென்றார். எ — று.

ஏகாரம் அசை. (௨௩)

24. மேதிக்கண்ணவன்வீரபானுவென்
றாதிக்கத்தவுணர்க்குநாயக
ரேதிக்கையரிரண்டுவீரரு
மாதிக்கன்னதன்வாயில்போற்றினார்.

இ — ள். ஆதிக்கத்து அவுணர்க்கு நாயகர் - முதன்மைபொருந்திய அசுரர்க்குத்தலைவரும்,—ஏதி கையர் - வாட்படை தாங்கிய கையையுடையவரும்(ஆகிய),—மேதிக் கண்ணவன் வீரபானு என்று இரண்டுவீரரும் - மகிடாட்சன் வீரபானு என்று சொல்லப்படும் இரண்டு வீரர்களும்,—அன்னமாதிக்கு வாயில் போற்றினர் - அந்தப் பெரிய கிழக்குத் திக்குவாயிலைக் காத்துக்கொண்டிருந்தார்கள். எ — று. உம்மை முற்று. (௨௪)

25. திருவுந்தும்வடதிக்குவாய்தலின்
விரவுந்தானையின்வெள்ளமெய்த்தொகை
பரவுஞ்சூரர்பயிற்றுபல்பவத்
துருவஞ்சூழ்ந்தெனவொத்துநின்றவே.

இ — ள். திரு உந்தும் வடதிக்கு வாய்தலின் விரவும் மெய் தானையின் வெள்ளம் தொகை - இலட்சுமிவிலாசமாகிய வடக்குத்திக்குவாயிலிலே நெருங்கிநிற்கின்ற மெய்மையாகிய சேனைவெள்ளத்தின் தொகை,—பரவும் சூரர் பயிற்று பல் பவத்து உருவம் சூழ்ந்த என ஒத்து நின்ற - (யாவராலுந்) துதிக்கப்படுகின்ற சூரபன்மன் செய்கின்ற பல பாவங்களெல்லாம் உருவமெடுத்துச் சூழ்ந்தனஎன்றுசொல்லும்படி ஒப்பாகிநின்றன. எ-று.

ஏகாரம் அசை. (௨௫)

26. வண்டார்செற்றியவாகைமொய்ம்பினன்
கண்டானன்னகடிக்கொள்காவலுந்
தண்டாதுற்றிடுதானைநீத்தமு
மண்டாவற்புதநீரனாயினன்.

இ — ள். வண் தார் செற்றிய வாகை மொய்ம்பினன் - அழகிய மாலையணிந்த புயங்களையுடைய வீரவாகுதேவர்,—அன்ன கடி கொள் காவலும் தண்டாது உற்றிடு தானை நீத்தமும் கண்டான் - அந்த மிகுதியாகிய காவலையும் நீங்காதிருக்கின்ற சேனைவெள்ளத்தினையுங் கண்டு,—அண்டா அற்புத நீரன் ஆயினன் - அடங்காத அதிசய குணத்தையுடையவராயினார். எ — று. உம்மைகள் எண். கடிக்கொள்காவல் - அச்சத்தைத்தருகின்ற காவலுமாம். (௨௬)

27. ஆண்டங்குற்றவளப்பில்சேனையைக்
காண்டும்மிவ்வழிகாவல்போற்றியே
சேண்டுன்றும்புவிசெற்றுமாதலா
லீண்டுஞ்செல்லரிதென்றுமுன்னினன்.

இ — ள். ஆண்டு உற்ற அளப்பில் சேனையை - அவ்விடத்திலுள்ள அளவில்லாத சேனையை,—இவ்வழிகாண்டும் - இவ்விடத்துங் கண்டேம்,—[எனவே வடக்குவாயிலில் நின்ற சேனைத்தொகையை இக்கிழக்குவாயிலிலும் நிற்கக் கண்டேம் என்பது] காவல் போற்றி சேண் துன்றும் - (அவை) காவல்செய்துகொண்டு ஆகாயத்திலும் நெருங்கி

நிற்கின்றன,—புவி செற்றும் - பூமியிலும் நெருங்கிநிற்கின்றன,—ஆதலால் ஈண்டும் செல்ல அரிது என்று முன்னினன் - ஆகையால் இந்தவழியாகவுஞ் செல்லக் கூடாதென்று நினைத்தார். எ — று.

அங்கு, ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (உஎ)

28. நின்றிப்பாற்படனீர்மையன்றரோ
தென்றிக்கின்வழிசென்றுநாடுவ
னென்றுட்கொண்டவணீங்கியேகினன்
குன்றிற்றொன்மிடல்கொண்டதோளினன்.

இ — ள். நின்று இ பால் படல் நீர்மை அன்று - இங்குநின்று இவ்வாயிலாற்போதல் சரியன்று,—தென் திக்கின் வழி சென்று நாடுவன் என்று உட்கொண்டு அவண் நீங்கி ஏகினன் - தெற்குத்திக்கின் (வாய்தல்) வழியாகச்சென்று பார்ப்பேனென்று மனசில் நினைத்துக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் போனார்,—குன்றின் தொன் மிடல் கொண்டதோளினன் - மலையினும் பார்க்க வலிமை பொருந்திய புயங்களையுடைய வீரவாகுதேவர். எ — று. அரோ அசை. (உஅ)

மகேந்திரஞ்செல்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஅஉ.

---

# கயமுகன்வதைப்படலம்.

1. ஏகாநிற்புழியேந்தல்கீழ்த்திசை
மாகாவற்கொண்மதங்கமாமுகன்
மீகானொப்பவியன்கலத்தினுக்
காகாயத்தினமர்ந்துபோற்றுவான்.

இ — ள். ஏந்தல் ஏகா நிற்புழி - வீரவாகுதேவர் (அங்ஙனஞ்) செல்லும் பொழுது,—கீழ் திசை மா காவல் கொள் மதங்கம் மாமுகன் - கிழக்குத்திக்கைப் பெருங்காவல்கொண்ட கயமுகன்,—வியன் கலத்தினுக்கு மீகான் ஒப்ப - பெரிய கப்பலுக்கு மாலுமியைப் போல,—ஆகாயத்தின் அமர்ந்து போற்றுவான் - ஆகாயத்திலிருந்து (அந்நகரத்தைக்) காவல்செய்கின்றவன். எ — று. மா அசை. (க)

2. நூற்றுப்பத்துநுவன்றதோன்முகன்
மூற்றைக்கையினன்மொய்ம்பிராயிரன்
சீற்றத்துப்புறுதீயசிந்தையான்
கூற்றத்துக்கொருகூற்றமேயனன்.

இ — ள். நூற்றுப்பத்து நுவன்ற தோல் முகன் - ஆயிரக்கணக்காகச் சொல்லப்பட்ட யானை முகங்களையுடையவன்,—மூற்றை கையினன் - மூவாயிரங் கைகளை யுடையவன்,—மொய்ம்பு ஈராயிரன் - இரண்டாயிரம் புயங்களை யுடையவன்,—சீற்றம் துப்பு உறு தீய சிந்தையான் - கோபவலிமைபொருந்திய கொடிய மனத்தினையுடையவன்,—கூற்றத்துக்கு ஒரு கூற்றமே அனன் - இயமனுக்கு ஒரு இயமனைப்போன்றவன். எ-று.

ஏகாரம் தேற்றம். (உ)

3. பொன்னூரேமபுரத்துவைகலு
மன்னய்வாழ்பவன்மாறுகொண்டுதன்
முன்னுவெய்திமுனிந்துபோர்செய
வொன்னுரின்றியுளங்குறைந்துளான்.

இ — ள். பொன் ஆர் ஏமபுரத்து வைகலும் மன் ஆய் வாழ்பவன் - பொன்மயமாகிய ஏமபுரத்திலே எப்பொழுதும் அரசனுகவாழ்பவன்,—மாறு கொண்டு தன் முன்னு எய்தி முனிந்து போர் செய ஒன்னுர் இன்றி உளம் குறைந்து உளான் - பகைத்துத் தனக்கு நேராகவந்து கோபித்துப் போர் செய்தற்குப் பகைவர்களின்மையால் மனவூக்கங் குறைந்தவன். எ — று.

உம்மை முற்று. (௩)

4. கருமேகங்கள்கறித்துவாரியுண்
டுருமேறூடுமூறற்றவோச்சுவான்
பெருமேதக்கபவஞ்செய்பெற்றியான்
செருமேல்கொண்டிடுசிந்தைபெற்றுளான்.

இ — ள். கருமேகங்கள் கறித்து வாரி உண்டு - கரியமேகங்களைக் கடித்து நீரை யுண்டு,—உருமேறூடும் உரற்ற ஓச்சுவான் - இடியேறூடும் (அம்மேகங்கள்) அலறும்படி யெறிகின்றவன்,—பெரு மேதக்க பவம் செய் பெற்றியான் - மிகப் பெரிய பாவங்களைச் செய்கின்ற குணத்தை யுடையவன்,—செரு மேல் கொண்டிடு சிந்தை பெற்றுளான் - போரை மேலாகக் கொண்ட மனசையுடையவன். எ — று. (௪)

5. மஞ்சார்வேழம்வனத்தில்வல்லுளி
யெஞ்சாவெவ்வரியாளிவல்லிய
மஞ்சாராயிரமங்கைகொண்டுணுச்
செஞ்சோரிப்புனல்சிந்தும்வாயினுன்.

இ — ள். மஞ்சு ஆர் வேழம் வனத்தில் வல்லுளி எஞ்சா வெவ் அரி யாளி வல்லியம்- மேகம்போன்ற (கருநிறம் பொருந்திய) யானைகளையும் காட்டிலுள்ள பன்றிகளையும் (வலிமை) குறையாத கொடிய சிங்கங்களையும் யாளிகளையும் புலிகளையும்,—அஞ்சு ஆர் ஆயிரம் அங்கை கொண்டு உணு - ஐயாயிரத்தொகையாக அழகியகைகளால்(வாரி)யுண்டு, செம் சோரி புனல் சிந்தும் வாயினுன் - சிவந்த இரத்தநீர் சிந்துகின்ற வாயையுடையவன். எ — று. (ரு)

6. காசைப்போதுகடுத்தமெய்யர்தென்
னுசைக்காலரோராயிரத்தர்தம்
பாசத்தோடுபயின்றுசேர்ந்தென
வீசித்தூங்கும்வியன்றுதிக்கையான்.

இ — ள். காசை போது கடுத்த மெய்யர் தென் ஆசை காலர் ஓராயிரத்தர் - காயாம்பூவினையொத்த மேனியையுடையவராகிய தென்திக்கிலுள்ள ஆயிரம் இயமர்கள்,—தம்பாசத்தோடு பயின்று சேர்ந்தென - தங்கள் பாசக் கயிறுகளுடன் பொருந்தி யிருந்தாற்போல,—வீசி தூங்கும் வியன் துதிக்கையான் - அசைந்துதூங்குகின்ற பெரியதுதிக்கைகளையுடையவன். எ — று. அத்து இரண்டும் சாரியை. (சு)

7. வாழ்நாளஃகினன்மாயுமெல்லையா
னேனாலத்திசையேகும்வீரனைக்
காணாநின்றுகனன்றுசாலவுஞ்
சேணானின்னனசெப்பியேகுவான்.

இ — ள். வாழ் நாள் அஃகினன் மாயும் எல்லையான் - ஆயுள்முடிந்து சாகுங் காலஞ் சமீபித்தவனாகையால்,—ஏனால் அ திசை ஏகும் வீரனை - இறுமாப்புடன் அவ்வழியே வருகின்ற வீரவாகுதேவரை,—காணா நின்று சாலவும் கனன்று - கண்டு மிகவுங் கோபித்து,—சேணான் இன்னன செப்பி ஏகுவான் - ஆகாயத்திலிருந்த (அக்) கயமுகன் இவ்வாறு சொல்லிக் கொண்டு வருகின்றான். எ — று.

சேணான் - தூரத்தினின்றும் வருகின்றவன் எனினுமாம். உம்மை முற்று. (எ)

8. மிக்கார்காவல்விலங்கிநீயிவட்
புக்காய்மாயைபுகன்றுளாய்கொலோ
வக்காறானுமெம்மாணைநீங்கியே
யெக்காலத்தினுமேகவல்லதோ.

இ — ள். மிக்கார் காவல் விலங்கி நீ இவண் புக்காய் - மேலோராகிய (அசுரருடைய) காவலைக் கடந்து நீ யிவ்விடத்திலே வந்தாய்,—மாயை புகன்றுளாய் கொலோ - மாயவித்தையைப்பழகியிருக்கின்றாயா?—அ கால் தானும் எம் ஆணை நீங்கி எ காலத்தினும் ஏக வல்லதோ - அக்காற்றுத்தானும் எமது கட்டளையைக் கடந்து எக்காலத்தினும் வாத்தக்க வல்லமுடையதோ (அன்று.) எ — று.

கொல், ஏ அசை. ஓகாரம் முன்னையது வினா; பின்னையது எதிர்மறை. உம்மைகள் உயர்வு சிறப்பு. (அ)

9. வறியாராகிமயங்கும்வானவச்
சிறியார்வைகியசீரிலூரெனக்
குறியாவந்தனைகோதிலிந்நக
ரறியாயோநமதாணையாற்றலே.

இ — ள். வறியார் ஆகி மயங்கும் வானவர் சிறியார் வைகிய சீரில் ஊரென குறியா கோது இல் இந்நகர் வந்தனை - தரித்திரர்களாயுழலுகின்ற தேவர்களாகிய சிறியவர்களிருக்கின்ற சிறப்பற்றவூரைப்போல எண்ணி குற்றமில்லாத விந்நகரத்தில்வந்தாய்,—நமது ஆணை ஆற்றல் அறியாயோ - நமது ஆணைவலிமையை நீயறியாயா? எ — று.

ஏகாரம் அசை. ஓகாரம் வினா. (கூ)

10. மூண்டேகுற்றனன்மொய்சினத்தினேன்
மாண்டேபோயினைவல்லைநீயினி
மீண்டேபோந்திறமில்லைமேலுனக்
கீண்டேமாயவிழைத்தவெல்லையே.

இ — ள். மொய் சினத்தினேன் மூண்டு ஏகுற்றனன் - மிகுந்தகோபத்தினையுடைய வனாகிய யான் (உன்னைக்கொல்ல) முயன்று வந்தேன்,—வல்லை மாண்டே போயினை - சீக்கிரத்தில் இறந்தேபோயினாய்,—நீ இனி மீண்டு போந்திறம் இல்லை - நீ இனித் திரும்பிப்போகுந்திறம் இல்லை,—மேல் உனக்கு மாய இழைத்த எல்லை ஈண்டே - இனி யுனக்கு இறக்கும்படி விதித்த முடிவு இவ்விடத்திலேயே. எ — று.

மீண்டே என்பதில் ஏகாரம் அசை, ஏனையவற்றில் தேற்றம். மேல் முன்னுமாம்.

11. சூராளகின்றதொர்தொல்லைமாநகர்
சேராநின்றனைசிறுகேசரி
போரவெல்லையொர்பீடின்மான்பிணை
யாராய்தற்குவருங்கொலாற்றலால்.

இ — ள். சூர் ஆள்கின்றது ஓர் தொல்லை மாநகர் சேராநின்றனை - சூரபன்மன் ஆளுகின்ற பழைய பெரிய நகரத்திலே வந்து நின்றாய்,—சிறு கேசரி போரா எல்லை ஓர் பீடு இல் மான் பிணை ஆராய்தற்கு ஆற்றலால் வரும் கொல் - கோபம் பொருந்திய சிங்கம் விலகாமலிருக்கின்ற விடத்தில் பெருமையில்லாத வொரு பெண்மான் தைரியத்தோடும் (அச்சிங்கத்தை) ஆராய்தற்கு வருமா? (வராது.) எ — று.

ஓர் இரண்டில் முன்னையதும் கொல்லும் அசை. ஓர் ஓர் எனக்குறுகிற்று. சேராநிற்றல் ஒரு சொல்லுமாம். ஆராய்தல் என்பதற்கு இரை தேடல் என்றலுமொன்று. ()

12. தொடுநேமிக்கடறுண்ணெனக்கடந்
திடைசேர்கின்றவிலங்கைநீங்கியே
கடிதேயிந்நகர்காணவுன்னியே
யடைவாய்தேவர்கணத்துளாரைநீ.

இ — ள். தொடு நேமி கடல் துண்ணெனக் கடந்து இடை சேர்கின்ற இலங்கை நீங்கி - தோண்டப்பட்ட வட்டமாகிய கடலைச் சீக்கிரத்திற் றாண்டி யிடையிலுள்ள இலங்காபுரத்தைக் கடந்து,—கடிது இ நகர் காண உன்னியே அடைவாய் - விரைந்து இந்நகரத்தைக் காணும்பொருட்டு வருகின்றாய்,—தேவர் கணத்துள் நீ யார் - தேவர் கூட்டத்துள் நீ யாவன்? எ — று.

நேமிக்கடல் ஒருபொருட்பன்மொழியுமாம். ஏகாரங்கள் அசை. ஐ சாரியை. (கஉ)

13. திருத்தங்கண்ணகமேறவர்தம்முளும்
விருத்தன்போலுமிகத்துணிந்துநீ
யொருத்தன்போந்தனையொன்றொர்வாளொடே
வரத்தென்னிவ்விடைமாயைகற்றுளாய்.

இ — ள். மாயை கற்றுளாய் நீ - மாய வித்தைகளைக் கற்றவனே நீ,—தம் கண் திரு அகல் தேவர் தம்முளும் விருத்தன் - தம்மிடத்துள்ள செல்வம் நீங்கப் பெற்ற தேவர் கூட்டத்துள்ளும் புதியவனாக விருக்கின்றாய்,—மிக துணிந்து ஒன்று ஓர் வாளொடு ஒருத்தன் போந்தனை - மிகத்துணிந்து ஒருவாளைக்கொண்டு தனித்தவனாகவந்தாய்,—இவ்விடைவரத்து என் - இவ்விடத்திலே வந்த காரியமென்ன. எ — று.

தம் சாரியை. போலும் ஒப்பில்போலி. ஏகாரம் பிரிநிலை. உம்மை உயர்வுசிறப்பு.()

14. ஆலாலத்தையயின்றநம்பனோ
மாலானோவனசத்திலண்ணலோ
பாலார்தந்திபடைத்தகள்வனோ
மேலாரிங்குனைவிட்டதன்மையார்.

இ — ள். மேலார் இங்கு உனை விட்ட தன்மையார் - மேன்மையையுடையோராய் உன்னை இவ்விடத்திலனுப்பிவைத்தவர்கள்,—ஆலாலத்தை அயின்ற நம்பனோ - ஆலகால விஷத்தையுண்டருளிய சிவபெருமானோ,—மாலானோ - விஷ்ணுவோ,—வனசத்தின் அண்ணலோ - பதுமாசனனாகிய பிரமனோ,—பால் ஆர் தந்தி படைத்த கள்வனோ-வெண்ணிறம்பொருந்திய ஐராவதயானையையுடைய இந்திரனாகிய கள்வனோ. எ — று.

ஓகாரம் நான்கும் ஐயவினா. மேலார் என்பதற்கு பின்புயார் எனப்பொருள் கொள்வாருமுளர். (கச)

15. சுற்றுநின்றனைசூழவிந்நக
ரொற்றாய்வந்தனைபோலுமுன்றனை
மற்றாருய்த்தனர்வந்ததென்கொலோ
விற்றாய்நின்னுயிரெங்கணுய்திநீ.

இ — ள். சூழ இ நகர் சுற்று நின்றனை-சூழ்ந்து இந்நகரத்தைச் சுற்றுகின்றாய் (ஆதலின்),—ஒற்றாய் வந்தனை போலும்-ஒற்றனாக வந்தாய் போலும்,—உன் தனை மற்று ஆர் உய்த்தனர் - உன்னை (யான் முன் வினவப்பட்டவர்களன்றாயின் வேறு) யாரனுப்பினவர்கள்,—வந்தது என்கொல் - நீ வந்தது என்னை,—நின் உயிர் இற்றாய் - உனது உயிரையிழந்தாய்,—நீ எங்கண் உய்தி - நீ எவ்வாறுய்ப்பிழைப்பாய். எ — று.

எவன் என்னும் வினாப்பெயர் என்னென்றாயது. கொல் ஓ, அசை. தன் சாரியை. (கரு)

16. சிறையிற்பட்டுழறேவர்செய்கையை
யறிகுற்றிந்திரனாளையாகியே
நெறியிற்போகநினைந்துளாய்கொலாங்
குறுகுற்றாயிதுவுங்குறிப்பதோ.

இ — ள். இந்திரன் ஆளை ஆகி - இந்திரனது ஏவலாளாய்,—சிறையில் பட்டு உழல் தேவர் செய்கையை அறிகுற்று - சிறையிலகப்பட்டு வருந்துகின்ற தேவர்களது செய்கைகளை யறிந்து,—நெறியில் போக நினைந்துளாய் குறுகுற்றாய் கொல் - வழியேதப்பிச்செல்லும்படி நினைத்துவந்தாயோ,—இதுவும் குறிப்பதோ - இப்படி வரவும் நினைப்பதா.?

ஐ சாரியை. கொல் ஐயம். ஏ, ஆம் அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை இழிவுசிறப்பு.

17. விண்டோயுங்கனன்மேவுமெல்லையின்
மண்டோய்பூளைமருத்தனுய்த்தெனப்
பண்டேநொய்யைபடுந்திறத்திவட்
கொண்டேவந்ததுகொல்லும்வல்வினை.

இ — ள். விண் தோயும் கனல் மேவும் எல்லையில் - ஆகாயத்தை யளாவிய அக்கினியிருக்கின்ற விடத்திலே (எனவே ஆகாயம் வரைக்குஞ் சொலித்தெரிகின்ற அக்கினி என்பது கருத்து),—மருத்தன் மண் தோய் பூளை உய்த்தென - வாயுதேவன்பூமியிலுள்ள பஞ்சைச்செலுத்தி விட்டாற்போல,—பண்டே நொய்யை - நீ முன்னமே எளியவன்,—படுந்திறத்து இவண் கொல்லும் வல்வினை கொண்டே வந்தது - இறக்கும்பொருட்டு இவ்விடத்திலே (உன்னைக்) கொல்லுகின்ற தீவினை கொண்டு வந்து விட்டது. எ — று.

ஏகாரங்கள் தேற்றம். (கஎ)

18. முன்னநம்பணிமுற்றுமாற்றியே
கின்னங்கொண்டுகரந்தகீழ்த்திசை
மன்னன்பாலுறுவாருளன்றுநீ
யின்னும்மஞ்சலையென்னையெண்ணலாய்.

இ — ள். முன்னம் நம் பணி முற்றும் ஆற்றி - முன்னே நமது ஏவல்களைமுழுதுஞ் செய்து,—கின்னம் கொண்டு கரந்த கீழ் திசை மன்னன்பால் உறு வாரு ளன்று - துன்பங்கொண்டு மறைந்துபோன கிழக்குத்திக்குக்கதிபனாகிய இந்திரன்பக்கத்தில் நிற்பவர்

களாகிய தேவர்களுக்குள் நீ யொருவனல்லை,—நீ இன்னும் அஞ்சலை - நீ இன்னும் பயப் படுகின்றாயில்லை,—என்னை எண்ணலாய் - என்னையும் மதிக்கின்றாயில்லை. எ — று.

ஏகாரம் அசை. உம்மை முன்னையது முற்று;பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம். என்னை என்புழி உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. (௧௮)

19. கொல்லாநிற்பதொர்கூற்றமேயெனச்
செல்லாநின்றிடுதிண்ணியேன்முன
நில்லாயெங்கடாநீங்குவாயென
வொல்லானோதியுரப்பியேகினான்.

இ — ள். கொல்லா நிற்பது ஓர் கூற்றமே என செல்லா நின்றிடு திண்ணியேன் முனம் நில்லாய் - (இவன்எல்லாவுயிர்களையுங்) கொல்லுகின்ற ஒப்பற்ற யமனேயென்று கண்டோர்சொல்லவந்து நிற்கின்ற பலசாலியாகிய எனக்கு முன்னே நிற்பாய்,—எங்கு அடாநீங்குவாய் என - எங்கேயடா போவாயென்று,—ஒல்லான் ஓதி உரப்பி ஏகினான் - பகைவனாகிய கயமுகன்சொல்லி அதட்டிக்கொண்டுவந்தான். எ — று. ஏகாரம் தேற்றம்.

20. வன்றாள்கொண்டமதக்கயாசுரன்
சென்றானின்னனசெப்பியிம்மொழி
நன்றாலென்றுநகைத்துநோக்கியே
நின்றான்வாகைநெடும்புயத்தினான்.

இ — ள். வன் தாள் கொண்ட மதம் கயாசுரன் இன்னன செப்பி சென்றான் - வலி யகாலையுடைய மதம்பொருந்திய கயமுகன் இவ்வாறானவசனங்களைச்சொல்லிக்கொண்டு வந்தான்,—வாகை நெடும் புயத்தினான் - வெற்றிபொருந்திய நெடிய புயங்களையுடைய வீரவாகுதேவர்,—இ மொழி நன்று என்று நோக்கி நின்றான் - இவ்வசனங்கள் நல்லதெ ன்று சிரித்துப்பார்த்துக்கொண்டு (போதலைவிட்டுத்திரும்பி) நின்றார். எ — று.

ஆல், ஏ அசை. (௨௦)

21. ஓவாதிவ்வகையோதிமுன்வருந்
தீவாயோனெதிர்சென்றுவல்லையிற்
சாவாயென்னிடைசார்ந்துளாய்கொலாம்
வாவாவென்றனன்வாகைமொய்ம்பினான்.

இ - ள். வாகை மொய்ம்பினான் - வீரவாகுதேவர்,—ஓவாது இவகை ஓதி முன்வ ரும் தீ வாயோன் எதிர்சென்று - ஓயாமல் இவ்விதமாகச் சொல்லிக்கொண்டு வருகின்ற தீய வாயையுடைய கயமுகனுக்கு முன்னேபோய்,—வல்லையில் சாவாய் என்னிடை சார் ந்துளாய் - சீக்கிரத்தில்சாவ என்னிடத்திலே வந்தாயோ,—வாவா என்றனன் - வருக வருக என்று சொன்னார். எ — று.

கொல், ஆம் அசை. வாவா என்னுமடுக்கு விரைவுபற்றி வந்தது. (௨௧)

22. வானோரஞ்சவருங்கயாசுரன்
றானோர்குன்றுதனைப்பறித்திடா
வூனோடுன்னுயிருண்ணுமீதென
வானோன்மைந்தன்முன்னார்த்துவீசினான்.

இ — ள். வானோர் அஞ்ச வரும் கயாசுரன் - (இங்ஙனம் வீரவாகுதேவர் கூறிக் கொண்டுநின்றபொழுது) தேவர்கள் பயப்படும்படி வருகின்ற கயாசுரன்,—ஓர் குன்று தனை பறித்திடா - ஓர்மலையைப்பிடுங்கி (யெடுத்து),—ஈது ஊனோடு உன் உயிர் உண்

னும் எனு - இம்மலை உன்சரீரத்தோடு உயிரையும் அழித்துவிடுமென்று,—ஆனேன் மைந்தன் முன் ஆர்த்து வீசினன் - இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருக்குமாரராகிய வீரவாகுதேவர்மேல் ஆரவாரித்து எறிந்தான். எ — று.

தான் அசை. தன் சாரியை. உண்ணல் இலக்கணை. முன் இடப்பொருளுருபு. ()

23. விண்டோய்மேனிவியன்கயாசுரன்
கொண்டோர்கையில்விடுத்தகுன்றது
வண்டோலம்புரிமாலைமொய்ம்பினன்
றிண்டோண்மீமிசைசெவ்வனுற்றதே.

இ — ள். விண் தோய் மேனி வியன் கயாசுரன் - ஆகாயத்தையளாவிய சரீரத்தையுடைய பெரிய கயாசுரன்,—ஓர் கையில் கொண்டு விடுத்த குன்றது - ஒருகையினலெடுத்தெறிந்த மலையானது,—வண்டு ஓலம் புரி மாலை மொய்ம்பினன் - வண்டுகளொலிக்கின்ற மாலையணிந்த புயங்களையுடைய வீரவாகுதேவரது,—திண் தோள் மீமிசை செவ்வண் உற்றது - இறுகியபுயங்களின்மேல் நன்றாகப்பட்டது. எ — று.

அது பகுதிப்பொருள்விகுதி. ஏகாரம் அசை. (உ௩)

24. வேழத்தோன்முகன்விட்டபூதரம்
பாழித்தோண்மிசைபட்டகாலையில்
வாழிப்பூதியின்வட்டுவிண்டெனப்
பூழித்தாகியுடைந்துபோயதே.

இ — ள். வேழம் தோல் முகன் விட்ட பூதரம் பாழி தோள்மிசை பட்ட காலையில் - கயமுகாசுரன் எடுத்தெறிந்த மலையானது (வீரவாகுதேவரது) பெரியதோளின்மேற்பட்டபோது,—பூதியின் வட்டு விண்டென - புழுதியுருண்டை யுடைந்தாற்போல,—உடைந்து பூழித்து ஆகி போனது - உடைந்து துகளாகப்போனது. எ — று.

வாழி, ஏ அசை. இன்னும் இத்துஞ் சாரியை. "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின்வழா" என்றாராகலின், வேழத் தோல் என்றார். பூதி விபூதியெனினு மொக்கும். (உ௪)

25. பொடியுங்காலெதிர்புக்கதீயவன்
மிடல்கொண்டுற்றிடுவீரனாற்றல்கண்
டுடலுந்திண்சினமுற்றோராயிரம்
படருங்குன்றுபறித்தன்மேயினன்.

இ — ள். பொடியும் கால் - (தானெறிந்தமலை) துகளாகப்போனபொழுது,—எதிர் புக்க தீயவன் - எதிரில்வந்தகொடியவனாகிய கயமுகன்,—மிடல் கொண்டு உற்றிடு வீரன் ஆற்றல் கண்டு - வலிமையோடும் நிற்கின்ற வீரவாகுதேவரது தைரியத்தைப் பார்த்து,—உடலும் திண் சினம் உற்று - பகைத்தற்கேதுவாகிய பெருங்கோபங்கொண்டு,—படரும் ஓராயிரம் குன்று பறித்தல் மேயினன் - விசாலித்த ஆயிரம்மலைகளையசைத்து எடுப்பானாயினன். எ — று. (உ௫)

26. பறியாநின்றபகட்டுமாமுக
னெறிவீழ்கின்றநெடுங்கைசுற்றினு
னிறைசேர்மேருவிருந்தகோடெலாங்
கறைசேர்காலவர்கட்டெழுந்தபோல்.

இ — ள். இறைசேர் மேரு இருந்த கோடு எலாம் கறைசேர் காலவர் கட்டு எழுந்த போல் - முதன்மைபொருந்திய மகாமேருமலையிலிருந்த சிகரங்களெல்லாவற்றையும் கரி

யவாயுக்கள் பிடுங்கி எழுந்தவாறுபோல,—பறியா நின்ற பகடு மாமுகன் நெறிவீழ்கின்ற நெடும் கை சுற்றினன் - (மலைகளைப்) பிடுங்கிநின்ற கயமுகன் வரிசையாகத் தூங்குகின்ற நெடிய துதிக்கைகளாற் சுற்றி (யவைகளைப்பிடித்தான்). எ — று. (உசு)

27. பத்தாநூறுபடுத்தவேலையுண்
மத்தாகுற்றனவாசுகித்தொகை
மொய்த்தார்வன்றலைமுன்புசூழ்ந்தெனக்
கைத்தாமால்வரைக்காட்சிமிக்கவே.

இ - ள். வேலையுள் படுத்த - சமுத்திரத்தினுள்ளே நிறுத்திய,—பத்து ஆம் நூறு மத்து ஆக உற்றன - மத்தாகவிருந்த ஆயிரம் (மந்தரமலைகளை),—வாசுகி தொகை - வாசுகிக்கூட்டங்கள்,—மொய்த்து ஆர் வன் தலை முன்பு சூழ்ந்தென - நெருங்கியிருக்கின்ற வலிய் தலைகளை முற்புறத்துவைத்துக்கொண்டு சூழ்ந்தாற்போல,—கைத்து ஆம் மால் வரை காட்சி மிக்கவே - கைகளின்கண்ணவாகிய பெரிய மலைகளின் றோற்றமிக்கன.

ஏகாரம் அசை. (உள)

28. துண்ணென்றேகயாசூரனூறுபத்
தெண்ணுந்தொல்கிரியாவுமெம்பிரான்
கண்ணின்றோன்விடுகாமர்காளைமேல்
விண்ணங்கான்றெனவார்த்துவீசினான்.

இ - ள். துண் என்று கயாசூரன் நூறு பத்து எண்ணும் தொல்கிரி யாவும் - விரைவாகக் கயமுகன் என்னும் வீரன் ஆயிரக்கணக்காகிய பெரிய மலைகளெல்லாவற்றையும்,— எம்பிரான் கண் நின்றோன் விடு காமர் காளைமேல் - சிவபெருமானது திருக்கண்களிற் றோன்றியருளிய கந்தஸ்வாமியனுப்பிய அழகியவீரவாகுதேவர்மீது,—விண் கான்றென ஆர்த்து வீசினான் - முகில் (இடியைக்) கக்கினாற்போல ஆரவாரித்து எறிந்தான். எ — று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. அம் சாரியை. (உஅ)

29. பாடார்பல்கிரிபற்றிவீசலு
மீடார்வெம்புலியாளிகேசரி
கோடார்தந்திகள்கோடிகோடிகள்
வீடாவார்ப்பொடுவிம்மிவீழ்பவே.

இ — ள். பாடு ஆர் பல்கிரி பற்றி வீசலும் - (கயமுகன்) பக்கத்திலிருக்கின்ற பல மலைகளைப்பிடுங்கி யெறிதலும்,—ஈடு ஆர் வெம்புலி யாளி கேசரி கோடு ஆர் தந்திகள் கோடி கோடிகள் - வலிமைபொருந்திய கொடிய புலிகள் யாளிகள் சிங்கங்கள் கோடு பொருந்திய யானைகள் கோடிகோடிக்கணக்காக,—வீடா ஆர்ப்பொடு விம்மி வீழ்ப - நீங்காதபேரொலியுடன் ஏங்கி விழுகின்றன. எ - று.

ஏகாரம் அசை. (உகூ)

30. கேடாய்மன்னர்கிடப்பவாங்கவர்
வீடாவாக்கமிசைந்துளாரெனப்
பாடாவண்டுபராரைமால்வரை
யூடார்தேன்களுகுப்பவுண்டவே.

இ — ள். மன்னர் கேடாய் கிடப்ப - அரசர்கள் (விதிவலியால்) வலியிழந்துகிடக்குஞ்சமயத்தில்,—அவர் வீடா ஆக்கம் மிசைந்துளார் என - அவர்களுடைய கெடாத

செல்வங்களையனுபவிக்கின்ற பகைவர்களைப்போல,—பரு அரை மால்வரை ஊடு ஆர் தேன்கள் உகுப்ப வண்டு பாடா உண்டவே - பருத்த அடிகளையுடைய பெரிய மலைகள் தம்மிடத்துள்ள தேன்களைச்சொரிய (அவைகளை) வண்டுகள் இசைபாடிக்கொண்டு உண்டன. எ - று.

ஆங்கு, ஏ அசை. (௩௦)

31. வேறாகும்பலவெற்பிடந்தொறு
மூறாநின்றுலவுற்றவான்புனன்
மாறாமற்கவிழ்வுற்றுவல்லைபே
ராறாகிக்கடலென்னவார்த்ததே.

இ — ள். வேறு ஆகும் பலவெற்பு இடம் தொறும் - வேறாகிய பல மலையிடங்க டோறும்,—ஊறா நின்று உலவுற்ற வான்புனல் - ஊறியிருந்து ஒழுகுகின்ற மிக்க அருவிநீரானது,—மாறாமல் கவிழ்வுற்று - நீங்காது கீழ்நோக்கி,—வல்லை பேர் ஆறு ஆகி - விரைந்து பெரிய நதியாகி,—கடல் என்ன ஆர்த்தது - சமுத்திரம்போல இரைந்தது.

ஏகாரம் அசை. (௩௧)

32. வரைவீழ்பூம்புனன்மாநதிக்கணே
யிரையாமாக்களியாவும்வீழ்தலாற்
றிரைசேர்வாரிகள்சென்றுசேணெழீஇ
விரைவால்வெய்யவன்வெப்பநீக்குமே.

இ — ள். வரை வீழ் பூம் புனல் மா நதிக்கண் - மலைகளினின்றும் விழுகின்ற மிக்க நீராகிய பெரியயாற்றிலே,—இரையா மாக்கள் யாவும் வீழ்தலால் - மிருகங்களெல்லாம் இரைந்துகொண்டு விழுதலால்,—திரை சேர் வாரிகள் - திரைபொருந்திய (அவ்வாற்றி லுள்ள) நீர்த்திவலைகள்,—விரைவால் சேண் எழீஇ சென்று - விரைவாகமேலெழுந்து சென்று,—வெய்யவன் வெப்பம் நீக்கும் - சூரியனதுவெப்பத்தை நீக்கும். எ - று.

ஏகாரங்கள் அசை. உம்மை முற்று. (௩௨)

33. பேசுஞ்சீரிவைபெற்றவெற்பெலா
மீசன்றூதுவன்முன்னரெய்தின
பாசஞ்சுற்றியபம்பரத்தொகை
வீசுங்காலைசுழன்றுவீழ்வபோல்.

இ — ள். பேசும் இவை சீர் பெற்ற வெற்பு எலாம் - மேற்சொல்லப்பட்ட இவ்வாறான சிறப்புக்களைப்பெற்ற மலைகளெல்லாம்,—பாசம் சுற்றிய பம்பரம் தொகை வீசும் காலை சுழன்று வீழ்வபோல்-கயிற்றாற்சுற்றிய பம்பரக்கூட்டங்கள் எறியும்போது சுழன்று விழுகின்ற தன்மையைப்போல,—ஈசன் தூதுவன் முன்னர் எய்தின - கந்தஸ்வாமியின் றூதுவராகிய வீரவாகுதேவருக்கு முன்வந்தன. எ — று. (௩௩)

வேறு.

34. சுடர்ப்பெருங்கதிராதவன்றுண்ணெனக்கரப்ப
வடுக்கலாயிரமின்னுவாரொருதலையாகக்
கடற்புகுங்கணமுகிலெனவருதலுங்கண்டான்
றடக்கைவேலுடையண்ணறன்முன்னினன்றமியோன்.

இ - ள். சுடர் பெரும் கதிர் ஆதவன் துண் என கரப்ப - ஒளிபொருந்திய பெரிய கிரணங்களையுடைய சூரியன் சீக்கிரம் மறையும்படி,—ஆயிரம் அடுக்கல் இன்னவாறு ஒருதலையாக - ஆயிரம் மலைகளும் இவ்விதம் ஓரிடமாக,—கடல் புகும் கண முகிலென வருதலும் - கடனீரையுண்ணச்செல்லுங் கூட்டமாகிய மேகங்களைப்போல வருதலும்,—தமியோன் கண்டான் - தனித்துநின்ற வீரவாகுதேவர் (அவைகளைப்) பார்த்து,—தடம் கை வேலுடை அண்ணல் தாள் முன்னினன் - பெருமையாகிய திருக்கரத்திலே வேலாயுதத்தைத்தரித்த கந்தஸ்வாமியினுடைய திருவடிகளைத் தியானித்துநின்றார். எ - று. ()

35\. நிற்குமெல்லையின்வெங்கொலைத்தொழின்முறைநிரம்பக்
கிற்கும்வெய்யவன்விடுத்திடுமாயிரங்கிரியும்
பற்கண்மால்வரைகாப்பவன்றன்மிசைப்பழிதீ
ரற்கண்மேல்வருமெழிலிகளெனவடைந்தனவே.

இ - ள். நிற்கும் எல்லையின் - (அங்ஙனம் வீரவாகுதேவர் சுப்பிரமணியப்பெருமானது திருவடிகளைத்தியானித்துக்கொண்டு) நிற்குஞ் சமயத்தில்,—வெம் கொலை தொழில் முறை நிரம்ப கிற்கும் வெய்யவன் - கொடிய கொலைத்தொழிலை நிரம்பச்செய்கின்றவனாகிய கயமுகன்,—விடுத்திடும் ஆயிரம் கிரியும் - விட்ட ஆயிர மலைகளும்,—பற்கண் மால்வரை காப்பவன் தன்மிசை - சிவபெருமான் வீற்றிருக்கின்ற பெருமையாகிய திருக்கைலாசமலையைக் காக்கின்றவராகிய வீரவாகுதேவர்மீது,—அற்கன்மேல் வரும் எழிலிகள் என அடைந்தன - சூரியன்மேல்வருகின்ற மேகங்களைப்போலவந்தன. எ—று.

தன் சாரியை. ஏகாரம் அசை. உம்மை முற்று. (௩௫)

வே று.

36\. மறுவரையாததிங்கள்வார்சடைக்கடவுணல்க
வறுவரையன்னையாப்பெற்றோனருளினாலையனிற்ப
வுறுவரைபத்துநூறுமொருங்குமாய்வுற்றுமற்றோர்
சிறுவரைதன்னில்யாவுஞ்சிதறியேயுடைந்தவன்றே.

இ - ள். மறு வரையாத திங்கள் வார்சடை கடவுள் நல்க-களங்கத்தைக்கொள்ளாத சந்திரனையணிந்த நீண்ட சடையையுடையவராகிய சிவபெருமான் தோற்றுவிக்க,—அறு வரை அன்னையா பெற்றோன் அருளினால் ஐயன்நிற்ப - (கார்த்திகைப்பெண்கள்) ஆறுபேரையும் மாதாக்களாகப்பெற்றுக்கொண்ட கந்தஸ்வாமியினது திருவருளினால் வீரவாகுதேவர் நின்றபொழுது,—உறு பத்து நூறு வரையும் - (நேராக) வந்த ஆயிரம் மலைகளும்,—ஒருங்கு மாய்வுற்று - ஒருசேர அழிந்து,—ஓர் சிறு வரை தன்னில் - ஒருகணப்பொழுதில்,—யாவும் சிதறியே உடைந்த - அவைகளெல்லாஞ் சிதறியுடைந்தன. எ - று.

மற்று, ஏ, அன்று, ஏ அசை. தன் சாரியை. உம்மைகள் முற்று. அறுவரை என்புழி முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. உறுவரை பெரியமலையுமாம். (௩௬)

37\. தெளிதருவீரன்றன்மேற்சென்றிடுமடுக்கல்யாவும்
விளிவொடுமாய்ந்தவன்றிவிளைத்திலவேறங்கொன்றும்
வளநனிசுருங்கிவானம்வறந்தநாள்வெளிற்றுக்கொண்மூக்
கிளர்வனபயனின்றாகிக்கேடுபட்டுடையுமாபோல்.

இ - ள். வளம் நனி சுருங்கி வானம் வறந்த நாள் - பலவளங்களும் மிகக்குறைதற்கேதுவாகிய மழையில்லாதகாலத்தில்,—வெளிறு கொண்மூ கிளர்வன - வெண்மேகங்கள் கிளர்ச்சிகொண்டு,—பயன் இன்றாகி கேடு பட்டு உடையுமாபோல் - பிரயோசனமில்லாமற் கெட்டழியுந் தன்மையைப்போல,—தெளிதரு வீரன் தன்மேல் சென்றிடும்

அடுக்கல் யாவும் - (கந்தஸ்வாமியைத்) தியானஞ்செய்கின்ற வீரவாகுதேவர்மீது வந்து பட்ட மலைகளெல்லாம்,—விளிவொடு மாய்ந்த அன்றி - சிதறி முற்றுமழிந்தனவேயல்லாமல்,—வேறு ஒன்றும் அங்கு விளைத்தில - அங்கு வேறொரு இடையூறுஞ் செய்தில.

தன் சாரியை. உம்மை முன்னையது முற்று; பின்னையது இழிவுசிறப்பு. (௩எ)

38. மட்பகைவினைஞராமேனோர்வனைதருகலங்கண்முற்றுந்
திட்பமொடமர்ந்தகற்றாண்சேர்ந்துழிச்சிதறுமாபோற்
கொட்புறுபுழைக்கைவெய்யோன்குறித்தெறிபிறங்கல்யாவும்
மொட்பமதடைந்தவீரன்மிசைபடவுடைந்தவன்றே.

இ — ள். மண் பகை வினைஞர் ஆனோர் வனைதரு கலங்கள் முற்றும் - குயவர்கள் செய்த பாண்டங்களெல்லாம்,—திட்பமொடு அமர்ந்த கல் தூண் சேர்ந்துழி - வலிமையோடு மிருக்கின்ற கற்றூணிற்பட்டபோது,—சிதறுமாபோல் - உடைந்து சிதறுந்தன்மையைப்போல,—கொட்பு உறு புழைக்கை வெய்யோன் - அசைகின்ற துவாரம்பொருந்திய கைகளையுடைய கொடியவனாகிய கயமுகன்,—குறித்து எறி பிறங்கல் யாவும் - இலக்குவைத்தெறிந்த மலைகண் முழுவதும்,—ஒட்பம் அது அடைந்த வீரன் மிசை பட உடைந்த - பேரறிவுடையராகிய வீரவாகுதேவர்மீது படுதலால் உடைந்தன. எ - று.

அன்று, ஏ, அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மைகள் முற்று. (௩அ)

39. விறல்கெழுபுயத்தினான்மேல்விடுத்திடுகிரிகள்யாவும்
வறிதுபட்டிடலுங்காணுமால்கரிமுகத்தனின்று
னறநெறியொருவிமொய்ம்பாலாற்றியவெறுக்கையாவும்
பிறர்கொளவுகுத்தியாதுமூதியம்பெறுகிலார்போல்.

இ — ள். அறம் நெறி ஒருவி மொய்ம்பால் ஆற்றிய வெறுக்கையாவும் - தருமமுறையைவிடுத்து வலிமையால் சம்பாதித்த திரவியங்களெல்லாம்,—பிறர் கொள உகுத்து யாதும் ஊதியம் பெறுகிலார் போல் - அயலார்கொள்ளும்படியிறைத்து (அதனால்) யாதொரு இலாபத்தையுமடையாதவர்களைப்போல,—விறல் கெழு புயத்தினான் மேல் விடுத்திடு கிரிகள் யாவும் - வீரவாகுதேவர்மீது விடுத்த மலைகளெல்லாம் (அவருக்கு யாதோரிடையூறுஞ்செய்யாது),—வறிது பட்டிடலும் - வீணாக அழிந்து போக,—மால் கரி முகத்தன் காணா நின்றான் - (அதனை) மயக்கம்பொருந்திய கயமுகன் பார்த்து நின்றான். எ - று.

உம்மைகள் முற்று. (௩௯)

40. கண்டுவிம்மிதத்தனாகிக்கயாசுரன்முனிந்தோர்தண்டந்
திண்டிறன்மொய்ம்பன்றன்மேற்செலுத்தலுமதனைக்காணா
வொண்டழல்புரையுமொள்வாளுறைகழித்தொல்லைவீழத்
துண்டமதாக்கியன்னோனெதிருறத்துன்னலுற்றான்.

இ — ள். கயாசுரன் கண்டு விம்மிதத்தன் ஆகி - கயமுகன் (அதனைப்) பார்த்து ஆச்சரியமுடையவனாய்,—முனிந்து - கோபித்து,—ஓர் தண்டம் திண் திறல் மொய்ம்பன் தன்மேல் செலுத்தலும் - ஒருதண்டத்தை மிக்கவலிமையையுடைய வீரவாகுதேவர் மீது எறிதலும்,—அதனை காணா - (வீரவாகுதேவர்) அதனைப்பார்த்து,—ஒள் தழல் புரையும் ஒள் வாள் உறை கழித்து - விளங்குகின்ற அக்கினியையொத்த ஒளிபொருந்திய வாளை உறையினின்றும் எடுத்து,—ஒல்லை வீழ துண்டம் அது ஆக்கி - சீக்கிரத்தில் விழும்படி துண்டாகவெட்டியெறிந்து,—அன்னோன் எதிருற துன்னல் உற்றான் - அக்கயமுகனுக்கெதிராகப்போயினார். எ - று.

தன் சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. (௪0)

41. மத்தவெங்கயமாந்தீயோன்வாகையந்தடந்தோளண்ணன்
மெய்த்தனியாற்றல்காணுவிழுத்தகுபனைக்கையோச்சிப்
பத்துநூறானசாலப்பழுமரம்பறியாவேந்தி
யுய்த்திடவொருதன்வாளாலொய்யெனச்சிந்தியார்த்தான்.

இ — ள். மத்தம் வெம் கயம் ஆம் தீயோன் - மதம் பொருந்திய வெவ்விய கயமுகாசுரனாகிய கொடியவன்,—வாகை அம் தடம் தோள் அண்ணல் தனி மெய் ஆற்றல் காணா - வெற்றி பொருந்திய அழகிய பருத்த புயங்களை யுடைய வீரவாகுதேவரது ஒப்பற்ற சரீரபலத்தைக் கண்டு,—விழு தகு பனை கை ஓச்சி - சிறப்புமிக்க பனைபோன்ற கைகளை நீட்டி,—பத்து நூறு ஆன பழு சாலம் மரம் பறியா ஏந்தி - ஆயிரக்கணக்கான பெரிய பருத்தசாலமரங்களைப்பிடுங்கியெடுத்து,—உய்த்திட - எறிய,—ஒரு தன் வாளால் ஒய்யென சிந்தி ஆர்த்தான் - (வீரவாகுதேவர்) தமது ஒருவாளினால் விரைவாக (அவைகளை) வெட்டி யாரவாரித்தார். எ — று. (சக)

42. காயெரிகலுழும்வெங்கட்கயாசுரன்விடுவான்பின்னுஞ்
சேயுயர்வரைபல்வேறுதெரிந்தனன்பறிக்குமெல்லை
நாயகன்றூதன்காணுநாந்தகங்கொடுபோயன்னோ
னாயிரமாகியுள்ளபுழைக்கையுமறுத்தானன்றே.

இ — ள். காய் எரி கலுழும் வெம் கண் கயாசுரன் - சுடுகின்ற தீப்பொறிபறக்குங் கொடிய கண்களையுடைய கயமுகாசுரன்,—பின்னும் விடுவான் சேய் உயர் பல் வேறு வரை தெரிந்தனன் பறிக்கும் எல்லை - பின்னும் (அவர்மேல்) எறியும்பொருட்டு மிகவும் உயர்ந்த பலவேறாகிய மலைகளைப் பார்த்துப் பிடுங்கும்பொழுது,—நாயகன் தூதன் காணா - கந்தஸ்வாமியினது தூதராகிய வீரவாகுதேவர்கண்டு,—நாந்தகம் கொடுபோய் - வாளைக்கொண்டு சென்று,—அன்னோன் ஆயிரம் ஆகி உள்ள புழை கையும் அறுத்தான் - அவனது ஆயிரக்கணக்காயுள்ள துதிக்கைகளையும் வெட்டினார். எ — று.

அன்று, ஏ அசை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையது முற்று. (சஉ)

43. அறுத்தலுங்கவன்றுதீயோனாயிரத்திரட்டிகையுஞ்
செறித்திவன்றன்னைப்பற்றித்திற்றியாக்கொள்வனென்றே
குறித்தனன்வளைப்பவாளாற்கொம்மெனவாற்றல்வீரன்
றறித்தனனொருசார்வந்தவாயிரந்தடக்கைமுற்றும்.

இ — ள். அறுத்தலும் - (வீரவாகுதேவர் அவ்வாறு அக்கயமுகனது துதிக்கைகளை) வெட்டுதலும்,—தீயோன் கவன்று - கயமுகன் மனக்கலக்க முடையவனாய்,—ஆயிரத்து இரட்டி கையும் செறித்து - இரண்டாயிரங்கைகளையும் ஒருங்குசேர்த்து,—இவன் தன்னை திற்றியா கொள்வன் என்று குறித்தனன் வளைப்ப-இவனைப்(பிடித்து) உணவாகக் கொள்வேனென்று நினைத்து வளைத்துக்கொள்ள,—ஆற்றல் வீரன் - தைரியசாலியாகிய வீரவாகுதேவர்,—ஒரு சார் வந்த ஆயிரம் தடம் கை முற்றும் வாளால் கொம்மென தறித்தனன் - ஒருபுறத்தில் வந்த பெரிய ஆயிரங்கைகளையும் வாளினால் விரைந்து வெட்டினார். எ - று.

தன் சாரியை. ஏகாரம் அசை. உம்மைகள் முற்று. (சங)

44. செற்றமால்கரியின்பேரோன்றிண்கையாயிரமும்வீட்ட
மற்றையாயிரங்கையாலும்வாகையஞ்செம்மன்மார்பி
னெற்றினனெற்றுமெல்லையெல்லையில்வெகுளியெய்தி
யற்றுவீழ்ந்திடவேவாளாலவையெலாமடுதல்செய்தான்.

இ — ள். செற்றம் மால் கரியின் பேரோன் திண் கை ஆயிரமும் வீட்ட - கோபம் பொருந்திய கயமுகாசுரனது வலிய ஆயிரங்கைகளையும் வெட்ட,—மற்றை ஆயிரம் கையாலும் - மற்றொருபுறத்திலுள்ள ஆயிரங்கைகளாலும்,—வாகை அம் செம்மல் மார்பில் ஏற்றினன் - வீரவாகுதேவரது மார்பில் அடித்தான்,—எற்றும் எல்லை - (அவ்வாறு) அடிக்கும்பொழுது,—எல்லை இல் வெகுளி எய்தி - அளவிறந்தகோபங்கொண்டு,—அவை எலாம் அற்று வீழ்ந்திடவே வாளால் அடுதல் செய்தான் - அக்கைகளெல்லாவற்றையும் அறுந்து விழும்படி வாளினால் வெட்டினர். எ — று.

ஏகாரம் அசை. உம்மைகள் முற்று. (சச)

45. கொலைகெழுதறுகணுல்வாய்க்குஞ்சரமுகத்துவெய்யோ
னிலைகெழுபாணிமுற்றுநீங்கியீரைந்துநூற்றுத்
தலைகெழுதன்மைத்தாகித்தண்சினைபலவுமல்கி
யலைகெழுவீழ்போயுற்றவாலமேபோலநின்றான்.

இ — ள். கொலை கெழு தறுகண் நால்வாய் குஞ்சரம் முகத்து வெய்யோன்-கொலைத்தொழில் பொருந்திய தறுகண்மையையும் நான்ற வாயையுமுடைய கயமுகாசுரனாகிய கொடியவன்,—நிலை கெழு பாணி முற்றும் நீங்கி - தன் சரீரத்திற் பொருந்திய கைகள் முழுவதும் நீங்கி,—ஈர் ஐந்து நூறு தலை கெழு தன்மைத்து ஆகி - ஆயிரந்தலைகளோடு கூடிய நிலைமையுடையவனாய்,—தண் சினை பலவும் மல்கி - குளிர்ச்சிபொருந்திய அனேகங்கிளைகளால் நிறையப்பெற்று,—அலை கெழு வீழ்போயுற்ற ஆலமே போல நின்றான் - அசைகின்ற விழுதுகள் அறுபட்டுநின்ற ஆலமரத்தைப்போல நின்றான்.

அத்து இரண்டும் சாரியை. ஏகாரம் அசை. உம்மைகள் முற்று. (சரு)

46. பாணிகளிழந்துநின்றபகட்டுடைவதனத்தீயோ
னாணினனிவனையட்டுநம்முயிர்துறத்துமென்னு
மாணறுமனத்திற்கொண்டுமற்றொழின்முன்னித்தோளாற்
றாணுவின்கயிலைகாப்போன்றடம்புயந்தாக்கியார்த்தான்.

இ — ள். பாணிகள் இழந்து நின்ற பகடு வதனம் உடை தீயோன் - கைகளறுபட்டு நின்ற கொடியவனாகிய கயமுகன்,—நாணினன் இவனை அட்டு நம் உயிர் துறத்தும் என்னு - வெட்கமுற்று (நம்மை யிவ்வாறுசெய்த) இவனைக்கொன்று நமது உயிரையும் விடுவோமென்று,—மாண் அறு மனத்தில் கொண்டு - மாட்சிமையற்ற தனது மனசில் நினைத்துக்கொண்டு,—மல் தொழில் முன்னி - மல்யுத்தஞ்செய்யக்கருதி,—தோளால் தாணுவின் கயிலை காப்போன் தடம் புயம் தாக்கி ஆர்த்தான் - புயங்களால் சிவபெருமானது திருக்கைலாசமலையைக் காப்பவராகிய வீரவாகுதேவருடைய பெரிய புயங்களின் மீது மோதி யாரவாரித்தான். எ — று.

நம்முயிர் என்புழி இறந்ததுதழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. (சசு)

47. ஐயனதொற்றன்காணுவாற்றலின்றாகிமுற்றுங்
கையினையிழந்துநின்றான்கடுங்கதிர்வாளின்வெம்போர்
செய்யலனினியானென்னுச்சிந்தைசெய்துறைவாளோச்சி
யொய்யெனவவன்றன்மார்பினுதைத்தனனொருதன்றாளால்.

இ — ள். ஐயனது ஒற்றன் காணு - குமாரசுவாமியினது தூதுவராகிய வீரவாகுதேவர் (அக்கயமுகன் தோள்களான்மோதிப் போர்செய்வதைப்) பார்த்து,—ஆற்றல் இன்று ஆகி - (இவன்) வலியில்லாதவனாய்,—கையினை முற்றும் இழந்து நின்றான் - கைகளெல்லாவற்றையும் இழந்துநின்றான் (ஆதலால் இவனோடு),—கடும் கதிர் வெம் வாளின்போர் இனி யான் செய்யலன் என்னு-மிக்க ஒளிபொருந்திய கொடியவாட்போரை இனி யான்

செய்யேனென்று,—சிந்தைசெய்து - நினைத்து,—வாள் உறை ஓச்சி - வாளை உறையிலிட்டு,—ஒய்யென அவன் தன் மார்பில் தன் தாளால் உதைத்தனன் - விரைந்து அவன் மார்பின்மீது தமது ஒருகாலினால் உதைத்தார். எ — று.

தன் சாரியை. உம்மை முற்று. (சஎ)

48. உதைத்திடுகின்றகாலையொல்லெனவரற்றிவீழ்ந்து
மதத்தினையுறுகபோலமால்கரிமுகத்துவெய்யோன்
பதைத்தனனாவிசிந்திப்பட்டனன்பகிர்ந்தமார்பிற்
குதித்திடுசோரிநீத்தங்குரைகடற்போயதன்றே.

இ — ள். உதைத்திடுகின்ற காலை - (வீரவாகுதேவர் அவ்வாறு) உதைக்கின்ற பொழுது,—மதத்தினை உறு கபோலம் மால் கரி முகத்து வெய்யோன் ஒல்லென அரற்றி வீழ்ந்து - மதநீர்பொருந்திய கபோலத்தையும் பெரிய யானைமுகத்தையுமுடைய கொடிய வசுரன் ஒல்லென்றிரைந்துகொண்டு (கீழே) விழுந்து,—பதைத்தனன் ஆவி சிந்தி பட்டனன் - துடித்தவனாகி உயிரைவிட்டிறந்தான்,—பகிர்ந்த மார்பில் குதித்திடு சோரி நீத்தம் குரைகடல் போயது - பிளந்த மார்பினின்றும் எழுகின்ற இரத்தவெள்ளம் ஒலிக்கின்ற கடலிற்சென்றது. எ — று.

அன்று, ஏ அசை. அத்து சாரியை. (சஅ)

49. அவ்வியல்கண்டுபல்லோரவுணர்கணமரேயீண்டுத்
தெவ்வியன்முறையினின்றுசெருவினையிழைப்பார்போலு
மிவ்விவராடற்கேதுவென்கொலோவறிதுமென்றே
கவ்வையினெறிகடோறுங்காண்பதுகருதிப்போந்தார்.

இ — ள். பல்லோர் அவுணர்கள் அ இயல் கண்டு - பல அவுணர்கள் அவ்வாறு இரத்தமோடுவதைப்பார்த்து,—நமரே ஈண்டு தெவ் இயல் முறையின் நின்று செருவினை இழைப்பார்போலும் - நம்மவர்களே யிவ்விடத்துப் பகைவருக்குரிய முறைமையோடும் நின்று போரைச்செய்வார்போலும்,—இவ்விவர் ஆடற்கு ஏது என்கொலோ அறிதும் என்று - இவர்கள் போர்செய்தற்குக் காரணம் என்னையோ அறிவேம் என்று,—கவ்வையின் நெறிகள் தோறும் காண்பது கருதி போந்தார் - துன்பத்தோடு பலவழியாக (இப்போரைப்) பார்க்கும்பொருட்டு நினைத்துவந்தார்கள். எ — று.

ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையதும் கொல்லும் அசை. ஓகாரம் ஐயம். இவ்விவர் இவர் என ஒருசொன்னீர்மைத்து; இவ்வாடல் என இயைப்பினுமமையும். ()

50. சென்றிடல்வீரன்காணாத்தீயரென்செய்கைநோக்கிற்
கன்றிவெஞ்சினமேற்கொண்டுகடுஞ்சமரிழைப்பர்யானு
நின்றமர்புரிதல்வேண்டுநிலைமையீதென்றாலம்மா
வின்றொடுமுடியுங்கொல்லோவியற்றினுமிவர்போரென்றான்.

இ — ள். சென்றிடல் வீரன் காணா - (அவர்கள்) வருவதை வீரவாகுதேவர்பார்த்து,—தீயர் என்செய்கை நோக்கில் - கொடியவர்களாகிய அசுரர்கள் எனதுசெய்கையைக் காண்பார்களாயின்,—கன்றி வெம் சினம் மேல் கொண்டு - அகங்கரித்து மிகுந்த கோபத்தை மேற்கொண்டு,—கடும் சமர் இழைப்பர் - கொடியபோரைச் செய்வார்கள்,—யானும் நின்று, அமர் புரிதல் வேண்டும் - நானும் தங்கி (இவர்களோடு) போர் செய்ய வேண்டும்,—நிலைமை ஈது ஆயின் - நிலைமை இவ்வாறாயின்,—இயற்றினும் இவர் போர் இன்றொடு முடியும் கொல்லோ என்றான் - (யான் போர்) செய்தாலும் இவர்களதுபோர் இன்றோடு முடியுமா (முடியாது) என்றார். எ — று.

அம்மாவும், கொல்லும் அசை. ஒகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது இறந்த துதழீஇயவெச்சம்; பின்னையது உயர்வு சிறப்பு. (ருo)

51. ஆரணந்தனக்குங்காணு வாதியங்கடவுள்சொற்ற
பேரருண்மறந்தேயின்னேபீடிலார்தம்மோடேற்றுப்
போரினையிழைத்துநிற்றல்புல்லிதுபுலமைத்தன்றூற்
சூருறைமூதூர்தன்னிற்றுன்னுவன்கடிதினென்றான்.

இ — ள். ஆரணம் தனக்கும் காணு ஆதி அம் கடவுள் சொற்ற - வேதங்களாலும் (தமது சொரூபலக்ஷணத்தை) யறியக்கூடாத முழுமுதற் கடவுளாகிய கந்தஸ்வாமிசொல் லியருளிய,—பேர் அருள் மறந்து - மேம்பட்ட அருட்டன்மையைமறந்து,—இன்னே பீடு இலார் தம்மோடு ஏற்று போரினை இழைத்து நிற்றல் புல்லிது - இப்பொழுது பெருமை யில்லாதவர்களாகிய அசுரர்களோடெதிர்த்துப் போரைச்செய்துநிற்றல் இழிவேயாகும் (ஆதலால்),—புலமைத்து அன்று - அது புத்தியன்று,—சூர் உறை மூதூர் தன்னில் - சூரபன்மனிருக்கின்ற பெரிய நகரத்திநுள்ளே,—கடிதில் துன்னுவன் என்றான் - சீக் கிரம் போவேனென்று கருதினார்.

தன் இரண்டு, அ, தம் அம், அத்து சாரியை. ஆலும், ஏகாரம் முன்னையதும் அசை; பின்னை ஏகாரம் தேற்றம். உம்மை உயர்வுசிறப்பு. (ருக)

52. எப்பெருவாயில்சாரவேகினுமங்கணெல்லாங்
கைப்படையவுணர்வெள்ளங்காவல்கொண்டுற்றவாற்றூற்
றப்பினன்சேறலொல்லாதமியனிப்படிவத்தோடு
மெய்ப்பதியிதற்குச்செல்வன்வேற்றுருவெய்தியென்றான்.

இ — ள். எ பெரு வாயில் சார ஏகினும் - எந்தப்பெரிய வாய்தல் வழியாகப்போத ற்குச்சென்றாலும்,—அங்கண் எல்லாம்-அவ்விடங்களிலெல்லாம்,—படை கை அவுணர் வெள்ளம் - ஆயுதங்களைத்தாங்கிய கைகளையுடைய அசுரசேனுவெள்ளங்கள்,—காவல் கொண்டு உற்ற ஆற்றால் - காவல் பூண்டு நிற்கின்ற தன்மையினால்,—தமியன் இ படிவ த்தோடு தப்பினன் சேறல் ஒல்லாது - தனித்தவனாகியயான் இந்தவடிவத்தோடு (ஒருவர் கண்ணினும்) அகப்படாமற் செல்லுதற்கு முடியாது,—வேறு உரு எய்தி மெய் இதுப திக்கு செல்வன் என்றான் - வேற்று வடிவங்கொண்டு மெய்ம்மையாகிய இந்த நகரத்தி னுட்போவேன் என்று கருதினார். எ — று.

உம்மை உயர்வு சிறப்பு. நூற்றெட்டு யுகம்வரை அழியாதிருத்தலின் மெய்ப்பதி யென்றார்; அமரரென்றாற்போல. (ருஉ)

53. கூற்றினையுறழும்வைவேற்குமரவேளருளாலீண்டோர்
வேற்றுருவதனைக்கொண்டுவெய்யராமவுணவீரர்
போற்றுமிக்குணபால்வாய்தல்பொள்ளெனக்கடந்துபின்னர்
மாற்றலனூரிற்செல்வனென்றனன்வாகைமொய்ம்பன்.

இ — ள். வாகை மொய்ம்பன் - வீரவாகுதேவர்,—கூற்றினை உறழும் வை வேல் குமரவேள் அருளால் - யமனைப்போலுங் கொலைத்தொழிலையுடைய கூரிய வேலாயுதத் தைத் தரித்த சுப்பிரமணியப்பெருமானது திருவருளினால்,—ஈண்டு ஓர் வேறு உரு அதனை கொண்டு - இவ்விடத்து ஓர் வேற்றுவடிவத்தையெடுத்து,—வெய்யர் ஆம் அவு ணர் வீரர் போற்றும் இ குணபால் வாய்தல் பொள்ளென கடந்து - கொடியவர்களாகிய அசுரவீரர்களாற் காக்கப்படுகின்ற இக்கிழக்குவாயிலை விரைவாகக்கடந்து,—பின்னர் மாற்றலன் ஊரிற் செல்வன் என்றனன் - பின்பு பகைவனாகிய சூரபன்மனது நகரத்திற் போவேனென்றார். எ - று.

உரு அதனை என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி; அன் சாரியை. (ருங)

54. நொய்யதோரணுவினுற்றநுணுகியுமேன்மைதன்னிற்
பொய்யில்சீர்பெருமைத்தாயும்பூரணமாகிவைகுஞ்
செய்யதோர்குமரன்பொற்ருள்சிந்தைசெய்தன்பிற்போற்றி
யொய்யெனவருளினீராலோரணுவுருவங்கொண்டான்.

இ - ள். நொய்யது ஓர் அணுவின் ஆற்ற நுணுகியும் - நுட்பமானவோர் அணுவி னும் பார்க்க மிகநுட்பமாகியும்,—மேன்மை தன்னில் பொய் இல் சீர் பெருமைத்து ஆயும் - பெரியபொருளினும்பார்க்க உண்மையாகிய சிறந்தபெரிய பொருளாகியும்,— பூரணம் ஆகி வைகும் - பரிபூரணமாகியுமிருக்கின்ற,—செய்யது ஓர் குமரன் பொன் தாள் சிந்தை செய்து - சிவந்த திருமேனியையுடையவராகிய கந்தஸ்வாமியினது பொன் போன்ற பாதங்களைத் தியானித்து,—அன்பில் போற்றி - அன்போடு துதித்து,— அருளின் நீரால் - (அக்கடவுளது) திருவருட்டன்மையினுல்,—ஒய்யென ஓர் அணு உருவம் கொண்டான் - விரைவாக ஓர் அணுப்போன்றவடிவத்தை யெடுத்தார். எ - று.

ஓர் அசை. தன் சாரியை. உம்மைகள் எண். 'அண்டங்களெல்லா மணுவாக வணுக்களெ ல்லாமண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினும்' என்னுங் கருத்துப்பற்றியே, 'நொய்ய தோரணுவினுற்றநுணுகியுமேன்மைதன்னிற்—பொய்யில்சீர்பெருமைத்தாயு' மென்ருர்.

55. நுணுகுதன்னுணர்வேபோலநோக்கருந்திறத்தாற்ருனோ
ரணுவுருக்கொண்டுவீரனடுகளமதனைநீங்கி
யிணையறுகுமாற்போற்றியெழுந்துவிண்படர்ந்துமூதூர்க்
குணதிசைவாய்தனின்றகோபுரமிசைக்கணுற்ருன்.

இ - ள். வீரன் - வீரவாகுதேவர்,—தன் நுணுகு உணர்வே போல - தமது நுணு கிய அறிவைப்போல,—நோக்க அரும் திறத்தால் - (பிறரால்) பார்க்கப்படாத தன்மை யாக,—தான் ஓர் அணு உரு கொண்டு - தாம் ஓர் அணுவடிவத்தையெடுத்து,—அது அடு களத்தை நீங்கி - அப்போர்க்களத்தை நீங்கி,—இணை அறு குமரன் போற்றி - ஒப் பில்லாதவராகிய குமாரக்கடவுளைத் துதித்து,—எழுந்து விண் படர்ந்து - மேலாகவெழு ந்து ஆகாயவழியாகச்சென்று,—மூதூர் குணதிசை வாய்தல் நின்ற கோபுரமிசைக்கண் உற்ருன் - பெரிய மகேந்திரபுரியினது கிழக்குத்திக்குவாயிலில் நின்ற கோபுரத்தின் மேல்வந்து இருந்தார். எ - று.

அடுகளமதனை என்புழி அது சுட்டு. அன் சாரியை. ஏகாரம் தேற்றம். (ருரு)

கயமுகன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௩எ.

---

# நகர்புகுபடலம்.

1. அண்டம்யாவையுமெழுவகையுயிர்த்தொகையனைத்தும்
பிண்டமாம்பொருண்முழுவதுநல்கியெம்பெருமான்
பண்டுபாரித்ததிறமெனமகேந்திரப்பதியின்
மண்டுதொல்வளநோக்கியேயின்னனமதிப்பான்.

இ — ள். எம் பெருமான் - எமதுசிவபெருமான்,—அண்டம் யாவையும் - அண்டங் களெல்லாவற்றையும்,—எழுவகை உயிர் தொகை அனைத்தும் - (தேவர், மக்கள், வில ங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்றுசொல்லப்படுகின்ற) எழுவகைப்(பிறப் பினையுடைய)உயிர்க்கூட்டங்களனைத்தையும்,—பிண்டம் ஆம் பொருள் முழுவதும் நல்கி-

(மற்றுமுள்ள) பிண்டமாகிய பொருள்கண்முழுவதையும் படைத்து,—பண்டு பாரித்த திறமென - முற்காலத்திலே பரப்பிவைத்த தன்மையைப்போல,—மகேந்திரம் பதியில் மண்டுதொல்வளம் நோக்கியே இன்னன மதிப்பான் - வீரமகேந்திரபுரத்தில் நிறைந் துள்ள மிகுந்தவளங்களை (வீரவாகுதேவர்) பார்த்து இவ்விதமாக நினைப்பாராயினர்.எ-று.

ஏ ஏகாரம் அசை. உம்மை முற்று. (க)

2. எந்தைமுன்னரேசூரபன்மாவினுக்கீந்த
முந்துமண்டங்களலமருமுவரிகண்முழுதும்
வந்துமொய்த்தனபோலுமால்வரைபுரைகாட்சிக்
கந்துபற்றியேயார்த்திடுமெல்லைதீர்கரிகள்.

இ — ள். மால் வரை புரை காட்சி கந்து பற்றியே ஆர்த்திடும் எல்லை தீர் கரிகள் - பெரிய மலையையொத்தவடிவினையுடைய, தறியிற்கட்டப்பட்டு நின்று பிளிற்றொலிசெய் கின்ற அளவில்லாத யானைகள்,—எந்தை முன்னரே சூரபன்மாவினுக்கு ஈந்த முந்தும் அண்டங்கள் அலமரும் உவரிகள் முழுதும் வந்து மொய்த்தன போலும் - எமதுபிதாவா கிய சிவபெருமான் முன்னுளிற் சூரபன்மனுக்குக் கொடுத்தருளிய முதன்மைபொருந் திய ஆயிரத்தெட்டு அண்டங்களிலுமுள்ள சுழலுகின்ற (அலைகளையுடைய) கடல்கள் முழுவதும்வந்து நெருங்கிநின்றாற்போலும். எ - று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை முற்று. (உ)

3. இயலுமைம்பெருநிறத்தினண்டங்களினிருந்த
புயலினம்பலவோர்வழித்தொக்கனபொருவ
மயிலிருஞ்சரமுயலொடுயூகமற்றொழிலைப்
பயில்பரித்தொகையளப்பிலவயின்றொறும்பரவும்.

இ - ள். இயலும் ஐம் பெரு நிறத்தின் அண்டங்களின் இருந்த பல புயல் இனம் ஓர் வழி தொக்கன பொருவ - (பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, பசுமை என்கின்ற) ஐந்து பெரிய நிறங்களை யுடையனவாகிய—அண்டங்களிலே யிருந்த பல முகிற்கூட்டங்கள் ஓரிடத்தில் நெருங்கிநிற்றலைப்போல,—மயில் இரும் சரம் முய லொடு யூகம் மல் தொழிலை பயில் அளப்பில பரி தொகை வயின் தொறும் பரவும் - மயூரகதி பெரிய சரகதி சசகதி வானரகதி மல்லகதி என்னும் ஐங்கதிகளைப்பழகியுள்ள அளவிறந்த குதிரைக் கூட்டங்கள் இடங்கடோறும் பரந்து நிற்கின்றன. எ - று. (ங)

4. அண்டமாயிரத்தெட்டினுண்மேதகுமடன்மாத்
தண்டமால்கரியாயினதடம்பெருந்தேர்க
ளெண்டரும்பொருளியாவுமீண்டிருந்தனவிவற்றைக்
கண்டுதேர்ந்தனரல்லரோவகிலமுங்கண்டோர்.

இ — ள். ஆயிரத்து எட்டு அண்டத்தினுள் - ஆயிரத்தெட்டு அண்டங்களினு முள் ளனவாகிய,—மேதகும் அடல் மா தண்டம் மால் கரி தடம் பெரும் தேர்கள் எண் தரும் பொருள் ஆயின யாவும் ஈண்டு இருந்தன - மேன்மைபொருந்திய வலிய குதிரைகளும் காலாட்களும் பெரிய யானைகளும் விசாலித்த பெரிய தேர்களும் மதிக்கப்படும்பொரு ளும் ஆகிய யாவும் இங்கே இருந்தன (ஆதலால்),—இவற்றை கண்டு தேர்ந்தனர் அல் லரோ அகிலமும் கண்டோர் - இவைகளைப் பார்த்தறிந்தவர்களல்லவா எல்லாவற்றையும் பார்த்தறிந்தவர்கள். எ - று.

ஒகாரம் உயர்வுசிறப்பு. உம்மைகள் முற்று. (ச)

5. இணையிலிவ்விடைத்தானையின்வெள்ளமோரிலக்க
நணுகுமென்றனனந்தணனூற்பெரும்படையுங்
கணிதமில்லனவிருந்தனவெள்ளிகண்ணிலன்போ
லுணர்விலன்கொலாங்கனகனுங்கேட்டசொல்லுரைத்தான்.

இ — ள். அந்தணன் இணை இல் இ இடை ஓர் இலக்கம் வெள்ளம் தானை நணுகும் என்றனன் - வியாழன் ஒப்பில்லாத இந்நகரத்திலே ஓரிலக்கம் வெள்ளம் சேனைகள் இருக்கும் என்று சொன்னான்,—பெரும் நால் படையும் கணிதம் இல்லன இருந்தன - (அவன்கூறியபடியன்றி) மேம்பட்ட சதுரங்கசேனையும் அளவில்லாதனவாக விருந்தன,—வெள்ளி கண்ணிலன் போல் - சுக்கிரன் கண்ணில்லாதவனாதல் போல,—கனகனும் உணர்விலன் கொல்-வியாழனும் ஆராய்ச்சியறிவு இல்லாதவன்போலும்(அதனாற்றான்),—கேட்ட சொல் உரைத்தான் - தான் பிறர்சொல்லக்கேட்டவார்த்தையைச் சொன்னான்.

ஆம் சாரியை. கொல் ஐயம். உம்மை முன்னையது முற்று;பின்னையது உயர்வுசிறப்பு.

6. உரையின்மிக்கசூர்பெற்றவண்டந்தொறுமுளவாம்
வரையின்மிக்கதேர்கடல்களின்மிக்ககைமாக்க
டிரையின்மிக்கவாம்பரித்தொகையாயிடைச்செறிந்த
பரவைநுண்மணறன்னினுமிக்கனபதாதி.

இ — ள். உரையின் மிக்க சூர் பெற்ற அண்டம் தொறும் உள ஆம் வரையின் தேர் மிக்க - கீர்த்தியினான்மேம்பட்ட சூரபன்மன் பெற்றுக்கொண்ட அண்டங்கடோறும் உள்ளனவாகிய மலைகளினும் பார்க்கத் தேர்கள் மிகுந்திருக்கின்றன,—கை மாக்கள் கடல்களின் மிக்க - யானைகள் கடல்களினும் பார்க்க மிகுந்திருக்கின்றன,—வாம் பரி தொகை திரையின் மிக்க - தாவுகின்ற குதிரைக்கூட்டங்கள் திரைகளினும் பார்க்க மிகுந்திருக்கின்றன,—ஆயிடை செறிந்த பதாதி பரவை நுண்மணல் தன்னினும் மிக்கன - அவ்விடம் நெருங்கி நிற்கின்ற சேனைகள் சமுத்திரக்கரையிலுள்ள நுண்ணிய மணலினும் பார்க்க மிகுந்திருக்கின்றன. எ - று.

தன் சாரியை. உம்மை உயர்வுசிறப்பு. (சு)

7. மண்கொளாயிரத்தெட்டெனுமண்டத்தின்வளமு
மெண்கொளெண்பதினுயிரயோசனையெல்லைக்
கண்கொள்பான்மையிலீண்டியதற்புதங்கறைதோய்
புண்கொள்வேலுடைச்சூர்தவத்தடங்கியபோலாம்.

இ — ள். மண் கொள் ஆயிரத்து எட்டு எனும் அண்டத்தின் வளமும் - பிருதுவியிலிருக்கின்ற ஆயிரத்தெட்டென்னும் அண்டங்களிலுள்ள (பலவகைச்)செல்வங்களும்,—எண் கொள் எண் பதின் ஆயிரம் யோசனை எல்லை - கணக்கிலடங்கிய எண்பதினாயிரம் யோசனை விஸ்தாரத்தையுடைய இந்நகரிடத்தில்,—கண் கொள் பான்மையில் ஈண்டியது அற்புதம் - கண்களாற்காணும்படி நிறைந்திருத்தல் ஆச்சரியம்,—புண் கொள் கறை தோய் வேல் உடை சூர் தவத்து அடங்கிய போலாம் - (பகைவருடைய) இரத்தமளாவிய தசையைக்கவருகின்ற வேலினையுடைய சூரபன்மனது தவத்தினால் அடங்கியிருக்கின்றனபோலும். எ - று.

ஆம் அசை. உம்மை முற்று. (எ)

8. உரைசெயாயிரத்தெட்டெனுமண்டத்தினுளவாங்
கரையில்சீரெலாந்தொகுத்தனனீண்டவைகண்டாந்
தருமமெய்யளிகண்டிலமவற்றையுந்தந்து
சுரர்கடம்முடன்சிறையிலிட்டான்கொலோசூரன்.

இ - ள். சூரன் உரை செய் ஆயிரத்து எட்டு எனும் அண்டத்தின் உளவாம் கரை இல் சீர் எலாம் ஈண்டு தொகுத்தனன் - சூரபன்மன் சொல்லப்படுகின்ற ஆயிரத்தெட்டெனும் அண்டங்களினுள்ளனவாகிய அளவற்ற செல்வங்களெல்லாவற்றையும் இந்நகரத்தில் நிரப்பிவைத்திருக்கின்றான்,—அவை கண்டாம் - அவைகளை (யாம்) கண்டேம்,—தருமம் மெய் அளி கண்டிலம் - தருமத்தையும் சத்தியத்தையும் இரக்கத்தையும் இங்குக்காணப்பெற்றிலம்,—அவற்றையும் தந்து சுரர்கள் தம்முடன் சிறையில் இட்டான் கொலோ - அவைகளையும் (பிடித்துக்) கொடுவந்து தேவர்களுடன் சிறைச்சாலையிலடைத்துவைத்திருக்கின்றானோ. எ - று.

கொல் ஐயம். தம் சாரியை. ஓகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம்.(அ)

9. அரண்டருங்கழற்சூரன்வாழ்மகேந்திரமதனிற்
றிரண்டபல்லியத்துழனியேழ்கடலினுந்தெழிப்ப
முரண்டிறத்தவையியம்புவாரளவையார்மொழிவா
ரிரண்டுபத்துநூறியோசனையுண்டவரிடங்கள்.

இ - ள். அரண் தரும் கழல் சூரன் வாழ் மகேந்திரம் அதனில் - காவலைத்தருகின்ற வீரக்கழலையணிந்த சூரபன்மன் வசிக்கின்ற இம்மகேந்திரபுரியில்,—திரண்ட பல் இயம் துழனி ஏழ் கடலினும் தெழிப்ப - கூட்டமாகிய நாணுவாத்தியங்களினோசை சப்தசமுத்திரங்களின் முழக்கங்களினும்பார்க்க முழங்கும்படி,—முரண் திறத்து அவை இயம்புவார் அளவை யார் மொழிவார் - ஒன்றற்கொன்று மாறுபடும்வகையாக அவ்வாத்தியங்களை முழக்குவார்களுடைய அளவை யார்சொல்பவர்கள்,—அவர் இடங்கள் - அவர்கள் நிற்கின்றவிடங்கள்,—இரண்டு பத்து நூறு யோசனை உண்டு - இரண்டாயிரம் யோசனை விஸ்தாரமிருக்கின்றது. எ - று.

அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை முற்றேடுயர்வுசிறப்புமாம். (௯)

10. கரிகள்சேவகமொருபதினாயிரங்கடுந்தேர்
விரியுநீளிடையொருபதினாயிரம்விசயப்
பரியினெல்லையோரிருபதினாயிரம்பையத்
துருவினின்னமுமுண்டுகொல்யோசனைத்தொகையே.

இ — ள். கரிகள் சேவகம் ஒரு பதினாயிரம் - யானைதுயிலிடங்கள் பதினாயிரம்யோசனை,—கடும் தேர் விரியும் நீள் இடை ஒரு பதினாயிரம் - விரைவாகச் செல்லுகின்ற பெரிய தேர்கள் நிற்கின்ற இடம் பதினாயிரம் யோசனை,—விசயம் பரியின் எல்லை ஓர் இருபதினாயிரம் - வெற்றிபொருந்திய குதிரை இலாயங்கள் இருபதினாயிரம் யோசனை (விஸ்தாரங்களாகும்),—பைய துருவின் - மெல்லஆராய்ந்துபார்த்தால்,—யோசனை தொகை இன்னமும் உண்டு கொல் - யோசனைதூரக்கணக்கு இன்னமும் உளது. எ - று.

கொல், ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௧௦)

11. இவுளிவாயினுமால்கரிக்காத்தினுமிழிந்து
திவளுநீர்மைசால்விலாழியுந்தானமுஞ்சேறிந்து
குவளையுண்கணார்நீத்தசாந்தணிமலர்கொண்டே
யுவளக்தருமகழிசென்றகன்கடலுறுமால்.

இ — ள். இவுளி வாயினும் மால் கரி கரத்தினும் இழிந்து - குதிரைகளின் வாய்களினும் பெரிய யானைகளின் கைகளினும் நின்றுவந்து,—திவலும் நீர்மை சால் விலாழியும் தானமும் செறிந்து - கலக்குந்தன்மை பொருந்திய நுரைநீரும் மதநீருங்கூடி,—குவளை உண்கணார் நீத்த சாந்து அணி மலர் கொண்டு - கருங்குவளைமலர்போன்ற மையீட்டப்பட்ட கண்களையுடைய பெண்கள் (அணிந்து) களைந்த சந்தனங்களையும் அழகிய புட்பங்களையும் வாரிக்கொண்டு,—உவளகம் தரும் அகழி சென்று அகன் கடல் உறும் - மதிலைச்சூழ்ந்த அகழிவழியாகச்சென்று பெரிய கடலிற்பாயும். எ — று.

ஆல், ஏ அசை. உம்மைகள் எண். குவளையுண்கணார் குவளையை வென்ற கண்ணாருமாம். (கக)

12. வளமைமேதகுமிப்பெருமகேந்திரம்வருத்தன்
முளரியண்ணலிங்கொருவனுன்முடிந்திடவற்றே
வொளிறுவாட்படையவுணர்கோனுடையவண்டத்தி
னளவினுன்முகர்யாருமவந்திழைத்தனராமால்.

இ — ள். மே தகும் வளமை இ பெரும் மகேந்திரம் - மேம்பட்ட செல்வத்தினையுடைய இந்தப்பெரிய மகேந்திரநகரத்தை,—இங்கு முளரி அண்ணல் ஒருவனால் வருத்தல் முடிந்திடவற்றே - இந்த அண்டத்திலிருக்கின்ற தாமரையாசனனாகிய பிரமனொருவனால் உண்டாக்குதற்குமுடியுமா? (முடியாது),—ஒளிறு வாள் படை அவுணர் கோன் உடைய அண்டத்தில் அளவு இல் நான்முகர் யாரும் வந்து இழைத்தனராம் - ஒளிபொருந்திய வாட்படையையுடைய அவுணர்க்கரசனாகிய சூரபன்மனது அண்டங்களிலிருக்கின்ற அளவில்லாத பிரமாக்கள் எல்லாரும்வந்து படைத்தார்களாகும். எ — று.

ஆல் அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை முற்று. (கஉ)

13. புரந்தரன்றனதுலகமுமொழிந்தபுத்தேளி
ரிருந்தவானமுமெண்டிசைநகரமும்யாவும்
வருந்திபிந்நகர்சமைத்திடமுன்னரேவண்கை
திருந்தவேகொலாம்படைத்தனர்திசைமுகத்தலைவர்.

இ — ள். திசை முகம் தலைவர் - நான்குமுகங்களையுடைய பிரமர்கள்,—புரந்தரன் தனது உலகமும் - தேவேந்திரனது அமராவதிநகரத்தையும்,—ஒழிந்த புத்தேளிர் இருந்த வானமும் - மற்றுள்ள தேவர்களிருக்கப்பெற்ற விண்ணுலகங்களையும்,—எண்திசை நகரமும் - அட்டதிக்கிலுள்ள நகரங்களையும்,—யாவும் - மற்றெல்லா உலகங்களையும்,—வருந்தி இ நகர் சமைத்திட - வருத்தமுற்று இந்நகரத்தை உண்டாக்கும் பொருட்டு,—வண் கை திருந்தவே கொல் முன்னர் படைத்தனர் - அழகியகைகள் திருத்தமடையும் பொருட்டே முதலிற்படைத்தார்கள். எ — று.

தன், கொல், ஆம் சாரியை. ஏகாரம் முன்னையது அசை, பின்னையது தேற்றம். உம்மை யாவும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம். (கங)

14. பொன்புலப்படுதுறக்கம்வான்மாதிரம்புவிகீழ்
துன்பில்போகமாருலகென்பர்தொடுகடற்பெருமை
முன்புகாண்கலர்கோட்டகம்புகழ்தருமுறைபோ
லின்பம்யாவையுமுளநகரீதுபோலியாதோ.

இ — ள். தொடு கடல் பெருமை முன்பு காண்கலர் கோட்டகம் புகழ்தரு முறைபோல் - (சகரரால்) தோண்டப்பட்ட கடலின்பெருமையை முன்காணாதவர்கள் (தாங்கண்ட) குளங்களைப் (பெரிதென்று) புகழுந்தன்மையைப்போல,—பொன் புலப்படு

**துறக்கம் வான் மாதிரம் புவி கீழ் துன்பு இல் போகம் ஆர் உலகு என்பர்** - பொன்மயமாகக்காணப்படுகின்ற சுவர்க்கத்தையும் (மற்றைய) மேலுலகங்களையும் திக்கிலுள்ள நகரங்களையும் பூமியிலுள்ள நகரங்களையும் பாதலத்திலுள்ள நகரங்களையும் துன்பமில்லாத போகத்தை அனுபவித்தற்குரிய உலகங்களென்று கூறுவார்கள்,—**ஈதுபோல் இன்பம் யாவையும் உளநகர் யாது** - இதைப்போல இன்பம் முற்றுமுள்ளநகரம் வேறெந்தநகரம் (ஒன்றுமின்று.)

ஓகாரம் எதிர்மறை. உம்மை முற்று. துன்பு இல் போகம் எனவே இன்பம்பொருந்தியபோகம் என்பது கருத்து. (கச)

15. கறைபடைத்ததாட்கரிபரியவுணர்தேர்க்கணங்க
ளறைபடைத்திவணீண்டியவண்டங்களனைத்து
முறைகடற்றொகைமுழுவதுஞ்சூர்கொணர்ந்தொருங்கே
சிறைபடுத்தியபோலும்வேறொன்றிலைசெப்ப.

இ — ள். **கறை படைத்ததாள் கரி பரி அவுணர் தேர் கணங்கள் அறை படைத்து இவண் ஈண்டிய** - உரல்போன்ற கால்களையுடைய யானைகளுங் குதிரைகளும் அவுணராகிய காலாட்களும் தேர்க்கூட்டங்களும் ஆரவாரத்தோடு இவ்விடத்தில் நெருங்கியிருக்கின்றன,—**அண்டங்கள் அனைத்தும் உறை கடல் தொகை முழுவதும்** - எல்லாவண்டங்களிலுமுள்ளகடல்களனைத்தையும்,—**சூர் கொணர்ந்து ஒருங்கே சிறை படுத்தியபோலும்** - சூரபன்மன் கொண்டுவந்து ஒருசேரச் சிறைப்படுத்திவைத்ததை யொக்கும்,—**செப்ப வேறு ஒன்று இலை** - உவமைசொல்லுதற்கு வேறு ஒன்றுமில்லை. எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மைகள் முற்று. (கரு)

16. ஐயபூழியுமாரகிலாவியுமாற்ற
நொய்யவாகியவணுக்களுநுழைவரிதென்னிற்
செய்யவிந்நகராவணமெங்கணுஞ்செறிந்த
வெய்யதேர்கரியவுணர்தம்பெருமையார்விரிப்பார்.

இ — ள். **ஐய பூழியும் ஆர் அகில் ஆவியும் ஆற்ற நொய்ய ஆகிய அணுக்களும் நுழைவு அரிது என்னில்** - இலேசானபுழுதியும் நிறைந்த அகிற்புகையும் மிகவும் நுண்ணியனவாகிய அணுக்களும் (உள்ளே) புகுதல் அரிதாயின்,—**செய்ய இ நகர் ஆவணம் எங்கணும் செறிந்த வெய்ய தேர் கரி அவுணர்தம் பெருமை யார் விரிப்பார்** - சிறந்த இந்நகரத்திலுள்ள வீதிகளெவ்விடத்தும் நிறைந்திருக்கின்ற வேகத்தினையுடைய தேர்கள் யானைகள் அசுரர்கள் என்னும் இவற்றின்மிகுதியை எவர்கள் (எடுத்து இவ்வளவென்று) விரித்துரைப்பார்கள். எ — று.

தம் சாரியை. உம்மை எங்கணும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம்.

17. அள்ளல்வேலைசூழ்மகேந்திரபுரிக்கிணையாகத்
தெள்ளிதாவொருநகருமின்றுளதெனச்செப்ப
வெள்ளலின்றியவண்டமோராயிரத்தெட்டி
னுள்ளசீரெலாமீதுபோலொருபுரத்துளதோ.

இ — ள். **அள்ளல் வேலை சூழ் மகேந்திரபுரிக்கு இணையாக** - சேறுபொருந்திய சமுத்திரஞ்சூழ்ந்த மகேந்திரபுரிக்கொப்பாக,—**தெள்ளிதா ஒருநகரும் இன்று** - சிறப்புள்ளதாய் ஒருநகரமும் இல்லை,—**உளது என செப்ப** - உண்டென்று கூறுதற்கு,—**எள்ளல் இன்றிய அண்டம் ஓர் ஆயிரத்து எட்டின் உள்ள சீர் எலாம்** - இகழ்ச்சியில்லாத

ஆயிரத்தெட்டு அண்டங்களினுமுள்ள சிறந்த பொருள்களெல்லாம்,—ஈதுபோல் ஒருபுரத்து உளதோ-இந்நகரத்திலிருத்தல்போல வேறொரு நகரத்திலிருக்கின்றனவா (இல்லை.)

ஓகாரம் எதிர்மறை. உம்மை உயர்வுசிறப்பு. (௧௭)

18. கழிந்தசீர்த்திகொளிந்நகர்தன்னிடைக்கஞல
வழிந்துதொல்லுருமாழையின்மணிநிழலாகி
யிழிந்துளான்பெறுதிருவெனப்பயன்பெறுதெவர்க்கு
மொழிந்தவேலைகடம்புகழ்கொள்வதிவ்வுவரி.

இ — ள். இ உவரி - (மகேந்திரத்தைச்சூழ்ந்த) இவ்வுப்புச்சமுத்திரம்,—கழிந்த சீர்த்திகொள் இ நகர் தன்னிடை கஞல - மிகுந்த கீர்த்தியையுடைய இந்த நகரம் தன்னிடத்திலே (பிரதிவிம்பித்து) விளங்குதலால்,—தொல் உரு அழிந்து - பழைமையாகிய கரிய நிறம் நீங்கி,—மாழையின் மணி நிழல் ஆகி - பொன்னினது அழகிய நிறத்தையுடையதாகி,—இழிந்துளான் பெறு திரு என - உலோபகுணமுடையவன் பெற்ற செல்வத்தைப்போல,—எவர்க்கும் பயன் பெறு து - எவர்களுக்கும் பிரயோசனப்படாமல்,—ஒழிந்த வேலைகள் தம் புகழ் கொள்வது - மற்றையகடல்களின் புகழைத்தானுமடைகின்றது. எ - று.

தன், தம் சாரியை. உம்மை முற்று. உலோபகுணமுடையவன் பெற்ற செல்வம் பிறர்க்குப் பயன்படாதவாறுபோல மகேந்திரபுரியைச்சூழ்ந்துள்ள இவ்வுப்புக்கடலும் அந்நகரத்தின்பொற்சாயையைத் தானடைந்தும் பிறர்க்குப்பயன்படாமலிருந்தது; இருந்தும், பாற்கடல் முதலியவற்றைப்போலத் தானும் பெயர்மாத்திரையிற் பொற்கடல் என்று சொல்லப்படும் புகழையுடையதாயிருந்ததென்பது கருத்து. (௧௮)

19. ஏற்குநேமிசூழ்மகேந்திரவெறுக்கையிவ்வுலகோ
ரார்க்குமோர்பயன்பெற்றிலதுயிர்ப்பலியருந்துங்
கார்க்குழாம்புரையலகைசூழ்காளிமந்திரத்திற்
சீர்க்கொள்கற்பகம்பிறர்க்குதவாதமர்செயல்போல்.

இ — ள். உயிர் பலி அருந்தும் கார் குழாம் புரை அலகை சூழ் காளி மந்திரத்தில் சீர்கொள் கற்பகம் பிறர்க்கு உதவாது அமர்செயல்போல் - உயிர்களைப்பலியாக உண்ணுகின்ற மேகக்கூட்டங்களைப்போன்ற கரிய வடிவினையுடைய பிசாசுகள் சூழ்ந்திருக்கின்ற காளிகோவிலில் (நிற்கின்ற) சிறப்புப்பொருந்திய கற்பகவிருட்சம் பிறருக்குப்பயன்படாமலிருக்கின்ற தன்மையைப்போல,—நேமி சூழ் ஏற்கும் மகேந்திரம் வெறுக்கை இ உலகோர் ஆர்க்கும் ஓர் பயன் பெற்றிலது - கடல்சூழ்ந்த தகுதியாகிய மகேந்திரபுரத்திலுள்ள செல்வங்கள் இவ்வுலகத்திலுள்ள எவர்களுக்குஞ் சிறிதும்பயன்பட்டிலது. எ—று.

உம்மை முற்று. கற்பகவிருட்சங்கள் தம்மை யடைந்தவர்களுக்கு விரும்பப்படும் பொருள்களெல்லாவற்றையும் கொடுக்கத்தக்க தன்மையை யுடையனவாயினும் அவை காளிகோவிலிலிருத்தலால், அங்குள்ள பேய்களுங் காளியுங் கொன்றுவிடுவனவென்று பயந்து யாரும் அவைகளினருகிற்செல்லார்கள். அதுபோலவே விரும்பப்படுவனவற்றைத்தரத்தக்க எல்லாச்செல்வங்களும் மகேந்திரபுரியில் நிறைந்திருப்பினும் அசுரர்களும் சூரபன்மனும் கொன்றுவிடுவார்களென்றுபயந்து யாருமங்கணுகாமையால் இவ்வுலகோ— ரார்க்குமோர்பயன்பெற்றிலது என்றார். மகேந்திரபுரியைக் காளிகோவிலாகவும் அதிலுள்ள செல்வங்களைக் கற்பகவிருட்சங்களாகவும் அசுரர்களை அலகைகளாகவும் சூரபன்மனைக் காளியாகவும் எடுத்துக்காட்டுவமையாற் புலப்படுத்தினர். (௧௯)

20. மறக்கொடுந்தொழிலிரவியம்பகையழன்மடுப்பத்
துறக்கமாண்டதுபட்டிமையாகுமத்தொல்லூர்
சிறக்குமிந்நகர்நோக்கியேதன்னலந்தேய்ந்து
பொறுக்கரும்பெருநாண்சுடக்கரிந்ததுபோலாம்.

இ — ள். மறம் கொடும் தொழில் இரவி அம் பகை அழல் மடுப்ப - பாவமாகிய கொடுந் தொழிலையுடைய பானுகோபன் தீயிட்டெரிக்க,—துறக்கம் மாண்டது பட்டிமை ஆகும் - சுவர்க்கலோகம் அழிந்தது (என்று சொல்லுதல்) பொய்யாகும்,—அ தொல் ஊர் - அந்தப்பழையசுவர்க்கலோகம்,—சிறக்கும் இ நகர் நோக்கியே - சிறந்த இம் மகேந்திரபுரத்தைப்பார்த்தே,—பொறுக்க அரும் பெரும் நாண் சுட - சகிக்கக்கூடாத மிகுந்த நாணமாகிய அக்கினி தன்னைத் தகித்தலினால்,—தன் நலம் தேய்ந்து - தன் அழகுகெட்டு,—கரிந்தது போலாம் - கரிந்ததாகும் (ஆகலான்). எ — று.

அம் சாரியை. ஏகாரம் தேற்றம். போல் ஒப்பில்போலி. (உ0)

21. துங்கமிக்கசூர்படைத்திடுமண்டமாத்தொகையுட்
செங்கதிர்த்தொகையாங்கவன்பணியினாற்சென்று
பொங்குதண்சுடர்நடாத்திநின்றென்னவிப்புரியி
லெங்குமுற்றனசெழுமணிச்சிகரமெண்ணிலவே.

இ — ள். துங்கம் மிக்க சூர் படைத்திடும் அண்டம் மா தொகையுள் - பெருமையினால் மேம்பட்ட சூரபன்மன் பெற்றுக்கொண்ட ஆயிரத்தெட்டு அண்டங்களினுமுள்ள,—செம் கதிர் தொகை - சிவந்த கிரணங்களையுடையனவாகிய ஆதித்தக்கூட்டங்கள்,—அவன் பணியினால் சென்று - அச்சூரபன்மனது கட்டளையினால் வந்து,—பொங்கு தண் சுடர் நடாத்தி நின்ற என்ன - மிகவுங் குளிர்ச்சியாகிய ஒளியை வீசிக்கொண்டிருந்தாற்போல,—இ புரியில் எங்கும்-இந்நகரத்திலெவ்விடங்களினும்,—எண்ணில செழுமணிசிகரம் உற்றன - கணக்கில்லாதனவாகிய மாணிக்கங்களிழைத்த சிறியகோபுரங்களிருக்கின்றன.

முற்றுற்மைவிகாரத்தாற்றொக்கது, ஆங்கு, ஏ அசை. உம்மை முற்று. சிகரம் - செய்குன்று என்பாருமுளர்; அது "மாநகர்க்குக் கோபுரமும்" என்றதனால் அத்துணைச் சிறப்பின்மைதெளிக. (உக)

22. மாணிலைப்படுமெழுவகையுலகின்வைப்பென்ன
வேணிலைப்பெருஞ்சிகரிகள்செறிந்தனயாண்டுங்
கோணிலைக்கதிருடுப்பிறர்பதங்களிற்குழுமி
நீணிலைத்தலம்பலவுளமாடங்கணிரந்த.

இ — ள். மாண் நிலை படும் எழுவகை உலகின் வைப்பு என்ன - மாட்சிமையோடு நிலைபட்டிருக்கின்ற மேலேழுலகங்களின் அடுக்குகளைப்போல,—யாண்டும் - இந்நகரத்தி னெவ்விடங்களினும்,—எழ் நிலை பெரும் சிகரிகள் செறிந்தன - ஏழுநிலைகளையுடைய பெரிய கோபுரங்கள் நெருங்கியிருக்கின்றன,—நிலை கோள் கதிர் உடு பிறர் பதங்களின் - உறுதியாயுள்ள கிரகங்களாகிய சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் மற்றுள்ளவர்கள் ஆகிய இவர்களதுபதவிகளைப்போல,—நீள் நிலை பல தலம் உள மாடங்கள் குழுமி நிரந்த-மேனிலைகளாகிய பல தளங்களுள்ள மாளிகைகள்செறிந்து பரந்திருக்கின்றன.

உம்மை முற்று. கதிர்முதலியனவற்றிற்கு உம்மை கொடுத்து முடிப்பினும் அமையும். தளம் - உபரிகை. (உஉ)

23. நூறியோசனைசேண்படுநீட்சியுநுவலு
மாறியோசனைப்பரவையும்பெற்றவாவணங்க
ளேறுதேர்பரிகளிறுதானவர்படையீண்டிச்
சேறலாயிடையருமையால்விசும்பினுஞ்செல்லும்

இ — ள். நூறு யோசனை சேண் படு நீட்சியும் நுவலும் ஆறுயோசனை பரவையும் பெற்ற ஆவணங்கள் - நூறுயோசனைதூரமான நீளத்தையும் சொல்லப்படுகின்ற ஆறு யோசனை யகலத்தையும்பெற்றவீதிகளில்,—ஏறு தேர் பரி களிறு தானவர் படை ஈண்டி- உயர்ந்த தேர்களும் குதிரைகளும் யானைகளும் அசுரருமாகிய சேனைகள் நெருங்கி,— சேறல் அ இடை அருமையால் விசும்பினும் செல்லும் - செல்லுதற்கு அவ்விடம் போதாமையால் ஆகாயவழியாகவும் செல்லும். எ — று.

உம்மை முன்னையவை எண், பின்னையது இறந்ததுதழீஇயவெச்சத்தோடுயர்வுசிறப்புமாம். ஏறுதேர் என்பதைப் பிறிதினியைபு நீக்கிய விசேடணமாகக்கொண்டு ஏறுகின்ற தேரென்றலுமொன்று. (உங)

24. அடன்மிகுத்திடுதானவரகலிருவிசும்பிற்
கடிதினிற்செலமத்திகைகாட்டுமாறொப்ப
நெடுமுகிற்கணந்தழுவுசூளிகைமிசைநிறுவுங்
கொடிகளெற்றிடப்போவனவிரவிகொய்யுளைமா.

இ — ள். அடல் மிகுத்திடு தானவர் அகல் இரு விசும்பில் கடிதினில் செல மத்திகை காட்டுமாறு ஒப்ப - வலிமைமிக்க அவுணர்கள் அகன்றபெரிய ஆகாயத்தில் விரைந்து செல்லுமாறு கோலை வீசுந்தன்மைபோல,—நெடு முகில் கணம் தழுவு சூளிகை மிசை நிறுவும் கொடிகள் எற்றிட இரவி கொய்யுளை மா போவன - நெடிய முகிற் கூட்டங்கள்படிந்திருக்கின்ற மாடங்களில் நாட்டப்பட்ட கொடிகள் அடிக்கச் சூரியனது கொய்யப்பட்ட புறமயிர் பொருந்திய குதிரைகள் (விரைவாகச்) செல்லுகின்றன. எ — று.

ஆகாயம் வரைக்கும் மாடங்கள் உயர்ந்திருக்கின்றன என்பார் "சூளிகைமிசை நிறுவுங்—கொடிக ளெற்றிடப் போவன விரவிகொய் யுளைமா" வென்றார். அடன்மிகுத்திடும் என்பதற்குக் கொலைத்தொழின் மிக்க என்றலுமொன்று. சூளிகை-தூபியுமாம். (உச)

25. மேலுலாவியபடிகமாளிகைசிலமின்னார்
மாலைதாழ்குழற்கிடுமகிலாவியான்மறைவ
சீலநீங்கியவவுணர்தஞ்சீர்த்திகளனைத்து
மேலமேவயவர்பவத்தினுளொடுங்குமாறென்ன.

இ — ள். சீலம் நீங்கிய அவுணர்தம் சீர்த்திகள் அனைத்தும் ஏலவே அவர் பவத்தினுள் ஒடுங்கு மாறு என்ன - ஒழுக்கமற்ற அசுரர்களது கீர்த்திகளனைத்தும் முன்னே அவர்கள் செய்த பாவத்தினுள்ளே ஒடுங்கியிருக்குந் தன்மைபோல,—சில மின்னார் மாலை தாழ் குழற்கு இடும் அகில் ஆவியால் மேல் உலாவிய படிக மாளிகை மறைவ-சிலபெண்கள் மாலையணிந்த கூந்தலுக்கூட்டுகின்ற அகிற்புகையினாலே மேலாகவிளங்குகின்ற பளிங்கு மாளிகைகள் மறைகின்றன. எ — று.

தம் சாரியை. ஏகாரம் அசை. உம்மை முற்று. (உரு)

26. அணிகுலாயகோமேதகமரகதமாரந்
துணியுநீலம்வச்சிரம்வயிடூரியந்துப்பு
நணியபங்கயம்புருடராகம்மெனுநவமா
மணிகளாற்செய்துமிளிர்வனவரம்பில்பொன்மாடம்.

இ — ள். வரம்பு இல் பொன் மாடம் - அளவில்லாத பொன்மயமான மாளிகைகள்,— அணி குலாய கோமேதகம் மரகதம் ஆரம் துணியு நீலம் வச்சிரம் வயிடூரியம் துப்பு நணிய பங்கயம் புருடராகம் எனும் - அழகுபொருந்திய கோமேதகம் மரகதம் முத்து

தெளிந்த நீலம் வைரம் வைடூரியம் பவளம் (செந்நிறம்) பொருந்திய பதுமராகம் புருடராகம் என்னும்,—மா நவமணிகளாற் செய்து மிளிர்வன - உயர்ந்த நவரத்தினங்களினாற் செய்யப்பட்டு விளங்குகின்றன. எ — று. துணிதல் - தெளிதல்; இப்பொருள்பயப்பத் "துணிகதிர்" என்றார் பிறரும். (உசு)

27. இயல்படைத்தவெண்படிகத்தினியன்றமாளிகைமேற்
புயல்படைத்திடுகளிமயில்வதிந்திடப்புடையே
கயல்படைத்தகண்ணியர்புரியகிற்புகைகலப்ப
முயல்படைத்திடுமதியினைச்சூழ்தருமுகில்போல்.

இ — ள். முயல் படைத்திடு மதியினை சூழ்தரு முகில்போல் - முயற்களங்கம்பொருந்திய சந்திரனைச் சூழ்ந்துகொண்ட மேகத்தைப்போல,—இயல் படைத்த வெண் படிகத்தின் இயன்ற மாளிகைமேல் - அழகுபொருந்திய வெண்மையாகிய பளிங்கினாற் செய்யப்பட்ட மாளிகையின்மேல்,—புயல் படைத்திடு களிமயில் வதிந்திட-மேகத்தை நிகர்த்த களிப்பையுடைய மயில் இருக்க,—கயல் படைத்த கண்ணியர் புரி அகில் புகை - கயல் மீனைப்போன்ற கண்களையுடைய பெண்கள் உண்டாக்குகின்ற அகிற்புகை,—புடையே கலப்ப - அம்மாளிகையின் பக்கத்துச்சூழ்கின்றன. எ - று.

ஏகாரம் அசை. புயல் படைத்திடு களிமயில் என்பதற்கு முகில் வரவினைக்கண்டு மகிழ்வடைகின்ற மயில் எனப்பொருள் கூறலுமொன்று. அகிற்புகை பெண்களால் தத்தங் கூந்தலினீரம்புலர்த்துதற்காகத் தனித்தனி உண்டாக்கப்படுதலின் கலப்பவெனப் பன்மையாற்கூறினார். மாளிகையும் மயிலும் புகையும், சந்திரனுக்கும் களங்கத்துக்கும் முகிலுக்கும் ஒப்பு. (உஎ)

28. வளனியன்றிடுசெம்மணிப்பளிங்குமாளிகைமே
லொளிறுபொற்றலத்தரிவையர்வடிமிசைந்துறுதல்
வெளியசேயனபங்கயப்பொகுட்டின்மீமிசையே
யளியினங்கடேன்மாந்தியேவைகுமாறனைய.

இ — ள். வளன் இயன்றிடு செம்மணி (மாளிகைமேல்) பளிங்கு மாளிகைமேல் ஒளிறு பொன் தலத்து-வளப்பம்பொருந்திய மாணிக்கங்களாற் செய்யப்பட்ட மாளிகைகளின்மீதும் பளிங்கினாற் செய்யப்பட்ட மாளிகைகளின்மீதும் விளங்காநின்ற பொன்னிலத்திலே,—அரிவையர் வடி மிசைந்து உறுதல் - அசுரமாதர்கள் மதுபானஞ் செய்திருக்குந்தன்மை,—வெளிய பங்கயம் பொகுட்டின் மீமிசை - வெண்டாமரைப் பொகுட்டுகளின்மீதும்,—சேயன பங்கயம் பொகுட்டின் மீமிசை - செந்தாமரைப்பொகுட்டுகளின்மீதும்,—அளி இனங்கள் தேன் மாந்தியே வைகுமாறு அனைய - வண்டின் கூட்டங்கள் தேனுண்டிருக்குந்தன்மையை ஒக்கும். எ — று.

ஏகாரம் இரண்டும் அசை. பங்கயப் பொகுட்டின் மீமிசை என்பது வெளியவென் பதனோடுங் கூட்டப்பட்டது. மீமிசை ஒருபொருட்பன்மொழி. (உஅ)

29. துய்யவாலரிபுனற்கிறைமண்ணியேதொகுப்பச்
செய்யதீயவனூன்களோடவைபதஞ்செய்ய
மையன்மாதரோடவுணர்களரம்பையர்வழங்க
நெய்யளாவுண்டியுண்குவர்மறுசிகைநீக்கி.

இ — ள். துய்ய வால் அரி புனற்கு இறை மண்ணியே தொகுப்ப - (இந்நகரத்தில்) பரிசுத்தமான வெள்ளிய அரிசிகளை வருணன் கழுவிக்குவிக்க,—செய்ய தீயவன் ஊன்களோடு அவை பதம் செய்ய - செந்நிறமுடைய அக்கினிதேவன் மாமிசங்களுடன்

அவைகளைப் பாகம்பண்ண,—அரம்பையர்வழங்க - தெய்வப்பெண்கள் (அவற்றைப்) பரிமாற,—அவுணர்கள் மையல் மாதரோடு - அசுரர்கள் மயக்கத்தைச்செய்கின்ற பெண்களோடு,—மறுசிகை நீக்கி - மறுசிகையைத்தள்ளி,—நெய் அளாவு உண்டி உண்குவர் - நெய்யோடுகலந்திருக்கின்ற (சுவையாகிய) உணவுகளை உண்பார்கள். எ — று.

ஏகாரம் அசை. மையன் மாதர் எனவே காமக்கிழத்தியரென்பது பெற்றாம்; மையலை மாதருக்குச் சாதியடையாக்கி மனைவியரென்றலும் பொருந்தும். மறுசிகை உண்டு சுவைபார்த்துத்தள்ளிவிடப்படுகின்ற சேடம். (உக)

30. துப்புறுத்தனகுஞ்சியங்காளையர்தொகையுஞ்
செப்புறுத்துசீறடிமினார்பண்ணையுஞ்செறிந்து
மெய்ப்புறத்தியல்காட்சியுங்கலவியும்வெறுப்பு
மெப்புறத்தினுநிகழ்வனமதனுலகிதுவே.

இ — ள். துப்பு உறுத்த அன குஞ்சி அம் காளையர் தொகையும் - பவளத்தைப் பதித்தாற்போன்ற சிவந்த குடுமியையுடைய அழகிய வாலிபர்கூட்டமும்,—செப்பு உறுத்து சீறடி மினார் பண்ணையும் செறிந்து - செம்பஞ்சூட்டிய சிறிய அடிகளையுடையபெண்கள் கூட்டமும் கலந்து,—மெய் புறத்து இயல்காட்சியும் கலவியும் வெறுப்பும் எ புறத்தினும் நிகழ்வன - தேகத்தின்புறத்திலே செய்யப்படும் விநோதங்களும் புணர்ச்சியும் ஊடலும் இந்நகரின் எவ்விடங்களினும் நடக்கின்றன (ஆதலால்),—இது மதன் உலகே - இது மன்மதன் உலகமே. எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை எப்புறத்தினும் என்பதில் முற்றும்; ஏனையவற்றில் எண்ணுமாம். துப்பு உறுத்த அன என்பதற்குச் செவ்வரக்கையுருக்கி யூற்றிவைத்தாற் போல எனப்பொருள் கூறினும் அமையும். சேப்பென்பது செப்பு என எதுகைநோக்கி முதல் குறுகி ஈண்டு ஆகு பெயராய்ப் பஞ்சையுணர்த்திநின்றது. உறுத்தல் - ஊட்டுதல். மினார் என்பது மின்னலைப்போன்ற இடையினையுடைய மகளிர் எனப்பொருள்படும். மெய்ப்புறம் என்பதற்கு மெய்யினிடத்து எனக்கூறினுமாம். விநோதம் என்றது மதனநூலிற் கூறிய கரணவிசேடங்களை என்க. அவை "பற்குறி நகக்குறிகள் பாணிகொடு தட்ட—னற்கமிழ்து துய்த்தல்களி நன்றெழ வணைத்தல்" முதலாயின. (௩0)

31. பூணுமாரமுங்கலாபமுமிழைகளும்பொன்செய்
நாணுமொற்றராற்பரத்தையர்பாற்படநல்கிப்
பேணிமற்றவர்விலக்கினநயந்தனபிறவு
மாணுமைந்தர்கடேறுவானாறுபார்த்தயர்வார்.

இ — ள். ஆணுமைந்தர்கள் - ஆண்டன்மையையுடைய வாலிபர்கள்,—பூணும் ஆரமும் கலாபமும் இழைகளும் பொன் செய் நாணும் ஒற்றரால் பரத்தையர்பால் பட நல்கி- தரித்துக்கொள்ளுகின்ற முத்துமாலைகளையும் (இடையணியாகிய) கலாபங்களையும் மற்றைய ஆபரணங்களையும் பொன்னாற்செய்யப்பட்ட சரடுகளையும் தூதுவர்களால் பொதுப்பெண்களிடத்திற் சேரும்படி கொடுப்பித்து,—அவர் விலக்கின பேணி நயந்தன பிறவும் தேறுவான் ஆறுபார்த்து அயர்வார் - அவர்கள் விலக்கினவற்றையும் உபசரித்து விரும்பியெடுத்துக்கொண்டனவற்றையும் மற்றுள்ளவிஷயங்களையும் அறியும்பொருட்டு அவர் வரும் வழியைப் பார்த்துக்கொண்டு கவலா நிற்பார்கள். எ — று.

மற்று அசை. உம்மை பிறவும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமும், ஏனையவற்றில் எண்ணுமாம். பூணும் இழைகளும் என்பனவற்றிற்கு ஆபரணங்களும் ஆடைகளும் எனப் பொருள் கொள்ளினும் அமையும்; ஆடையெனப் பொருள் கொள்ளுங்கால் இழை ஆகுபெயர். (௩க)

32. துன்றுதானவர்தெரியலின்மாதர்பூந்தொடையின்
மன்றன்மாளிகைச்சோலையினிலஞ்சியின்மலரிற்
குன்றமால்கரித்தண்டத்தின்யாழ்முரல்குழுவிற்
சென்றுசென்றெனதுணர்வுபோலளிகளுந்திரியும்.

இ – ள். துன்று தானவர் தெரியலில் மாதர் பூம் தொடையில் மன்றல் மாளிகை சோலையின் இலஞ்சியின் மலரில் குன்றம் மால் கரி தண்டத்தில் யாழ் முரல் குழுவில் - நெருங்கிய அசுரர்களணிந்த மாலைகளிலும் பெண்களணிந்த பூமாலைகளிலும் மங்களகரம் பொருந்திய மாளிகைகளிலுள்ள சோலைகளிலும் குளங்களிலேமலர்ந்திருக்கின்றபுஷ்பங்களிலும் மலைகளையொத்த யானைகள்செல்லும் வழிகளிலும் யாழ்வாசிக்கின்ற கூட்டத்திலும்,—அளிகளும் சென்று சென்று எனது உணர்வுபோல் திரியும் - வண்டுகளும் போய்ப்போய் என் மனத்தைப்போலச் சுழன்று திரிகின்றன. எ – று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௩௨)

33. மாறிலாதசூராணையால்வந்திடும்வசந்த
னூறுதெண்கடலளவியேதண்டலையுலவி
வீறுமாளிகைநூழையினிடந்தொறுமெல்லத்
தேறல்வாய்மடுத்தோரெனவசைந்துசென்றிடுமால்.

இ – ள். மாறு இலாத சூர் ஆணையால் வந்திடும் வசந்தன் - ஒப்பில்லாத சூரபன்மனது கட்டளையால்வருகின்ற இளந்தென்றற்காற்றானது,—ஊறு தெண்கடல் அளவியே தண்டலை உலவி-(நீர்) ஊறுகின்ற தெளிந்த கடலிலே கலந்து சோலைகளிலே உலாவி,—வீறு மாளிகை நூழையின் இடந்தொறும் - உயர்ந்தமாளிகைகளின் சாளரங்களினிடந்தோறும்,—தேறல் வாய்மடுத்தோர் என மெல்ல அசைந்து சென்றிடும் - மதுபானஞ்செய்தவர்களைப்போல மெதுவாக அசைந்து உலாவாநிற்கும். எ – று.

ஆல், ஏ அசை. தொறும் என்பது இடப்பன்மை உணர்த்திநின்றது. (௩௩)

34. மாடமீதமர்மடந்தையர்தம்முருவனப்புக்
கூடவேபுனைந்தணிநிழற்காண்பதுகுறித்துப்
பாடுசேர்கரநீட்டியேபகலவற்பற்றி
யாடிநீர்மையினோக்கியேயந்தரத்தெறிவார்.

இ – ள். மாடம் மீது அமர் மடந்தையர் தம் உரு வனப்பு கூடவே புனைந்து அணி நிழல் காண்பது குறித்து - மேல்வீடுகளிலேயிருக்கின்ற பெண்கள் தமது சரீரம் அழகு மிகுதியாகும்படி அலங்கரித்துக்கொண்டு அழகிய நிழலாகிய பிரதிவிம்பத்தைப் பார்க்க வேண்டுமென்று கருதி,—பாடு சேர் கரம் நீட்டியே - பெருமைபொருந்திய கைகளை நீட்டி,—பகலவன் பற்றி - சூரியனைப்பிடித்து,—ஆடி நீர்மையின் நோக்கியே-கண்ணாடியின்தன்மையாகப்பார்த்து,—அந்தரத்து எறிவார்-பின்னர் ஆகாயத்தின்மேல் எறிவார்கள்.

ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையவை அசை. பாடுசேர்கரம் - பக்கத்திற் பொருந்தியகைகளுமாம். (௩௪)

35. வன்னமாடமேலாடவர்பரத்தைமைமகளி
ருன்னியூடியேபங்கியீர்த்தடிகளாலுதைப்பப்
பொன்னிறுணறத்தமதுகையெழிலியுட்போக்கி
மின்னுவாங்கியேயார்த்தனர்குஞ்சியைவீக்கி.

இ – ள். வன்ன மேல் மாட மகளிர் ஆடவர் பரத்தைமை உன்னி ஊடியே பங்கி ஈர்த்து அடிகளால் உதைப்ப - அழகிய மேன்மாளிகையிலிருக்கின்ற பெண்கள் தத்த

நாயகர்களின் தூர்த்தத் தன்மையை மனைவியர்கள் நினைத்துப் பிணங்கி அவர்கள் குடுமியைப் பிடித்திழுத்துக் கால்களாலுதைக்க,—பொன்னின் நாண் அற - (அதனால்) குடுமியிற்கட்டியிருந்த பொற் கயிறு அறுந்து போக (அதற்குப்பதிலாக),—தமது கை எழிலியுள் போக்கி - தமது கைகளை மேகங்களுக்குள்ளே விட்டு,—மின்னு வாங்கியே - மின்னலை எடுத்து,—குஞ்சியை வீக்கி ஆர்த்தனர் - குடுமியை இறுக்கிக்கட்டினார்கள்.

ஏகாரம் முன்னையது தேற்றம். பின்னையது அசை. (ங௫)

36. முழங்குவானதிதோய்ந்தசின்மாளிகைமுகட்டி
னழுங்கலென்பதையுணர்கிலாமாதரார்கல்வான்
வழங்குகோளுடனுருமினைப்பற்றியம்மனையுங்
கழங்குமாயெறிந்தாடுவரலமரக்கண்கள்.

இ — ள். முழங்கு வான் நதிதோய்ந்த சில் மாளிகை முகட்டில் - முழங்குகின்ற ஆகாயகங்கைபடிந்த சில மாளிகைகளின்மேல்,—அழுங்கல் என்பதை உணர்கிலா மாதரார் - வருத்தம் என்பதை யொருசிறிதும் அறியாது வாழுகின்றபெண்கள்,—அகல்வான் வழங்குகோளுடன் உருமினை பற்றி - பெரிய ஆகாயத்திலேயுலாவுகின்ற கிரகங்களையும் இடிகளையும்பிடித்து,—அம்மனையும் கழங்குமாய் எறிந்து - அம்மானையுங் கழங்குமாகவெறிந்து,—கண்கள் அலமர ஆடுவர் - கண்கள்சுழல விளையாடுவார்கள். எ — று.

உம்மைகள் எண். (ங௬)

37. ஈண்டைமாளிகைமங்கையர்தஞ்சிறாரிரங்க
வாண்டுமற்றவராடுவான்பற்றியாதவன்றேர்
பூண்டமான்றொகைகொடுத்தலுமாங்கவன்போந்து
வேண்டிநின்றிடவாங்கியேயுதவுவார்மெல்ல.

இ — ள். ஈண்டை மாளிகை மங்கையர் தம் சிறார் இரங்க - இவ்விடத்திலுள்ள மாளிகைகளிலே வசிக்கின்ற பெண்கள் தமது குழந்தைகள் அழும்போது,—ஆண்டு - அவ்விடத்தில்,—அவர்கள் ஆடுவான் ஆதவன் தேர் பூண்ட மான் தொகை பற்றி கொடுத்தலும் - அக்குழந்தைகள் விளையாடும்பொருட்டுச் சூரியனது தேரிற்கட்டி யிருக்கின்ற குதிரைகளைப்பிடித்துக்கொடுத்தலும்,—ஆங்கு அவன் போந்து வேண்டி நின்றிட - அவ்விடத்தில் சூரியன்வந்து வேண்டிக்கொள்ளுதலும்,—மெல்லவாங்கியே உதவுவார் - (அக்குழந்தைகளின்கைகளினின்றும் அவைகளை) மெதுவாகவாங்கிக்கொடுப்பார்கள். எ — று.

ஏகாரம் அசை. (ங௭)

38. நீடுமாளிகைமிசைவருமாதர்கைநீட்டி
யீடுசாலுருமேறுடன்மின்பிடித்திசைத்தே
யாடுகிங்கிணிமாலையாமைந்தருக்கணியா
வோடுகொண்டலைச்சிறுதுகிலாப்புனைந்துகப்பார்.

இ — ள். நீடு மாளிகை மிசைவரு மாதர்கை நீட்டி - உயர்ந்தமாளிகையின் மேலுலாவுகின்ற பெண்கள் தமதுகைகளைநீட்டி,—ஈடுசால் உருமு ஏறுடன் மின்பிடித்து இசைத்து - வலிமை மிகுந்த இடியேறுடன் மின்னல்களைப் பிடித்துக்கட்டி,—ஆடுகிங்கிணிமாலையா - அசைகின்ற கிங்கிணிமாலைகளாக,—மைந்தருக்கு அணியா - தங்கள்குழந்தைகளுக்கணிந்து,—ஓடு கொண்டலை சிறு துகிலா புனைந்து உகப்பார் - ஓடுகின்ற மேகங்களைப்பிடித்துச் சிற்றுடைகளாகக்கட்டி (அதனைப்பார்த்து) மகிழ்வார்கள். எ — று.

ஏகாரம் அசை. ஆக என்னும் வினையெச்சங்கள் ஈறுதொக்கு நின்றன. (ங௮)

39. பொங்குமாமணிமேற்றலத்திரவிபோந்திடலு
மிங்கிதோர்கனியெனச்சிறாரவன்றனையெட்டி
யங்கைபற்றியேகறித்தழலுறைப்பவிட்டழுங்கக்
கங்கைவாரிநீரூட்டுவார்கண்டநற்றாயர்.

இ — ள். பொங்கு மாமணிமேல் தலத்து இரவிபோந்திடலும் - பொலிவாகிய மாணிக்கங்களிழைத்துள்ள மாளிகைகளின்மீது சூரியன் வருதலும்,—இது ஓர் கனி எனச்சிறார் அவன்தனை எட்டி அம் கை பற்றியே கறித்து அழல் உறைப்ப விட்டு அழுங்க-இது ஓர்பழமாகும் என்று குழந்தைகள் அச்சூரியனை எட்டி அழகியகையாற் பிடித்துக்கடித்து (அது) சுடுதலால் விட்டு அழுதலும்,—கண்ட நற்றாயர் கங்கை நீர்வாரி ஊட்டுவார்-(அதனைப்) பார்த்த (பெற்ற) தாய்மார்கள் (அச்சூடுநீங்கும்படி) ஆகாயத்திலுள்ள கங்காநீரை அள்ளி ஊட்டுவார்கள். எ — று. இங்கு, ஏ அசை. தன் சாரியை. (௩௯)

40. கண்டுவந்தனைவரும்புகழ்தஞ்சிறார்கலுழ
விண்டுவந்தனைசெய்தெனத்தாழ்ந்தமேனிலத்தில்
வண்டுவந்தனைப்படுகதிர்கைம்மலர்வலிந்து
கொண்டுவந்தனைமாரிரங்காவகைகொடுப்பார்.

இ — ள். அனைவரும் கண்டு உவந்து புகழ் தம் சிறார் கலுழ - எவர்களும்பார்த்து மகிழ்ந்து புகழப்பெற்ற தமது பிள்ளைகள் அழுதலும்,—விண்டு வந்தனை செய்த எனதாழ்ந்த மேல் நிலத்தில் அனைமார் - ஆகாயம் வணங்கினாற்போலத் தாழ்ந்திருக்கப்பெற்ற மேல் வீட்டிலிருக்கின்ற தாய்மார்கள்,—வண் துவம் தனைப்படு கதிர் கை மலர் வலிந்து கொண்டு வந்து இரங்காவகை கொடுப்பார் - வண்மையாகிய நிலைமையினையுடைய சூரியனது கையிலுள்ள மலர்களை வலாற்காரமாகப் பிடுங்கிவந்து (அக்குழந்தைகள்) அழாதிருக்கும்படி கொடுப்பார்கள். எ — று.

தன் சாரியை. உம்மை முற்று. விண்டு***தாழ்ந்த எனவே ஆகாயம் பதிந்து மேல் வீடுகள் உயர்ந்திருக்கின்றனவென்பது தாற்பரியம். துவம்-நிலை. நிகண்டினும் துவமென வுதித்ததென்றார் வீரை மண்டலபுருடரும். (௪0)

41. அஞ்சிலோதியர்மாளிகைமிசைச்சிலரகல்வான்
விஞ்சுதேவரைவிளித்தலுமெய்யுறன்மறுப்ப
வஞ்சர்வஞ்சரென்றரற்றியவ்வானவரிசைய
நஞ்சிறாருடனாடுதுமென்பர்நண்ணினர்க்கு.

இ — ள். மாளிகை மிசை அம் சில் ஓதியர் சிலர் - மாளிகைகளின்மீது இருக்கின்ற அழகிய பொன் வட்டத்தகட்டணியை யணிந்த கூந்தலையுடைய அசுரப்பெண்களிற் சிலர்,—அகல்வான் விஞ்சுதேவரை விளித்தலும் - அகன்ற ஆகாயவழியிற்செல்லுகின்ற மேலாகிய தேவர்களைத் (தழுவும்பொருட்டு) அழைத்தலும்,—மெய்யுறல் மறுப்ப - (அவர்கள்) தழுவுதற்குடன்படாது செல்ல,—வஞ்சர் வஞ்சர் என்று அரற்றி - கபடிகள் கபடிகள் என்றுகூவிப் (பயமுறுத்தலால்),—அ வானவர் இசைய - அத்தேவர்கள் (புணர்ச்சிக்கு) உடன்படுதலும்,—நண்ணினர்க்கு நம் சிறாருடன் ஆடுதும் என்பர் - (அச்சத்தங்கேட்டு) வந்த நாயகர்களுக்கு நமது குழந்தைகளுடன் விளையாடுகின்றோம் என்று சொல்லுவார்கள். எ — று. (௪௧)

42. பொருளின்மாளிகைப்படிற்றியர்புணர்வரென்றுன்னி
வரவுமஞ்சுவர்வராமையுமஞ்சுவர்மடவார்
காவின்மேவுதலவுணர்கள்காண்பர்கொலென்றும்
வெருவுகின்றனரென்செய்வார்விண்ணெறிப்படர்வார்.

இ — ள். விண் நெறி படர்வார் - ஆகாயமார்க்கத்திற் செல்லுகின்ற தேவர்கள்,— பொருளின் மாளிகை படிற்றியர் புணர்வர் என்று உன்னிவரவும் அஞ்சுவர் - பொன்னாற் செய்யப்பட்ட மாளிகைகளிலுள்ள சோரமாதர்கள் (வலிந்துபிடித்துத்தங்களைச்) சேர்வார்களென்று நினைத்து வருதற்கும் பயப்படுவார்கள்,—வராமையும் அஞ்சுவர் - வராமல் விடவும் பயப்படுவார்கள்,—மடவார் கரவில் மேவுதல் அவுணர்கள் காண்பர் கொல் என்றும் வெருவுகின்றனர் - அசுரமாதர்கள் கள்ளமாகச் சேருவதை அசுரர்கள் காண்பாரோ என்றும் பயப்படுகின்றார்கள்,—என் செய்வார் - வேறு என்னசெய்வார்கள். எ — று.

கொல் ஐயம். உம்மைகள் உயர்வு சிறப்பு. (சஉ)

43. மேனிலந்தனின்மங்கையர்சிறார்விடாதிரங்க
லூனமில்கதிர்தேர்வரவவரையாண்டுய்த்து
வானகந்தனிற்சில்லிடையேகிநம்மகவைப்
பானுவந்துநீதருகெனவிடுக்குநர்பலரால்.

இ — ள். மேல் நிலந்தனில் மங்கையர் பலர் சிறார் விடாது இரங்க - மேல் வீட்டிலிருக்கின்ற பெண்களிலனேகர் தங்கள் குழந்தைகள்ஓயாமல் அழுதலும்,—ஊனம் இல் கதிர் தேர் வர - குற்றமில்லாத சூரியனதுதேர் - (அவ்வழியாக) வர,—அவரை ஆண்டு உய்த்து - அக்குழந்தைகளை அத்தேரின்மேலாக வைத்து,—பானு நீ வானகந்தனில் சில் இடை ஏகி - சூரியனே நீ ஆகாயத்திலே சிறிதுதூரஞ்சென்று,—நம்மகவை வந்து தருகென விடுக்குநர் - நமது குழந்தைகளைக் கொண்டுவந்து விடக்கடவை என்று அனுப்புகின்றார்கள். எ — று. ஆல் அசை. தன் இரண்டும் சாரியை. (சங)

44. கலதியாகியவவுணர்தம்மாதர்கால்வருடிச்
சிலதியாரெனவணங்கினோரேவல்செய்கிற்பார்
சலதியார்தருமுலகமேற்றெரிகுறிற்றவமே
யலதியாவுளவேண்டியாங்குதவநின்றனவே.

இ — ள். கலதியாகிய அவுணர் தம்மாதர் கால்வருடி - மூதேவிகளாகிய அசுரமாதர்களது கால்களைப்பிடித்து,—சிலதியார் என அணங்கினோர் ஏவல் செய்கிற்பார் - ஏவன்மகளிரைப்போலத் தேவமாதர்கள் தொண்டு செய்வார்கள்,—சலதி ஆர் தரும் உலக மேல் தெரிகுறில் - கடல் சூழ்ந்த உலகத்தில் பார்க்குமிடத்து,—தவமே அலது வேண்டி யாங்கு உதவ நின்றன யாவுள - தவமேயல்லாமல் வேண்டியவற்றைக் கொடுத்தற்கு நின்றுள்ளனயாவை. எ — று.

தம் சாரியை. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. (சச)

45. ஐந்தவாகியதருக்களுமணியுநல்லாவு
நந்துமம்புயநிதியமும்பிறவுமிந்நகரின்
மைந்தர்மாதர்களிருந்துழியிருந்துழிவந்து
சிந்தைதன்னிடைவேண்டியாங்குதவியேதிரியும்.

இ — ள். ஐந்த ஆகிய தருக்களும் மணியும் நல் ஆவும் நந்தும் அம்புயநிதியமும் பிறவும் - ஐந்து என்னும் எண்ணையுடையனவாகிய சந்தானமுதலிய விருட்சங்களும் சிந்தாமணியும் நல்ல காமதேனுவும் சங்கநிதியும் பதுமநிதியும் மற்றுள்ளவைகளும்,—இ நகரில் மைந்தர் மாதர்கள் இருந்துழி இருந்துழி வந்து - இந்நகரத்திலுள்ள ஆடவர்களும் பெண்களும் இருக்குமிடங்கடோறு மிருக்குமிடங்கடோறும் வந்து,—சிந்தை தன்னிடை வேண்டியாங்கு உதவியே திரியும் - அவர்கள் மனசில் விரும்பியவற்றைக் கொடுத்துக் கொண்டு உலவாநிற்கும்.

தன் சாரியை. ஏகாரம் அசை. உம்மைகள் முற்று. (சரு)

46. மீதுபோகியமாளிகைக்காப்பினுண்மேவு
மாதர்வானெறிச்செல்லுவோர்சிலர்தமைவலித்தே
காதலாற்பிடித்தொருசிலர்முறைமுறைகலந்து
போதிராலெனவிடுப்பர்பின்னசமுகிபோல்வார்.

இ – ள். மீது போகிய மாளிகை காப்பினுள் மேவும் அசமுகி போல்வார் மாதர் ஒருசிலர் - மேலாகவுயர்ந்த மேல் வீடுகளுக்குள் காவலுடன் இருக்கின்ற அசமுகியை யொத்தவர்களாகிய பெண்களுக்குளொருசிலர்,—வான் நெறி செல்லுவோர் சிலர்தமை - ஆகாயமார்க்கமாகப்போகின்றவருட்சிலரை,—காதலால் வலித்து பிடித்து முறை முறை கலந்து பின் போதிர் எனவிடுப்பர் - விருப்பத்தோடு இழுத்துப் பிடித்து முறை முறை யாகச்சேர்ந்து பின்பு போங்கள் என்று விடுவார்கள். எ – று.

ஆல் அசை. தம் சாரியை. ஏகாரம் தேற்றம். (சசு)

வே று.

47. மேதாவிகொண்டகதிர்வெய்யவனைவெஞ்சூர்
சேய்தான்வலிந்துசிறைசெய்திடலின்முன்ன
மேதாமினங்கொலெனவெண்ணியவனென்றாழ்
வாதாயனங்கடொறும்வந்துபுகலின்றே.

இ - ள். மேதாவி கொண்ட கதிர் வெய்யவனை வெம் சூர் சேய் தான் முன்னம் வலிந்து சிறை செய்திடலின் - மேன்மை பொருந்திய கிரணங்களையுடைய சூரியனைக் கொடிய சூரபன்மனது குமாரனாகிய பானுகோபன் முன்னாளிலே பிடித்துச் சிறைவைத்தமையால்,—இனம் ஏது ஆம் கொல் என எண்ணி - (நுழைந்தால்) இன்னும் எப்படி யாகுமோவென்று நினைத்து,—அவன் என்றாழ் வாதாயனங்கள் தொறும் வந்து புகல் இன்று - அவனுடைய கிரணங்கள் சாளரங்கடோறும் போய்ப்புகவில்லை. எ – று.

ஏகாரம் அசை. கொல் ஐயம். முற்பயமிருத்தலால் தன் கதிர்கள் அங்கே செல்ல விடாது கவனமாய்ச் சென்றானென்பது தாற்பரியம். (சஎ)

48. தேசுற்றமாடமுறைசீப்பவருகாலோன்
வாசப்புனற்கலவைவார்புணரிகொண்கன்
வீசப்புலர்த்தியிடவிண்படரும்வெய்யோ
னாசுற்றதானவரமர்ந்திவணிருந்தார்.

இ – ள். முறை வரு காலோன் தேசு உற்ற மாடம் சீப்ப - முறைப்படி வருகின்ற வாயுதேவன் ஒளிபொருந்திய மாளிகைகளை அலகிடவும்,—வார் புணரி கொண்கன் கலவை வாசம் புனல் வீச - நெடிய சமுத்திரராசனாகிய வருணன் கலவைக்குழம்பைக் கரைத்துப் பனிநீர் தெளிக்கவும்,—விண் படரும் வெய்யோன் புலர்த்தியிட - ஆகாயவழியாகச் செல்லுகின்ற சூரியன் அவ்வீரத்தை யுலரச்செய்யவும்,—ஆசு உற்றதானவர் அமர்ந்து இவண் இருந்தார் - களங்கம்பொருந்திய அசுரர்கள் விரும்பி இவ்விடத்தில் வாழ்கின்றார்கள். எ – று.

கலவை - சவாது புனுகு முதலியன சேர்த்தரைக்கப்பட்ட குழம்பு. சீப்பவும் வீசவும் புலர்த்தியிடவும் என்னும் உம்மைகள் தொக்கன. (சஅ)

49. பால்கொண்டதெண்கடன்மிசைப்பதுமைதன்னை
மால்கொண்டுகண்டயிலும்வண்ணமிதுவென்ன
மேல்கொண்டநுண்பளிதமேனிலமதன்கட்
சூல்கொண்டகாரெழிலிமின்னிநெடிதுஞ்சும்.

இ — ள். பால் கொண்ட தெண் கடல் மிசை பதுமை தன்னை - பாலைத்தன்னிடத்துக் கொண்டுள்ள தெளிந்த கடலின்மீது இலக்குமியை,—கொண்டு மால் கண் துயிலும் வண்ணம் இது என்ன - உடன்கொண்டு விஷ்ணுவானவர் நித்திரை செய்யுந் தன்மையிதுவாகும் என்று சொல்லும்படி,—மேல் கொண்ட நுண்பளித மேல் நிலம் அதன்கண் - மேலாகவுயர்ந்த நுட்பமான பளிங்கினுற் செய்யப்பட்ட மேல் வீடுகளில்,—சூல் கொண்ட கார் எழிலி மின்னினொடு துஞ்சும் - கருக்கொண்ட கரியமேகங்கள் மின்னலுடனே படிந்திருக்கும். எ — று.

தன் சாரியை. அது பகுதிப்பொருள் விகுதி. (சக)

வே று.

50. குழலினோதையுமெழால்களினோதையுங்குறிக்கும்
வழுவில்கோட்டொடுகாகளவோதையுமற்றை
முழவினோதையும்பாடுநரோதையுமுடிவில்
விழவினோதையுந்தெண்டிரையோதையின்மிகுமால்.

இ — ள். குழலின் ஓதையும் - வேய்ங்குழலினோசையும்,—எழால்களின் ஓதையும் - வீணைகளினோசையும்,—குறிக்கும் வழு இல் கோடொடு காகள ஓதையும் - ஊதுகின்ற குற்றமில்லாத கொம்புடனே காகளங்களினோசையும்,—மற்றை முழவின் ஓதையும் - (இதுவன்றி) மத்தளத்தினோசையும்,—பாடுநர் ஓதையும் - பாடுகின்றவர்களுடைய ஓசையும்,—முடிவு இல் விழவின் ஓதையும் - கணக்கில்லாத விழாக் கொண்டாட்டத்தினோசையும்,—தெண் திரை ஓதையின் மிகும் - கடலோசையினும் பார்க்க மிஞ்சி இருக்கும். எ — று. ஆல் அசை. உம்மைகள் எண். திரை ஆகுபெயர். (ருo)

51. மதனிழுக்குறுமைந்தருமாதரும்வனமா
மதனிழுக்கியவீதியில்வீசும்வண்கலவை
பதனிழுக்குறச்சேதகமாகுமீன்பலவும்
பதனிழுக்கியவாந்தினம்புனைந்தெறிபணிகள்.

இ — ள். மதன் இழுக்கு உறு மைந்தரும் மாதரும - மன்மதனும வசையடையத்தக்க அழகையுடைய வாலிபர்களாகிய புருடர்களும் பெண்களும்,—வனம் மா மதன் இழுக்கியவீதியில் - வனத்திலுள்ள யானைகளின் மதநீர் வழுக்கலாகிய வீதியிலே,—வீசும் வண் கலவை - எறிகின்ற சிறந்த கூட்டுவர்க்கச்சந்தனம்,—பதன் இழுக்கு உற சேதகம் ஆகும் - கால்வழுக்கும்படி சேறாகும்,—தினம் புனைந்து எறிபணிகள் - தினந்தோறும் அணிந்து (வெறுத்துத்) தள்ளுகின்ற ஆபரணங்கள்,—மீன் பலவும் பதன் இழுக்கியவாம் - நட்சத்திரங்களெல்லாம் தங்கள் பதவிகளினின்றும் தவறி விழுந்தவைகளுக்கு ஒப்பாம். எ — று.

உம்மை முன்னையவை எண்; பின்னையது முற்று. (ருக)

52. அளப்பில்வேட்கையங்கொருவர்கண்வைத்துமற்றதனை
வெளிப்படுக்கிலர்மெலிதலுங்குறிகளேவிளம்ப
வொளிப்பதென்னுளம்பகரெனவாற்றலாதுடைந்து
கிளிப்பெடைக்கிருந்தொருசிலமடந்தையர்கிளப்பார்.

இ - ள். ஒரு சில மடந்தையர் - சிலபெண்கள்,—அங்கு ஒருவர் கண் அளப்பு இல் வேட்கைவைத்து - அங்கே ஒரு நாயகனிடத்தில் அளவில்லாத ஆசையை வைத்து,—அதனை வெளிப்படுக்கிலர் மெலிதலும்-அவ்வாசையை வெளிப்படுத்தாது (விகாரத்தால்)

வருந்துதலும்,—குறிகளே விளம்ப - (அவ்விகாரநோயைச் சரீரத்துள்ள) அடையாளங் களே யறிவிக்க,—உளம் ஒளிப்பது என் - உள்ளமே நீ ஒளிப்பதென்னே?—பகர் என- சொல்லென்று,—ஆற்றலாது உடைந்து - அவ்வாசையைப் பொறுக்கலாற்ருது மன நெகிழ்ந்து,—கிளி பெடைக்கு இருந்து கிளப்பார் - தாம் வளர்த்த பெண்கிளிக்கு இருந்து சொல்லுவார்கள். எ — று. மற்று அசை. ஏகாரம் தேற்றம். (ருஉ)

53. குருளைமான்பிணித்திளஞ்சிறுரூர்ந்திடுங்கொடித்தே
ருருளையொண்பொனைமணித்தலங்கவர்ந்துகொண்டுறுவ
வெருளின்மாக்களைவெறுப்பதென்முனிவரும்விழைவார்.
பொருளினுசையைநீங்கினர்யாவரேபுவியில்.

இ — ள். மான் குருளை பிணித்து இளம் சிறுர் ஊர்ந்திடும் கொடிதேர் உருளை ஒண் பொனை - மான் குட்டிகளைக்கட்டி இளஞ்சிறுவர்கள் நடாத்துகின்ற கொடிகளையுடைய தேரிலுள்ள உருளையினது சிறந்த பொன்னே,—மணி தலம் கவர்ந்து கொண்டு உறுவ - இரத்தினமயமாகிய நிலம் கவர்ந்துகொண்டிருக்கின்றன,—வெருளின் மாக்களை வெறுப்பதென் - (ஆதலால்) மயக்கம்பொருந்திய மனிதர்களைப் பொருளாசையுடையவர்களென்று நாம் வெறுப்பது என்ன?,—முனிவரும் விழைவார் - (இச்செல்வச் சிறப்பைக் கண்டால் ஆசையை வெறுத்திருக்கின்ற) முனிவரும் விரும்புவார்கள்,—புவியில் பொருளின் ஆசையை நீங்கினர் யாவரே - பூமியிலே பொருளாசையை விட்டவர் யாவர். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை உயர்வு சிறப்பு. உருளையின் பொன்னே அசத்தாகிய மணித்தலங் கவர்ந்துகொண்டிருக்குமாயின் மாக்களை வெறுப்பதென்? முனிவரும்விழைவார் எனவே மகேந்திரபுரம் அளவிடப்படாத எவ்வகைப்பெருஞ்செல்வங்களையும் படைத்ததென வியந்து கூறியவாறு. ஒண்பொன் - மாற்றுயர்ந்தபொன். மான் - குதிரையெனினு மமையும்; இப்பொருட்கு "ஆமா கோனவ் வணையவும் பெறுமே" என்றதனுல் னகரம்பெற்றதாகக்கொள்க. (ருங)

54. விழைவுமாற்றியதவத்தினரேனுமிவ்வெறுக்கை
மொழியினேரினுமவுணராகத்தவமுயல்வா
ரொழியுமேனையர்செய்கையையுரைப்பதென்னுலகிற்
கழிபெரும்பகனேற்றவரேயிதுகாண்பார்.

இ — ள். விழைவுமாற்றிய தவத்தினர் ஏனும் - ஆசையைவெறுத்துவிட்ட தவத்தையுடைய முனிவர்களாயினும்,—இவ்வெறுக்கை மொழியின் ஓரினும் - இச்செல்வச் சிறப்பைச் சொல்வதனுற் கேட்டறிந்தாலும்,—அவுணர் ஆக தவம் முயல்வார் - அவுணராய் வருதற்குத் தவத்தை முயன்று செய்வார்கள்,—ஒழியும் ஏனையர் செய்கையை உரைப்பதென் - (இவர்களன்றி) மற்றுள்ளவர்களது செய்கையைச் சொல்வது என்னே?,—உலகில் கழிபெரும் பகல் நோற்றவரே இது காண்பார் - உலகத்திலே மிக நெடுங்காலமாகத் தவஞ்செய்தவர்களே இச்செல்வப் பெருக்கைக் காண்பார்கள். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மைகள் உயர்வு சிறப்பு. (ருச)

55. குழவிவான்மதிக்கிம்புரிமருப்புடைக்கொண்மூ
விழுமெனச்சொரிதானநீராறுபோலேகி
மழலைமென்சிருராவணத்தாடும்வண்சுண்ணப்
புழுதியீண்டவின்வறப்பவான்கங்கையும்புலா.

இ ள். வால் குழவி மதி கிம்புரி மருப்பு உடை கொண்மூ - வெள்ளிய இளம்பிறை போன்ற பூணமைந்த கொம்புகளையுடைய மேகம்போன்ற யானைகள்,—இழுமெனச்

சொரி தானம் நீர் ஆறுபோல் ஏகி - இழுமென்னுங் குறிப்போசையோடு சொரிகின்ற மதநீர் ஆறுபோலச் சென்று,—மெல் மழலை சிறார் ஆவணத்து ஆடும் வண் சுண்ணம் புழுதி ஈண்டலின் - மெல்லியமழலைச் சொற்களையுடைய சிறுவர்கள் வீதிகளிலே விளையாடுகின்ற அழகிய சுண்ணப்பொடிகள் கலத்தலினால்,—வான்கங்கையும் புலாவறப்ப - ஆகாயகங்கையும் நீரறவற்றுகின்றது. எ — று.

உம்மை உயர்வு சிறப்பு. (ருரு)

56. கங்கையூண்பயனாகவுந்தூயதெண்கடனீ
ரங்கண்மாநகர்ப்பரிசனமாடவுமணைந்து
துங்கமேனிலைமாளிகையாவணஞ்சோலை
யெங்கும்வாவியும்பொய்கையும்பிறவுமாயீண்டும்.

இ — ள். கங்கை ஊண் பயன் ஆகவும் - கங்காநதியுண்கின்ற தீர்த்தமாகவும்,— தூய தெண் கடல் நீர் அம் கண் மாநகர் பரிசனம் ஆடவும் அணைந்து - சுத்தமாகிய நன்னீர்க்கடல் அழகிய இடமகன்ற பெரிய நகரத்துள்ள ஜனங்கள் குளிக்கும் நீராகவும் வந்து,—துங்கமேல் நிலை மாளிகை ஆவணம் சோலை எங்கும் - உயர்ந்தமேலாகிய நிலைகளையுடைய மாளிகைகளிலும் வீதிகளிலும் சோலைகளிலும் மற்றும் எவ்விடங்களிலும்,— வாவியும் பொய்கையும் பிறவுமாய் ஈண்டும் - வாவிகளும் குளங்களும் பிறவுமாகிநெருங்கியிருக்கும். எ — று.

உம்மை எங்கும் என்பதில் முற்றும், பிறவும் என்பதில் இறந்தது தழீஇயவெச்சமும், ஏனையவற்றில் எண்ணுமாம். (ருசு)

57. வில்லியற்றுவோர்வாட்படையியற்றுவோர்வேறா
மெல்லையில்படையுள்ளவுமியற்றுவோரிகலான்
மல்லியற்றுவோர்மாயமதியற்றுவோர்மனுவின்
சொல்லியற்றுவோர்கண்ணுறுபுலந்தொறுந்தொகுமால்.

இ — ள். வில் இயற்றுவோர் வாள் படை இயற்றுவோர் - விற்போரை அப்பியாசஞ் செய்கின்றவர்களும் வாட்போரைப்பழகுகின்றவர்களும்,—வேறு ஆம் எல்லை இல் படை உள்ளவும் இயற்றுவோர் - இவைகளுக்கு வேறாகிய அளவற்ற ஆயுதங்களாயுள்ளவற்றைப் பழகுகின்றவர்களும்,—இகலால் மல் இயற்றுவோர் - வலிமையோடு மல்யுத்தம் பயிலுகின்றவர்களும்,—மாயமது இயற்றுவோர் - மாயவித்தைகளை அப்பியாசஞ்செய்கின்றவர்களும்,—மனுவின் சொல் இயற்றுவோர் - மந்திரசாஸ்திரங்களை அப்பியாசஞ் செய்கின்றவர்களும்(ஆகிய இவர்கள் கூட்டங்கள்),—கண் உறு புலம் தொறும் தொகும் - கட்பார்வை செல்லுமிடமெங்கும் இருக்கும். எ — று.

ஆல் அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை இறந்தது தழீஇயவெச்சம். ()

58. நாடிமேலெழத்தசையிலாதுலறியேநரையாய்க்
கோடுபற்றிமூத்தசைந்திடுவோரையுங்கூற்றால்
வீடுவோரையும்பிணியுழப்போரையுமிடியால்
வாடுவோரையுங்கண்டிலமிதுதவவலியே.

இ — ள். நாடிமேல் எழ தசை இலாது உலறியே - நரம்புகள் மேலேதெரியத் தசையில்லாது (வற்றி) யுலர்ந்து,—நரையாய் - நரைத்து,—கோடுபற்றி மூத்து அசைந்திடுவோரையும் - கோல் ஊன்றி முதிர்ந்து தள்ளாடுகின்றவர்களையும்,—கூற்றால் வீடுவோரையும் - யமனால் இறப்பவர்களையும்,—பிணி உழப்போரையும் - வியாதியினால் வருந்து

வோர்களேயும்,—மிடியால் வாடுவோரையும் - தரித்திரத்தால் வாடுகின்றவர்களேயும்,— கண்டிலம் - கண்டேமில்லே,—இது தவவலியே - இவ்வாறிருத்தற்குக் காரணம் தவத்தின் வல்லமையேயாம். எ — று.

ஏகாரங்கள் தேற்றம். உம்மைகள் எண். (௫அ)

59. கன்னன்மாண்பயன்வாலளெய்கடுந்தேற
றுன்னுதீயபாலளக்கர்தம்பேருருச்சுருக்கி
மன்னனுணேயாலிந்நகர்மனேதொறுமருவிப்
பன்னெடுங்குளனுகியேதனித்தனிபயில்வ.

இ — ள். மாண் கன்னல் பயன் வால் அளே நெய் கடும் தேறல் தீயதுன்னுபால் அளக்கர் தம் பேர் உரு சுருக்கி - மாட்சிமைபொருந்திய கருப்பஞ்சாறும் வெள்ளிய தயிரும் நெய்யும் இறுகியதேனும் தித்திப்பாகிய பாலும் ஆகிய கடல்கள் தமது பெரிய உருவத்தைச் சுருக்கி,—மன்னன் ஆணேயால் இ நகர் மனேதொறும் மருவி - அரசனுகிய சூரபன்மனது கட்டளேயினுல் இந்நகரத்திலுள்ள வீடுகள்தோறும்வந்து,—பல் நெடும் குளன் ஆகியே தனி தனி பயில்வ - பலபெரியகுளங்களாய்த் தனித்தனியே யிருக்கின்றன.

ஏகாரம் தேற்றம். (௫௯)

60. அட்டதேறலுமடாதமைதேறலுமருந்திப்
பட்டுவார்துகில்கீறியேதம்மொடுபறைந்து
விட்டநாணினேரொருசிலமடந்தையர்வியன்கை
கொட்டியாவரும்விழைவுறக்குரவையாட்டயர்வார்.

இ — ள். அட்ட தேறலும் அடாது அமை தேறலும் அருந்தி - காய்ச்சிய மதுவையும் காய்ச்சாதமைந்த மதுவையும் குடித்து (அவ்வெறிமயக்கத்தால்),—வார் பட்டு துகில் கீறி - நெடிய பட்டுவஸ்திரங்களேக் கிழித்தெறிந்து,—தம்மொடு பறைந்து - தம்முடனே பேசிக்கொண்டு,—விட்ட நாணினேர்-வெட்கமில்லாதவர்களாய்,—ஒரு சில மடந்தையர்-சிலபெண்கள்,—வியன்கைகொட்டி - அழகியகைகளேக்கொட்டி - யாவரும் விழைவுற - (கண்டோர்) யாவரும் விரும்பும்படி,—குரவை ஆட்டு அயர்வார் - குரவைக் கூத்தாடுவார்கள். எ — று.

உம்மைகளில் முன்னேயன விரண்டும் எண்; பின்னேயதுமுற்று. ஏகாரம் அசை. அட்டதேறல் - சாராயம் முதலியன. அடாதமைதேறல் - கள்ளு. குரவைக் கூத்து - மாதர் பலர் கூடிக் கைகோத்தாடுமோர் நடனம். (௬0)

61. திலகவாணுதன்மாதராடவர்சிறுவரையி
னலகிலாமுறைபுனேதலினணிந்தணிந்தகற்று
மிலகுபூண்டுகின்மாலேகந்தம்பிறவீண்டி
யுலகில்விண்ணகரெனச்சிறந்தாவணமுறுமே.

இ — ள். திலகம் வாள் நுதல் மாதர் ஆடவர் சிறுவரையின் அலகு இலாமுறை புனேதலின்-திலகம் விளங்காநின்ற நெற்றியையுடையபெண்களும் புருடர்களும் சிறுபொழுதினுள்ளே (தம்மை) அனேகம்முறை அலங்கரித்தலால்,—அணிந்து அணிந்து அகற்றும் இலகு பூண் துகில் மாலே கந்தம் பிற ஈண்டி - தரித்துத் தரித்து (ஆகாதனவென்று வெறுத்துத்) தள்ளுகின்ற விளங்காநின்ற ஆபரணங்களும் ஆடைகளும் மாலேகளும் சந்தனக்குழம்புகளும் மற்றுள்ளனவும் நிறைந்து,—உலகில் விண் நகர் என சிறந்து ஆவணம் உறும் - உலகத்தில் சுவர்க்கம் என்று சொல்லும்படி சிறப்புற்று வீதிகளிருக்கும். எ—று.

ஏகாரம் அசை. திலதமிட்ட ஒளிபொருந்திய நெற்றியெனினு மமையும். அலங்காரஞ் செய்தலையே பொழுது போக்காக உடையர் என்பார் 'சிறவரையி னலகிலாமுறை புனைதலின்' என்றார். கந்தம் வாசனைத் திரவியங்களெனினுமாம். (கக)

62. கொய்தலர்ந்தபூநித்திலமணியுடன்கொழித்துப்
பொய்தலாடுவார்முற்றிலாலெற்றுபொற்பூழி
யெய்தலானதிந்நகரளவோகடலிகந்து
நெய்தலங்கரைக்கானலையடைந்துமேனிமிரும்.

இ — ள். அலர்ந்த பூ கொய்து நித்திலம் மணியுடன் கொழித்து பொய்தல் ஆடுவார்-மலர்ந்த பூக்களைப்பறித்து (அப்பூக்களை) முத்துக்களோடும் இரத்தினங்களோடும் கொழித்துப் பொய்தலாகிய விளையாட்டைச் செய்கின்ற பெண்கள்,—முற்றிலால் எற்று பொன் பூழி - முறத்தினாலேபுடைக்கின்ற பொற்றுகள்கள்,—எய்தல் ஆனது இ நகர் அளவோ - செல்லுதல் இவ்வீரமகேந்திரத்தி னெல்லைவரையுமோ,—கடல் இகந்து - கடலைக்கடந்து,—நெய்தல் அம் கரை கானலை அடைந்து மேல் நிமிரும் - நெய்தல் நிலமாகிய அக்கடற்கரையிலுள்ள உப்பளங்களையடைந்து அப்பாலுஞ் செல்லும். எ — று.

அம் சாரியை. ஓகாரம் எதிர்மறை. கானல் - கழிக்கரைச்சோலை யெனினுமாம். ()

63. சுந்தரங்கெழுசெய்யவெண்மலர்களாற்றொடுத்த
கந்துகங்களைச்சிறுவர்கள்கரங்களினேந்தி
யந்தரம்புகவெறிதலுமாங்ஙனமேகி
வந்துவீழுமாவிருகதிர்வழுக்கிவீழ்வனபோல்.

இ — ள். சுந்தரம் கெழு செய்ய (மலர்களால்) வெண் மலர்களால் தொடுத்த கந்துகங்களை - அழகுபொருந்திய சிவந்த பூக்களினாலும் வெள்ளைப் பூக்களினாலுங் கட்டப்பட்ட பந்துகளை,—சிறுவர்கள் கரங்களின் ஏந்தி - பிள்ளைகள் கைகளிலேந்தி,—அந்தரம் புக எறிதலும் - மேலாகச்செல்லும்படி எறிதலும்,—ஆங்ஙனம் ஏகி - மேலேசென்று,—இரு கதிர் வழுக்கி வீழ்வன போல் வந்து வீழும் - சூரியசந்திரர்கள் தவறிக் கீழேவிழுவனபோல வந்துவிழும். எ - று.

ஆல் அசை. சூரியனுஞ் சந்திரனுஞ் செந்நிறமும் வெண்ணிறமும் உடையவர்களாதலால் செம்மலர்ப்பந்தைச் சூரியன்போலவும் வெண்மலர்ப்பந்தைச் சந்திரன்போலவுங் கூறினார். (கரு)

64. கழகமீதுமுன்போந்திடமுதுகணக்காயர்
குழகுமென்சிறார்தனித்தனிவந்தனர்குறுகிப்
பழகுகற்பினூல்பயின்றனர்மாலையிற்பட்ட
வழகுசேர்மதிப்பின்னெழுகணங்கண்மொய்த்தனையார்.

இ — ள். முது கணக்காயர் - (கல்விகேள்விமுதலியவற்றான்) முதிர்ந்த உபாத்தியாயர்கள்,—முன் கழக மீது போந்திட - முன்னர் வித்தியாசாலைக்குப்போக,—குழகு மென் சிறார் - இளமையாகிய சிறுபிள்ளைகள்,—மாலையில் பட்ட அழகு சேர்மதி பின் எழு கணங்கள் மொய்த்த அனையார் - மாலைக்காலத்திற்றோன்றிய அழகுபொருந்திய சந்திரனுக்குப் பின்பு உதிக்கின்ற நட்சத்திரங்கள் மொய்த்தாற்போன்றவர்களாய்,—தனி தனி வந்தனர் குறுகி - தனித்தனியாக வந்து சேர்ந்து,—பழகு கற்பின் நூல் பயின்றனர் - பழகுகின்ற கல்விக்குரிய சாஸ்திரங்களை அப்பியாசஞ்செய்கின்றார்கள். எ - று.

பள்ளிக்கூடம் ஆகாயத்தையும் உபாத்தியாயர் சந்திரனையும் மாணவர்கள் நட்சத்திரங்களையும் போல்வர் என்க. (கச)

65. கள்ளினாற்றலாற்களிப்பவர்தேறலைக்கரத்திற்
கிள்ளையாணினுக்கூட்டியேகாமநோய்கிளர்த்தி
யுள்ளமோடியசேவலுமிரங்கவோதிமத்துப்
புள்ளின்மென்பெடைமீமிசைகலந்திடப்புணர்ப்பார்.

இ - ள். கள்ளின் ஆற்றலால் களிப்பவர் - (குடித்த) கள்வெறியினாலே மயக்கங் கொண்டவர்கள்,—கரத்தில் தேறலை - கையிலிருக்கின்ற கள்ளை,—கிள்ளை ஆணினுக்கு ஊட்டியே - ஆண்கிளிக்குப்பருக்கி,—காமநோய் கிளர்த்தி - காமவிகாரத்தையெழுப்பி,— உள்ளம் ஓடிய சேவலும் இரங்க - மனசிற்பொருந்திய விகாரத்தால் சேரவேண்டுமென் றிருந்த ஆண் அன்னமும் வருந்த,—மென் ஓதிமத்து புள்ளின் பெடை மீமிசை - மென் மையாகிய பெடையன்னத்தின்மேல்,—கலந்திட புணர்ப்பார் - சேரும்படிசெய்வார்கள்.

ஏகாரம் இசைநிறை. அத்து சாரியை. உம்மை எச்சம். இலிங்காங்க பகாங்கங்கள் தம்முட்பொருந்தாத புட்களைப் புணரச்செய்தல் இயலாதாயினும், மதுமயக்கத்தால் அங் ஙனம்செய்தனரென்பார் 'கள்ளினாற்றலால்' என்றார். கரத்திற்கிள்ளையெனக்கொண்டு கையிலுள்ள கிளியென்றலுமாம். (௬௫)

66. உரத்தின்முன்னரேவெளவிவந்தீட்டியவும்பர்
சிரத்தின்மாமுடித்திருமணிபறித்தொருசிலவ
ரரத்தமேயதம்பங்கியிற்பஞ்சிகளழுத்தும்
பரத்தைமாரடிப்பாதுகைக்கணிபெறப்பதிப்பார்.

இ - ள். ஒரு சிலவர் உரத்தின் முன்னரே வெளவி வந்து ஈட்டிய உம்பர் சிரத் தின் மாமுடி திருமணி பறித்து - சில அசுரர்கள் (தங்கள்) வலிமையினால் முன்னமேயப கரித்துக்கொண்டு வந்து சேர்த்த தேவர்களது தலையிற்றரித்த பெரிய முடிகளிற்பதித்த அழகிய இரத்தினங்களைப்பறித்தெடுத்து,—அரத்தம் மேய தம் பங்கியில் - செந்நிறம் பொருந்திய தமது குடுமியில்,—பஞ்சிகள் அழுத்தும் பரத்தைமார் அடி பாதுகைக்கு அணி பெற பதிப்பார் - (ஊடல்காரணமாக உதைப்பதனால்) செம்பஞ்சின் சாயத்தை யுண்டாக்குகின்ற பரத்தையர்களது பாதகுறடுகளுக்கு அழகுண்டாகும்படி பதிப்பார்கள்.

ஏகாரம் இசைநிறை. (௬௬)

67. தேவிமார்பலர்வருந்தவுமனையர்பாற்சேரா
ராவிபோவதுநினைகிலராகியேயயலார்
பாவைமார்தமைவெஃகியேபட்டிமைநெறியான்
மேவுவார்சிலர்காண்பதேயிதுவுமென்விழியே.

இ - ள். பலர் தேவிமார் வருந்தவும் - (விவாகஞ்செய்துகொண்ட) பல மனைவியர் கள் (தம்மோடுபுணராது செல்கின்றாரேயென நினைந்து விகாரத்தால்) வருந்தவும்,— சிலர் அனையர் பால் சேரார் - சில அசுரர்கள் அவர்களிடத்திற் சேராதவராய்,—ஆவி போவதும் நினைகிலர் ஆகியே - ("கையுறிற்கால் குறையும்" என்றபடி தம்) உயிர்போக வருமே என்பதையும் நினையாதவராகி,—அயலார் பாவைமார் தமை - பிறர்மனைவியரை,— வெஃகியே பட்டிமை நெறியால் மேவுவார் - விரும்பிக் களவுமார்க்கமாகப் புணர்கின்றார் கள்,—இதுவும் என்விழி காண்பதே - இந்தப்பாதகமானசெயலையும் என் கண்கள் பார்க் கலாமா?

தம் சாரியை. உம்மைகளில் முன்னையது உயர்வுசிறப்பு; மற்றையது இறந்ததுதழீ இயவெச்சம். பின்னையது இழிவுசிறப்பு. ஏகாரம் ஆகியே, வெஃகியே என்பனவற்றில் தேற்றமும், காண்பதே என்பதில் எதிர்மறையும், விழியே என்பதில் அசையுமாம். தம்

மனைவியர் வருந்தவும் பிறன்மனைவியரைப் புணருகின்றவர்கள் இம்மையிற் பலராலுமி கழப்பட்டு மறுமையில் நரகத்துன்பம் அனுபவித்தல் தப்பாதாகலான் இப்படிப்பட்ட பாவச்செயலைக் காண்பதும் பாவமேயாகுமென்பார் 'இதுவும் என்விழிகாண்பதே' எனப்பரிதபித்துக்கூறினர். (கூஎ)

68. நெருக்குபூண்முலையியக்கர்தம்மங்கையர்நெஞ்ச
முருக்குமேருடையமரார்தம்மங்கையருளத்தி
னிரக்கநீங்கியவவுணர்தம்மங்கையரேனை
யரக்கர்மங்கையர்கணிகைமங்கையர்களாயமர்வார்.

இ – ள். நெருக்கு பூண்முலை இயக்கர் தம் மங்கையர் - (ஒன்றையொன்று) நெருக்குகின்ற ஆபரணமணிந்த ஸ்தனங்களையுடைய யக்ஷமாதர்களும்,—நெஞ்சம் உருக்கும் ஏர் உடை அமரர்தம் மங்கையர் - (பார்ப்பவர்களுடைய) மனத்தை உருக்குகின்ற அழகையுடைய தேவமாதர்களும்,—உளத்தில் இரக்கம் நீங்கிய அவுணர்தம் மங்கையர் - மனசிலிரக்கமில்லாத அசுரமாதர்களும்,—ஏனை அரக்கர் மங்கையர் - மற்றையராட்சதமாதர்களும் ஆகிய இவர்கள்,—கணிகை மங்கையர்களாய் அமர்வார் - (இந்நகரத்தில்) வேசைமாதர்களாக இருக்கின்றார்கள். எ - று.

தம் மூன்றும் சாரியை. எல்லாசாதிகளிலும் அழகுடையமாதர்களிருப்பினும் தேவமாதர்களுக்கு ஒப்பாகார் என்பார் "நெஞ்சமுருக்கும்****மங்கையர்" என்று விசேடித்துக் கூறினர். நிலத்தியல்பால் நீர்திரிந்தாற்போல இனத்தியல்பால் இத்தன்மையராயினரென்க; இதுபற்றியன்றோ 'தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற—தீயார் சொற் கேட்பதுவுந் தீதே-தீயார்—குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ—டிணங்கியிருப்பதுவுந் தீது' என ஆன்றோரும் அறிவுறுத்தினர். (கூஅ)

69. கந்தமானபல்களபமுஞ்சுண்ணமுங்கமழும்
பந்துமாலையுஞ்சிவிறிநீரொடுபரத்தையர்கண்
மைந்தரோடெறிந்தாடல்யாருளத்தையுமயக்கும்
இந்தவீதிகொல்லுருவுகொண்டநங்கன்வீற்றிருத்தல்.

இ - ள். பல் கந்தமான களபமும் - பலவாசனைத் திரவியங்கள் சேர்த்த கலவைச் சாந்தையும்,—சுண்ணமும்-சுண்ணப்பொடிகளையும்,—கமழும் பந்தும் மாலையும் - மணம் வீசுகின்ற (பூம்) பந்துகளையும் மாலைகளையும்,—சிவிறி நீரொடு - துருத்திநீரையும்,—பரத்தையர்கள் மைந்தரொடு எறிந்து ஆடல் - வேசிகள் புருடர்களுடனே இறைத்து விளையாடுதலானது,—யார் உளத்தையும் மயக்கும் - எவர்கள் மனசையும் மயங்கச்செய்யும் (ஆகலான்),—இந்தவீதிகொல்-இந்தவீதிதானோ,—அநங்கன் உருவு கொண்டு வீற்றிருத்தல் - மன்மதன் உருவங்கொண்டு கொலுவிருக்குமிடம். எ - று.

ஒடு உம்மைப்பொருட்கண் வந்தது. உளத்தையும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பும், ஏனையவற்றில் எண்ணுமாம். கொல் ஐயம். ஆடல் என்ற எழுவாய் மயக்கும் என்னும் முற்றுப்பயனிலைகொண்டது; மயக்குமென்பதைப் பெயரெச்சமாகக்கொள்ளின் வீதியென்னும்பேரோடு கூட்டுக. இவ்விடத்தில் மதனலீலையேயன்றி வேறொன்றுங் காணப்படாமையால் மன்மதன் உருவத்தோடிருக்கின்ற வீதி இதுவாயிருக்குமோவென்னும் ஐயப்பாட்டால் இந்த வீதிகொல் என்றார். (கூகூ)

70. பொன்னினன்னமும்பதுமராகம்புரைபுறவுஞ்
செங்கலங்கிளர்மஞ்ஞையுஞ்சாரிகைத்திறனும்
பன்னிறங்கெழுபுள்ளினமினையனபலவு
மின்னதொன்னகர்மங்கையர்கரந்தொறுமிருப்ப.

இ — ள். பொன்னின் அன்னமும் பதுமராகம் புரை புறவும் செம் நலம் கிளர் மஞ்ஞையும் சாரிகை திறனும் பல் நிறம் கெழு புள்ளினம் இனையன பலவும் - பொன்போன்ற நிறம் பொருந்திய அன்னப்பட்சிகளும் பதுமராகமணியையொத்த புறாக்களும் செப்பமாகிய அழகுவிளங்குகின்ற மயில்களும் நாகணவாய்களும் பலநிறம்பொருந்திய பறவைச்சாதிகள் இவைபோல்வன பலவும்,—இன்ன தொல் நகர் மங்கையர் கரம் தொறும் இருப்ப - இந்தப்பெரிய நகரத்திலிருக்கின்ற மங்கைப்பருவமுள்ள பெண்களது கைகளினெல்லாமிருக்கின்றன. எ - று.

உம்மை பலவும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம். (எ0)

71. பண்டுவேட்டவர்பின்முறைப்பாவையர்பரிவிற்
கண்டுபின்வரைமங்கையர்கானமதியற்றிக்
கொண்டவில்வழிப்பரத்தையர்கணிகையர்குழாத்துள்
வண்டுபூவுறுதன்மைசென்றாடவர்மணப்பார்.

இ — ள். பண்டு வேட்டவர் - முதல் விவாகஞ்செய்துகொண்ட பெண்களிடத்திலும்,—பின் முறை பாவையர் - பின்பு தமக்கு முறைமையாயிருந்த பெண்களிடத்திலும்,—பரிவில் கண்டு - ஆசையினாற்கண்டு மயங்கி,—பின் வரை மங்கையர் - பின்னர் விவாகஞ்செய்த பெண்களிடத்திலும்,—கானமது இயற்றி கொண்ட இல்வழி பரத்தையர் - சங்கீதம்பாடி வென்றுகொண்ட இல்வழிப்பரத்தையரிடத்திலும்,—கணிகையர் குழாத்துள் - பொதுப்பெண்களிடத்திலும்,—வண்டு பூ உறும் தன்மை - வண்டுகள் (தேனைப்பருகும்பொருட்டுப்) பல பூக்களிலுஞ் செல்கின்ற தன்மையைப்போல,—ஆடவர் சென்று மணப்பார் - புருஷர்கள் (சிற்றின்பத்தின்பொருட்டுச்)சென்று அவர்களைச் சேருவார்கள். எ - று.

உம்மைகளும் உருபும் விகாரத்தாற்றொக்கன. பண்டுவேட்டவர் ஆவார்:—தந்தை தாயர் சுற்றத்தார் முதலியோர்கள் குலமுங் கோத்திரமும் வினவி தீமுன்னர்க்கொடுக்க மங்கல்யந்தரித்து மணந்த இல்லக்கிழத்தியராகிய மனைவியர். முறைப்பாவையர் ஆவார்:—சேரிப்பரத்தையர்குலத்திற்றோன்றிக் காமக்கிழத்தியராம் முறைமையுடையவர்களாய் வரிந்துகொள்ளப்பட்டவர். பரிவிற்கண்டு பின் வேட்டவர் ஆவார்:—கொடுப்பாரு மடுப்பாருமின்றித் தாமே களவிற் புணர்ந்துசின்னாட்கழித்துப் பின் வரைந்துகொண்ட காந்தருவமணமாதர். கானமதியற்றிக்கொண்ட இல்வழிப்பரத்தையர் ஆவார்:—இல்லிற்பரத்தையர்மகளிராய் இசைபாடி வென்று மணந்து கொள்ளப்பட்டவர். கணிகையர் ஆவார்:—பொதுப்பெண்கள். (எக)

72. தக்கமெல்லடிப்பரிபுரமுழவுறத்தனமா
மிக்கதாளங்களொத்தமென்புள்ளிசைவிரவ
விக்குவேளவைகாணியபூந்துகிலெழினி
பக்கநீக்கியேமைந்தரோடாடுவார்பலரே.

இ — ள். பலர் - பலபெண்கள்,—தக்க மெல் அடி பரிபுரம் முழவு உற - தக்க இலட்சண மமைந்த மெல்லியகால்களி னணிந்த சிலம்புகளாகிய மத்தளங்களினோசைபொருந்த,—தனம் ஆம் மிக்கதாளங்கள் ஒத்த - தனங்களாகிய சிறந்ததாளங்கள் ஒன்றோடொன்றுதாக்க,—மென் புள் இசை விரவ - மெல்லிய (மயில் புறா அன்னம் காடைமுதலிய) பறவைகளது ஓசைகள் செறிய,—இக்கு வேள் அவைகாணிய - கருப்பஞ் வில்லையுடைய மன்மதன் அவற்றைப் பார்க்க,—பூந்துகில் எழினி பக்கம் நீக்கியே-அழகியசேலையாகிய திரைச்சீலையை பக்கங்களிலொதுக்கி,—மைந்தரோடு - வாலிபர்களோடு,—ஆடுவார் - ஆடுகின்றார்கள். எ — று. (எஉ)

ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. மன்மதன் அவைகாணிய என்பதற்கு அநங்கன் அவ்வினோதத்தைக் காணும்படியெனவும், பூந்துகில் என்பதற்குப் பூவேலைசெய்ததுகில் எனவும் பொருள் கூறுவாருமுளர். ஆடல் என்றது புணர்தலை. உற என்பதுமுதலிய பெயரெச்சங்கள் ஆடுவோர் என்னும் முற்றைக்கொண்டு முடிந்தன.

73. பாட்டமைந்திடுகாளையரணிநலம்பாரா
வேட்டுமங்கையரொருசிலர்தமதுமெய்விளர்ப்பக்
கூட்டமுன்னியேபன்னிறக்கலவையுங்குழைத்துத்
தீட்டுவாரவருருவினைவியன்கிழிதிருத்தி.

இ — ள். மங்கையர் ஒரு சிலர் - மங்கைப்பருவமுள்ள சிலபெண்கள்,—பாடு அமைந்திடு காளையர் அணி நலம் பாரா வேட்டு - பெருமை பொருந்திய வாலிபர்களது பேரழகைப்பார்த்து விரும்பி,—தமது மெய்விளர்ப்ப - தமது சரீரம் (விகாரத்தால்) வெளுப்படைய,—கூட்டம் உன்னியே - சேர்க்கையை நினைத்து,—பல் நிறம் கலவையும் குழைத்து - பலநிறமாகிய சாந்துகளைக் குழைத்து,—அவர் உருவினை வியன் கிழி திருத்தி தீட்டுவார் - அவர்வடிவத்தை அழகியபடத்திலே செப்பமாக எழுதுவார்கள். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. இனி, கிழி திருத்தி என்பதற்குத் துணிக்குக் கஞ்சியூட்டிப் பளபளப்பாக்கி லாஞ்சனபடமாக்கி எனப்பொருள் கூறுவாருமுளர். ()

74. சுற்றுவிட்டலர்தாருடையவர்தொல்லுருவிற்
பற்றுவிட்டுடனுளத்தையும்விட்டுமென்பார்ப்பைப்
பெற்றுவிட்டிலாப்பெடைமயிறழீஇத்துயர்பேசி
யொற்றுவிட்டனரொருசிலராறுபார்த்துழல்வார்.

இ — ள். ஒரு சிலர் - சிலபெண்கள்,—சுற்றுவிட்டு அலர் தாருடையவர் தொல் உருவில் பற்றுவிட்டு - முறுக்கு விரிந்து அலர்கின்ற மாலையணிந்த வெற்றி வீரர்களது பேரழகைக்கண்டு பற்றுவைத்து,—உடன் உளத்தையும் விட்டு - உடனே மனசையுஞ் செல்லவிட்டு,—மென் பார்ப்பை பெற்று விட்டு இலா பெடை மயில் தழீஇ துயர் பேசி ஒற்று விட்டனர் ஆறு பார்த்து உழல்வார் - மெல்லிய குஞ்சைப் பெற்று விட்டுநீங்காத பெடை மயிலை யணைத்து (விகார) வருத்தத்தைச் சொல்லித் தூதாகவனுப்பி (அம்மயில் எப்போதுவருமென்று) வழிபார்த்து வருந்துவார்கள். எ — று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். உருவத்திற் பற்றுவைத்தெனினுமாம். உருவம் சரீரம். ஒற்றுவிட்டவராகிய ஒரு சிலர் எனக்கூறினும் அமையும். "அஃறிணை மருங்கினு மறையப்படுமே" என்பதனால் மயிலொடுகிளத்து மரபுரைத்தது. (எச)

75. அகன்றகொண்கரைநனவினெக்காலமுமகத்திற்
புகன்றுமட்டித்தவெம்முலைச்சாந்தொடும்புலர்வார்
பகன்றைபோன்முரல்சிலம்படிப்பாவையர்பல்லோர்
முகன்றனிற்கருமணிகளிற்சொரிதரமுத்தம்.

இ — ள். பகன்றை போல் முரல் சிலம்பு அடி பாவையர் பல்லோர் - கிலுகிலுப்பையைப்போல வொலிக்கின்ற சிலம்பணிந்த கால்களையுடைய பலபெண்கள்,—முகம் தனில் கருமணிகளில் முத்தம் சொரிதர - முகத்திலுள்ள கண்களினின்றும் முத்துப்போல நீர்சொரிய,—அகன்ற கொண்கரை - (தம்மைப்பிரிந்து) சென்ற நாயகரை,—நனவில் எக்காலமும் - பகற்காலத்திலெப்பொழுதும்,—அகத்தில் புகன்று - மனத்தோடு பேசி,—வெம்முலை மட்டித்த சாந்தொடும் புலர்வார் - விரும்பப்படுகின்ற ஸ்தனங்களிற் பூசிய சந்தனத்தோடும் வாடுவார்கள். எ — று.

உம்மை முற்று. புலர்தல் - வாடுதல், காய்தல். இது தலைவனைப்பிரிந்த கற்புடைப் பெண்டிரிலக்கணங் கூறியவாறு. முகந்தனில் முத்தஞ் சொரிதர எனினுமாம். (எரு)

76. மங்கைமார்சிலராடவர்தம்மொடுமாடத்
துங்கமேனிலத்திடைப்படுசேக்கையிற்றுன்னி
வெங்கண்மெல்லிதழ்வேறுபட்டணிமுகம்வியர்ப்பக்
கங்குலொண்பகலுணர்கிலர்விழைவொடுகலப்பார்.

இ — ள். மங்கை மார் சிலர் ஆடவர் தம்மொடு - சிலபெண்கள் நாயகர்களுடனே,— மாடம் துங்கமேல் நிலத்து இடைபடு சேக்கையில் துன்னி-மாடத்துள்ள உயர்ந்தமேனிலத்தில் அமைக்கப்பட்ட சயனத்திலேபோய்,—வெம் கண் மெல் இதழ் வேறுபட்டு அணி முகம் வியர்ப்ப - விருப்பத்தைத் தருகின்ற கண்களும் மெல்லிய அதரங்களும் வேறுபட்டு அழகியமுகமும் வியர்வைகொள்ள,—கங்குல் ஒண் பகல் உணர்கிலர் - இராக்காலத்தையும் சிறந்த பகற்காலத்தையு மறியாதவர்களாய்,—விழைவொடு கலப்பார் - விருப்பத்தோடுஞ் சேருகின்றார்கள். எ — று.

தம் சாரியை. பார்த்தவர்க்கு விருப்பத்தைக் கொடுத்தலால் "வெங்கண்" என்றார்; ஆடவரை மயக்குந் தன்மையால் கொடியகண் எனினும் அமையும். இது ஒத்த காமமுடையாரிலக்கணங் கூறியவாறு. (எசு)

77. மறிகொள்சோரிநீர்பலியுடனொக்கிநாண்மலர்தூ
யிறைகொளில்லிடைத்தெய்வதம்வழிபடலியற்றிப்
பறைகறங்கவக்கடவுளையாற்றுறப்படுத்தி
வெறியயர்ந்துநின்றாடுவராளப்பிலர்மின்னார்.

இ — ள். அளப்பிலர் மின்னார் - அளவில்லாதபெண்கள்,—மறிகொள் சோரி நீர் பலியுடன் ஒக்கி நாள் மலர் தூய் - ஆட்டிலுள்ள இரத்தநீரைப் பலியோடு செலுத்திப் புதுப்பூக்களைத்தூவி,—இறைகொள் இல் இடை தெய்வதம் வழிபடல் இயற்றி - வாசஞ்செய்யும் வீட்டிலே (குல) தெய்வத்தை வழிபாடுசெய்து,—பறை கறங்க - வாச்சியம் முழங்க,—அ கடவுளை - அத்தெய்வத்தை,—ஆற்று உற படுத்தி - தம்வழி வரச்செய்து,—வெறி அயர்ந்து நின்று ஆடுவார் - ஆவேசங்கொண்டுநின்று ஆடுவார்கள்.

மாமிசபட்சணிகளாதலின் 'மறிகொள் சோரிநீர் பலியுடனொக்கி' என்றார். (எஎ)

78. அலங்கல்வேல்விழிமாதருமைந்தருமமர்ந்த
பொலங்கொண்மாடமேலாடுறுபெருங்கொடிபொலிவ
மலங்குசூழ்தருதெண்டிரைப்புணரியில்வைகுங்
கலங்கண்மேவியகூம்பெனக்காட்டியவன்றே.

இ — ள். அலங்கல் வேல் விழி மாதரும் மைந்தரும் அமர்ந்த பொலம் கொள் மாடம் மேல் ஆடுறு பொலிவ பெரும் கொடி - ஒளிபொருந்திய வேல் போலுங் கண்களையுடைய பெண்களும் நாயகருமிருக்கின்ற பொன்மயமாகிய மாளிகைகளின்மேல் அசைகின்ற பொலிவினை யுடையனவாகிய பெரியகொடிகள்,—மலங்கு சூழ்தரு தெண் திரை புணரியில் வைகும் - மலங்குமீன்கள் சூழ்ந்த தெளிந்த அலைகளையுடைய கடலில் நிற்கின்ற,—கலங்கள் மேவிய கூம்பென காட்டிய - மரக்கலங்களிற் பொருந்திய பாய்மரங்களைப்போலக் காணப்படுகின்றன. எ — று.

அன்று ஏ அசை. உம்மைகள் எண். (எஅ)

79. புரசைவெங்கரிபுரவிதேர்பொருபடைத்தலைவர்
பரிசனங்களாதோரணர்வாதுவர்பரவ
முரசமேமுதலியமெலாமுன்னரேமுழங்க
வரசவேழமாவெண்ணிலகோயில்வந்தடைவ.

இ - ள். புரசை வெம் கரி புரவி தேர் பொருபடை தலைவர் பரிசனங்கள் ஆதோரணர் வாதுவர் பரவ - கழுத்திலிட்டகயிற்றினையுடைய பெரியயானைகளும் குதிரைகளும் தேர்களும் போருக்குரியவர்களாகிய சேனைவீரரும் பரிசனங்களும் யானைப்பாகர்களும் குதிரைப்பாகர்களும் பரந்துவர,—முரசமே முதல் இயம் எலாம் முன்னரே முழங்க,—முரசம்முதலிய வாத்தியங்களெல்லாம் முற்பக்கத்துமுழங்க,—அரச வேழமா எண்ணில-பட்டத்துயானைகளனேகம்,—கோயில் வந்து அடைவ-அரசனுடைய கோயின் முகப்பை வந்தடைவன. எ - று.

ஏகாரம் முன்னையது பிரிநிலை; பின்னையது தேற்றம். எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. அரசனுக்குரிய மரியாதைகள் முற்காலத்தில் அரசுவாக்களுக்குமுண்டு.

80. கள்ளுறைத்திடுமாலையம்பங்கியர்கமஞ்சூல்
வள்ளுறைப்புயன்மேனியரொருசிலர்வார்வி
லொள்ளுறைப்படைபிறவினிற்கவரிதூங்குறுத்துத்
தள்ளுதற்கரும்வயமுரசறையமுன்சார்வார்.

இ - ள். கள் உறைத்திடு மாலை அம் பங்கியர் - தேன் துளியாகச்சிந்துகின்ற மாலையணிந்த குடுமியையுடையவர்களும்,—கமம் சூல் வள் உறை புயல் மேனியர் ஒரு சிலர் - நிறைந்த கருவாக வளவிய நீரையுடைய மேகம்போன்ற மேனியையுடையவர்களும் ஆகிய சில அசுரர்கள்,—வார்வில் - நெடியவில்லினும்,—ஒள் உறை படை - ஒளிபொருந்திய உறையிலிருக்கின்ற வாளினும்,—பிறவினில் - மற்றைய ஆயுதங்களினும் (வெற்றிக்குரிய அடையாளமாக),—கவரி தூங்க உறுத்து-சாமரங்களைத்தொங்கும்படிகட்டி,—தள்ளுதற்கு அரும் வய முரசு அறைய முன் சார்வார் - நீக்குதற்கரியவெற்றிமுரசு அடிக்க முன்னேவருகின்றார்கள். எ - று.

அம் சாரியை. எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. அறைதல் - அடித்தல். அக்காலத்தில் கவரிகளை அலங்காரமாக ஆயுதங்களிற்கட்டுவது வழக்கம்போலும். (அ0)

81. அறுகுவெம்புலிவலியுடைமடங்கன்மானுமாச்
சிறுகுகண்ணுடைக்கரிமரையிரலையித்திறத்திற்
குறுகுமாக்களைப்படுத்தவற்றூன்வகைக்குவால்கண்
மறுகுளார்பெறப்பண்டிகொண்டளப்பிலோர்வருவார்.

இ - ள். அறுகு வெம்புலி வலியுடை மடங்கல் மான் ஆமா சிறுகு கண் உடை கரி மரை இரலை - யாளி கொடிய புலி வலிமையையுடைய சிங்கம் மான் காட்டுப்பசு சிறுத்த கண்களையுடைய யானை மரை கருமான் என்னும்,—இ திறத்தில் குறுகு மாக்களை படுத்து-இத்தன்மையனவாகிய கிட்டிய மிருகங்களைக்கொன்று,—அவற்று வகை ஊன் குவால்கள் - அவைகளுடைய பலவிதமாமிசக் குவியல்களை,—பண்டி கொண்டு - வண்டியிலேற்றிக்கொண்டு,—மறுகு உளார் பெற - வீதியிலுள்ளவர்கள் வாங்கிக்கொள்ளும் பொருட்டு,—அளப்பிலோர் வருவார் - அளவில்லாத அசுரர்வருவார்கள். எ - று. (அக)

82. மஞ்சுலாவருசிகரியுஞ்சூளிகைவரைப்பும்
விஞ்சுமேனிலவடுக்கமுஞ்சோலையும்வெற்புஞ்
சஞ்சரீகமாரோடையும்வாவியுந்தடமு
மெஞ்சலில்லதோர்மாடங்களெங்கணுமுளவே.

இ — ள். மஞ்சு உலாவரு சிகரியும் சூளிகை வரைப்பும் - மேகங்கள்வந்து உலாவப் பெற்ற கோபுரங்களும் முடியுள்ளமாளிகை யிடங்களும்,—விஞ்சு மேல் நில அடுக்கமும்- உயர்ந்த மேல்வீட்டின் அடுக்கும்,—சோலையும் - சோலைகளும்,—வெற்பும் - செய்குன்று களும்,—சஞ்சரீகம் ஆர் ஓடையும் - வண்டுகள்பொருந்திய ஓடைகளும்,—வாவியும் - வாவிகளும்,—தடமும் - தடாகங்களும்,—எஞ்சல் இல்லது ஓர் மாடங்கள் எங்கணும் உள - குறைவில்லாதமாடங்கள் எல்லாவற்றினும் இருக்கின்றன. எ - று.

ஓர், ஏ அசை. உம்மை எங்கணும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம். எல்லா வீடுகளும் எல்லாச் செல்வங்களும் நிரம்பப்பெற்றன என்பார் எங்கணும் உள என்றார். (அஉ)

83. எற்றிமுன்செலுமுரசினர்கம்மியரெல்லிற்
பற்றுதீபிகைச்சுடரினர்மாலைதாழ்படைய
ரொற்றைமுக்குடையிருபுடைக்கவரியருலப்பில்
கொற்றவீரரீண்டளப்பிலோர்வந்தனர்குலவி.

இ — ள். உலப்பு இல் கொற்றம் அளப்பு இலோர் வீரர் - கெடாதவெற்றியையு டைய அளவில்லாதவர்களாகிய வீரர்,—எற்றி முன் செலும் முரசினர் - அடித்துக்கொ ண்டு முற்பக்கத்திற் செல்லும் முரசையுடையவர்களும்,—கம்மியர் எல்லில் பற்று தீபி கை சுடரினர் - ஏவலாளர் பகற்காலத்திற் பிடிக்கும் (வரிசையாகிய) தீவர்த்திவிளக்கையு டையவர்களும்,—மாலை தாழ் படையர்-மாலைதூக்கப்பட்ட ஆயுதங்களையுடையவர்களும்,— ஒற்றை முக்குடை இரு புடை கவரியர் - ஒருகுடையையும் மூன்றுகுடைகளையும் இருபக்கத்தும் இரட்டப்படுஞ் சாமரங்களையுமுடையவர்களுமாகி,—ஈண்டு குலவி வந் தனர் - இந்நகரத்திலே கொண்டாடிக்கொண்டு வந்தார்கள். எ — று.

எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. பகற்றீவர்த்தி சாமரை ஆகிய இவை யெல்லாம் முற்காலத்திலுள்ள ராஜமரியாதைப்பொருள்கள். (அ௩)

84. மண்படைத்திடுதவமெனுமகேந்திரமலிசீ
ரெண்படைத்தகண்ணிரண்டினர்காணுதலெளிதோ
விண்படைத்தவற்காயினுமமையுமோமிகவுங்
கண்படைத்தவர்க்கன்றியேகண்டிடலாமோ.

இ — ள். மண் படைத்திடு தவம் எனும் மகேந்திரம் மலிசீர்-பூமிதேவிபெற்றுக்கொ ண்ட தவப்பயனென்றுசொல்லத்தக்க மகேந்திரபுரத்தில் நிரம்பியிருக்கின்ற செல்வச்சிற ப்பை,—எண் படைத்த கண் இரண்டினர் காணுதல் எளிதோ - இரண்டென்னும் எண் ணைப்பெற்ற கண்களையுடையவர்கள் காணுதற்கு முடியுமோ? (முடியாது),—விண்படை த்தவற்கு ஆயினும் அமையுமோ-சுவர்க்கலோகத்தைப் பெற்றிருக்கின்ற ஆயிரங்கண்க ளையுடைய இந்திரனுக்காயினும் பார்க்க அடங்குமோ(அடங்காது),—மிகவும் கண் படை த்தவர்க்கு அன்றியே கண்டிடல் ஆமோ - அளவில்லாத கண்களைப்பெற்றவர்களுக்கே யல்லாமல் (மற்றவர்கள் இச்சிறப்பைக்) காணமுடியுமோ (முடியாது). எ - று.

தவம் ஆகுபெயர்.ஏகாரம் தேற்றம்; ஓகாரம் மூன்றும் எதிர்மறை; உம்மைகள் உயர் வுசிறப்பு. மிகவும் என்பது அளவின்மையுணர்த்திநின்றது. (அ௪)

85. வரம்பில்கட்புலங்கொண்டவரேனுமற்றிவ்வூர்
விரும்பியித்திருநோக்கினுமளத்தன்மேவருமோ
வரும்புயற்குழுவைகலும்பருகினுமதனுற்
பெரும்புனற்கடலானதுமுடிவுபெற்றிடுமோ.

இ — ள். அரும் புயற் குழு வைகலும் பருகினும் - அரிதாகிய முகிற்கூட்டங்கள் தினந்தோறுங் குடித்தாலும்( அதனல்),—பெரும் புனல் கடலானது முடிவு பெற்றிடுமோ-மிகுந்த நீரையுடைய கடலானது வற்றுமோ (வற்ருது அதுபோல),—வரம்பு இல் கட்புலம் கொண்டவர் ஏனும்-அளவில்லாத கண்களாகிய காணுங் கருவியைப்பெற்றவர்களாயினும்,—இ ஊர் இ திரு விரும்பி நோக்கினும் - இந்நகரத்திலுள்ள இச்செல்வச்சிறப்பை விரும்பிப்பார்த்தாலும்,—அளத்தல் மே வருமோ - இவ்வளவினதென்று அளவிட முடியுமோ (முடியாது). எ - று.

மற்று அசை. ஓகாரம் இரண்டும் எதிர்மறை; உம்மை வைகலும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் உயர்வுசிறப்புமாம். கட்புலம் கண்ணுகிய புலம். (அரு)

86. கழியுமிந்நகராக்கமோகரையிலவிவற்றுள்
விழிகளெண்ணிலபெற்றுளார்தாங்கண்டவெறுக்கை
மொழிவரென்னினுநாவதொன்ருன்முடிந்திடுமோ
வழிவிலாயிரகோடிநாப்பெறுவரேலறைவார்.

இ — ள். இ நகர் கழியும் ஆக்கமோ கரையில - இந்நகரத்திலுள்ள மிகுதியாகிய செல்வமோ அளவில்லை,—இவற்றுள் - இச்செல்வங்களுள்,—எண்ணில விழிகள் பெற்றுளார் தாம் கண்ட வெறுக்கை மொழிவர் என்னினும் - கணக்கில்லாத கண்களைப் பெற்றவர்கள் தாம் கண்ட செல்வத்தைச் சொல்வார்களாயினும்,—நாவு அது ஒன்ருல் முடிந்திடுமோ - ஒருநாவாற்சொல்லமுடியுமோ (முடியாது),—அழிவு இல் ஆயிரகோடி நா பெறுவரேல் அறைவார் - அழிவில்லாத ஆயிரங்கோடி நாக்களைப் பெறுவார்களாயின் (இந்தவீரமகேந்திரத்தின் சிறப்பை இப்படிப்பட்டதென்று) கூறுவார்கள். எ — று.

ஓகாரம் முன்னையது வியப்பு; பின்னையது எதிர்மறை. உம்மை உயர்வுசிறப்பு. ()

87. வாழ்வின்மேதருமகேந்திரப்பெருமிதவளத்தைத்
தாழ்விலாநெறிகண்டனர்தாலுவெண்ணிலவாற்
சூழ்வினுடியேபகரினுமெய்யெலாந்துதையக்
கேள்விமூலங்களில்லவரெங்ஙனங்கேட்பார்.

இ — ள். வாழ்வின் மேதகு மகேந்திரம் பெருமித வளத்தை - வாழ்வினுன் மேம்பட்ட மகேந்திரபுரியிலுள்ள பெருஞ்செல்வச் சிறப்பை,—தாழ்வு இலா நெறி கண்டனர் - குற்றமில்லாதவகை கண்டவர்கள்,—எண் இல தாலுவால்-அனேகங்கோடி நாக்களால்,—சூழ்வின் நாடியே பகரினும்,—ஆராய்ச்சியோடு எண்ணிக் கூறினுலும்,—மெய் எலாம் துதைய கேள்வி மூலங்கள் இல்லவர் எங்ஙனம் கேட்பார் - சரீரமெங்கும் நெருக்கமாகக் காதுகளில்லாதவர்கள் (அவைகளை) யெவ்வாறு கேட்பார்கள். எ - று.

ஏகாரம் தேற்றம். உம்மை உயர்வுசிறப்பு. (அஎ)

88. ஆயிரம்பதினுயிரங்கோடிநாவளவி
லாயிரம்விழியாயிரமாயிரஞ்செவிக
ளாயிரம்புந்திகொண்டுளார்க்கல்லதிவ்வகன்சீ
ராயிரம்யுகங்கண்டுதேர்ந்துரைப்பினுமடங்கா.

இ — ள். ஆயிரம் பதினுயிரம் கோடிநா - ஆயிரம் பதினுயிரங்கோடி நாக்களையும்,—அளவு இல் ஆயிரம் விழி - அளவற்ற ஆயிரக்கணக்கான கண்களையும்,—ஆயிரம் ஆயிரம் செவிகள் - அனேகமாயிரங்காதுகளையும்,—ஆயிரம்புந்தி கொண்டுளோர்க்கு அல்லது - ஆயிரக்கணக்கான மனங்களையுங் கொண்டவர்களுக்கு அல்லாமல்,—இ அகன்சீர் - இங்

தப்பெரிய சிறப்புக்கள்,—ஆயிரம் யுகம் கண்டு தேர்ந்து உரைப்பினும் - ஆயிரம் யுகம் வரைக்கும் பார்த்துத் தெளிந்து கூறினாலும்,—அடங்கா - அமையாது. எ - று.

உம்மை உயர்வுசிறப்பு. (அஅ)

89. பொய்த்தலின்றியேயிந்நகர்த்திருவைவையைம்புலத்துந்
துய்த்தன்முன்னியேவிழைந்துகொனோற்றிடுந்தொடர்பாற்
பத்துநூறுடனாயிரங்கோடியாப்பகரு
மித்தொகைச்சிரங்கொண்டனரீண்டுளாரெவரும்.

இ — ள். ஈண்டு உளார் எவரும்-இந்தவீரமகேந்திரத்திலிருப்பவர்கள் அனைவரும்,—பொய்த்தல் இன்றியே - பொய்படாமல்,—இ நகர் திருவை ஐம்புலத்தும் துய்த்தல் முன்னியே - இந்நகரத்திலுள்ள செல்வங்களை ஐம்புலன்களாலும் அனுபவித்தலை நினைத்து,—நோற்றிடும் தொடர்பால் - தவஞ்செய்த சம்பந்தத்தால்,—விழைந்துகொல்-விரும்பித்தானோ,—பத்துநூறுடன் ஆயிரம்கோடியா பகரும் இ தொகைசிரம் கொண்டனர் - பத்து நூறு ஆயிரம் கோடியென்று சொல்லப்படுகின்ற இந்தத்தொகைகளாகிய தலைகளைப் பெற்றிருக்கின்றார்கள். எ — று.

ஏகாரம் இரண்டும் இசைநிறை. கொல் ஐயம். உம்மைகள் முற்று. (அகூ)

90. முன்னவர்க்குமுன்னாகியவறுமுகமுதல்வன்
றன்னருட்டிறத்தெல்லையில்பேருருச்சமைந்தே
யிந்நகர்த்திருயாவையுங்காண்குவனின்னே
யொன்னலர்க்கெனைக்காட்டுதறகாதெனவொழிந்தேன்.

இ — ள். முன்னவர்க்கும் முன்னாகிய அறுமுக முதல்வன் தன் - முதல்வருக்கெல்லாம் முதல்வராகிய ஆறுமுகப்பெருமானது,—அருள் திறத்து - திருவருட்டிறத்தால்,—எல்லை இல் பேர் உரு சமைந்தே - அளவற்றபெரிய உருவத்தையெடுத்து,—இ நகர் திரு யாவையும் காண்குவன் - இந்நகரத்திலுள்ள செல்வச்சிறப்புகளெல்லாவற்றையும் பார்ப்பேன்,—இன்னே - இப்பொழுதே,—ஒன்னலர்க்கு எனை காட்டுதல் தகாது என ஒழிந்தேன் - பகைவர்களுக்கு என்னைக்காட்டப்படாதென்று விட்டேன். எ — று.

தன் சாரியை. ஏகாரங்கள் தேற்றம். உம்மை முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது முற்று. வீரவாகுதேவர் தாம் அறுமுகக்கடவுடிருவருளால் யாவுஞ் செய்பவராகலான் இங்ஙனங் கூறியருளினார். (கூ0)

91. இனைத்தவாகியபெருவளமெல்லையின்றிவற்றை
மனத்தினாடினும்பற்பகல்செல்லுமான்மனக்கு
நுனித்துநன்றுநன்றாய்ந்திவைமுழுவதுநோக்க
நினைத்துளேனெனினிங்கிதுபொழுதினினிரம்பா.

இ — ள். இனைத்த ஆகிய பெருவளம் எல்லை இன்று - இத்தன்மையனவாகிய பெருஞ்செல்வங்களுக்கு எல்லை இல்லை,—இவற்றை மனத்தில் நாடினும் பல் பகல் செல்லும் - இவைகளை மனசினாலாராயினும் பலநாட் செல்லும்,—மனக்கு நுனித்து நன்று நன்று ஆய்ந்து இவை முழுவதும் நோக்க நினைத்துளேன் எனின் - மனத்திலே நுட்பமாக மிகவும் நன்றாய் ஆராய்ந்து இச்செல்வச்சிறப்பு முழுவதும் பார்க்க நினைந்தேனாயின்,—இதுபொழுதினில் நிரம்பா - இப்பொழுதில் முடிவுபெறாது. எ — று.

ஆல், இங்கு அசை. உம்மைமுன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது முற்று. ()

92. அம்புயாசனன்றெளிகிலாவருமறைமுதலைக்
கும்பமாமுனிக்குதவியேமெய்யருள்கொடுத்த
வெம்பிரான்பணிபுரிகிலாதிந்நகரிருஞ்சீர்
நம்பிநாடியேதெரிந்துபாணிப்பதுநலனே.

இ — ள். அம்புயாசனன் தெளிகிலா அருமறை முதலை - தாமரைப்பூவாகிய ஆசனத்திலிருக்கின்ற பிரமதேவர் அறியாத அரிய வேதத்தின் முதலிலுள்ள பிரணவப்பொருளை,—கும்பமாமுனிக்கு உதவியே - கலசோற்பவராகிய பெருமைபொருந்திய அகஸ்தியமுனிவருக்கு உபதேசித்து,—மெய் அருள்கொடுத்த - மெய்ம்மையாகிய திருவருளைக் கொடுத்தருளிய,—எம்பிரான் பணி புரிகிலாது - எம்பெருமானுடைய தூதாகிய வேலைச்செய்யாமல்,—இ நகர் இரும் சீர் நம்பி நாடியே தெரிந்து - இந்நகரத்திலுள்ள பெருஞ்சிறப்புகளை விரும்பி ஆராய்ந்துபார்த்து,—பாணிப்பது நலனே - காலதாமதஞ்செய்வது முறைமையோ? (முறைமையன்று.) எ — று.

ஏகாரங்கள் இசைநிறை. ஓகாரம் எதிர்மறை. (கூஉ)

93. என்றுமுன்னியேயறுமுகன்றூதுவனிமயக்
குன்றமன்னகீழ்த்திசைமுதற்கோபுரக்குடுமி
நின்றுமாநகர்வளஞ்சிலநோக்கியேநெடுஞ்சீர்
துன்றுசூருறைதிருநகரடைவதுதுணிந்தான்.

இ — ள். என்று முன்னியே அறுமுகன் தூதுவன் - என்று நினைத்து ஆறுமுகப்பெருமானது தூதுவராகிய வீரவாகுதேவர்,—இமயம் குன்றம் அன்ன கீழ்திசை முதல் கோபுரம் குடுமி நின்று - இமயமலையையொத்த கிழக்குத்திக்கிலுள்ள முதற்கோபுரத்தின்மீது நின்று,—மா நகர் சிலவளம் நோக்கியே - பெருமைபொருந்திய நகரத்தின் வளங்கள் சிலவற்றைப்பார்த்து,—நெடும் சீர் துன்று சூர் உறை திருநகர் அடைவது துணிந்தான் - பெருஞ்சிறப்புள்ளவனாகிய சூரபன்மனிருக்கின்ற இலக்குமி விலாசம் பொருந்திய நகரத்தினுள்ளே போதற்குத்துணிந்தார். எ — று. ஏகாரங்கள் அசை. ()

94. வனைந்தமாளிகையொளியினிலிடைப்படுமறுகிற்
கனைந்துசெற்றியேபரிசனம்பரவுதல்காணு
நினைந்தசூழ்ச்சியான்கீழ்த்திசைச்சிகரியைநீங்கி
நனந்தலைப்படநகரத்துவிண்ணிடைநடந்தான்.

இ — ள். வனைந்த மாளிகை ஒளியினில் இடைப்படுமறுகில் - அலங்கரிக்கப்பட்ட இருபக்கத்துமாளிகையின் ஒளியின் நடுவேயுள்ளவீதியில்,—கனைந்து செற்றியே பரிசனம் பரவுதல் காணு - இரைந்து நெருங்கிப் பரிசனங்களாகிய சனசமூகங்கள்பரவி நிற்பதைக்கண்டு,—நினைந்த சூழ்ச்சியான் - கருதும் உபாயத்தினையுடையவராகிய வீரவாகுதேவர்,—கீழ் திசை சிகரியை நீங்கி - கிழக்குத்திக்கிலுள்ள கோபுரத்தைவிட்டு,—நகரத்து நனந்தலைப்பட விண்ணிடை நடந்தான் - நகரத்துக்குமத்தியில் ஆகாயமார்க்கமாகச் சென்றார்.

ஏகாரம் தேற்றம். ஒளியைப்போலப் பரவுதல் என்பதுமொன்று. (கூச)

95. வானமாநெறிநீங்கியேமறைகளிற்றுணிபா
ஞானநாயகவறுமுகனருள்கொடுநடந்து
தூநிலாவுமிழெயிறுடைச்சூர்முதற்சுதனும்
பானுகோபனதுறையுளையெய்தினன்பார்த்தான்.

இ — ள். வானம் மாநெறி நீங்கியே - (அங்ஙனம்) வீரவாகுதேவர் பெரிய ஆகாய வழியை நீங்கி,—மறைகளில் துணிபாம் ஞானநாயக அறுமுகன் அருள்கொடு நடந்து - உபநிஷத்துக்களிலே நிச்சயிக்கப்பட்டபொருளாகிய ஞானநாயகரான அறுமுகப்பெருமானது திருவருளைக்கொண்டு நடந்து,—தூ நிலா உமிழ் எயிறு உடை சூர் முதல் சுதனும் - சுத்தமாகிய நிலவைக்காலும் பல் வரிசையையுடைய சூரனுக்கு முதன்மகனாகிய,—பானு கோபனது உறையுளை எய்தினன் பார்த்தான் - பானுகோபனது இருப்பிடத்தைச் சென்றுகண்டார். எ — று. ஏகாரம் இசைநிறை. துணிபு ஆகுபெயர். (௯௫)

96. பாய்ந்துசெஞ்சுடர்ப்பரிதியைப்பற்றினோனுறையு
ளேந்தல்காணுறீ இவிம்மிதப்பட்டவணிகந்து
காந்துகண்ணுடையங்கிமாமுகனகர்கடந்து
சேந்தமெய்யுடையாடகனுறையுளுந்தீர்ந்தான்.

இ — ள். பாய்ந்து செம் சுடர் பரிதியை பற்றினோன் உறையுள் ஏந்தல் காணுறீஇ விம்மிதப்பட்டு அவண் இகந்து - (குழந்தைப்பருவமாயிருக்கும்பொழுது ஆகாயத்திற்) பாய்ந்து செவ்வொளிபொருந்திய சூரியனைப்பிடித்துச் (சிறைவைத்தவனாகிய) பானுகோபனது மாளிகைச் சிறப்பை வீரவாகுதேவர் பார்த்தபொழுது அதிசயப்பட்டு அவ்விடத்தினின்றும் நீங்கி,—காந்து கண் உடை அங்கி மாமுகன் நகர் கடந்து - எரிகின்ற (கோபக்) கண்ணையுடைய அக்கினிமுகாசுரனதுமாளிகையையுங்கடந்து,—சேந்த மெய் உடை ஆடகன் உறையுளும் தீர்ந்தான் - சிவந்தசரீரத்தையுடைய இரணியனது மாளிகையையுங் கடந்து போனார். எ — று.

உம்மை இறந்தது தழீஇயவெச்சம். (௯௬)

97. உச்சியையிரண்டிருபதுகரதலமுடைய
வச்சிரப்பெருமொய்ம்பினோன்மாளிகைவரைப்பு
மச்செனத்தணந்தேகிமூவாயிராகு
மெச்சமெய்தியமைந்தர்தம்மிருக்கையுமிகந்தான்.

இ — ள். ஐயிரண்டு உச்சி இருபது கரதலம் உடைய பெரு வச்சிர மொய்ம்பினோன் மாளிகை வரைப்பும் அச்சென தணந்து ஏகி - பத்துத்தலைகளையும் இருபதுகைகளையும் உடைய பெருமைபொருந்திய வச்சிரவாகுவினது மாளிகையிடத்தையும் விரைவாகக் கடந்து சென்று,—மூவாயிரர் ஆகும் எச்சம் எய்திய மைந்தர் தம் இருக்கையும் இகந்தான் - மூவாயிராகிய எஞ்சிய புத்திரர்களது இருப்பிடங்களையுங் கடந்து சென்றார். எ — று.

தம் சாரியை. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். எண்ணோடு முற்றுப்பொருட்டும்மைகள் விகாரத்தாற் றொக்கன. அச்சென என்பதற்குச் செப்பமாக என்றலுமாம்.

98. உரியமந்திரத்துணைவரிற்றலைமைபெற்றுறையுந்
தருமகோபன்றன்கடிமனைச்சிகரமேற்றங்கிச்
சுரரும்வாசவன்மதலையுமவுணர்கள்சுற்றப்
பரிவுகொண்டமர்சிறைக்களநாடியேபார்த்தான்.

இ — ள். உரிய மந்திரத்துணைவரில் தலைமை பெற்றுறையும் தருமகோபன்தன் கடிமனை சிகரம் மேல் தங்கி - (சூரபன்மனுக்) குரிய மந்திரிமார்களாகிய துணைவர்களுக்குள் முதன்மைபெற்றிருக்கின்ற தருமகோபனது காவலமைந்தமாளிகையின் சிகரத்தின் மீது

இருந்து,—சுரரும் வாசவன் மதலையும் அவுணர்கள் சுற்ற பரிவுகொண்டு அமர்சிறைக்க ளம் நாடியே பார்த்தான் - தேவர்களும் இந்திரகுமாரனாகிய சயந்தனும் அசுரர்கள் சூழ்ந் திருக்கத் துன்பங்கொண்டிருக்கின்ற சிறைச்சாலையை யுற்றுப்பார்த்தார். எ - று.

தன் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மைகள் எண். (௯அ)

99. கறையடித்தொகைபிரிதலுங்கயமுனிகவர்ந்து
மறையிடத்தினில்வேட்டுவருய்ப்பவைகுவபோற்
பொறையுடைத்துயரிந்திரன்போந்தபின்புல்லார்
சிறையிலுற்றவர்செய்கையிற்சிறிதுரைசெய்வாம்.

இ - ள். கறை அடி தொகை பிரிதலும் - யானைக்கூட்டங்கள் பிரிந்துவிட,—கய முனி கவர்ந்து மறையிடத்தினில் வேட்டுவர் உய்ப்ப வைகுவபோல்-யானைக்கன்றைப்பிடி த்து மறைவிடத்தில் வேடுவர்கள் வைப்ப (அவ்வியானைக்கன்று அவ்விடத்தில்) இருப்ப துபோல,—பொறை உடை துயர் இந்திரன் போந்தபின் - தாங்கிய துன்பத்தையு டைய இந்திரன் (சுவர்க்கத்தைவிட்டு மறைந்து) போனபின்பு, புல்லார் சிறையில் உற்ற வர் செய்கையில் சிறிது உரைசெய்வாம் - பகைவர்களாகிய அசுரர்களது சிறையிலிருக் கின்ற (சயந்தன்முதலிய) தேவர்களது செய்கையிற் சிலவற்றைக் கூறுகின்றோம்.

பொறையுடைத்துயர் பாரமாகிய துயரெனக்கொண்டு மிக்க துக்கமெனக்கருத்து ரைத்தலுமாம். (௯௯)

நகர்புகுபடலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௫௩௬.

# சயந்தன்புலம்புறுபடலம்.

1. பாஞ்சுடர்நெடுங்கணைபடுத்தபாயலில்
வருஞ்சசியனையதோர்வாணுதற்சசி
தருஞ்சிறுகுமாரனுஞ்சயந்தனவ்விடை
யருஞ்சிறையிருந்தனனமரர்தம்மொடும்.

இ - ள். பரம் சுடர் நெடும் கணை படுத்த பாயலில் - சிவபெருமானுடைய நெடிய அம்பாகிய விஷ்ணுமூர்த்தி படுத்து நித்திரைசெய்யும் பாயலாகிய பாற்கடலிலே,—வரும் சசி அனையது ஓர் வாள் நுதல் சசி - தோன்றிய சந்திரனை யொத்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய இந்திராணி,—தரும் சிறு குமரன் ஆம் சயந்தன் - பெற்ற சிறுகுமர னாகிய சயந்தன்,—தேவர் தம்மொடும் அ இடை அரும் சிறை இருந்தனன் - தேவர்க ளோடும் அவ்விடத்திலே (விடுதற்கு) அரிய சிறையிலிருந்தான். எ - று.

ஓர் அசை. தம் சாரியை. அருஞ்சிறை சகித்தற்கரிய சிறையுமாம். (க)

2. வாலிதாமமரர்சூழ்வைப்பிலிந்திரன்
கோலமாகியதனிக்குமரன்வைகுதல்
மேலைநாளமுதெழும்வேலைதன்னிடை
நீலமாமுகிலுறைநீர்மைபோலுமே.

இ - ள். வாலிது ஆம் அமரர் சூழ் வைப்பில் - வெண்ணிறமுள்ள தேவர்கள் சுற்றி யிருக்கின்ற விடத்தில்,—இந்திரன் கோலம் ஆகிய தனி குமரன் வைகுதல் - இந்திரன்

வடிவாகிய (கருநிறமுள்ள) தனித்த சயந்தன் இருக்கின்றதன்மை,—மேலை நாள் அமுது எழும் வேலை தன்னிடை - முன்னாளிலே அமிர்தம்வரப்பெற்ற பாற்கடன் மத்தியில்,—நீலம் மா முகில் உறை நீர்மை போலும் - நீலநிறம்பொருந்திய பெருமையாகிய முகில் போன்ற திருமால் இருக்கின்ற தன்மையைப்போலும். எ - று.

ஏகாரம் அசை. தன் சாரியை. முகில் ஆகுபெயர். (உ)

3. மழைபுரையவுணர்சூழ்வைப்பில்வாலொளி
தழுவியவமாருட்சயந்தன்மேயினான்
கழிதருபணிபலகவரச்சோர்தரு
முழுமதியதனிடைமுயலுற்றென்னவே.

இ — ள். கழிதரு பல பணி கவர சோர்தரு முழுமதி அதனிடை முயல் உற்று என்ன - மிகுதியான பல கரும்பாம்புகள் பீடிக்க (அதனால்) வருந்துகின்ற பூரணசந்திரனுக்கு நடுவில் முயற்களங்கம் இருந்தாற்போல,—மழை புரை அவுணர் சூழ் வைப்பில் - மேகம்போன்ற (கரிய சரீரங்களையுடைய) அவுணர்கள் சூழ்ந்திருக்குமிடத்தில்,—வால் ஒளி தழுவிய அமரருள் சயந்தன் மேயினான் - வெண்ணிறம்பொருந்திய தேவர்களுக்கு நடுவில் சயந்தனிருந்தான். எ - று.

ஏகாரம் அசை. மதியதனிடை என்புழி அது பகுதிப்பொருள்விகுதி. அன் சாரியை. பணி பல கவரச் சோர்தரு முழுமதி அபூதவுவமை. (ங)

4. வென்றிவில்லியற்றியவிஞ்சைநீர்மையாற்
கன்றியகரமெனக்காவற்சாலையிற்
பொன்றிகழ்வல்லிகள்பூண்டுபற்பக
றன்றுணைத்தாள்களிற்றழும்புசேர்ந்துளான்.

இ — ள். வென்றி வில் விஞ்சை இயற்றிய நீர்மையால் கன்றிய கரம் என - (அச்சயந்தன்) வெற்றிபொருந்திய வில்வித்தையை அப்பியாசஞ் செய்த தன்மையால் தழும்பேறிய கையைப்போல,—காவல் சாலையில் பல் பகல் பொன் திகழ் வல்லிகள் பூண்டு - காக்கப்படுகின்ற சிறைச்சாலையில் அனேககாலமாய் பொன்மயமாய் விளங்குகின்ற விலங்குபூணப்பட்டு,—தன் துணை தாள்களில் தழும்பு சேர்ந்துளான் - தனது இரண்டு கால்களிலுந் தழும்பையடைந்தவன். எ - று. (ச)

5. இயற்படுமானமுமிகலுநாணமு
மயற்படவெம்பழியனலஞ்சுற்றிட
வுயிர்ப்பெனுமோதைநின்றுயிரலைத்திடத்
துயர்ப்பெரும்பரவையூடழுந்திச்சோருவான்.

இ — ள். இயல் படு மானமும் இகலும் நாணமும் அயல் பட - (அச்சயந்தன்) இயல்பாயுள்ளமானமும் வலிமையும் வெட்கமும் பக்கத்திற்பொருந்த,—வெம்பழி அனலம் சுற்றிட - கொடியவசையாகிய தீயானது சூழ்ந்துகொள்ள,—உயிர்ப்பு எனும் ஓதை நின்று உயிர் அலைத்திட - பெருமூச்சாகிய காற்றானது நின்று பிராணனைவருத்த,—துயர் பெரும் பரவை ஊடு அழுந்தி சோருவான் - துக்கமாகிய பெருஞ்சமுத்திரத்தில் முழுகிச் சோருகின்றான். எ - று.

உம்மைகள் எண். அயற்பட சுற்றிட அலைத்திட அழுந்திச் சோருவான் என வினைமுடிவுசெய்க. அயற்பட என்பதற்கு நீங்கிவிட என்றலுமொன்று. (ரு)

6. அண்டருஞ்சிறையினால்வீடுமல்லதே
லெண்டரும்பலயுகமிடருண்மூழ்கலின்
மண்டுதொல்பழியறவலிதுதுஞ்சுமா
றுண்டநல்லமுதினாலவையொழிந்துளான்.

இ - ள். அண்ட அரும் சிறையினல் வீடும் - (அச்சயந்தன்) அணுகுதற்கரிய சிறையினல் (வாதைப்பட்டு) இறப்பான்,—அல்லதேல் - அன்றேல்,—எண் தரும் பலயுகம் இட்டுருள் மூழ்கலின் - எண்மிக்க அனேக யுககாலமாகத் துக்கத்தில் அழுந்தியிருத்தலால்,—மண்டு தொல் பழி அற வலிது துஞ்சும் - நெருங்கிய பெரிய வசை நீங்கும்படி வலாற்காரமாக உயிரைவிடுவான்,—உண்ட நல் அமுதினல் அவை ஒழிந்துளான் - உண்ணப்பட்ட நல்ல அமிர்தத்தினல் அவைகளைச் (செய்யா) திருக்கின்றான். எ - று.

ஆல் அசை. தருதல் மிகுதல். (சு)

7. தணிப்பரும்வெஞ்சினத்தகுவர்மன்னவன்
பணிப்படுசிறைக்களம்பட்டுத்தம்முட
றுணிப்புறுவோரெனத்துயர்கொண்டோர்கணங்
கணிப்பருமுகங்களாக்கழித்துவைகுவான்.

இ — ள். தணிப்ப அரும் வெம் சினம் தகுவர் மன்னவன் பணிப்படு சிறை களம் பட்டு - (அச்சயந்தன்பிறரால்) தணித்தற்கரிய பெருங்கோபத்தினையுடைய அசுரராஜனுகிய சூரபன்மனுல் நியமிக்கப்பட்ட சிறைச்சாலையில் அகப்பட்டு,—தம் உடல் துணிப்பு உறுவோர் என-தமது சரீரம் வெட்டப்படுவார்போல,—துயர் கொண்டு - (பெருந்) துன்பங்கொண்டு,—ஓர் கணம் கணிப்ப அரும் உகங்களா கழித்து வைகுவான் - ஒரு கணப்பொழுதை அளவிடுதற்கரிய யுகங்களாகக் கழித்துக்கொண்டு இருக்கின்றான். எ - று. ()

8. தேவியன்மரகதந்தெளித்துத்தீட்டிய
வோவியவுருவமாசுண்டதன்மையா
னுவியம்புனலறுதமருங்காவியம்
பூவியன்மென்றொடைபுலர்ந்ததேயனுன்.

இ — ள். தே இயல் மரகதம் தெளித்து தீட்டிய - (அச்சயந்தன்) தெய்வத்தன்மை பொருந்திய மரகதத்தைப் பதித்துச்சித்திரித்த,—ஓவிய உருவம் மாசு உண்ட தன்மையான் - பிரதிமையின் வடிவம் அழுக்கேறிய தன்மையை யொத்தவனும்,—ஆவி அம் புனல் அறுது அமரும் காவி அம் பூ இயல் மென் தொடை புலர்ந்ததேயனுன்-தடாகத்திலுள்ளநீரை விட்டுநீங்காமலிருக்கின்ற கருங்குவளை மலராற் கட்டப்பட்ட மிருதுவாகிய மாலை வாடியதை யொத்தவனுயு மிருக்கின்றான். எ — று.

காவியம் என்பதில் அம் சாரியை. ஏகாரம் தேற்றம். அம் ஒரு பொருளையே விசேடித்து நின்றது. மிக்க நீர் எனினும் அமையும். தெளித்து என்பதற்குச் சாணைபிடித்து என்றலுமாம் (அ)

9. வியலுகநூறுடன்மிக்கவெட்டினு
ளியலுறுசிறுவரையெனினுந்துஞ்சுமேன்
மயல்சிறிதகலுமான்மரபின்வைகலுந்
துயில்கிலனுதலாலறுததுன்பினுன்.

இ — ள். வியல் உகம் நூறுடன் மிக்க எட்டினுள் - (அச்சயந்தன்) மிகுதியாகிய நூற்றெட்டு யுகங்களில்,—இயல் உறு சிறு வரை எனினும் - நிகழுகின்ற ஒருகணப்பொழுதேனும்,—துஞ்சுமேல் - நித்திரைசெய்வானுயின்,—சிறிது மயல் அகலும் - சற்றே மயக்கம் நீங்கியிருப்பான்,—மரபின் வைகலும் துயில்கிலன் ஆதலால் அறுத துன்பினுன்-முறைப்படி தினந்தோறுந் தூங்காத தன்மையையுடையவனுதலால் நீங்காத துக்கத்தையுடையவனுயிருந்தான். எ - று.

ஆல் அசை. உம்மை முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது முற்று. (கூ)

10. நெஞ்சழிதுன்பிடைநீடவைகலிற்
றுஞ்சலன்வலிதுயிர்துறப்புமாற்றல
னெஞ்சுமோரிறைவரையிமையுங்கூட்டலன்
விஞ்சியதவந்துயர்விளைக்குமாங்கொலோ.

இ — ள். நெஞ்சு அழி துன்பிடை நீட வைகலின் துஞ்சலன் - (அச்சயந்தன்) மனதைக்கெடுக்கின்ற துன்பத்தில் நெடுநாளாக விருத்தலினால் இறக்கப்பெற்றானுமில்லை,— வலிது உயிர் துறப்பும் ஆற்றலன் - வலாற்காரமாக உயிர்விடுவதையுஞ் செய்யான்,— எஞ்சும் ஓர் இறைவரை இமையும் கூட்டலன் - கழிகின்ற ஒரு கணப்பொழுதாவது இமைகளையுங் கூட்டாதவனாயிருந்தான்,—விஞ்சிய தவம் துயர் விளைக்கும் ஆம் கொலோ - மிகுந்ததவமானது (சுகத்தைக்கொடுப்பதன்றிப்பெருந்) துன்பத்தையுமுண்டாக்குமா. எ - று.

ஆம் சாரியை. ஓகாரம் வினா. கொல் அசை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையது உயர்வுசிறப்பு. (க0)

11. இலங்கியமரகதத்தியன்றுபொன்குலாய்
நலங்கிளர்தன்வனப்பிழந்துநாடொறுஞ்
சலங்கெழுமவுணர்கடமைக்கண்டஞ்சியே
கலங்கினனுய்வகையாதுங்காண்கிலான்.

இ — ள். இலங்கிய மரகதத்து இயன்று பொன் குலாய் நலம் கிளர் தன் வனப்பு இழந்து - (அச்சயந்தன்) விளங்குகின்ற மரகதத்தாலியற்றப்பட்டது போன்று இலக்குமிவிலாசம்பொருந்தி (சாமுத்திரிகநூலிற் கூறப்பட்ட) நல்லிலக்கணம் விளங்குந் தனது அழகை இழந்து,—நாள் தொறும் - எப்போதும்,—சலம் கெழும் அவுணர்கள் தமை கண்டு அஞ்சியே - கோபம்பொருந்திய அசுரர்களைக் கண்டுபயந்து,—உய்வகை யாதும் காண்கிலான் கலங்கினன் - உய்யும்வகை சிறிதும் அறியாதவனாய்க் கலக்கமடைந்திருந்தான். எ - று.

தம் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை இழிவுசிறப்பு. மரகதத்தினால்(உருவாகச்) செய்து பொலிவுபொருந்தி நல்லிலக்கணம் விளங்கும் எனக்கூறினும் அமையும். நலம் ஈண்டு இலட்சணங்குறித்து நின்றது. (கக)

12. சுந்தரமரகதந்தனதுதொல்லுரு
வெந்துயருழத்தலின்வெய்துயிர்ப்பென
வந்தெழுபுகைபடமறைந்துகட்புனல்
சிந்திடவுடனுடன்றிகழத்தோன்றுமால்

இ — ள். சுந்தரம் மரகதம் தனது தொல் உரு வெம் துயர் உழத்தலின் - (அச்சயந்தன்) அழகிய மரகதநிறமாகிய தனது பழைய வடிவம் கொடுந்துன்பத்தை யனுபவித்தலால்,—வெய்து உயிர்ப்பு என எழுபுகை வந்து பட - பெருமூச்சாக வெழுகின்ற புகை வந்துபட,—மறைந்து - (அதனால்) மறைந்து,—கண் புனல் சிந்திட உடன் உடன் திகழ தோன்றும் - (பின்னர்) கண்ணீர் சிந்துதலினால் (அப்புகையொழிந்து) அடிக்கடி விளங்கத்தோன்றுவான். எ - று.

ஆல் அசை. உரு புகைபடுதலால் மறைந்து கண்ணீர் சிந்துதலினால் அப்புகையொழிந்து விளங்கத்தோன்றுவான் என்பது கருத்து. உரு மறைதலும் விளங்குதலும் மாறி மாறி வருதலின் "உடனுடன்" என்றார். (க௨)

13. முழுதுறுதன்றுயர்முன்னிமுன்னியே
யிழுதையாவுணருமிரங்கவேங்குறு
வழுதிடுங்காப்பிேனாச்சஞ்செய்தலும்
பழுதுகொலென்றுவாய்பொத்தும்பாணியால்.

இ - ள். தன் உறு முழுது துயர் முன்னி முன்னியே - (அச்சயந்தன்) தனக்குண்டாகிய துயர்முழுவதையும் நினைத்து நினைத்து,—இழுதையர் அவுணரும் இரங்க - மூடர்களாகிய அசுரரும் (கேட்டு) வருந்தும்படி,—ஏங்குறு அழுதிடும்-ஏங்கியழுவான்,—காப்பினோர் அச்சம் செய்தலும் - (சிறைச்சாலையைக்) காத்திருக்கின்ற அசுரர்கள் பயமுறுத்தலும்,—பழுது கொல் என்று பாணியால் வாய் பொத்தும் - (அழுதது) தவறுமென்று கையினால் வாயைமூடிக் கொள்ளுவான். எ - று.

ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு. கொல் ஐயம். (க௩)

14. இந்திரன்சசியொடுமிருந்தசூழல்போய்த்
தந்தனர்பற்றினர்தமரெனச்சிலர்
முந்துறுகாவலோர்மொழிந்தபொய்யுரை
யந்தமதடையுமுன்னயர்ந்துவீழுமே.

இ — ள். இந்திரன் சசியொடும் இருந்த சூழல் தமர் போய் பற்றினர் தந்தனர் என- இந்திரன் இந்திராணியுடனிருந்த விடத்திற் சுற்றத்தார் சென்று பிடித்துத் தந்தார்களென்று,—முந்து உறு காவலோர் சிலர் மொழிந்த பொய் உரை - முன்னிருக்கின்ற காவலாளருட் சிலர் சொன்ன பொய்வார்த்தை,—அந்தமது அடையுமுன் - (சொல்லி) முடியுமுன்,—அயர்ந்து வீழும்-(சயந்தன் அதனைக் கேட்டுச்) சோர்ந்து விழுவான். எ-று.

ஏகாரம் அசை. அது பகுதிப்பொருள்விகுதி. பொய்வார்த்தையைக் கேட்டுமுடியுமுன் எனினுமாம். நமது தந்தைதாயர்களையும் பிடித்துக்கொண்டுவந்தால் இவ்வாறுகவே தண்டிப்பார்களென்னுங் கவலையினாற் சோர்ந்து விழுவானென்க. (க௪)

15. ஐந்தருநீழலைநினைக்குமாய்மலர்
தந்தமென்பள்ளியையுன்னுந்தானெனப்
புந்திகொண்மங்கையர்புணர்ப்பையுட்கொளு
மிந்திரப்பெருவளமெண்ணிச்சோருமே.

இ — ள். ஐந்தரு நீழலை நினைக்கும் - (அச்சயந்தன்) பஞ்சதருநீழலிலே வாழ்ந்த சுகத்தையும் நினைப்பான்,—ஆய் மலர் தந்த மென் பள்ளியை உன்னும் - மிருதுவாகிய மலர்களால் உண்டாக்கிய மெல்லியசயனத்தையும் நினைப்பான்,—தான் என புந்தி கொள் மங்கையர் புணர்ப்பை உட்கொளும் - தன்னைப்போல மனம்வைத்திருக்கின்றதேவமாதர்களது புணர்ச்சியையு நினைப்பான்,—பெரு இந்திர வளம் எண்ணி சோரும் - பெரிய இந்திரசம்பத்தையு நினைத்துச் சோருவான். எ - று.

ஏகாரம் அசை. ஐந்தருக்கள்:—மந்தாரம், பாரிஜாதம், சந்தானம், அரிசந்தனம், கற்பகம் என்பனவாம். ஆய் மலர் காம்பு முதலியன நீக்கப்பட்டமலருமாம். (க௫)

16. தன்னிணையில்லதோர்தருவினீழனு
ணன்னலந்துய்த்தியாநாளுமின்புறும்
பொன்னகர்பூழியாய்ப்போங்கொலோவெனு
வுன்னிடுந்தொன்மைபோலுறுவதென்றெனும்.

இ - ள். தன் இணை இல்லது ஓர் தருவின் நீழலுள் - (அச்சயந்தன்) பிறிதொன்றுந் தனக்குவமையில்லாத கற்பகநீழலில்,—யாம் நல் நலம் துய்த்து - நாம் நன்மையாகிய சுகத்தை யனுபவித்து,—நாளும் இன்புறும் பொன் நகர் பூழியாய் போங்கொலோ என உன்னிடும் - எப்போதும் இன்பத்தை யடைதற்கேதுவாகிய பொன்னகரம் துகளாய்ப் போகுமோ என்று நினைப்பான்,—தொன்மை போல் உறுவது என்று எனும் - முன் போல அப்பொன்னகரத்திற் கற்பகநீழலை யடைவது எக்காலம் என்றும் நினைப்பான்.

கொல் ஐயம். ஓகாரம் அசை. உம்மை முற்று. (கசு)

17. ஈண்டையிலவுணர்கோனேவத்தானைகள்
சேண்டொடர்துறக்கமேற்செல்லநாடியே
காண்டகுதம்முருக்கரந்துபோயினர்
யாண்டையரோவெமையீன்றுளாரெனும்.

இ — ள். ஈண்டையில் அவுணர்கோன் ஏவ - (அச்சயந்தன்) இவ்விடத்திலுள்ள அசுரராஜனாகிய சூரபன்ம னனுப்ப,—தானைகள் - அசுரசேனைகள்,—சேண் தொடர் துறக்கம் மேல் செல்ல - வானுலகத்திலுள்ள சுவர்க்கத்திற் போக,—எமை ஈன்றுளார் நாடியே - எம்மைப்பெற்ற பிதாவும் மாதாவும் அதனையறிந்து,—காண் தகு தம் உரு கரந்து போயினர் - அழகுபொருந்திய தங்கள் உருவங்களை மறைத்து வேற்றுருவுடன் போனார்கள்,—யாண்டையரோ எனும் - (இப்பொழுது அவர்கள்) எங்கிருக்கின்றார்களோ வென்பான். எ - று.

ஏகாரம் தேற்றம். ஓகாரம் ஐயம். (கஎ)

18. ஏயினதுறக்கநாடிழிந்துதொல்லைநாட்
டாயொடுபயந்துளதந்தைபாரகம்
போயினனெனச்சிலர்புகலக்கேட்டன
னாயிடைப்புகுந்தனவறிகிலேனெனும்.

இ — ள். பயந்துள தாயொடு தந்தை - (அச்சயந்தன்) என்னைப் பெற்ற மாதாவாகிய இந்திராணியோடு பிதாவாகிய இந்திரன்,—ஏயின துறக்கம் நாடு இழிந்து - வாழ்ந்திருந்த சுவர்க்கலோகத்தை விட்டு,—தொல்லை நாள் பாரகம் போயினன் என சிலர் புகல கேட்டனன் - முன்னாளிலே பூவுலகத்திற் போனானென்று சில தேவர்கள் சொல்லக்கேட்டேன்,—ஆயிடை புகுந்தன அறிகிலேன் எனும் - அப்பூவுலகத்தில் அவர்களுக்குண்டான நன்மை தீமைகளை அறியேனென்றுஞ் சொல்லுவான். எ - று. (கஅ)

19. அண்டர்களொருசிலரயர்வுகூறவுட்
கொண்டனரேகினர்குறுகியெந்தையைக்
கண்டனரேகொலோகலந்துளார்கொலோ
விண்டனரேகொலோவிளைவெனோவெனும்.

இ — ள். அண்டர்கள் ஒரு சிலர் அயர்வுகூற உட்கொண்டனர் - (அச்சயந்தன்) தேவர்கள்சிலர் (சூரபன்மன்செய்த) துன்பத்தைச் சொல்லும்பொருட்டு மனசில் நினைத்துக்கொண்டு,—ஏகினர் - (நம்மைவிட்டுப்பிரிந்து) போனார்கள்,—குறுகி எந்தையை கண்டனரே கொலோ - (அவ்வாறு) சென்று எமது பிதாவாகிய அரசனைக்கண்டார்களோ,—கலந்துளார் கொலோ - (அவருடன்) கலந்துகொண்டார்களோ,—விண்டனரே கொலோ - (அவரைக்) காணப்பெறாது திரிந்தார்களோ,—விளைவு எனோ என்னும் - நடந்தகாரியம் யாதோ என்றுஞ் சொல்லுவான். எ — று.

ஏகாரமிரண்டும் ஓகாரம் மூன்றும் அசை. கொல் மூன்றும் விளைவெனோ வென்பதினோகாரமும் ஐயம். (கக)

20. சீகரமிக்கசூர்செயிர்த்துச்செய்திடு
மாகுலமுழுவதுமறையவம்மையோர்
பாகமதுடையநம்பரமன்மால்வரைக்
கேகினனேகொலோவெந்தையென்றிடும்.

இ - ள். எந்தை சீகரம் மிக்க சூர் செயிர்த்து செய்திடும் ஆகுலம் முழுவதும் அறைய - (அச்சயந்தன்) எமது பிதா இலட்சுமீகரம்மிகுந்த சூரபன்மன் கோபித்துச் செய்கின்ற துன்பம் முழுவதும் சொல்லும்பொருட்டு,—அம்மை ஓர் பாகமது உடைய நம் பரமன் மால் வரைக்கு - உமாதேவியாரை ஓர் பாகத்தில் உடைய நமது சிவபெருமான் வீற்றிருக்கின்ற பெருமையாகிய திருக்கைலாசமலேக்கு,—ஏகினனே கொலோ - போனரோ,—என்றிடும் - என்றுசொல்லுவான். எ — று.

ஏ, ஓ அசை. கொல் ஐயம். உம்மை முற்று. அது பகுதிப்பொருள்விகுதி. (உ0)

21. பொருந்தலர்கண்ணுருப்பொருட்டுத்தம்முருக்
கரந்தனரோவழீஇக்குரவர்கள்வர்பாற்
பொருந்தினரேகொலோபுவனமெங்குமாய்த்
திரிந்தனரேகொலோதெளிகிலேனெனும்.

இ - ள். குரவர் பொருந்தலர் கண்ணுருப் பொருட்டு தம் உரு கரந்தனரோ எனது பிதாவும் மாதாவும் சத்துருக்களாகிய அசுரர்கள் காணுதிருக்கும்பொருட்டுத் தமது வடிவங்களை மறைத்துக்கொண்டார்களோ,—அழீஇ கள்வர்பால் பொருந்தினரேகொலோ - (அல்லதுமனம்) அழிந்து திருடர்களாகிய அசுரர்களிடத்தில் அகப்பட்டுக்கொண்டார்களோ,—புவனம் எங்குமாய் திரிந்தனரேகொலோ - (அன்றேல்) உலகமெங்குமாய்த்திரிந்தார்களோ,—தெளிகிலேன் எனும் - அறியேனென்றுஞ் சொல்லுவான். எ — று.

ஏகாரம் இரண்டும் ஓகாரம் இரண்டும் அசை. கொல் இரண்டும் கரந்தனரோவென் பதிஞேகாரமும் ஐயம். வழீஇயெனக்கொண்டு தவறி எனப்பொருள் கூறுவாருமுளர்.()

22. மாண்கிளர்சூரபன்மாவினேவலா
லேண்கிளரவுணர்கள்யாயைத்தந்தையை
நாண்கொடுபிடித்திவணல்கப்போயினர்
காண்கிலரேகொலோகரந்தவாறெனும்.

இ - ள். மாண் கிளர் சூரபன்மாவின் ஏவலால் - (அச்சயந்தன்) மாட்சிமைவிளங்கா நின்ற சூரபன்மனது கட்டளையினுல்,—ஏண் கிளர் அவுணர்கள் - வலிமைமிக்க அசுரர் கள்,—யாயை தந்தையை நாண் கொடு பிணித்து இவண் நல்க போயினர் - எனது பிதாவையும் மாதாவையும் கயிற்றிஞற்கட்டி இவ்விடங்கொண்டுவரும்பொருட்டுப் போஞர் கள்,—கரந்த வாறு காண்கிலரேசொலோ எனும் - அவர்கள் மறைந்திருப்பதைக் கண் டார்களில்லேயோ என்றுஞ் சொல்லுவான். எ — று.

ஏ, ஓ அசை. கொல் ஐயம். அரிபிரமேந்திராதி தேவர்களனைவரையும் கீழ்ப்படுத்து அதிகாரம் நடத்துதலின் மாண்கிளர் என்ருர். (உஉ)

23. அன்புடையம்மனையத்தனீங்கிவர்
வன்புடையவுணர்கள்வரவுகாண்பரேற்
றுன்புடைமனத்தராய்த்துளங்கியேங்கியே
யென்படுவார்கொலோவறிகிலேனெனும்.

இ - ள். அன்பு உடை அம்மனை அத்தன் ஈங்கு இவர் வன்பு உடை அவுணர்கள் வரவு காண்பரேல் - (அச்சயந்தன்) என்னிடத்திலன்புடைய தாயுந்தந்தையுமாகிய இவர்கள் கொடுமையையுடைய அசுரர்களது வரவைக் காண்பார்களாயின்,—துன்பு உடை மனத்தராய் துளங்கி ஏங்கியே - துன்பம்பொருந்திய மனத்தினையுடையவர்களாய் நடுங்கி யேக்கங்கொண்டு,—என் படுவார் கொலோ அறிகிலேன் எனும் - என்னபாடுபடுவார்களோ அறியேனென்றுஞ் சொல்லுவான். எ — று.

ஏகாரம் தேற்றம். கொல் ஐயம். ஓகாரம் அசை. (உ௩)

24. பொன்னகர்கரிந்ததும்புதல்வனாகுமென்
றன்னையிம்முதுநகர்த்தந்துதானவர்
துன்னருஞ்சிறையிடுதுயருங்கேட்டபி
னென்னினைந்திரங்குமோவீன்றதாயெனும்.

இ - ள். பொன் நகர் கரிந்ததும் - (அச்சயந்தன்) பொன்மயமாகிய சுவர்க்க உலகம் எரிந்ததும்,—புதல்வன் ஆகும் என் தன்னை தானவர் இ முது நகர் தந்து துன்ன அரும் சிறையிடு துயரும் கேட்டபின் - மகனாகிய என்னை அசுரர்கள் இப்பெரிய நகரத்திலே கொணர்ந்து அடைதற்கரிய சிறையில்வைத்த துன்பமும் (ஆகிய இவைகளைக்) கேட்ட பின்பு,—ஈன்ற தாய் என்நினைந்து இரங்குமோ எனும் - (என்னைப்) பெற்ற அன்னை எதைநினைந்து இரங்குவாளோ வென்றுஞ் சொல்லுவான். எ — று.

உம்மைகள் எண். ஓகாரம் ஐயம். துன்ன அரும் என்பது தொகுத்தல்விகாரம். ()

25. பன்னெடுமாயைகள்பயின்றதானவ
ரன்னையொடத்தனையாய்ந்துபற்றியென்
முன்னுறக்காண்டகுமுறையினுய்ப்பினு
மென்னுயிர்பின்னருமிருக்குங்கொல்லெனும்.

இ - ள். பல் நெடு மாயைகள் பயின்ற தானவர் - (அச்சயந்தன்) பலவகையாகிய பெரிய மாயங்களைப்பழகியிருக்கின்ற அசுரர்கள்,—அன்னையொடு அத்தனை ஆய்ந்து பற்றி - பிதாவையும் மாதாவையுந் தேடிப்பிடித்துக்கொண்டு வந்து,—என் முன் உற காண் தரு முறையின் உய்ப்பினும் - எனக்குமுன்னாக யான் பார்க்கத்தக்க முறையாகச் (சிறை) வைப்பார்களாயின்,—என் உயிர் பின்னரும் இருக்கும் கொல் எனும் - எனதுயிர் பின்னுமிருக்குமோ (இராது) என்றுஞ் சொல்லுவான். எ — று.

உம்மைகள் இழிவுசிறப்பு. கொல் ஐயம். மாயைகள் — மாயவித்தைகள். (உ௫)

26. ஆற்றருஞ்செல்லலுளழுந்தும்பான்மையான்
மேற்றிகழ்பரஞ்சுடர்விமலற்போற்றியே
நோற்றனர்முத்தியினுழைகுற்றார்கொலோ
பேற்றினரிருந்தசொற்பிறந்ததில்லெனும்.

இ - ள். பேற்றினர் ஆற்ற அரும் செல்லல் உள் அழுந்தும் பான்மையால் - (அச்சயந்தன்) என்னைப்பெற்ற பிதாவும் மாதாவும் சகித்தற்கரிய பெருந்துன்பத்திலழுந்துந் தன்மையால்,—மேல் திகழ் பரம் சுடர் விமலன் போற்றியே - (எவர்களுக்கும்) மேலாகவிளங்குகின்ற பரஞ்சோதிரூபராகிய சிவபெருமானைத் துதித்து,—நோற்றனர் முத்தியில் நுழை குற்றார் கொலோ - தவஞ்செய்து மோக்ஷத்தையடைந்தார்களோ,—இருந்த சொல் பிறந்தது இல் எனும் - (அவர்கள் ஜீவனோடு இருந்தார்கள்) என்னுஞ் சொல் பிறக்கவில்லையென்றுஞ் சொல்லுவான். எ - று.

விமலன் - இயல்பாகவே பாசம் நீங்கப்பெற்றவர். ஓகாரம் அசை. ஏகாரம் தேற்றம். கொல் ஐயம். (உசு)

27. தீங்கதிர்ப்பகையொடுசெருமுயன்றநாட்
டாங்கியெற்கொண்டுழித்தந்தமிற்றிட
வாங்கணம்வீழ்ந்ததாலதற்குமேற்பட
யாங்குசென்றதுகொலோயானையென்றிடும்.

இ - ள். தீ கதிர் பகையொடு செரு முயன்ற நாள் - (அச்சயந்தன்) வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியனுக்குப்பகைவனாகிய பானுகோபனுடனே யான் போர் செய்தகாலத்து,—யானை என் தாங்கி கொண்டுழி - ஐராவதயானை யென்னைச்சுமந்துகொண்டு நின்ற பொழுது,—தந்தம் இற்றிட ஆங்கனம் வீழ்ந்தது - (அப்பானுகோபன் கதுப்பிலறைந்தமையால்) கொம்பொடிந்து அப்போர்க்களத்தில்விழுந்தது,—அதற்கு மேற்பட யாங்கு சென்றதுகொலோ என்றிடும் - அதன்பின்னர் எவ்விடத்திற்சென்றதோ வென்றுஞ் சொல்லுவான். எ — று.

ஆல், ஒ அசை. கொல் ஐயம். தீக்கதிர் என்பது தீங்கதிர் எனமெலித்தல் விகாரமாயிற்று. (உஎ)

28. பிறப்புறுவைகலைத்தொட்டுப்பின்னரே
யிறப்புறுநாள்வரையாவர்க்காயினு
முறப்படுதுய்ப்பெலாமூழினூற்றமால்
வெறுப்பதென்னவுணரைவினையினேனெனும்.

இ - ள். யாவர்க்கு ஆயினும் - (அச்சயந்தன்) எவர்களுக்காயினும்,—பிறப்பு உறு வைகலை தொட்டு - சென்மமெடுத்தநாள்முதல்,—பின்னரே இறப்பு உறு நாள் வரை - பின்பு இறக்கும் நாள்வரையும்,—உற படு துய்ப்பு எலாம் ஊழின் ஊற்றம் - வரற்பாலனவாகிய அனுபவங்களெல்லாம் விதியின் வலியாகும்,—வினையினேன் அவுணரை வெறுப்பதென் எனும் - (ஆதலால்) பாவியாகிய யான்(இவ்வாறுசிறையிலடைத்தார்களென்று) அசுரரை ஏன் வெறுத்துக்கொள்ளவேண்டும் என்றுஞ் சொல்லுவான். எ — று.

ஆல், ஏ அசை. உம்மை முற்று. (உஅ)

29. தாவறுதொன்னகர்விளியத்தந்தைதா
யாவியொடிரிந்திடவளியனோர்மகன்
வீவருஞ்சிறைப்படமேலைநாட்புரி
தீவினையாவதோதெளிகிலேனெனும்.

இ - ள். தா அறு தொல் நகர் விளிய - (அச்சயந்தன்) கெடாத பழைய எனது அமராவதிநகரம் தீப்பட்டழியவும்,—தந்தை தாய் ஆவியொடு இரிந்திட - பிதாவும் மாதாவும் ஆகிய இந்திரனும் இந்திராணியும் உயிருடனோடி யொளித்திருக்கவும்,—அளியன் ஓர் மகன் வீவ அரும் சிறை பட - எளியனாகிய ஒருமகன் நீங்குதற்கரிய சிறையிலகப்படவும் (இவற்றிற்கெல்லாங்காரணமாக),—மேலை நாள் புரி தீவினை யாதோ தெளிகிலேன் எனும் - முன்னாளிற்செய்ததீவினையெதுவோ (அதையின்னதென்று) அறியேனென்றுஞ் சொல்லுவான். எ - று.

ஓகாரம் ஐயம். எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. தீவினை இன்னதென்றறிந்தால் இனியாயினுஞ் செய்யாதிருக்கலாம் என்பது குறிப்பெச்சம். (உகூ)

30. துப்புறழ்சடையினுன்சூறற்கீறிலா
வப்பெருவரத்தினையளித்தலாலவன்
மெய்ப்படவிளிகிலன்வீடுஞ்செய்கில
னெப்பொழுதிச்சிறைதீருமென்றிடும்.

இ - ள். துப்பு உறழ் சடையினுன் சூறற்கு ஈறிலா அ பெருவரத்தினை அளித்தலால் - (அச்சயந்தன்) பவளம்போன்ற சிவந்த சடையினையுடைய சிவபெருமான் சூரபன் மனுக்கு அழிவில்லாத அப்பெரிய வரத்தைக்கொடுத்தலால்,—அவன் மெய் பட விளிகிலன் - அச்சூரபன்மன் தேகமொழியப் பெற்றிறக்கமாட்டான்,—வீடும் செய்கிலன் - எங்களைச் சிறையினின்றும் விடவும்மாட்டான் (ஆதலினுல்),—இ சிறை எப்பொழுது தீரும் என்றிடும் - இந்தச்சிறை எக்காலம் நீங்குமென்றுஞ் சொல்லுவான். எ - று.

சிறை - சிறையிலிருந்து வருந்துந்துக்கம். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௩0)

31. மட்டறுவெறுக்கையுநகரும்வாழ்க்கையும்
விட்டனர்கடந்தனர்மேலையோரென
வுட்டெளிந்தகன்றிலனுவர்பிணித்திடப்
பட்டனனேகொலோபாவியேனெனும்.

இ - ள். பாவியேன் - (அச்சயந்தன்) பாவியாகிய யானும்,—மேலை யோர் - எனது முன்னேர்களாகிய பிதாவும் மாதாவும்,—மட்டு அறு வெறுக்கையும் நகரும் வாழ்க்கையும் விட்டனர் கடந்தனர் என - அளவற்ற செல்வத்தையும் அமராவதியென்னும் நகரத்தையும் தேவபோகத்தையும் விட்டுப்போய் உயிரோடு இருந்தார்களென்று,—உள் தெளிந்து அகன்றிலன் - மனந்தெளிந்து நீங்கினேனில்லை,—உவர் பிணித்திட - இந்த அசுரர் சிறையில்வைக்க,—பட்டனனே கொலோ எனும் - அகப்பட்டேனே யென்றுஞ் சொல்லுவான். எ - று.

கொல், ஓ அசை. ஏகாரம் தேற்றம். உம்மைகள் எண். (௩க)

32. மாற்றலனிவ்வுயிர்வசையுறுவகை
போற்றலன்குரவர்பாற்புகுந்தபுன்கணைத்
தேற்றலன்றமியனுந்தெளிகிலன்சிறை
யாற்றலனுற்றலனையகோவெனும்.

இ - ள். இ உயிர் மாற்றலன் - (அச்சயந்தன்) இவ்வுயிரை நீக்கினேனுமில்லை,—வசை உறுவகை போற்றலன் - வசைவராதபடி பாதுகாத்தேனுமில்லை,—குரவர்பால் புகுந்த புன்கணை தேற்றலன் - பிதாமாதாவிடத்தில்வந்த வருத்தத்தை யறிந்தேனுமில்லை,—குரவர்பால் புகுந்த புன்கணை தேற்றலன் - பிதாமாதாவிடத்தில் வந்த வருத்தத்தை யறிந்தேனுமில்லை,—தமியனும் தெளிகிலன் - நானுவது தெளிந்தேனுமில்லை,—சிறை ஆற்றலன் ஆற்றலன் ஐயகோ எனும் - சிறைவருத்தம் பொறுக்கமாட்டேன் பொறுக்கமாட்டேன் ஐயோவென்றுஞ் சொல்லுவான். எ - று.

பிதாமாதாக்கள் தெளியாமையேயன்றித் தமியனும் தெளிகிலன் என்றான். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். குரவர்பால் எனக்குவந்ததுன்பத்தைத் தெரிவித்தேனுமில்லை அவர்கட்குவந்ததுன்பத்தை யான் தெரிந்தேனுமில்லை என்றலுமாம்; தேற்றல் தன்வினை பிறவினை இரண்டற்கும் பொதுவாதலால் ஈண்டுப் பிறவினைப்பாற்பட்டது. (௩உ)

33. துறந்ததோபோறந்தொலையுந்தீம்பவஞ்
சிறந்ததோமாதவப்பயனுந்தேய்ந்ததோ
குறைந்ததோநன்னெறிகூடிற்றேகலி
யிறந்ததோமறைசிவனில்லையோவெனும்.

இ - ள். பேர் அறம் துறந்ததோ - (அச்சயந்தன்) பெருமையாகிய தருமம் நீங்கி விட்டதோ,—தொலையும் தீம் பவம் சிறந்ததோ - முன்னர் அழிந்த கொடிய பாவங்கள் (இப்பொழுது) மிகுதியாயினவோ,—மா தவம் பயனும் தேய்ந்ததோ - பெருந்தவப்பலனும் அழிந்ததோ,—நல் நெறி குறைந்ததோ - சன்மார்க்கம் குறைந்துவிட்டதோ,—கலி கூடிற்றே - கலிகாலம் வந்துவிட்டதோ,—மறை இறந்ததோ - வேதமும் அழிந்ததோ,—சிவன் இல்லையோ எனும்-சிவபெருமானும் இல்லையோ என்றுஞ்சொல்லுவான்.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். ஓகாரம் எழும் ஐயம். (ங௩)

34. கூடலர்வருத்தலிற்குரவர்தங்களைத்
தேடினர்விரைவுடன்சென்றதேவர்போ
லோடினர்புகாவகையொழிந்துளோரையும்
வீடருஞ்சிறையிடைவீட்டினேனெனும்.

இ - ள். கூடலர் வருத்தலில் - (அச்சயந்தன்) சத்துருக்களாகிய அசுரர்கள் வருத்துவதனால்,—குரவர் தங்களை தேடினர் விரைவுடன் சென்ற தேவர் போல் - நமது பிதாவையும் மாதாவையுந் தேடி விரைவாகச் சென்றதேவர்களைப்போல,—ஓடினர் புகாவகை - ஓடிப்போகாதபடி,—ஒழிந்து உளோரையும் - எஞ்சிய தேவர்களனைவரையும்,—வீட அரும் சிறையிடை வீட்டினேன் எனும் - விடுதற்கரிய சிறைச்சாலையில் அடைப்பித்தேன் என்றுஞ் சொல்லுவான். ஏ - று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (ங௪)

35. அந்தியின்மறைமொழியயர்த்துவைகினன்
சந்தியில்வினைகளுந்தழலுமோம்பல
னெந்தையைவழிபடுமியல்புநீங்கினன்
முந்தையினுணர்ச்சியுமுடிந்துளேனெனும்.

இ - ள். அந்தியில் மறைமொழி அயர்த்து வைகினன் - (அச்சயந்தன்) அந்திக்காலத்திலே அத்தியயனஞ்செய்யப்படுகின்ற வேதவாக்கியங்களை மறந்திருந்தேன்,—சந்தியில் வினைகளும் தழலும் ஓம்பலன் - சந்தியாகாலங்களிற் செய்யப்படும் கிரியைகளையும் அக்கினிகாரியத்தையுஞ் செய்யாது விடுத்தேன்,—எந்தையை வழிபடும் இயல்பு நீங்கினன் - எமது பிதாவாகிய சிவபெருமானை வழிபாடுசெய்யுந் தன்மையையும் விட்டேன்,—முந்தையின் உணர்ச்சியும் முடிந்துளேன் எனும் - முன்னுள்ள அறிவுங் கெட்டேன் என்றுஞ் சொல்லுவான்.

உம்மை முன்னையவை எண்; பின்னையவை இறந்ததுதழீஇய வெச்சம். வழிபடும் இயல்பு - பூசைசெய்தல். (ங௫)

36. மெய்புயிரகன்றிடவிளிகிலேனெனி
னெய்புறுமலக்கணீத்தினிதுமேவலன்
வையுறுநெடும்புரிவடிவம்வெஃகெனப்
பொய்புடல்சுமந்தனன்புலம்புற்றேனெனும்.

இ - ள். மெய் உயிர் அகன்றிட விளிகிலேன் எனில் - (அச்சயந்தன்) தேகத்தினின்றும் உயிர் நீங்கச் சாகின்றிலேனாயின்,—எய் உறும் அலக்கண் நீத்து இனிது மேவலன் - வருத்துகின்றதுன்பம் நீங்கிச் சுகமாகவிருந்தேனுமில்லை,—வை உறு நெடும் புரி வடிவம் வெந்தென - நெடியவைக்கோற்புரிவடிவம் வெந்தாலும் அந்தவடிவாயிருப்பது போல,—பொய் உடல் சுமந்தனன் புலம்புற்றேன் எனும் - பொய்யானசரீரத்தைச் சுமந்துகொண்டு வருத்தப்படுகின்றேனென்றுஞ் சொல்லுவான். எ - று. (ஙசு)

37. சொல்லுவதென்பிறதொல்லைவைகலின்
மெல்லெனவாற்றியவினையின்பான்மையா
லல்லுறழ்மிடற்றினெம்மடிகளேயெமக்
கெல்லையிலித்துயரியற்றினானெனும்.

இ - ள். பிற சொல்லுவதென் - (அச்சயந்தன் நாம்) பிறவற்றை [யெடுத்துச்] சொல்லுவதென்னை,—தொல்லை வைகலில் - முன்னாளிலே,—மெல்லென ஆற்றிய வினையின் பான்மையால் - மெல்லனவாகச்செய்த தீவினையின் றன்மையால்,—அல் உறழ் மிடற்றின் எம் அடிகளே - இருள்போன்ற கரிய கண்டத்தினையுடைய எமது சிவபெருமானே,—எமக்கு எல்லையில் இ துயர் இயற்றினன் எனும் - எமக்கு(அக்கன்மத்தின்பயனாகிய) அளவற்ற இத்துன்பங்களையமைத்தார் என்றுஞ் சொல்லுவான். எ - று.

ஏகாரம் தேற்றம். (ஙஎ)

38. ஆவியுமுலகமுமனைத்துமாகியு
மோவியுங்கருணையினுருக்கொண்டாடல்செய்
தேவர்கடேவனுஞ்சிவன்மற்றல்லதை
யேவரென்குறையுணர்ந்திரங்குவாரெனும்.

இ - ள். உலகமும் ஆவியும் அனைத்தும் ஆகியும் - (அச்சயந்தன்) உலகமும் உயிர்களும் எல்லாமுமாய்,—ஓவியும் - (அவை) யல்லாமலுமாய்,—கருணையின் உரு கொண்டு ஆடல் செய் தேவர்கள் தேவனும் சிவன் அல்லது - (தமது) அருட்சத்தியினாலே திருமேனிகொண்டு (திரு) விளையாடலைச்செய்கின்ற தேவர் என்பாருக்கெல்லாந் தேவராகிய சிவபெருமானேயன்றி,—ஏவர் என்குறை உணர்ந்து இரங்குவார் எனும் - யார் என் வருத்தத்தையறிந்து இரங்குவார்களென்றுஞ் சொல்லுவான். எ - று.

மற்று அசை. ஐ சாரியை. உம்மைகள் எண். (ஙஅ)

39. பெறலருந்திருவெலாம்பிழைத்துச்சூருயி
ரறுவதுமவுணர்களவிந்துமாய்வதுஞ்
சிறையிதுகழிவதுந்தீர்கிலாவசை
யிறுவதுமொருபகலெய்துமோவெனும்.

இ - ள். பெறல் அரும் திரு எலாம் பிழைத்து - (அச்சயந்தன்) பெறுதற்கரிய செல்வங்கள் எல்லாவற்றையும் இழந்து,—சூர் உயிர் அறுவதும் - சூரபன்மன் உயிர்விட்டு இறப்பதும்,—அவுணர்கள் அவிந்து மாய்வதும் - அசுரர்கள் இறந்தொழிவதும்,—இது சிறை கழிவதும் - இந்தச்சிறை நீங்குவதும்,—தீர்கிலா வசை இறுவதும் - தீராதவசை நீங்குவதும்,—ஒருபகல் எய்துமோ எனும் - ஒருநாள் வருமோ என்றுஞ் சொல்லுவான்.

உம்மைகள் எண். ஓகாரம் ஐயம். அக்கினித்தம்பத்தினின்று பதினாயிரம் வருஷம் அருந்தவஞ்செய்த இவனுக்கன்றிப் பிறராலடைதற்கரிய செல்வம் என்பான் பெறலருந் திருவெலாம் எனக்கூறினான். (ஙக)

40. நூற்றொடர்கேள்வியோர் நுணங்குசிந்தைசேர்
கூறுடைமதிமுடிக்குழகன்றன்னருட்
பேறுடையேனெனிற்பெருந்துயர்க்கட
லேறுவன்வினையினேற்கில்லைகொல்லெனும்.

இ - ள். நூல் தொடர் கேள்வியோர் நுணங்கு சிந்தை சேர் கூறு உடை மதிமுடி குழகன் தன் அருள் பேறு உடையேன் எனில் - (அச்சயந்தன்) சாத்திரசம்பந்தமாகிய கேள்வியுள்ள மகான்களுடைய நட்பமாகிய தியானத்திலே இருக்கின்ற கூறுபாட்டினை யுடைய சந்திரனையணிந்த சடாமுடியையுடையராகிய சிவபெருமானது திருவருட்பே ற்றையுடையேனாயின்,—பெரும் துயர் கடல் ஏறுவன் - பெருந்துக்கமாகிய கடலினின் றுங் (கரை) ஏறுவேன்,—வினையினேற்கு இல்லை கொல் எனும் - பாவியாகிய எனக்கு (அத்திருவருள்) இல்லையோ வென்றுஞ்சொல்லுவான். எ - று.

தன் சாரியை. கொல் ஐயம். (சO)

41. இத்திறமளப்பிலவெண்ணியெண்ணியே
மெய்த்துயருழந்துவெய்துயிர்த்துவிம்மியே
யத்தலைசுற்றியவமரர்யாவருந்
தத்தமிலிரங்குறச்சயந்தன்வைகினான்.

இ - ள். சயந்தன் இ திறம் அளப்பில எண்ணி எண்ணி - சயந்தன் இத்தன்மை யாக அளவில்லாத விஷயங்களைநினைத்து நினைத்து,—மெய் துயர் உழந்து - மெய்ம் மையாகிய துக்கத்தினையனுபவித்து,—வெய்து உயிர்த்து விம்மி - பெருமூச்செறிந்து அழுது,—அ தலை சுற்றிய அமரர் யாவரும் - அவ்விடத்திற் சூழ்ந்திருக்கின்ற தேவர்களனைவரும்,—தத்தமில் இரங்குற வைகினான் - தங்களில் ஒவ்வொருவரும் வருந்த இருந் தான். எ — று.

ஏகாரங்கள் அசை. உம்மை முற்று. (சக)

42. கண்டகனுதாவகன்காராளன்மாபலன்
சண்டகனிசங்கனேசங்கனாதியா
வெண்டகுமவுணர்களெண்ணிலோர்குழீஇக்
கொண்டனர்சிறைக்களங்குறுகியோம்பினார்.

இ - ள். கண்டகன் உதாவகன் காராளன் மாபலன் சண்டகன் இசங்கன் சங்கன் ஆதியா எண் தகும் அவுணர்கள் எண்ணிலோர் குழீஇ கொண்டனர் சிறை களம் குறுகி ஓம்பினார் - (சயந்தனுந் தேவர்களும் இவ்வாறுபெருந்துயருழந்திருக்கும்பொழுது) கண் டகன் உதாவகன் காராளன் மாபலன் சண்டகன் இசங்கன் சங்கன் முதலிய எண்ணத்த குந்த அவுணர்கள் அளவற்றவர்களாகக் கூட்டமாக இருந்து சிறைச்சாலையைக் காத்தார் கள். எ — று.

ஏகாரம் எண். எண்டகும் என்பது கொடுமைசெய்வதில் தக்கவர்களென்று எண் ணத்தக்க எனப்பொருள்கூறினும் அமையும். (சஉ)

43. ஆயதோர்காப்பினோராறுமுகத்தனி
நாயகன்றூதுவனணுகுமப்பக
லேயுறுசயந்தனையிமைப்பிலாரொடு
காயெரியாமெனக்கனின்றுசுற்றினார்.

இ - ள். ஆயது ஓர் காப்பினோர் - அப்படிப்பட்டகாவலாளர்கள்,—தனி அறுமுக நாயகன் தூதுவன் நணுகும் அ பகல் - சமானமில்லாதவராகிய ஆறுமுகப்பெருமானது தூதரா கிய வீரவாகுதேவர் சென்ற அத்தினத்திலே,—எயுறு சயந்தனை இமைப்பு இலாரொடு காயெரியாமென கனன்று சுற்றினார் - (அச்சிறைச்சாலையகத்) திருக்கின்ற சயந்தனைத் தேவர்களோடும் சுடுகின்ற அக்கினியைப்போலக் கோபித்துச் சூழ்ந்தார்கள். எ — று.

ஓர் அசை. (சங)

வேறு.

44. மன்னுநங்கோன்றன்பணிநில்லாமகவேந்து
மின்னாடானும்யாண்டுறுகின்றார்விரைவாகிச்
சொன்னாலுய்வீரல்லதும்மாவிதொலைவிப்பே
முன்னாளேபோலெண்ணலிருண்மைமொழிகென்றார்.

இ - ள். மன்னும் நம் கோன் தன் பணி நில்லா மகவேந்தும் மின்னாள் தானும் யாண்டு உறுகின்றார் - (அங்ஙனங்கோபித்துச் சூழ்ந்தவர்களாகிய காவலாளர்கள்) அரச னாகிய சூரபன்மனது கட்டளைக்கமைந்து நில்லாது ஒளித்தோடிய யாகாதிபனாகிய இந்தி ரனும் (அவன்மனைவியாகிய) இந்திராணியும் எங்கேயிருக்கின்றார்கள்,—விரைவாகி சொன்னால் உய்வீர் - (அவர்களிருக்குமிடத்தைச்) சீக்கிரஞ் சொல்லுவீர்களாயின் உயிர் பிழைத்திருப்பீர்கள்,—அல்லது உம் ஆவி தொலைவிப்போம் - அன்றேல் உங்கள் பிரா ணனை வாங்கிவிடுவோம்,—முன்னாளேபோல் எண்ணலிர் - நேற்றைத்தினம் வரைக்குஞ் சொல்லிய சொல்லைப்போல நினைக்கவேண்டாம்,—உண்மை மொழிக என்றார் - உண் மையைச்சொல்லுங்கள் என்று (நெருக்கிக்) கேட்டார்கள். எ - று.

தான் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மைகள் எண். (சச)

45. என்னுங்காலைக்கேட்டசயந்தனெம்மாயு
மன்னும்வானின்றோடினகண்டாமற்றன்னோர்
பின்னங்குற்றதன்மையுமோராம்பிணிநோயுட்
டுன்னுந்தீயேம்யாவதுரைத்துஞ்சூழ்ந்தென்றான்.

இ - ள். என்னும் காலை - என்று (இப்படிநெருக்கி) வினவியபொழுது,—கேட்ட சயந்தன் - (அது) கேட்டசயந்தன்,—எம் ஆயும் மன்னும் வான் நின்று ஓடின கண்டாம்- எமது தாயுந் தந்தையும் சுவர்க்கத்தினின்றும் ஓடிப்போனதைக்கண்டோம்,—அன்னோர் பின் அங்கு உற்ற தன்மையும் ஓராம் - அவர்கள் பின்புபோன அவ்விடத்தில் இருக்கின் றதன்மையையும் பிறவிடத்திலிருக்கின்ற தன்மையையும் அறியேம்,—பிணி நோயுள் துன்னும் தீயேம் சூழ்ந்து யாவது உரைத்தும் என்றான் - சிறையாகிய வருத்தத்தோடி ருக்கின்ற பாவியாகிய நாம் ஆலோசித்து என்னசொல்லுவோம் என்று (இரக்கம்வரச்) சொன்னான். எ - று.

உம்மை தன்மையும் என்பதில் எதிரது தழீஇயவெச்சமும் ஏனையவற்றில் எண்ணு மாம். மற்று அசை. யாது என்பது யாவது என விரித்தல்விகாரம்பெற்றது. (சரு)

46. விண்டோய்மன்னன்முன்னொருநாண்மெல்லியறன்னைக்
கொண்டேபோனானின்னுழியென்றுகுறிக்கொள்ளேங்
கண்டோமல்லங்கேட்டிலமுள்ளங்கழிவெய்தப்
புண்டோய்கின்றோமென்சொல்வதென்றார்புலவோர்கள்.

இ - ள். புலவோர்கள் - தேவர்கள்,—விண் தோய் மன்னன் முன் ஒருநாள் மெல்லியல் தன்னை கொண்டே போனான் - சுவர்க்கத்திலிருந்த அரசனாகிய இந்திரன்முன் ஒருதினத்தில் இந்திராணியையும் அழைத்துக்கொண்டு (வெளியிற்) போனான்,—இன்னுழி என்று குறி கொள்ளேம் - (அவன்போனவிடம்) இன்னவிடமென்று அறியேம்,—கண்டோ மல்லம் - (அவர்களிருக்குமிடத்தை நாங்கள்) பார்த்ததுமில்லை,—கேட்டிலம் - (பிறர்சொல்லக்) கேட்டதுமில்லை,—உள்ளம் கழிவெய்த புண்தோய் கின்றோம் என் சொல்வது என்றார் - மனம் மிகவும் புண்பட்டு வாதைப்படுகின்றோம் (ஆகலின்) என்னசொல்லுவோம் என்றார்கள். எ - று.

ஏகாரம் தேற்றம். (சசு)

47. சொற்றாரிவ்வாறன்னதுபோழ்திற்றுணிவெய்தி
யுற்றார்போலுமிங்கிவரெல்லாமுளமொன்றி
யெற்றாலுண்மையோதுவரின்னோரெனவெண்ணாச்
செற்றாராகுங்காவலர்துன்பஞ்செய்கின்றார்.

இ - ள். இவ்வாறு சொற்றார் - இப்படிச் (சயந்தனுந் தேவர்களும் ஒத்தபான்மையாகச்) சொன்னார்கள்,—அன்னது போழ்தில் இவர் எலாம் உளம் ஒன்றி துணிவு எய்தி உற்றார் போலும் - அப்போது இவர்களெல்லாம் ஒரேமனமாய் ஒத்துத் துணிவுகொண்டு இருக்கின்றார்போலும்,—இன்னோர் எற்றால் உண்மை ஓதுவர் என எண்ணா - இவர்கள் எதனால் உண்மை சொல்லுவார்களென்று ஆலோசித்து,—செற்றார் ஆகும் காவலர் துன்பம் செய் கின்றார் - பகைவராகிய காவலாளர்கள் துன்பஞ்செய்யத் தொடங்கினார்கள்.

இங்கு அசை. செற்றார் ஆகும் என்பதற்கு நெருங்கிநின்றவர்களாகிய எனப் பொருள்கூறினும் அமையும். (சஎ)

48. வென்னஞ்சென்னக்காயெரியென்னமிகுதீஞ்சொன்
முன்னஞ்சொற்றேவைவர்தெழிப்பர்முரணோடுங்
கன்னஞ்செல்லத்தோமரமுய்ப்பர்கடைகிற்பார்
சின்னஞ்செய்வார்போலுடன்முற்றுஞ்சேதிப்பார்.

இ - ள். வெம் நஞ்சு என்ன காயெரி என்ன மிகு தீஞ்சொல் முன்னம் சொற்றே வைவர் - கொடியநஞ்சைப்போலவும் சுடுகின்ற அக்கினியைப்போலவும் மிக்குங்கொடிய சொற்களை நேரேபேசித் திட்டுவார்கள்,—தெழிப்பர் - அதட்டுவார்கள்,—முரணோடும் கன்னம் செல்ல தோமரம் உய்ப்பர் கடை கிற்பார் - வலிமையோடு காதுகளிலே செல்லும்படி இருப்புலக்கைகளைவிட்டுக் கடைவார்கள்,—சின்னம் செய்வார் போல் உடல் முற்றும் சேதிப்பார் - தழும்புபடுத்துவார்போல உடம்புமுழுதையும் (துண்டுதுண்டாக) வெட்டுவார்கள். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. (சஅ)

49. கண்டந்துண்டஞ்செய்திடுமங்கங்கடிதொன்றிப்
பிண்டந்தன்னிற்கூடவெருண்டேபோராற்றல்
கொண்டங்கையால்வாள்கொடுமார்பங்குடைகிற்பார்
தண்டந்தன்னுன்மோதுவரன்னோர்தலைகீற.

இ - ள். கண்டம் துண்டம் செய்திடும் அங்கம் கடிது ஒன்றி பிண்டந் தன்னிற் கூட - [அசுரர்களால்] கண்டதுண்டங்களாக வெட்டப்பட்ட (சரீரத்தின்) அவயவங்கள் சீக்கிரம் ஒன்றாகச் சேர்ந்து சரீரத்தில்வந்து பொருந்த (அசுரர்கள் அதனைப்பார்த்து),—

வெகுண்டே பேர் ஆற்றல் கொண்டு - கோபித்து மிக்க வலிமைகொண்டு,—அங்கையால் வாள் கொடு மார்பம் குடைகிற்பர் - அழகிய கையினால் வாளையெடுத்து மார்பைக் குடைவார்கள்,—அன்னோர் தலை கீற தண்டந் தன்னால் மோதுவர் - அவர்களது தலைபிளக்கும்படி தண்டத்தினாலே யடிப்பார்கள். எ – று.

அம் அசை. தன் இரண்டுஞ் சாரியை. ஏகாரம் தேற்றம். (௪௯)

50. இத்தன்மைத்தாக்காவலர்யாருமெண்ணில்லா
மெய்த்துன்பத்தைச்செய்திடமைந்தன்விண்ணோர்தங்
கொத்துந்தானுமாற்றலனாகிக்குலைவெய்தி
நித்தன்றன்னையுன்னியரற்றாநிற்கின்றான்.

இ - ள். காவலர் யாரும் இ தன்மைத்தா எண்ணில்லா மெய் துன்பத்தை செய்திட- அசுரகாவற்காரர் அனைவரும் இவ்விதமாக சரீரத்துக்கு அளவிறந்தவருத்தத்தைச்செய்ய,—மைந்தன் - சயந்தன்,—விண்ணோர்தங் கொத்தும் தானும் - தேவகூட்டமுந் தானும்,—ஆற்றலன் ஆகி குலைவு எய்தி - (அவ்வசுரராற் செய்யப்பட்ட வருத்தத்தை) யாற்றாதவனாய்ப் பதறி,—நித்தன் தன்னை உன்னி அரற்றாநிற்கின்றான் - சிவபெருமானைத்தியானித்துப் புலம்பத்தொடங்கினான். எ - று.

உம்மை முன்னையது முற்று; பின்னையவை எண். இத்து, தம், தன் சாரியை. ()

51. சீற்றத்துப்போர்பல்படைகொண்டேசெறுபோழ்து
மாற்றத்துன்பம்பட்டதலான்மெய்யழிவாகி
யீற்றுத்தன்மைசேர்ந்திலன்விண்ணோரிறைமைந்தன்
கூற்றிற்பட்டுச்செல்லலுழக்குங்கொடியோர்போல்.

இ - ள். கூற்றிற் பட்டு செல்லல் உழக்கும் கொடியோர் போல் - யமனிடத்திலகப்பட்டுத் துக்கத்தினையனுபவிக்கின்ற பாவிகளைப்போல,—விண்ணோர் இறை மைந்தன் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனது குமாரனானசயந்தன்,—சீற்றம் துப்போர் பல் படை கொண்டு செறு போழ்தும் - மிக்க கோபத்தினையுடைய அசுரர்கள் பல ஆயுதங்களைக்கொண்டு (வெட்டிக்குடைந்து) வருத்தும்பொழுதும்,—ஆற்ற துன்பம் பட்டது அலால் - மிகவும் துன்பமனுபவித்ததன்றி,—மெய் அழிவாகி ஈற்றுத் தன்மை சேர்ந்திலன் - உடம்பு அழிந்து இறக்குந்தன்மையைப்பெற்றிலன். எ – று.

ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு. (௫௧)

52. நெஞ்சினில்வாலறிவெய்தினரைம்புலநெறிநின்று
மெஞ்சியமேல்வினைபெற்றிலதேயெனவிறும்வண்ணந்
தஞ்செயல்வெய்யோர்செய்யவுமைந்தன்றமரோடுந்
துஞ்சிலனூறும்பெற்றிலனுற்றான்றுயரொன்றே.

இ - ள். நெஞ்சினில் வால் அறிவு எய்தினர் ஐம்புல நெறி நின்றும் - மனத்தில் நல்லறிவடைந்த பெரியோர்கள் ஐம்புலன்வழியாக ஒழுகிநின்றும்,—எஞ்சிய மேல் வினை பெற்றிலதே என - சேஷமாயிருக்கும்படி ஆகாமியவினையைப்பெறாதவாறு போல,—இறும் வண்ணம் - இறக்கும்படி,—வெய்யோர் தம் செயல் செய்யவும் - கொடிய அசுரர் தமது தண்டனையைச் செய்யவும்,—மைந்தன் தமரோடும் துஞ்சிலன் - சயந்தன் தேவர்களோடும் இறந்திலன்,—ஊறும் பெற்றிலன் - காயங்களையுமடைந்திலன்,—துயர் ஒன்றே உற்றான் - துக்கமொன்றையே அனுபவித்தான். எ - று.

உம்மை நின்றும் செய்யவும் என்பனவற்றில் உயர்வுசிறப்பும் ஊறும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமுமாம். ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது பிரிநிலை. தத்துவஞானிகள் பஞ்சேந்திரியவழிப்பட்டு விடயவின்பங்களை யனுபவித்து நிற்பாராயினும் தற்போதமிழந்து தம்செயல் எல்லாம் சிவச்செயலாகக் காணும் மெய்யறிவுடையராதலின் அவ்விந்திரிய வியாபாரங்களினால் வருகின்ற ஆகாமியசஞ்சித வினைகளும் அவற்றின் பயன்களும் தமக்கு இல்லாதவாறுபோல சயந்தன் தேவர்களுடன் அசுரர்கள் தண்டித்தலால் துயரொன்றைமாத்திரம் பெற்றானன்றி இறப்பையும் ஊறுபாட்டையும் பெற்றிலன் என்பது கருத்து. (ருஉ)

53. மாடேசூழ்வார்தம்மொடுமைந்தன்சிறைபுக்கான்
காடேபோனானிந்திரனேனோர்கவலுற்றார்
பாடேவிண்ணோர்தம்பதமுக்கட்பரனல்கும்
வீடேயல்லாற்றுன்பறுமாக்கம்வேறுண்டோ.

இ - ள். மாடே சூழ்வார் தம்மொடு மைந்தன் சிறை புக்கான் - பக்கத்திற் சூழ்ந்திருப்பவர்களாகிய தேவர்களுடனே இந்திரகுமாரனாகிய சயந்தன் சிறைச்சாலையை யடைந்தான்,—இந்திரன் காடே போனான் - இந்திரன் (தானிருந்தசுவர்க்கத்தைவிட்டுக்) காட்டிலே (யொளித்துப்) போனான்,—ஏனோர் கவலுற்றார் - மற்றைத்தேவர்கள் மனக்கவலை யடைந்தார்கள்,—விண்ணோர் தம் பதம் பாடே - தேவர்கள் வசிக்கப்பெற்ற (அச்சுவர்க்க) பதவியும் அழிந்ததே (ஆதலால்),—முக்கண் பரன் நல்கும் வீடே அல்லால் துன்பறும் ஆக்கம் வேறுண்டோ - மூன்றுகண்களையுடைய சிவபெருமான் கொடுத்தருளும் முத்தியின்பம் ஒன்றேயல்லாது துக்கமில்லாதசெல்வம் வேறொன்று இருக்கிறதா? (இல்லை). எ — று.

தம் இரண்டுஞ் சாரியை. ஏகாரம் காடே என்பதில் பிரிநிலையும் ஏனையவற்றில்தேற்றமுமாம். ஓகாரம் எதிர்மறை. சுவர்க்காதிபதங்களிலே சுகதுக்கங்களனுபவித்தலுண்மையும் அவை அனுபவித்துத்தொலைந்த ஞான்று எஞ்சிய கன்மசேடத்தால் மீளப்பிறந்துழலலுண்மையும் அங்ஙனம் அவைபோலாகாது சிவபெருமான் கொடுத்தருளும் வீடுபேறு எக்காலத்தும் நித்திய நிரதிசயானந்தத்தைப் பயப்பதுண்மையுமாகலின் முக்கட்பரனல்கும் வீடேயல்லால் துன்பறும் ஆக்கம் வேறுண்டோ என்றார். (ருங)

54. அந்தாவாளந்தோமரமெஃகமடுதண்ட
முந்தாவுற்றபல்படையாவுமுரிவெய்தச்
செந்தார்மார்பிற்காவலர்கையுந்திறலெஞ்ச
நொந்தாரின்னாசெய்வதுநீத்தார்நுவல்கின்றார்.

இ - ள். அந்தாவாளம் தோமரம் எஃகம் அடு தண்டம் முந்தாவுற்ற பல் படையாவும் முரிவு எய்த - அழகியவாள் இருப்புலக்கை வேல் கொல்லத்தக்க தண்டம் முதலாயுள்ள பலவகையாயுதங்களெல்லாம் ஒடியவும்,—செம் தார் மார்பிற் காவலர் கையும் திறல் எஞ்ச - செப்பமாகிய மாலையையணிந்த மார்பினையுடைய காவலாளராகிய அசுரர்கள் கைப்பலமும் தைரியமுங் குறையவும்,—நொந்தார் - வருந்தி,—இன்னா செய்வது நீத்தார் - துன்பஞ்செய்வதை விடுத்து,—நுவல் கின்றார் - சொல்லுகின்றார்கள். எ — று.

வாளம் என்பதில் அம் சாரியை. உம்மை முன்னையது முற்று; பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம். எய்தவும் எஞ்சவும் என்பதில் எண்ணும்மைகள் தொக்கன. (ருச)

55. வீவார்பின்னாளல்லதுவேறோர்வினையத்தாற்
சாவாரெஞ்சார்பேரமிர்துண்டார்தவமிக்கார்
நோவார்நாமிங்காற்றியபாலாநோய்நொந்து
மாவாயாதுஞ்சொற்றிலரென்றற்புதமுற்றார்.

இ - ள். பின்னாள் வீவார் - இவர்கள் நியமித்தபிற்காலத்திலேயே இறப்பார்கள்,— அல்லது வேறு ஓர் வினையத்தால் சாவார் - அங்ஙனமன்றி வேறொரு உபாயத்தாலும் சாகார்கள்,—எஞ்சார் - (உறுப்புக்) குறையமாட்டார்கள்,—பேர் அமிர்து உண்டார் - மேலான அமிர்தமுண்டவர்கள்,—தவம் மிக்கார் - தவத்தான்மேம்பட்டவர்கள்,—நோவார் - வருந்தமாட்டார்கள் (இவ்வியல்பினர்),—நாம் இங்கு ஆற்றிய நோய் பாலால்-நாம் இங்கேசெய்த துன்பப்பகுதிகளினாலே,—நொந்தும் - வருத்தப்பட்டும்,—ஆ ஆ யாதும் சொற்றிலர் என்று அற்புதம் உற்றார் - ஆ ஆ! ஒன்றுஞ் சொன்னார்களில்லை யென்று அதிசயமடைந்தார்கள்.

உம்மை முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது முற்று. ஆ ஆ அதிசயத்தையும் இரக்கத்தையும் உணர்த்தும் இடைச்சொற்கள்; மிகுதிப்பொருட்கணடுக்கிவந்தன.

56. இன்னோர்யாருமைந்தனைவானோரினமோடு
மெய்ந்நோவாகும்பாங்கினலைத்தவினையாலே
கைந்நோவெய்திவன்மையுநீங்கிக்கவலுற்றார்
முன்னோர்தம்பாற்செய்ததுடன்சூழ்முறையேபோல்.

இ - ள். முன்னோர் தம்பால் செய்தது உடன் சூழ் முறையே போல் - பெரியோர்களுக்குச்செய்த பாவமானது உடனே (தம்மை) வந்துசூழ்வதுபோல,—இன்னோர் யாரும் மைந்தனை வானோர் இனமோடும் மெய் நோவாகும் பாங்கின் அலைத்த வினையாலே கை நோ எய்தி வன்மையும் நீங்கி கவலுற்றார் - இவ்வசுரர் யாவரும் சயந்தனைத் தேவகூட்டத்துடன் சரீரம்நோவடையும்படி வருத்திய பாவத்தினால் கை வருத்தம் அடைந்து வலிமையுமிழந்து துன்பங்கொண்டார்கள். எ - று.

ஏகாரங்கள் தேற்றம். உம்மை முன்னையது முற்று; பின்னையது இறந்ததுதழீஇய வெச்சம். தம் சாரியை. எனவே பெரியோர்களுக்குச் செய்த தீமையினால் தாம் தப்பாது வருந்துவர் என்பது தாற்பரியம். (ருசு)

வேறு.

57. அத்தகையகாவலவுணரவர்க்கணித்தாய்
மொய்த்தொருசாரீண்டிமுறைநீங்கலர்காப்ப
வெய்த்தவமாருடனிந்திரன்சேய்பண்ணவரு
ளுத்தமனுங்கண்ணுதலையுன்னிப்புலம்புறுவான்.

இ - ள். அ தகைய காவல் அவுணர் அவர்க்கு அணித்தாய் மொய்த்து ஒருசார் ஈண்டி முறை நீங்கலர் காப்ப - அவ்விதமாகிய காவலைக்கொண்ட அசுரர்கள் அத்தேவர்களுக்குச் சமீபத்தில் நெருங்கி ஒருபக்கத்தில் இருந்து முறைமைதவறாதவர்களாகிக் காவல்செய்ய,—எய்த்த அமரருடன் இந்திரன் சேய் - இளைத்ததேவர்களோடும் இந்திரகுமாரனாகிய சயந்தன்,—பண்ணவருள் உத்தமனும் கண் நுதலை உன்னி புலம்புறுவான் - தேவர்களுக்குள் உத்தமராகிய சிவபெருமானை நினைத்துப்புலம்புவானாயினன். எ – று.

அரிபிரமேந்திராதிதேவர்களுக்குத் தோற்றம் ஒடுக்கம் சுகதுக்கம் மோகமாதிகுணங்களுண்மையானும், சிவபிரானுக்கு அவையின்மையானும், அவர்களுக்குப் படைத்தன்

முதலிய அதிகாரங்களைக் கொடுக்கும் இறைவராதலானும், அவர்களுக்கு மனமயக்கம் வந்தவழித் தண்டித்து அறிவுறுத்துந் தன்மையானும் சிவபெருமானேயுத்தமனென்பார் பண்ணவருளுத்தமனுங்கண்ணுதல் என்றார். (ருஎ)

58. வந்திப்பவர்பவங்கண்மாற்றுவோயெத்தேவர்
சிந்தைக்குமெட்டாச்சிவனேசெழுஞ்சுடரே
யிந்தப்பிறவியிடருழப்பச்செய்தனையோ
வந்தித்தநின்புணர்ப்பையாரேகடந்தாரே.

இ - ள். வந்திப்பவர் பவங்கள் மாற்றுவோய் - (திரிகரணசுத்தியுடையராய் மெய்யன்போடு) வழிபாடுசெய்கின்ற அடியாரது பிறவித்துன்பத்தை யொழிப்பவரே,—எத்தேவர் சிந்தைக்கும் எட்டா சிவனே - எப்படிப்பட்ட தேவர்களுடைய மனசுக்கும் வாக்குக்கும் அதீதமாய்நின்ற சிவபெருமானே,—செழும் சுடரே-செழுமையாகிய சோதிமயமானவரே(நான் செய்துகொண்டதீவினையினால்),—இந்த பிறவி இடர் உழப்பசெய்தனையோ - இந்தத்தேவசென்மத்திலும் பெருந்துக்கத்தையனுபவிக்கச் செய்தீரோ,—அந்தித்த நின்புணர்ப்பை யார்கடந்தார் - (வினைப்பயனாகிய சுகதுக்கங்களைக்) கூட்டி யனுபவிக்கச்செய்கின்ற தேவரீரது செயலை யார்கடந்தவர்கள் (ஒருவருமிலர் என்பது.) எ—று.

ஓகாரம் இரக்கக்குறிப்பு. உம்மை எதிரது தழீஇயவெச்சம். பின்னைய ஏகாரம் இரண்டும் அசை. அந்தித்தல் - முடிவாக்குதல், பொருத்தல், சேர்த்தல். அந்தித்த என்பதற்கு "(பிரபஞ்சங்களெல்லாம்) ஒழிந்தவிடத்தும் (ஒழியாதுநிற்கின்ற)" தேவரீரது எனப் பொருள்கூறுவாருமுளர். சிந்தைக்கும் எட்டாச் சிவனென்றது நிருபாதிகசிவத்தைக் குறிப்பித்தவாறும். பரசிவத்துக்குரிய சொரூபலக்ஷணங்களெல்லாம் ஸோபாதிகராகிய ஸ்ரீகண்டர்மேல்வைத்துக் கூறல் மரபோ எனின் ஸ்ரீகண்டத்திருமேனிக்கு அப்பரசிவம் மூர்த்தி மானாதலின் வழுவன்று. "நோக்கினும் நுழைகிலா நுவலுகின்றதோர் வாக்கினு மமைகிலா மதிப்பவொண்கிலா" எனவும், "உருவொடு பெயர் தொழிலொன்று மின்றியே பரவிய நீயவை பரித்துநிற்பது" எனவும் வருந்திருவிருத்தங்களானும் பிறவாற்றானும் பரசிவத்துக்குரிய தெய்வீகலக்ஷணங்கள் ஸ்ரீகண்டர்மேல்வைத்துக் கூறுதல் காண்க. சிவம், பதி, பசு, பாசம், எனப்பதார்த்தங்கள் நான்கெனவும் அவற்றுள் சிவம் நிருபாதிகமெனவும், பதி ஸோபாதிகமெனவும் ஸர்வஞானோத்தரங் கூறுமாற்றானுமறிக. அதிகாரமொழிந்து தன்னிலையினிற்குஞ் சிவம் நிருபாதிகமெனவும் அதிகாரத்தோடு கூடிய சிவம் ஸோபாதிகம் எனவும் உணர்க. (ருஅ)

59. கைந்நாகத்துக்குங்கயவாய்க்குநாரைக்கும்
பைந்நாகத்துக்கும்படருஞ்சிலந்திக்கும்
பின்னாகியவுயிர்க்கும்பேருண்முன்செய்தனையா
லென்னாயகனேயெமக்கேனருளாயே.

இ - ள். கை நாகத்துக்கும் கயவாய்க்கும் நாரைக்கும் பை நாகத்துக்கும் படரும் சிலந்திக்கும் பின்னாகிய உயிர்க்கும் முன் பேர் அருள் செய்தனை - துதிக்கையையுடைய யானைக்கும் கரிக்குருவிக்கும் நாரைக்கும் படத்தினையுடைய பாம்புக்கும் வருந்துஞ் சிலந்திக்கும் பின்னுள்ள உயிர்களுக்கும் முற்காலத்தில் பெருங்கருணைபாலித்தீர்,—என் நாயகனே - (அங்ஙனம் பெருங்கருணைபாலித்த பரமகருணாநிதியாகிய) எமது பெருமானே,—எமக்கு என் அருளாயே - அடியேங்களுக்கு ஏன் அருள் செய்யவில்லை. எ — று.

ஆல், ஏ, அசை. உம்மைகள் எண். திருக்காளத்தியப்பருக்குத் தான்செய்த தொண்டுக்கு இடையூறுநேர்ந்தமைபற்றி வருந்துஞ் சிலந்தி என்றான் எனக்குறிப்பார் படருஞ் சிலந்தி என்றார். கை நாகம் முதலியவற்றிற்கு அருள்செய்ததைத் திருவிளையாடற்புராணத்திற் கண்டுகொள்க. (ருக)

60. கங்கைமுடித்தாய்கறைமிடற்றாய்கண்ணுதலாய்
திங்கள்புனைந்தாய்சிவனேசிவனேயென்
றிங்குநினதடியேமெல்லேங்களுமாற்ற
நங்களுயிர்க்குயிராநாயகநீகேட்டிலையோ.

இ - ள். கங்கை முடித்தாய் - கங்கையைத்தரித்தவரே,—கறை மிடற்றாய் - நஞ்சார்ந்தகண்டத்தையுடையவரே,—கண்ணுதலாய் - நெற்றிக்கண்ணரே,—திங்கள் புனைந்தாய் - இளம்பிறையைத் தரித்தவரே,—சிவனே சிவனே என்று - சிவபெருமானே சிவபெருமானேயென்று,—இங்கு நினது அடியேம் எல்லேங்களும் ஆற்றல் - இவ்விடத்திற் றேவரீருக்கு அடியேமாகிய நாமனைவரும் (அசுரர்செய்யுந் தண்டனைகளைச் சகிக்கலாற்றாது) இரைந்து துதிப்பது,—நங்கள் உயிர்க்கு உயிராம் நாயக நீ கேட்டிலையோ - எங்களது ஆன்மாவிலே பரமான்வாக விருக்கின்ற நாயகராகிய தேவரீருக்குக் கேட்கவில்லையோ. எ — று.

ஓகாரம் வினு. கங்கைமுடித்தலாதி சரித்திரங்களைத் தக்ஷகாண்டத்திற் காண்க. கங்காதரரே, நீலகண்டரே, பாலலோசனரே, சந்திரசேகரரே என வடமொழிப்படி கூறினுமிழுக்காது. (சுo)

61. பாசங்கொண்டாவிபலவும்பிணிப்போனு
நேசங்கொண்டாங்கதனைநீக்கியருள்செய்வோனு
மீசன்சிவனென்றியம்புமறைநீயிழைத்த
வாசொன்றுமித்தீமையார்தவிர்க்கவல்லாரே.

இ - ள். பாசம் கொண்டு ஆவி பலவும் பிணிப்போனும் - (அநாதிபந்தமாகிய மலமறைப்பை நீக்கும்பொருட்டு ஆதிபந்தமாகிய தனுகரணபுவனபோகங்களெனப்படும்) பாசங்களைக்கொண்டு சர்வான்மாக்களையும் பந்திப்பவரும்,—நேசம் கொண்டு அதனை நீக்கி அருள் செய்வோனும் - (அங்ஙனம் பந்திக்கப்பட்ட உயிர்கள் செய்த சிவபுண்ணிய மேலீட்டால் மலபரிபாகம் வந்தவழி) விருப்பங்கொண்டு அப்பாசசம்பந்தத்தை நீக்கி (சிவத்துவாபிவியக்திசெய்) தருளுகின்றவரும்,—ஈசன் சிவனென்று மறை இயம்பும் - ஈசன் என்றும் சிவபெருமான் என்றும் வேதவசனங்கள் சொல்லா நிற்கும்,—நீ இழைத்த - (அவ்வேதங்களோவெனின்) தேவரீர் அருளிச்செய்தவைகள் (ஆதலின் அவ்வாக்குப் பொய்யாகாது),—ஆ சொன்றும் இ தீமை யார் தவிர்க்க வல்லார் - (அடியேன் முன்செய்த) குற்றம்பொருந்திய தீவினைப்பயனாகிய இப்பெருந்துக்கத்தைத் (தேவரீரன்றி) வேறுயாவர் நீக்கவல்லவர்கள் [தேவரீரேநீக்கியருளவேண்டுமென்பது.] எ — று.

ஆங்கு, ஏ அசை. உம்மைபலவும் என்பதில் முற்றும் ஏனையவற்றில் எண்ணுமாம ஈசன் எல்லாவற்றையும் ஆள்பவன். (சுக)

62. நாராயணனுமந்தநான்முகனுநாடரிய
பேராதியானபெருமானுயிர்க்கெல்லா
மாராயினீயன்றியாரேதுணையாவார்
வாராய்தமியேனுயிரளிக்கவாராயே.

இ - ள். நாராயணனும் அந்த நான்முகனும் நாட அரிய பேர் ஆதியான பெருமான் - விஷ்ணுமூர்த்தியும் அந்தப்பிரமதேவரும் தேடியறிதற்கரிய பெருமைபொருந்திய பரம்பொருளாகிய பெருமானே,—ஆராயின் - (வேதப்பிரமாணங்களைக்கொண்டு) ஆராயும்பொழுது,—உயிர்க்கெல்லாம் நீ அன்றி யாரே துணையாவார் - சகல உயிர்களுக்

கும் தேவரீரேயன்றி யார்துணையாக இரட்சிக்கத்தக்கவர்கள்,—தமியேன் உயிர் அளிக்க வாராய் வாராய் - அடியேனுடைய உயிரை இரட்சிக்கும்பொருட்டு வந்தருளும் வந்தருளும். எ - று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மைகள் எண்ணும் உயர்வுசிறப்புமாம். (சுஉ)

63. சீற்றம்விளைத்துமுனந்தேவர்தொகையலைப்பான்
கூற்றமெனவேகுறுகுற்றவந்தகனு
மாற்றலிழப்பவகன்மார்பின்முத்தலைவே
லேற்றியவனீயன்றேயெமக்கேனிரங்கலையே.

இ - ள். முனம் சீற்றம் விளைத்து தேவர் தொகை அலைப்பான் கூற்றம் எனவே குறுகுற்ற அந்தகனும் ஆற்றல் இழப்ப - முற்காலத்தில் கோபங்கொண்டு தேவர்கூட்டங்களை வருத்தும்படி இயமனைப்போலவந்த அந்தகாசுரனும் வலிமையிழந்து கெடும்படி,—அகல் மார்பில் முத்தலை வேல் ஏற்றியவன் நீ அன்றே - அகன்றமார்பில் மூன்று தலைகளையுடைய சூலத்தை ஏற்றியவர் தேவரீரன்றே (அங்ஙனஞ் செய்ததுதேவர்களை இரட்சிக்கும்பொருட்டே அப்படியிருக்க),—எமக்கு என் இரங்கலை - எங்களுக்கேன் இரக்கங் கொள்ளவில்லை? எ - று.

உம்மை உயர்வுசிறப்பு. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. ஓகாரம் வினா. (சுங)

64. ஏங்கியமரரிரிந்தோடவேதுரந்த
வோங்குகுரண்டத்துருக்கொண்டதானவனைத்
தீங்குபெறத்தடிந்துசின்னமாவோர்சிறையை
வாங்கியணிந்தவருளிங்கென்பால்வைத்திலையே.

இ - ள். அமரர் ஏங்கி இரிந்தோட துரந்த ஓங்கு குரண்டத்து உரு கொண்ட தானவனை - தேவர்கள் ஏக்கங்கொண்டு புறங்கொடுத்தோடும்படி துரத்தி உயர்ந்தகொக்கின் வடிவுகொண்டுவந்த பகாசுரனை,—தீங்கு பெற தடிந்து - கேடுண்டாகும்படி வெட்டி,—சின்னமா ஓர் சிறையை வாங்கி அணிந்த அருள் என் பால் வைத்திலையே - (அவனைக் கொன்றதற்கு) அடையாளமாக ஒரு இறகையெடுத்துத் (திருமுடியின்மேல்) தரித்தருளிய திருவருள் அடியேனிடத்தில் வைக்கவில்லையே. எ - று.

ஏகாரம் இரண்டும் இங்கும் அசை. அத்து சாரியை. (சுச)

65. ஞாலத்தினையளித்தநான்முகனுநின்றவற்றைப்
பாலித்தவனும்பிறரும்பணிந்திரங்க
வோலக்கடலுளுலகந்தொலைப்பவந்த
வாலத்தையுண்டவருளென்பாலயர்த்தனையோ.

இ - ள். ஞாலத்தினை அளித்த நான் முகனும் நின்று அவற்றை பாலித்தவனும் பிறரும் பணிந்து இரங்க - உலகத்தைப் படைத்த பிரமதேவரும் நிலையாய் அவ்வுலகத்தைக்காக்கின்ற திருமாலும் மற்றுள்ளவர்களும் வணங்கிப் பரிதபிக்க,—ஓலம் கடலுள் உலகம் தொலைப்ப வந்த - ஒலிக்கின்ற பாற்கடலிற்பிறந்து உலகங்களை யழிக்கும்பொருட்டுவந்த,—ஆலத்தை உண்ட அருள் என் பால் அயர்த்தனையோ - ஆலகாலவிஷத்தைத் திருவமுதுசெய்தருளிய கருணை அடியேனிடத்தில் மாத்திரம் மறந்தருளினீரோ.

உம்மைகள் எண். ஓகாரம் வினா. (சுரு)

66. மோடிதரவந்தமுக்கணுடைக்காளி
யோடியுலகுயிர்களுண் ணும்படியெழலு
நாடியவள்வெருவிநாணிச்செருக்ககல
வாடியருள்செய்தவருளிங்கணுகாதோ.

இ - ள். மோடி தரவந்த முக்கண் உடை காளி ஓடி உலகுயிர்கள் உண்ணும் படி எழலும் - காடுகோள் பெறவந்த மூன்றுகண்களையுடைய காளியானவள் விரைந்து உலகத்திலுள்ள உயிர்களை உண்ணும்படி யெழும்புதலும்,—அவள் நாடி வெருவி நாணி செருக்கு அகல - அவள்கண்டு பயந்து வெட்கங்கொண்டு அகங்காரம் நீங்கும்படி,—ஆடியருள்செய்த அருள் இங்கு அணுகாதோ - (ஒருபாதத்தை வானளவாகத்தூக்கி) நடனஞ்செய்தருளிய திருவருள் இவ்விடத்தில் வாராதோ. எ - று.

ஓகாரம் வினா. (௬௬)

67. பொற்றைக்கயிலைப்புகல்புக்கதேவர்தமைச்
செற்றத்துடனடவேசென்றசலந்தரனை
யொற்றைத்திகிரிப்படையாலுடல்பிளந்தே
யற்றைப்பகலவரையஞ்சலென்றாய்நீயன்றே.

இ - ள். கயிலை பொற்றை புகல் புக்க தேவர் தம்மை - திருக்கயிலாயமலையிலே அடைக்கலம்புகுந்த தேவர்களை,—செற்றத்துடன் அடவே சென்ற சலந்தரனை - கோபத்துடன் கொல்லும்பொருட்டுச் சென்ற சலந்தராசுரனை,—ஒற்றை திகிரி படையால் உடல் பிளந்து - ஒருசக்கரப்படையினால் அவனுடம்பை யிருபிளவாக்கி,—அற்றைப் பகல் - அத்தினத்தில்,—அவரை அஞ்சல் என்றாய் நீ அன்றே - அத்தேவர்களை யஞ்சற்க என்று திருவாய்மலர்ந்தருளினவர் தேவரீரல்லவா? எ - று.

தம் சாரியை. ஏகாரம் முன்னையதுதேற்றம்; பின்னையது அசை. ஓகாரம் வினா. ஒற்றை - ஒப்பில்லாத எனினுமாம். (௬௭)

68. நந்துற்றகங்கைநதிசெறியுங்காசிதனிற்
றந்திக்கொடியோன்றவத்தோர்தமைத்துரந்து
வந்துற்றிடச்சினவிவன்றோலினையுரித்த
வந்தக்கருணைக்களியரேம்பற்றிலமோ.

இ - ள். நந்து உற்ற கங்கை நதி செறியும் காசிதனில் - சங்குகள் பொருந்திய கங்காநதிசூழ்ந்த ஸ்ரீ காசிப்பதியில்,—தந்தி கொடியோன் - கயமுகன் என்னுங் கொடியவொரு அசுரன்,—தவத்தோர் தமை துரந்து வந்துற்றிட - தவத்தினையுடைய முனிவர்களைத் துரத்திக்கொண்டுவர,—சினவி வன் தோலினை உரித்த - (அதுகண்டு அவர்களை ரட்சிக்கும்பொருட்டு உக்கிரவடிவமெடுத்து) கோபித்து (அவனது) வலியதோலையுரித்துப் (போர்த்த),—அந்த கருணை அளியரேம் பற்றிலமோ - அந்தத்திருவருளுக்கு எளியேமாகிய நாங்கள் பற்றாதவர்களோ. எ - று.

தன், தம் இரண்டும் சாரியை. ஓகாரம் வினா. (௬அ)

69. ஈரஞ்சுசென்னியிருபான்புயங்கொண்டோ
ரோரஞ்சரக்கருலகலைப்பவன்னவரை
வீரஞ்செய்தட்டவிமலவெமையவுணர்
கோரஞ்செய்கின்றகொடுந்தொழிலுட்கொள்ளாயோ.

இ - ள். ஈர் அஞ்சு சென்னி இருபான் புயங் கொண்டோர் ஓர் அஞ்சு அரக்கர் உலகு அலைப்ப - பத்துத்தலைகளையும் இருபது புயங்களையும் (தனித்தனி) கொண்டவர்களாகிய ஒப்பில்லாத பஞ்சராட்சதர்கள் உலகத்திலுள்ள உயிர்களை வருத்துதலால்,— அன்னவரை - அவர்களை,—வீரம் செய்து அட்ட விமல - வீரத்திறங்காட்டிக்கொன்ற சிவபெருமானே,—எமை அவுணர் கோரம் செய்கின்ற கொடும் தொழில் உள் கொள்ளாயோ - அடியேங்களை (இம்மகேந்திரத்திலுள்ள) அசுரர்கள் வருத்துகின்ற கொடிய தொழிலைத் திருவுள்ளத்திற் சிந்திக்கமாட்டீரோ. எ — று.

ஓகாரம் வினா. (சு௯)

70. பண்டைமகவான்பரிசுணராத்தக்கனைப்போ
லண்டர்பிரானின்னையறியாதோர்வேள்விசெயத்
துண்டமதுசெய்துசுரரையவன்றோண்முரித்தாய்
தண்டமதனையின்றுதானவர்பாற்காட்டாயோ.

இ - ள். பண்டை மகவான் - முற்காலத்திலிருந்த ஒரு தேவேந்திரன்,—பரிசு உணரா தக்கனை போல் - (தேவரீரது) மகிமையை யறியாததக்கனைப் போல,—அண்டர் பிரான் நின்னை அறியாது ஓர் வேள்வி செய - தேவதேவரே தேவரீரைப் (பரம்பொருளென்று) மதியாது ஓர் யாகஞ்செய்ய,—சுரரை துண்டம் அது செய்து - (அவனுக்குச் சகாயர்களாகவிருந்த) தேவர்களைத் துண்டாகவெட்டி,—அவன் தோள் முரித்தாய் - அவ்விந்திரனதுதோள்களையும் ஒடித்தருளினீர்,—தண்டம் அதனை - அத்தண்டனையை,—இன்று தானவர் பால் காட்டாயோ - இப்பொழுது (இவ்) வசுரரிடத்திலே செய்யீரா.

ஓகாரம் வினா. துண்டமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. தண்டமதனை என்பதில் அது சுட்டு, அன் சாரியை. (எ0)

71. சிந்தப்புரங்கொடியதீயவுணர்மூவகைத்தா
மந்தப்புரங்களடல்செய்தாயெம்பெருமான்
சந்தப்புரங்கொண்டதானவரோடொன்றுரு
மிந்தப்புரமுமெரிக்குதவவொண்ணாதோ.

இ - ள். கொடிய தீ அவுணர் புரம் சிந்த - மிக்க கொடிய அசுரர்கள் சரீரம் சிதறியழிய,—மூவகைத்து ஆம் அந்த புரங்கள் அடல் செய்தாய் எம் பெருமான் - பொன் வெள்ளி இரும்புகளாலாகிய அந்தமுப்புரங்களையும் அழித்த வெம்பெருமானே,—சந்து அப்பு உரம் கொண்ட தானவரோடு ஒன்றுறும் இந்த புரமும் எரிக்கு உதவ ஒண்ணாதோ - சந்தனக்குழம்பை யணிந்த மார்பினையுடைய அசுரர்களுடன் ஒருங்குகூடி யிருக்கின்ற இந்த நகரத்தையும் அக்கினிக்கு இரையாகக்கொடுக்கப்படாதா. எ — று.

ஓகாரம் வினா. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். இத்து சாரியை. (எக)

72. அன்பானவருக்கருளுதியாற்பத்திநெறி
யென்பாலிலையாலிறையுமெவனளித்தி
நன்பான்மதிமிலைச்சுநாயகனேநல்லருள்கூ
ருன்பான்மிகநொந்தேயோதியதென்பேதைமையே.

இ - ள். அன்பானவருக்கு அருளுதி - அன்புள்ளவர்களுக்கு (வேண்டியவற்றைக் கொடுத்து) அருள்செய்வீர்,—என்பால் பத்தி நெறி இறையும் இலை - அடியேனிடத்திற் பத்திமார்க்கஞ் சற்றேனும் இல்லை (ஆதலால்),—எவன் அளித்தி - என்னை எப்படி இரட்சிப்பீர்,—நன் பால் மதி மிலைச்சும் நாயகனே - நல்ல பால்போன்ற (வெண்ணிறம்

பொருந்திய இளம்) பிறையைத்தரித்த தலைவரே,—நல் அருள் கூர் உன்பால் மிக நொந்தே ஓதியது என் பேதைமையே - (அன்பில்லாத பாவியாகிய நான்) நல்ல அருள் வெள்ளம் பெருகுகின்ற தேவரீரிடத்தில் மிகவும் வருந்தி (என்குறைகளை) விண்ணப்பஞ் செய்தது எனது அறியாமையே. எ - று.

ஆல் இரண்டும் அசை. எகாரம் இரண்டும் தேற்றம். உம்மை இழிவுசிறப்பு. (எஉ)

73. ஆனாலுந்தீயேனழுங்கவருள்கொடுநீ
தானாகநண்ணித்தலையளிசெய்தாண்டாயே
லானாதவித்துயரமாறுமேயாறியக்கான்
மேனாளெனயான்றுறக்கவளன்வேண்டிலனே.

இ - ள். ஆனாலும் தீயேன் அழுங்க - அப்படி யாயினும் பாவியாகிய அடியேன் வருத்தமனுபவிக்கின்ற (இப்பொழுது),—அருள் கொடு நீ தானாக நண்ணி - அனுக்கிரகத்தினால் தேவரீர் வலியவந்து,—தலை யளி செய்து ஆண்டாயேல் - இரட்சித்து ஆளுவீரேயானால்,—ஆனாத இ துயரம் ஆறுமே - நீங்காத வித்துன்பம் நீங்குமே,—ஆறியக்கால் - (அப்படி) நீங்கும்பொழுது,—யான் - அடியேன்,—மேல் நாள் என துறக்க வளன் வேண்டிலன் - முன்னாட்போல சுவர்க்கபோகத்தை (யொருபொருளாகக்கருதியினி) விரும்பமாட்டேன். எ – று.

எனவே தேவரீரது திருவடிக்கீழிருத்தலாகிய நித்தியானந்த நிரதிசய இன்பத்தை யடைதற்கு முயல்வேனென்பது கருத்து. உம்மை உயர்வுசிறப்பு. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. (எங)

74. வென்றியரக்கரான்மேதகையதானவரா
லன்றிமுனிவராலண்டராலேனையரா
லொன்றுசெயவொன்றாயுறுதுயரத்தாழ்ந்ததன்றி
யென்றுமகிழ்வாயிடாற்றிருந்தனமே.

இ - ள். வென்றி அரக்கரால் மேதகைய தானவரால் அன்றி முனிவரால் அண்டரால் ஏனையரால் - வெற்றிபொருந்திய அரக்கர்களாலும் மேம்பட்ட அசுரர்களாலும் அல்லது முனிவர்களாலும் தேவர்களாலும் மற்றுள்ளவர்களாலும்,—ஒன்று செய - (நாம்) ஒன்றை (நினைத்துச்) செய்ய,—ஒன்றாய் உறு துயரத்து ஆழ்ந்ததன்றி - (அது) இன்னொன்றாய் வருகின்ற பெருந்துக்கத்தில் அழுந்திக்கிடந்ததேயொழிய,—என்று மகிழ்வாய் இடாற்று இருந்தனம் - எந்தக்காலத்தில் சந்தோஷமாய் துன்பமில்லாமல் இருந்தோம் (ஒருக்காலமுமில்லை). எ – று.

ஏகாரம் அசை. (எச)

75. கீற்றுமதியுங்கிளர்வெம்பொறியரவு
மாற்றினொடுமிலைந்தவாதியேநின்னருளா
லேற்றமிகுமலக்கணேகினிழிந்தவளம்
போற்றுகிலேனாற்றல்புரிவேன்புரிவேனே.

இ - ள். கீற்று மதியும் கிளர்வெம் பொறி அரவும் ஆற்றினொடு மிலைந்த ஆதியே - இளம்பிறையையும் விளங்குகின்ற வெவ்விய புள்ளிகளையுடைய பாம்பையும் கங்காநதியுடனே தரித்த முழுமுதல்வரே,—நின் அருளால் ஏற்ற மிகும் அலக்கண் ஏகின் - தேவரீரது திருவருளால் அதிகமாகிய இத்துன்பம் நீங்குமாயின்,—இழிந்த வளம் போற்று

இலன் - இழிவாகிய (சுவர்க்கவுலகத்திலுள்ள) செல்வத்தை (யொருபொருளென்றுமதித் தும்) பேணேன் (தேவரீருடைய திருவடிநீழலையடையும்பொருட்டு),—நோற்றல் புரி வேன் புரிவேன் - தவத்தைச் செய்வேன் செய்வேன். எ — று.

உம்மைகள் எண். ஏகாரம் அசை. புரிவேன் புரிவேன் என்னும் அடுக்குத்துணி வையுணர்த்தி நின்றது. (எரு)

76. தண்டேன்றுளிக்குந்தருநிழற்கீழ்வாழ்க்கைவெஃகிக்
கொண்டேன்பெருந்துயரம்வான்பதமுங்கோதென்றே
கண்டேன்பிறர்தம்பதத்தொலைவுங்கண்டனனாற்
றொண்டேன்சிவனேநின்றொல்பதமேவேண்டுவனே.

இ - ள். தண் தேன் துளிக்கும் தரு நிழல் கீழ் வாழ்க்கை வெஃகி பெரும் துய ரம் கொண்டேன் - குளிர்ந்த தேன் துளியாகச்சிந்துகின்ற கற்பகதருவின் நிழற்கீழிரு ந்து வாழும் சுகத்தை விரும்பிப் பெருந்துக்கமடைந்தேன்,—வான் பதமும் கோது என்றே கண்டேன் - சுவர்க்கபதவியையும் சாரமற்றதென்று அறிந்தேன்,—பிறர் தம் பதம் தொ லைவும் கண்டனன் - மற்றுள்ளவர்களது பதவிகள் அழிவதையுங்கண்டேன்,—சிவனே தொண்டேன் நின் தொல்பதமே வேண்டுவன் - சிவபெருமானே அடியேன் தேவரீ ரது சிறந்த சிவலோக வாழ்வையே விரும்புவேன். எ — று.

ஆல் அசை. உம்மை வான்பதமும் என்பதில் உயர்வுசிறப்பும் பதத்தொலைவும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமுமாம். ஏகாரம் கோதென்றே என்பதில் தேற்ற மும், தொல்பதமே என்பதில் தேற்றமும் பிரிநிலையும், வேண்டுவனே என்பதில் அசையுமாம். இச்செய்யுளால் சுவர்க்காதியுலகவின்பங்கள் அநித்தியமுந் துக்கமும் உடை யனவென்பதும் சிவபோகவாழ்வு அவைகளில்லாத நித்தியானந்தமுடையதென்பதும் குறிப்பித்தவாறுகாண்க. (எசு)

77. அல்லற்பிறவியலமலம்விண்ணாடுறைந்து
தொல்லைத்திருநுகருந்துன்புமலமலமாற்
றில்லைத்திருநடஞ்செய்தேவேயினித்தமியேற்
கொல்லைத்துயர்தீர்த்துனதுபதந்தந்தருளே.

இ - ள். அல்லல் பிறவி அலம் அலம் - துன்பத்திற்கேதுவாகிய (இப்) பிறவியும் போதும் போதும்,—விண் நாடு உறைந்து - சுவர்க்கலோகத்திலிருந்து,—தொல்லை திரு நுகரும் துன்பும் அலம் அலம் - பழமையாகிய செல்வங்களை அனுபவிக்கும் துன்பமும் போதும் போதும்,—தில்லை திருநடம் செய் தேவே - சிதம்பரத்திலே (கனகசபையின் கண்ணே) ஆனந்ததாண்டவஞ் செய்தருளும் (பரமகிருபாலுவாகிய) சிவபெருமானே,— இனி ஒல்லை தமியேற்கு துயர் தீர்த்து உனது பதம் தந்தருள் - இனி விரைவாக அடி யேனுக்கு (இத்) துன்பத்தை யொழித்துத் தேவரீரது திருவடிப்பேற்றைத் தந்தருள வேண்டும். எ — று.

ஆல், ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். உனது பதம் - தேவரீரது பத வியெனினும் அமையும். (எஎ)

78. ஒன்றாயிருதிறமாயோரைந்தாயையைந்தா
யன்றாதியின்மீட்டுமைந்தாயளப்பிலவாய்
நின்றாய்சிவனேயிந்நீர்மையெலாந்தீங்ககற்றி
நன்றாவிகட்குநலம்புரிதற்கேயன்றோ.

இ - ள். ஒன்றாய் - (பிரபலசுருதிகளாகிய உபநிஷத்துக்களிலே பிரதிபாதிக்கப்படும் ஏகம் என்னும் பதத்தின் பொருளாகிய ஒன்றெனப்படும் பிரமமான) சிவமாய்,—இருதிறமாய் - (பிரபஞ்சோற்பத்திநிமித்தம் சிவம் சத்தி யென்னும்)இரண்டுபகுப்பாய்,—ஓர் ஐந்தாய் - (ஆன்மாக்களை இரட்சிக்கும்பொருட்டுக் கொண்டருளிய) பஞ்சகர்த்தாக்களாய்,—ஐயைந்தாய் - (சந்திரசேகரர் முதலிய) இருபத்தைந்து (கேவல) ரூபங்களாய்,—மீட்டும் ஆதியில் ஐந்தாய்-பின்பும முன்போலப் பஞ்சகர்த்தாக்களாய்,—அன்றி - அவையன்றி,—அளப்பிலவாய் - (இன்னும் ஒவ்வோரேதுப்பற்றிக்கொள்ளப்படும்) அளப்பில்லாத வடிவுகளாய்,—நின்றாய் சிவனே - நின்றருளியசிவபெருமானே,—இ நீர்மை எலாம் - இவ்வாறுநின்றருளிய தன்மைகளெல்லாம்,—நன்று ஆவிகட்கு தீங்கு அகற்றி நலம் புரிதற்கே அன்றோ - நன்றாக ஆன்மாக்களுக்குத் துன்பத்தை நீக்கிச்சுகஞ்செய்தற்கே யல்லவா? எ — று.

அன்றி என்பது அன்று எனத்திரிந்து நின்றது. ஏகாரம் தேற்றம். ஓகாரம் வினா. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். ஆதியில் ஐந்தாய் என்றது ஒடுக்கமுறை. (எஅ)

79. பொன்பொலியுங்கொன்றைப்புரிசடையாயிவ்வழிசேர்
துன்பமகற்றித்துறக்கத்துட்டாழாது
பின்புநனிநோற்றுப்பெறற்கரிதாநின்னடிக்கீ
ழின்பமொருதலையாவெய்தவருளாயெனக்கே.

இ - ள். பொன் பொலியும் கொன்றை புரிசடையாய் - பொன்னைப்போல விளங்குகின்ற கொன்றைமலர்மாலையைத் தரித்த முறுகிய சடையையுடையவரே,—இ வழி சேர் துன்பம் அகற்றி - இவ்விடத்திற்பொருந்திய துன்பத்தை நீக்கி,—துறக்கத்துள் தாழாது - சுவர்க்கலோக (இன்பமாகிய வெள்ள) த்திலே (மோகங்கொண்டு) அழுந்தாமல்,—பின்பு நனி நோற்று - பின்னர் மிகவுந் தவஞ்செய்து,—பெறற்கு அரிதாம் நின் அடிக்கீழ் இன்பம் ஒருதலையாய் எய்த எனக்கு அருளாய் - அடைதற்கரிய தேவரீரது திருவடிக்கீழிருத்தலாகிய பேரின்பத்தை நிச்சயமாக அடையும் பொருட்டு அடியேனுக்கு அருள்செய்யும். எ - று.

ஏகாரம் அசை. (எகூ)

வேறு.

80. என்றுபற்பலவிரங்கியேவிடஞ்செறிந்தென்னச்
சென்றுசென்றிடர்மூடுருவுணர்வெலாஞ்சிதைப்ப
வொன்றுமோர்கிலன்மயங்கினனுயிர்கரந்துலையப்
பொன்றினார்களின்மறிந்தனனிந்திரன்புதல்வன்.

இ - ள். என்று - இவ்வாறு,—இந்திரன் புதல்வன்-இந்திரகுமாரனாகிய சயந்தன்,—பற்பல இரங்கியே - பற்பலவாறுசொல்லி வருந்தி,—விடம் செறிந்த என்ன - விஷந்தலைக்கேறினாற்போல,—சென்று சென்று - போய்ப் போய்,—இடர் மூடுரு - துன்பமதிகரித்து,—உணர்வு எலாம் சிதைப்ப - அறிவைமுழுதுங்கெடுக்க,—ஒன்றும் ஓர்கிலன்-யாதொன்றுமறியாமல்,—மயங்கினன் - மயல்கொண்டு,—உயிர் கரந்து உலைய பொன்றினார்களின் மறிந்தனன் - உயிர்மறைந்து உலைய இறந்தவர்களைப்போல விழுந்தான்.எ-று

ஏகாரம் தேற்றம். உம்மை உயர்வுசிறப்பு. (அ0)

81. ஆங்கவன்றனைப்போலவேயமாருமழுங்கி
யேங்கியாருயிர்பதைத்திடவீழ்ந்துணர்விழந்தார்
தூங்குவீழுறுபழுமாஞ்சாய்தலுந்தொடர்ந்து
பாங்கர்சுற்றியவல்லிகடியங்கிவீழ்பரிசின்.

இ - ள். தூங்கு வீழ் உறு பழுமரம் சாய்தலும் - தூங்குகின்ற விழுதுகளையுடைய ஆலமரஞ் சரிந்து விழுதலும்,—தொடர்ந்து பாங்கர் சுற்றிய வல்லிகள் தியங்கி வீழ் பரிசின் - (அம்மரத்தைத்) தொடர்ந்து பக்கத்திலே சுற்றியிருக்கின்ற கொடிகள் வாடி விழுந்தன்மையைப்போல,—ஆங்கு அவன் தனை போலவே - அவ்விடத்தில் அச்சயந்தனைப்போலவே,—அமரரும் அழுங்கி ஏங்கி ஆருயிர் பதைத்திட வீழ்ந்து உணர்வு இழந்தார் - தேவர்களும் வருந்தி யேங்கி யரிய உயிரானது துடிக்கக் (கீழே) விழுந்து அறிவிழந்தார்கள். எ — று.

ஏகாரம் தேற்றம். தன் சாரியை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (அக)

சயந்தன்புலம்புறுபடலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - சுகஎ.

---

## சயந்தன்கனவுகாண்படலம்.

1. விண்ணுளார்களுஞ்சயந்தனும்வியன்மகேந்திரத்தி
னுண்ணிலாம்பெருந்துயருடன்மாழ்கியதுணர்ந்தா
னெண்ணிலாவுயிர்தோறுமுற்றின்னருள்புரியு
மண்ணலார்குமரேசனுமறுமுகத்தமலன்.

இ - ள். எண் இலா உயிர் தோறும் உற்று இன்னருள் புரியும் அண்ணலார் அறு முகத்து அமலன் ஆம் குமரேசன் - அளவிறந்த ஆன்மாக்கடோறும் (பரமான்மாவாக) வியாபித்து நின்று (அவ்வவ்வுயிர்கள் வேண்டியவண்ணம்) அனுக்கிரகஞ்செய்கின்றபெருமையிற்சிறந்த ஆறுதிருமுகங்களையுடைய மலரகிதராகியகுமாரஸ்வாமி,—விண் உளார்களும் சயந்தனும் வியன் மகேந்திரத்தில் உண்ணிலாம் பெரும் துயருடன் மாழ்கியது உணர்ந்தான் - தேவர்களுஞ் சயந்தனும் பெரிய வீரமகேந்திரபுரியில் (சிறைச்சாலையிலிருந்து) மனசிற்பொருந்திய பெருந்துக்கத்துடன் மயங்கிக்கிடப்பதை யறிந்தார். எ — று.

அத்து சாரியை. உம்மைகள் எண். (க)

2. வெஞ்சிறைத்தலைமூழ்கியேயவுணரான்மெலிந்து
நெஞ்சழிந்திடுமவர்தமையருள்வதுநினைந்தான்
றஞ்சமின்றியேதனித்தயர்சிறுவரைத்தழுவி
யஞ்சலென்றுபோற்றிடவருமீன்றயாயனையான்.

இ - ள். தஞ்சம் இன்றியே தனித்து அயர் சிறுவரை தழுவி-(வேறு) துணையில்லாது தனித்துவருந்துகின்ற குழந்தைகளையணைத்து,—அஞ்சல் என்று போற்றிட வரும் ஈன்ற யாய் அனையான் - பயப்படாதேயுங்கள் என்று (இனியவார்த்தைகூறிப்) பாதுகாக்கும் பொருட்டு வருகின்ற பெற்ற தாயையொத்த அருட்கடலாகிய ஆறுமுகப்பெருமான்,—வெம் சிறைத்தலை மூழ்கியே அவுணரால் மெலிந்து - கொடியசிறைச்சாலையில் அழுந்தி யசுரர்களால் வருந்தி,—நெஞ்சழிந்திடும் அவர் தமை அருள்வது நினைந்தான் - மனநிலைகெட்டுக் கிடக்கின்ற அத்தேவர்களுக்குத் திருவருள்புரியும்படி (திருவுள்ளத்திலே) நினைத்தருளினர். எ - று.

தம் சாரியை. ஏகாரம் இரண்டும் தேற்றம். (உ)

3. இனியசீறடிக்குமானிற்செந்திவந்திமையோர்
வினைகொள்கம்பலையகற்றுவானிருந்திடும்விமலன்
றனதுணர்ச்சியின்றாகியேயவசமாஞ்சயந்தன்
கனவின்முன்னுறவந்தனனருள்புரிகருத்தால்.

இ - ள். இனிய சிறு அடி குமரனின் செந்திவந்து இமையோர் வினை கொள் கம்பலை அகற்றுவான் இருந்திடும் விமலன் - இனிமையாகிய சிற்றடிகளையுடைய பாலனைப் போலத் திருச்செந்தூரில் வந்து தேவர்களது தீவினையால் சம்பவித்த துன்பத்தை நீக்கும்பொருட்டு எழுந்தருளிய மலரகிதராகிய சண்முகப்பெருமான்,—தனது உணர்ச்சி இன்றாகியே அவசமாம் சயந்தன் முன்னுற அருள்புரி கருத்தால் கனவில் வந்தனன் - தனது அறிவிழந்து மனமயங்கிக் கிடக்கின்ற சயந்தனது கனவில் அருள்செய்யவேண்டுமென்னும் திருவுள்ளத்துடன் முன்னாகவந்தருளினார். எ – று.

ஏகாரம் தேற்றம். வினைகொள் என்றது சிவநிந்தகனாகிய தக்கன்யாகத்திற்சென்று அவிப்பாகம் ஏற்றதனால் வந்த சிவத்துரோகமென உணர்க. மெய்யன்பர்கள் நினைக்குந்தோறும் இனிமைபயத்தலின் இனியசீறடி என்றார். (ங)

4. வீறுகேதனம்வச்சிரமங்குசம்விசிக
மாறிலாதவேலபயமேவலமிடம்வரத
மேறுபங்கயமணிமழுத்தண்டுவில்லிசைந்த
வாறிரண்டுகையறுமுகங்கொண்டுவேளடைந்தான்.

இ - ள். வேள் - குமாரக்கடவுள்,—வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம் மாறிலாத வேல் அபயமே வலம் - பெருமைபொருந்திய கொடியும் குலிசமும் அங்குசமும் அம்பும் ஒப்பில்லாதவேலும் அபயமும் (ஆகிய இவைகள்) வலப்புறத்திலும்,—ஏறு பங்கயம் மணி மழு தண்டு வில் வரதம் இடம் இசைந்த ஆறிரண்டுகை - உயர்ந்த தாமரைப் பூவும் மணியும் மழுவும் தண்டும் வில்லும் வரதமும் (ஆகிய இவைகள்) இடப்புறத்திலும் பொருந்திய பன்னிரண்டு திருக்கரங்களும்,—அறுமுகங் கொண்டு அடைந்தான் - ஆறு திருமுகங்களும் (அமைந்ததிருமேனி) கொண்டு (சயந்தனதுகனவில்) எழுந்தருளினார்.

ஏகாரம் அசை. கொடிமுதல் அபயமீறாக வலப்புறத்திருக்கரங்களும் தாமரைப்பூ முதல் வரதமீறாக இடப்புறத்திருக்கரங்களும் அமைந்துள்ள திருமேனியுடன் எழுந்தருளினாரென்றுணர்க. (ச)

5. தந்தையில்லதோர்பரமனைத்தாதையாவுடைய
கந்தனேகியேயனையதன்னுருவினைக்காட்ட
விந்திரன்மகனுளப்படும்யாக்கையுளிருந்த
முந்துகண்களாற்கண்டனன்றொழுதனன்மொழிவான்.

இ - ள். தந்தை யில்லதோர் பரமனை தாதையா உடைய கந்தன் எகியே - தமக்கொருபிதா வில்லாதவராகிய சிவபெருமானைத் தமக்குப் பிதாவாகவுடைய கந்தஸ்வாமி (சயந்தனதுகனவில்) எழுந்தருளி,—அனையதன் உருவினைக் காட்ட - அந்தத்தமது (திவ்வியதேஜோமயமாகிய) திருவுருவத்தைக்காண்பிக்க,—இந்திரன் மகன் - இந்திரகுமாரனாகிய சயந்தன்,—உளப்படும் யாக்கையுள் இருந்த முந்து கண்களால் கண்டனன் - சூக்குமசரீரத்திலிருந்த முதன்மைபொருந்திய கண்களினாற் கண்டு,—தொழுதனன் - வணங்கி,—மொழிவான் - சொல்லுவான். எ – று.

ஏகாரம் அசை, மனம் புத்தி அகங்காரம் சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் ஆகிய எட்டுமே சூக்குமசரீரமாகலின் உளப்படும்யாக்கை என்றார். உளப்படும் மூன்றுகண்கள் - ஞானக்கண்கள் எனப்பொருள் கூறுவாருமுளர். (ரு)

6. தொண்டனேன்படுமிடுக்கணைநாடியேதொலைப்பான்
கொண்டபேரருணீர்மையிற்போந்தனைகுறிக்கின்
விண்டுமல்லைபப்பிரமனுமல்லைமேலாகு
மண்டர்நாதனுமல்லைநீயேவர்மற்றருளே.

இ - ள். தொண்டனேன் படும் இடுக்கணை நாடியே - அடியேன் அனுபவிக்கின்ற துன்பத்தை யுணர்ந்தே,—தொலைப்பான் கொண்டபேர் அருள் நீர்மையிற் போந்தனை - (அத்துன்பத்தை) நீக்கும்பொருட்டுத் (திருவுள்ளத்திற்) கொண்ட பேரருட்டன்மையி னால் எழுந்தருளி வந்திருக்கின்றீர்,—குறிக்கின் - ஆராய்ந்துபார்க்குமிடத்து,—விண்டும் அல்லை - (தேவரீர்) திருமாலுமல்லீர்,—அ பிரமனும் அல்லை - அப்பிரமதேவனுமல் லீர்,—மேலாகும் அண்டர் நாதனும் அல்லை - (அவ்விருவர்களினும்) மேலவராகிய தே வநாயகரானசிவபெருமானும் அல்லீர்,—நீ எவர் அருள் - (பின்பு) தேவரீர்யார் (அடி யேன் அறியும்படிசொல்லி) யருளுக. எ - று.

ஏகாரம் முன்னையது தேற்றம்; மற்று, ஏ அசை. உம்மைகள் எண். (சு)

7. என்றகாலையிலறுமுகப்பண்ணவன்யாமக்
கொன்றைவேணியின்மிலைச்சியபரஞ்சுடர்குமர
னுன்றனல்லலுமிரக்கமுமையலுமுணர்ந்து
சென்றனம்மெனக்கூறியேபின்னருஞ்செப்பும்.

இ - ள். என்றகாலையில் - என்று (இப்படிச்சயந்தன்) சொன்னபொழுது,—அறு முகப்பண்ணவன் - அறுமுகப்பெருமான் (அவனைப்பார்த்து),—யாம் அ கொன்றை வேணியில் மிலைச்சியபரம் சுடர் குமரன்-நாம் அந்தக்கொன்றைமலர்மாலையைச் சடையி லணிந்த சிவபெருமானதுபுத்திரன்,—உன் தன் அல்லலும் இரக்கமும் மையலும் உணர் ந்து சென்றனம் என கூறியே பின்னரும் செப்பும் - உனதுதுக்கத்தையும் அழுகையை யும் மயக்கத்தையும் அறிந்துவந்தே மென்று சொல்லிப் பின்னருஞ் சொல்லுகின்றார்.

அ உலகறிசுட்டு. தன் சாரியை. உம்மை பின்னரும் என்பதில் இறந்ததுதழீஇய வெச்சமும் ஏனையவற்றில் எண்ணுமாம். ஏகாரம் அசை. (எ)

8. நுந்தைதன்குறைநுங்குறையாவையுநுவன்று
வந்துநந்தமைவேண்டலும்வரம்பில்சேனையொடு
மிந்தஞாலத்தினெய்தியேகிரவுஞ்சமென்னு
மந்தவெற்பையுந்தாரகன்றன்னையுமட்டாம்.

இ - ள். நுந்தை வந்து தன் குறை நும் குறை யாவையும் நுவன்று நம் தமைவேண் டலும் - (சயந்தனே) உன் பிதாவாகிய இந்திரன் (நம்மிடத்திலே) வந்து தனது குறை யையும் உங்களதுகுறைகளெல்லாவற்றையும் முறையிட்டு நம்மை வேண்டிக்கொள்ளுத லும்,—வரம்பில் சேனை யொடும் இந்த ஞாலத்தில் எய்தி - அளவற்றசேனைகளுடனே இந்தப் பூவுலகத்திலே வந்து,—கிரவுஞ்சம் என்னும் அந்த வெற்பையும் தாரகன் தன்னை யும் அட்டாம் - கிரவுஞ்சம் என்னும் பெயரினையுடைய அந்தமலையையும் தாரகாசுரனை யுங் கொன்றோம். எ - று.

* தன் தம் சாரியை. ஏகாரம் அசை. உம்மை யாவையும் என்பதில் முற்றும் ஏனைய வற்றில் எண்ணுமாம். (அ)

9. அனையவன்றனையட்டபின்செந்திவந்தமர்ந்தாம்
வனசமீமிசையிருந்திடுபிரமனுமாலு
முனதுதாதையுமமரருநம்வயினுறைந்தா
ரினையல்வாழிகேணுங்கையுமேருவினிருந்தாள்.

இ - ள். அனையவன் தனை அட்டபின் செந்திவந்து அமர்ந்தாம் - தாரகனைக்கொன்றபின்பு திருச்செந்தூரிலே வந்து இருந்தேம்,—வனச மீமிசை இருந்திடு பிரமனும் மாலும் உனது தாதையும் அமரரும் நம்வயின் உறைந்தார் - தாமரைப்பூவில் இருக்கின்ற பிரமனும் விஷ்ணுவும் உனது பிதாவும் தேவர்களும் நம்மிடத்திலிருக்கின்றார்கள்,—இனையல் - வருந்தாதே,—கேள் - கேட்பாயாக,—நுங்கையும் மேருவின் இருந்தாள் - உன்மாதாவாகிய இந்திராணியும் மகாமேருமலையில் இருக்கின்றாள். எ — று.

வாழி அசைச்சொல். தன் சாரியை. உம்மை நுங்கையும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமும் ஏனையவற்றில் எண்ணுமாம். (கூ)

10. வீரவாகுவாங்தூதனையாமிவண்விடுத்தேஞ்
சூரன்மைந்தனங்கொருவனைப்பலரொடுந்தொலையா
நேரிலாதவிக்கடிநகரழித்துநீறுக்கிப்
பாரின்மாலையின்மீண்டிடப்புரிதுமிப்பகலின்.

இ - ள். யாம் வீரவாகு ஆம் தூதனை இவண் விடுத்தேம் - நாம் (சூரனைக்காணும்படி) வீரவாகுவாகிய தூதனை இம்மகேந்திரத்தில் அனுப்பி யிருக்கின்றேம்,—இப் பகலின் - (அவன்) இப்பகற்காலத்திலே,—சூரன் மைந்தன் ஒருவனை - சூரபன்மனது ஒரு புதல்வனை,—பலரொடும் தொலையா - பல அசுரருடனே கொன்று,—நேரிலாத இ கடிநகர் அழித்து நீறுக்கி - ஒப்பில்லாத இந்தக் காவலமைந்த நகரத்தையும் அழித்து நீறுகச்செய்து,—மாலையில் பாரில் மீண்டிட புரிதும் - மாலைப்பொழுதில் திருச்செந்தூருக்குத்திரும்பிவரும்படி செய்வேம். எ — று.

அங்கு அசை. பாரில் நேரிலாதகடிநர் எனினுமாம். (கல)

11. செல்லுமிப்பகல்கழிந்தபினாளையேசெந்தி
மல்லலம்பதிநீங்கியிந்நகர்க்கயல்வைகிச்
சொல்லுமைந்திருவைகலினவுணர்தந்தொகையு
மல்லலாற்றியசூரனுமுடிந்திடவடுதும்.

இ - ள். செல்லும் இ பகல் கழிந்தபின் - செல்லுகின்ற இந்தநாட் கழிந்தபின்பு,—நாளையே செந்தி மல்லலம் பதி நீங்கி - நாளைக்கே திருச்செந்தூராகிய வளம்பொருந்திய நகரத்தை நீங்கி,—இ நகர்க்கு அயல் வைகி - இந்தநகரத்துக்குப் பக்கத்திலே (பாசறைகொண்டு) இருந்து,—சொல்லும் ஐந்திரு வைகலின் - சொல்லப்பட்ட பத்துத்தினங்களில்,—அவுணர் தம் தொகையும் அல்லல் ஆற்றிய சூரனும் முடிந்திட அடுதும் - அசுரகூட்டங்களும் (உங்களுக்குத்) துன்பத்தை விளைத்த சூரபன்மனும் இறக்கும்படி கொல்வேம். எ - று.

ஏகாரம் தேற்றம். உண்மைகள் எண். (கக)

12. அட்டபின்னரேநின்னைவானவருடனவுண
ரிட்டவெஞ்சிறைநீக்கிநுந்திருவெலாமீதும்
விட்டிடிங்குனதாகுலமென்றனன்வினைதீர்ந்
துட்டெளிந்தவர்போதத்தினுணர்வுமாயுறைவோன்.

இ - ள். வினை தீர்ந்து உள் தெளிந்தவர் போதத்தின் உணர்வுமாய் உறைவோன் - வினைத்தொடர்பு நீங்கி மனந்தெளியப் பெற்ற மகான்களது அறிவிலே அறிவாக விருக்கின்ற சுப்பிரமணியப்பெருமான்,—அட்டபின்னர் - (அவ்வாறு) கொன்றபின்பு,—நின்னை வானவருடன் அவுணன் இட்ட வெம் சிறை நீக்கி - உன்னைத் தேவர்களுடனே சூரபன்மன்வைத்த கொடிய சிறையினின்றும் நீக்கி,—நும் திரு எலாம் ஈதும் உனது ஆகுலம் விட்டிடு என்றனன் - உங்களது செல்வங்களெல்லாவற்றையுங் கொடுப்பேம் உனது (மனத்திலுள்ள) துன்பத்தையொழித்து விடு என்று திருவாய்மலர்ந்தருளினர்.

இங்கு, ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சமும் உயர்வுசிறப்புமாம். (கஉ)

13. ஐயனீங்கிவையுரைத்தவைகேட்டலுமகத்துண்
மையன்மாசிருளகன்றனபுகுந்தனமகிழ்ச்சி
மெய்யுரோமங்கள்சிலிர்த்தனவுகுத்தனவிழிநீர்
சையமேயெனநிமிர்ந்தனசயந்தனதடந்தோள்.

இ - ள். ஐயன் ஈங்கு உரைத்தவை இவை கேட்டலும் - பிதாவாகிய கந்தஸ்வாமி இம்மகேந்திரபுரியில் சொல்லியருளிய இவ்வசனங்களைக் கேட்டவுடனே,—சயந்தன் அகத்துள் மையல் மாசு இருள் அகன்றன - சயந்தனது மனசிலுண்டான மயக்கமாகிய கரிய இருள் அகன்றது,—மகிழ்ச்சி புகுந்தன - ஆனந்தம் வந்தது,—மெய் உரோமங்கள் சிலிர்த்தன - சரீரத்திலுள்ள உரோமங்கள் சிலிர்த்தன,—விழிநீர் உகுத்தன - கண்களினின்றும் நீர்சொரிந்தன,—தடம் தோள் சையமே என நிமிர்ந்தன - விசாலித்த தோள்கள் மலைதான் என்று சொல்லும்படி பூரித்தன. எ - று.

இருளும் மகிழ்ச்சியும் பன்முறை ஒருக்காலைக்கொருகால் மிக்குத்தோன்றலின் பன்மைமுடிபேற்றன. ஏகாரம் தேற்றம். (கஙு)

14. பற்றினல்வருமமிர்தினையெளிதுறப்படைத்துத்
துற்றுளோரெனத்தண்ணெனத்தனதுமெய்சுருதி
கற்றகற்றனபாடினுனாடினான்களித்தான்
மற்றவன்பெறுமுவகையின்பெருமையார்வகுப்பார்.

இ - ள். பற்றினல் வரும் அமிர்தினை எளிதுற படைத்து துற்றுளோர் என - விரும்பித்தேடினுற்கிடைக்கும் அமிர்தத்தை இருந்தவிடத்திற்பெற்று உண்டவர்களைப் போல,—தனது மெய் தண்ணென - (சயந்தன்) தனது சரீரம் தண்ணென்று குளிர,—கற்ற கற்றன சுருதிபாடினுன் - (தான்முன்னே) பயின்ற பயின்ற வேதங்களைச்சொல்லிப் பாடினுன்,—ஆடினுன் - நடனஞ்செய்தான்,—களித்தான் - சந்தோஷித்தான்,—அவன் பெறும் உவகையின் பெருமை யார் வகுப்பார் - அச்சயந்தன்பெற்ற மகிழ்ச்சியின் பெருமையை யார் எடுத்துக் கூறுவார்கள். எ - று.

மற்று அசை. பலகாற்பயின்றமைபற்றி கற்ற கற்றன என அடுக்கிக் கூறினர். ()

வேறு.

15. நிகழ்ந்திடுமறவியைநீங்கியிவ்வகை
மகிழ்ந்திடுமிந்திரன்மதலையெம்பிரான்
றிகழ்ந்திடுபதமலர்சென்றிறைஞ்சியே
புகழ்ந்தனனினையனபுகல்வதாயினுன்.

இ - ள். நிகழ்ந்திடு மறவியை நீங்கி இவ்வகை மகிழ்ந்திடும் இந்திரன் மதலை - உண்டானமயக்கத்தையொழிந்து இத்தன்மையாக மகிழ்ச்சியடைகின்ற இந்திரகுமாரனுகிய சயந்தன்,—எம்பிரான் திகழ்ந்திடு பதமலர் சென்று இறைஞ்சி புகழ்ந்தனன் - எமது

முருகக்கடவுளுடைய விளங்குகின்ற திருவடித்தாமரைமலர்களைச் சென்று வணங்கித் துதித்து,—இனையன புகல்வ தாயினன் - இவ்வண்ணமாகச் சொல்லுகின்றான். எ – று.

ஏகாரம் அசை. (கரு)

16. நொய்யசிரடியரேநோவுமாற்றியே
மையநீவலிதுவந்தளித்தியானுரை
செய்வதுமுண்டுகொல்சிறிதுநின்கணே
கையடைபுகுந்தனங்காத்தியாலென்றான்.

இ - ள். ஐய - (சயந்தன்) பெருமானே,—நீ வலிது வந்து - தேவரீர் வலியவந்து,—நொய்ய சீரடியரேம் நோவுமாற்றி - அற்பசீரையுடைய அடியேமாகிய எங்களது வருத்தத்தை யொழித்து,—அளித்தி - இரட்சித்தருளினீர்,—யான் சிறிது உரைசெய்வதும் உண்டுகொல் - அடியேன் சற்றுவது சொல்லவேண்டுவதுமுண்டோ,—நின்கணே கையடை புகுந்தனம் - தேவரீரிடத்திலே அடைக்கலம் வந்தேம்,—காத்தி என்றான் - இரட்சித்தருளுக என்றான். எ - று.

ஏகாரங்கள் தேற்றம். ஆல் அசை. உம்மை எதிரதுதழீஇயவெச்சம். கொல் ஐயம்.

17. சயந்தன்மற்றிவ்வகைசாற்றயாரினு
முயர்ந்திடுபரஞ்சுடரொருவன்கேட்குறு
வயர்ந்தநுங்குறையறவளித்தூந்திண்ணமென்
றியைந்திடமேலுமொன்றிசைத்தன்மேயினன்.

இ - ள். சயந்தன் இவகை சாற்ற - சயந்தன் இவ்வாறு கூற,—யாரினும் உயர்ந்திடு பரம் சுடர் ஒருவன் கேட்குறு - (அதனை) எவர்களினும் உயர்ந்த பரஞ்சோதிமயமாகிய குமாரக்கடவுள் கேட்டு,—அயர்ந்த நும் குறை அற அளித்தும் திண்ண மென்று - வருத்தமடைந்த உங்களது குறை நீங்கும்படி காப்பேம் இது நிச்சயம் என்று,—இயைந்திட மேலும் ஒன்று இசைத்தல் மேயினன் - (அவனுள்ளத்திலே) பொருந்தும்படி பின்னும் ஒன்றைத் திருவாய்மலர்ந்தருளினர். எ – று.

மற்று அசை. உம்மை முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது இறந்ததுதழீஇய வெச்சம். (கஎ)

18. இந்நகர்குறுகயாமேயதூதுவ
னின்னையுஞ்சுரரையுநேர்ந்துகண்ணுறீஇ
நன்னயங்கூறியேநடப்பவுய்க்குது
மன்னதுங்காண்கெனவருளிப்போயினன்.

இ - ள். இ நகர் குறுக யாம் ஏய தூதுவன் - (கந்தஸ்வாமி) இந்நகரத்திற்கு வரும்படி நாம் ஏவியதூதனாகிய வீரவாகு,—நின்னையும் சுரரையும் நேர்ந்து கண்ணுறீஇ நன்னயம் கூறியே நடப்ப உய்க்குதும் - உன்னையும் தேவர்களையும் எதிர்முகமாகக் கண்டு நல்வசனங்களைச்சொல்லிப் (பின்பு மற்றைக்காரியங்களைச்) செய்யும்படி அனுப்புகிறோம்,—அன்னதும் காண்க என அருளி போயினன் - அதனையுங் காண்பாயாக வென்று அருள் செய்து போயினர். எ - று.

ஏகாரம் தேற்றம். உம்மை நின்னையுஞ் சுரரையும் என்பதில் எண்ணும், அன்னதும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமும் உயர்வுசிறப்புமாம். (கஅ)

19. படைப்புருதயர்ந்திடுபங்கயன்கனு
வடுத்துனக்கருள்செயவாறுறைடைவரை
விடுத்துமென்றேகியவிமலன்போலவே
யிடர்ப்படுசயந்தன்முனிவைசொற்றேகினன்.

இ - ள். படைப்புரூது அயர்ந்திடு பங்கயன் கனு அடுத்து - சிருட்டித்தொழில் சித்திபெறாமையால் மயக்கங்கொண்டிருந்த பிரமதேவரது சொப்பனத்திலேசென்று,—உனக்கு அருள்செய ஆறுறடு ஐவரை விடுத்தும் என்று ஏகிய விமலன் போலவே - (உன்படைப்புத்தொழில் நடக்கும்பொருட்டு) உனக்கு அருள்செய்யும்படி ஏகாதசவுருத்திரர்களை யனுப்புகின்றோமென்று கூறி யெழுந்தருளிய சிவபெருமானைப்போல,—இடர் படு சயந்தன் முன் இவை சொற்று ஏகினன் - (கந்தஸ்வாமி) வருத்தப்படுகின்ற சயந்தன் முன்னே யிந்தவசனங்களைச்சொல்லி மறைந்தருளினார். எ — று.

ஏகாரம் தேற்றம். (கசு)

20. ஏகியகாலையினிறந்துமுன்னரே
போகியபுலமெலாம்பொறியிற்றோன்றலு
மாகியகனவினையகன்றுபைப்பய
நாகர்கோன்றிருமகனனவினண்ணினன்.

இ - ள். ஏகிய காலையின் - (குமாரக்கடவுள் இப்படித்திருவாய்மலர்ந்தருளிச்)சென்றபொழுது,—இறந்துமுன்னரே போகிய புலமெலாம் பொறியில் தோன்றலும் - (மயக்கத்தினால் ஒடுங்கி) முன் போயிருந்த (சத்தம்முதலிய) புலன்களெல்லாம்(காதுமுதலிய) பொறிகளில் வந்து நிற்கவும்,—ஆகிய கனவினை அகன்று - முன்னிருந்த சொப்பனாவஸ்தையை நீங்கி,—பை பய - மெல்ல மெல்ல,—நாகர்கோன் திருமகன் - தேவராஜனாகிய இந்திரகுமாரனான சயந்தன்,—நனவில் நண்ணினன் - சாக்கிராவஸ்தையையடைந்தான்

ஏகாரம் அசை. (உ0)

வேறு.

21. தந்திநஞ்சந்தலைக்கொளச்சாய்ந்தவர்
மந்திரத்தவர்வாய்மைவந்துற்றுழிச்
சிந்தைமையலைத்தீர்ந்தெழுமாறுபோ
லிந்திரன்றன்மதலையெழுந்தனன்.

இ - ள். தந்தி நஞ்சம் தலைக்கொள சாய்ந்தவர் - பாம்பின்விஷந் தலைக்கேற (அதனால் அறிவுமயங்கி) விழுந்தவர்கள்,—மந்திரத்தவர் வாய்மை வந்து உற்றுழி - மாந்திரிகருடைய மந்திரவாக்கானது(செவிகளிற்)சென்றபோது,—சிந்தை மையலை தீர்ந்து எழுமாறுபோல் - மனமயக்கத்தை நீங்கி யெழுகின்ற தன்மையைப்போல,—இந்திரன் தன் மதலை எழுந்தனன் - இந்திரன் மகனாகிய சயந்தன் எழுந்தான். எ — று.

தன் சாரியை. தந்தத்தையுடையதுதந்தி. அப்பெயர் காரணவிடுகுறியாய்ப் பாம்பின்மேல் நின்றது. மந்திரத்தவர் - கருடபஞ்சாக்ஷரம் முதலிய மந்திரங்களை விதிப்படியுணர்ந்து சித்திபெற்றவர். வாய்மை-மந்திரோச்சாரணம்; ஆணை எனினும் அமையும்.

22. நனவுதன்னிடைநண்ணியசீர்மகன்
கனவினெல்லையிற்கண்டனயாவையு
நினைவுதோற்றினனெஞ்சங்குளிர்ந்துநம்
வினையெலாமிவண்வீடியவோவென்றான்.

இ - ள். நனவு தன்னிடை நண்ணிய சீர் மகன் - சாக்கிராவத்தையை யடைந்த சிறப்பினையுடைய சயந்தன்,—கனவின் எல்லையில் கண்டன யாவையும் நினைவு தோற்றினன் - சொப்பனாவத்தையிற் கண்டனவற்றையெல்லாம் நினைவிற்கொண்டுவந்து,—நெஞ்சம் குளிர்ந்து நம் வினையெலாம் இவண் வீடியவோ என்றான் - மனங்குளிர்ந்து நமது கன்மங்களெல்லாம் இவ்விடத்தில் அழிந்தனவோ என்றான். எ — று.

தன் சாரியை. உம்மை முற்று. ஓகாரம் அதிசயக்குறிப்பு. (உஉ)

23. கவலைதூங்கிக்கடுந்துயர்நீரதா
யவலமாகியவாழியிலாழ்ந்துளான்
சிவகுமாரன்றிருவருளுன்னியே
யுவகையென்னுமொலிகடன்மூழ்கினான்.

இ - ள். கவலை தூங்கி கடும் துயர் நீரதாய் அவலமாகிய ஆழியில் ஆழ்ந்துளான் - கவலைமிகுந்து கடுந்துக்கம் வரத்தக்கதாய் சோகமாகிய கடலிலே அமிழ்ந்திக் கிடந்த சயந்தன்,—சிவகுமாரன் திரு அருள் உன்னியே - சிவகுமாரராகிய கந்தஸ்வாமியினது திருவருளைச் சிந்தித்து,—உவகை என்னும் ஒலி கடல் மூழ்கினான் - ஆனந்தமாகிய ஒலிக்கின்ற கடலிலே முழுகினான். எ - று.

ஏகாரம் தேற்றம். ஒலி யுவகை எனக்கொண்டு மேன்மேலுந் தழைக்கின்ற உவகை எனினும் பொருந்தும். (உங)

24. அனையகாலையயர்ந்திடுவானுளோர்
கனவுதோறுங்கடிதுசென்றிந்திரன்
றனயனுக்குமுன்சாற்றியவாறுசொற்
றினையலீரெனவேகினனெம்பிரான்.

இ - ள். அனையகாலை - அப்பொழுது,—எம்பிரான் அயர்ந்திடு வானுளோர் கனவு தோறும் கடிது சென்று - எமது அறுமுகப்பெருமான் (சிறைச்சாலையில்) மயங்கிக்கிடக்கின்ற தேவர்களது கனவுதோறும் விரைவாகச்சென்று,—இந்திரன் தனயனுக்கு முன் சாற்றிய வாறு - இந்திரன்மகனாகிய சயந்தனுக்கு முன் சொல்லியருளியபடி,—இனையலீர் என சொற்று ஏகினன் - (நீங்கள்) வருந்தலீர் என்று சொல்லி யெழுந்தருளினார். எ - று. (உச)

25. அம்மென்கொன்றையணிமுடிக்கொண்டவன்
செம்மலேகலுந்தேவர்கனவொரீஇ
விம்மிதத்தின்விழித்தெழுந்தேயிரீஇத்
தம்மிலோர்ந்துதவமகிழ்வெய்தினார்.

இ - ள். அம் மெல் கொன்றை அணி முடி கொண்டவன் செம்மல் ஏகலும் - கங்கையையும் மிருதுவாகிய கொன்றைமலர்மாலையையும் அழகிய முடியிலே தரித்த சிவபெருமானது திருக்குமாரராகிய கந்தஸ்வாமி யெழுந்தருள,—தேவர் கனா ஒரீஇ - தேவர்கள் கனவாகிய அவஸ்தையை நீங்கி,—விம்மிதத்தின் விழித்து எழுந்து இரீஇ - அதிசயத்தோடு கண்விழித்தெழுந்து இருந்து,—தம்மில் ஓர்ந்து தவமகிழ்வு எய்தினார் - (கண்டசொப்பனங்களைச்) தங்களுக்குள்ளேசிந்தித்து மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். எ-று.

ஏகாரம் தேற்றம். (உரு)

26. சில்லைவெம்மொழித்தீயவர்கேட்பரே
லல்லல்செய்வரென்றஞ்சிக்கனுத்திற
மல்லன்மைந்தன்மருங்குறுவார்சிலர்
மெல்லவங்கவன்கேட்கவிளம்பினர்.

இ - ள். மல்லல் மைந்தன் மருங்குறுவார் சிலர் - திடசித்தனாகிய சயந்தன் பக்கத்திலிருப்பவர்களான சிலதேவர்கள்,—சில்லை வெம் மொழி தீயவர் கேட்பரேல் அல்லல் செய்வர் என்று அஞ்சி - சிள்வீடுபோல அரற்றுகின்ற கொடிய சொற்களையுடைய பாவிகளாகிய அசுரர்கள் கேட்பாராயின் துன்பப்படுத்துவார்களென்று பயந்து,—திறம் கனு அவன் கேட்க மெல்ல விளம்பினர் - ஆச்சரியமான கனவை அச்சயந்தன்கேட்கும்படி இரகசியமாகச் சொன்னர். எ — று.

அங்கு அசை. சயந்தன் அறுமுகப்பெருமானது அருள்வாக்கால் தெளிந்து தேறிய மனமுடையவன் என்பார் மல்லன் மைந்தன் என்றார். மல்லல் - வலியெனினுமாம். சில்லை - என்பதற்கு இழிவு எனப் பொருள்கூறுவாருமுளர். (உசு)

வேறு.

27. அண்டர்கண்மொழிதருமற்புதத்தையுட்
கொண்டனனங்கவைகுமரன்றான்முனங்
கண்டதுபோன்றிடக்களித்துப்பாரெலா
முண்டவனுமெனவுடலம்விம்மினன்.

இ - ள். குமரன் அண்டர்கள் மொழிதரும் அற்புதத்தை உட்கொண்டனன் - சயந்தன் தேவர்கள் கூறிய ஆச்சரியமான கனவை மனசிற்சிந்தித்து,—அவை தான் முனம் கண்டது போன்றிட களித்து - அக்கனவுகள் தான்முன்னே கண்ட கனவை யொத்திருக்கமகிழ்ந்து,—பாரெலாம் உண்டனன் ஆம் என உடலம் விம்மினன் - பூமிமுழுவதையும் உண்ட திருமாலைப்போலச் சரீரம் பூரித்தான். எ - று.

அங்கு அசை. (உஎ)

28. அறுமுகமுடையதோராதிநாயக
னிறைதருமுலகெலாநீங்கலின்றியே
யுறைவதுங்கருணைசெய்திறனுமுன்னியே
மறைமுறையவனடிவழுத்திவைகினன்.

இ - ள். அறுமுகம் உடையது ஓர் ஆதி நாயகன் - (சயந்தன்) ஆறுதிருமுகங்களையுடைய ஒப்பில்லாதமுழுமுதல்வராகிய கந்தஸ்வாமி,—நிறைதரும் உலகெலாம் நீங்கலின்றியே உறைவதும் - நிறைந்த உலகமனைத்தினும் நீக்கமில்லாமல் வியாபித்திருப்பதையும்,—கருணை செய் திறனும் உன்னி - (தம்மைத்தியானித்து மனமுருகுகின்ற மெய்யடியார்க்கு எளிவந்து) திருவருள் பாலிக்கின்ற தன்மையையும் நினைத்து,—மறை முறை அவன் அடி வழுத்தி வைகினன் - வேதமுறைப்படி அவரது திருவடிகளைத் துதித்துக் கொண்டிருந்தான். எ - று.

ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. உம்மைகள் எண். (உஅ)

சயந்தன்கனவுகாண்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬சஞ.

---

# வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலம்.



1. இத்திறமமரரொடிந்திரன்மக
னத்தலையிருத்தலுமனையர்யாவரு
மொய்த்திடுசிறையகமுன்கண்டானரோ
வித்தகவறிவனும்வீரவாகுவே.

இ - ள். இந்திரன் மகன் இதிறம் அமரரொடு அ தலை இருத்தலும் - இந்திரகுமாரனாகிய சயந்தன் இத்தன்மையாகத் தேவர்களோடும் அச்சிறைச்சாலையிலிருத்தலும்,—வித்தக அறிவன் ஆம் வீரவாகு - ஞான அறிவினையுடைய வீரவாகுதேவர்,—அனையர் யாவரும் மொய்த்திடு சிறையகம் முன் கண்டான் - அவர்களனைவரும் நெருங்கியிருக்கின்ற சிறைச்சாலையை எதிரேகண்டார். எ - று.

அரோ, ஏ என்பன அசைகள். உம்மை முற்று. (க)

வே று.

2. மாகண்டமொன்பான்புகழுந்திறல்வாகுவங்க
ணாகண்டலன்மைந்தனைவிண்ணவராயினுரைக்
காய்கண்டகராமவுணத்தொகைகாத்தல்கண்டான்
பேய்கண்டசெல்வந்தனைக்காத்திடும்பெற்றியேபோல்.

இ - ள். மா கண்டம் ஒன்பான் புகழும் திறல் வாகு - பெரியநவகண்டங்களிலுமுள்ளவர்கள் புகழுகின்ற வீரவாகுதேவர்,—அங்கண் - அச்சிறைச்சாலையில்,—ஆகண்டலன் மைந்தனை விண்ணவராயினரை - இந்திரன் புதல்வனாகிய சயந்தனையும் தேவர்களாயுள்ளவர்களையும்,—பேய் கண்ட செல்வந்தனை காத்திடும் பெற்றியே போல் - பேய்கள் கண்ணெதிர்ப்பட்ட செல்வத்தைக் காத்துக்கொண்டிருக்குந் தன்மைபோல,—காய் கண்டகராம் அவுணத்தொகை காத்தல் கண்டான் - கோபித்துவருத்துகின்ற கீழ்மக்களாகிய அசுர கூட்டம் காவல்செய்வதைக்கண்டார். எ — று.

தன் சாரியை. ஏகாரம் தேற்றம். பேய் தான் கண்ட செல்வத்தை அனுபவிப்பது மில்லை பிறரனுபவிக்க விடுவதுமில்லை. அதுபோலத் தேவர்களால் தமக்கொரு உபயோகமுமில்லை பிறரையனுக விடுவதுமில்லை என்பதுதாற்பரியம். (உ)

3. கண்ணோடலின்றித்துயர்வேலியிற்காவல்கொண்ட
வெண்ணோரெனைக்கண்டிலராயுணர்வின்றிமாழ்க
விண்ணோர்கள்காணத்தமியேன்செலவேண்டுமென்றான்
மண்ணோரடியாலளக்குந்தனிமாயனொப்பான்.

இ - ள். மண் ஓர் அடியால் அளக்கும் தனி மாயன் ஒப்பான் - பூவுலகத்தை ஓரடியினாலே யளந்த வொப்பற்ற திருமாலை யொப்பாராகிய வீரவாகுதேவர்,—கண்ணோடல் இன்றி துயர் வேலியின் காவல் கொண்ட எண்ணோர் - தாட்சணியமில்லாது துன்பமாகிய வேலி (வளைந்திருப்பது) போலச் சூழ்ந்து காவல்பூண்டிருக்கின்ற சத்துருக்களாகிய அசுரர்கள்,—எனை கண்டிலராய் உணர்வின்றி மாழ்க - என்னைப்பாராதவர்களாய் அறிவழிந்து மயங்கவும்,—விண்ணோர்கள் காண - தேவர்கள் என்னைக் காணவும்,—தமியேன் செல வேண்டும் என்றான் - தனித்தவனாகிய யான் போகவேண்டுமென்றார். எ — று. (ங)

4. ஓங்காரமூலப்பொருளாயுயிர்தோறுமென்று
நீங்காதமருங்குமரேசனைநெஞ்சினுன்னி
யாங்காகுவதோரவன்மந்திரமன்பினோதித்
தீங்காமவுணர்செறிகாப்பகஞ்சென்றுபுக்கான்.

இ - ள். ஓங்கார மூலப் பொருளாய் - (வீரவாகுதேவர்) பிரணவத்தின் முதற்பொருளாய்,—உயிர் தோறும் என்றும் நீங்காது அமரும் குமரேசனை - ஆன்மாக்கடோறும் (பரமான்மாவாக) எப்பொழுதும் நீங்காமலிருக்கின்ற குமாரக்கடவுளை,—நெஞ்சின் உன்னி - மனசிலேதியானித்து,—ஆங்கு ஆகுவது அவன் ஓர் மந்திரம் அன்பின் ஓதி - அங்கே (தமதுகாரியஞ்) சித்திக்கத்தக்க அவரது ஒருமந்திரத்தை அன்புடனே யுச்சரித்து,—தீங்காம் அவுணர் செறி காப்பு அகம் சென்று புக்கான் - தீமையையுடையவராகிய அசுரர்கள் நெருங்கியிருக்கின்ற சிறைச்சாலையிற்சென்று உட்புகுந்தார். எ – று.

உம்மை முற்றுப்பொருளது. (ச)

5. தாமந்தருமொய்ம்புடைவீரன்சயந்தன்விண்ணோ
ரேமந்தருவன்சிறைச்சூழலுளேகலோடுந்
தூமந்திகழ்மெய்புடைக்காவலர்துப்புநீங்கி
மாமந்திரமாம்வலைப்பட்டுமயங்கலுற்றார்.

இ - ள். தாமம் தரு மொய்ம்புடை வீரன் - மாலையணிந்தபுயங்களையுடைய வீரவாகுதேவர்,—சயந்தன் விண்ணோர் ஏமம் தரு வன்சிறை சூழலுள் ஏகலோடும் - சயந்தனுக்குந்தேவர்களுக்கும் மயக்கத்தைத்தருகின்ற கொடிய சிறைச்சாலையிற் போதலும்,—தூமம் திகழ் மெய்யுடை காவலர் - புகைபோல விளங்குகின்ற (கரிய) சரீரத்தினையுடைய காவலாளர்கள்,—துப்பு நீங்கி - அறிவுகெட்டு,—மாமந்திரம் ஆம் வலைப்பட்டு மயங்கலுற்றார் - மகிமைபொருந்தியமந்திரமாகிய வலைக்குட்பட்டு மயங்கினார்கள். எ - று.

தாமம் - ஒளி, மாலை, மலை. துப்பு - வலி, அறிவு. (ரு)

6. எண்டானவரிற்புடைகாப்பவர்யாருமையல்
கொண்டார்குயிற்றப்படுமோவியக்கொள்கைமேவத்
தண்டாரயில்வேற்படைநாயகன்றானைவேந்தைக்
கண்டார்சயந்தனொடுதேவர்கருதலுற்றார்.

இ - ள். எண் தானவரில் புடை காப்பவர் யாரும் மையல் கொண்டார் - மதிக்கப்படுகின்ற அசுரருக்குள் பக்கத்திற்காவல்பூண்டிருப்பவர்களனைவரும் மயக்கங்கொண்டு,—குயிற்றப்படும் ஓவியக்கொள்கைமேவ - செய்யப்பட்ட சித்திரப்பாவையசைவறவிருத்தல்போல இருக்க,—சயந்தனொடு தேவர் - சயந்தனும் தேவர்களும்,—தண் தார் அயில் வேல் படை நாயகன் தானை வேந்தை கண்டார் கருதலுற்றார் - குளிர்ந்த மலர்மாலையணிந்த கூரிய வேற்படையையுடைய கந்தஸ்வாமியினது சேனாபதியாகிய வீரவாகுதேவரைக்கண்டு நினைப்பாராயினார். எ – று.

உம்மை முற்று. (சு)

7. ஏமாந்தவுணர்சிறுகாலையினின்னல்செய்ய
நாமாண்டனர்போலவசத்தினனுகுமெல்லை
மாமாண்படையவருள்செய்தநம்வள்ளறாத
னாமாமிவனென்றகங்கொண்டனரார்வமுற்றார்.

இ - ள். அவுணர் ஏமாந்து சிறு காலையின் இன்னல் செய்ய - (தேவர்கள்) அவுணர்கள் இறுமாப்புக்கொண்டு சற்றுநேரத்திற்குமுன்னே துன்பப்படுத்த,—நாம் மாண்டனர் போல் அவசத்தின் நணுகும் எல்லை - நாம் இறந்தவர்களைப்போல அறிவுமயங்கும்பொழுது,—மா மாண்பு அடைய அருள்செய்த நம் வள்ளல் தூதன் இவன் ஆம் ஆம் என்று- மகத்தானமாட்சிமையை நாமடையம்படி திருவருள்பாலித்த வள்ளலாராகிய அறுமுகப் பெருமானது தூதர் இவர் ஆகும் ஆகும் என்று,—அகங் கொண்டனர் ஆர்வ முற்றார் - மனசிற்சிந்தித்து விருப்பமுள்ளவர்களானார்கள். எ - று. (எ)

8. அன்னாரமருங்களஞ்சென்றயிலேந்துநம்பி
நன்னாயகமாந்திருநாமநவின்றுபோற்றிப்
பொன்னாடிறைகூர்திருநீங்கியபுங்கவன்றன்
முன்னாவணுகியிருந்தானடன்மொய்ம்பின்மேலோன்.

இ - ள். அடல் மொய்ம்பின் மேலோன் - வீரவாகுதேவர்,—அன்னார் அமரும் களம் சென்று - அத்தேவர்களிருக்கின்ற சிறைச்சாலையிற்சென்று,—அயில் ஏந்து நம்பி நல்நாயகம் ஆம் திருநாமம் நவின்று போற்றி - வேற்படையையேந்திய திருக்கரத்தினையுடைய கந்தஸ்வாமியினது (மந்திரங்களுக்கெல்லாம்) நல்ல நாயகமாகிய திருநாமத்தைக் கூறித் துதித்து,—பொன் நாடு இறை கூர் திரு நீங்கிய புங்கவன் தன் முன்னா அணுகி இருந்தான் - சுவர்க்கலோகத்தையுந் தலைமையையும் மிக்க செல்வத்தையும் இழந்த சயந்தனுக்குமுன்னாகச் சென்று இருந்தார். எ - று.

இறை கூர்திரு தலைமையைச் செய்தலாகிய சிறப்புமாம். தன் சாரியை. (அ)

9. செறிகின்றஞானத்தனிநாயகச்செம்மனாம
மெறிகின்றவேலையமுதிற்செவியேகலோடு
மறிகின்றதுன்பிற்சயந்தன்மகிழ்வெய்திமுன்ன
ரறிகின்றிலன்போற்றொழுதின்னவறைதலுற்றான்.

இ - ள். செறி கின்ற தனி ஞான நாயகச் செம்மல் நாமம் - சர்வவியாபகராயிருக்கின்ற உயர்வொப்பில்லாத ஞானநாயகராகிய அறுமுகப்பெருமானது திருநாமமானது,—எறிகின்ற வேலை அமுதில் செவி ஏக லோடும் - (அலை) வீசுகின்ற (பாற்) கடலிலுண்டாகிய அமிர்தத்தைப்போலத் தனது காதுகளிற்பிரவேசித்தலும்,—துன்பில் மறிகின்ற சயந்தன் மகிழ்வு எய்தி - துக்கத்தில் மயங்கிக்கிடந்த சயந்தன் மகிழ்ச்சியடைந்து,—முன்னர் அறிகின்றிலன் போல் தொழுது இன்ன அறைதலுற்றான் - முன்பு (கந்தஸ்வாமிவந்து அனுக்கிரகிக்கப்பெற்றும்) அறியாதவன்போன்று (இரண்டுகைகளையுங்) குவித்து இவைகளைச் சொல்வானாயினான். எ – று. (கூ)

10. தாவம்பிணித்ததெனுங்குஞ்சித்தகுவராஞேர்
பாவந்தலைச்சூழ்வதுபோலெமைப்பாடுகாப்ப
மாவெம்படரிலிருந்தேங்கண்மருங்கினைய
நீவந்ததென்னையினிநிங்குநிகழ்த்துகென்றான்.

இ - ள். தாவம் பிணித்தது எனும் குஞ்சித் தகுவர் ஆனோர் - காட்டழலையேபந்தித்துவைத்ததென்று கண்டோர்சொல்லத்தக்க(சிவந்த)குடுமியையுடைய அசுரர்கள்,—பாவம் தலை சூழ்வது போல் எமை பாடு காப்ப - பாவமானது சுற்றியிருப்பதுபோல எங்களைப் பக்கத்திலிருந்து காவல்செய்ய,—வெம் மா படரில் இருந்த எங்கள் மருங்கின் ஐய நீவந்

தது என்னை - கொரேமானபெருந்துக்கத்தோடிருந்தவர்ளாகிய எங்களிடத்தில் சுவாமீ நீர் வந்தது என்ன,—இங்கு இனிது நிகழ்த்துக என்றான் - இவ்விடத்தில் இனிமையாகச்சொல்லியருளுக என்று (சயந்தன்) வினவினான். எ – று.

தலை உபசருக்கம். தாவம் என்புழித்தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. (க0)

வேறு.

11. முறையுணர்கேள்விவீரன்மொழிகுவான்முதல்வன்றந்த
வறுமுகவையன்றன்பினடுத்துளேனவன்றூதானேன்
விறல்கெழுநந்திபாலேன்வீரவாகென்பேர்நுங்கள்
சிறைவிடும்பொருட்டுச்சூர்முன்செப்புவான்வந்தேனென்றான்.

இ - ள். (அங்ஙனஞ்சயந்தன் வினவியபொழுது) முறை உணர் கேள்வி வீரன் மொழிகுவான் - நீதியை யுணர்ந்த (சாஸ்திரக்) கேள்வியையுடைய வீரவாகு தேவர் சொல்லுகின்றார்:—முதல்வன் தந்த அறுமுக ஐயன் தன்பின் அடுத்துளேன் - சிவபெருமான் தோற்றுவித்த அறுமுகப்பெருமானுக்குப் பின் பிறந்துளேன்,—அவன் தூதானேன் - அவருடைய தூதுவனுமாயினேன்,—விறல் கெழு நந்தி பாலேன் - வெற்றிபொருந்திய நந்திகணத்தவன்,—என்பேர் வீரவாகு - எனதுபெயர் வீரவாகு,—நுங்கள் சிறை விடும் பொருட்டு சூர் முன் செப்புவான் வந்தேன் என்றான் - உங்களுடைய சிறையை விடும்பொருட்டுச் சூரபன்மனுக்குமுன்னே கூறும்படி வந்தேன் என்று சொல்லினார். எ – று.

தன் சாரியை. தூதும் என்னும் எச்சவும்மை தொக்கது. (கக)

12. என்னலுமமரரோடுமிந்திரன்குமரன்கேளாச்
சென்னியினமிர்துள்ளூறல்செய்தவத்தயின்றமேலோ
ரன்னதற்பின்னர்நேமியமிர்தமும்பெற்றுண்டாங்கு
முன்னுறுமகிழ்ச்சிமேலுமுடிவிலாமகிழ்ச்சிவைத்தான்.

இ - ள். என்னலும் - என்று (இப்படிவீரவாகுதேவர்) சொல்லுதலும்,—அமரரோடும் இந்திரன் குமரன் கேளா - தேவர்களோடும் இந்திரன் மகனாகியசயந்தன் கேட்டு,—சென்னியின் உள் ஊறல் அமிர்து - சிரசினுள்ளே யூறுகின்ற அமிர்தத்தை,—செய்தவத்து அயின்ற மேலோர்-செய்கின்ற தவத்தினாலே பருகிய பெரியோர்கள்,—அன்னதன் பின்னர் - அதன்பின்பு,—நேமி அமிர்தமும் பெற்று உண்டாங்கு - (திருப்பாற்) கடலில் (உண்டாகிய) அமிர்தத்தையும் பெற்று உண்டாற்போல,—முன்னுறு மகிழ்ச்சி மேலும் முடிவிலா மகிழ்ச்சி வைத்தான் - (கந்தஸ்வாமிவந்து அனுக்கிரகஞ்செய்ததனால்) முன்னுண்டான ஆனந்தத்தினும் பார்க்க பின்னும் அளவிறந்த ஆனந்தங்கொண்டான்.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (கஉ)

13. அந்தரமுதல்வன்மைந்தனறைகுவானையதுன்பூர்
புந்தியேங்குறைவினாதற்பொருட்டினாற்போந்தாயற்றா
லிந்தவன்சிறையுநீங்கிற்றிடரெலாமகன்றியாங்க
ளுய்ந்தனம்பவங்கடீருமுதியம்படைத்துமென்றான்.

இ - ள். அந்தர முதல்வன் மைந்தன் அறைகுவான் - சுவர்க்காதிபனாகிய இந்திரகுமாரனான சயந்தன் சொல்லுகின்றான்:—ஐய - ஐயனே,—துன்பு ஊர் புந்தியேம் குறைவினாதற் பொருட்டினால் போந்தாய் - துக்கம்மிகுகின்ற மனமுள்ள எங்களுடைய குறைகளை வினாவும் பொருட்டு வந்திருக்கின்றீர்,—அற்றால் - ஆகையால்,—இந்த வன்

சிறையும் நீங்கிற்று - இந்தக்கொடியசிறையும் நீங்கியது,—இடர் எலாம் அகன்று யாங்கள் உய்ந்தனம் - துன்பமெல்லாம் நீங்கி நாங்கள் உய்ந்தேம்,—பவங்கள் தீரும் ஊதியம் படைத்தும் என்றான் - பாவம் நீங்குவதாகிய இலாபத்தையும் பெற்றேம் என்றான்.

உம்மை எதிரதுதழீஇயவெச்சம். (கங)

14. பூண்டகுதடந்தோள்வீரன்புகலுவான்சூர்மேலொற்று
வீண்டெனைவிடுத்தவேற்கையெம்பிரான்வலிதேநும்மை
யாண்டிடுகின்றான்முன்னராக்கமும்பெறுதிர்பின்னும்
வேண்டியதெய்துகின்றீரென்றனன்மேலுஞ்சொல்வான்.

இ - ள். பூண் தகு தடம் தோள் வீரன் புகலுவான் - (அங்ஙனஞ் சயந்தன் கூறுதலும்) ஆபரணங்களையணிந்த தகுதியாகிய பருத்தபுயங்களையுடைய வீரவாகுதேவர் சொல்லுகின்றார்:—ஈண்டு சூர் மேல் ஒற்று எனை விடுத்த வேல் கை எம்பிரான் வலிதே நும்மை ஆண்டிடுகின்றான் - இம்மகேந்திரத்திலுள்ள சூரபன்மனிடத்தில் தூதாக என்னையனுப்பிய வேற்படையைத்தரித்த திருக்கரத்தினையுடைய எமது பெருமான் வலியவந்து உங்களை யடிமைக்கொள்ளுகின்றார் (ஆதலால்),—முன்னர் ஆக்கமும் பெறுதிர் - பழைய செல்வத்தையும் பெறுவீர்கள்,—(இதுவன்றி) பின்னும் வேண்டியது எய்துகின்றீர் - பின்பும் வேண்டியவற்றையும் அடைகின்றீர்,—என்றனன் மேலும் சொல்வான் - என்று கூறிப் பின்னுஞ்சொல்லுகின்றார். எ - று.

உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். (கச)

15. உலமெலாங்கடந்ததோளீருன்னுதிருன்னியாங்கு
நலமெலாம்வழிபட்டோர்க்குநல்கியகுமரன்றன்னாற்
றலமெலாம்படைத்ததொல்லைச்சதுர்முகன்முதலாம்வானோர்
குலமெலாமுய்ந்ததென்றாலுமக்கொருகுறையுண்டாமோ.

இ - ள். உலம் எலாம் கடந்த தோளீர் உன்னுதிர் - திரண்டகற்களையெல்லாம் வென்ற புயங்களையுடையவர்களே நினையுங்கள்,—வழிபட்டோர்க்கு உன்னியாங்கு நலம் எலாம் நல்கிய - தம்மை வழிபாடுசெய்த அடியார்களுக்குச் சிந்தித்தபடி எல்லாநன்மைகளையும் அளித்தருளிய,—குமரன் தன்னால் - குமாரக்கடவுளால்,—தலம் எலாம் படைத்த தொல்லை சதுர்முகன் முதலாம் வானோர் குலம் எலாம் உய்ந்தது என்றால் - உலகமெல்லாவற்றையும் படைத்த பழையபிரமன் முதலிய தேவர்களது குலம் முழுதும் பிழைத்தது என்றால்,—உமக்கு ஒருகுறை உண்டாமோ - (அவரைத்தியானிக்கின்ற) உங்களுக்கு ஒருகுறைவுவருமோ (வராது.) எ - று.

தன் சாரியை. ஒகாரம் எதிர்மறை. நலம் இம்மையினும் மறுமையினும்பெறப்படுஞ் சுகங்கள். (கரு)

16. தேவர்கடேவன்வேண்டச்சிறைவிடுத்தயனைக்காத்த
மூவிருமுகத்துவள்ளன்முழுதருள்செய்தானும்பாற்
பாவமும்பழியுந்தீங்கும்பையுளும்பிறவுமெல்லாம்
போவதுபொருளோதோற்றப்புணரியும்பிழைத்தீரன்றே.

இ - ள். தேவர்கள் தேவன் வேண்ட அயனை சிறைவிடுத்து காத்த வள்ளல் நும்பால் முழுது அருள் செய்தான் - தேவர்களுக்குத் தேவராகிய சிவபெருமான் வேண்டிக்கொண்டமையால் பிரமதேவனைச் சிறையினின்றும் நீக்கிக் காத்தருளிய அறுமுகப்பெருமான் (தாமாகவேவந்து) உங்களிடத்தில் பூரண கிருபைசெய்தார்,—பாவமும் பழியும்

தீங்கும் பையுளும் பிறவும் எல்லாம் போவது பொருளோ - (அதனால்) பாவங்களும் பழிகளுந் தீமைகளும் துன்பங்களும் மற்றையவைகளும் ஆகிய எல்லாம் நீங்குவது ஒருபெரியகாரியமோ (அன்று),—தோற்றம் புணரியும் பிழைத்தீர் - பிறவிச்சாகரத்தையுங் கடந்தீர்கள். எ — று.

அன்று, எ அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை பிறவும் புணரியும் என்பவற்றில் இறந்ததுதழீஇயவெச்சம்; ஏனையவற்றில் எண்.

பெருந்தேவரென்று மதிக்கப்படும் பிரமவிஷ்ணுமுதலிய தேவர்களுக்கெல்லாம் முதற்றேவர் சிவபெருமானேயென்பார் "தேவர்கடேவன்" என்றார். தம்மை விசுவசித்து ஒழுகும் மெய்யன்பர்கள் கேட்டவரங்களையெல்லாந் தடையின்றிக் கொடுத்தருள்பவர் ஆதலின் "வள்ளல்" என்றார். (கசு)

17. சீர்செய்தகமலத்தோனைச்சிறைசெய்துவிசும்பினோடும்
பார்செய்தவுயிர்கள்செய்தபரஞ்சுடர்நும்மையெல்லாஞ்
சூர்செய்தசிறையினீக்கத்தொடர்ந்திவணுற்றானென்று
னீர்செய்ததவத்தையாரேசெய்தனர்நெடிதுகாலம்.

இ - ள். சீர் செய்த கமலத்தோனை சிறைசெய்து - சிறப்புப்பொருந்திய பதுமாசனனாகிய பிரமதேவனைச் சிறையில்வைத்து,—விசும்பினோடும் பார் செய்த உயிர்கள் செய்த பரம் சுடர் - ஆகாயத்தினும் பூமியினும் இருக்கின்ற ஆன்மவருக்கங்களைப் படைத்த பரஞ்சோதிஸ்வரூபராகிய அறுமுகப்பெருமான்,—நும்மை எல்லாம் சூர் செய்த சிறையில் நீக்க தொடர்ந்து இவண் உற்றான் என்றால் - உங்களையெல்லாஞ் சூரபன்மன் வைத்த சிறையினின்றும் நீக்குதற்குத் தொடங்து இவ்விடத்துவந்தருளுவாராயின்,—நீர் செய்த தவத்தை யார் நெடிதுகாலம் செய்தனர் - நீர்செய்ததவத்தை யார் நெடுங்காலஞ் செய்தவர்கள் (ஒருவருமிலர்.) எ — று.

ஏகாரம் அசை. (கஎ)

18. சங்கையில்பவங்களாற்றுந்தானவர்செறிந்தமூதா
ரிங்கிதினறிஞர்செல்லாரெம்பிரானருளினல்யா
னங்கணம்படர்வோரென்னவகமெலிந்துற்றேனீண்டே
யுங்களையெதிர்தலாலேயுலப்பிலாவுவகைபூத்தேன்.

இ - ள். சங்கை இல் பவங்கள் ஆற்றும் தானவர் செறிந்த இது மூதாரின் அறிஞர் செல்லார் - அளவில்லாத பாவங்களைச் செய்கின்ற அசுரர்கள் நெருங்கியிருக்கப்பெற்ற பழமையாகிய இந்த நகரத்தில் அறிவுடையவர்கள் வரார்கள்,—யான் எம்பிரான் அருளினல் அங்கணம் படர்வோர் என்ன அகம் மெலிந்து உற்றேன் - நான் எமது பெருமானாகிய கந்தஸ்வாமியினது திருவருளினல் சேற்றுநிலத்தில் நடப்பவர்களைப்போல மனம் வருந்திவந்தேன்,—ஈண்டு உங்களை எதிர்தலாலே உலப்பிலா உவகை பூத்தேன் - இவ்விடத்திலே (புண்ணியசீலர்களாகிய) உங்களைக் கண்டமையினல் கெடாதமகிழ்ச்சியடைந்தேன். எ — று.

இங்கு அசை. ஏகாரம் முன்னையது இசைநிறை; பின்னையது தேற்றம். மேலும் மேலும் அதிகரித்தலால் "உலப்பிலாவுவகை" என்றார். (கஅ)

19. என்றலுமகிழ்ச்சியெய்தியிந்திரன்மதலையாங்கள்
வன்றளைப்படுமுன்போனார்மற்றெமைப்பயந்தோரன்னோ
ரன்றுதொட்டின்றுகாறுமாற்றியசெயலுமற்று
லொன்றியபயனும்யாவுமுரைமதிபெரியோயென்றான்.

இ - ள். என்றலும் - என்று (இப்படிவீரவாகுதேவர்) சொல்ல,—இந்திரன் மதலை மகிழ்ச்சி எய்தி - இந்திரனது புதல்வனுகிய சயந்தன் மகிழ்ச்சியடைந்து (வீரவாகுதேவரைப்பார்த்து),—பெரியோய் - (அறிவினுற்சிறந்த) பெரியவரே,—யாங்கள் வன்தளை படுமுன் எமை பயந்தோர் போனுர் - நாங்கள் இக்கொடிய சிறையிலகப்படுவதற்கு முன்னே எம்மைப்பெற்ற தந்தைதாயர்கள் போனுர்கள்;—அன்னோர் அன்று தொட்டு இன்றுகாறும் ஆற்றிய செயலும் - அவர்கள் அந்நாட்டொடங்கி யிந்நாள்வரையுஞ் செய்த செய்கையும்,—அற்ருல் ஒன்றிய பயனும் யாவும் உரை மதி என்ருன் - அதனுலடைந்த பிரயோசனமும் (ஆகிய) எல்லாவற்றையும் சொல்லவேண்டும் என்று கேட்டான். எ—று

மற்று அசை. மதி முன்னிலையசைச்சொல். உம்மை யாவும் என்பதில் முற்றும் ஏனையவற்றில் எண்ணுமாம். (கக)

20. வீரனங்கதனைக்கேளாவிண்ணவர்கோமான்றென்னு
ளாரணங்குடனேகாழியடைந்ததேயெழுவாயாகச்
சீரலைவாயிலந்நாட்சென்றிடுகாறுமுள்ள
காரியநிகழ்ச்சியெல்லாங்கடிதினிற்கழறினனே.

இ - ள். அதனை வீரன் கேளா - (சயந்தன்கூறிய) அவ்வாசகத்தை வீரவாகுதேவர் கேட்டு,—விண்ணவர் கோமான் தொன்னுள் ஆரணங்குடனே காழி அடைந்ததே எழுவாயாக சீரலைவாயில் அ நாள் சென்றிடு காறும் - தேவர்களுக்கு அரசனுகிய இந்திரன் முன்னுளில் இந்திராணியுடன் சீர்காழியிற்சென்றதுமுதல் திருச்செந்தூரிலே அந்நாளில் வந்ததுவரைக்கும்,—உள்ளகாரியநிகழ்ச்சி எல்லாம் கடிதினில் கழறினன் - உள்ளகாரியசம்பவங்கள் எல்லாவற்றையும் விரைவாகச் சொன்னுர். எ — று.

அங்கும் ஏகாரங்களும் அசை. (உ0)

21. மேதகுதடந்தோள்வீரன்விண்ணவர்கோமான்செய்கை
யோதலுஞ்சயந்தன்கேளாவுரைசெய்வானன்னைதன்னைத்
தாதையையடிகடன்னைச்சண்முகத்தனிவேற்செங்கை
யாதியையெதிர்ந்தாலொத்தேனையநின்மொழிகேட்டென்ருன்.

இ - ள். மேதகு தடம் தோள் வீரன் விண்ணவர் கோமான் செய்கை ஓதலும் - பெருமைபொருந்திய விசாலித்த புயங்களையுடைய வீரவாகுதேவர் தேவர்களுக்குத் தலைவனுகிய இந்திரன்செய்த காரியம் முழுவதுஞ் சொல்ல,—சயந்தன் கேளா உரை செய்வான் - சயந்தன்கேட்டுச் சொல்லுகின்ருன்,—ஐய - பெரியவரே,—நின் வாய் மொழி கேட்டு - தேவரீருடைய வாயினின்றும் வந்த வார்த்தையைக் கேட்டு,—அன்னை தன்னை - என்மாதாவாகிய இந்திராணியையும்,—தாதையை - என்பிதாவாகிய இந்திரனையும்,—அடிகள் தன்னை - குருவாகிய வியாழனையும்,—தனிவேல் செம் கை சண்முக ஆதியை - ஒப்பில்லாத வேற்படையைத் தரித்த சிவந்த திருக்கரத்தையுடைய அறுமுகப்பெருமானையும்,—எதிர்ந்தால் ஒத்தேன் என்ருன் - எதிர்முகமாகத் தரிசனஞ்செதாற்போன்றேன் என்று கூறினன். எ — று.

தன் இரண்டும் சாரியை. எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன.

வீரவாகுதேவர் பிதாமாதாவினது செயன்முழுதையுங் கூறக்கேட்ட சயந்தன் துக்கமொழிந்து பெருமகிழ்ச்சியடைந்தான் ஆகலின் "அன்னை *** ஆதியை எதிர்ந்தாலொத்தேன்" என்று விதந்து கூறினன். (உக)

22. இறைதருமமரர்தம்மோடிந்திரன்புதல்வன்றன்னை
யறிவரிலறிவன்கண்ணுற்றறுமுகம்படைத்தவண்ணல்
மறையிடைவதிந்தநுங்கள்வன்சிறைமாற்றும்வைகல்
சிறிதிவணிருத்திரென்றுபின்னருஞ்செப்புகின்றான்.

இ - ள். இறைதரும் அமரர் தம்மோடு இந்திரன் புதல்வன் தன்னை அறிவரில் அறிவன் கண்ணுற்று - முதன்மைபொருந்திய தேவர்களையும் இந்திரகுமாரனாகிய சயந்தனையும் அறிவுடையாருள் மேம்பட்ட அறிவுடையாராகிய வீரவாகுதேவர் பார்த்து,—அறுமுகம் படைத்த அண்ணல் - ஆறுதிருமுகங்களைப்பெற்ற பெருமையிற்சிறந்தவராகிய கந்தஸ்வாமி,—மறை இடை வதிந்த நுங்கள் வன்சிறை மாற்றும் வைகல் சிறிது - சிறைக்களத்திலிருந்த உங்களது கொடிய சிறையை மாற்றுதற்குரிய காலஞ் சமீபித்துவிட்டது,—இவண் இருத்திர் என்று - அதுவரை இங்கே இருங்கள் என்று கூறி,—பின்னரும் செப்புகின்றான் - பின்புஞ்சொல்லுகின்றார். எ — று.

தம் தன் சாரியைகள். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (உ௨)

23. தன்னிகரின்றிமேலாய்த்தற்பரவொளியாயாரு
முன்னரும்பரமாய்நின்றவொருவனேமுகங்களாறும்
பன்னிருபுயமுங்கொண்டுபாலகன்போன்றுகந்த
னென்னுமோர்பெயருமெய்தியாவருங்காணவந்தான்.

இ - ள். தன் நிகரின்றி மேலாய் - தமக்கொருவரும் உயர்வொப்பில்லாத மேலோராய்,—தற்பர ஒளியாய் - ஆன்மாக்கள் (சுட்டியறிதற்கு எட்டாத) பரஞ்சோதியாய்,—யாரும் முன்ன அரும் பரமாய் நின்ற ஒருவனே - எவர்களும் நினைத்தற்கரிய பரம்பொருளாக விருக்கின்ற சிவபெருமானே,—அறு முகங்களும் பன்னிரு புயமும் கொண்டு - ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருப்புயங்களுங் கொண்டு,—பாலகன் போன்று - குழந்தையைப் போல,—கந்தன் என்னும் ஓர் பெயரும் எய்தி - கந்தன் என்னுமோர் திருநாமத்தையும்பெற்று,—யாவரும் காண வந்தான் - எல்லாருங் காணும்படி எழுந்தருளினார். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை யாரும் யாவரும் என்பனவற்றில் முற்றும், பெயரும் என்பதில் இறந்ததுதழீஇய வெச்சமும், ஏனையவற்றில் எண்ணுமாம். (உ௩)

24. பங்கயமுகங்களாறும்பன்னிருபுயமுங்கொண்டே
யெங்கடம்பெருமான்போந்தவேதுமற்றென்னையென்னிற்
செங்கண்மாலுந்திபூத்தோன்சிறுமையுமகவான்றுன்பு
முங்கடஞ்சிறையுநீக்கியுலகெலாமளிப்பக்கண்டாய்.

இ - ள். எங்கள்தம் பெருமான் பங்கயம் முகங்கள் ஆறும் பன்னிரு புயமுங் கொண்டு போந்த எது என்னை என்னில் - எங்களுக்குத்தலைவராகிய சிவபெருமான் செந்தாமரைமலர்போன்ற ஆறுதிருவதனங்களையும் பன்னிரண்டு திருப்புயங்களையும் கொண்டு (சிறுவர்போல) வந்தருளிய காரணம் என்ன என்றால்,—செம் கண் மால் உந்தி பூத்தோன் சிறுமையும் - சிவந்த கண்களையுடைய திருமாலின் நாபிக்கமலத்திற்றோன்றிய பிரமனது குறைவையும்,—மகவான் துன்பும் - இந்திரனது துன்பத்தையும்,—உங்கள் தம் சிறையும் நீக்கி - உங்களது சிறையையும் ஒழித்து,—உலகு எலாம் அளிப்ப - உலகத்திலுள்ள உயிர்களெல்லாவற்றையும் இரட்சிக்கும்பொருட்டேயாம். எ — று.

ஏ, மற்று அசைகள். கண்டாய் முன்னிலையசை. தம் இரண்டும் சாரியைகள். உம்மைகள் எண். மாலினது சிறுமையும் - உந்திபூத்தோனது சிறுமையும் எனப்பொருள்கூறுவாருமுளர். உலகு ஆகுபெயர். அளிப்பக்கண்டாய் என்பதற்கு அளிக்கும்பொருட்டு (என்று) அறி. எனப்பொருள் கூறினும் அமையும். (உச)

25. சிறுவிதிவேள்விநண்ணித்தீயவிநுகர்ந்தபாவ
முறைதனின்வீரன்செற்றுமுற்றவுமுடிந்ததில்லை
குறைசிலவிருந்தவாற்றாற்கூடியதுமக்கித்துன்ப
மறுமுகப்பெருமானன்றியாரிதுநீக்கற்பாலார்.

இ - ள். சிறு விதி வேள்வி நண்ணி - தக்கன் (செய்த) யாகத்திற் சென்று,—தீ அவி நுகர்ந்த பாவம்-அக்கினிசம்பந்தமான அவிப்பாகத்தையுண்டதனால் வந்தபாதகம்,—முறைதனின் வீரன் செற்றும் முற்றவும் முடிந்த தில்லை - முறைப்படி வீரபத்திரக்கடவுள் தண்டிந்தும் (அப்பாதகம்) முழுவதும் முடியவில்லை,—சில குறை இருந்தவாற்றால் உமக்கு இ துன்பம் கூடியது - (அப்பாதகத்திற்) சிலசேடம் இருந்தபடியால் உங்களுக்கு இந்தப்பெருந்துக்கம் வந்துசம்பவித்தது,—அறுமுகப் பெருமான் அன்றி யார் இது நீக்கற்பாலார். அறுமுகப்பெருமானல்லாமல் யார் இதனைநீக்கத்தக்கவர்கள்(ஒருவருமில்லை.)

தன் சாரியை. உம்மை செற்றும் என்பதில் உயர்வுசிறப்பும் முற்றவும் என்பதில் முற்றுமாம். தீயவி – இரட்டுறமொழிதலென்னும் உத்தியால் கொடிய அவியெனப்பொருள் கூறலுமொன்று. அதுவருமாறு:-சிவபெருமானே யாகாதிபதி, யாகரட்சகர், அக்கினிக்கு முதல்வர் என்று வேதங்கள் கூறவும் அதனைவிலக்கி விஷ்ணுவையே பரம்பொருள் எனக்கொண்டு சிவபெருமானுக்குக் கொடுக்கும் முதற்பாகமாகிய அவியை அவ்விஷ்ணுவுக்கும் தேவர்களுக்கும் கொடுத்தது சிவத்துரோகமாதலின் "தீயவி" என இழித்துக்கூறினர். சிவத்துரோகஞ்செய்தவர்கள் இம்மையினும் மறுமையினுந் தண்டிக்கப்படுவார்களென்பது இதனால் உணர்ந்துகோடற்பாற்று. (உரு)

26. தாட்கொண்டகமலமன்னசண்முகத்தெந்தைவேலாற்
காட்கொண்டகிரியினோடுதாரகற்கடந்தபூச
றோட்கொண்டமதுகைசான்றசூர்முதல்களையமுன்ன
நாட்கொண்டதன்மையன்றோநறைகொண்டவலங்கற்றோளாய்.

இ - ள். நறை கொண்ட அலங்கல் தோளாய் - தேன்பொருந்திய மலர்மாலையையணிந்த புயங்களையுடைய சயந்தனே,—தாள் கொண்ட கமலம் அன்ன சண்முகத்து எந்தை - ஒருதாளோடு கூடிய செந்தாமரைமலர்போன்ற அழகிய ஆறு திருமுகங்களையுடைய எம்பெருமான்,—வேலால் காழ் கொண்ட கிரியினோடு தாரகன் கடந்த பூசல் - வேலாயுதத்தினால் வைரம்பொருந்திய கிரவுஞ்சமலையுடனே தாரகனை வெற்றிகொண்ட போரானது,—மதுகை சான்ற தோள் கொண்ட சூர் முதல் களைய - வலிமைமிகுந்த புயங்களையுடைய சூரனாகிய முதல்வனைக் கொல்லும்பொருட்டு,—முன்னம் நாள் கொண்ட தன்மை அன்றோ - முதலில்முகூர்த்தஞ்செய்துகொண்ட தன்மையல்லவா. எ-று.

ஓகாரம் துணிவுப்பொருள் உணர்த்தும் ஓரிடைச்சொல். (உசு)

27. காலுறக்குனித்துப்பூட்டிக்கார்முகத்துய்ப்பவோர்செங்
கோலினுக்குண்டியாற்றூர்குனிப்பிலாவவுணர்யாரு
மாலினுக்கரிதாமண்ணன்மாமகன்கரத்திற்கொண்ட
வேலினுக்கிலக்கதில்லைவிடுப்பதுமிகையதன்றே.

இ - ள். குணிப்பு இலா அவுணர் யாரும் - அளவில்லாத அசுரர்களனைவரும்,— காலுற குனித்து கார் முகத்து பூட்டி உய்ப்ப ஓர் செம் கோலினுக்கு உண்டி ஆற்றார் - இருகுதையும் பொருந்தவளைத்து வில்லிற்றொடுத்துவிடச் செப்பமாகிய ஓர் அம்பினுக்கு இரையாகப் போதமாட்டார்,—மாலினுக்கு அரிதாம் அண்ணல் மாமகன் கரத்திற் கொண்ட வேலினுக்கு இலக்கது இல்லை - விஷ்ணுமூர்த்தியறிதற்கரியராகிய சிவபெருமானது திருக்குமாரராகிய கந்தஸ்வாமி திருக்கரத்தில் வைத்திருக்கின்ற வேற்படைக்கு இலக்கு ஒருவருமில்லை,—அது விடுப்பது மிகை -(பின்) அதனை விடுவது குற்றமே யாகும். எ — று.

அன்று,'எ :அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை முற்று. (உ௭)

28. வாரிதியேழுமெண்ணில்வரைகளும்பிறவுங்கொண்ட
பாருடனுலகீரேழும்படைத்தபல்லண்டம்யாவு
மோரிறைமுன்னமட்டேயுண்டிடுமொருவன்செவ்வேல்
சூரனையவுணரோடுந்தொலைப்பதோர்விளையாட்டம்மா.

இ - ள். ஒருவன் செவ்வேல் - (பிறரொருவருந்தமக்கு) ஒப்பில்லாதவராகிய சுப்பிரமணியப்பெருமானுடைய செவ்விய வேலாயுதம்,—எழு வாரிதியும் எண்ணில் வரைகளும் பிறவும் கொண்ட பாருடன் - எழுகடலையும் அளவில்லாத மலைகளையும் மற்றுள்ளனவற்றையுங் கொண்டிருக்கின்ற பூவுலகத்துடன்,—ஈர் ஏழு உலகும் படைத்த பல் அண்டம் யாவும்,—பதினான்கு உலகங்களையும் பெற்றனவாகிய அனேக அண்டங்கள் எல்லாவற்றையும்,—ஓர் இறை முன்னம் அட்டே உண்டிடும் - ஒருகணப்பொழுதினில் அழித்து உண்ணும்,—சூரனை அவுணரோடும் தொலைப்பது ஓர் விளையாட்டு - (அத்தனைமகிமைபொருந்திய வேலாயுதம்) சூரபன்மனை அசுரருடன் கொல்வது ஒரு விளையாட்டாகும். எ — று.

அம்மா அசை. ஏகாரம் தேற்றம். உம்மை பிறவும் என்பதில் இறந்ததுதழீஇய வெச்சமும், ஏனையவற்றில் முற்றும் எண்ணுமாம்.

பகைவருடைய உதிரந்தோய்தலிற் சிவந்தவேலாயுதம் எனப்பொருள்கூறினும் அமையும். (உ௮)

29. சுறமறியளக்கர்வைகுஞ்சூரபன்மாவின்மார்பி
னெறிசுடரெஃகம்வீசியிருபிளவாக்கினல்லாற்
சிறையுளீர்மீள்கிலாமைதேற்றியும்பொருநர்செய்யு
மறநெறிதூக்கியொற்றாவடியனைவிடுத்தானையன்.

இ - ள். சுறமறி அளக்கர் வைகும் சூரபன்மாவின் மார்பின் - மகரமீன்கள் மறிகின்ற கடலிலே யிருக்கின்ற சூரபன்மாவினது மார்பில்,—சுடர் எறி எஃகம் வீசி இருபிளவு ஆக்கின் அல்லால் - ஒளிவீசுகின்ற வேலாயுதத்தை விட்டு இரண்டாகப் பிளந்தாலொழிய,—சிறையுளீர் மீள்கிலாமை - சிறையிலிருப்பவர்களாகிய நீங்கள் (அச்சிறையினின்றும்) மீண்டு வாராமையை,—ஐயன் தேற்றியும் - கந்தஸ்வாமியறிந்தும்,—பொருநர் செய்யும் அறநெறி தூக்கி அடியனை ஒற்றா விடுத்தான் - வீரர்கள்செய்கின்ற தருமமுறையை யாராய்ந்து அடியேனைத் தூதாக அனுப்பியருளினர். எ — று.

தேற்றி "தேற்றாவொழுக்கம்" என்புழிப்போலத் தன்வினை. உம்மை உயர்வுசிறப்பு.

30. ஆளுடைமுதல்வன்மாற்றமவுணருக்கிறைவன்முன்போய்க்
கேளிதென்றுரைப்பனற்றேகிளத்தினுங்கடனுக்கொள்ளான்
மீளுவன்புகுந்ததெல்லாம்விளம்புவன்வினவியெங்கோ
னாளைவந்திவரையெல்லாநாமறமுடிப்பன்காண்டி.

இ - ள். ஆளுடை முதல்வன் மாற்றம் அவுணருக்கு இறைவன் முன் போய் இது கேளென்று உரைப்பன் - என்னை யடிமையாகவுடைய கந்தஸ்வாமி கூறிய வசனத்தை அசுரர்க்கரசனாகிய சூரபன்மனுக்கு எதிரேபோய் (சூரபன்மனே நீ)இதனைக்கேளென்று சொல்லுவேன்,—அற்றே கிளத்தினும் - அவ்வாறு சொன்னாலும்,—கடனா கொள்ளான்- (அதனை நீதியென்று) ஒப்புக்கொள்ளான்,—மீளுவன் புகுந்தது எல்லாம் விளம்புவன் - திரும்பிச்சென்று (இவ்விடத்தில்) நடந்தகாரியங்களெல்லாவற்றையுஞ் சொல்லுவேன்,— எம் கோன் வினவி நாளை வந்து இவரை எல்லாம் நாம் அற முடிப்பன் - எம்பெருமான் அதனைக்கேட்டு நாளைத்தினம் வந்து இவ்வசுரர்களை யெல்லாம் பெயருமில்லாமல் அழித்துவிடுவார். எ — று.

காண்டி முன்னிலையசை. ஏகாரம் தேற்றம். நாமம் என்பது நாம் என இடைக்குறைந்து நின்றது. நாம் அற என்பதற்கு (உங்கள்) அச்சம் நீங்க என்றலுமொன்று. ()

31. நீண்டவன்றனக்குமெட்டாநெடியதோர்குமரன்செவ்வே
லாண்டிருந்தேயுமுய்த்தேயவுணர்யாவரையுங்கொல்லும்
பாண்டிலந்தேர்மேற்கொண்டுபடைபுறங்காத்துச்சூழ
வீண்டுவந்திடுதலன்றேற்கிதுவுமோராடலன்றே.

இ - ள். நீண்டவன் தனக்கும் எட்டா நெடியது ஓர் குமரன் - விஷ்ணுமூர்த்தியினாலும் அறியப்படாத சிறப்பினையுடைய குமாரக்கடவுள்,—செவ்வேல் ஆண்டு இருந்தேயும் உய்த்தே அவுணர் யாவரையும் கொல்லும் - செவ்விய (தமது) வேலாயுதத்தை அவ்விடத்திலிருந்துவிட்டே அசுரரெல்லாரையுங்கொல்லுவார்,—பாண்டிலம் தேர்மேல் கொண்டு - உருளைபூண்ட தேரின்மேலேறி,—படை புறம் காத்து சூழ ஈண்டு வந்திடுதல் - சேனைகள் பக்கத்திற்காத்துச் சூழ்ந்துவர இவ்விடத்தில் வந்து சங்கரித்தலாகிய,— இதுவும் - இச்செயலும்,—அன்றற்கு ஓர் ஆடல் - அவருக்கு ஒருதிருவிளையாட்டாகும்.

ஓர், அன்று அசை. தன், அ சாரியைகள். ஏகாரம் இருந்தே என்பதில் தேற்றமும் ஏனையவற்றில் அசையுமாம். உம்மை தனக்கும் இதுவும் என்பனவற்றில் உயர்வுசிறப்பும் யாவரையும் என்பதில் முற்றும் இருந்தேயும் என்பதில் இறந்ததுதழீஇயவெச்சமும் உயர்வுசிறப்புமாம். (௩௧)

32. ஈரிரண்டிருமூன்றாகுமிரும்பகலிடையேயெங்கோ
னாரிருஞ்சமாமூட்டியவுணர்தம்மனிகந்தன்னைச்
சூரொடுமுடித்துநும்மைத்துயர்ச்சிறைத்தொடர்ச்சிநீக்கிப்
பேரிருஞ்சிறப்புநல்கும்பிறவொன்றுநினையன்மன்னோ.

இ - ள். ஈரிரண்டு இருமூன்றாகும் இரும் பகலிடையே - பத்துத்தினங்களுக்குள்ளேயே,—எம் கோன் - எம்பெருமான்,—ஆரிரும் சமரம் மூட்டி - பொருந்திய பெரிய போரையுண்டாக்கி,—அவுணர் தம் அனிகம் தன்னை சூரொடு முடித்து - அசுரசேனைகளைச் சூரபன்மனுடனே கொன்று,—நும்மை துயர் சிறை தொடர்ச்சி நீக்கி - உங்களை வருத்துகின்ற சிறையின்தொடர்பை நீக்கி,—பேரிரும் சிறப்பு நல்கும் - மிகப்பெருமையாகிய சிறப்புக்களைத் தந்தருளுவர்,—பிற ஒன்று நினையல் - (நீங்கள்) வேறொன்று எண்ணவேண்டாம் (என்று வீரவாகுதேவர் கூறியருளினார்.) எ — று.

மன், ஓ அசை. தம் தன் சாரியைகள். ஏகாரம் தேற்றம். தொடர்ச்சி - சம்பந்தம். சிறப்பு - அரசுரிமைமுதலியன. (௩௨)

33. என்றிவைபலவும்வீரனிமையவர்குழாத்திறனோடு
குன்றறிபகைஞன்மைந்தனுணர்தரக்கூறலோடு
நன்றெனவுவகைபூத்துநாமவேனம்பியாற்ற
வென்றிபெற்றிடுகவென்றுவீற்றுவீற்றாசிசொற்றார்.

இ - ள். என்று இவை பலவும் - என்று (கந்தஸ்வாமியினது மகிமையைக் குறித்து) மேற்போந்த வசனங்கள் பலவற்றையும்,—இமையவர் குழாத்தினோடும் குன்று எறி பகைஞன் மைந்தன் உணர்தர வீரன் கூறலோடும்-தேவகூட்டத்தினுடனே மலைகளின் இறகுகளைவெட்டிய இந்திரகுமாரனாகிய சயந்தன் அறியும்படி வீரவாகுதேவர் சொல்லுதலும்,—நன்று என உவகை பூத்து - (அவர்கள்) நல்லதென்று மகிழ்ச்சிமிக்கு,— நாமம் வேல் நம்பி ஆற்ற வென்றி பெற்றிடுக என்று வீற்று வீற்று ஆசி சொற்றார் - (பகைவர்களுக்கு) அச்சத்தை விளைவிக்கின்ற வேற்படையைத் தரித்த கந்தஸ்வாமி மிகவும் வெற்றியைப்பெறுக என்று தனித்தனி ஆசீர்வதித்தார்கள். எ — று.

உம்மை முற்று. நாமவேல் நம்பி ஆற்ற வென்றி பெற்றிடுக என்பதற்கு நம்பியே நீர் வெற்றிபெறுகவெனக் கூறுவாருமுளர். நாமம் - அச்சம், புகழ். (௩௩)

34. எண்டகுமாசிகூறியிந்திரன்றனதுமைந்த
னண்டரொடங்கைகூப்பியெளியரேந்தன்மையெல்லாங்
கண்டனைதாதைகேட்பக்கழறுதியிவணீயுள்ளங்
கொண்டதுமுடிக்கப்போதிகுரைகழற்குமாரவென்றான்.

இ - ள். இந்திரன் தனது மைந்தன் அண்டரொடு எண் தகும் ஆசி கூறி - இந்திரன்மகனாகியசயந்தன் தேவர்களோடும் மதிக்கத்தக்க ஆசிமொழிகளைச் சொல்லி,— அம் கை கூப்பி - அழகிய கைகளைக்குவித்து வணங்கி,—குரை கழல் குமர-ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த வீரரே,—எளியரேம் தன்மை எல்லாம் கண்டனை - எளியேமாகிய எங்களது தன்மைகளெல்லாவற்றையும் கண்டீர்,—தாதை கேட்ப கழறுதி - (இவைகளையெல்லாம்) என் பிதாக்கேட்கும்படி சொல்வீர்,—இவண் நீ உள்ளம் கொண்டது முடிக்க போதி என்றான் - (இனி) இவ்விடத்தில் நீர் மனசில் நினைத்தகாரியத்தை முடிக்கப் போவீராக வென்று கூறினன். எ — று.

தன் சாரியை. குமரன் - பருவங்குறித்தபெயர். (௩௪)

35. வயந்திகழ்விடலையங்கண்மற்றவர்தம்மைநீங்கிக்
கயந்தருகாவலோர்தங்கருத்தின்மாலகற்றியேக
வியந்திரமன்னோர்தேறியிமையவர்குழாத்தினோடு
சயந்தனைச்சுற்றிமுன்போற்றடைமுறையோம்பலுற்றார்.

இ - ள். வயம் திகழ் விடலை அங்கண் அவர் தம்மை நீங்கி - வெற்றிவிளங்குகின்ற வீரவாகுதேவர் அவ்விடத்திலுள்ள அத்தேவர்களை விட்டு நீங்கி,—கயம் தரு காவலோர் தம் கருத்தின் மால் அகற்றி ஏக - கீழ்மைபொருந்திய காவலாளரது மனமயக்கத்தை நீக்கிச் செல்ல,—இயந்திரம் அன்னோர் தேறி - சூத்திரப்பாவைபோல அசைவற்றிருந்தவர்களாகிய அவுணர்கள் (மனந்) தெளிந்து,—இமையவர் குழாத்தினோடு சயந்தனை சுற்றி முன்போல் தடை முறை ஓம்பலுற்றார் - தேவர்கூட்டத்தோடு சயந்தனைச்சூழ்ந்து முன்போலக் காவலை முறையாகச் செய்தாகள். எ — று.

மற்று அசை. தம் இரண்டும் சாரியைகள். கயம் தரு - யானையையொத்த தகுந்த பலசாலிகளாகிய எனப் பொருள்கூறினும் அமையும். (௩௫)

வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௮௦.

# அவைபுகுபடலம்.



1. மடந்தையொடிரிந்திடும்வாசவன்மக
னடைந்திடுசிறைக்களமகன்றுவானெறி
நடந்தனனவுணர்கோனண்ணுகோனக
ரிடந்தருகிடங்கரையிகந்துபோயினான்.

இ - ள். மடந்தையொடு இரிந்திடும் வாசவன் மகன் அடைந்திடு சிறை களம் அகன்று - (வீரவாகுதேவர்) இந்திராணியோடு (சூரபன்மனுக்குப்பயந்து தேவுலகத்தை விட்டு) ஒளித்துப்போன இந்திரன் குமாரனாகிய சயந்தன் இருக்கின்ற சிறைச்சாலையை நீங்கி,—வான் நெறி நடந்தனன் - ஆகாயவழியாக நடந்து,—அவுணர் கோன் நண்ணு கோ நகர் இடந்தரு கிடங்கரை - சூரபன்மனிருக்கின்ற கோயிலைச்சூழ்ந்த விசாலமான அகழியை,—இகந்து போயினான் - கடந்து சென்றார். எ — று. (க)

2. அகழியைநீங்கினானயுதந்தன்னினு
மிகுதிகொணாற்படைவெள்ளந்தானைக
டகுதியின்முறைமுறைசாரச்சுற்றிய
முகிறவழ்நெடுமதின்முன்னரேகினான்.

இ - ள். அகழியை நீங்கினான் - அகழியைக்கடந்துபோன வீரவாகுதேவர்,—அயுதம் தன்னினும் மிகுதி கொள் நாற்படை வெள்ளம் தானைகள் - பதினாயிரக்கணக்கினும் பார்க்க மேம்பட்ட சதுரங்கசேனைகள்,—தகுதியின் முறை முறை சார சுற்றிய - தகுதியோடு முறைமுறையாகப்பொருந்தச் சூழ்ந்த,—முகில் தவழ் நெடு மதில் முன்னர் ஏகினான் - முகில்கள் சஞ்சரிக்கின்ற நெடிய மதிலுக்குமுன்னாகச் சென்றார்.

தன் சாரியை. உம்மை உயர்வுசிறப்பு. (உ)

3. கான்கொடிகங்கைநீர்கரப்பமாந்தியே
மீன்கதிருடுபதிவிழுங்கிவிட்டிடும்
வான்கெழுகடிமதில்வரைப்பின்முன்னரே
தான்கிளர்கோபுரங்கண்டுசாற்றுவான்.

இ - ள். கான் கொடி - (வீரவாகுதேவர்) காடு போல நெருங்கிய கொடிகள்,—கங்கை நீர் கரப்ப மாந்தி - கங்காஜலம்வற்றும்படி குடித்து,—மீன் கதிர் உடு பதி விழுங்கி விட்டிடும் வான் கெழு கடிமதில் வரைப்பின் முன்னரே - நக்ஷத்திரம் சூரியன் சந்திரன் என்னு மிவர்களைக் கீழ்ப்படுத்தி மேலோங்கிய பெருமைபொருந்திய சிறந்த மதிலிடத்துக்கு முன்னே,—கிளர் கோபுரம் கண்டு சாற்றுவான் - உயர்ந்துநிற்கின்ற கோபுரத்தை நோக்கிச் சொல்லுகின்றார். எ — று.

தானும் ஏகாரம் இரண்டும் அசை. (ங)

4. குரைகடலுண்டவன்கொண்டதண்டினால்
வருபுழைமீமிசைவாய்ப்பத்தாரகன்
பெருவரைகிமிர்ந்திடுபெற்றிபோலுமாற்
றிருநிலைபலவுடைச்சிகரிநின்றதே.

இ - ள். திரு நிலை பல உடை சிகரி நின்றது - அழகிய நிலைகள் பலவற்றையுடையகோபுரம் நின்றசிறப்பு,—குரை கடல் உண்டவன் கொண்ட தண்டினால் - (முன்னொருகாலத்தில்) ஒலிக்கின்றகடலை உண்டவராகிய அகத்தியமுனிவர் (கையில்) வைத்திருக்கின்ற தண்டத்தினால்,—வருபுழை மீமிசை வாய்ப்ப - (தாக்கப்பட்டு) உண்டானதுவாரத்தைத் தன்மீது பொருந்தக்கொண்டு,—தாரகன் பெருவரை நிமிர்ந்திடு பெற்றிபோலும் - தாரகாசுரனுக்குறையுளாகிய பெரிய கிரவுஞ்சமலை உயர்ந்து நிற்கின்ற தன்மையை ஒக்கும். எ — று.

ஆல், ஏ அசை. (௪)

5. தூணமதுறழ்புயச்சூரனென்பவன்
சேணுறுமண்டமேற்செல்லச்செய்ததோ
ரேணிகொலோவிதுவென்னநின்றதா
னீணிலைபலவுடனிமிர்ந்தகோபுரம்.

இ - ள். தூணமது உறழ் புயம் சூரன் என்பவன் - தூண்போன்ற (வலிய) புயங்களையுடைய சூரபன்மன்,—சேண் உறும் அண்டமேல் செல்ல செய்தது ஓர் ஏணிகொலோ இது என்ன - வானத்திற்பொருந்திய மற்றையண்டங்களுக்குச் செல்லும்பொருட்டுச் செய்த ஒரு ஏணிதானோ இது என்று சொல்லும்படி,—நீள் நிலை பலவுடன் நிமிர்ந்தகோபுரம் நின்றது - நீண்ட பல நிலைகளுடன் உயர்ந்த கோபுரம்நின்றது. எ - று.

ஆல், ஓ அசை. கொல் ஐயம். அது பகுதிப்பொருள்விகுதி. (ரு)

6. துங்கமொடிறைபுரிசூரன்கோயிலிற்
பொங்குசெம்மணிசெறிபொன்செய்கோபுர
மெங்கணுமுடியுநாளிவுளிவாய்ப்படு
மங்கிவிண்காறெழும்வடிவமன்னதே.

இ - ள். துங்கமொடு இறை புரி சூரன் கோயிலில் - மேன்மையோடும் அரசியற்றுகின்ற சூரபன்மனதுகோயிலில்,—பொங்கு செம்மணி செறி பொன்செய் கோபுரம் - விளங்காநின்ற மாணிக்கங்களைப்பதித்து இழைத்த பொன்னாலாகிய கோபுரமானது,—எங்கணும் முடியும் நாள் - எல்லாவுலகங்களுமழிகின்ற காலத்திலே,—இவுளி வாய்ப்படும் அங்கி விண்காறெழும் வடிவம் அன்னதே - வடவாமுகத்திற்றோன்றும் அக்கினியானது வானுலகம்வரைக்கும் எழுகின்ற வடிவத்தையொத்தது. எ - று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. (சு)

7. அண்டமங்கெவற்றினுமமர்ந்துநிற்புறும்
விண்டொடர்வரைகளும்மேருவானவும்
பண்டிதன்மிசையுறப்பதித்ததொக்குமாற்
கொண்டியல்சிகரியுட்கூடசாலைகள்.

இ - ள். சிகரியுள் கொண்டியல் கூடசாலைகள் - (இக்) கோபுரத்தினுள்ளே யமைத்துச் செய்யப்பட்ட கூடசாலைகள்,—அண்டம் எவற்றினும் அமர்ந்து நிற்புறும் விண்தொடர் வரைகளும் மேருவானவும் - (சூரபன்மனது அரசாட்சிக்குட்பட்ட)அண்டங்களெல்லாவற்றினும் பொருந்திநிற்கின்ற ஆகாயத்தையளாவிய மலைகளையும் மேருமலையையும் (பெயர்த்துக்கொண்டுவந்து),—பண்டு இதன் மிசை யுற பதித்தது ஒக்கும் - முன்னாளிலே இக்கோபுரத்தில் பொருந்தும்படி பதித்ததையொப்பாகும். எ — று.

அங்கு, ஆல் அசை. உம்மைகள் எண். (எ)

8. மெய்ச்சுடர்கெழுமியவியன்பொற்கோபுர
முச்சியிற்றொடுத்திடமுழுங்குகேதன
மச்சுதனுஞ்சிவனளவைதீர்முகத்
துச்சிதொறிருந்தராவொலித்தல்போலுமே.

இ - ள். மெய் சுடர் கெழுமிய வியன் பொன் கோபுர முச்சியில் தொடுத்திட முழங்கு கேதனம் - மெய்ம்மையாகிய வொளிபொருந்திய மாற்றுயர்ந்த பொன்னாலாகிய கோபுரத்தின் முகப்பிலே தொடுத்து அமைக்க (காற்றினலசைந்து) முழங்குகின்றகொடிகள்,—அச்சுதன் ஆம் சிவன் அளவை தீர் முகத்து உச்சிதொறு இருந்து அரா ஒலித்தல் போலும் - அழிவற்றவராகிய சிவபெருமானது அளவிறந்த திருமுகங்களினுச்சிதோறும் இருந்து சர்ப்பங்கள் இரைத்தலை யொப்பாகும். எ — று.

ஆல் அசை. (அ)

9. திசைபடுசிகரியிற்செறிந்தவான்கொடி
மிசைபடுமண்டமேல்விடாமலெற்றுவ
பசைபடுமதனுடைப்பணயகத்தினி
லிசைபடப்பலகடிப்பெறிதல்போலுமால்.

இ - ள். திசை படு சிகரியில் செறிந்த வான் கொடி - திக்கையளாவி நிமிர்ந்திருக்கின்ற கோபுரத்தில் பொருந்திய பெருங்கொடிகள்,—மிசை படும் அண்ட மேல் விடாமல் எற்றுவ - மேலாகிய அண்டத்தில் இடைவிடாமல் அடிப்பன (எதுபோலுமெனின்),—பசைபடும் அதனுடை பணயகத்தினில் - பசைபொருந்திய தோலினுற்செய்யப்பட்ட முரசப்பறையில்,—இசை பட பல கடிப்பு எறிதல் போலும் - ஓசையுண்டாகும்படி பல குறுந்தடிகளால் அடித்தலையொப்பாகும். எ — று.

பசை - மார்ச்சனை; மிருதுவுமாம். ஆல் அசை. (கூ)

10. விண்ணவர்தாமுறைவியன்பதத்தொடுந்
திண்ணிலையிடந்தொறுஞ்சிவணவைகின
ரண்ணலங்கோபுரமதனிற்கைவலோன்
பண்ணுறுமோவியப்பாவையென்னவே.

இ - ள். அண்ணல் அம் கோபுரம் அதனில் கைவலோன் பண்ணுறும் ஓவியப் பாவை என்ன - பெருமைபொருந்திய அழகமைந்த கோபுரத்தில் கைவல்லவர்களாகிய சித்திரகாரர் சித்திரித்த சித்திரப்பாவையைப்போல,—விண்ணவர் தாம் உறை வியன் பதத்தொடும் திண்ணிலை இடம் தொறும் சிவண வைகினர் - தேவர்கள் தாங்களிருக்கின்ற பதவிகளுடன் திண்ணிய அதனது நிலைகடோறும் செறிந்திருந்தார்கள். எ — று.

கோபுரமதனில் என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. அன் சாரியை. ஏகாரம் அசை. (க0)

11. என்பனபலபலவியம்பியீறிலாப்
பொன்புனைதோணியம்புரிசைச்சூழலின்
முன்புறுகோபுரவனப்புமுற்றவு
நன்பெருமகிழ்ச்சியானம்பிநோக்கினன்.

இ - ள். நம்பி - வீரவாகுதேவர்,—என்பன பல பல இயம்பி - என்பனவாகிய பற்பல (உபமானங்களைக்) கூறி,—ஈறு இலா பொன் புனை தோணி அம் புரிசை சூழலின் - அழிவற்ற பொன்னாலமைக்கப்பட்ட உறுப்புகள் பொருந்திய அழகிய மதிற்சுற்றின்,—

முன்பு உறு கோபுர வனப்பு முற்றவும் - முன்னாகநிற்கின்ற கோபுரத்தின் அழகுமுழுவதையும்,—நல் பெரு மகிழ்ச்சியால் நோக்கினன் - மிக்கமகிழ்ச்சியோடு பார்த்தார். எ - று.

உம்மை முற்று. தோணி - மதிலுறுப்பு. (௧௧)

12. புதவுறுகோபுரப்பொருவில்வாய்தலுண்
மதவலியுக்கிரன்மயூரனாதியோ
ரதிர்தருநாற்படையயுதஞ்சுற்றிடக்
கதமொடுகாப்பதுகாளைநோக்கினன்.

இ - ள். புதவு உறு கோபுரம் பொருவில் வாய்தலுள் - கதவுபொருந்திய கோபுரத்தின் ஒப்பற்ற வாய்தலிலே,—மதவலி உக்கிரன் மயூரன் ஆதியோர் - மிக்க வலிமையையுடைய உக்கிரன் மயூரன் முதலானவர்கள்,—அயுதம் அதிர்தரு நால் படை சுற்றிட - பதினாயிரக்கணக்கான முழங்குகின்ற சதுரங்கசேனைகள் சூழ,—கதமொடு காப்பது காளை நோக்கினன் - தைரியத்தோடு காவல்செய்வதை வீரவாகுதேவர் கண்டார். எ-று.

13. நோக்கியதிறலவனொச்சிதாவியே
யாக்கமொடமர்தருமவுணன்கோயிலு
ளூக்கமொடும்பரானோடிமுன்னுறு
மேக்குயர்சூளிகைமிசையிற்போயினன்.

இ - ள். நோக்கிய திறலவன் - (அக்கோபுரச்சிறப்பை) க்கண்டவராகிய வீரவாகுதேவர்,—நொச்சி தாவி - (அம்) மதிலைக்கடந்து,—ஆக்கமொடு அமர் தரும் அவுணன் கோயிலுள் - செல்வத்துடனேயிருக்கின்ற சூரபன்மனது அரண்மனைக்குள்,—ஊக்கமொடு உம்பரான் ஓடி - உற்சாகத்தோடு மேல்வழியாகச் சென்று,—முன் உறு மேக்குயர் சூளிகை மிசையிற் போயினன் - எதிரிலிருக்கின்ற மேலாகவுயர்ந்த சூளிகையின் மீது சென்றார். எ — று.

ஏகாரம் அசை. (௧௩)

வேறு.

14. சூளிகைமீமிசைதுன்னுபுசூரன்
மாளிகையுள்ளவளந்தனையெல்லா
மீளரிதாவிழியோடுளமேவ
வாளரிநேர்தருமாண்டகைகண்டான்.

இ - ள். ஆளரி நேர் தரும் ஆண்டகை - (வலிமையினால்) சிங்கத்தையொத்தவராகிய வீரவாகுதேவர்,—சூளிகை மீ மிசை துன்னுபு - சூளிகையின்மேலிருந்து,—சூரன் மாளிகை உள்ள வளம் தனை எல்லாம் - சூரபன்மனது மாளிகையிலுள்ள வளப்பங்கள் அனைத்தையும்,—மீள அரிதா விழியோடு உளம் மேவ கண்டான் - சென்றுதிரும்பாத கண்ணோடு மனம் அழுந்தப்பார்த்தார். எ — று.

தன் சாரியை. ஒடு உடனிகழ்ச்சி (௧௪)

15. கண்டதொரண்ணல்கடுந்திறல்வெஞ்சூர்
திண்டிறல்வாளரிசென்னிகொள்பீடத்
தெண்டருமாணையியற்றியசெம்பொன்
மண்டபம்வைகுறும்வண்மைதெரிந்தான்

இ - ள். கண்டது ஓர் அண்ணல் - (அங்ஙனம் மாளிகையின்சிறப்புமுதலியவற்றைப்) பார்த்தவராகிய வீரவாகுதேவர்,—கடும் திறல் வெம் சூர் - மிக்கதைரியமுடையனாகிய கொடிய சூரபன்மன்,—திண் திறல் வாளரி சென்னி கொள் பீடத்து - மிக்க வலிமைபொருந்திய சிங்கங்களின் தலைகளாற் சுமக்கப்பட்ட ஆசனத்தின்மீ (திருந்து),— எண் தரும் ஆணை இயற்றிய - (எவரும்) மதிக்கத்தக்க ஆஞ்ஞையைச் செலுத்தும்படி,— செம்பொன் மண்டபம் வைகும் வண்மை தெரிந்தான் - மாற்றுயர்ந்த பொன்னாற்செய்யப்பட்ட மண்டபமிருக்கின்ற சிறப்பைக் கண்டார். எ — று.

ஓர் அசை. இயற்றிய என்பதைப் பெயரெச்சமாகக்கொள்ளின் நடாத்தியவெனப் பொருள்கொள்க. வாளரி - சிங்கம். (கரு)

16. அருந்தவவேள்வியயர்ந்தரனீயும்
பெருந்திருமிக்கனபெற்றுலகெல்லாந்
திருந்தடிவந்தனைசெய்திடவெஞ்சூ
ரிருந்திடுகின்றவியற்கையிசைப்பாம்.

இ - ள். அரும் தவ வேள்வி அயர்ந்து - (செய்தற்)கரிய தவத்தோடுசம்பந்தமாகிய வீரயாகத்தைச்செய்து,—அரன் ஈயும் மிக்கன பெரும் திரு பெற்று - சிவபெருமான் கொடுத்தருளிய மேலாகிய பெருஞ்செல்வத்தைப்பெற்று,—உலகு எலாம் திருந்து அடி வந்தனை செய்திட - உலகம் முழுவதும் அழகிய தனது பாதங்களை வணங்க,—வெம் சூர் இருந்திடுகின்ற இயற்கை இசைப்பாம் - கொடிய சூரபன்மன் அரசிருக்கின்ற தன்மையைச் சொல்வேம். எ - று. (கசு)

17. ஐயிருநூறெனும்யோசனையான்றே
மெய்யொளிமாழையின்முற்றவுமாகித்
துய்யபன்மாமணிதுஞ்சிவில்வீசி
மையறுகாட்சிகொண்மண்டபமொன்றின்.

இ - ள். ஐயிரு நூறு எனும் யோசனை ஆன்றே - ஆயிரம்யோசனையகலமாய்,—முற்றவும் மொய் ஒளி மாழையின் ஆகி - முழுவதும் செறிந்த வொளிபொருந்திய பசும் பொன்னாற் செய்யப்பட்டு,—துய்ய பல் மாமணி துஞ்சி வில் வீசி - பரிசுத்தமாகிய உயர்ந்த இரத்தினவிதங்கள் அழுத்தப்பெற்று ஒளிவீசி,—மை அறு காட்சி கொள் மண்டபம் ஒன்றின் - களங்கமற்ற அழகமைந்த ஒருமண்டபத்தில். எ — று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. காட்சிகொள் என்பதற்குக் கட்பார்வையையிழுக்கின்ற எனப்பொருள்கூறலுமொன்று. எனவே அவ்வளவு சிறப்பும் அழகும் உள்ள மண்டபம் என்பதுபெற்றும். (கஎ)

18. மேனகையோடுதிலோத்தமைமெய்யி
லூனமில்காமருருப்பசியாதி
வானவர்மங்கையர்வட்டமசைத்தே
மேனிமிர்சீகரம்வீசினர்நிற்ப.

இ - ள். மேனகையோடு திலோத்தமை மெய்யில் ஊனமில் காமர் உருப்பசி ஆதி வானவர் மங்கையர்-மேனகை திலோத்தமை சரீரத்தில் யாதுங் குறைவில்லாத அழகையுடைய உருப்பசி முதலிய அரம்பையர்கள்,—வட்டம் அசைத்து மேல் நிமிர் சீகரம் வீசினர் நிற்ப - ஆலவட்டங்களையசைத்து மேலாக உயருகின்ற (வெண்) சாமரங்களை வீசினவர்களாகி (யிருபக்கத்திலும் வரிசையாக) நிற்கவும். எ — று. ஏகாரம் அசை. ()

19. சித்திரமாமதிசெங்கதிர்பாங்காய்
முத்தணிவேய்ந்துமுகட்டிளநீல
முய்த்துமணித்தொகையுள்ளமழுத்துஞ்
சத்திரமாயினதாங்கினர்நிற்ப.

இ - ள். முத்து அணி வேய்ந்து - முத்துக்களை ஒழுங்காகப்பதித்து,—முகடு இள நீலம் உய்த்து-முகடாகிய மேற்பக்கத்தில் இந்திரநீலமணிகளைப்பதித்து,—உள்ளம் மணி தொகை அழுத்தும் - உட்பக்கத்தில் இரத்தினக்கூட்டங்களையழுத்திச்செய்த,—சத்திர மாயின - குடைகளை,—சித்திர மாமதி செங்கதிர்-அழகிய பூரணசந்திரனும் சூரியனும்,—பாங்காய் தாங்கினர் நிற்ப - பக்கத்தில் பிடித்து நிற்கவும். எ — று.

பசுமையும் மிக்க சோதியுமாயிருத்தலால் இளநீலம் என்றார். (கக)

20. வெள்ளடைபாகுவெளிற்றுறுசுண்ணங்
கொள்ளுமடைப்பைமென்கோடிகம்வட்டில்
வள்ளுடைவாளிவைதாங்கிமருங்காய்த்
தள்ளருமொய்ம்புளதானவர்நிற்ப.

இ - ள். வெள் அடை பாகு வெளிற்றுறு சுண்ணம் கொள்ளும் அடைப்பை - வெற்றிலையும் பாக்கும் வெண்ணிறம்பொருந்திய சுண்ணாம்பும் வைத்திருக்கின்ற அடைப்பையும்,—மென் கோடிகம் வட்டில் - அழுந்தமாகிய கெண்டியும் துப்பற்படிக்கமும்,—வள் உடை வாள் இவை - கூரிய உடைவாளும் (ஆகிய) இந்தப்பொருள்களை,—தாங்கி - ஏந்திக்கொண்டு,—மருங்காய் - பக்கத்திலே,—தள்ள அரும் மொய்ம்பு உள தானவர் நிற்ப - நீங்குதற்கரிய வலிமையுள்ள அசுரர்கள் நிற்கவும். எ — று.

கோடிகம் - நீர்பருகுதற்கும் வாயுமிழ்தற்கும் என உணர்க. கோடிகம் - பூந்தட்டென்பாருமுளர். (உ0)

21. வெம்மைகொள்பானுவைவெஞ்சிறையிட்ட
செம்மலுமேனையசீர்கெழுமைந்தர்
மும்மைகொளாயிரமூவருமாகத்
தம்முறையாற்புடைசார்ந்தனர்வைக.

இ - ள். வெம்மை கொள் பானுவை வெம் சிறை இட்ட செம்மலும் - வெப்பம்பொருந்திய சூரியனைக் கொடிய சிறையில்வைத்த பானுகோபனாகிய மூத்தமகனும்,—சீர் கெழு ஏனைய மைந்தர் மும்மைகொள் ஆயிரம் மூவரும் ஆக - சிறப்புப்பொருந்திய மற்றுள்ள புதல்வர்களாகிய மூவாயிரத்து மூன்றுபேர்களுமாக,—தம் முறையால் புடை சார்ந்தனர்வைக - தங்கள்முறைப்படி பக்கத்தில் வந்திருக்கவும். எ — று.

உம்மைகள் எண். பானுகோபனும் அக்கினிமுகனும் இரணியனும் வச்சிரவாகுவும் மூவாயிரம்பிள்ளைகளும் சேஷ்ட கனிஷ்டமுறைப்படி முன்னும் பின்னும் உயர்ந்தவும் தாழ்ந்தவுமான ஆசனங்களில் இருந்தனர் என்பார் முறைவைக என்றார். (உக)

22. பாவமுயன்றுபழித்திறனாற்றுங்
காவிதியோர்கருமங்கண்முடிப்போ
ராவதொர்சாரணராய்படைமள்ள
ரேவருணாங்கரினெங்கணுநிற்ப.

இ - ள். பாவம் முயன்று பழி திறன் ஆற்றும் காவிதியோர் - பாவத்தையே முயன்று பழிகளைச்செய்கின்ற மந்திரிமார்களும்,—கருமங்கள் முடிப்போர் - காரியம்பார்த்

துமுடிப்பவர்களும்,—ஆவது ஒர் சாரணர் - ஆகத்தக்கவிஷயங்களை யுணர்ந்து அறிவிக்கின்ற தூதுவர்களும்,—ஆய் படை மன்னர் எவரும் - தேர்ந்தெடுக்கப்பட்ட சேனுவீரர்களும் (ஆகிய) வெல்லாரும்,—ஞாங்கரின் எங்கணும் நிற்ப - பக்கத்தில் எவ்விடங்களிலும் நிற்பவும். எ – று.

உம்மைகள் முற்று. காவிதியோர் - கணக்குப்பார்த்து முடிப்போர்க்கும் பெயர். எவரும் என்றது அரசர் ஐம்பெருங்குழுவினை; அவராவார்:–மந்திரியர் புரோகிதர் சேனுபதியர்–தந்திரத் தூதர் சாரண ரென்றிவர்–அந்தமி லரசர்க் கைம்பெருங் குழுவே. என்னும் பிங்கலநிகண்டாலுணர்க. (உஉ)

23. நாடகநூன்முறைநன்றுநினைந்தே
யாடவரம்மையராயுளரெல்லாஞ்
சேடியர்கின்னரர்சித்தரியக்கர்
பாடுறவீணைகள்பண்ணினர்பாட.

இ - ள். அரம்பையராய் உளர் எல்லாம் நாடக நூன்முறை நன்று நினைந்து ஆட - தேவரம்பையர்களாயுள்ளவரனைவரும் பரதசாஸ்திரவிதிகளை நன்றாக அவதானித்து நடனஞ்செய்யவும்,—சேடியர் கின்னரர் சித்தர் இயக்கர் பாடுற வீணைகள் பண்ணினர் பாட - வித்தியாதரரும் கின்னரரும் சித்தரும் இயக்கரும் பக்கத்திலே பொருந்தும்படி நின்று வீணைகளைப் பண்ணமைத்து வாசிக்கவும். எ – று.

ஏகாரம் தேற்றம். (உ௩)

24. ஏகனையீசனையெந்தையையெண்ணு
ராகியதொல்லவுணக்குழுவென்ன
வேகுமுளத்தினர்கஞ்சுகர்வெங்கண்
மாகதர்சூரல்பிடித்துவழுத்த.

இ - ள். ஏகனை ஈசனை எந்தையை எண்ணார் ஆகிய தொல் அவுணர் குழு என்ன - சர்வலோகநாயகரும் சகலவைசுவரியசம்பன்னரும் (ஆகிய) எமது பரமபிதாவான சிவபெருமானை மதியாதவர்களாகிய (திரிபுரவாசிகளாகவிருந்த) பழைய அசுரகூட்டத்தைப் போல,—வேகும் உளத்தினர் - (கோபத்தினுல்) வேகின்ற மனத்தினையுடையவரும்,—கஞ்சுகர் - சட்டையைத்தரித்தவருமாகிய,—வெம் கண் மாகதர் - கொடிய பார்வையினையுடைய மாகதர்,—சூரல் பிடித்து வழுத்த - பிரம்பைப்பிடித்துநின்று துதிக்கவும்.

மாகதர் - நின்றேத்துவோர்; கட்டியகாரரைப்போல இராஜசபையினின்று அரசரது வீரமுதலியவற்றைப் புகழ்வோருமாம். (உ௪)

25. உள்ளிடுமாயிரயோசனையெல்லை
கொள்ளிடமானகுலப்பெருமன்றந்
தள்ளிடவற்றசனங்கண்மிகுத்தே
யெள்ளிடவெள்ளிடமின்றெனவீண்ட.

இ - ள். உள்ளிடும் ஆயிர யோசனை எல்லை கொள் இடமான குலம் பெரு மன்றம் - உள்ளே ஆயிரம் யோசனை அளவினைக் கொண்ட விசாலமாகிய சிறந்த பெரிய சபாமண்டபத்தில்,—தள்ளிட அற்ற சனங்கள் மிகுத்து எள் இட வெள் இடம் இன்று என ஈண்ட - நீக்குதற்கரிய (பிரதான) சனசமூகங்கள் நிறைந்து எள்ளிடத்தானும் வெளியிடமில்லையென்று சொல்லும்படி நெருங்கவும். எ - று.

ஏகாரம் தேற்றம். (உ௫)

26. வச்சிரமெய்வயிரேரியமொண்ப
லுச்சியில்வாலுளேயொளிர்முத்த
மச்சுறுகண்மணியாமரிமாவின்
மெய்ச்சிரமேந்தும்வியன்றவிசின்கண்.

இ - ள். மெய் வச்சிரம் - சரீரம் வயிரமணிகளாலும்,—ஒண் பல் வயிரேரியம் - அழகியபற்கள் வைரேரியமணிகளாலும்,—உச்சியில் வால் உளை ஒளிர் முத்தம் - உச்சியில் அமைந்த வெண்மையாகிய புறமயிர் விளங்குகின்ற முத்துக்களாலும்,—அச்சுறு கண் மணி ஆம் - (கண்டவர்களுக்கு) அச்சத்தைத் தருகின்ற கண்கள் மாணிக்கங்களாலுமாகிய,—அரி மாவின் மெய் சிரம் ஏந்தும் வியன் தவிசின்கண் - சிங்கத்தின் மெய்யிலுள்ள தலையினாற் சுமக்கப்படுகின்ற பெருமையாகிய ஆசனத்தின்மீது. எ - று.

ஏகாரம் அசை. (உசு)

27. மீயுயர்நீலவியன்கிரியும்பர்
ஞாயிறுகாலையினண்ணியவாபோற்
பாயிருள்கீறியபன்மணிகொண்ட
சேயபொன்மாமுடிசென்னியின்மின்ன.

இ - ள். மீ உயர் வியன் நீல கிரி உம்பர் - மேலாக உயர்ந்து விளங்காநின்ற பெரிய நீலமலையினுச்சியில்,—ஞாயிறு காலையில் நண்ணிய வாபோல் - சூரியன் உதயகாலத்தில் வந்திருந்தாற்போல,—பாய் இருள் கீறிய பன்மணி கொண்ட சேய் பொன் மாமுடி சென்னியில் மின்ன - பரந்த இருளை நீக்குகின்ற பலவிதமான இரத்தினங்களால் இழைக்கப்பட்ட அழகமைந்த செம்பொற் கிரீடம் தலையின்மீது விளங்கவும். எ — று.

நண்ணியவாறு என்பது நண்ணியவா எனக் கடைக்குறைந்து நின்றது. (உஎ)

28. கறுத்தவராத்துணைகண்டிருவெய்யோ
ருறுப்பிடைகவ்வியொசிந்துதலைப்போய்
முறுக்கியவாலொடுமுன்கலந்தென்ன
மறுத்தவிர்குண்டலம்வார்குழைதூங்க.

இ - ள். துணை கறுத்த அரா கண்டு - இரண்டுகரும்பாம்புகள்பார்த்து,—இரு வெய்யோர் - இரண்டு சூரியர்களுடைய,—உறுப்பு இடை கவ்வி - உறுப்பிற்கவ்வி,—ஒசிந்து-வளைந்து,—முறுகிய வாலொடு - முறுக்கியவாலோடு,—தலைப்போய் - மேலேபோய்,—முன் கலந்த என்ன - முற்பக்கத்திற்கலந்திருந்தாற்போல,—மறு தவிர் குண்டலம் வார் குழை தூங்க - களங்கமில்லாத குண்டலங்கள் நெடியகாதிலே தூங்கவும். எ — று.

தூங்கல் அசைதலுக்கும்பெயர். (உஅ)

29. வீறியமாமணிவெற்பின்மிசைக்கண்
ஏறியவொண்பகலிந்துவியற்கை
மாறியவந்தெனமால்வளமாகு
நீறுசெறிந்திடுநெற்றியிலங்க.

இ - ள். வீறிய மாமணி வெற்பின் மிசைக்கண் - மேம்பட்ட நீலரத்தினத்தாலாகிய பெரிய வொரு மலையின்மேல்,—ஏறிய ஒண்பகல் இந்து இயற்கை மாறிய வந்த என - எட்டுக்கலைகள்வளர்ப்பெற்ற ஒளிபொருந்திய (பாதிச்) சந்திரன் மேல்கீழாக உதித்தாற்போல,—நெற்றி செறிந்திடு மால் வளம் ஆகும் நீறு இலங்க - நெற்றியில் நிறைந்த அருட்செல்வமாகிய விபூதி விளங்கவும். எ — று.

நீலரத்தினத்தாலாகிய மலை என்றது சூரபன்மனை. மால்வளம் - அருட்செல்வம்.

உயர்ந்த ஒளிபொருந்திய பகற்காலத்தில் சந்திரன் தன்னியல்புமாறிவந்துதித்து விளங்கினாற்போல. இயற்கை மாறுதல் இராக்காலத்துதித்துச் சோபித்தலை விட்டுப் பகற்காலத்துதித்துச் சோபித்தல். என்பது ஒருசாரார்கருத்து.

பகலுமிந்துவுந் தமது பதவிமாறிச் சூரியன்மேலுஞ் சந்திரன்கீழுமாகவந்துதித்தாற்போல (உபமானத்தால் உபமேயமாகிய கிரீடத்தை வருவித்து) இரத்தினகிரீடத்தின்கீழ் என்பது ஒருசாரார்கருத்து. (உகூ)

30. விண்டுமிழ்கின்றவியன்புழைதோறுந்
தண்டுளிவந்தமர்தன்மையதென்னப்
புண்டரிகம்பொறைபோற்றியுயிர்க்கும்
வண்டாளத்தொடைமார்பின்வயங்க.

இ - ள். விண்டு வியன் புழை தோறும் உமிழ் கின்ற தண் துளி வந்து அமர் தன்மையது என்ன - மலையானது பெரியமுழைஞ்சுதோறும் நின்று சொரிகின்ற நீர்த்துளிகள் வந்திருக்கின்றதன்மையைப்போல,—புண்டரிகம் பொறை போற்றி உயிர்க்கும் வண் தாளம் தொடை மார்பின் வயங்க - தாமரையானது சுருத்தரித்து ஈன்ற வளவிய முத்துமாலை மார்பில் விளங்கவும். எ — று.

அது பகுதிப்பொருள் விகுதி. (௩௦)

31. பங்கமில்சந்தொடுபாளிதநானங்
குங்குமமேனையகந்திகள்கூட்டி
யங்கமதன்கணணிந்தனவண்ட
மெங்குமுலாவியிருங்கடிதூங்க.

இ - ள். பங்கம் இல் சந்தொடு பாளிதம் நானம் குங்குமம் ஏனைய கந்திகள் கூட்டி - குற்றமற்ற சந்தனமும் பச்சைக்கர்ப்பூரமும் கஸ்தூரியும் குங்குமமும் மற்றுள்ள சுகந்தத்திரவியங்களும் கலந்து,—அங்கமதன்கண் அணிந்தன அண்டம் எங்கும் உலாவி இரும் கடி தூங்க - அவயவங்களிலணியபபட்ட கலவைகளானவை அண்டமெங்குஞ் சென்று மிக்க நறுமணத்தைவீசவும். எ — று.

சாதிச்சந்தனம் என்பார் பங்கமில் சந்தம் என்றார். (௩௧)

32. வான்றிகழ்நீனிறமாமுகிலின்பாற்
றோன்றியமின்புடைசுற்றியதென்ன
வேன்றுளவண்டமெனைத்தையுமாற்று
மான்றுயர்தோளிடையங்கதமல்க.

இ - ள். வான் திகழ் நீல் நிற மாமுகிலின் பால் தோன்றிய மின் புடை சுற்றியது என்ன - ஆகாயத்தில் விளங்காநின்ற நீலநிறம்பொருந்திய பெரிய மேகத்திற்றோன்றிய மின்னலானது (அம்மேகத்தைப்)பக்கத்திலே சுற்றிக்கொண்டவாறு போல,—ஏன்றுள அண்டம் எனைத்தையும் ஆற்றும் ஆன்றுயர் தோளிடை அங்கதம் மல்க - தவமுயன்று பெற்ற அண்டங்களெல்லாவற்றையுஞ் சுமக்கின்ற விசாலித்துயர்ந்த புயங்களில் வாகுவலயம்விளங்கவும். எ — று.

மல்கல் - ஈண்டு விளக்கம். நீலம் என்பது நீல் எனக்கடைகுறைந்துநின்றது. ()

33. மெய்த்துணையாமிருவெம்பணிஞாலம்
பைத்தலைகொள்வபரம்பொறையாற்று
தெய்த்தனபூண்கொடியாப்புறுமாபோற்
கைத்தலமுன்கடகஞ்செறிவெய்த.

இ - ள். ஞாலம் - உலகத்தை,—பைத்தலை கொள்வ - படம்பொருந்திய தலைகளாற் சுமப்பனவாகிய,—மெய்த்துணை ஆம் இரு வெம் பணி - (ஒன்றுக்கொன்று) மெய்த்துணையாகிய இரண்டு கொடிய சர்ப்பங்கள்,—பரம் பொறை ஆற்றுது எய்த்தன - (அப்) பெருஞ்சுமையையாற்றுது இளைத்தனவாக (அத்தலைகள் வசையாது சுமக்கும்பொருட்டு),—பூண் கொடு - பூணைக்கொண்டு,—யாப்புறு மாபோல் - இறுக்குமாறுபோல,—முன்கைத்தலம் கடகம் செறி வெய்த - முன்கைகளில் கங்கணம் என்னும் ஆபரணம் நெருங்கியிருக்கவும். எ - று.

கடகம் என்பது இக்காலத்து தோடா என வழங்கும். (௩௩)

34. நீலமதாயநெடுங்கிரிமேல்பால்
வாலியகங்கைவளைந்திடுமாபோற்
கோலமிடற்றிடைகோவைகொண்முத்தின்
சால்வுறுகண்டசரங்களிமைப்ப.

இ - ள். நீலமதாய நெடும் கிரி மேல் பால் வாலிய கங்கை வளைந்திடுமாபோல் - நீலமயமான நெடியமலையின்மேற்பக்கத்தில் வெண்மையாகிய கங்காநதிசூழ்ந்த சிறப்பைப்போல,—கோல மிடற்றிடை கோவை கொள் முத்தின் சால்வுறு கண்டசரங்கள் இமைப்ப - அழகிய கழுத்தில் கோவையாகிய முத்தினுற் கோக்கப்பட்ட மேன்மை பொருந்திய கண்டாவளி என்னும் ஆபரணம் விளங்கவும். எ - று.

முத்தின் கோவை கொள் எனமாற்றி முத்தினுற் கோக்கப்பட்ட எனப்பொருள் கூறினும் அமையும். (௩௪)

35. வீரமடந்தையர்மேதகநாளுஞ்
சீரியதோளிணைசெல்கதியென்ன
வேரியல்பன்மணியிட்டணிசெய்த
வாரவடுக்கல்பொன்னுகமிலங்க.

இ - ள். வீர மடந்தையர் மேதக நாளும் சீரிய தோள் இணை செல் கதி என்ன - வீரலக்குமிகள் மேன்மையாக எப்பொழுதும் சிறப்புப்பொருந்திய இரண்டு தோள்களினுஞ் செல்லுகின்ற மார்க்கத்தைப்போல,—ஏர் இயல் பன்மணி இட்டு அணிசெய்த ஆரம் அடுக்கல் பொன் ஆகம் இலங்க - அழகுபொருந்திய பலவகைரத்தினங்களையழுத்தியலங்காரமாகச் செய்யப்பட்ட பதக்கங்களின் அடுக்குகள் அழகிய மார்பில் விளங்கவும்.

உம்மை முற்று. பொன் ஆகம் எனவே உத்தமரேகைமூன்றும் பொருந்திய மார்பென்பது பெற்றும்; "வரையகன் மார்பிடை வரையு மூன்றுள" என்றார் பிறரும். (௩௫)

36. அந்தியின்வண்ணமுமத்தொளியூருஞ்
சுந்தரமாலிடைசுற்றியவாபோன்
முந்துபராரைகொண்மொய்ம்மணியாடை
யுந்தியினெண்பணியோடுவயங்க.

இ -ள். அந்தியின் வண்ணமும் அத்தொளி ஊரும் சுந்தர மால் இடை சுற்றிய வாபோல் - செவ்வானமுஞ் செவ்வொளிபொருந்திய பரிவேடமும் அழகிய மேகத்தின்

நடுப்பாகத்தைச் சூழ்ந்திருக்கின்றவாறுபோல,—மூந்து பாரளை கொள் மொய்மணி ஆடை உந்தியின் ஒண் பணியோடு வயங்க - முதன்மைபொருந்திய பருத்த அரையி லுடுக்கப்பட்ட நெருங்கிய ரத்தினகசிதமாகிய பீதாம்பரமானது ஒளிபொருந்திய உதர பந்தனம் என்னும் ஆபரணத்தோடு விளங்கவும். எ - று.

உம்மைகள் எண். கசிதம் - பதித்தல். முத்தினுற் கரைகட்டப்பட்ட பீதாம்பரம் எனப் பொருள் கூறுவாருமுளர். (௩௬)

37. இருபணிபார்முகமிட்டிடவீட்டி
யுருமொடுமின்னுமுலப்பிலசுற்றிக்
கருமிடறூடுகலந்தெனநுண்ணூல்
குரைகழல்வார்கழல்கொண்டுகுலாவ.

இ - ள். உலப்பு இல உருமொடு மின்னு - அழிவற்ற இடியும் மின்னலும்,—இரு பணி பார் முகம் இட்டிட வீட்டி - இரண்டுபாம்புகளைப் பூமியில் முகம்பொருந்தும்படி விழுத்தி,—கருமிடறூடு சுற்றி கலந்த என - (அப்பாம்புகளுடைய) கரியகழுத்திற் சுற் றிக் கலந்திருந்தாற்போல,—நுண் நூல் குரைகழல் வார்கழல் கொண்டு குலாவ - நுண் ணிய நூலினுற் கட்டப்பட்டு ஒலிக்கின்ற வீரக்கழல்கள் நெடியகாலிற் பொருந்தி விளங் கவும். எ – று.

நுண்ணூல் உருபும் பயனுந் தொக்கதொகை. நுண்ணிய – மெல்லிய. (௩௭)

38. மென்மணிமாழையின்வேதனியற்றிப்
பன்மணிமீதுபடுத்தியபல்பூண்
டொன்மணிமெய்புனைசூரபன்மாவோர்
பொன்மணிமாமுகில்போலவிருந்தான்.

இ – ள். மெல் மணி மாழையின் வேதன் இயற்றி - மிருதுவும் அழகும்பொருந் திய பசும்பொன்னினுற் பிரமதேவர் செய்து,—பல் மணி மீது படுத்திய பல் பூண் - பல வகையாகிய மணிகளை மேலாக அழுத்தியிழைத்திருக்கின்ற பல ஆபரணங்களை,— தொல் மணி மெய் புனை சூரபன்மா - பழைமையாகிய நீலநிறம்பொருந்திய சரீரத்திற் றரித்த சூரபன்மன்,—ஓர் பொன் மணி மா முகில் போல இருந்தான் - பொன்மயமாகிய அழகிய வொரு பெரிய மேகத்தைப்போலக் (கொலு) விருந்தான். எ – று.

மணி மெய் - மணிபோன்ற மெய்யெனப் பொருள்கூறினும் அமையும். (௩௮)

39. இருந்திடுகின்றவியற்கைவிழிக்கோர்
விருந்தமுதாகவியப்பொடுநோக்கிச்
சுரந்திடுமன்பொடுசூளிகைவைகும்
பெருந்திறன்மாமுகிலிங்கிவைபேசும்.

இ - ள். இருந்திடுகின்ற இயற்கை - (இங்ஙனஞ் சூரபன்மன்கொலு) வீற்றிருக் கின்ற சிறப்பை,—விழிக்கு ஓர் விருந்து அமுது ஆக - கண்களுக்கு ஓர் விருந்தாகிய அமிர்தம் போலிருக்க,—சுரந்திடும் அன்பொடு சூளிகை வைகும் பெரும் திறல் மா முகில் - (சூரபன்மனிடத்தே) யுண்டாகின்ற அன்பினுல் மாளிகைச்சிகரத்தின்மேலிருக் கின்ற மிக்க வலிமையையுடைய முகிலையொத்தவராகிய வீரவாகுதேவர்,—வியப்பொடு நோக்கி இவை பேசும் - அதிசயத்தோடு பார்த்து இவைகளைச் சொல்லுகின்றூர். எ - று

இங்கு அசை. சூரபன்மன் வாழவேண்டுமென்றெழுகின்ற அன்புடையராதலின், மழையைச்சுரக்கின்ற முகில் என உவமித்தார். (௩௯)

40. மூவரின்முந்தியமுக்கணனம்பொற்
சேவடிபேணியதேவர்கடம்முட்
டூவுடைவேலுளசூரபன்மாப்போ
லேவர்படைத்தனரித்திருவெல்லாம்.

இ - ள். மூவரின் முந்திய முக்கணன் அம் பொன் சேவடி பேணிய தேவர்கள் தம்முள் - (பிரம விஷ்ணு உருத்திரன் எனப்படும்) மும்மூர்த்திகட்கும் மேலோராகிய மூன்று திருக்கண்களையுடைய சிவபிரானது அழகிய பொன்மயமான சிவந்த திருவடிகளைத் தியானித்துத் தவஞ்செய்த தேவர்களுக்குள்,—தூ உடை வேல் உள சூரபன்மா போல் இ திரு எல்லாம் ஏவர் படைத்தனர் - தசைப்பற்றுடைய வேற்படையுள்ள சூரபன்மனைப்போல இவ்வகையான செல்வங்களையெல்லாம் யார் பெற்றிருந்தார்கள் [ஒருவருமில்லை யென்றபடி] எ - று. தம் சாரியை. (௪0)

41. ஓய்ந்துதவம்புரிவோருளுவன்போன்
மாய்ந்தவரில்லைமறத்தொடுநோற்றே
யாய்ந்திடின்முக்கணெம்மையனுமின்னேற்
கீந்ததுபோற்பிறர்க்கீந்ததுமின்றால்.

இ - ள். ஓய்ந்து தவம் புரிவோருள் - (சரீரம்) வருந்தித் தவஞ்செய்பவர்களுக்குள்,—உவன் போல் மறத்தொடு நோற்று மாய்ந்தவர் இல்லை - இச்சூரபன்மனைப்போல வைராக்கியத்தோடு தவஞ்செய்து (சிவபிரான் வராமையைக்குறித்து) இறந்தவரில்லை,—ஆய்ந்திடின் - ஆராயுமிடத்து,—முக்கண் எம் ஐயனும் இன்னேற்கு ஈந்தது போல் பிறர்க்கு ஈந்ததும் இன்று - முக்கண்ணனாகிய எமது சிவபெருமானும் இவனுக்கு வரங்கொடுத்ததுபோல வேறொருவருக்கும் வரங்கொடுத்ததுமில்லை. எ - று.

ஆல், ஏ அசை. உம்மைகள் உயர்வுசிறப்பு. (௪௧)

42. பாடுறுவேள்வியயின்றழல்புக்கும்
பீடுறுமிவ்வளமாயினபெற்று
நீடுறுமாறுநினைந்திலன்வெய்யோன்
வீடுறுகின்றவிதித்திறனன்றே.

இ - ள். வெய்யோன் - கொடியவனாகிய சூரபன்மன்,—பாடுறு வேள்வி பயின்று அழல் புக்கும் - பிரயாசத்தைத்தருகின்ற யாகத்தைச்செய்து (சிவபிரான்வரங்கொடுத்தருளவாராமையை நோக்கி அவ்வியாக)அக்கினியின் விழுந்திறந்தும்(பின்னர்ச் சிவபெருமான்வந்து வரங்கொடுத்தருள),—பீடுறும் இவ்வள மாயின பெற்றும் - பெருமைபொருந்திய இவ்வகையான செல்வங்களைப் பெற்றும்,—நீடுறு மாறு நினைந்திலன் - நிலைத்திருக்கும்படி நினைத்தானில்லை,—வீடுறுகின்ற விதித்திறன் அன்றே - (நீதிக்குவிரோதமான எண்ணமுஞ் செயலும் இவனுக்குவந்தது) இவன் இறக்கின்ற விதியல்லவா? எ-று.

ஓகாரம வினா. உம்மைகள் உயர்வுசிறப்பு (௪௨)

வே று.

43. மெய்ச்சோதிதங்குசிறுகொள்ளிதன்னைவிரகின்மைகொண்டகுருகார்
கச்சோதமென்றுகருதிக்குடம்பைதனினுய்த்துமாண்டகதைபோ
லச்சோவெனப்பலிமையோரையீண்டுசிறைவைத்தபாவமதனு
லிச்சூரபன்மன்முடிவெய்துநாளையிதனுக்கொரையமிலையே.

இ - ள். விரகு இன்மை கொண்ட குருகார் - உபாயப்புத்திசிறிதுமில்லாத தூக்கணங்குருவி,—மெய் சோதி தங்கு சிறு கொள்ளி தன்னை - மெய்ம்மையாகிய ஒளிபொ

ருந்திய வொருசிறு நெருப்புக்கொள்ளியை,—கச்சோதம் என்று கருதி - (தானிருக்கின்ற கூட்டுக்கு ஒளிசெய்கின்ற)மின்மினி யென்று நினைத்து(எடுத்துக்கொண்டுவந்து),- குடம்பை தனின் உய்த்து மாண்ட கதை போல் - கூட்டில்வைத்து (அதனால்) கூடுந்தானும் எரிந்தகதையைப்போல,—அச்சோ என பல் இமையோரை ஈண்டு சிறை வைத்த பாவ மதனால் - ஐயோவென்று புலம்பும்படி பலதேவர்களை யிவ்விடத்திற் சிறைவைத்த பாவத்தினால்,—இ சூரபன்மன் நாளை முடிவெய்தும் - இந்தச் சூரபன்மன் நாளைக்கு இறந்துபோவான்,—இதனுக்கு ஓர் ஐயம் இலை - இதற்கு ஓர் சந்தேகமில்லை. எ — று.

தன் இரண்டும் சாரியை. ஏகாரம் தேற்றம். (சங)

44. மிகையானவீரம்வளமாற்றல்சாலமேவுற்றுளோருமிறையும்
பகையார்கணேனுமுளராகிவாழ்தல்பழுதன்றிநன்றிபடுமோ
மகவானைமங்கையுடனேதுரந்துமவர்மைந்தனோடுசுரரை
யகலாமலீண்டுசிறைசெய்தபாவமதனாலிழப்பனரசே.

இ - ள். மிகை யான வீரம் வளம் ஆற்றல் சால மேவுற்றுளோரும் - மேலான வீரமும் செல்வமும் வலிமையும் மிகுதியாகப்பெற்றவர்களும்,—யார்கணேனும் - எவர்களிடத்தேனும்,—இறையும் - சற்றுவது,—பகை உளராகி வாழ்தல் - பகையுள்ளவராகிவாழுதல்,— பழுதன்றி நன்றி படுமோ - கேடேயல்லாமல் நன்மையைத்தருமோ (தராது),— மங்கை யுடனே மகவானை துரந்தும் - மனைவியாகிய இந்திராணியுடனே இந்திரனைச் (சுவர்க்கலோகத்தினின்று) துரத்தியவதனாலும்,—அவர் மைந்தனோடு சுரரை ஈண்டு சிறை செய்த பாவமதனால் - அவர்கள் புத்திரனான சயந்தனோடு தேவர்களைவிடாமல் இவ்விடத்திற் சிறைவைத்த பாவத்தினாலும்,—அரசு இழப்பன் - (இச்சூரபன்மன்) அரசாட்சியை யிழக்கப்போகின்றான். எ — று.

உம்மைகள் இழிவுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் மங்கையுடனே என்பதில் இசைநிறையும் தேற்றமும், அரசே என்பதில் அசையுமாம். (சச)

45. மன்னுந்திறத்தினமர்சூரபன்மன்மாமக்கள்சுற்றநகர
முன்னும்படிக்குமரிதானசெல்வமுடனாளையீறுபடுமேல்
முன்னென்பவர்க்குமுன்னாகுமாறுமுகனல்குமுத்தியலதே
லென்னுண்டுநாளும்வினைசெய்துழன்றவிவனாருயிர்க்குநிலையே.

இ - ள். மன்னும் திறத்தின் அமர் சூரபன்மன் - நிலைபெறுந்தன்மையோடு மிருக்கின்ற சூரபன்மன்,—மா மக்கள் சுற்றம் நகரம் உன்னும் படிக்கு மரிதான செல்வமுடன் நாளை ஈறுபடுமேல் - சிறந்த புத்திரரோடுஞ் சுற்றத்தாரோடும் நகரத்தாரோடும் நினைக்கும்படிக்கு மரிதான செல்வங்களுடனும் நாளைக்கு இறந்துபடுவானாயின்,—முன் என்பவர்க்கும் முன் ஆகும் ஆறுமுகன் நல்கும் முத்தி அலதேல் - இவரே முதல்வரென்று சொல்லப்படுவோர்களுக்கும் முதல்வராகிய அறுமுகப்பெருமான் கொடுத்தருளுகின்ற முத்திப்பேறேயல்லாமல்,—நாளும் வினை செய்து உழன்ற இவன் ஆருயிர்க்கு நிலை என்னுண்டு - சதாகாலமும் பாவங்களைச்செய்துலைகின்ற இச்சூரபன்மனது அரிய உயிர்க்கு நிலைபேறான செல்வம் வேறு என்ன இருக்கிறது [ஒன்றுமில்லை]. எ—று.

ஏகாரம் அசை. உம்மை நாளும் என்பதில் முற்று; ஏனையவற்றில் உயர்வுசிறப்பு.()

46. என்றித்திறங்களருளோடுபன்னியெழில்கொண்டவேரமிசையே
துன்றுற்றவீரன்வளனோடிருந்தசூரன்முனைகறுணியாக்
குன்றத்தினின்றுமிவண்மெல்லைபோன்றுகுமரேசனெந்தையடிக [வான்.
ளொன்றக்கருத்தினிடைகொண்டெழுந்துநடைகொண்டவைக்கணுறு

இ - ள். என்று இ திறங்கள் அருளோடு பன்னி - என்று இத்தன்மையான வசனங்களை யன்பினோடு சொல்லி,—எழில் கொண்ட வேரமிசை துன்றுற்ற வீரன் - அழகுபொருந்திய குளிகையின்மேலிருந்த வீரவாகுதேவர்,—வளனோடு இருந்த சூரன் முன் ஏகல் துணியா - சகல ஐசுவரியங்களோடு மிருந்த சூரபன்மனுக்கு எதிரே போகும்படி துணிந்து,—குன்றத்தினின்றும் இவர் எல்லை போன்று-மலையினின்று மேலே எழுகின்ற சூரியனைப்போல,—குமரேசன் எந்தை அடிகள் - குமரக்கடவுளாகிய எம்பெருமானது திருவடிகளை,—கருத்தினிடை ஒன்ற கொண்டு - மனசிற்பொருந்தும்படி தியானித்து,—எழுந்து நடை கொண்டு - மேலே எழுந்து நடந்து,—அவைக்கண் உறுவான் - சபைக்குப் போகின்றார். எ — று. ஏகாரம் அசை. (சசு)

வே று.

47. நலஞ்செய்சூளிகைநீங்கிவிண்ணெறிக்கொடுநடந்து
கலஞ்செய்திண்டிறல்வாகுவாம்பெயருடைக்கடவுள்
வலஞ்செய்வாட்படையவுணர்கோன்மன்னிவீற்றிருக்கும்
பொலஞ்செயத்தாணிமண்டபத்திடைப்போனான்.

இ - ள். கலம் செய் திண் திறல் வாகுவாம் பெயர் உடை கடவுள் - ஆபரணங்களையணிந்த வலிமையுள்ள வீரவாகு என்னும் பெயரினையுடைய கடவுள்,—நலஞ் செய் சூளிகை நீங்கி - அழகைச்செய்கின்ற சூளிகையினின்றும் நீங்கி,—விண் நெறிக் கொடு நடந்து - ஆகாயமார்க்கமாகச் சென்று,—வலம் செய் வாள் படை அவுணர் கோன் மன்னிவீற்றிருக்கும் - வெற்றியைத்தரும் வாட்படையினையுடைய அசுரராஜனாகிய சூரபன் மன் எப்பொழுதும் வீற்றிருக்கின்ற,—பொலஞ் செய்கின்ற அத்தாணி மண்டபத்திடை போனான் - பொன்னாற் செய்யப்பட்ட அரசிருக்கைமண்டபத்திற்போனார். எ — று.

48. எல்லையில்லதோர்பெருந்திருநிகழவீற்றிருந்த
மல்லலங்கழலிறைவனைக்குறுகிமாற்றலரால்
வெல்லருந்திறல்வீரவாகுப்பெயர்விடலை
தொல்லைநல்லுருக்காட்டினனவைக்கெலாந்தோன்ற.

இ - ள். எல்லை இல்லது ஓர் பெரும் திரு நிகழ வீற்றிருந்த மல்லல் அம் கழல் இறைவனை - அளவில்லாத பெருஞ்செல்வங்கள் விளங்க வீற்றிருக்கின்ற வலிமைபொருந்திய அழகிய வீரக்கழலையணிந்த அசுரராஜனாகிய சூரபன்மனை,—மாற்றலரால் வெல்ல அரும் திறல் வீரவாகு பெயர் விடலை குறுகி - சத்துருக்களால் வெல்லக்கூடாத தைரியமுடையராகிய வீரவாகு என்னும் பெயரினையுடைய சுத்தவீரர் சமீபித்து,—அவைக்கெலாம் தோன்ற தொல்லை நல் உரு காட்டினன் - சபையினுள்ளார் காணும்படி தமது பழையவடிவத்தைக் காட்டினார் எ — று. ஓர் அசை. (சஅ)

49. ஒற்றைமேருவிலுடையதோர்பரம்பொருளுதவுங்
கொற்றவேலுடைப்புங்கவன்றூதெனக்கூறி
யிற்றையிப்பகலவுணர்கோன்கிழியானெளிதாய்
நிற்றலெம்பிரான்பெருமையினிழிபெனநினைந்தான்.

இ - ள். ஒற்றை மேரு வில் உடையது ஓர் பரம் பொருள் உதவும் கொற்றவேல் உடை புங்கவன் தூது எனக் கூறி - ஒப்பற்ற மேருவாகிய வில்லையுடைய பரம்பொருளான சிவபெருமான் அளித்தருளிய வெற்றிபொருந்திய வேலாயுதத்தினையுடைய சுப்பிரமணியக்கடவுளது தூதுவன் என்று சொல்லி,—இற்றை இ பகல் - இத்தினத்திலே

இந்நேரத்தில்,—அவுணர் கோன் கீழ் யான் எளிதாய் நிற்றல் - சூரபன்மனது (ஆசனத்தின்) கீழாக நான் எளிமையாய் நிற்பது,—எம்பிரான் பெருமையின் இழிபு என நினைந்தான் - எம்பெருமானது மகிமைக்குத் தாழ்வென (வீரவாகுதேவர்) நினைத்தார். எ—று.

50. மாயைதந்திடுதிருமகன்மன்னிவீற்றிருக்கு
மீயுயர்ந்திடுமரியணைக்கொருபுடைவிரைவிற்
போயிருப்பதுமேலன்றுபுன்மையோர்கடனே
யாயதன்றியும்பாவமென்றுன்னினனகத்துள்.

இ - ள். மாயை தந்திடு திருமகன் மன்னி வீற்றிருக்கும் - மாயவள்பெற்ற இலக்குமிவிலாசம்பொருந்திய சூரபன்மன் அரசுவீற்றிருக்கின்ற,—மீ உயர்ந்திடும் அரி அணைக்கு ஒரு புடை - மேலாகவுயர்ந்த சிங்காசனத்துக்கொருபக்கத்தில்,—விரைவில் போயிருப்பது மேலன்று-சீக்கிரஞ் சென்றிருப்பது மேன்மையல்ல,—புன்மையோர் கடனே - (அது) எளியோர்களுடைய கடமையேயாகும்,—ஆயதன்றியும் - அதுவல்லாமலும்,—பாவம் என்று அகத்துள் உன்னினன் - (இப்பாவியோடு நானுங் கூடப்போயிருந்தால்) பாவமாகுமென்று மனசில் நினைத்தார். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மை இழிவுசிறப்பு. (ருo)

51. இனையதுன்னியேயறுமுகப்பண்ணவனிருதா
ணினையுமெல்லையினங்கவனருளினானிசியிற்
றினகரத்தொகையாயிரகோடிசேர்ந்தென்னக்
கனகமாமணித்தவிசொன்றுபோந்ததுகடிதின்.

இ - ள். இனையது உன்னி அறுமுகப் பண்ணவன் இருதாள் நினையும் எல்லையில் - (வீரவாகுதேவர்) இப்படிநினைத்து அறுமுகப்பெருமானது திருவடிகளைத் தியானிக்கும் போது,—அவன் அருளினால் - அப்பெருமானது திருவருளினால்,—நிசியில் ஆயிர கோடி தொகை தினகரர் சேர்ந்த என்ன - இராக்காலத்தில் ஆயிரகோடி என்னுந் தொகையுடைய சூரியர்கள் ஒருமித்து உதயஞ்செய்துவந்தாற்போல,—கனக மாமணி தவிசு ஒன்று கடிதின் போந்தது - பொன்மயமான இரத்தினசிங்காசனமொன்று விரைவாக (அச்சபையில்) வந்தது. எ—று.

ஆங்கு, ஏ அசை. (ருக)

52. நித்திலப்படுபந்தருஞ்சிவிகையுநெறியே
முத்தமிழ்க்கொருதலைவனுமதலைக்குமுதல்வ
னுய்த்தவாறெனக்குமரவேள்வீரனுக்குதவ
வத்தலைப்படவந்ததுமடங்கலேற்றணையே.

இ - ள். நித்திலப்படு பந்தரும் சிவிகையும் நெறியே முத்தமிழ்க்கு ஒரு தலைவனும் மதலைக்கு முதல்வன் உய்த்தவாறு என - முத்துக்களாலாகிய பந்தருஞ் சிவிகையும் முறையாக (இயலிசைநாடகமென்னும்) முத்தமிழுக்கும் ஒப்பற்ற தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளாகிய திருக்குமாரருக்குச் சிவபெருமான் அனுப்பினாற்போல,—குமரவேள் வீரனுக்கு உதவ - கந்தஸ்வாமி வீரவாகுதேவருக்கு அனுப்பியருள,—மடங்கல் ஏற்றணை அத்தலைப்பட வந்தது - சிங்காசனம் அவ்விடத்திற் பொருந்தும்படி வந்தது. எ — று.

ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. உம்மைகள் எண். (ருஉ)

53. பன்னிரண்டெனுங்கோடிவெய்யவரெலாம்பரவப்
பொன்னின்மால்வரைதிரைக்கடலடைந்தவாபோல்
மின்னுலாவியபொலன்மணிப்பீடிகைவிறல்சேர்
மன்னர்மன்னவனவைக்களத்தூடுவந்ததுவே.

இ - ள். பன்னிரண்டு எனும் கோடி வெய்யவர் எலாம்பரவ - பன்னிரண்டுகோடியென்று சொல்லப்படுகின்ற சூரியர்களனைவருஞ் சூழ்ந்துவர,—பொன்னின் மால் வரை திரைகடல் அடைந்த வாபோல் - பொன்மயமான பெரிய மேருமலை அலைகளையுடைய சமுத்திரத்தில் வந்த தன்மையைப்போல,—மின் உலாவிய பொலன் மணி பீடிகை - ஒளிபொருந்திய பொன்னாலு மணிகளாலு மமைந்துள்ள ஆசனம்,—விறல் சேர் மன்னர் மன்னவன் அவைக்களத்தூடு வந்தது - வெற்றிபொருந்திய இராஜாதிராஜனாகிய சூரபன்மனது சபாமண்டபத்தினடுவே வந்தது. எ — று. ஏகாரம் அசை. (ருங)

54. சிவன்மகன்விடுபொலன்மணித்தவிசுசேண்விளங்கிப்
புவனமுற்றுறத்தன்சுடர்விடுத்தலிற்பொல்லாப்
பவமனத்தொடுதீமையேவைகலும்பயிற்று
மவுணர்மெய்யையுந்தெய்வதப்படிவமாக்கியதால்.

இ - ள். சிவன் மகன் விடு பொலன் மணி தவிசு - சிவபிரானது திருக்குமாரராகிய கந்தஸ்வாமியனுப்பியருளிய இரத்தினசிங்காசனம்,—சேண் விளங்கி புவனம் உற்றுற தன் சுடர் விடுத்தலில் - ஆகாயத்தில் விளங்கி உலகம் முழுவதுந் தனது ஒளியைப்பரப்புகின்றமையால்,—பொல்லா பவ மனத்தொடு வைகலும் தீமையே பயிற்றும் - பொல்லாத பாவமனத்தோடு நாள்தோறுந் தீமையே செய்கின்ற,—அவுணர் மெய்யையும் தெய்வதப் படிவம் ஆக்கியது - அசுரர்களுடைய (கரிய) வடிவங்களையும் தெய்வத்தன்மையானவடிவங்களாகச்செய்தது. எ — று.

ஆல் அசை. ஏகாரம் பிரிநிலை. உம்மை முன்னையது முற்று; பின்னையது உயர்வு சிறப்பு. (ருச)

55. அயிலெயிற்றுடையவுணர்களணிகலந்தன்னிற்
குயிலுடைப்பலமணிகளுங்குமரவேளுய்த்த
வியலுடைப்பெருந்தவிசொளிபரத்தலினிரவி
வெயிலிடைப்படுமின்மினிபோல்விளங்கிலவே.

இ - ள். அயில் எயிறு உடை அவுணர்கள் அணிகலம் தன்னில் குயில் உடை பல மணிகளும் - கூரிய பற்களையுடைய அசுரர்கள் (அணிந்த) ஆபரணங்களிலழுத்தப்பட்ட பலசாதியான இரத்தினங்களும்,—குமரவேள் உய்த்த இயல் உடை பெரும் தவிசு ஒளி பரத்தலின் - கந்தஸ்வாமியனுப்பியருளிய இலக்கணமமைந்த பெருமையாகியசிங்காசனத்தினது ஒளிபரந்தமையின்,—இரவி வெயில் இடைப்படு மின்மினி போல் விளங்கில - சூரியனது வெய்யிலிலகப்பட்ட மின்மினிகளைப்போலப் பிரகாசமில்லாதுபோயின. எ-று

ஏகாரம் அசை. தன் சாரியை. உம்மை முற்று. (ருரு)

56. செக்கர்வானிறமதிக்கதிருடுக்களின்றிரட்சி
தொக்கபாயிருள்பலவங்கயெழிலியின்றுளக்க
மிக்கெலாஞ்செறிமாலையினும்பர்மேல்வெய்யோன்
புக்கதேயெனத்தொலைத்ததாலச்சபைப்பொலிவை.

இ - ள். செக்கர் வான் நிறம் மதி கதிர் உடுக்களின் திரட்சி தொக்க பாய் இருள் பலவகை எழிலியின் துளக்கம் மிக்கு எலாம் செறி மாலையின் - செக்கர்மேகத்தினிற மும் சந்திரகிரணமும் நட்சத்திரக்கூட்டமும் செறிந்து பரந்தவிருளும் பலவிதமான மேகத்தின் முழக்கமும் மிகுந்து இவையெல்லாம் நெருங்கியிருக்கின்ற மாலைக்காலத் திலே,—உம்பர் மேல் வெய்யோன் புக்கதே என - ஆகாயத்திற் சூரியன் வந்தாற் போல,—அ சபை பொலிவை தொலைத்தது - (இரத்தினசிங்காசனம்) அச்சபையின் அழகையழித்தது. எ — று.

ஆல் அசை. ஏகாரம் தேற்றம். எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. (டுகூ)

57. திசைமுகத்தனுஞ்செயற்கருந்தவிசொளிசெறிந்தே
யசைவருந்திறற்சூரபன்மாவெனுமவுண
னிசைமைதன்னையுமாணைதன்னையுமவனியாக்கை
மிசைகொள்பேரணிக்கதிரையும்விழுங்கினவிரைவில்.

இ - ள். திசை முகத்தனும் செயற்கு அரும் தவிசு ஒளி செறிந்து - பிரமதேவருஞ் செய்தற்கருமையாகிய இரத்தினசிங்காசனத்தின் ஒளிசெறிந்துபரந்து,—அசைவரும் திறல் சூரபன்மா எனும் அவுணன் இசைமை தன்னையும் ஆணைதன்னையும் - அழிவற்ற வலிமையையுடைய சூரபன்மாவென்னும் பெயர்பெற்ற அசுரனது பிரதாபத்தையும் ஆஞ்ஞையையும்,—அவன் யாக்கை மிசை கொள் பேர் அணி கதிரையும் விரைவில் விழுங்கின - அவன் சரீரத்தின்மேலணிந்த மேலான ஆபரணங்களின் ஒளியையும் சீக் கிரத்தில் விழுங்கியது. எ — று.

ஏகாரம் அசை. தன் இரண்டும் சாரியை. உம்மை திசைமுகத்தனும் என்பதில் உயர்வுசிறப்பு; ஏனையவற்றில் எண். (டுஎ)

58. அனையவான்றவிசவுணனேரிருத்தலுமதுகண்
டெனதுநாயகன்விடுத்தனன்போலுமென்றெண்ணி
மனமகிழ்ச்சியாலறுமுகப்பிரானடிவழுத்தி
வினையநாடுவானிருந்தனனங்கதன்மிசையே.

இ - ள். அனைய வான் தவிசு அவுணன் நேர் இருத்தலும் - அப்படிப்பட்ட மேன் மைபொருந்திய இரத்தினசிங்காசனம் சூரபன்மனுக்கெதிராக வந்திருக்க,—அது கண்டு - (வீரவாகுதேவர்) அதனைப்பார்த்து,—எனது நாயகன் விடுத்தனன் போலும் என்று எண்ணி - எம்பெருமானாகிய கந்தஸ்வாமி (இதனை) யனுப்பினார்போலும் என்று நினை த்து,—மனமகிழ்ச்சியால் அறுமுகப்பிரான் அடி வழுத்தி - மனமகிழ்ச்சியோடு அறுமு கப்பெருமானது திருவடிகளைத்துதித்து,—வினையம் நாடுவான் அதன் மிசை இருந்த னன் - சூரபன்மனுடைய எண்ணத்தையறியும்பொருட்டு அவ்வாசனத்தின்மேலிருந்தார்.

அங்கு, ஏ அசை. எண்ணம்-தேவர்களுடையசிறையை விடுவனோவிடானோவென் னுமெண்ணம். (டுஅ)

59. பெருந்தனிச்சுடரெறித்திடுபொன்மணிப்பீடத்
திருந்துமேதகுசிறப்பொடுவிளங்கியவேந்தல்
விரிந்தபல்கதிருடையதோர்வெய்யவனடுவட்
பொருந்திவைகியகண்ணுதற்பரமனேபோன்றான்.

இ - ள். தனி பெருஞ் சுடர் எறித்திடு பொன் மணி பீடத்து இருந்து மேதகு சிறப்பொடு விளங்கிய ஏந்தல் - ஒப்பற்றபேரொளியைவீசுகின்ற பொன்மயமான இரத் தினசிங்காசனத்தின்மேலிருந்து மேம்பட்ட சிறப்பினோடும் விளங்காநின்ற வீரவாகுதே

வர்,—விரிந்த பல் கதிர் உடையது ஓர் வெய்யவன் நடுவண் பொருந்தி வைகிய கண் நுதல் பரமனே போன்றான் - விரிந்த பல கிரணங்களையுடைய சூரியனது மத்தியில் எழுந்தருளியிருந்த நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானை ஒத்தார். எ — று.

ஓர் அசை. ஏகாரம் தேற்றம். (ருகூ)

60. மின்னிருந்தவேலவுணர்கோனெதிருறும்விடலை
முன்னிருந்தவாடகன்றனையடுமுரட்சீயஞ்
செங்கிணங்கவர்ந்தலமரவணுகிமுன்றெற்றப்
பொன்னிருந்தவிசிருந்திடும்வீரனேபோன்றான்.

இ - ள். மின் இருந்த வேல் அவுணர் கோன் எதிருறும் விடலை - ஒளிபொருந்திய வேற்படையினையுடைய அசுரராஜனாகிய சூரபன்மனுக்கு நேராக இருக்கின்ற வீரவாகு தேவர்,—முன் இருந்த ஆடகன் தனை அடு முரண் சீயம் - முற்காலத்திலிருந்த இரணியனைக்கொன்ற வலிமைபொருந்திய நரசிங்கம்(அவனது இரத்தத்தைப்பருகி அகங்காரங் கொண்டு மயங்குதலும்),—அலமர முன் அணுகி தெற்ற செங்கிணம் கவர்ந்து - சுழலும்படி முன்னேபோய் பிளக்கும்பொருட்டு (அதனது) செங்கிணத்தைக் கவர்ந்து,—பொன் இரும் தவிசு இருந்திடும் வீரனே போன்றான் - பொன்மயமான பெரிய ஆசனத்தில் இருந்தருளிய வீரபத்திரக்கடவுளையே யொப்பானார். எ — று.

தன் சாரியை. ஏகாரம் தேற்றம். (கூ0)

61. வெம்மைக்காலிருள்வேலைபோன்மூடிவிண்புவியைத்
தம்முட்சித்தரிற்காட்டலுஞ்சதுர்முகத்தொருவ
னம்மொத்தாரிலையென்றிடச்சிவன்புகழ்நவிலுஞ்
செம்மைத்தொல்குணமாலுநேர்ந்திருந்தனன்றிறலோன்.

இ - ள். வெம்மை கால் இருள் வேலை போல் விண் புவியை மூடி - (பிரமதேவரும் விட்டுணுவும் ஒருவருக்கொருவர் நானே பெரியன் நானேபெரியன் என்னும் அகங்காரத்தினால்) வெப்பத்தைத்தருகின்ற கருங்கடலைப்போல ஆகாயத்தையும் பூமியையுந் தமக்குள்ளே மூடி,—சித்தரின் காட்டலும் - (மாயாஜாலங்களைச் செய்யவல்லராகிய) சித்தர்களைப்போலக்காட்டுதலும்,—சதுர் முகத்து ஒருவன் நம் ஒத்தார் இலை என்றிட - பிரமதேவர் நமக்கொத்தவர்களொருவருமில்லையென்று கூற,—சிவன் புகழ் நவிலும் - (அப்பொழுது நம்மிலுயர்ந்தவர் சிவபெருமானே யென்று) அவருடைய பெருமையைப் (பாராட்டிப்) பேசுகின்ற,—செம்மை தொல் குணமாலும் திறலோன் நேர்ந்திருந்தனன் - நற்குணத்தையுடைய அத்திருமாலையும் வீரவாகுதேவர் ஒத்திருந்தார். எ - று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். இச்செய்யுட்கு இன்னொருவிதமான பொருள் வருமாறு:—வெம்மை******சிவன் சித்தரில் மூடிதம் முள் காட்டலும் - வெப்பைத்தருகின்ற இருண்மயமாகிய சமுத்திரம்போல விண்ணையும் புவியையும் சிவபெருமான் சித்தரைப்போல (வந்துநின்று) மூடிப் பின்னர்த் தமக்குள்ளே யவைகளைக்காட்டுதலும். (கூக)

62. இவற்றியற்கையால்வீரவாகுப்பெயரேந்த
னிவப்பின்மிக்கதோர்பொன்மணித்தவிசின்மேனெஞ்சி
னுவப்பும்வீரமுமேதகவிருத்தலுமுற்ற
வவைக்களத்தினர்யாவருங்கண்டனரதனை.

இ - ள். இவற்று இயற்கையால் வீரவாகு பெயர் ஏந்தல் - (மேலேசொல்லப்பட்ட) இத்தன்மையாகிய சிறப்பினோடு வீரவாகு என்னும் பெயரையுடைய தலைவர்,—நிவப்

பின் மிக்கது ஓர் பொன் மணி தவிசின் மேல் - உயர்விற் சிறந்ததாகிய ஒப்பற்றபொன்ஞலும் மணிகளாலும் (அமைந்துள்ள) ஆசனத்தின்மேல்,—நெஞ்சின் உவப்பும் வீரமும் மேதக இருத்தலும் - மனமகிழ்ச்சியும் வீரமும் அதிகரிக்க இருந்தபொழுது,—உற்ற அதனை - (அவர்) அவ்வாறிருந்த தன்மையை,—அவைக்களத்தினர் யாவரும் கண்டனர் - சபாமண்டபத்திலுள்ளவர்கள் யாவரும் கண்டார்கள். எ - று.

உம்மை யாவரும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம். (சுஉ)

63. நோற்றன்முற்றுறும்வினைஞர்பானொய்தின்வந்திறுத்த
வாற்றல்சால்வளம்போலவேயரியணையதன்கட்
டோற்றுமேலவனிலைமையைக்காண்டலுந்துளங்கி
யேற்றவற்புதமெய்தினரவைக்களத்திருந்தார்.

இ - ள். நோற்றல் முற்றுறும் வினைஞர் பால் நொய்தின் வந்திறுத்த ஆற்றல் சால் வளம் போல - தவஞ்செய்து முற்றுப்பெற்ற செயலையுடைய புண்ணியவான்களிடத்திலே (அத்தவப்பயஞல்) விரைவாகவந்து சேர்ந்த உயர்ந்த பெருஞ்செல்வத்தைப்போல,—அரி அணை அதன்கண் தோற்று மேலவன் நிலைமையை - சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கின்ற வீரவாகுதேவருடைய தன்மையை,—அவைக்களத்து இருந்தார் காண்டலும் துளங்கி - சபாமண்டபத்திலிருந்தவர்களனைவருங் கண்டு அஞ்சி,—ஏற்ற அற்புதம் எய்தினர் - மிகுந்த ஆச்சரியமடைந்தார்கள். எ — று.

ஏகாரம் அசை. அது பகுதிப்பொருள்விகுதி. துளங்கல் - கலங்கல் எனினுமாம். அவைக்களத்திருந்தார் வினையாலணையும்பெயர். (சுங)

வே று.

64. வாரிலங்கியகழன்மன்னன்முன்னரே
தாரிலங்கியமணித்தவிசினுற்றுளான்
வீரனும்போலுமால்வினையமோர்கிலேம்
யாரிவன்கொல்லெனவியம்புவார்சிலர்.

இ - ள். சிலர் - (அங்ஙனம் அரசிருக்கைமண்டபத்திலிருந்தவரிற்) சிலர்,—வார் இலங்கிய கழல் மன்னன் முன்னர் - வாரோடு விளங்குகின்ற வீரக்கழலையணிந்த நம் அரசர்பெருமானெதிரே,—தார் இலங்கிய மணி தவிசின் உற்றுளான் - மாலைவிளங்காநின்ற இரத்தினசிங்காசனத்திலிருந்தவன்,—வீரனும் போலும் - வீரனைப்போலவுமிருக்கின்ருன்,—வினையம் ஓர்கிலேம் - (இவன்வந்த) காரியத்தையறியேம்,—இவன் யார் கொல் என இயம்புவார் - இவன்யாரென்றுஞ் சொல்லுவார்கள். எ — று.

ஆல், ஏ அசை. உம்மையுங் கொல்லும் ஐயப்பொருளில் வந்தன. (சுச)

65. முந்திவட்கண்டிலமுடிவிலாற்றல்சேர்
எந்தைமுனிதுபொழுதிருத்தன்மேயிஞ
னந்தமைநீங்கியேநடுவணேயிவன்
வந்ததெவ்வாறெனவழங்குவார்சிலர்.

இ - ள். சிலர் - சிலர்,—முந்து இவண் கண்டிலம் - முன்னேயிவனை யிவ்விடத்திற் கண்டோமில்லை,—முடிவு இல் ஆற்றல் சேர் எந்தை முன் இது பொழுது இருத்தல் மேயினன் - அழியாத வலிமையையுடைய எமது அரசனெதிரே இப்பொழுது இருக்கின்ருன்,—இவன் நம் தமை நீங்கி நடுவண் வந்தது எவ்வாறு என வழங்குவார் - இவன் நம்மையெல்லாங்கடந்து இச்சபைநடுவில் எப்படிவந்தானென்றும் பேசுவார்கள்.

தம் சாரியை. ஏகாரம் இரண்டும் அசை. (சுரு)

66. ஒப்பருஞ்சனங்களோடொன்றிநம்மெலாந்
தப்பினன்புகுந்தனன்றமியனென்னினு
மிப்பெருந்தவிசிவணிருந்ததாற்றவு
மற்புதமற்புதமாமென்பார்சிலர்.

இ - ள். சிலர்,—ஒப்பரும் சனங்களோடு ஒன்றி நம் எலாம் தப்பினன் தமியன் புகுந்தனன் என்னினும் - ஒப்பற்றசனங்களுடனே யொருமித்து நமக்கெல்லாந் தப்பித்தனித்துவந்தவன் என்றாலும்,—இ பெரும் தவிசு இவண் இருந்தது ஆற்றவும் அற்புதம் அற்புதம் ஆம் என்பார் - இந்தப்பெரிய ஆசனம் (நாமறியாதபடி) இவ்விடத்திலிருந்தது மிகவும் அதிசயம் அதிசயமாகும் என்றும் பேசிக்கொள்ளுகின்றார்கள். எ – று. (கசு)

67. சீயமெல்லணையொடுசெம்மன்முன்னரே
யேயெனுமளவையினீண்டுதோன்றினு
ணுய்பவருண்டெனினறைவனம்மினு
மாயனிங்கிவனெனவகுக்கின்றார்சிலர்.

இ - ள். சிலர்,—மெல் சீயம் அணை யொடு செம்மல் முன்னர் ஏ எனும் அளவையின் ஈண்டு தோன்றினன் - மென்மையாகிய சிங்காசனத்தோடு நம்மரசனெதிரே ஏ யென்று சொல்லப்படுங் கண நேரத்தில் இவ்விடத்திற்றோன்றியிருக்கின்றவன்,—ஆய்பவர் உண்டெனின் அறைவன் - (என்வந்தாயென்று) கேட்பவருண்டானாற் (தான்வந்த காரியத்தைச்) சொல்லுவான்,—இவன் நம்மினும் மாயன் என வகுக்கின்றார் - இவன் நம்மினும் பார்க்க மாயவித்தைகளைக்கற்றிருக்கின்றான் என்றும் பேசுகின்றார்கள். எ—று.

ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு. (கஎ)

68. அறைகழலொருவனையவையத்தென்முனங்
குறுகியவிடுத்ததென்குழாங்கொண்டீரெனு
லிறையவனங்களையாதுசெய்யுமோ
வறிகிலமெனப்பதைத்தழுங்குவார்சிலர்.

இ - ள். சிலர்,—குழாங்கொண்டீர் - கூட்டமாகவிருந்தநீங்கள்,—அறைகழல் ஒருவனை அவையத்து என் முனம் குறுகிய விடுத்தது என் என - ஒலிக்கின்ற வீரக்கழலைத் தரித்த ஒருவனை எனக்கெதிரேவரும்படிவிட்ட தென்ன வென்று,—இறையவன் நங்களை யாது செய்யுமோ அறிகிலம் என பதைத்து அழுங்குவார் - அரசன் எங்களை என்னசெய்வானோ அறியேமென்று பதைபதைத்து வருந்துவார்கள். எ – று.

ஓகாரம் ஐயம். (கஅ)

69. ஒட்டலனொருவனையொறுத்திடாதிவண்
விட்டதெனென்றிறைவெகுளுமுன்னரே
கிட்டினமவன்றனைக்கெழுமிச்சுற்றியே
யட்டனம்வருதுமென்றறைகின்றார்சிலர்.

இ - ள். சிலர்,—ஒட்டலன் ஒருவனை ஒறுத்திடாது இவண் விட்டது என் என்று - சத்துருவாகிய இவனைத்தண்டியாது இவ்விடத்தில் அனுப்பியது ஏன் என்று சொல்லி,—இறை வெகுளு முன்னர் - (நம்) அரசன் கோபித்தற்கு முன்னரே,—அவன் தனை கிட்டினம் - அவனருகிற்சென்று,—கெழுமி சுற்றி அட்டனம் வருதும் என்று அறைகின்றார் - நெருங்கிச்சூழ்ந்துகொன்றுவிட்டு வருவேமென்றும் பேசுகின்றார்கள். எ – று.

தன் சாரியை. ஏகாரம் இரண்டும் அசை. (கக)

70. விளிவிலாத்திறலுடைவேந்தன்றன்னெதிர்
களியுலாமனத்தொடுகடிதினுற்றுளான்
றெளிவிலாமாயையின்றிறலன்போலுமா
லளியனோநுங்களுக்கவனென்பார்சிலர்.

இ - ள். சிலர்,—விளிவு இலா திறல் உடை வேந்தன் தன்னெதிர் - அழிவில்லாத வெற்றியையுடைய(நம்)அரசனெதிரே,—களி உலா மனத்தொடு கடிதின் உற்றுளான் - மகிழ்ச்சிபொருந்திய மனத்தோடு விரைந்துவந்தவன்,—தெளிவு இலா மாயையின் திறலன் போலும் - (பிறரால்) அறியப்படாத மாயாவல்லபன் போலும்,—அவன் நுங்களுக்கு அளியனோ என்பார் - (ஆதலால்) அவன் உங்களுக்கு எளியவனோ என்றும் பேசிக்கொள்ளுகின்றார்கள். எ — று.

ஆல் அசை. தன் சாரியை. ஓகாரம் எதிர்மறை. களி - களிப்பு, செருக்கு. (எ0)

71. மன்னவனெதிருறவந்துளான்றனை
யன்னவன்பணியினாலடுவதல்லதை
முன்னுறவதனையாமுன்னுவோமெனிற்
பின்னதுபிழையெனப்பேசுவார்சிலர்.

இ - ள். சிலர்,—மன்னவன் எதிருற வந்துளான் தனை - (நம்) அரசனுக்கு நேராக வந்திருக்கின்ற இவனை,—அன்னவன் பணியினால் அடுவது அல்லது - அவ்வரசனது கட்டளையினாற் கொல்வதேயல்லாமல்,—யாம் அதனை முன்னுற முன்னுவோம் எனின் பின் அது பிழை என பேசுவார் - யாம் அதுகாரியத்தை முன்னஞ் செய்தற்கு நினைப் போமாயின்,—பின்னர் அது குற்றமாகமுடியும் என்றும் பேசிக்கொள்ளுகின்றார்கள்.

தன், ஐ சாரியை. (எக)

72. யாரிதையறிகுவரினையனிவ்விடைச்
சூருறவுன்னியேதுன்னினான்கொலோ
சேரலர்பக்கமாய்ச்சேர்ந்துளான்கொலோ
வோருதுமேலெனவுரைசெய்வார்சிலர்.

இ - ள். சிலர்,—இதை யார் அறிகுவர் - இவனுடைய எண்ணத்தை யார் அறிவார் கள்,—இனையன் இ இடை சூர் உறவு உன்னி துன்னினான் கொலோ - இவன் இவ்வி டத்தில் சூரபன்மனோடு சினேகஞ் (செய்யவேண்டுமென்று) குறித்துவந்தானோ (அல் லது),—சேரலர் பக்கமாய் சேர்ந்துளான் கொலோ - சத்துருக்கள்பக்கமாய் (ஏதேனும் நியாயங்களெடுத்துதாகரிக்க) வந்தானோ,—மேல் ஒருதும் என உரை செய்வார் - (இவ் விரண்டிலொன்)றைப் பின்னறிவோமென்றும் பேசுகின்றார்கள். எ — று.

ஏகாரம் தேற்றம். கொல் இரண்டும் ஐயம். ஓகாரம் இரண்டும் அசை. (எஉ)

73. கடுந்தகர்முகத்தவள்கையொன்றற்றநாட்
டடிந்தனன்காவலோர்தம்மைமன்னவன்
றெடுங்கழலிவன்வருஞ்சூழ்ச்சிநோக்கியின்
றடும்பலர்தம்மையென்றச்சுற்றார்சிலர்.

இ - ள். சிலர்,—கடுந்தகர் முகத்தவள் கை ஒன்று அற்ற நாள் - கொடிய அசமுகி ஒருகைவெட்டுப்பட்ட அந்நாளில்,—மன்னவன் காவலோர் தம்மை தடிந்தனன் - (நம்) அரசனாகிய சூரபன்மன் (அச்சங்கதியைத் தனக்குவந்து அறிவியாமையால் உலகத்தைப்

பரிபாலனஞ்செய்கின்ற) அரசரை வருவித்துத் தண்டித்தான்,—கழல் தொடும் இவன் வரும் சூழ்ச்சி நோக்கி - வீரக்கழலேயணிந்த இவன் வருகின்ற உபாயத்தையறிந்து (தன க்குவந்து அறிவிக்காமையால்) இன்று பலர் தம்மை அடும் என்று அச்சுற்றுர் - இன்றை க்கும் பலரைத்தண்டிப்பானென்று பயங்கரமடைந்தார்கள். எ — று.

தம் இரண்டும் சாரியை. தொடுதல் - அணிதல். (எரு)

74. வாசவன்முதலினோர்மருளத்தொல்லைநாட்
டேசுறும்விஞ்சையர்வடிவிற்சேர்வுறீஇ
யாசிலோர்புன்னிறுத்தாணைகாட்டிய
யீசனேயிங்கிவனென்கின்றார்சிலர்.

இ - ள். சிலர்,—தொல்லை நாள் - முன்னொருகாலத்தில்,—வாசவன் முதலினோர் மருள - இந்திரன்முதலிய தேவர்கள் மயங்கும்படி,—தேசு உறும் விஞ்சையர் வடிவில் சேர்வுறீஇ - சிறப்புப்பொருந்திய வித்தியாதரரூபத்தோடுவந்து,—ஆசு இல் ஓர் புல் நிறுத்து ஆணை காட்டிய ஈசனே இவன் என்கின்றார் - குற்றமில்லாத ஒருதுரும்பை நட்டுத் தமது அதிகாரமுறையை (இத்துரும்பே செய்யவல்லது என்று)அறிவித்தருளிய சிவபிரானே யிவனென்றும் பேசிக்கொள்ளுகிறார்கள். எ - று.

இங்கு அசை. ஏகாரம் தேற்றம். (எச)

75. ஆயதோர்காசிபனதிதிதங்கள்பாற்
சேயனாய்வந்தொருசிந்தன்போன்றுலாய்த்
தூயவான்புவியெலாமளப்பச்சூழ்ந்திடு
மாயனேயிவனெனமதிக்கின்றார்சிலர்.

இ - ள். சிலர்,—ஆயது ஓர் காசிபன் அதிதி தங்கள்பால் சேயனாய் வந்து - ஆகத் தக்க சற்காரியங்களையறிகின்ற காசிபர் அதிதியாகிய இவர்களிடத்தில் மகனாய்வந்து பிறந்து,—ஒரு சிந்தன் போன்று உலாய் - ஒரு வாமனனைப்போலச்சஞ்சரித்து,—தூய வான் புவி எலாம் அளப்ப சூழ்ந்திடும் மாயனே இவன் என மதிக்கின்றார் - சுத்தமாகிய ஆகாயத்தையும் உலகமெல்லாவற்றையும் அளவிடும்படி நினைத்து (அங்ஙனம்) செய்த விட்டுணுவே யிவனென்றும் நினைக்கின்றார்கள் எ — று. ஏகாரம் தேற்றம். (எரு)

76. விண்டொடுசூளினைவிளம்பிவிண்புவி
யுண்டொருகணந்தனிலுந்திகாட்டிய
புண்டரிகத்தனேபுணர்ப்பினிவ்வுருக்
கொண்டனனாமெனக்கூறுவார்சிலர்.

இ - ள். சிலர்,—விண்டொடு சூளினை விளம்பி - விட்டுணுவோடு சபதங்கூறி,— விண் புவி உண்டு - ஆகாயத்தையும் பூமியையும் விழுங்கி,—ஒருகணம் தனில் உந்தி காட்டிய புண்டரிகத்தனே - ஒரு கணநேரத்தில் தமது உந்தியிலிருந்து அவைகளைத் தோற்றுவித்த பதுமாசனராகிய பிரமதேவரே,—புணர்ப்பின் இ உரு கொண்டனன் ஆம் என கூறுவார் - (தமது) மாயாவல்லபத்தால் இவ்வடிவமெடுத்துவந்தவராகுமென் றும் பேசிக்கொள்ளுகின்றார்கள். எ — று.

தன் சாரியை. ஏகாரம் தேற்றம். (எசு)

77. மூவருளாகுமோமுடிவின்மாதிரத்
தேவருளாகுமோசேணில்வைகிய
தாவருமுனிவரர்தம்முளாகுமோ
வேவருளாகுமோவிவனென்பார்சிலர்.

இ-ள். சிலர்,- இவன் - (இங்குவந்திருக்கின்ற) இவன்,—மூவருள் ஆகுமோ - மும்மூர்த்திகளிலொருவனே,—முடிவு இல் மாதிரம் தேவருள் ஆகுமோ - அழிவற்ற திக்குப்பாலகர்களாகிய தேவருள் ஒருவனே,—சேணில் வைகிய தாவரு முனிவரர் தம் முள் ஆகுமோ - மேலுலகத்திலிருக்கின்ற கேடில்லாத முனிவர்களுள் ஒருவனே,—எவருள் ஆகுமோ என்பார் - (மேற்கூறப்பட்ட) எவர்களுக்குள் ஒருவனோ என்றும் பேசுவார்கள். எ – று.

தம் சாரியை. ஒகாரம் நான்கும் வினா. (எஎ)

78. மாலைதாழ்மார்புடைமன்னற்கின்னமு
மாலமார்கண்டனேயருளினின்னதோர்
கோலமாய்வரந்தரக்குறுகினன்கொலோ
மேலியாமுணருதும்விளைவென்பார்சிலர்.

இ-ள். சிலர்,–மாலை தாழ் மார்பு உடை மன்னற்கு - மாலை தங்கப்பெற்ற மார்பினையுடைய (நமது) இராஜனாகிய சூரபன்மனுக்கு,—ஆலமார் கண்டனே அருளின் இன்னது ஓர் கோலமாய் - நஞ்சையுண்டருளிய சிவபெருமானே அருளோடும் இப்படிப் பட்ட வடிவமாய்,—இன்னமும் வரம் தர குறுகினன் கொலோ - இன்னும் வரங்கொடுத் தருளும்பொருட்டு வந்தாரோ,—விளைவு மேல் யாம் உணருதும் என்பார் - நடக்கும்விஷயத்தை இனி நாங்கள் அறிவோமென்றும் பேசுகின்றார்கள். எ – று.

ஏகாரம் தேற்றம். கொல் ஐயம். ஓகாரம் அசை. உம்மை இறந்தததழீஇயது. ()

79. காற்றுடனங்கியுங்கடுங்கட்காலனுங்
கூற்றனுமோருருக்கொண்டுவைகிய
தோற்றமிதன்றிபிச்சூரன்முன்வரு
மாற்றலர்யாரெனவறைகின்றார்சிலர்.

இ-ள். சிலர்,–இது - இவ்வடிவம்,—காற்றுடன் அங்கியும் கடும் கண் காலனும் கூற்றனும் ஓர் உருகொண்டு வைகிய தோற்றம் அன்றி - வாயுவும் அக்கினியும் கோபம் பொருந்திய கண்ணையுடையகாலனும் இயமனும் ஒருவடிவமெடுத்துவந்திருக்கின்ற தோற்றமேயல்லால்,—இ சூரன் முன்வரும் ஆற்றலர் யார் என அறைகின்றார் - இச்சூரபன் மனுக்கெதிரில் வரத்தக்க வலிமையுடையவர் யாவர் என்றும் பேசுகின்றார்கள். எ – று.

உம்மைகள் எண். (எகூ)

80. குன்றமுமவுணனுங்குலைந்துபாடுற
வொன்றொருவேலினையொருவனுய்த்தன
னென்றனபன்னவனீண்டுமன்னன்முன்
சென்றனனேயெனச்செப்புவார்சிலர்.

இ-ள். சிலர்–குன்றமும் அவுணனும் குலைந்து பாடுற - கிரவுஞ்சமலையுந் தாரகாசுரனும் கெட்டு அழியும்படி,—ஒருவன் ஒன்று ஒரு வேலினை உய்த்தனன் என்றனர் - ஒருவன் ஒப்பற்ற ஒரு வேலாயுதத்தை விட்டான் என்று சொன்னார்கள்,—அன்னவன் ஈண்டு மன்னன் முன் சென்றனனே என செப்புவார் - அவன் இப்பொழுது சூரபன்மராஜனுக்குமுன்னே வந்தானோ என்றும் பேசுகின்றார்கள். எ – று.

ஓகாரம் ஐயம். உம்மைகள் எண். (அ0)

81. செற்றியபன்மணிச்செம்பொன்மன்றமு
முற்றிடுமவுணருமொளிறுவான்கதிர்
மற்றினனணிகளின்றவிசின்வாள்பட
வற்றதுபகற்சுடராயென்பார்சிலர்.

இ - ள். சிலர்,—செற்றிய பல்மணி செம்பொன் மன்றமும் ஒளிறு வான்கதிர்-நெருங்கிய பலமணிகளையழுத்திச் செம்பொன்னால் (செய்யப்பட்ட) மன்றத்தில் விளங்குகின்ற மிக்க சோதியும்,—உற்றிடும் அவுணரும் ஒளிறு வான் கதிர் - (அச்சபையில்) இருக்கின்ற அவுணர்கள் (அணிந்த ஆபரணங்களில்) விளங்குகின்ற மிக்க சோதியும்,—இவன் அணிகளின் தவிசின் வாள்பட - இவன் அணிந்த ஆபரணங்களினதும் (இவனிருக்கின்ற இரத்தின) சிங்காசனத்தினதும் ஒளிபடுதலால்,—பகல் சுடராய் அற்றது என்பார்-பகல்விளக்கைப்போலப் பொலிவழிந்தது என்றும் பேசுகின்றார்கள். எ-று.

மற்று அசை. உம்மைகள் எண். மன்றத்திலும் ஆபரணத்திலும் விளங்குஞ் சோதி சுவர்ணகசிதஇரத்தினப்பிரபை. (அக)

82. இருந்திடுமவுணர்கள்யாருமித்திறம்
வருந்திறநினைகிலர்மறந்துமிவ்விடை
தெரிந்திடினிங்கிதுதிறல்கொண்மன்னனே
புரிந்திடுமாயையின்புணர்ப்பென்பார்சிலர்.

இ - ள். சிலர்,—இருந்திடும் அவுணர்கள் யாரும் மறந்தும் இ திறம் இ இடை வரும் திறம் நினைகிலர் - (இம்மகேந்திரத்திலிருக்கின்ற) அவுணர்கள் எவரும் மறந்தேனும் இத்தன்மையாக இச்சபையில் வர நினையார்கள்,—தெரிந்திடின் - பார்க்குமிடத்து,—இது திறல் கொள் மன்னனே புரிந்திடும் மாயையின் புணர்ப்பு என்பார் - இதுவிஷயம் பராக்கிரமசாலியாகிய (நம்) அரசனே செய்த மாயவித்தை என்றும் பேசுகின்றார்கள்.

இங்கு அசை. ஏகாரம் பிரிநிலை. (அஉ)

83. நென்னலினிறந்துயிர்நீத்ததாரகன்
முன்னுறுதன்னுருமுடியவிப்பக
லின்னதோர்பொன்னுருவெடுத்துமுன்னைபாற்
றுன்னினன்கொல்லெனச்சொல்கின்றார்சிலர்.

இ - ள். சிலர்,—நென்னலின் இறந்து உயிர் நீத்த தாரகன்-நேற்றிறந்து உயிர் நீங்கிய தாரகாசுரன்,—முன் உறு தன் உரு முடிய - முன்னுள்ள தனது தூலவுடம்பு அழிந்துவிட,—இ பகல் இன்னது ஓர் பொன் உரு எடுத்து - இன்றைக்கு இத்தன்மையாகிய வோர் அழகிய வடிவத்தைக்கொண்டு,—முன்னை பால் துன்னினன் கொல் என சொல்லுகின்றார் - தமையனாகிய சூரபன்மனிடத்திலேவந்தானோ என்றும் பேசுகின்றார்கள்.
கொல் ஐயம். (அங)

வேறு.

84. சங்கமேவினரினையனவளப்பிலசாற்ற
வங்கணோரரிமான்றவிசிருக்கையிலவுணன்
றுங்கமெத்துணையத்துணைச்சிறப்பொடுதோன்றிச்
செங்கைவேலவற்புகழ்ந்துவீற்றிருந்தனன்றிறலோன்.

இ - ள். சங்கம் மேவினர் இனையன அளப்பில சாற்ற - (அச்) சபையிலிருந்த அரசர்கள் இவ்வாறு அனேகவிதமான வசனங்களைச்சொல்ல,—அங்கண் ஓர் அரிமான் தவிசு இருக்கையில் - அவ்விடத்திலே ஒப்பற்ற சிங்காசனத்தின்மீது,—திறலோன் - வீரவாகுதேவர்,—அவுணன் துங்கம் எத்துணை அ துணை சிறப்பொடு தோன்றி - சூரபன்மனுடைய பெருமையும் வெற்றியும் உயர்ச்சியும் எவ்வளவோ அவ்வளவு சிறப்போடுந் தோன்றி,—செங்கை வேலவன் புகழ்ந்து வீற்றிருந்தனன் - சிவந்ததிருக்கரத்தில் வேற்படையைத்தரித்தவராகிய கந்தசுவாமியைத் துதித்து வீற்றிருந்தார். எ - று. (அச)

85. அறிவர்மேலவன்றவிசில்வீற்றிருத்தலுமவுணர்க்
கிறைவனுங்கதுநோக்கியேயெயிற்றணிகறித்துக்
கறுவியேநகைத்தூரப்பிமெய்வியர்ப்பெழக்கண்கள்
பொறிசொரிந்திடப்புகையுமிழ்ந்தினையனபுகல்வான்.

இ - ள். அறிவர் மேலவன் தவிசில் வீற்றிருத்தலும் - அறிஞருக்குட்சிறந்தவராகிய வீரவாகுதேவர் சிங்காசனத்தில் வீற்றிருக்க,—அவுணர்க்கு இறைவன் அது நோக்கி - அசுரர்தலைவனாகிய சூரபன்மன் அதனைக்கண்டு,—அணி எயிறு கறித்து - வரிசையாகிய பற்களைக்கடித்து,—கறுவி - கோபித்து,—நகைத்து - சிரித்து,—உரப்பி - அதட்டி,—மெய் வியர்ப்பு எழ - சரீரத்தில் வியர்வை தோன்ற,—கண்கள் பொறி சொரிந்திட - கண்களிலிருந்து தீப்பொறிபறக்க,—புகை உமிழ்ந்து - சுவாசத்திலே புகை எழும்ப,—இனையன புகல்வான் - இத்தன்மையாகக் கூறுகின்றான். எ - று.

ஆங்கும் ஏகாரம் இரண்டும் அசை. (அரு)

86. சுற்றநீங்கியேயிலையுண்டுவிலங்கெனச்சுழன்று
வற்றன்மாமரக்காட்டகத்திருந்துடல்வருத்துஞ்
சிற்றுணர்ச்சியோர்வல்லசித்தியல்பிதுசிறியோய்
கற்றுளாய்கொலாங்காட்டினைநமதுமுன்காண.

இ - ள். சுற்றம் நீங்கி - சுற்றத்தைவிட்டு,—வற்றல் மாமரம் காடு அகத்து இருந்து - காய்ந்த பெரிய மரங்கள் பொருந்திய காட்டினிடத்திருந்து,—இலை உண்டு - இலைகளைத் தின்று,—விலங்கு என சுழன்று - மிருகங்களைப்போலச் சஞ்சரித்து,—உடல் வருத்தும் சிறு உணர்ச்சியோர் வல்ல சித்து இயல்பு இது - உடலைவருத்துகின்ற சிற்றறிவுடையவர்கள் செய்கின்ற சித்துவிளையாட்டின்றன்மையே இது,—சிறியோய் - சிறியவனே,—கற்றுளாய் கொல் - (இச் சித்துவிளையாட்டை நீ) கற்றுக்கொண்டாயோ,—நமது முன் காண காட்டினை - நமக்குமுன்னே (நாம்) காணும்படி காட்டினாய். எ - று.

ஆம், ஏ அசை. கொல் ஐயம். (அசு)

87. துன்றுவார்சடையோகினோரல்லதுதொலைந்து
பின்றுதேவரும்வல்லரிச்சிறுதொழில்பெரிது
மொன்றுமன்னதையிவ்விடைக்காட்டலருன்போ
னன்றுநன்றுநீநம்முனர்க்காட்டியநடனம்.

இ - ள். துன்றுவார் சடை யோகினோர் அல்லது - நெருங்கிய நீண்ட சடையினையுடைய முனிவர்களேயல்லாமல்,—தொலைந்து பின்று தேவரும் இ சிறு தொழில் வல்லர் - (நமக்குத்) தொலைந்து பின்வாங்கிய தேவர்களும் இப்படியான கூத்து வேடிக்கைகளைச் செய்யவல்லவர்,—உன்போல் அன்னதை ஒன்றும் இ இடை காட்டலர் - உன்னைப்போல அந்த விளையாட்டை ஒன்றையாவது இவ்விடத்தில் காட்டமாட்டார்கள்,—நீ நம்முனர் காட்டிய நடனம் நன்று நன்று - நீ நமக்கெதிரேகாட்டிய நடிப்பு நல்லது நல்லது. எ - று.

உம்மை மூன்றும் இழிவு சிறப்பு. (அஎ)

88. சித்தராயினோர்செங்கண்மான்முதலியதேவ
ரித்திறத்தனகாட்டுதற்கஞ்சுவரென்முன்
றத்தமெல்லையிற்புரிந்திடலல்லதுதமியோய்
பித்தனைகொலாநமக்கிதுகாட்டுதல்பிடித்தாய்.

இ - ள். சித்தர் ஆயினோர் செம் கண் மால் முதலிய தேவர் இ திறத்தன தம் தம் எல்லையில் புரிந்திடல் அல்லது - சித்தர்களும் விட்டுணுமுதலிய தேவர்களும் இப்படிப் பட்ட விநோதங்களைத் தங்கடங்களிடங்களிற் செய்வதேயல்லாமல்,—என்முன் காட்டு தற்கு அஞ்சுவர் - எனக்குமுன்னே செய்தற்குப் பயப்படுவார்கள்,—தமியோய் - தமியனே,—நமக்கு இது காட்டுதல் பிடித்தாய் - நமக்கு இந்தவிநோதத்தைக் காட்டவேண்டுமென்று நினைத்தாய்,—(ஆதலால்) பித்தனே ஆம் - நீ பித்தனேயாகும். எ - று.

ஏகாரம் தேற்றம். கொல் அசை. (அஅ)

89. உரைசெயிந்நகர்மகளிருஞ்செய்வரூன்முற்றுக்
கருவினுள்ளுறுகுழவியுஞ்செய்திடுங்கருத்தில்
வரைகளுஞ்செயுமாக்களுஞ்செய்யுமற்றதனு
லரியதன்றரோபேதைநீபுரிந்திடுமாடல்.

இ - ள். பேதை - அறிவில்லாதவனே,—நீ புரிந்திடும் ஆடல் - நீ செய்கின்ற இவ் விநோதம்,—உரை செய் இ நகர் மகளிரும் செய்வர் - புகழ்பெற்ற இந்நகரத்திலிருக் கின்ற பெண்களும் செய்வார்கள்,—ஊன் முற்று கருவின் உள் உறு குழவியும் செய்தி டும் - தசைமுற்றுத கருவினுள்ளிருக்கின்ற குழந்தையுஞ் செய்யும்,—கருத்து இல் வரை களும் செயும் - உணர்ச்சியில்லாத மலைகளுஞ்செய்யும்,—மாக்களும் செய்யும் - மிருகங்க ளுஞ் செய்யும்,—அதனால் - (அங்ஙனஞ் செய்கின்ற) அத்தன்மையினால்,—அரியது அன்று - (இது) ஒரு அருமையல்ல. எ - று.

மற்று, அரோ அசை. உம்மைகள் எண். (அகூ)

90. என்னையெண்ணலையெதிருறவிருந்தனையிதனான்
மின்னல்வாட்படையுறைகழித்தொய்யெனவீசிச்
சென்னிவீட்டுவனின்செயன்முற்றவுந்தெரிந்து
பின்னரத்தொழில்புரிவனென்றேயுளம்பிடித்தேன்.

இ - ள். என்னை எண்ணலை எதிருற இருந்தனை - என்னைச் (சற்றேனும்) மதியா மல் எனக்குமுன்னாகவிருந்தாய்,—இதனால் மின்னல் வாள் படை உறை கழித்து ஒய் யென வீசி சென்னி வீட்டுவன் - இதனால் ஒளிபொருந்திய வாளாயுதத்தை உறையி னின்றுமெடுத்து விரைந்து வீசி (யுன்) தலையையறுப்பேன்,—நின் செயல் முற்றவும் தெரிந்து - நீ வந்த காரணத்தை முற்றுகத்தெரிந்துகொண்டு,—பின்னர் அ தொழில் புரிவன் என்று உளம் பிடித்தேன் - பின்பு அக்காரியத்தைச் செய்வேனென்று நினைத் தேன். எ - று.

ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. (கூ0)

91. ஏணுற்றாரெலாம்வழுத்தியவவுணரும்யாமுங்
காணக்காட்டினைநீயறிவிஞ்சையைக்கண்டாம்
பூணித்தாயெனவருமுனக்கித்துணைப்பொழுது
பாணித்தாவியையளித்தனனன்னதுபரிசே.

இ - ள். ஏண் உற்றார் எலாம் வழுத்திய அவுணரும் யாமும் காண - இறுமாப்பு டைய எத்துணைவலியரெல்லாந் துதிக்கின்ற அசுரரும் யாமுங் காணும்படி,—நீ அறி விஞ்சையை காட்டினை - நீகற்றவித்தையைக் காட்டினாய்,—கண்டாம் - (நாங்களுங்) கண்டேம்,—பூணித்தாய் என வரும் உனக்கு - வேஷம்போட்டுவந்தவனாகிய உனக்கு,—இ துணை பொழுது பாணித்து ஆவியை அளித்தனன் - இவ்வளவுநேரந் தாமதித்து (உன்) உயிரை (உனக்குத்) தந்தேன்,—அன்னது பரிசே - அதுவே (உனக்குச்செய்யும்) உபகாரம். எ - று. ஏகாரம் பிரிநிலை. உம்மைகள் எண். (கூக)

92. வாசவன்கரந்தோடினன்பிறரிதுமதியார்
கேசவன்னிதுநினைகிலன்மறைகளின்கிழவோ
னாசிகூறியேதிரிந்திடுமவர்க்கெலாமுதலா
மீசனென்னிடைவருகிலன்யாரைநீயென்றான்.

இ – ள். வாசவன் கரந்து ஓடினன் - இந்திரன் ஒளித்து ஓடிப்போய்விட்டான்,—பிறர் இது மதியார் - மற்றைத்தேவர்கள் இப்படிச்செய்ய நினைக்கமாட்டார்கள்,—கேசவன் இது நினைகிலன் - விட்டுணுவு மிதனைச் செய்யநினையான்,—மறைகளின் கிழவோன் ஆசி கூறியே திரிந்திடும் - வேதமோதுதற்குரியவனாகிய பிரமன் ஆசீர்வாதங் கூறிக்கொண்டு திரிகின்றான்,—அவர்க்கு எலாம் முதலாம் ஈசன் என்னிடைவருகிலன்- அவர்களுக்கெல்லாம் முதல்வராகிய சிவபெருமான் என்னிடத்தில் வரார்,—(ஆதலால்) நீ யாரை என்றான் - நீ யார் என்று கேட்டான். எ – று.

ஏகாரம் தேற்றம். யாரை என்பதில் ஐ சாரியை. (கூஉ)

93. தீயனித்திறமுரைத்தனகேட்டலுந்திறலோன்
காயமீனெனக்காயமேல்வியர்ப்பெழக்கனன்று
மாயைசெய்துழல்வலியிலார்போலெனைமதித்தா
யாயபுந்தியைவிடுமதிகேளிதென்றறைவான்.

இ - ள். தீயன் இ திறம் உரைத்தன திறலோன் கேட்டலும் - கொடியவனாகிய சூரபன்மன் இவ்வாறு கூறியவார்த்தைகளை வீரவாகுதேவர் கேட்டு,—காய மீன் என காயம் மேல் வியர்ப்பு எழ - ஆகாயத்துள்ள நட்சத்திரங்களைப்போலச் சரீரத்தில் வியர்வை உண்டாக,—கனன்று - கோபித்து,—மாயை செய்து உழல் வலியிலார் போல் எனை மதித்தாய் - மாயவித்தைகளைச்செய்து திரிகின்ற வலியற்ற அற்பர்களைப்போல (நீ) என்னை நினைத்தாய்,—ஆய புந்தியை விடு மதி - அந்த எண்ணத்தை விடு,—இது கேள் என்று அறைவான் - இதனைக்கேளென்று சொல்வாராயினர். எ - று.

மதி முன்னிலையசை. (கூங)

94. புரந்தரன்குறையயன்முதலமரர்தம்புன்மை
வருந்தும்வானவர்சிறையெலாநீக்கிமற்றவர்தந்
திருந்துதொல்லிறையுதவுவான்செந்திமாநகர்வந்
திருந்தவாதியம்பண்ணவனடியனேன்யானே.

இ - ள். யான் - நான்,—புரந்தரன் குறை - இந்திரனது குறையும்,—அயன் முதல் அமரர் தம் புன்மை - பிரமன்முதலிய தேவர்களது எளிமையும்,—வருந்தும் வானவர் சிறை எலாம் நீக்கி - (உன்னால்) வருந்தும் தேவர்களது சிறைத்துன்பமும் (ஆகிய) எல்லாவற்றையும் ஒளித்து,—அவர் தம் திருந்து தொல் இறை உதவுவான் - அத்தேவர்களுடைய திருத்தமாகிய பழைய (சுயாதீனமான) அரசாட்சியைக் கொடுத்தருளும்பொருட்டு,—மா செந்தி நகர் வந்து இருந்த ஆதி அம் பண்ணவன் அடியனேன் - பெருமை பொருந்திய திருச்செந்தூரில் வந்து எழுந்தருளியிருக்கின்ற முழுமுதல்வராகிய கந்தசுவாமியினது அடியவன். எ - று.

மற்று, அம், எ அசை. தம் இரண்டும் சாரியை. (கூச)

95. துன்னுதானைகட்கரசராயறுமுகத்தொல்லோன்
பின்னர்வந்துளாரொன்பதோடிலக்கமாம்பெயரா
லன்னவர்க்குளேயொருவன்யானந்திபாங்கமர்ந்தே
னென்னலார்புகழ்வீரவாகெனும்பெயருள்ளேன்.

இ - ள். துன்னு தானைகட்கு அரசராய் - நெருங்கிய சேனாதிபதிகளாய்,—அறுமுகத் தொல்லோன் பின்னர் வந்துளார் ஒன்பதோடு இலக்கமாம் பெயர் - அறுமுகப்பெருமானுக்குப்பின் பிறந்தவர்கள் இலக்கத்தொன்பதுபேர்கள்,—அன்னவர்க்குள் யான் ஒருவன் - அவர்களுக்குள் நான் ஒருவன்,—நந்தி பாங்கு அமர்ந்தேன் - நந்திபக்கத்துள்ளவன்,—ஒன்னலார் புகழ் வீரவாகு எனும் பெயர் உள்ளேன் - சத்துருக்களாற் புகழப்படுகின்ற வீரவாகு என்று சொல்லப்படும் பெயருள்ளவன். எ — று. ஆல், ஏ சை. (கசு)

96. தாரகப்பெயரிளவலைத்தடவரைதன்னை
யோரிறைக்குமுன்படுத்தவேலறுமுகத்தொருவன்
சூரெனப்படுநின்னிடைத்தமியனைத்தூதாப்
பேரருட்டிறத்துய்த்தனனென்றனன்பெரியோன்.

இ - ள். பெரியோன்-பெரியோராகிய வீரவாகுதேவர்,—தாரகப் பெயர் இளவலை-தாரகன் என்னும் பெயருள்ள நினது தம்பியையும்,—தடம் வரை தன்னை - பெரிய கிரவுஞ்சமலையையும்,—ஓர் இறைக்கு முன் படுத்த வேல் அறுமுகத்து ஒருவன் - ஒருகணப்பொழுதிலே யழித்தருளிய வேலாயுதத்தையுடைய அறுமுகப்பெருமான்,—சூர் எனப்படும் நின்னிடை - சூரபன்மன் என்று சொல்லப்படும் நின்னிடத்திலே,—தமியனை தூதா பேர் அருள் திறத்து உய்த்தனன் என்றனன் - தமியேனைத் தூதாகப் பெருங்கருணையினால் அனுப்பினார் என்று கூறினார். எ — று. தன் சாரியை. (கசு)

97. கொடுத்திடாதவென்கொண்டவனுரைத்தசொற்கொடுங்கோ
னடத்துமன்னவன்கேட்டலுமாங்கவனம்மேல்
விடுத்தகாரணமென்னையோவிளம்புதியென்ன
வெடுத்துமற்றிவையெம்பிரான்றூதுவனிசைப்பான்.

இ - ள். கொடுத்திடாத வென் கொண்டவன் உரைத்த சொல் - (இங்ஙனம்) புறங்கொடாத வெற்றியைக்கொண்டவராகிய வீரவாகுதேவர் கூறிய வார்த்தைகளை,—கொடுங்கோல் நடத்தும் மன்னவன் கேட்டலும் - (அறநெறியொருவிக்) கொடுங்கோனடாத்துஞ் சூரபன்மராஜன்கேட்டலும்,—அவன் நம்மேல் விடுத்தகாரணம் என்னையோ விளம்புதி யென்ன - அக்குமாரன் நம்மிடத்தில் (உன்னைத்) தூதாகவனுப்பியகாரணம் என்ன சொல்வாயாக என்று கேட்க,—எம்பிரான் தூதுவன் இவை எடுத்து இசைப்பான் - வீரவாகுதேவர் இவைகளையெடுத்துக் கூறுவாராயினர். எ — று.

ஆங்கு, மற்று அசை. ஓகாரம் வினா. (கஎ)

98. மருத்துவன்றனைச்சசியொடுதுரந்துசேண்வதிந்த
புரத்தையாரழற்கூட்டியேயனையவன்புதல்வ
னொருத்தனோடுபல்லமரரையுவளகந்தன்னி
லிருத்தினையெனவினவினனறுமுகத்திறைவன்.

இ - ள். சசியொடு மருத்துவன் தனை துரந்து - (சூரபன்மனே! கேள்) இந்திராணியோடு இந்திரனைத்துரத்தி,—சேண் வதிந்த புரத்தை ஆர் அழற்கு ஊட்டி - ஆகாயத்திலிருந்த சுவர்க்கலோகத்தை அக்கினிக்கிரையாகக் கொடுத்து,—அனையவன் புதல்வன் ஒருத்தனோடு பல் அமரரை உவளகம் தன்னில் இருத்தினை என - அவன் மகனாகிய சயந்தனொருவனோடு பலதேவர்களைச் சிறையில்வைத்தா யென்று,—அறுமுகத்து இறைவன் வினவினன் - அறுமுகப்பெருமான் கேட்டறிந்தார். எ — று.

தன் இரண்டும் சாரியை. ஏகாரம் தேற்றம். (கஅ)

99. இந்திராதிபாயன்முதற்பண்ணவர்யாரும்
வந்துவந்துவேண்டிடுதலுமவர்குறைமாற்றப்
புந்திகொண்டுபன்னிருபுயத்தெம்பிரான்புவிக்க
ணந்தமின்றுறைபாரிடத்தானையோடடைந்தான்.

இ - ள். இந்திராதிபர் அயன்முதல் பண்ணவர் - இந்திராதிபரும் பிரமன் முதலியதேவர்கள் அனைவரும்,—வந்து வந்து வேண்டிடுதலும் - வந்துவந்து (இந்தக்குறைகளைச்சொல்லிப்) பிரார்த்திக்க,—பன்னிரு புயத்து எம்பிரான் - பன்னிரண்டு திருப்புயங்களையுடைய எமது பெருமான்,—அவர் குறை மாற்ற புந்தி கொண்டு - அவர்களது குறைகளை நீக்கியருளும்பொருட்டுத் திருவுள்ளத்திற் சிந்தித்து,—புவிக்கண் அந்தம் இன்று உறை பாரிடர் தானை யோடு அடைந்தான் - பூலோகத்தில் அளவற்றதாகவுள்ள பூதசேனைகளோடும் வந்தருளினூர். எ — று. உம்மை முற்று. (கூகூ)

100. தரையினண்ணிநின்னிளவலைவரையொடுதடிந்து
நெருநலேவந்துசெந்தியின்வைகினுனினையும்
விரைவின்வந்தடவுன்னினுனின்றுநும்மிசையே
யருள்கொடேசிலபுகன்றெனைத்தூண்டினனதுகேள்.

இ - ள். தரையில் நண்ணி - (எம்பெருமான்) பூலோகத்தில்வந்து,—நின் இளவலை வரையொடு தடிந்து - நின் தம்பியாகிய தாரகாசுரனைக் கிரவுஞ்சமலையுடனேயழித்து,—நெருநலே வந்து செந்தியின் வைகினுன் - நேற்றைத்தினத்தில் வந்து (திருச்) செந்தூரில் எழுந்தருளியிருக்கின்றூர்,—நினையும் விரைவின் வந்து அட உன்னினுன் - உன்னையும் விரைந்து வந்து சங்காரஞ்செய்யும்படி திருவுள்ளத்தி லெண்ணினூர்,—இன்று நும்மிசை அருள் கொடு சில புகன்று - இத்தினத்தில் நின்மேல் அருள்கூர்ந்து சிலவிஷயங்களைச் சொல்லி,—எனை தூண்டினன் - (அவைகளையுனக்குச் சொல்லும்படி) என்னையனுப்பினூர்,—அது கேள் - அதனை நீ கேட்பாயாக. எ - று.

ஏகாரம் நெருநலே அருள்கொடே என்பனவற்றில் தேற்றம்; ஏனையதில் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (க00)

101. நிறையுமிந்துவைப்படவராக்கவர்ந்தெனநிகளச்
சிறைபடுத்தியேயமரரைவருத்தினைசெய்யு
மறையொழுக்கமுநீக்கினையுலகமாண்மன்ன
ரறமுமன்றிதுவீரர்தஞ்செய்கையுமன்றால்.

இ - ள். நிறையும் இந்துவை பட அரா கவர்ந்த என - பூரணசந்திரனைப் படத்தையுடைய பாம்புபிடித்துக்கொண்டாற்போல,—அமரரை நிகளம் சிறை படுத்தியே வருத்தினை - தேவர்களை விலங்குபூட்டிச் சிறையில்வைத்து வருத்தினுய்,—செய்யும் மறை ஒழுக்கமும் நீக்கினை - (அவர்கள்) அனுட்டிக்கின்ற வைதிகவொழுக்கத்தினையும் விலக்கினுய்,—இது உலகம் ஆள் மன்னர் அறமும் அன்று - இப்படிச்செய்தல் உலகத்தை ஆளுகின்ற அரசர்களுக்குத் தருமமுறையுமல்ல,—வீரர்தம் செய்கையும் அன்று - வீரர்களுடைய செய்கையுமல்ல. எ — று.

ஆல், ஏ அசை. உம்மை ஒழுக்கமும் செய்கையும் என்பனவற்றில் இறந்ததுதழீஇயவெச்சம்; ஏனையதில் எதிரதுதழீஇயவெச்சம். (க0க)

102. தாதையாகியோன்காசிபனுங்கவன்றனய
னாதலாலுனக்கமரரைச்சிறைசெய்வதறனோ
வேதமார்க்கமும்பிழைத்தனைசிறுபொருள்விழைந்தாய்
நீதியாலுலகளிப்பதேயரசர்தங்நெறியே.

இ - ள். தாதை ஆகியோன் காசிபன் - உனக்குப்பிதாவானவர் காசிபமுனிவர்,—அவன் தனயன் ஆதலால் - (நீ) அவருடையபுத்திரன் ஆதலால்,—அமரரை சிறை செய்வது உனக்கு அறனோ - தேவர்களைச் சிறையில்வைத்தல் உனக்குத்தருமமோ (தருமமல்ல),—வேதம் மார்க்கமும் பிழைத்தனை - வைதிகவொழுக்கமுந் தவறினாய்,—சிறு பொருள் விழைந்தாய் - (விரும்பத்தகாத) அற்பகாரியத்திலாசைகொண்டாய்,—அரசர் தம் நெறி நீதியால் உலகு அளிப்பதே - அரசர்களுக்குரிய முறைமை தருமநீதியோடு உலகத்தை ஆளுவதாகும். எ – று.

ஆங்கு அசை. தம் சாரியை. உம்மை உயர்வுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் முன்னையது பிரிநிலை; பின்னையது அசை.

உன் பிதாவாகிய காசிபமுனிவர் வைதிகநெறியினராதலின் நீயும் அந்நெறிநிற்றலன்றி அதனை விலக்கியொழுகல் நீதியன்றென்பார் "வேதமார்க்கமும் பிழைத்தனை" யென்றார். மனுமுதலிய நீதிநூல்களிலே பிறர்மனைநயத்தன்முதலிய பாதகங்களையொருபோதுஞ் செய்யப்படாதென்று விலக்கவும் நீ அவற்றைக் கைக்கொண்டொழுகுதல் பெருங்குற்றமென்பது போதர "சிறுபொருள் விழைந்தாய்" என்றார். "நீதியாலுலகளிப்பதே அரசர்தந்நெறி" எனவே நீதிக்கு விரோதமாய்க் கொடுங்கோனடாத்தி அரசியற்றப்படாதென்பது வலியுறுத்தப்பட்டது.

சூரபன்மனது செயல் பெரும்பாதகமென்பதை வலியுறுத்தற்கு மேலைச்செய்யுளின் கருத்தைப் பின்னும் அநுவதித்துக்கூறினாரெனவுணர்க. (க0உ)

103. உலத்தின்மாண்டதோட்சலந்தரனந்தகனொருங்கே
கலத்தலில்லதோர்புரத்தவராதியோர்கடவுட்
குலத்தைவாட்டலினிமைப்பினில்வீந்தனர்கொடியோய்
நிலத்தினும்பரைவருத்துதலழகிதோநினக்கே.

இ - ள். உலத்தின் மாண்டதோள் சலந்தரன் - திரண்டகல்லைப்போலச் சிறந்த புயங்களையுடைய சலந்தரனும்,—அந்தகன் - அந்தகாசுரனும்,—ஒருங்கே கலத்தல் இல்லது ஓர் புரத்தவர் ஆதியோர் - ஒருசேரப்பொருந்தாது (பறந்துதிரிகின்ற திரிபுரவாசிகளும் (ஆகிய இவர்) முதலானவர்கள்,—கடவுள் குலத்தை வாட்டலின் - தேவகூட்டங்களை வருத்தினமையால்,—இமைப்பினில் வீந்தனர் - சீக்கிரத்தில் அழிந்தார்கள்,—கொடியோய் - பாவியே,—உம்பரை நிலத்தின் வருத்துதல் இது நினக்கு அழகோ - (மேலுலகத்தவராகிய) தேவர்களைக் (கொண்டுவந்து) பூமியில் (உள்ளமகேந்திரத்தில் சிறைவைத்து) இப்படி வருத்துதல் உனக்கழகோ (அழகல்ல). எ – று.

ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. ஓகாரம் எதிர்மறை.

புரத்தவராதியோர்*****வீந்தனர் எனவே நீயுந் தேவரை வருத்துதலாற்றப்பாது அழிவாய் எனக் குறிப்பித்தவாறாயிற்று. (க0௩)

104. மெய்ம்மைநீங்கியேகொலைகளவியன்றுமேலுள்ள
செம்மையாளரைச்சீறியேயணங்குசெய்தீயோர்
தம்மிலாற்றரும்பழிசுமந்தொல்லையிற்றமரோ
டிம்மைவீடுவரெழுமையுந்துயரினூடிருப்பார்.

இ - ள். மெய்ம்மை நீங்கியே கொலை களவு இயன்று - உண்மையாகிய ஒழுக்கத்தைநீங்கிக் கொலைகளவாதி பாதகங்களைச் செய்து,—மேலுள்ள செம்மை யாளரை சீறியே அணங்கு செய் தீயோர் - மேலாயுள்ள பெரியோர்களைக் கோபித்துத் துன்பஞ் செய்கின்ற கொடியவர்கள்,—தம்மில் ஆற்ற அரும் பழி சுமந்து - தம்மாற் பொறுத்தற்கரிய பழிகளைச்சுமந்து,—ஒல்லையில் தமரொடு இம்மை வீடுவர் - விரைவாகச் சுற்றத்தாரோடும் இப்பிறப்பிலே யழிந்துபோவார்கள் (அம்மட்டோ அப்பாதகங்காரணமாக),—எழுமையுந் துயரினூடு இருப்பார் - எழுபிறப்பினும் பெருந்துக்கத்தையனுபவிப்பார்.

ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. பெரியோர்களை வருத்திய பாவிகள் தாமாத்திரமோ இம்மையிற்றஞ்சுற்றத்தோடழிந்து எழுபிறப்பினுந் துக்கத்தினையனுபவிப்பர் என்பது கருத்து. (க0௪)

105. இங்ஙனந்திருநீங்கியேதுயருழந்திறப்ப
ரங்ஙனம்பெரிதாரிருண்மூழ்குவரதற்பி
னுங்ஙனம்பிறந்தயருவரென்றுமீதுலவா
ரெங்ஙனுய்வரோபிறர்தமக்கல்லல்செய்திடுவோர்.

இ - ள். பிறர் தமக்கு அல்லல் செய்திடுவோர் - (சிறிதும் இரக்கமின்றிப்) பிறருக்குத் துன்பத்தை வருவிக்கின்ற துட்டர்கள்,—இங்ஙனம் திரு நீங்கியே துயர் உழந்து இறப்பர் - இவ்வுலகத்திலே செல்வத்தையிழந்து துக்கத்தையனுபவித்து இறப்பார்கள்,—அங்ஙனம் பெரிது ஆர் இருள் மூழ்குவர் - இறந்தபின்னர் (யாதனுசரீரிகளாய்) பெரிய நரகங்களிலே யழுந்துவார்கள்,—அதன் பின் - அப்படி நரகவேதனையை யனுபவித்த பின்,—உங்ஙனம் பிறந்து அயருவர் - (அக்கன்மசேடத்தால் மீட்டும்) இங்கேவந்து பிறந்து (கொடிய நோய்முதலியவற்றால்)வருந்துவார்கள்,—என்றும் ஈது உலவார் - எப்பொழுதாவது இத்துக்கமொழிந்து நற்கதியடையமாட்டார்கள்,—எங்ஙன் உய்வரோ - எப்படி உய்வார்கள். எ — று.

ஏகாரம் தேற்றம். ஓகாரம் அசை. உம்மை முற்று. பிறவுயிர்களுக்குத் துன்பஞ் செய்த கொடும்பாவிகள் செல்வமிழந்து பெருந்துக்கத்தையனுபவித்து இறந்தபின்னர் கும்பிபாகம் ரௌரவம் முதலிய நரகங்களிலே வீழ்ந்தழுந்தி, பின்பும் தொலையாத அக்கன்மசேடத்தால் மீட்டும் மீட்டும் பிறந்து வருந்துவார் என வலியுறுத்திக் கூறினரென்பது தாற்பரியம். இச்செய்யுளால் பிறருக்கு ஒருபொழுதும் இடுக்கண் செய்யக்கூடாதென்பது பசுமரத்தாணிபோல் நாட்டப்பட்டது காண்க. (க0ரு)

106. தீதுநல்லனவாயிருதிறத்தவுந்தெரிந்தே
யேதிலார்க்கவைசெய்வரேற்றமக்குடனெய்தும்
பேதைநீரையாயமரரைச்சிறைசெய்தபிழையான்
மாதுயர்ப்படலன்றியேயிறுதியும்வருமால்.

இ - ள். தீது நல்லன ஆயிரு திறத்தவும் தெரிந்து - தீமை நன்மைகளாகிய இரண்டு பிரிவுகளையும் அறிந்து,—ஏதிலார்க்கு அவை செய்வரேல் - பிறருக்கு அவைகளைச்செய்வார்களாயின்,—தமக்கு உடன் எய்தும் - தமக்கு உடனே (அவ்வினைப்பயன்களாகிய சுகமுந் துக்கமும்) வந்து சேரும்,—பேதை நீரையாய் அமரரை சிறை செய்த பிழையால் - (நீ) அறிவில்லாதவனாய்த் தேவர்களைச் சிறைவைத்த குற்றத்தால்,—மா துயர்ப்படல் அன்றியே இறுதியும் வரும் - பெருந்துன்பத்தையனுபவித்தலன்றி (உனக்கு)நாசமும் வந்து சம்பவிக்கும். எ — று.

ஏகாரம் இரண்டும் ஆலும் அசை. உம்மை முன்னையது முற்று; பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம்.

தீதுநல்லன****எய்தும் எனவே இது நன்மையென்றும் இது தீமையென்றும் உய்த்துணர்ந்து அவைகளைப் பிறருக்குச் செய்வாராயின், அவ்வினைகளின் பயனாகிய சுகதுக்கங்களைத் தப்பாமலனுபவிப்பர்; அங்ஙனமே நீயும் தேவரைச் சிறைசெய்து வருந்திய இப்பெரும்பாதகத்தால் அதன் பிரயோசனமாகிய பெருந்துக்கமனுபவித்தலன்றி உனக்கு நாசமும் வரும் என வலியுறுத்திக்கூறினர் என்க. (க0சு)

107. அண்டராற்றலைவவ்வியதாரகனாவி
யுண்டகொற்றவேலிருந்ததுவிடுத்திடினுனையுங்
கண்டதுண்டமதாக்குமாலறநெறிகருதித்
தண்டம்வல்லையிற்புரிந்திலனித்துணைதாழ்த்தான்.

இ - ள். அண்டர் ஆற்றலை வவ்விய தாரகன் ஆவி உண்ட கொற்றம் வேல் இருந்தது - தேவர்களுடைய வலிமையைக் கவர்ந்து (ஜயத்தோடுவாழ்ந்த) தாரகாசுரனது உயிரைக்கவர்ந்த வெற்றிவேலாயுதம் இருக்கின்றது,—விடுத்திடின் உனையும் கண்டம் துண்டமது ஆக்கும் - விடுத்தால் உன்னையுங் கண்டதுண்டமாக வெட்டியெறியும்,—அறம் நெறி கருதி தண்டம் வல்லையில் புரிந்திலன் இ துணை தாழ்த்தான் - தருமமுறையை நினைத்துத் தண்டனையை விரைந்துசெய்யாதவராய் இதுவரையுந் தாமதித்திருக்கின்றார்.

ஆல் அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை இறந்தததழீஇயவெச்சம்.

"அண்டர்****இருந்தது" எனவே அப்பெருமான் திருக்கரத்திலிருக்கும் வேலாயுதத்தினுடைய மகாமகிமையும், "விடுத்திடின்****ஆக்கும்" எனவே ஏனைய தேவப்படைக்கலங்களைப்போல அழிதலும் புறங்கொடுத்தலுமில்லாது உன்னை நிச்சயமாய்க் கொல்லுமெனவும், "அறநெறிகருதி****தாழ்த்தான்" எனவே தருமமுறையாகவே உன்னைத் தண்டிக்கவேண்டுமெனக்கருதினரெனவும் இதனால் பெருந் தண்ணளியுடையாரெனவுங் கூறினரென்பது கருத்து. (க0எ)

108. கெடுதலில்லதோரமரர்கள்சிறையிடைக்கிடப்ப
விடுதல்செய்தனைபல்லுகமவர்தமையின்னே
விடுதலுய்வகையாகுமான்மறுத்தியேல்விரைந்து
படுதலேநினக்குறுதியாமுறையுமப்பரிசே.

இ - ள். கெடுதல் இல்லதோர் அமரர்கள் சிறையிடை கிடப்ப பல் உகம் இடுதல் செய்தனை - அழிவில்லாததேவர்கள்சிறையிலே(வருந்திக்)கிடக்கும்படி அனேகயுகங்களாக இட்டுவைத்தாய்,-அவர் தமை இன்னே விடுதல் உய்வகை ஆகும்-அவர்களை இப்பொழுது சிறைவிடுத்தால் நீ பிழைத்தற்கேதுவாகும்;—மறுத்தியேல் - (சிறைவிடுதற்கு நீ) மறுப்பாயாயின்,—விரைந்து படுதலே நினக்கு உறுதியாம் - விரைந்து இறந்துபோதலே உனக்கு உண்மையாகும்,—முறையும் அ பரிசே - நீதியும் அதுதான்.

ஓர், ஆல் அசை. தம் சாரியை. ஏகாரம் இன்னே என்பதில் அசை; ஏனையவற்றில் தேற்றம். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம்.

தேவச்சிறையைவிடின் உய்வாய் எனவும் மறுத்தியேல் நிச்சயமாய் இறந்துபடுவாயெனவும் வலியுறுத்திக்கூறினரென்க. (க0அ)

109. ஆண்டளப்பிலநோற்றனைவேள்விநின்றாற்றி
மூண்டதீயிடைமூழ்கினோய்க்கெந்தைமுன்னளித்த
மாண்டிடாதபேராயுளைத்திருவொடும்வாளா
வீண்டொர்புன்னெறியாற்றியேயிழுக்குவதியல்போ.

இ - ள். அளப்பு இல ஆண்டு நோற்றனை - அனேகவருடங்களாகத்தவஞ்செய்து,—வேள்வி நின்று ஆற்றி - யாகத்தை நிலைநின்று செய்து,—மூண்ட தீயிடை மூழ்கினோய்க்கு - (சிவபெருமான்வாராமையினால்) சுவாலித்தெரிகின்ற அக்கினியிலே விழுந்து இறந்த உனக்கு,—எந்தை முன் திருவொடும் அளித்த மாண்டிடாத பேர் ஆயுளை - சிவபெருமான் ஆதிகாலத்தில் செல்வத்தோடும் கொடுத்தருளிய அழியாத தீர்க்காயுசை,—வாளா ஈண்டு ஓர் புல் நெறி ஆற்றி இழுக்குவது இயல்போ - வீணாக, இங்கே ஓர் அற்ப காரியத்தைச்செய்து வழுவவிடுவது முறைமையோ (முறைமையல்ல). எ — று.

ஏகாரம் பிரிநிலை. ஓகாரம் எதிர்மறை. எம்பெருமான் உனக்குத்தந்தருளிய அழியாத ஆயுளையும் ராசசம்பத்தையும் வீணாகவோர் புன்றொழிலைச்செய்து இழந்துவிடுதல் முறைமையன்று என வலியுறுத்திக்கூறினாரென்க. (க0க)

110. சையமேற்படுவளத்தொடுநீயுநின்றமரு
முய்யவேண்டுமேலமரர் தஞ்சிறையினையொழித்து
வையமேலறத்தியல்புளிவாழிமற்றிதனைச்
செய்யலாயெனினீங்குவந்தடுவனுற்றிண்ணம்.

இ - ள். சையம் மேற்படு வளத்தொடு நீயும் நின்தமரும் உய்ய வேண்டுமேல் - மலையினும்பார்க்க மேம்பட்டசெல்வத்தோடு நீயும் உன்சுற்றத்தாரும் பிழைக்கவேண்டுமானால்,—அமரர்தம் சிறையினை ஒழித்து - தேவர்களுடைய சிறையைவிட்டு,—வையம் மேல் அறத்து இயல்புளி வாழி - உலகத்தில் தருமமுறையாகவாழ்ந்திரு,—இதனை செய்யலாயெனின் - இதனைச்செய்யாது விடுவாயாகில்,—ஈங்கு வந்து அடுவன் திண்ணம் - (கந்தஸ்வாமி) இவ்விடத்தில் வந்து உன்னை நிச்சயமாகக்கொல்லுவார். எ - று.

மற்று, ஆல் அசை. தம் சாரியை. உம்மைகள் எண்.

செல்வத்தோடு நீயும் நின் சுற்றத்தாரும் உய்யவேண்டுமாயின் தேவச்சிறையை விடுத்து தருமமுறைப்படி வாழக்கடவை. இதனை மறுப்பையேல் அப்பெருமான் இங்கு வந்து உன்னைக் கொல்லுவது நிச்சயமென மேலும் வலியுறுத்திக்கூறினாரென்க. (கக0)

111. என்றுமற்றிவையாவையும்வரைபகவெறிந்தோ
னுன்றனக்கறைகென்றனனீங்குநீயும்பர்
வன்றளைச்சிறைநீக்கியேயறத்தினிவ்வளத்தை
நன்றுதுய்த்தனைநெடிதுநீவாழ்கெனநவின்றான்.

இ - ள். என்று இவை யாவையும் - என்றிந்தவசனங்களெல்லாவற்றையும்,—வரை பக எறிந்தோன் உன் தனக்கு அறைக என்றனன் - கிரவுஞ்சமலை பிளக்கும்படி வேற்படையைவிடுத்தருளிய கந்தஸ்வாமி உனக்குச் சொல்லும்படி (என்னை) ஏவினார்,—ஈங்கு நீ உம்பர் வன் தளை சிறை நீக்கியே - (ஆதலால்) இவ்விடத்தில் நீ தேவர்களது வலிமையாகிய விலங்கு பூட்டிய சிறையைவிடுத்து,—அறத்தின் இ வளத்தை நன்று துய்த்தனை - தருமமுறையாக இந்தச்செல்வத்தைச் சுகமாகவனுபவித்து,—நெடிது நீ வாழ்க என நவின்றான் - நெடுங்காலம் நீவாழ்க என்று ஆசீர்வதித்தார். எ - று.

மற்று அசை. உம்மை முற்று. தன் சாரியை. ஏகாரம் தேற்றம்.

எம்பெருமான் இந்தநியாயங்கள் எல்லாவற்றையும் உனக்கு அறிவிக்கும்படி எனக்குக்கட்டளையிட்டருளினர். ஆதலால் இனி நீ தேவச்சிறையை விடுத்துத் தருமமுறைப்படி இச்செல்வத்தை யனுபவித்துவாழக்கடவாய் என ஆசீர்வதித்துக் கூறினரென்க.()

112. மறமகன்றிடாவீரனிங்கினையனவகுத்தே
யறையும்வாசகங்கேட்டலும்வெகுளிமூளகத்தன்
பொறியுமிழ்ந்திடுகண்ணினன்புகையுமிழுயிர்ப்ப
னெறியுமங்கையனிறந்திடுமுறுவலனிசைப்பான்.

இ - ள். மறம் அகன்றிடா வீரன் இனையன வகுத்தே அறையும் வாசகம் கேட்டலும் - வலிமைநீங்காத வீரவாகுதேவர் இத்தன்மையாக வகுத்துக்கூறும் வார்த்தையைச் (சூரபன்மன்) கேட்டபோது,—வெகுளி மூள் அகத்தன் - கோபமதிகரிக்கின்ற மனதையுடையவனும்,—பொறி உமிழ்ந்திடு கண்ணினன் - நெருப்புப்பொறிகளைச் சொரிகின்ற கண்களையுடையவனும்,—புகை உமிழ் உயிர்ப்பன் - புகைவீசாநின்ற சுவாசத்தையுடையவனும்,—எறியும் அங்கையன் - ஒன்றோடொன்று அடிக்கின்ற அகங்கைகளையுடையவனும்,—இறந்திடு முறுவலன் - பெருஞ்சிரிப்பையுடையவனுமாகி,—இசைப்பான் - கூறுகின்றான். எ — று. ஏகாரம் பிரிநிலை. (ககஉ)

113. மேலையாயிரத்தெட்டெனுமண்டமும்வென்றே
யேலுகின்றதோர்தனியிறையாகியவெனக்குக்
கோலவாலெயிறின்னமுந்தோன்றிலாக்குதலைப்
பாலனேகொலாமினையனபுந்திகள்பகர்வான்.

இ - ள். மேலை ஆயிரத்தெட்டு எனும் அண்டமும் வென்றே ஏலு கின்றது ஓர் தனி இறையாகிய எனக்கு - மேலாகிய ஆயிரத்தெட்டு என்று சொல்லப்படும் அண்டங்களையும் ஜயித்து இயல்புடன்வாழ்ந்திருக்கின்ற ஒப்பற்றமகாராஜனாகிய எனக்கு,—கோலவால் எயிறு இன்னமும் தோன்றிலா குதலை பாலனே கொல் இனையன புந்திகள் பகர்வான் - அழகிய வெண்மையாகியபற்கள் இன்னமும் முளையாத மழலைச்சொற்களையுடைய சிறுவன்றானோ இத்தன்மையான புத்திகளைச்சொல்லுகின்றவன். எ - று.

ஆம் அசை. கொல் ஐயம். உம்மை முன்னையது முற்று; பின்னையது இழிவுசிறப்பு. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. (ககங)

114. விறலின்மேதகுமவுணராம்வலியிலார்மிகவும்
வறியராகியதேவராமேலவர்மழலைச்
சிறுவராந்தனிமுதல்வற்குமமைச்சியல்செய்வா
ரெறியுநேமிசூழுலகத்துவழக்கநன்றிதுவே.

இ - ள். விறலின் மேதகும் அவுணராம் வலியிலார் - வெற்றியின்மேம்பட்ட அசுரராம் வலிமையில்லாதவர்,—மிகவும் வறியராகிய தேவராம் மேலவர் - மிகவும் ஏழைகளாகியதேவராம் உயர்ந்தவர்,—தனி முதல்வற்கும் அமைச்சியல் செய்வார் மழலைச் சிறுவராம்-இராஜாதிராஜராகிய அரசருக்கும் மந்திரிமார்களைப்போலப் புத்திசொல்லத்தக்கவர்கள் மழலைச்சொற்களையுடைய சிறுகுழந்தைகளாம்,—எறியும் நேமி சூழ் உலகத்து இது வழக்கம் நன்று - (அலை) வீசுகின்ற சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் இந்தவழக்கம் நன்றாயிருந்தது. எ — று.

ஏகாரம் அசை. உம்மை முன்னையது இழிவுசிறப்பு; பின்னையது உயர்வுசிறப்பு. ()

115. நறைகொடார்முடியவுணர்தங்குலத்தினைநலித்து
வறுமைசெய்தனர்கடவுளரவர்திருமாற்றிக்
குறியவேவலுங்கொண்டனரொழுக்கமுங்கொன்றேன்
சிறையும்வைத்தனனங்குடித்தமர்முறைசெய்தேன்.

இ - ள். கடவுளர் நறை கொள் தார் முடி அவுணர்தம் குலத்தினை நலித்து வறுமை செய்தனர் - தேவர்கள் தேன்பொருந்திய மாலையணிந்த முடியினையுடைய அசுரகுலத்தைத் துன்பப்படுத்தி ஏழைகளாகச் செய்தார்கள் (ஆதலால்),—அவர் திரு மாற்றி குறிய ஏவலும் கொண்டனன் - அவர்களுடைய (அரசுரிமைமுதலிய) செல்வங்களைநீக்கி (மீன் பிடித்தன்முதலிய) எளிய ஏவல்களையும் செய்வித்தேன்,—ஒழுக்கமும் கொன்றேன் - (அவர்களது) வைதிகாசாரங்களையும் அழித்தேன்,—சிறையும் வைத்தனன் - சிறையிலும் வைத்தேன்,—நம் குடி தமர் முறைசெய்தேன் - நம்முடையவம்சத்தவர் (செய்யும்) முறைமையை யானுஞ்செய்தேன். எ — று.

தம் சாரியை. உம்மைகள் இறந்தததுதழீஇயவெச்சம். நம்மவர் வழக்கத்தையன்றிப் புதிதாயொன்றுஞ் செய்யவில்லையென்றுனென்க. (ககடு)

116. நெடியமான்மகனுறங்குநாளாணையைநீங்கித்
தொடுபெருங்கடலுலகெலாங்கொள்ளினுஞ்சுரரை
விடுவனல்லன்யான்வீடருஞ்சிறையினைவிண்மே
லுடையவண்டத்தினுச்சியினொருதலையுய்ப்பேன்.

இ - ள். நெடிய மால் மகன் உறங்குநாள் - நெடியவடிவத்தையுடைய விஷ்ணுவின் புதல்வரான பிரமதேவர் நித்திரைசெய்கின்ற (இராக்) காலத்தில்,—ஆணையை நீங்கி தொடுபெரும் கடல் உலகு எலாம் கொள்ளினும் - ஆணையைக்கடந்து (முன்னுளிலே சகரரால்)தோண்டப்பட்ட பெருங்கடலானது உலகமுழுதையும் மூடிக்கொண்டாலும்,—யான் சுரரை விடுவன் அல்லன்-தேவர்களை நான் (வைத்த சிறையினின்றும்)விடேன்,—வீடருஞ் சிறையினை விண்மேல் உடைய அண்டத்தின் உச்சியின் ஒருதலை உய்ப்பேன் - (அச்சமயத்தில்) விடுத்தற்கரிய சிறையை ஆகாயத்தினது அண்டத்தின் முகட்டிலே நிச்சயமாக வைப்பேன். எ — று. உம்மை உயர்வுசிறப்பு. (ககசு)

117. தப்பல்செய்திடுமகபதிமுதலினோர்தமையு
மிப்பதிக்கணேகொணர்ந்தனன்சிறைசெயவிருந்தேன்
கைப்புகுஞ்சிறைவிடுவனோவிடுகிலன்கண்டா
யொப்பருந்திறற்சூரனென்றொருபெயருடையேன்.

இ - ள். ஒப்பு அரும் திறல் சூரன் என்று ஒரு பெயர் உடையேன் - ஒப்பில்லாத வலிமையையுடைய சூரன் என்று சொல்லப்படும் ஒரு பெயரினையுடையேனாகியயான்,—தப்பல் செய்திடு மகபதி முதலினோர் தமையும் - (எனக்குப்பயந்து) தப்பியோடித்திரிகின்ற இந்திரன்முதலானவர்களையும்,—இ பதிக்கணே கொணர்ந்தனன் சிறை செய் இருந்தேன் - இம்மகேந்திரத்தில் (தேடிப்பிடித்துக்) கொண்டுவந்து சிறைவைக்கவேண்டுமென்றெண்ணியிருந்தேன்,—(அப்படியிருக்க)கை படும் சிறை விடுவனோ விடுகிலன்- அகப்பட்ட (இந்தச்) சிறையைவிடுவேனோவிடேன். எ — று.

கண்டாய் முன்னிலையசை. தம் சாரியை. ஏகாரம் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. உம்மை இறந்ததுதழீயவெச்சம். (ககஎ)

118. மின்னுவச்சிரப்படிவமும்வேறுபல்வரமு
முன்னொர்ஞான்றுதன்றாதையெற்களித்திடுமுறையைப்
பின்னர்யாவரேபெயர்ப்பவர்பெருஞ்சமரியற்றி
யென்னையாற்றலால்வென்றிடுநீர்மையோரெவரே.

இ - ள். மின்னு வச்சிரம் படிவமும் - விளங்குகின்ற வச்சிரயாக்கையையும்,—வேறு பல் வரமும் - வேறாகவுள்ள பற்பல வரங்களையும்,—முன் ஓர் ஞான்று - முன்னொருகா

லத்தில்,—தன் தாதை எற்கு அளித்திடு முறையை - நீ சொல்லிய குமரனது பிதாவாகிய சிவபெருமான் எனக்குத்தந்தருளிய (அரசு) முறைமையையும்,—பின்னர் யாவரே பெயர்ப்பவர் - பின்பு எவர் அழிப்பவர்,—பெரும் சமர் இயற்றி ஆற்றலால் என்னை வென்றிடு நீர்மையோர் எவர் - பெரும்போரைச்செய்து வலிமையினால் என்னை வெல்லத்தக்க பராக்கிரமமுடையவர் யாவர் [ஒருவருமில்லை.]

ஏகாரம் இரண்டும் அசை. உம்மைகள் எண். (ககஅ)

119. தானமாமுகத்தாரகவெம்பியைத்தடிந்த
மானவேற்படையவன்மிசைவருவதுவலித்தேன்
பானல்வாய்ச்சிறுசேயொடுநீயமர்பயிற
லூனமேயெனத்தடுத்தனராதலாலொழிந்தேன்.

இ - ள். தானம் மாமுகம் தாரக எம்பியை தடிந்த - மதம்பொருந்திய யானைமுகத்தினையுடைய தம்பியாகிய தாரகாசுரனைக்கொன்ற,—மானம் வேற்படை அவன்மிசை வருவது வலித்தேன் - வலிய வேலாயுதத்தைத்தரித்த குமரன்மேற் (போருக்கு) வருதலைத்துணிந்தேன்,—பால் நல் வாய் சிறு சேயொடு - முலைப்பாலருந்த வாயையுடைய சிறுபிள்ளையோடு,—நீ அமர் பயிறல் ஊனமே என தடுத்தனர் - நீர் போர்செய்தல் குற்றமேயாகுமென்று (இங்குள்ளமந்திரிமார்) தடுத்தார்கள்,—ஆதலால் ஒழிந்தேன் - அதனால் வராமலிருந்தேன். எ — று.

மா அசை. ஏகாரம் தேற்றம். (ககக)

120. தூங்குகையுடைத்தாரகவிளவலைத்தொல்லை
யோங்கறன்னொடுமட்டதுநென்னலேயுணர்ந்தேன்
பாங்கினோரையப்பாலன்மேலுந்தியென்பழியும்
வாங்குகின்றனனாளையேகாண்டியான்மன்னோ.

இ - ள். தூங்கு கை உடை தாரக இளவலை-தொங்குகின்ற கையையுடைய தாரகாசுரனாகிய தம்பியை,—தொல்லை ஓங்கல் தன்னொடும் அட்டது நென்னலே உணர்ந்தேன் - பழமையாகிய கிரவுஞ்சகிரியோடும் அழித்தமையை நேற்றே யறிந்தேன்,—பாங்கினோரை அ பாலன் மேல் உந்தி - என்பக்கத்துள்ள அசுரவீரரை யச்சிறுவன்மேற் போருக்கனுப்பி,—என்பழியும் வாங்குகின்றனன் நாளையே - என்பழியையும் நாளைக்கே வாங்குகின்றேன்,—காண்டி - (நீ யிதனை) யறி. எ — று.

ஆல், மன், ஒ அசை. ஏகாரம் இரண்டும் தேற்றம். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். தன் சாரியை. (கஉ0)

121. அரிகளெண்ணிலரிந்திரரெண்ணிலரல்லாச்
சுரர்களெண்ணிலரண்டங்கடொறுந்தொறுமிருந்தார்
செருவினாற்றலர்வழுத்தியேபோயினர்சிவன்க
ணொருநல்வந்திடுசிறுவனோவென்னெதிர்நிற்பான்.

இ - ள். எண்ணிலர் அரிகள் - அநேகம்விஷ்ணுக்களும்,—எண்ணிலர் இந்திரர் - அநேகம் இந்திரர்களும்,—அல்லா எண்ணிலர் சுரர்கள் - அவர்களையொழிந்த அநேகந் தேவர்களும்,—அண்டங்கள் தொறுந் தொறும் இருந்தார் - அண்டங்கடோறுமிருந்தார்கள்,—செருவின் ஆற்றலர் - (அவர்கள்) யுத்தத்திலே ஆற்றாதவர்களாய்,—வழுத்தியே போயினர் - (என்னை) வணங்கிக்கொண்டுபோனார்கள்,—(அப்படியிருக்க) சிவன்கண்

நெருநல் வந்திடு சிறுவனோ என் எதிர் நிற்பான் - சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணில் நேற்றுப்பிறந்த பிள்ளைதானா எனக்கு எதிரேநின்று போர்செய்யத்தக்கவன்[போர்செய்யத்தக்கவனல்லன் என்றபடி.] எ – று.

ஏகாரம் தேற்றம். ஓகாரம் வினா. (கஉக)

122. ஓதியென்பலவமரரைவிடுகிலனுணர்ச்சி
யேதுமில்லதோர்மகவுதன்புன்மொழியேற்றுப்
பேதையாதலினொற்றனாய்வந்தனைபிழைத்துப்
போதிநின்னுயிர்தந்தனன்யானெனப்புகன்றான்.

இ - ள். பல ஓதி என் - அனேகம்வார்த்தைகளைக் கூறுவதனால் என்னபிரயோசனம்,—அமரரை விடுகிலன் - தேவர்களைச் (சிறையினின்றும்) விடேன்,—பேதை ஆதலின் - (நீ) அறிவில்லாத மூடனாதலால்,—உணர்ச்சி ஏதும் இல்லது ஓர் மகவுதன் புன்மொழி ஏற்று ஒற்றனாய் வந்தனை - அறிவுசிறிதுமில்லாத ஒருகுழந்தையின் அற்ப பேச்சைக்கேட்டுக்கொண்டு தூதனாகவந்தாய்,—யான் நின் உயிர் தந்தனன் - நான் உன்னுயிரைத்தந்தேன்,—பிழைத்துப் போதி என புகன்றான் - (நீ) உயிருள்ளவனாகவே போகக்கடவாயென்று சொன்னான். எ – று.

தன் சாரியை. உம்மை முற்று. (கஉஉ)

123. அகிலமாள்பவனிங்கிவைமொழிதலுமையன்
வெகுளிவெங்கனல்சிந்திடவுளஞ்சுடவெருண்டு
புகையுமங்கியுமுயிர்ப்புறமயிர்ப்புறம்பொடிப்ப
நகையும்வந்திடச்சிவந்திடவிழியிவைநவில்வான்.

இ - ள். அகிலம் ஆள்பவன் இவை மொழிதலும் - உலகமெல்லாவற்றையும் ஆளுகின்றவனாகிய சூரபன்மன் இந்தவசனங்களைக் கூறுதலும்,—ஐயன் வெகுளி வெம் கனல் சிந்திட - வீரவாகுதேவர் கோபமாகிய கொடிய அக்கினிசிந்தவும்,—உளம் சுட-மனஞ்சுடவும்,—புகையும் அங்கியும் உயிர்ப்புற - புகையும் அக்கினியுஞ் சுவாசத்திலிருந்து வரவும்,—புறம் மயிர் பொடிப்ப - புறத்திலுள்ள ரோமங்கள் பொடியாகிறபவும்,—நகையும் வந்திட - சிரிப்புந் தோன்றவும்,—விழி சிவந்திட - கண்கள் சிவக்கவும்,—வெருண்டு-கோபக்குறிப்போடு,—இவை நவில்வான் - இந்தவசனங்களைக் கூறுகின்றார். எ – று.

இங்கு அசை. உம்மை முன்னையவை எண்; பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம்

124. உய்யலாவதோர்பரிசினையுணர்வுறாதுழலுங்
கையகேண்மதிகட்செவிமதியொடுகலந்த
செய்யவார்சடைப்பழம்பொருட்டிருநுதல்விழிசே
ரையன்மேதகவுணர்ந்திலைபாலனென்றறைந்தாய்.

இ - ள். உய்யல் ஆவது ஓர் பரிசினை உணர்வுறாது உழலும் கைய - உய்யத்தக்க நல்வழியை ஒருசிறிதுமாராய்ந்தறியாத கீழ்மகனே,—கேண் மதி - கேட்பாயாக,—கட்செவி மதியொடு கலந்த செய்ய வார்சடை பழம்பொருள் திரு நுதல் விழிசேர் ஐயன் மேதகவு உணர்ந்திலை-பாம்பை இளம்பிறையோடு கலந்தணிந்த சிவந்த நீண்ட சடையையுடையராகிய சிவபிரானது நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றிய கந்தஸ்வாமியினது மேன்மையை அறிந்தாயில்லை,—பாலன் என்று அறைந்தாய் - (அவரைச்) சிறுவனென்று கூறினை. எ – று.

அறிந்தாற் சிறுவனென்று கூறமாட்டாயென்பது தாற்பரியம். (கஉச)

125. மானுடத்தரைத்தேவென்பர்வானகத்தவரை
யேனைமுத்தொழிலவரென்பரிருவர்தங்களையு
நானிலத்தினிற்பரம்பொருளிவரெனநவில்வா
ரானசொற்றிறமுகமனேசரதமற்றன்றால்.

இ - ள். மானுடத்தரை தேவு என்பர் - மனிதரைப் (புகழவேண்டுமானால்) தேவர்களென்று சொல்லுவார்கள்,—வானகத்தவரை முத்தொழிலவர் என்பர் - தேவர்களை முத்தொழிலையுடையவர் என்று சொல்லுவார்கள்,—இருவர் தங்களையும் நானிலத்தினில் பரம் பொருள் இவரென நவில்வார் - பிரமாவையும் விட்டுணுவையும் உலகத்திலே பரம்பொருளாகிய மெய்க்கடவுள் இவர் என்று சொல்லுவார்கள்,—ஆன சொற்றிறம் முகமனே - அவ்வாறு சொல்லப்படுகின்ற சொற்கள் உபசாரவார்த்தையே,—சரதம் அற்று அன்று - உண்மை அப்படியல்ல. எ — று.

ஏனை, ஆல் அசை. தம் சாரியை. (கஉ௫)

126. ஆயபுல்லியபுகழ்ச்சிபோற்கொள்ளலையறிவோர்
தேயமாவதுயார்க்குமெட்டாததுதெளியிற்
றூயவீடுபேறருளுவதுபநிடத்துணிவாம்
வாய்மையாவதுபுகலுவன்கேளெனவகுப்பான்.

இ - ள். ஆய புல்லிய புகழ்ச்சிபோல் கொள்ளலை - மேற்போந்த அத்தன்மையாகிய சிறிய புகழ்ச்சியைப்போல நினையாதே,—அறிவோர் தேய மாவது - தத்துவஞானிகளால் தியானிக்கப்படுவது,—யார்க்கும் எட்டாதது - (மற்றைய) யாவர்க்குமெட்டாத அதீதமாகவுள்ளது,—தெளியில் தூய வீடு பேறு அருளுவது - தெளிந்துணர்ந்தால் பரிசுத்தமானமோட்சவின்பத்தைக் கொடுப்பது,—உபநிடதத்துணிவு ஆம் வாய்மை ஆவது - உபநிடத்துக்களிலே சித்தாந்தபட்சமாகப்பிரதிபாதிக்கப்படும் நிச்சயமாகிய உண்மையாயுள்ளது (இவ்வியல்பினையுடையபரம்பொருளிலக்கணத்தை),—புகலுவன் கேள் என வகுப்பான் - சொல்லுவேன் கேளென்று விரித்துரைப்பாராயினர். எ — று.

அருள்வழிநின்று சந்தேக விபரீத மயக்கமறத் தியானிக்கப்படுவதும், அதீதமாகவுள்ளதும், அறிந்தால் வீடுபேற்றைக்கொடுப்பதும், உபநிடத்துக்களிலே சித்தாந்தபட்சஞ் செய்து நிச்சயமாகப்பிரதிபாதிக்கப்படுவதும் ஆகிய யதார்த்தவஸ்துவின் இலக்கணத்தைச்சொல்லுவேன் என்பது கருத்து. இதனால் தியாதா, தியானம், தியேயம் என்னும் மூன்றும் பெறப்படும். (கஉசு)

127. மண்ணளந்திடுமாயனும்வனசமேலவனு
மெண்ணரும்பகறேடியுங்காண்கிலாதிருந்த
பண்ணவன்னுதல்விழியிடைப்பரஞ்சுடருருவா
யுண்ணிறைந்தபேரருளினன்மதலையாயுதித்தான்.

இ - ள். மண் அளந்திடு மாயனும் - (முன்னாளிலே) பூமியை ஓரடியினாலளந்த விஷ்ணுவும்,—வனச மேலவனும் - பதுமாசனராகிய பிரமதேவரும்,—எண்ண அரும் பகல் தேடியும் - (பன்றியாகவும் அன்னமாகவும் உருவங்கொண்டு) அளவில்லாதகாலம் (அடியையும் முடியையுந்) தேடியும்,—காண்கிலா திருந்த பண்ணவன் நுதல்விழியிடை - காணப்படாதிருந்த சிவபெருமானது நெற்றிக்கண்ணினின்றும்,—பரம் சுடர் உருவாய் - பரஞ்சோதிவடிவமாய்,—உள் நிறைந்த பேர் அருளினால் - திருவுள்ளத்திலேநிறைந்த பெருங்கருணையினால்,—மதலையாய் உதித்தான் - பாலகர்போலத் திருவவதாரஞ்செய்தருளினர். எ — று.

உம்மை முன்னையன எண்ணும் உயர்வுசிறப்பும்; பின்னையது உயர்வுசிறப்பு. ()

128. முன்னவர்க்குமுன்னுருமேவோர்தமக்குமுற்பட்டுத்
தன்னைநேரிலாதீசனுந்தனிப்பெயர்தாங்கி
யின்னுயிர்க்குயிராயருவுருவமாயெவர்க்கு
மன்னைதாதையாயிருந்திடும்பரமனேயவன்காண்.

இ-ள். முன்னவர்க்கும் முன்னுருமேவோர்தமக்கும் முற்பட்டு - முதல்வர்களென மதிக்கப்படுவோர்களுக்கெல்லாம் முதல்வராயிருப்பவர்க்கும் முதல்வராய்,—தன்னை நேரிலாத ஈசனும் தனி பெயர் தாங்கி - தமக்குயர்வொப்பில்லாத ஈசன் ஆகிய ஒரு பெயரைக்கொண்டு,—இன்னுயிர்க்கு உயிராய் - இனிய ஆன்மாவில் பரமான்மாவாய்,—அருவமாய் உருவமாய் - நிஷ்களமாய் சகளமாய் (சகளாகளமாய்),—எவர்க்கும் அன்னை தாதையாய் இருந்திடும் பரமனே அவன் காண் - எவர்களுக்கும் பரமபிதாவும் மாதாவுமாயிருக்கின்ற சிவபெருமானே அக்கந்தஸ்வாமி என்று அறி. எ – று.

தம், அ சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை முன்னையன உயர்வுசிறப்பு; பின்னையது முற்று. உபலக்ஷணத்தால் அருவமும் உருவமும் வருவிக்கப்பட்டன. அருவம்: நாதம், விந்து, சத்தி, சிவம் என்னு நான்குமாம். அருவுருவம் சதாசிவம். உருவம், மகேசுரன், உருத்திரன், விஷ்ணு, பிரமா என்னு நான்குமாம். இவை முறையே லயம், போகம், அதிகாரம் எனப்படும். ஆய் என்பது அருவத்தோடுங் கூட்டப்பட்டது.(கஉஅ)

129. ஈசனேயவனுடலான்மதலையாயினன்காண்
ஆசிலாவவனறுமுகத்துண்மையாலறிநீ
பேசிலாங்கவன்பரனொடுபேதகனல்லன்
றேசுலாவகன்மணியிடைக்கதிர்வருதிறம்போல்.

இ-ள். ஈசனே அவன் - சிவபிரானே அக்கந்தஸ்வாமி,—ஆடலால் மதலையாயினன் - திருவிளையாட்டினால் ஓர் சிறுகுழந்தைவடிவாகத்தோன்றியருளினுர்,—(அங்ஙனஞ் சிறுகுழந்தைவடிவாகத்தோன்றியருளினரென்பதை) ஆசிலா அவன் அறுமுகத்து உண்மையால் நீ அறி - அவருக்குக்குற்றமில்லாத ஆறுதிருமுகங்களிருக்கின்ற உண்மையினால் நீ அறிந்துகொள்,—தேசு உலாவு அகல் மணியிடை கதிர் வருதிறம் போல்-ஒளி பொருந்திய பெரிய மணியினின்றும் கிரணந்தோன்றுந்தன்மையைப்போல,—பேசில் அவன் பரனொடு பேதகன் அல்லன் - சொல்லுமிடத்து அவர் சிவபெருமானுக்கு வேறானவரல்லர். எ – று.

ஆங்கு அசை. காண் முன்னிலையசை. ஏகாரம் தேற்றம். சிவபிரானே அவர் என்பது பிரதிஞ்ஞை. ஆடலால் மதலையாயினன் என்பது ஏது. அவனறுமுகத்துண்மையால் என்பது திருட்டாந்தம். கந்தஸ்வாமி சிவபிரானுக்கு வேறல்லர் என்பதைப் பின்னும் வலியுறுத்தற்கு "மணியிடைக்கதிர்வருதிறம்போல்" என வேறொருதிருட்டாந்தமுகத்தாலுங் கூறினர் எனவுணர்க. ஈசனே அவனுடலால் எனப் பிரித்து சிவபிரானே தன்னுடைய திருவிளையாடலால் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (கஉக)

130. பூதமைந்தினுட்கீழ்நிலைத்தாகியபுவியு
ளோதுகின்றபல்லண்டத்தினொராயிரத்தெட்டுங்
கோதிலாக்கமும்படைகளுமுனக்குமுன்கொடுத்த
வாதியீசனேயவனெனின்மாற்றுவதரிதோ.

இ-ள். பூதம் ஐந்தினுள் - பஞ்சபூதங்களுக்குள்,—கீழ்நிலைத் தாகிய புவியுள் ஓதுகின்ற பல் அண்டத்தின் - கீழிடமாகிய பிருதுவி பூதத்திலுள்ளதென்று கூறப்படுகின்ற பல அண்டங்களுள்,—ஒரு ஆயிரத் தெட்டும் - ஆயிரத்தெட்டு அண்டங்களையும்,—கோது இல் ஆக்கமும் - குற்றமற்ற செல்வங்களையும்,—படைகளும் - படைகளையும்,—

முன் உனக்கு கொடுத்த ஆதி ஈசனே அவன் எனில் - ஆதிகாலத்தில் உனக்கு வரமா கத்தந்தருளிய முழுமுதல்வராகிய சிவபெருமானே அக்கந்தஸ்வாமியானால்,—மாற்றுவது அரிதோ - (இவைகளையெல்லாம்)நீக்கிவிடுதல் ஒரு அருமையோ(அருமையன்று.)

ஏகாரம் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. உம்மைகள் எண். (கஙo)

131. ஏதமில்புவியண்டங்கள்பெற்றனமென்றே
பேதையுன்னினைசிறிதவன்றன்னருள்பெறுவோர்
பூதமைந்தினுமேனையநிறத்தினும்புறத்து
மீதுமாமண்டமெவற்றிற்கும்வேத்தியல்புரிவார்.

இ - ள். பேதை - மெய்யுணர்வில்லாதவனே,—ஏதம் இல் புவி அண்டங்கள் பெற்றனம் என்று உன்னினை-குற்றமற்ற பிருதுவியிலுள்ள (ஆயிரத்தெட்)டண்டங்களை அரசாளப்பெற்றோமென்று நினைத்தாய்,—அவன் தன் அருள் சிறிது பெறுவோர்-அப்பெருமானது திருவருளைச் சற்று அடைபவர்,—பூதம் ஐந்தினும் - (ஆன்மதத்துவத்திலமைந்த) பஞ்சபூதங்களிலும்,—ஏனைய நிறத்தினும் - (அவையொழிந்த) மெய்முதலிய பத்தொன்பது தத்துவங்களிலும்,—புறத்தும் - வித்தியாதத்துவங்களிலும்,—மீதும் - சிவதத்துவங்களிலும்,—ஆம் அண்டம் எவற்றிற்கும் வேத்தியல் புரிவார் - உள்ள அண்டங்களெல்லாவற்றிற்கும் அரசாட்சிசெய்வார்கள். எ — று. ஏகாரம் தேற்றம். (கஙக)

132. ஆதியாகியகுடிலையுமைவகைப்பொறியும்
வேதம்யாவையுந்தந்திரப்பன்மையும்வேறு
வோதநின்றிடுகலைகளுமவ்வவற்றுணர்வாம்
போதம்யாவையுங்குமரவேள்பொருவிலாவுருவம்.

இ - ள். ஆதி ஆகிய குடிலையும் - (வேதாகமங்களுக்கெல்லாம்) முதலாகிய பிரணவமும்,—ஐவகை பொறியும் - பஞ்சாக்ஷரமும்,—வேதம் யாவையும் - சகலவேதங்களும்,—தந்திரம் பன்மையும் - சகல ஆகமங்களும்,—வேறு ஓத நின்றிடு கலைகளும் - (இவையேயன்றி) வேறாகச் சொல்லப்படுகின்ற கலைகளும்,—அவ்வவற்று உணர்வாம் போதம் யாவையும் - அவ்வச்சாஸ்திரங்களையறியும் அறிவாகிய ஞானக்கண் முழுவதும்,—குமரவேள் பொருவிலா உருவம் - கந்தஸ்வாமியினது ஒப்பில்லாத வடிவமாகும். எ — று.

உம்மைகள் எண்ணும் முற்றுமாம்.

வேதாகமங்களுக்கெல்லாம் முன்னோதப்படுதலானும் ஐம்பத்தோரக்கரங்களுக்கும் சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் வாக்குகளுக்கும் தத்துவங்களுக்கும் காரணமாதலானும் தன்கீழ்ப்பாகமாகிய அசுத்தமாயை பிரகிருதிமாயை என்னும் இவற்றின் காரியமாகிய தத்துவதாத்துவிகப் பிரபஞ்சங்களுக்குப் பிரேரக காரணமாதலானும் "ஆதியாகியகுடிலை" என்றார். பஞ்சாக்கரம் சமஷ்டிப்பிரணவமாகிய குடிலையின் வேறாகாத வியஷ்டிப்பிரணவமாகலானும் வேதத்தினுள்ளுறைப்பொருளாகலானும் அதன்பெருமை தோன்ற "ஐவகைப்பொறியும் என்றுடன் கூறினர்" உபவேதங்களும் உபாகமங்களுமடங்க "வேதம்யாவையும் தந்திரப்பன்மையும்" என்றார். கலை அறுபத்துநான்காகலின் "கலைகள்" எனப் பன்மைவாசகத்தாற்கூறினர். (கஙஉ)

133. எங்கணும்பணிவதனங்களெங்கணும்விழிக
ளெங்கணுந்திருக்கேள்விகளெங்கணுங்கரங்க
ளெங்கணுந்திருக்கழலடியெங்கணும்வடிவ
மெங்கணுஞ்செறிந்தருள்செய்யுமறுமுகத்திறைக்கே.

இ - ள். எங்கணும் செறிந்து அருள் செயும் அறுமுகத்து இறைக்கு - எவ்விடத்தி ஹும் (அந்தரியாமியாய்) வியாபித்துநின்று (அடியார்களுக்கு) அருள்செய்யும் அறுமுகப் பெருமானுக்கு,—எங்கணும் பணி வதனங்கள் - எவ்விடங்களினும் (யாவராலும்) வணங் கப்படும் திருமுகங்கள் (உண்டு),—எங்கணும் விழிகள் - எவ்விடங்களினுந் திருக்கண் கள் (உண்டு),—எங்கணும் திருக் கேள்விகள் - எவ்விடங்களினுந் திருச்செவிகள் (உண்டு),—எங்கணும் கரங்கள் - எவ்விடங்களினுந் திருக்கைகள் (உண்டு),—எங்கணும் திருக்கழல் அடி - எவ்விடங்களினும் வீரக்கழலையணிந்த திருவடிகள் (உண்டு),—எங்க ணும் வடிவம் - எவ்விடங்களினுந்திருவுருவம் (உண்டு). எ — று.

எக்கணும் என்பன விகாரம். ஏகாரம் அசை. உம்மைகள் முற்று. (கங-௩)

134. தாமரைக்கணுன்முதலியபண்ணவர்தமக்கு
மேமுறப்படுமறைக்கெலாமாதிபெற்றியலு
மோமெனப்படுங்குடிலையேயொப்பிலாமுருகன்
மாமுகத்துளொன்றுமவன்றன்மையார்வகுப்பார்.

இ - ள். தாமரைக்கணுன் முதலிய பண்ணவர் தமக்கும் - பதுமாசனராகிய பிரமா முதலிய தேவர்களுக்கும்,—ஏமம் உறபடு மறைக்கு எலாம் ஆதி பெற்று இயலும் - மயக் கம்மிகப்பொருந்துதற்கேதுவாகிய வேதங்களுக்கெல்லாம் முதன்மைபெற்றிருக்கின்ற,— ஓம் எனப்படும் குடிலையே - ஓம் என்று சொல்லப்படும் பிரணவமே,—ஒப்பிலா முருகன் மாமுகத்துள் ஒன்றும் - ஒப்பில்லாத முருகக்கடவுளுடைய அழகிய திருமுகங்களுளொ ருதிருமுகமாகும்,—அவன் தன்மை யார் வகுப்பார் - (ஆகவே) அப்பெருமானுடைய பெருமையை யார் எடுத்துப் பேசத்தக்கவர். எ — று.

தம், அ சாரியை. ஏகாரம் தேற்றமும் பிரிநிலையும். உம்மை உயர்வுசிறப்பு. (கங-௪)

135. முக்கண்மூர்த்தியுமாங்கவன்முண்டகாசனனுஞ்
சக்கரப்படையண்ணலுமாங்கவன்றனே
திக்குப்பாலருங்கதிர்களுமுனிவருஞ்சிறப்பின்
மிக்கதேவருமாங்கவன்யாவர்க்குமேலோன்.

இ - ள். முக்கண் மூர்த்தியும் அவன் - மூன்று திருக்கண்களையுடைய சிவபிரானும் அவரே,—முண்டக ஆசனனும் சக்கரம் படை அண்ணலும் அவனே - பதுமாசனரா கிய பிரமதேவரும் சக்கராயுதராகிய விஷ்ணுவும் அவரே,—திக்கு பாலரும் கதிர்களும் முனிவரும் சிறப்பின்மிக்க தேவரும் அவன் - திக்குப்பாலகராகிய இந்திரன் முதலா னேரும் சந்திராதித்தர்களும் முனிவர்களும் சிறப்பினுல்மேம்பட்டதேவர்களும் அவரே,- யாவர்க்கும் மேலோன் - (ஆகலான் அவரே) யாவர்க்கும் மேலானவர். எ — று.

ஆங்கு மூன்றும் தானும் அசை. ஏகாரம் தேற்றம். உம்மை முதலது உயர்வுசிறப்பு; அடுத்த இரண்டும் இறந்ததுதழீஇயவெச்சமும் எண்ணும்; ஈற்றது முற்றும் உயர்வுசிறப் பும்; ஏனைய முற்றும் எண்ணுமாம். (கங-௫)

136. ஈட்டுமன்னுயிரெவற்றிற்குமிருவினைப்பயனைக்
கூட்டுவானவனுங்கவைதுலையெனக்கூடின்
வேட்டமேனிலைக்கதிபுரிவானவன்மேலாய்க்
காட்டுவான்முதற்றிறமெலாமாங்கவன்கண்டாய்.

இ - ள். ஈட்டும் மன் உயிர் எவற்றிற்கும் இருவினை பயனை கூட்டுவான் அவன் - (புண்ணியபாவமெனப்படும் இருவினைகளையும்) சம்பாதிக்கின்ற சர்வான்மாக்களுக்கும்

அவ்விருவினைப்பயன்களாகிய சுகதுக்கங்களை (அனுபவிக்கும்படி) சேர்த்துவைப்பவர் அவரே,—அவை துலையென கூடின் வேட்ட மேல் நிலை கதி புரிவான் அவன் - தராசுத் தட்டைப்போல அவ்விருவினைகளிலுஞ் சமபுத்திபண்ணும் பேரறிவு தலைப்பட்டவிடத்து (அவ்வுயிர்கள்) விரும்பிய மேற்பதவியாகிய முத்தியின்பத்தைக்கொடுத்தருளுகின்றவரும் அவரே,—மேலாய் காட்டுவான் முதல் திறம் எலாம் அவன் கண்டாய் - மேலாகிய காட்டுவான் காண்பூன் காட்சி காட்சிப்பொருள் எனப்படும் சாதனசதுட்டயங்களாக இருப்பவரும் அப்பெருமானே என்று அறியக்கடவை. எ - று.

ஆங்கு இரண்டும் அசை. உம்மை முற்று. காட்டுவான்—பதி. காண்பான்—ஆன்மா. காட்சி – அறிவு. காட்சிப்பொருள் – அறியப்படும் பொருள் எனவுணர்க. "காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான் மாண்புடை யோனுமாய்" என்றார் கடவுள்வாழ்த்துளும்.

137. சிறுவன்போலுறுங்குரவனேபோலுறுந்தினையிற்
குறியன்போலுறுநெடியவனுகியுங்குறுகு
நெறியினின்னணம்வேறுபல்லுருக்கொடுநிலவு
மறிவர்நாடருங்கந்தவேளாடலாரறிவார்.

இ - ள். சிறுவன் போலுறும் - பாலனைப்போலச் (சிறியவராகவும்) இருப்பார்,—குரவனே போலுறும் - (அப்பாலனைப்பெற்ற) பிதாவைப்போலப் (பெரியவராயும்) இருப்பார்,—தினையில் குறியன் போலுறும் - தினையினும்பார்க்கச் சிறியவடிவமுடையவரைப்போலவு மிருப்பார்,—நெடியவனுகியும் குறுகும் - (மலையினும்பார்க்க) நெடியவடிவமுடையவராகவும் வருவர்,—நெறியின் இன்னணம் வேறு பல் உருக்கொடு நிலவும் - முறையே இந்தவிதமாகப் பல்வேறு வடிவங்களைக்கொண்டு விளங்குவார்,—அறிவர் நாடு அரும் கந்தவேள் ஆடல் ஆர் அறிவார் - சிவஞானிகள் அறிகின்ற அரிய கந்தஸ்வாமியினது லீலையை வேறு யார் அறிவார் [ஒருவருமறியமாட்டாரென்றபடி].

அறிவர் நாட அரும் எனப்பிரிப்பின் பாசஞானிபசுஞானிகளால் அறிதற்கரிய எனப்பொருள்கொள்க. ஏகாரம் அசை. கந்தவேள் இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

138. சிவனதாடலின்வடிவமாயுற்றிடுஞ்செவ்வே
ளவனதாணையினன்றியேபெயர்கிலாதணுவு
மெவரவன்றனியாற்றலைக்கடந்தவரிவணீ
தவமயங்கினையவன்றனிமாயையிற்சார்வாய்.

இ - ள். செவ் வேள் சிவனது ஆடலின் வடிவமாய் உற்றிடும் - கந்தஸ்வாமி சிவபெருமானது லீலாரூபமாகவேயிருப்பார்,—அவனது ஆணையினன்றி அணுவும் பெயர்கிலாது - அப்பகவானது ஆஞ்ஞையாலன்றி ஓரணுவுமசையமாட்டாது,—அவன் தனி ஆற்றலை கடந்தவர் எவர் - அவருடைய ஒப்பற்றவலிமையைக் கடந்தவர்யாவர்,—இவண் நீ அவன் தனி மாயையில் சார்வாய் தவ மயங்கினை-இவ்விடத்து நீ அவருடைய ஒப்பற்ற மாயையிலே அகப்பட்டவனுகி மிகமயங்கினுய். எ – று.

ஏகாரம் தேற்றம். உம்மை உயர்வுசிறப்பு. அவருடைய பராக்கிரமத்தையும் மாயையையும் ஒருவரும் கடக்கவல்லவரல்லர் என்பதும், அவரருளால் மாயாமயக்கம் ஒழியும் என்பதும் தாற்பரியம். (கங-அ)

139. எல்லையில்லதோர்பொருளெலாமாகுறுமியாவு
மல்லனுகியுமிருந்திடுமருவமுமாகும்
பல்வகைப்படுமுருக்கொளும்புதியரிற்பயிலுந்
தொல்லையாதியாமநாதியுமாகியேதோன்றும்.

இ - ள். எல்லை இல்லது ஓர் பொருள் எலாம் ஆகுறும் - கணக்கிடப்படாத சகல வஸ்துக்களாயுமிருப்பர்,—யாவும் அல்லன் ஆகியும் இருந்திடும் - அவ்வஸ்துக்களல்லாதவராகவுமிருப்பார்,—அருவமும் ஆகும் - உருவமில்லாதவராகவுமிருப்பார்,—பல்வகைப் படும் உரு கொளும் - பலவகைப்பட்ட உருவங்களையுங் கொள்ளுவார்,—புதியரில் புயிலும் - (முன்பின் அறியப்படாத) புதியரைப்போலவுந் தோன்றுவார்,—தொல்லை ஆதி ஆம் - பழைய ஆதிவஸ்துவாயுமிருப்பார்,—அநாதியும் ஆகியே தோன்றும் - அநாதிவஸ்துவாயுந் தோன்றுவார். எ - று.

ஏகாரம் அசை. உம்மையாவும் என்பதில் முற்றும், ஆகியும் என்பதில் உயர்வுசிறப்பும், அருவமும் என்பதில் எதிரதுதழீஇயவெச்சமும், அநாதியும் என்பதில் இறந்தது தழீஇயவெச்சமுமாம்.

ஆதிவஸ்து: நாதம், விந்து, சிவம், சத்தி, சதாசிவம், மகேசன், உருத்திரன். அநாதிவஸ்து: இவைகளுக்கப்பாற்பட்டுநின்ற துரியசிவம் எனவுணர்க. (கஙௗ)

140. வாரிவீழ்தரும்புன்னுனித்துள்ளிகண்மான
நேரிலாதமர்குமரவேணெடியபேருருவி
னோருரோமத்தினுலப்பிலாவண்டங்களுதிக்கு
மாரவன்றிருமேனியின்பெருமையையறிவார்.

இ - ள். புல் நுனி வீழ்தரும் வாரி துள்ளிகள் மான - புன்னுனியிலிருந்து விழுகின்ற நீர்த்திவலைகளைப்போல,—நேரிலாது அமர் குமரவேள் நெடிய பேர் உருவின் ஓர் உரோமத்தின் - தமக்கு ஒப்பாருமிக்காருமில்லாது எழுந்தருளிய குமாரஸ்வாமியினது விசுவரூபத்திலுள்ள ஒவ்வொரு உரோமத்தினின்றும், உலப்பு இலா அண்டங்கள் உதிக்கும் - அளவிறந்த அண்டங்கள் தோன்றும் (அங்ஙனமாகையால்),—ஆர் அவன் திருமேனியின் பெருமையை அறிவார் - யார் அப்பெருமானுடைய திருமேனியின்பெருமையை அறியவல்லவர் [எத்துணைப்பெரியருமறியவல்லரல்லரென்றபடி.] எ - று. ()

141. தொலைவிலாவுயிர்த்தொகுதியுந்தொல்லையைம்பூதத்
தலகிலண்டமுமேனவுமாதியங்குமர
னிலைகொண்மேனியினிவர்தருமுரோமத்தினின்றே
யுலைவையின்றிமுன்னுதித்திடுமிறுதிநாளொடுங்கும்.

இ - ள். தொலைவு இலா உயிர் தொகுதியும் - நித்தியமான உயிர்க்கூட்டங்களும்,—தொல்லை ஐம்பூதத்து அலகில் அண்டமும் - பழமையான பஞ்சபூதபௌதிகமாகிய அளவில்லாத அண்டங்களும்,—ஏனவும் - பிறபொருள்களும்,—ஆதி அம் குமரன் நிலைகொள் மேனியின் இவர் தரும் உரோமத்தில் நின்று - முழுமுதல்வராகிய பேரழகினையுடைய குமாரஸ்வாமியினது நிலையானதிருமேனியிலமைந்த உரோமங்களினின்றும்,—உலைவையின்றி முன் உதித்திடும் - (சிருட்டிகடோறும்) கெடுதலின்றி முன்னே தோன்றும்,—இறுதி நாள் ஒடுங்கும் - முடிவுகாலத்தில் (அவைகளெல்லாம் அவ்வுரோமங்களிலேயே) லயமாகும். எ — று.

ஏகாரம் தேற்றம். உம்மைகள் முற்று. நிலைகொண் மேனி-விசுவரூபமெனவுணர்க. விசுவரூபமெனவே விசுவகாரணன், விசுவாந்தர்யாமி, விசுவாதீதன், விசுவசேவி என்னுங் கடவிகலக்கணங்களும்தானேபோதரும். (கசக)

142. ஆவதாகியவடிவத்தினகிலமுஞ்செறிந்து
மேவுமந்நிலையனையனேயல்லதுவேறிங்
கேவர்கண்டனரவ்வுருவியற்கையையெங்கோன்
றேவர்யாவர்க்குங்காட்டிடக்கண்டனர்சிறிது.

இ - ள். ஆவது ஆகிய வடிவத்தின் அகிலமுஞ் செறிந்து மேவும் - அப்படிப்பட்ட பெருமானுடைய விசுவரூபத்தில் சமஸ்தப்பிரபஞ்சங்களும் பொருந்தியிருக்கும்,—அந் நிலை அனையனே அல்லது வேறு எவர் கண்டனர் - அந்தவிசுவரூபத்தை அக்குமரக்கடவுளேயன்றி வேறுயாரறிந்தார்,—அ உரு இயற்கையை எம் கோன் தேவர் யாவர்க்கும் காட்டிட சிறிது கண்டனர் - அந்தவிசுவரூபத்தின் தன்மையை எம்பெருமான் (முன்னொருநாள் மேருமலையின் சிகரத்திலே) தேவர்களனைவர்க்குங் காட்டியருளச் சற்றே (அதனைத்)தரிசித்தார்கள். எ - று.

இங்கு அசை. ஏகாரம் பிரிநிலை. உம்மைகள் முற்று. (கசஉ)

143. தண்டலில்லதோரொன்றொருமயிர்நுனித்தலையி
னண்டமெண்ணிலகோடிகள்கோவைபட்டசையப்
பண்டுமேருவிற்கந்தவேள்கொண்டதோர்படிவம்
கண்டிலாய்கொலாங்கணிப்பிலாப்பவம்புரிகொடியோய்.

இ - ள். கணிப்பு இலா பவம் புரி கொடியோய் - அளவில்லாத பாதகங்களைச்செய்கின்ற கொடியவனே,—தண்டல் இல்லது ஓர் ஒன்று ஒரு மயிர் நுனி தலையில் - நீக்கமில்லாத ஒவ்வொருமயிர்நுனிகளில்,—அண்டம் எண்ணில கோடிகள் கோவை பட்டு அசைய - அனேககோடியண்டங்கள் கோவை கோவையாயசைய,—பண்டு மேருவில் கந்தவேள் கொண்டது ஓர் படிவம் கண்டிலாய் கொல் - முன்னாளிலே மேருமலையில் கந்தஸ்வாமியெடுத்தருளிய ஒப்பில்லாத விஸ்வரூபத்தைக்கண்டிலாய்போலும். எ — று.

ஆம் அசை. கொல் ஐயம். நீ கண்டால் அவரைப்பரம்பொருளென்று கொள்வதன்றி இங்ஙனம் இழித்துப்பேசமாட்டாயென்பது கருத்து. (கசங)

144. அன்றுகந்தவேளமைந்ததோர்பெருவடிவதனு
ளொன்றுரோமத்தினிருந்ததற்காற்றிடாதுனதாய்த்
துன்றுமாயிரத்தெட்டெனுமண்டமாந்தொகையு
மின்றுநீயதுதெரிகிலைசிறுவனென்றிசைத்தாய்.

இ - ள். உனதாய் துன்றும் ஆயிரத்து எட்டு எனும் அண்டமாம் தொகையும்-(சூரபன்மனே) உனதாட்சிக்குட்பட்டதாய் நெருங்கியிருக்கின்ற ஆயிரத்தெட்டெனும் அண்டமாகிய கூட்டமும்,—அன்று கந்த வேள் அமைந்தது ஓர் பெருவடிவு அதனுள் ஒன்று உரோமத்தின் இருந்ததற்கு ஆற்றிடாது - (தேவர்களுக்குக் காட்சிகொடுத்தருளும்பொருட்டு) அக்காலத்தில் கந்தஸ்வாமிகொண்டருளிய ஒப்பற்ற பாரமேசுரரூபத்திலுள்ள ஒரு உரோமத்தில் இருந்த அண்டங்களுக்குப் போதாது,—இன்று நீ அது தெரிகிலை - இன்றைக்கு நீ யதனை யறிந்தாயில்லை,—சிறுவன் என்று இசைத்தாய் - சிறுபாலனென்று (அவமதித்துப்) பேசினாய். எ — று.

உம்மை முற்று. வடிவதனுள் என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி; அன் சாரியை.

145. அளப்பருங்குணத்தாதியாமெம்பிரானமரர்
தளைப்படுஞ்சிறைமாற்றவுஞ்சதுர்முகன்முதலோர்
கொளப்படுந்துயரகற்றவுங்கொடியரையறுத்து
வளப்படும்பரிசுலகெலாம்போற்றவும்வந்தான்.

இ - ள். அளப்ப அரும் குணத்து ஆதியாம் எம்பிரான் - (பிறரால்) அளவிடப்படாத சுத்தசாட்குண்ணிய முதல்வராகிய எமது பெருமான்,—தளைப்படும் அமரர் சிறை மாற்றவும் - (உன்னால்) விலங்குபூட்டுவித்து வைக்கப்பட்ட தேவர்களுடைய சிறையை

நீக்கவும்,—சதுர்முகன் முதலோர் கொளப்படும் துயர் அகற்றவும் - பிரமன் முதலிய தேவர்கள் கொள்ளப்படுந்துக்கத்தை ஒழித்தருளவும்,—கொடியரை அறுத்து வளப்படும் பரிசு உலகெலாம் போற்றவும் வந்தான் - (நீதிக்கு விரோதமாக நடக்கின்ற) துட்டர்களைச் சங்கரித்து உலகமெல்லாம் நன்மையைப்பெறும்பொருட்டுப் பாதுகாக்கவுந் திருவவதாரஞ்செய்தருளினர். எ - று. உம்மைகள் எண். (கசரு)

146. வாழியானநின்னாயுளும்வன்மையும்வரமுங்
கேழில்சுற்றமும்படைகளும்வான்றொடக்கிளர்ந்து
பூழியாலுயர்மால்வரைச்சூழலிற்புகுந்த
வூழிமாருதம்போலடுமெம்பிரானொருவேல்.

இ - ள். வாழி ஆன நின் ஆயுளும் வன்மையும் வரமும் கேழில் சுற்றமும் படைகளும் - வாழ்ந்திருக்கின்ற நினது ஆயுளையும் வலிமையையும் (நீபெற்ற) வரங்களையும் ஒப்பில்லாத (நின்) சுற்றத்தாரையும் சேனைகளையும்,—வான் தொட கிளர்ந்து பூழியால் உயர் மால் வரை சூழலில் புகுந்த ஊழி மாருதம்போல் - ஆகாயத்தையளாவும்படி கிளர்ச்சிகொண்டு புழுதியினாலுயர்ந்த பெரிய மலையிடத்துச்சென்று (அம்மலையைப்பறக்க அடிக்கின்ற) பிரசண்டமாருதம்போல,—எம்பிரான் ஒரு வேல் அடும் - எமது பெருமானுடைய ஒரு வேலாயுதம் அழித்துவிடும். எ - று. உம்மைகள் எண். (கசசு)

147. ஆகையாலிவையுணர்ந்திலையிணையிலாதமர்ந்த
வேகநாயகமுதல்வனைப்பாலனென்றிகழ்ந்தாய்
சேகுலாவியமனமுடைக்கற்பிலாச்சிறியோய்
போகபோகயாமிவ்வொருதவற்றையும்பொறுத்தாம்.

இ — ள். ஆகையால் இவை உணர்ந்திலை - ஆதலால் (நீ) இந்த உண்மைகளையெல்லாம் அறிந்தாயில்லை,—இணை இலாது அமர்ந்த ஏக நாயக முதல்வனை பாலன் என்று இகழ்ந்தாய் - (தமக்கொருவரும்) ஒப்பில்லாமலெழுந்தருளிய சகலலோகைகநாயகராகிய கந்தஸ்வாமியைச் சிறுகுழந்தையென்று நிந்தித்துப்பேசினாய்,—சேகு உலாவிய மனம் உடை கற்பு இலா சிறியோய் - (சற்றேனுமிளகாத) வைரம்பொருந்திய மனசையுடைய கல்வியில்லாத எளியவனே,—போக போக - போகட்டும் போகட்டும்,—யாம் இவ்வொரு தவற்றையும் பொறுத்தாம் - நாம் இந்த ஒரு குற்றத்தையும் பொறுத்தேம். எ - று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சமும் உயர்வுசிறப்புமாம். (கசஎ)

148. நொய்யசொற்களாலெந்தையையிகழ்ந்தனைநொடிப்பின்
வெய்யநாத்துமித்துன்னுயிர்வாங்குவம்விடுத்த
வையனாணையன்றாதலினளித்தனமதனா
லுய்தியிப்பகல்வேற்படைக்குண்டியாயுறைவோய்.

இ - ள். வேல் படைக்கு உண்டியாய் உறைவோய் - (எம்பெருமானுடைய)வேலாயுதத்துக்கு இரையாகவிருக்கின்றவனே,—நொய்ய சொற்களால் எந்தையை இகழ்ந்தனை- (நீ) புன்மொழிகளால் எம்பிதாவாகிய கந்தஸ்வாமியை நிந்தித்துப்பேசினாய்,—நொடிப்பின் வெய்ய நா துமித்து உன் உயிர் வாங்குவம் - (அதனால்) விரைந்து கொடிய நாவையறுத்து உன்னுயிரை எடுப்பேம்,—விடுத்த ஐயன் ஆணை அன்று ஆதலின் - (அங்ஙனஞ்செய்தற்கு என்னை இங்கே) அனுப்பிய கந்தஸ்வாமியினுடைய அனுமதியின்மையால்,—அளித்தனம் - (உன்னுயிரைத்) தந்தேம்,—அதனால் இ பகல் உய்தி - அதனால் இத்தினத்தில் உயிரோடிரு. எ - று. (கசஅ)

149. உறுதியின்னமொன்றுரைக்குவநீயுமுன்கிளையு
மிறுதியின்றியேயெஞ்சுதல்வேண்டுமேலிமையோர்
சிறைவிடுக்குதியிகலினைத்தவிருதிசெவ்வே
ளறைகழற்றுணையரணமென்றுன்னியேயமர்தி.

இ - ள். உறுதி இன்னம் ஒன்று உரைக்குவம் - (சூரபன்மனேகேள்) இன்னும் உறுதியாகிய புத்தியொன்றைச்சொல்லுகின்றேன்,—நீயும் உன்கிளையும் இறுதி இன்றி எஞ்சுதல் வேண்டுமேல் - நீயும் உன்சுற்றத்தாராகிய அசுரரும் நாசப்படாமல் தப்பியிருக்கவேண்டுமானால்,—இமையோர் சிறைவிடுக்குதி - தேவர்களைச் சிறையினின்றும் விட்டுவிடு,—இகலினை தவிருதி - பகையை ஒழித்துவிடு,—செவ்வேள் அறைகழல் துணை அரணம் என்று உன்னி அமர்தி - கந்தஸ்வாமியினது ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த உபயபாதங்களையுந் தஞ்சமென்று சிந்தித்துக்கொண்டிரு. எ — று.

ஏகாரம் முன்னையது அசை; பின்னையது தேற்றம். உம்மைகள் எண். (௧௪௯)

வேறு.

150. என்றிவைபலப்பலவிகப்பில்பெருமாயைக்
குன்றெறிபடைக்குரிசில்கொள்கையதியம்பப்
புன்றொழில்படைத்துடையபூரியனுணர்ந்தே
கன்றினனுயிர்த்தினையகட்டுரைசெய்கின்றான்.

இ - ள். என்று இவை பலபல - என்று இவ்வாறு பலபலவிதமாக,—இகப்பு இல் பெருமாயை குன்று எறி படை குரிசில் கொள்கை அது இயம்ப - நீக்குதற்கரிய பெரிய மாயங்களைச் செய்யவல்லதாகிய கிரவுஞ்சகிரியைப் பிளந்த வேலாயுதத்தையுடைய கந்தஸ்வாமியினது தைவிகலக்கணங்களையெடுத்துவிரித்துப்பேச,—புன்தொழில் படைத்துடைய பூரியன் உணர்ந்தே - எளிய தொழில்களைப்பயின்றுள்ள கீழ்மகனாகிய சூரபன்மன் (அவைகளைக்) கேட்டறிந்து,—கன்றினன் உயிர்த்து இனைய கட்டுரை செய்கின்றான் - கோபங்கொண்டு பெருமூச்செறிந்து இந்தக்கட்டுரைகளைச் சொல்லுகின்றான்.

ஏகாரம் அசை. (௧௫0)

151. கூரெயிறெழாதகுழவிச்சிறுவனுய்த்த
சாரெனநினைந்துனதுதன்னுயிர்விடுத்தேன்
பேரலையவன்பெருமைபின்னுமொழிகின்றாய்
வீரமுமுரைக்குதியென்வெய்யசினமுன்னாய்.

இ - ள். கூர் எயிறு எழாத குழவி சிறுவன் உய்த்த சார் என நினைந்து - கூரிய பற்கள் (இன்னமும்) முளையாத குழந்தையாகிய சிறுவன் அனுப்பிய தூதன் என்று நினைத்து,—உனது உயிர் விடுத்தேன் - உன்னுயிரை வாங்காமல் விட்டேன்,—பேரலை - (அங்ஙனம் நான் கொல்லாமல்விட்டும்) பேர்கின்றாயில்லை,—பின்னும் அவன் பெருமை மொழிகின்றாய் - பின்னும் அவனது பெருமைகளை (யெடுத்துப்) பேசுகின்றாய்,—என் வெய்ய சினம் உன்னாய் வீரமும் உரைக்குதி - எனக்கு வருகின்றகொடுங்கோபத்தை யெண்ணாதவனாய் வீரவசனங்களையும் பேசுகின்றாய். எ — று.

தன் சாரியை. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். (௧௫௧)

152. கொஞ்சுமொழிகொண்டகுழவிச்சிறுவன்மேலா
யெஞ்சலிலதோர்முதல்வனேயெனினுமாக
வஞ்சிடுவனோசிறிதுமண்டநிலைதோறும்
விஞ்சியமர்பண்ணவர்கள்யாவரையும்வென்றேன்.

இ - ள். கொஞ்சு மொழி கொண்ட குழவி சிறுவன் - கொஞ்சுகின்ற மழலைச்சொல்லையுடைய குழந்தையாகிய அச்சிறுவன்,—மேலாய் எஞ்சல் இலது ஓர் முதல்வனே எனினும் ஆக - மேலோனாய் ஒன்றுங் குறைவற்றகடவுளே யென்றாலும் ஆகுக,—அண்ட நிலை தோறும் விஞ்சி அமர் பண்ணவர்கள் யாவரையும் வென்றேன் - நிலையாகிய அண்டங்கடோறும் மிகுதியாக வாழ்கின்ற தேவர்களனைவரையும் வென்ற (மகாராஜனாகிய) நான்,—சிறிதும் அஞ்சிடுவேனோ - (இவனுக்குச்) சற்றேனும் பயப்படுவேனோ (பயப்படேன்). எ - று.

ஏகாரம் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. உம்மை முதலது எதிர்மறை; நடுவணது உயர்வுசிறப்பு; ஈற்றது முற்று. (கடுஉ)

153. சேண்புரமதாகியமர்தேவர்சிறைதன்னை
வீண்படுகனாவினும்விடுக்கநினைகில்லே
னேண்பலபகர்ந்தனையெனக்கெதிரிருந்தே
காண்பனதெலாமொருகணத்திலினியென்றான்.

இ - ள். சேண் புரம தாகி அமர் தேவர் சிறை தன்னை - ஆகாயத்தையே வாசஸ்தானமாகக்கொண்டு இருக்கின்ற தேவர்களுடைய சிறையை,—வீண்படு கனாவினும் விடுக்க நினைகில்லேன் - உபயோகப்படாத சொப்பனத்திலும் விடுதற்கு நினையேன் (அப்படியிருக்க),—எனக்கு எதிர் இருந்து பல ஏண் பகர்ந்தனை - எனக்கு முன்னாகவிருந்து பல இறுமாப்பான வார்த்தைகளைச்சொன்னாய்,—இனி ஒருகணத்தில் அதெலாம் காண்பன் என்றான் - இனி ஒரு கணப்பொழுதுக்குள் அவைகளெல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளுகிறேன் என்று கூறினான். எ — று.

தன் சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு.

154. கொற்றமிகுசூரனிவைகூறியயனின்ற
வற்றமறுமானவருளாயிரரைநோக்கி
யொற்றுமைசெய்தோனுயிரொறுத்தல்பழிவல்லே
பற்றியிவனைச்சிறைபடுத்திடுதிரென்றான்.

இ - ள். கொற்றம் மிகு சூரன் இவை கூறி - வெற்றிமிகுந்த சூரபன்மன் இந்தவசனங்களைச்சொல்லி,—அயல் நின்ற அற்றம் அறு மானவருள் ஆயிரரை நோக்கி - பக்கத்தில்நின்ற சோர்வில்லாத வீரருக்குள் ஆயிரம் வீரர்களைப்பார்த்து,—ஒற்றுமை செய்தோன் உயிர் ஒறுத்தல் பழி - தூதுவந்து பேசிய இவனைக்கொல்லுதல் (தருமசாஸ்திரத்திற்கு) விரோதமாகும் (ஆதலால்),—வல்லே இவனை பற்றி சிறைபடுத்திர் என்றான் - இவனை விரைவாகப் பிடித்துச் சிறையில்வையுங்கள் என்று சொன்னான். எ — று.

ஏகாரம் தேற்றம். (கடுச)

155. என்னலுமவ்வாயிரருமேற்றெரிவிழித்துத்
துன்னுகனலைப்புகைசுலாவுவதுமானப்
பொன்னின்மிளிர்பீடிகையமர்ந்தபுகழ்வீரன்
றன்னைவளைகுற்றனர்தருக்கினொடுபற்ற.

இ - ள். என்னலும் - என்றிப்படிச் சூரபன்மன்கட்டளையிடுதலும்,—அ ஆயிரரும் ஏற்று எரி விழித்து - அவ்வாயிரம்வீரரும் எதிர்த்து (கண்களிலிருந்து) அக்கினிபறக்கப் பார்த்து,—துன்னு கனலை புகை சுலாவுவது மான - சுவாலிக்கின்ற அக்கினியைப்புகை சூழ்ந்தாற்போல,—பொன்னின் மிளிர் பீடிகை அமர்ந்த புகழ் வீரன் தன்னை பற்ற -

பொன்னாலமைக்கப்பட்டுவிளங்குகின்ற ஆசனத்தின்மீதிருக்கின்ற புகழினையுடைய வீரவாகுதேவரைப்பிடிக்கும்படி,—தருக்கினொடு வளைகுற்றனர்-செருக்கோடுசூழ்ந்தார்கள்.

தன் சாரியை. உம்மை முற்று. (கருரு)

156. மிடற்றகுவர்சூழ்வாலும்வீரனெழுந்தன்னோர்
முடிச்சிகையொராயிரமுமொய்ம்பினொருகையாற்
பிடித்தவுணர்மன்னனமர்பேரவைநிலத்தி
னடித்தனனொடிப்பிலவராவிமுழுதுண்டான்.

இ - ள். மிடல் தகுவர் சூழ் வாலும் - பலசாலிகளான அசுரவீரர்கள் (தம்மைப் பிடிக்கும்படி) வந்து சூழுதலும்,—வீரன் எழுந்து - வீரவாகுதேவர் (ஆசனத்தைவிட்டெழுந்து,—அன்னோர் முடிச்சிகை ஒரு ஆயிரமும் மொய்ம்பின் ஒரு கையாற் பிடித்து- அவர்களுடைய ஆயிரந்தலையிலுள்ள குடுமிகளை வலிமையோடும் ஒருகையாற் பிடித்து,— அவுணர் மன்னன் அமர் பேர் அவைநிலத்தின் அடித்தனன் - அசுரராஜனாகிய சூரபன்மன் வீற்றிருக்கின்ற பெரிய சபாமண்டபத்தின் நிலத்திலே சிதற அடித்து,—நொடிப்பில் அவர் ஆவிமுழுது உண்டான் - விரைவில் அவர்களுடைய உயிர்முழுவதையுங் கொன்றார். எ - று.

உம்மை முற்று. உண்டாரென்பது இலக்கணை. (கருசு)

157. மார்புடையமொய்ம்பொசியவார்குருதிசோர
வோர்புடையின்யாவரையுமொல்லைதனினட்டே
சூர்புடையின்முன்னநனிதுன்னும்வகைவீசிச்
சீர்புடையநம்பியிவைசெப்பல்புரிகின்றான்.

இ - ள். சீர்பு உடைய நம்பி - சிறப்பினையுடைய வீரருக்குள்சிறந்த வீரவாகுதேவர் (அங்ஙனமடித்தவளவில்),—மார்பு உடைய-மார்புகள் பிளக்கவும்,—மொய்ம்பு ஒசிய - புயங்கள் முறியவும்,—வார் குருதி சோர - இரத்தநீர் சிந்தவும்,—ஓர் புடையின் யாவரையும் ஒல்லைதனின் அட்டு - ஓரடியினாலே எல்லாரையும் விரைந்து கொன்று,—சூர் புடையின் முன்னம் நனி துன்னும் வகை வீசி - சூரபன்மனுக்குப் பக்கத்திலும் முன்னும் மிக நெருங்கிவிழ எறிந்து,—இவை செப்பல் புரி கின்றான் - (அச்சூரபன்மனைப் பார்த்து) இவ்வாறு சொல்லுகின்றார். எ — று.

தம் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. (கருஎ)

158. எந்தைநெடுவேலுனையினித்தடிதறிண்ண
மந்தமுறுமுன்னமுனதைம்புலனும்வெஃக
வந்தபலதுப்புரவும்வல்லைபெரிதார்ந்தே
புந்திதெளிவாயமர்திபோந்திடுவனென்றான்.

இ - ள். எந்தை நெடுவேல் உனை இனி தடிதல் திண்ணம் - (சூரனே கேள்) எம்பெருமானுடைய நெடிய வேலாயுதம் இனி உன்னைக் கொல்லுவது நிச்சயம்,—அந்தம் உறும் முன்னம் - நீ இறப்பதற்குமுன்,—உனது ஐம்புலனும் வெஃகவந்த பலதுப்புரவும் வல்லை பெரிது ஆர்ந்து - உன்னுடைய ஐம்புலன்களும் விரும்பும்படி வருகின்ற பல அனுபவங்களையும் விரைந்து மிகவும் அனுபவித்து,—புந்தி தெளிவாய் அமர்தி - மனத் தெளிவாக இரு,—போந்திடுவன் என்றான் - வருகிறேன் என்று கூறினார். எ — று.

ஏகாரம் அசை. உம்மைகள் முற்று. (கருஅ)

159. சீயவிறலண்ணலிவைசெப்பியகல்காலை
யாயவனிருந்திடுமரித்தவிசு தானு
மீயுறவெழுந்துவிசும்பிற்றலையினேகி
மாயையெனவொல்லையின்மறைந்துபடர்ந்தன்றே.

இ - ள். சீயம் விறல் அண்ணல் இவை செப்பி அகல் காலை - சிங்கம்போலும் வலிமையையுடைய வீரவாகுதேவர் இந்தவசனங்களைக்கூறிச் செல்லுகின்ற பொழுது,— ஆயவன் இருந்திடும் அரி தவிசு தானும் மீ உற எழுந்து - அவரிருந்த சிம்மாசனமும் மேலாகக்கிளம்பி,—விசும்பிற் றலையின் ஏகி - ஆகாயத்தில் சென்று,—மாயை என ஒல்லையில் மறைந்து படர்ந்தன்று - மாயையைப்போல விரைவாக மறைந்துபோனது.எ—று.

தான், ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். படர்ந்தன்று என்பது விட்டன்று புக்கன்று என்றாற்போல ஒருசொல். (கடுக)

அவைபுகுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுகடுக.

---

# சதமுகன்வதைப்படலம்.



1. ஒண்ணிலவெயிற்றினரோராயிரரையட்டே
யெண்ணலனவைக்களமிகந்துபடர்காலைக்
கண்ணினழல்காலும்வகைகண்டுபுடையாக
நண்ணுசதமாமுகனைநோக்கிநவில்கின்றான்.

இ - ள். ஒள் நிலவு எயிற்றினர் ஓர் ஆயிரரை அட்டு - ஒளிபொருந்திய பிறைபோன்ற வக்கிரதந்தங்களையுடைய ஆயிரம்வீரரைக்கொன்று,—எண்ணலன் - (சிறிதும்) மதியாமல்,—அவைக்களம் இகந்து படர் காலை - (வீரவாகுதேவர்) சபாமண்டபத்தை விட்டுப்போகும்பொழுது,—கண்ணின் அழல் காலும் வகை கண்டு - (சூரபன்மன்) கண்களிலிருந்து தீப்பொறிபறக்கும்படி பார்த்து,—புடையாக நண்ணு சதமாமுகனை நோக்கி நவில்கின்றான் - பக்கமாகநிற்கின்ற சதமுகனைப்பார்த்துக் கூறுகின்றான். எ — று.

ஏகாரம் தேற்றம். (க)

2. ஆறுமுகனாளையிவனாயிரரையிங்ஙன்
கோறல்புரிந்தானெனதுகொற்றமுழுதெள்ளி
வேறலுடையோர்களெனமேன்மைபலசெப்பிச்
சேறல்புரிவான்றவிசுமும்பரிடைசெல்ல.

இ-ள். ஆறுமுகன் ஆளை இவன்-ஆறுமுகனுடைய ஆளாகிய இவன்,—இங்ஙன் ஆயிரரை கோறல் புரிந்தான் - இவ்விடத்தில் ஆயிரம் வீரரைக்கொன்று,—எனது கொற்றம் முழுது எள்ளி - எனது வெற்றிமுழுவதையும் இகழ்ந்து,—வேறல் உடையோர்கள் என மேன்மை பல செப்பி - வெற்றிபெறலுடையார்போலப் பலமேன்மைகளைக்கூறி,— தவிசும் உம்பரிடை செல்ல - (தானிருந்த) ஆசனமும் ஆகாயவழியாகச்செல்ல,—சேறல் புரிவான் - (தானும்) போகின்றான். எ — று.

உம்மை எதிரதுதழீஇயவெச்சம், ஆளை என்பதில் ஐகாரம் சாரியை. (உ)

3. ஒட்டியநம்வீரரையொறுத்தகல்வனேனும்
விட்டதொருதூதனொடுவெஞ்சமரியற்றி
யட்டல்பழியாகுமவனாற்றலையடக்கிக்
கட்டிவிரைவால்வருகெனக்கழறலோடும்.

இ - ள். ஒட்டிய நம் வீரரை ஒறுத்து அகல்வனேனும் - நம்மைச்சேர்ந்த நமதுவீரரைக் கொன்று செல்கின்றானாயினும்,—விட்டதொரு தூதனொடு வெம் சமர் இயற்றி அட்டல் பழியாகும் - (ஒருவன்) அனுப்பிய தூதனுடனே கொடிய போரைச்செய்து அவனைக்கொல்லுதல் (இராசதருமத்துக்கு) விரோதமாகும்,—(ஆதலால்) அவன் ஆற்றலை அடக்கி - அவனது வலிமையை அடக்கி,—கட்டி விரைவால் வருக என கழறலோடும் - பிடித்துக் கட்டிச் சீக்கிரங்கொண்டுவருக என்று கூறுதலும். எ – று.

உம்மை உயர்வுசிறப்பு. (௩)

4. சூற்குலமுகிற்பொருவுசூரனடிதாழா
வேற்கும்விடைபெற்றிசைவினேகுதல்புரிந்தா
னாற்கடலுமேவினுநதுப்பரியவூழிக்
காற்கனலினோதைதொடர்காட்சியதுமான.

இ - ள். நாற்கடலும் மேவினும் நதுப்பரிய - நாற்புறத்தினுஞ் சூழ்ந்துள்ள கடல்கள் வந்தாலும் அவித்தற்கரிய,—ஊழிக்கால் கனலின் ஓதை தொடர் காட்சியது மான - ஊழிக்காற்றும் அக்கினியினோசையும் (ஒன்றாய்க்கூடிவருகின்ற) தோற்றம்போல,— சூல் குல முகில் பொருவு சூரன் அடி தாழா - கருக்கொண்டமேகம்போலக் கரியநிறம் பொருந்திய சூரபன்மனது பாதங்களைவணங்கி,—ஏற்கும் விடை பெற்று இசைவின் ஏகுதல் புரிந்தான் - தக்க உத்தரவுபெற்றுக்கொண்டு சம்மதியோடுபோயினான். எ – று.

உம்மை முன்னையது முற்று; பின்னையது உயர்வுசிறப்பு. (௪)

5. ஏகுசதமாமுகனிலக்கமறவீரர்
பாகம்வரவெண்ணில்படைபாணிமிசைபற்றி
வேகமொடுசென்றுதனிவேலன்விடுவீர
வாகுவினையெய்தியொருமாற்றமறைகின்றான்.

இ - ள். ஏகு சதமாமுகன் - (அப்படிச்) செல்லுகின்றசதமுகன்,—இலக்கம் மறவீரர் பாகம் வர - வலிமைபொருந்திய இலக்கம் வீரர்கள் (பக்கத்திற்சூழ்ந்துவர,—எண்ணில் படை பாணி மிசை பற்றி - அனேகவாயுதங்களைக்கைகளிற்பிடித்துக்கொண்டு,— வேக மொடு சென்று - விரைந்து சென்று,—தனி வேலன் விடு வீரவாகுவினை எய்தி - ஒப்பில்லாத வேலாயுதத்தைத்தரித்த கந்தஸ்வாமியனுப்பிய வீரவாகுதேவரை நெருங்கி,— ஒரு மாற்றம் அறைகின்றான் - ஒருவார்த்தை சொல்லுகின்றான். எ – று. (௫)

6. காவல்பலநீங்கிவருகள்வவுலகுள்ளோ
ரேவரும்வியப்பவருமெங்களிறைமுன்ன
மேவினையிகழ்ந்துசிலவீரருயிர்வௌவிப்
போவதெவனில்லுனதுபோர்வலியழிப்பேன்.

இ - ள். பல காவல் நீங்கி வரு கள்வ - பலகாவல்களைக்கடந்து வருகின்ற சோரனே,—உலகுள்ளோர் ஏவரும் வியப்ப வரும் எங்கள் இறை முன்னம் மேவினை இகழ்ந்து - உலகத்திலுள்ளோர் யாவரும் புகழவருகின்ற எங்கள் இராசனுக்கு எதிரேவந்து

(அவரை) நிந்தித்து,—சில வீரர் உயிர் வௌவி - சிலவீரர்களுயிரையுங்கவர்ந்து,—போவது எவன் - போவதென்,—நில் - நிற்குதி,—உனது போர் வலியழிப்பேன் - உனது போர்வலிமையை யடக்குவேன். எ — று. உம்மை முற்று. (சு)

7. பட்டிமையுருக்கள்கொடுபோறலரிதாசை
யெட்டுளபரப்பதனுள்யாண்டகல்வையேனும்
விட்டிடுவனோவெனவிளம்பிவெரிநெய்திக்
கிட்டுதலும்வீரனிதுகேட்டனனெதிர்ந்தான்.

இ - ள். பட்டிமை உருக்கள் கொடு போறல் அரிது - நீ மாயரூபங்களைக்கொண்டு போதல் கூடாது,—ஆசை எட்டுள பரப்பதனுள் யாண்டு அகல்வை யேனும் - அட்டதிக்கிலுள்ள விடத்திலே எந்தவிடத்திற் போவாயாயினும்,—விட்டிடுவனோ - (உன்னை)விடுவேனோ,—என விளம்பி - என்று கூறி,—வெரிந் எய்தி கிட்டுதலும் - முதுகுப்பக்கத்தில் நெருங்கி வருதலும்,—வீரன் இது கேட்டனன் எதிர்ந்தான் - வீரவாகுதேவர் இந்த வசனங்களைக்கேட்டு (அவனுக்கு) எதிர்முகமாகத்திரும்பினார். எ — று.

ஓகாரம் எதிர்மறை. உம்மை உயர்வுசிறப்பு. அது பகுதிப்பொருள்விகுதி. (எ)

வேறு.

8. கொற்றவேலுடையண்ணறன்மொழியினைக்கொண்டிலனிகழ்ந்தென்னைப்
பற்றவாயிரர்தங்களைவிடுத்தலும்படுத்தனன்பெயர்காலை
மற்றுமீதொருவயவனையுய்த்தனன்மன்னவனிவனாவி
செற்றுமாநகரந்தனையழித்தனன்செல்லுவனினியென்றான்.

இ - ள். மன்னவன் - இராஜனாகிய சூரபன்மன்,—கொற்றம் வேல் உடை அண்ணல் தன் மொழியினை கொண்டிலன் - வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய கந்தஸ்வாமியினது வசனத்தை யேற்றுக்கொள்ளாதவனாய்,—இகழ்ந்து - (அவரையும்) நிந்தித்து,—என்னை பற்ற ஆயிரர் தங்களை விடுத்தலும் படுத்தனன் - என்னையும் பிடிக்கும்படி ஆயிரம் வீரர்களையனுப்புதலும் (அவர்களைக்) கொன்று,—பெயர் காலை - (அப்பாற்) செல்லும்போது,—ஈது ஒரு வயவனை உய்த்தனன் - இந்த ஒரு வீரனை யனுப்பினான்,—இவன் ஆவி செற்று - இவனுயிரைக்கொன்று,—மா நகரந்தனை அழித்தனன் - பெரிய இந்நகரத்தையுமழித்து,—இனி செல்லுவன் என்றான் - இனிப்போவேன் என்று கருதினார். எ — று. தன், தம், தன் சாரியை. மற்று அசை. (அ)

9. கருதியின்னணஞ்சதமுகனெனப்படுகாவலன்றனைநோக்கிக்
குருதிவேலுடைப்பண்ணவனடிமனங்கொண்டுதிண்டிறல்வாகு
பொருதலுன்னியேயீண்டறைகூவினைபொள்ளெனப்படையொடு
வருதியாலெனத்தெள்விளியெடுத்தனன்மறலிக்குமிறைபோல்வான்.

இ - ள். திண் திறல் வாகு - திடம்பொருந்திய வீரவாகுதேவர்,—இன்னணம் கருதி - இவ்வாறு நினைத்து,—குருதி வேலுடைப் பண்ணவன் அடி மனங் கொண்டு - இரத்தந்தோய்ந்த வேலாயுதத்தினையுடைய கந்தஸ்வாமியினது திருவடிகளை மனசிற்றியானித்து,—சதமுகன் எனப்படு காவலன் தனை நோக்கி - சதமுகனென்று சொல்லப்படும் அசுரத்தலைவனைப்பார்த்து,—பொருதல் உன்னியே ஈண்டு அறை கூவினை - (அசுரனே!) நீ போர்செய்யநினைத்து இங்கே (என்னை) போருக்கு அழைத்தாய்,—பொள்ளென படையொடு வருதி என - சீக்கிரஞ் சேனைகளோடு வருவாயாக வென்று,—மறலிக்கும் இறை போல்வான் - யமனுக்கும் யமன்போல்பவராகிய அவ்வீரவாகுதேவர்,—தெள்விளி எடுத்தனன் - ஆரவாரித்தார். எ — று.

ஆல் அசை. தன் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை உயர்வுசிறப்பு. (கூ)

10. எல்லையன்னதிற்சதமுகற்சூழ்தருமிலக்கருமெதிருன்றி
வில்லுமிழ்ந்திடுவெஞ்சரந்தொடுத்தனர்வேற்படைவிடுக்கின்றார்
கல்லெனும்படிநேமிகளுருட்டினர்கப்பணஞ்சிதறுற்றார்
வல்லைமுத்தலைப்படையெழுவோச்சினர்மழுக்கொடேயெறிகின்றார்.

இ - ள். அன்னது எல்லையில் - அச்சமயத்தில்,—சதமுகன் சூழ்தரும் இலக்கரும் எதிருன்றி - சதமுகனைச்சூழ்ந்துவந்த இலக்கம் வீரரும் எதிர்த்து,—வில் உமிழ்ந்திடு வெம் சரம் தொடுத்தனர் - விற்களினின்றும் உமிழ்கின்ற கொடிய அம்புகளை விட்டார்கள்,—வேற்படை விடுக்கின்றார் - வேற்படையைவிட்டார்கள்,—கல்லெனும்படி நேமிகள் உருட்டினர் - கல்லென்று முழங்கும்படி சக்கரப்படைகளை விட்டார்கள்,—கப்பணம் சிதறுற்றார் - கைவேல்களையும் விட்டார்கள்,—வல்லை முத்தலைப் படை எழு ஓச்சினர் - விரைவாகச்சூலங்களையும் எழுவாயுதங்களையும் விட்டார்கள்,—மழு கொடே எறிகின்றார் - மழுப்படைகளை (யெடுத்து) எறிந்தார்கள். எ — று.

உம்மை முற்று. ஏகாரம் அசை. (௧0)

11. அணிகள்பட்டவர்விட்டவிப்படைவகையண்ணன்மேற்புகலோடுந்
துணிகள்பட்டனநெரிந்தனவெரிந்தனதுகளுமாய்ப்போயிற்றன்
மணிகள்பட்டிடுமிருஞ்சிறைக்கலுழர்க்குள்வலியன்மேற்படுநொய்ய
பணிகள்பட்டனபோன்றனவேறிலைபடியெடுத்துரைத்தற்கே.

இ - ள். அணிகள் பட்டவர் விட்ட இ படை வகை - வரிசைகளாகப்பொருந்தி வளைந்துநின்ற வீரர்கள் விட்ட இவ்வாயுதக்கூட்டங்கள்,—அண்ணல் மேல் புகலோடும் - வீரவாகுதேவரது திருமேனியில் வந்து படுதலும்,—துணிகள் பட்டன - துண்டுகளாய் முறிந்தன,—நெரிந்தன - நெரிந்துபோயின,—எரிந்தன - எரிந்துபோயின,—துகளுமாய்ப்போயிற்று - துகளாகவும் போயின,—மணிகள் பட்டிடும் இருஞ்சிறைக் கலுழர்க்குள் வலியன் மேற்படு நொய்ய பணிகள் பட்டன போன்றன - இரேகைபொருந்திய பெரிய இறகுகளையுடைய கருடர்குழாத்துட் டலைவனாகியவைனதேயன்மேற்பட்ட சிறியபாம்புகள் அழிந்த தன்மையை ஒத்தன (என்று சொல்வதேயன்றி),—படி எடுத்துரைத்தற்கு வேறிலை - உபமானமெடுத்துச் சொல்வதற்கு வேறொன்றுமில்லை. எ — று.

ஆல், ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். வலியன் - விஷ்ணுமூர்த்தியின் வாகனமாகியகலுழனுமாம். (௧௧)

12. இலக்கமாகிமுன்னின்றபேராண்டகையிவர்செயலினைநோக்கி
யிலக்கமாய்முழுதுலகமுந்துளக்கியேயிராயிரப்பத்தென்னு
மிலக்கமாமுடிகொண்டதோர்சூளிகையிம்மெனப்பறித்தேந்தி
யிலக்கமாகியேயெதிர்பொருதானவர்தங்கண்மேலெறிந்திட்டான்.

இ - ள். இலக்கம் ஆகி முன்னின்ற பேர் ஆண்டகை-இலக்காகி முன்னேநிற்கின்ற பெருமைபொருந்திய வீரவாகுதேவர்,—இவர் செயலினை நோக்கி - இவர்களுடைய செய்கையைப்பார்த்து,—இலக்கமாய் - விளக்கமாகி,—முழுதுலகமும் துளக்கி-எல்லாவுலகங்களையும் நடுங்கச்செய்து,—இராயிரப் பத்து என்னும் இலக்க மாமுடி கொண்டது ஓர் சூளிகை இம்மென பறித்து ஏந்தி - இருபதினாயிரமென்னுந் தொகையுடைய சிகரங்களைக்கொண்டு நிற்கின்ற ஒருசூளிகையை விரைவாகப்பிடுங்கி யெடுத்து,—இலக்க மாகி எதிர் பொரு தானவர் தங்கள் மேல் எறிந்திட்டான் - ஓரிலக்கம் வீரர்களாய்வந்து கோரகப் போர்செய்கின்ற அசுரர்கள்மேல் எறிந்தார். எ — று.

தம் சாரியை. ஏகாரம் இரண்டும், ஒரும் அசைநிலை. உம்மை முற்று. (௧௨)

13. ஏதிலான்விடுசூளிகைசிறகர்பெற்றிறந்துவீழ்மேருப்போன்
மீதுசென்றமரியற்றியேநின்றிடும்வெய்யவர்மிசையெய்தித்
தாதுமுற்றவுஞ்சாந்துபட்டொருங்குறத்தனுவெலாஞ்சிதைத்திட்டே
யோதநீர்முகிலார்ப்பொடுபுவிக்கண்வீழ்ந்துடைந்தனவுதிராகி.

இ - ள். ஏதிலான் விடு சூளிகை - குற்றமில்லாத வீரவாகுதேவர் எடுத்தெறிந்த சூளிகையானது,—சிறகர் பெற்று இறந்து வீழ் மேருப்போல் - சிறகைப்பெற்றுப் (பறந்து மேலேசென்று வீழ்முடிவால்)இறந்து கீழேவிழுகின்றமேருமலையைப்போல,— மீது சென்று அமர் இயற்றி நின்றிடும் வெய்யவர் மிசை யெய்தி - தம்மேல்வந்து போர் செய்துநின்ற அசுரர்மீதுபட்டு,—தாது முற்றவும் சாந்து பட்டு ஒருங்குற - (தோன்முதலிய சத்த) தாதுமுழுவதும் சாந்தைப்போலக்குளம்பியொருசேர,—தனு எலாம் சிதைத்திட்டு - உடம்பெல்லாவற்றையும் அழியும்படிசெய்து,—ஓத நீர் முகில் ஆர்ப்பொடு-கடல் நீரைப்பருகிய முகில் முழக்கம்போன்ற பேரொலியுடனே,—புவிக்கண் வீழ்ந்து - நிலத்தில்விழ,—உதிராகி உடைந்தன - (அதிலுள்ளசிகரங்களும்பிறவும்) தூளாகியுடைந்தன.

ஏகாரம் இரண்டும் அசைநிலை.உம்மை முற்றுப்பொருளில்வந்தது.வீழ்ந்து எச்சத்திரிபு.

14. கொடிசெறிந்திடுசூளிகைதன்னுடனவுணர்தங்குழாங்கொண்ட
முடிசிதைந்தனநாசிநீடலையெலாமுடிந்தனமுடிவில்லா
வடிவமைந்திடுகன்னகூடத்தொகைமாய்ந்தனநிலைகொள்ளு
மடிதகர்ந்தனகொடுங்கையுமாண்டனவொழிந்தவுமழிவுற்ற.

இ - ள். கொடி செறிந்திடு சூளிகை தன்னுடன் - கொடிகள்நெருங்கியிருக்கின்ற சூளிகையுடனே,—குழாங் கொண்ட அவுணர் தம் முடி சிதைந்தன - கூட்டமாகிய அசுரர்களணிந்த முடிகள் அழிந்தன,—நாசி நீள் தலை எலாம் முடிந்தன - மூக்குகளும் அழிந்தன பெரிய தலைகள்முழுவதும் அழிந்தன,—முடிவு இல்லா வடிவு அமைந்திடு கன்ன கூடத் தொகை மாய்ந்தன - அழகுபொருந்திய அளவற்ற காதுகளும் அழிந்தன,—நிலை கொள்ளும் அடி தகர்ந்தன - நிற்றற்குரிய கால்களும் ஒடிந்தன,—கொடுங்கையும் மாண்டன - முழங்கைகளும் அழிந்தன,—ஒழிந்தவும் அழிவுற்ற - மற்றையவுறுப்புக்களும் அழிந்தன. எ — று.

தன், தம் சாரியை. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம்.

இனி, சிலேடைவகையால் மாளிகைச்சிகரங்கள் அழிந்தன; சாளரங்களையுடைய நீண்ட மேற்புறமெல்லாம் அழிந்தன; அழியாத சித்திரங்கள்பொருந்திய முன்னறைகள் அழிந்தன; அத்திவாரங்கள் அழிந்தன; முன்னிறப்புக்களுமழிந்தன என்னும் பொருளமைதல் காண்க. (கச)

15. இலக்கர்தம்மையுஞ்சூளிகைதன்னுடனிமைப்பொழுதினிலட்டு
நிலக்கண்வீரனின்றிடுதலுஞ்சதமுகனிரைவிழிகொடுநோக்கிக்
கலக்கநண்ணியேதமரினைக்காண்கிலன்கவன்றனன்றெளிவெய்தி
யுலக்கைசூலம்வேல்சக்கரந்தோமரமோச்சுதலுறுகின்றான்.

இ - ள். இலக்கர் தம்மையும் சூளிகை தன்னுடன் இமை பொழுதினில் அட்டு - இலக்கம் அசுரர்களையும் சூளிகையுடனே ஒருகணப்பொழுதில் அழித்து,—நிலக்கண் வீரன் நின்றிடுதலும் - பூமியில் வீரவாகுதேவர்நிற்க,—சதமுகன் நிரை விழிகொடு நோக்கி - சதமுகன் வரிசையாயுள்ள கண்களாற்பார்த்து,—கலக்கம் நண்ணியே - கலக்கமடைந்து,—தமரினை காண்கிலன் கவன்றனன் - சுற்றத்தவராய்வந்த அசுரவீரரைக்கா

ணுதவனும் வருந்தி,—தெளிவு எய்தி - (பின் ஒருவாறு) தெளிந்து,—உலக்கை சூலம் வேல் சக்கரம் தோமரம் ஓச்சுதலுறுகின்றான் - இருப்புலக்கையையும் சூலத்தையும் வேலையும் சக்கரத்தையும் சவளத்தையும் (எடுத்து) எறிந்தான். எ — று.

தம், தன் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. (௧௫)

16. உற்றகாலையினொண்டிறன்மொய்ம்பினோனுருகெழுசினஞ்செய்தோர்
பொற்றைநேர்தருசிகரியைப்பறித்தனன்பொள்ளெனவெறிகாலை
மற்றோர்வார்சிலைவணக்கியேவெய்யதீவாளியாயிரம்பூட்டி
யிற்றுவீழ்வகையிடைதனிலறுத்தனனெறிதருகதிர்வேலான்.

இ - ள். உற்ற காலையின் - (சதமுகன் எறிந்தபடைகள் தனக்கெதிரே) வந்தபொழுது,—ஒண் திறல் மொய்ம்பினோன் உரு கெழு சினம் செய்து - மிக்க வலிமைபொருந்திய வீரவாகுதேவர் பெருங்கோபங்கொண்டு,—பொற்றை நேர்தரு ஓர் சிகரியை பறித்தனன் - மலைபோன்றவோர் கோபுரத்தைப்பிடுங்கி,—பொள்ளென எறி காலை - விரைவாக எறிந்தபொழுது,—எறி தரு கதிர் வேலான் - ஒளிவீசுகின்ற வேலையுடைய சதமுகன்,—ஓர் வார் சிலை வணக்கி - நெடிய ஒரு வில்லை (யெடுத்து) வளைத்து,—வெய்ய தீ வாளி ஆயிரம் பூட்டி - கொடுமையாகிய ஆயிரம் அக்கினி அஸ்திரங்களைத் தொடுத்துவிட்டு,—இற்று வீழ் வகை இடைதனில் அறுத்தனன் - முரிந்து விழும்படி (அக்கோபுரத்தை) நடுவிலே யறுத்தான். எ — று. மற்று, ஏ அசை. தன் சாரியை. (௧௬)

17. அறுத்துநூறுகோல்பின்னருமாங்கவனாகத்தினடுவெய்தச்
செறித்தகாலையின்வீரவாகுப்பெயர்ச்செம்மல்போயவன்வில்லைப்
பறித்தனன்முறித்தெறிதலுஞ்சதமுகன்பற்றவீதிடையென்னுக்
குறித்தோரைம்பதிற்றிருகரநீட்டியேகுரிசிலைப்பிடித்திட்டான்.

இ - ள். அறுத்து - (கோபுரத்தை) யறுத்து வீழ்த்தி,—நூறு கோல் பின்னரும் அவன் ஆகத்தின் நடு வெய்த செறித்தகாலையின் - நூறம்புகளைப் பின்னரும் அவரது மார்பினடுவே படும்படி யழுத்திய சமயத்தில்,—வீரவாகுப் பெயர்ச் செம்மல் போய் - வீரவாகு என்னும் பெயர்பெற்றதலைவர் சென்று,—அவன் வில்லை பறித்தனன் முறித்தெறிதலும் - அவன் வில்லைப்பிடுங்கி முறித்தெறிய (அப்பொழுது),—சதமுகன் பற்ற ஈது இடை என்னு குறித்து - சதமுகன் (இவனைப்) பிடித்தற்கு இதுதான் சமயமென்று நினைத்து,—ஓர் ஐம்பதிற்று இரு கரம் ஓச்சியே குரிசிலைப் பிடித்திட்டான் - (ஒருபக்கத்திலுள்ள) நூறு கைகளைநீட்டி வீரவாகுதேவரைப்பிடித்தான். எ — று.

ஆங்கு, ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௧௭)

18. பிடித்ததானவத்தலைவனையண்ணலோர்பெரும்புயங்கொடுதாக்கிப்
படித்தலைப்படத்தள்ளலும்வீழ்ந்துளான்பதைபதைத்தெழுகாலை
யடித்தலத்தினாலுதைத்தனனசனியாலழுங்குறுமாவம்போற்
றுடிப்பவேயுரத்தொருகழலுறுத்தினன்சோரிவாய்தொறுஞ்சோர.

இ - ள். பிடித்த தானவர் தலைவனை - (அங்ஙனம் நூறுகைகளைநீட்டிப்) பிடித்த அசுரத்தலைவனாகிய சதமுகனை,—அண்ணல் ஓர் பெரும் புயங்கொடு தாக்கி - வீரவாகுதேவர் ஒரு பெரிய தோளாலிடித்து,—படித்தலை பட தள்ளலும் வீழ்ந்துளான் - பூமியில் விழும்படி தள்ளுதலும் வீழ்ந்த சதமுகன்,—பதை பதைத்து எழு காலை அடித்தலத்தினால் உதைத்தனன் - பதைபதைத்தெழும்பும்போது காலினாலுதைத்து,—அசனியால் அழுங்

குறும் அரவம் போல் துடிப்ப - இடியினால்வருந்துகின்ற நாகத்தைப்போலத் துடிக்கவும்,—சோரி வாய் தொறும் சோர - ஒவ்வொருவாய்களினின்றும் இரத்தஞ் சொரியவும்,—உரத்து ஒரு கழல் உறுத்தினன் - மார்பில் ஒருகாலால் மிதித்தார். எ - று.

ஏகாரம் தேற்றம். உறுத்தல் - மிதித்தல். சோர்தல் - கக்குதல், ஒழுகுதல். (௧அ)

19. கந்தெனப்படுமொய்ம்புடைவெய்யசூர்கட்டுரைமுறைபோற்றி
வந்தெதிர்த்திடுசதமுகத்தவுணனைமிதித்திடுமறமைந்த
னந்தகப்பெயரசுரனையாற்றல்பெற்றமர்முயலகன்றன்னைத்
தந்தியைப்பதமொன்றுகொண்டூன்றியதாதைபோற்றிகழ்கின்றான்.

இ - ள். கந்து எனப்படு மொய்ம்பு உடை வெய்ய சூர் கட்டுரை முறை போற்றி - தூணென்று சொல்லத்தக்க தோள்களையுடைய கொடிய சூரபன்மனது கட்டளையை முறையாகக்காத்து,—வந்து எதிர்த்திடு சதமுகத்து அவுணனை மிதித்திடும் மற மைந்தன் - வந்து எதிர்த்த சதமுகாசுரனை (எழும்பவிடாது) மிதித்துநிற்கின்ற வீரவாகுதேவர்,—அந்தகப்பெயர் அசுரனை - அந்தகாசுரனையும்,—ஆற்றல் பெற்று அமர் முயலகன் தன்னை - வலிபெற்றிருந்த முயலகனையும்,—தந்தியை - கயமுகாசுரனையும்,—பதம் ஒன்று கொண்டு ஊன்றிய தாதைபோல் திகழ்கின்றான் - ஒருபாதத்தால் மிதித்தருளிய பிதாவாகிய சிவபெருமானைப்போல விளங்கினார். எ — று.

அத்து, தன் சாரியை. ஊன்றல் - மிதித்தல். (௧௯)

வேறு.

20. மின்னல்வாளெயிற்றவுணன்மார்பகம்விடரெனும்படிவிள்ளவே
தன்னோர்பாதமுறுத்திமற்றொருதாளினைக்கொடுதள்ளியே
சென்னியாவுமுருட்டினான்றிசைமுற்றுநின்றுபரித்திடுங்
கன்னமார்மதமால்களிற்றினும்வன்மைசான்றிடுகழலினான்.

இ - ள். திசை முற்றும் நின்று பரித்திடும் கன்னம் ஆர் மதமால் களிற்றினும் வன்மை சான்றிடு கழலினான் - அட்டதிக்குகளினின்று உலகத்தைத்தாங்குகின்ற கதுப்பிலுள்ள மதம்பொருந்திய பெரியயானைகளினும்பார்க்க வலிமைமிகுந்த பாதங்களையுடைய வீரவாகுதேவர்,—மின்னல் வாள் எயிற்று அவுணன் மார்பகம் விடரெனும்படி விள்ள - பிரகாசம்பொருந்திய வாள்போன்ற வக்கிரதந்தங்களையுடைய சதமுகாசுரனது நெஞ்சானது மலைவெடிப்பைப்போல வெடிக்க,—தன் ஓர் பாதம் உறுத்தி - தமது ஒருகாலினால் மிதித்து,—ஒரு தாளினைக் கொடு தள்ளி - மற்றொருகாலினாலே (கீழே) தள்ளி,—சென்னி யாவும் உருட்டினான் - (அவனது) தலைகளெல்லாவற்றையும் (உதைத்து) உருட்டினார். எ - று.

ஏகாரங்கள் அசை. உம்மை முன்னையது முற்று; பின்னையது உயர்வுசிறப்பு. (௨0)

21. நூறுசென்னியுமிடறியாங்கொருநொடிவரைப்பின்முன்னவுணனை
யீறுசெய்தனனதுமுடித்தபினெல்லையில்சினமெய்தியே
யாறுமாமுகவள்ளல்வாய்மையிகழ்ந்துளானவையத்தைமுன்
னீறுசெய்துபினடுவணிங்கரத்தையென்றுநினைந்தனன்.

இ - ள். நூறு சென்னியும் இடறி - நூறுதலைகளையுங் காலினாலிடறி,—ஒரு நொடி வரைப்பின் முன் அவுணனை ஈறு செய்தனன் - ஒருநொடிப்பொழுதின்முன்னம் சதமுகனைக்கொன்றவராகிய வீரவாகுதேவர்,—அது முடித்தபின் - அக்கருமமுடித்தபின்பு,—எல்லை

யில் சினம் எய்தி - அளவற்றகோபங்கொண்டு,—ஆறுமாமுக வள்ளல் வாய்மை இகழ்ந்து ளான் அவையத்தை முன் ஈறு செய்து - ஆறு திருமுகங்களையுடைய கந்தஸ்வாமியினது வார்த்தையைப்(பொருட்படுத்தாது)நிந்தித்த சூரபன்மனது சபாமண்டபத்தை முன்னே அழித்து,—பின் இ நகரத்தை அடுவென் என்று நினைந்தனன் - பின்னர் இந்த நகரத்தை யழிப்பேனென்று நினைத்தார். எ – று.

ஆங்கு, ஏ அசை. அத்து சாரியை. உம்மை முற்று. (உக)

சதமுகன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுசு0.

---

# காவலாளர்வதைப்படலம்.

1. சுடரும்வேற்படைத்தொல்குமரேசன
தடிகண்முன்னியருளுடனாண்டகை
படியளந்திடுபண்ணவனாமென
நெடியபேருருக்கொண்டுநின்றனரோ.

இ - ள். சுடரும் வேற்படை தொல் குமரேசனது அடிகள் முன்னி - ஒளிவீசு கின்ற வேலாயுதத்தினையுடைய பெருமைபொருந்திய குமாரக்கடவுளது திருவடிகளைத் தியானித்து,—அருளுடன் - (அவரது) திருவருளோடு,—ஆண் தகை - வீரவாகுதேவர்,—படி அளந்திடு பண்ணவன் ஆம் என - பூமியை அளந்த திருமாலைப்போல,— நெடிய பேர் உரு கொண்டு நின்றான் - நெடிய பெரிய வடிவத்தைக்கொண்டு நின்றார். அரோ அசை. (க)

2. திசையளந்தனதிண்புயஞ்சென்றுசேண்
மிசையளந்தனமேதகுநீண்முடி
வசுதையாவுமளந்தனவார்கழ
லசைவருந்திறலாடவனிற்பவே.

இ - ள். அசைவு அரும் திறல் ஆடவன் நிற்ப - சோர்வில்லாத வலிமைபொருந்திய வீரவாகுதேவர் (இங்ஙனம் பெரியவடிவங்கொண்டு) நிற்ப,—திண் புயம் திசை அளந் தன - வலியபுயங்கள் திக்கையளவிட்டன,—மேதகு நீண்முடி சென்று சேண்மிசை அளந்தன - உயர்ந்த நீண்ட முடியானது போய் மேலுலகத்தை யளந்தது,—வார்கழல் வசுதை யாவும் அளந்தன - நெடியபாதங்கள் பூமிமுழுவதையு மளந்தன. எ – று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. முடி அளந்தன ஒருமைப்பன்மைமயக்கம். (உ)

3. திருவுலாங்கழற்சீறடிச்செம்மல்பே
ருருவுதாங்கியுகந்தனனிற்றலு
மரவின்வேந்தருமாதியங்கூர்மமும்
வெருவினார்கள்வியன்பொறையாற்றலார்.

இ - ள். திரு உலாங் கழல் சிறு அடி செம்மல் - இலக்குமிவிலாசம்பொருந்திய வீரக்கழலையணிந்த சிற்றடிகளையுடைய வீரவாகுதேவர்,—பேர் உரு தாங்கி உகந்தனன் நிற்றலும் - பெரியவடிவங்கொண்டு மகிழ்ந்து நிற்க,—அரவின் வேந்தரும் - ஆதிசேட

னும்,—ஆதியம் கூர்மரும் - ஆதிகூர்மமும்,—வியன் பொறை ஆற்றலார் - அவரது பெரியதிருமேனிச் சுமையைப் பொறுக்கமாட்டாதவராய்,—வெருவினர்கள் - பயமடைந்தார்கள். எ — று. உம்மைகள் எண்ணுப்பொருளன. திரு உலாம் என்பதற்கு அழகுபரந்த என்றலுமாம். (ங)

4. கதிரெறித்திடுகாமருபூணினன்
மதுகைபெற்றவடிவொடுநிற்றலு
மதுபரித்தற்கருமையினூற்றவும்
விதலையுற்றதுவீரமகேந்திரம்.

இ - ள். கதிர் எறித்திடு காமரு பூணினன் - ஒளிவீசுகின்ற அழகிய ஆபரணங்களையணிந்த வீரவாகுதேவர்,—மதுகை பெற்ற வடிவொடு நிற்றலும் - வலிமைபொருந்திய பெரிய வடிவத்தோடு நின்றவளவில்,—அது பரித்தற்கு அருமையின் - அவ்வடிவத்தைத் தாங்கமுடியாமையினால்,—வீர மகேந்திரம் ஆற்றவும் விதலை உற்றது - அவ்வீரமகேந்திரம்மிகவுநடுக்கங்கொண்டது எ—று. காமரு என்பதற்கு விரும்பப்பட்ட என்றலுமொன்று

5. உலங்கொள்வாகுவினொண்பதமூன்றலும்
விலங்கியேதளர்வீரமகேந்திர
மிலங்கைநீர்மையெய்தாமலிருந்ததாற்
குலங்கொடானவக்கோமகனாணையால்.

இ - ள். உலம் கொள் வாகுவின் ஒண் பதம் ஊன்றலும் - திரண்ட கல்லைப்போன்ற புயங்களையுடைய வீரவாகுதேவரது பாதங்கள் அழுத்துதலும்,—விலங்கியே தளர் வீரமகேந்திரம் - பிளந்துதளருகின்ற வீரமகேந்திரமானது,—குலம் கொள் தானவர் கோமகன் ஆணையால் - உயர்ச்சியாகிய அசுரர்களுக்குத் தலைவனாகிய சூரபன்மனது ஆஞ்ஞையால்,—இலங்கை நீர்மை எய்தாமல் இருந்தது - (முன்கடலிலழுந்திய) இலங்காபுரியின் தன்மையை அடையாமலிருந்தது. எ - று.

எனவே இலங்காபுரி கடலிலாழ்ந்ததுபோல் தானுமாழாதிருந்தது என்பதுகருத்து. குலம் - உயர்ச்சி; சிரேட்டம். ஆல், எ அசை. (ரு)

6. சேணளாவியசென்னியனெண்டிசை
காணநிற்புறுகாட்சியன்கந்தவே
ளாணைகாட்டிநிறுவியவாடலாந்
தாணுவென்னத்தமியன்விளங்கினன்.

இ - ள். சேண் அளாவிய சென்னியன் - ஆகாயத்தையளாவிய தலையையுடையவரும்,—எண் திசை காண நிற்புறு காட்சியன் - அட்டத்திக்கிலுள்ளவர்களுங் காணும்படி நிற்கின்ற தோற்றத்தையுடையவருமாய்,—தமியன்-ஒப்பற்றவீரவாகுதேவர்,—கந்தவேள் ஆணை காட்டி நிறுவிய ஆடலாம் தாணு என்ன விளங்கினன் - கந்தஸ்வாமியினது ஆஞ்ஞையைக் காட்டி நிறுத்தப்பட்ட வெற்றித்தம்பத்தைப் போல விளங்கினர். எ—று.

7. சான்றகேள்வித்தலைமகன்றாட்டுணை
யூன்றுகின்றவுழிதொறுமாநில
மான்றுகீண்டிடவவ்வப்புழைதொறுந்
தோன்றுகின்றனசூழ்கடனீத்தமே.

இ - ள். சான்ற கேள்வித் தலைமகன் தாள் துணை - சிறந்த சாஸ்திரக்கேள்வியையுடைய வீரவாகுதேவர் தமது இரண்டு பாதங்களையும்,—ஊன்று கின்ற உழி தொறும்—ஊன்றுகின்ற இடங்கடோறும்,—மா நிலம் ஆன்று கீண்டிட - பெரிய பூமியசைந்து

பிளக்க,—அவ்வப் புழைதொறும் - அந்த அந்தத்துவாரங்கள் வழியாக,—சூழ் கடல் நீத்தம் தோன்றுகின்றன - (அந்நகரத்தைச்) சூழ்ந்த கடல்வெள்ளம் வெளிப்படுகின்றன.

ஏகாரம் அசை. பலதுவாரங்களால் நீர் புறப்படுதலின் தோன்றுகின்றன எனப்பன்மையாற்கூறினர். (எ)

8. ஆத்தனூன்றுமடிதொறுந்தோன்றிய
நீத்தம்யாவுநெடுந்திறல்வெய்யசூர்
வாய்த்தகோயில்வளைந்திறைபோற்றிய
வேத்தவைக்களந்தன்னினுமேவிய.

இ — ள். ஆத்தன் ஊன்றும் அடிதொறும் தோன்றிய நீத்தம் யாவும் - வீரவாகுதேவர் ஊன்றிய கால்களின் வழியாக வெளியேவருகின்ற வெள்ளமுழுதும்,—நெடும் திறல் வெய்ய சூர் வாய்த்த கோயில் வளைந்து - மிக்கவலிமையையுடைய கொடிய சூரபன்மனிருக்கின்ற கோயிலைச்சூழ்ந்து,—இறை போற்றிய வேத்தவைக்களம் தன்னினும் மேவிய - அவனிருந்தரசுசெய்கின்ற சபாமண்டபத்திலும் பிரவேசித்தது. எ - று.

தன் சாரியை. உம்மை முன்னையது முற்று; பின்னையது இறந்ததுதழீஇயது. (அ)

9. பூழைகொண்டுபுறம்படர்நீத்தநீர்
மாழைகொண்டவன்கோயில்வளைந்துராய்ப்
பேழைகொண்டபிணிப்பறுபாந்தள்போற்
கூழைகொண்டமறுகிற்குலாயதே.

இ - ள். பூழைகொண்டு புறம்படர் நீத்தநீர் - (வீரவாகுதேவர் கால்வைத்தலினுலுண்டான) துவாரத்தினுல் வெளியேவருகின்ற வெள்ளநீரானது,—மாழை கொண்டவன் கோயில் வளைந்து உராய் - செல்வமுள்ளவனுகிய சூரபன்மனது கோயிலைச்சூழ்ந்து போய்,—பேழை கொண்ட பிணிப்பு அறு பாந்தள் போல்-பெட்டியிலிருக்கின்ற தடை நீங்கிய பாம்பைப்போல,—கூழை கொண்ட மறுகில் குலாயது - படைவகுப்பைக் கொண்டவீதியில் உலாவியது. ஏ அசை. கூழைகொண்டமறுகு - குறுந்தெருவுமாம். எ — று.

10. துய்யபூழைதொறுந்தொறுந்தோன்றுநீர்
மையல்வெங்கரிவாம்பரிதேர்படை
கையரிக்கொடுகாசினியாறுபோற்
செய்யமாநகர்யாங்கணுஞ்சென்றதே.

இ - ள். துய்ய பூழை தொறும் தொறும் தோன்று நீர்-சுத்தமானதுவாரங்கடோறுந் தோன்றி வெளியேவருகின்றநீரானது,—மையல்வெம் கரி வாம்பரி தேர் படை கையரிக்கொடு - மயக்கம்பொருந்திய கொடிய யானைகளையும் தாவுகின்ற குதிரைகளையும் தேர்களையும் காலாட்களையும் வாரிக்கொண்டு,—காசினி ஆறுபோல் - உலகத்திலுள்ள ஆறுகளைப்போல,—செய்ய மாநகர் யாங்கணும் சென்றது - சிறந்த பெரிய அந்நகரமெவ்விடத்துஞ் சென்றது. எ — று. ஏ அசை. உம்மை முற்று. (௧0)

11. தோட்டதன்னசுழிப்படுவாரியி
னீட்டமாநகர்வீதிதொறேகியே
பாட்டின்மாளிகைபற்பலசாடியே
மீட்டுமொல்லையின்வேலைமடுத்ததே.

இ - ள். தோட்டது அன்ன சுழிப்படு வாரியின் ஈட்டம் - தோண்டினுற்போலக் (காணப்படுகின்ற) சுழிகளையுடைய கடனீரினது கூட்டம்,—மாநகர் வீதிதொறு ஏகியே-

அந்தப் பெரிய நகரத்திலுள்ள வீதிதோறுஞ் சென்று,—பாட்டின் மாளிகை பற்பல சாடியே - பெருமைபொருந்திய அனேக மாளிகைகளையழித்து,—மீட்டும் ஒல்லையின் வேலை மடுத்தது - பின்னும் விரைவாகச் (சென்று) கடலை நிறைத்தது. எ — று.

தொட்ட என்பது தோட்ட என நீட்டல் விகாரம் பெற்றது. ஏகாரங்கள் அசை.

12. எம்மையாளுடையெந்தைதன்றூதுவன்
செம்மைநீடுதிருவுருநோக்கியே
கைம்மறிக்கொடுகண்டனர்யாவரு
மம்மவோவெனவச்சமுற்றோடினார்.

இ - ள். எம்மை ஆளுடை எந்தை தன் தூதுவன் செம்மை நீடு திரு உரு நோக்கி- எம்மையடிமையாகவுடைய எம்பெருமானது தூதுவராகிய வீரவாகுதேவரது அழகுமிகுந்த திருமேனியைப்பார்த்து,—கை மறிக் கொடு கண்டனர் யாவரும்-கையையுதறிக்கொண்டு கண்ட அசுரர்கள் எல்லாரும்,—அம்ம ஓ என அச்சமுற்று ஓடினார் - அம்ம ஓ என்று பயங்கரமடைந்து ஓடினார்கள். எ — று.

ஏ அசை. தன் சாரியை. உம்மை முற்று. அம்ம ஓ பெருவியப்பை உணர்த்திநின்றன.

13. மாவுலாவருமன்னவன்கோயிலுட்
காவலாளரிக்காளையைக்கண்ணுறீஇ
யோவிதோர்வஞ்சனுற்றனனீண்டெனுக்
கூவிளித்தனர்தத்தமிற்கூடினார்.

இ - ள். மா உலாவரு மன்னவன் கோயில் உள் காவலாளர் - இலக்குமிவிலாசம் பொருந்திய சூரபன்மனது அரண்மனையின் உட்காவலாளர்கள்,—இ காளையை கண்ணுறீஇ - இவ்வீரவாகுதேவரைப் பார்த்து,—ஓ இது ஓர் வஞ்சன் ஈண்டு உற்றனன் எனு - ஓ! இவ்விடத்தில் ஓர் வஞ்சகன் வந்தானென்று,—கூவிளித்தனர் தம் தமில் கூடினார் - ஆரவாரித்துத் தங்களில்வந்து கூடினார்கள். எ - று.

ஓ வியப்புக்குறிப்பு. கூவிளி ஒருசொல். (கங)

14. கூடுகின்றகுணிப்பருங்காவலோர்
நீடுமெய்கொடுநின்றவற்கஞ்சியே
யாடல்பூண்டிலமென்னினரசனே
சாடுநம்மைச்சரதமென்றெண்ணினார்.

இ - ள். கூடு கின்ற குணிப்ப அரும் காவலோர் - (இங்ஙனம்) வந்து கூடுகின்ற அளவற்ற காவலாளர்கள்,—நீடு மெய் கொடு நின்றவற்கு அஞ்சி ஆடல் பூண்டிலம் என்னின் - பெரிய வடிவங்கொண்டுநின்ற இவனுக்குப்பயந்து போர் செய்யாதிருப்பேமாயின்,—அரசனே நம்மை சாடும் - (நம்) அரசனே நம்மைக்கொல்லுவான்,—சரதம் என்று எண்ணினார் - (இது) உண்மையாகும் என்று (தங்களுக்குள்) ஆலோசனைசெய்தார்கள். எ - று. ஏகாரம் முன்னையது அசை; பின்னையது தேற்றம். (கச)

15. குமரிமாமதிற்கோயிலுட்போற்றியே
யமரியோர்களொரைம்பதுவெள்ளத்தர்
திமிரமேனியர்தீயுருகண்ணினர்
சமரியற்றத்தலைத்தலைமண்டினார்.

இ - ள். குமரி மாமதில் கோயில் உள் போற்றி அமரியோர்கள் - அழிவற்ற பெரியமதிலேயுடைய அரண்மனைக்குட் பாதுகாத்திருந்தவர்களாகிய,—ஓர் ஐம்பது வெள்ளத்தர் - ஐம்பதுவெள்ளம் அசுரர்கள்,—திமிர மேனியர் - இருள்போன்ற சரீரமுடையவர்களும்,—தீயுகு கண்ணினர் - (கோபத்தால்) நெருப்புப்பொறிபறக்கின்ற கண்களையுடையவர்களும் ஆகி,—சமர் இயற்ற தலை தலை மண்டினர் - போர்செய்யும்படி இடங்கடோறும் நெருங்கிவந்தார்கள். எ — று. ஏ அசை. (கரு)

16. மண்டிமற்றவர்வல்லெழுத்தோமரம்
பிண்டிபாலம்பெருங்கதையாதியாக்
கொண்டகொண்டகொடும்படைவீசியே
யண்டம்விண்டிடவார்த்தனராடினர்.

இ - ள். அவர் மண்டி - அக்காவலாளர்கள் நெருங்கிவந்து,—வல் எழு தோமரம் பிண்டிபாலம் பெரும் கதை ஆதியா கொண்ட கொண்ட கொடும் படை வீசியே-வலிய எழுவாயுதம் இருப்புலக்கை பிண்டிபாலம் பெரியதண்டம் முதலாகக் (கைகளில்)வைத்திருக்கின்ற கொடிய ஆயுதங்களை வீரவாகுதேவர்மேல் பிரயோகித்து,—அண்டம் விண்டிட ஆர்த்தனர் ஆடினர் - அண்டமுடையும்படிகர்ச்சித்துப் போர்செய்தார்கள். எ - று.

மற்று, ஏ அசை. (கசு)

17. ஆடுமெல்லையடுபடைத்தானவர்
பாடுசூழ்ந்தபரிசினைநோக்கின
னீடுசான்றவிடித்தொகையாயிர
கோடிபோற்புயங்கொட்டினின்றார்ப்பவே.

இ - ள். ஆடும் எல்லை - (அங்ஙனம்) போர்செய்யும்போது,—அடு படை தானவர் பாடு சூழ்ந்த பரிசினை நோக்கினன் - கொலைத்தொழிற்குரிய ஆயுதங்களையுடைய அசுரர்கள் பக்கத்தில் வந்துசூழ்ந்த தன்மையைக்கண்ட வீரவாகுதேவர்,—ஈடு சான்ற இடித்தொகை ஆயிரகோடி போல் - வலிமைமிகுந்த ஆயிரகோடி இடிக்கூட்டங்கள் இடித்தாற்போல,—புயம் கொட்டி நின்று ஆர்ப்ப - தமது புயங்களிலேதட்டி நின்று ஆரவாரிக்க. எ - று. ஏ அசை. (கஎ)

18. அலைக்கவந்தவவுணப்படையெலாம்
கலக்கமூழ்கிக்கருத்துணர்வஃகியே
யுலக்குறாதவுருமிடியுண்டிடும்
புலைக்கடுந்தொழிற்புள்ளெனலாயவே.

இ - ள். (அப்பேரோசையைக்கேட்டு) அலைக்கவந்த அவுணர் படை யெலாம் - (அவரைக்) கொல்லும் பொருட்டுவந்த அசுரசேனைகண் முழுவதும்,—கலக்கம் மூழ்கி - கலக்கத்தில் அமிழ்ந்தி,—கருத்து உணர்வு அஃகி - நினைவுமறிவுஞ் சுருங்கி,—உலக்குறாத உரும் இடி உண்டிடும் புலைக் கடும் தொழில் புள்ளெனலாய - அச்சத்தைவருவிக்கின்ற கெடாத இடியேற்றைக்கேட்ட இழிவாகிய கொடுந்தொழிலையுடைய அசுணப்பட்சியைப்போலாயின. எ — று.

ஏகாரங்கள் அசை. புலைக்கடுந்தொழில் - புலாலுண்ணுங்கொடுந்தொழிலையுடைய எனினுமமையும். (கஅ)

வேறு.

19. பன்மழைக்குலங்களிற்படைக்கலங்கள்யாவையும்
வன்மைபெற்றவீரருய்ப்பவந்துமேனிபடுதலுஞ்
சின்மயத்தனேற்றன்மிக்கசெய்யவீழ்விழுத்திய
தொன்மரத்தியற்கைபோன்றுசோரிசோரநின்றனன்.

இ - ள். வன்மை பெற்ற வீரர் - பலசாலிகளான அசுரர்கள்,—பல் மழைக் குலங்களிற் படைக்கலங்கள் யாவையும் உய்ப்ப - அனேக மழைக்கூட்டங்கள்போல ஆயுதங்களெல்லாவற்றையும் விட,—வந்து மேனி படுதலும் - (அவைகள்) வந்து தமதுமேனியிற் படும்பொழுது,—சின்மயத்தன் ஒற்றன் - ஞானஸ்வரூபராகிய கந்தஸ்வாமியினது தூதரான வீரவாகுதேவர்,—மிக்க செய்யவீழ் விழுத்திய தொன் மரத்து இயற்கை போன்று- மிகச்சிவந்த விழுதுகளை விட்டுக்கொண்டு நின்ற ஆலமரத்தின் தன்மையையொத்து,—சோரி சோர நின்றனன் - இரத்தமொழுகும் படிநின்றார். எ - று. உம்மை முற்று.(கக)

20. ஆனகாலைவீரவாகுவறிவனங்கியிற்சினை இ
மானவீரர்மீதலாதுவாளெடுக்கலேனெனுத்
தேனின்மாப்பெருங்கடற்றிளைத்தலைக்குமத்தெனத்
தானவப்பதாதியைத்தடிந்தலைத்தன்மேயினான்.

இ - ள். ஆன காலை - அப்பொழுது,—வீரவாகு அறிவன் - அறிவுடையராகிய வீரவாகுதேவர்,—அங்கியின் சினைஇ-அக்கினியைப்போலக் கோபித்து,—மான வீரர்மீது அலாது வாள் எடுக்கலேன் என - வலிமைபொருந்திய சுத்தவீரரிடத்தல்லாமல் (இந்த அற்பர்களைக் கொல்லும்பொருட்டு) வாட்படையை எடேனென்று கூறி,—தேனின் மா பெருங் கடல் திளைத்து அலைக்கும் மத்தென - மிகப்பெரிய தேன்கடலிற்புகுந்து கலக்குகின்ற மத்தைப்போல,—தானவர் பதாதியை தடிந்து அலைத்தல் மேயினான் - அசுரசேனைகளைக்கொன்று கலக்குவாராயினார். எ - று. தேன்கடற்றிளைத்தலைக்கு மத்து இல்பொருளுவமை. அசுரர்நிறத்திற்கும் மிகுதிக்கும் தேன்கடல் உவமானம். (உ0)

21. மிதித்தனன்கொதித்தனன்விடுத்திலன்படுத்தனன்
சதைத்தனன்புதைத்தனன்றகர்த்தனன்றுகைத்தன
னுதைத்தனன்குதித்தனனுருட்டினன்புரட்டினன்
சிதைத்தனன்செகுத்தனன்செருக்கினன்றருக்கினன்.

இ - ள். மிதித்தனன் - (வீரவாகுதேவர் அவ்வசுரர்களை) மிதித்தார்,—கொதித்தனன் - சினந்தார்,—விடுத்திலன் படுத்தனன் - விடாதுகொன்றார்,—சதைத்தனன்-நசுக்கினார்,—புதைத்தனன் - புதைத்தார்,—தகர்த்தனன் - உடைத்தார்,—துகைத்தனன் - உழக்கினார்,—உதைத்தனன் - உதைத்தார்,—குதித்தனன் - குதித்தார்,—உருட்டினன்- உருட்டினார்,—புரட்டினன் - புரட்டினார்,—சிதைத்தனன் - கெடுத்தார்,—செகுத்தனன் - அழித்தார்,—செருக்கினன் - அகங்கரித்தார்,—தருக்கினன் - களிப்படைந்தார்.

22. சிரத்தினைநெரித்தனன்றிறற்புயமிறுத்தனன்
கரத்தினைமுரித்தனன்களத்தினைத்திரித்தன
னுரத்தினைப்பிரித்தனனுருத்தனன்சிரித்தனன்
புரத்தினையுரித்தனன்பொடித்தனன்படைத்திறம்.

இ - ள். சிரத்தினை நெரித்தனன் - (வீரவாகுதேவர் அவ்வசுரர்களது) தலைகளைநெரித்தார்,—திறல் புயம் இறுத்தனன் - வலியபுயங்களை முரித்தார்,—கரத்தினை முரித்தனன் - கைகளையொடித்தார்,—களத்தினை திரித்தனன் - கழுத்துக்களைத்திருப்பினார்,—உரத்தினை பிரித்தனன் - மார்பைப்பிளந்தார்,—உருத்தனன் சிரித்தனன் - கோபங்கொண்டு சிரித்தார்,—புரத்தினை உரித்தனன் - சரீரத்தின் றோலையுரித்தார்,—படைத்திறம் பொடித்தனன் - ஆயுதங்களைத்தூளாக்கினார். எ - று. புரம் ஆகுபெயர். (உஉ)

23. எடுத்தனன்சுழற்றினனெறிந்தனன்சிலோர்தமைப்
புடைத்தனனிடித்தனன்புயத்திஞற்சிலோர்தமைப்
பிடித்தனன்பிசைந்தனன்பிழிந்தனன்சிலோர்தமை
யடித்தலங்கொடித்தலத்தரைத்தனன்சிலோர்தமை.

இ - ள். சிலோர்தமை எடுத்தனன் சுழற்றினன் எறிந்தனன் - (வீரவாகுதேவர்) சிலரையெடுத்துச் சுழற்றியெறிந்தார்,—சிலோர்தமை புயத்திஞல் புடைத்தனன் இடித்தனன் - சிலரைத் தமது புயத்திஞல் அடித்து இடித்தார்,—சிலோர்தமை பிடித்தனன் பிசைந்தனன் பிழிந்தனன் - சிலரைப்பிடித்துப் பிசைந்து பிழிந்தார்,—சிலோர்தமை அடித்தலம் கொடு இ தலத்து அரைத்தனன் - சிலரைத் தமது கால்களால் இந்நிலத்தில் அரைத்தார். எ — று. தம் நான்கும் சாரியை. (உங)

24. பெருத்தனன்சிறுத்தனன்பெயர்ந்தும்வேறுபல்லுருத்
தரித்தனன்னடந்தனன்றனித்தனிதொடர்ந்தனன்
மருத்தெனக்கறங்கினன்வளைந்தனன்கிளர்ந்தன
ஞெருத்தன்வெள்ளமைம்பதுமுலக்குறக்கலக்கிஞன்.

இ - ள். பெருத்தனன் - (வீரவாகுதேவர்) பெருவடிவங்கொண்டார்,—சிறுத்தனன் - சிறுவடிவங்கொண்டார்,—பெயர்ந்தும் வேறு பல் உரு தரித்தனன் நடந்தனன் - பின்னும் வேருகிய பலவடிவங்கொண்டு நடந்து,—தனி தனி தொடர்ந்தனன் - தனித் தனி (ஒவ்வொருவரையும்) தொடர்ந்து சென்று,—மருத்தென கறங்கினன் வளைந்தனன் கிளர்ந்தனன் - வாயுவைப்போலச் சுழன்று வளைந்து எழுந்து,—ஒருத்தன் வெள்ளம் ஐம்பதும் உலக்குற கலக்கிஞன் - தாமொருவரே ஐம்பது வெள்ளஞ் சேனைகளையும் இறக்கும்படி கலக்கிஞர். எ — று.

உம்மை முன்னையது இறந்ததுதழீஇயது; பின்னையது முற்று. (உச)

25. மஞ்ஞையன்னமொண்புருமடக்குயிற்றிரட்பயில்
செய்ஞ்நலங்கொண்மாடமீதுசேனங்கூளிபிள்ளைகள்
பிஞ்ஞகன்குமாரனுடுபோரமர்க்களம்படு
மஞ்ஞையாளர்குருதியூனருந்துமாறிருந்தவே.

இ - ள். மஞ்ஞை அன்னம் ஒண்புரு மடக்குயில் திரள் பயில் செய் நலம் கொள் மாடம் மீது - மயில்களும் அன்னங்களும் அழகிய புருக்களும் இளங்குயிற்கூட்டங்களும் இருக்கின்ற செவ்விய அழகுபொருந்திய மாளிகையின்மேல்,—சேனம் கூளி பிள்ளைகள் - பருந்துகளும் பேய்களும் காகங்களும்,—பிஞ்ஞகன் குமாரன் ஆடு பேர் அமர்க்களம் படும் அஞ்ஞையாளர் குருதி ஊன் அருந்துமாறு இருந்த-சிவபெருமானது குமாரராகிய வீரவாகுதேவர் செய்த பெரிய போர்க்களத்தில் இறந்த அறிவிலிகளாகிய அசுரர்களுடைய உதிரங்களையுந் தசைகளையும் உண்ணும்படியிருந்தன. எ — று. ஏகாரம் அசை.

26. மானினஞ்செறிந்திரைந்துவந்தவெல்லைதன்னிடைத்
தாஞேர்சிங்கவேறுபுக்கதன்மைபோலவுணர்தங்
கோனிருந்தவுறையுளிற்குலாயகாவலாளராஞ்
சேனைவெள்ளமைம்பதுஞ்சினத்தின்வல்லைசிந்திஞன்.

இ - ள். மானினம் செறிந்து இரைந்து வந்த எல்லை தன்னிடை - மான்கூட்டங்கள் நெருங்கி யிரைந்துவந்த விடத்தில்,—ஓர் சிங்க ஏறு புக்கதன்மை போல் - ஓர் ஆண் சிங்கமானது போய்ப் (பாய்ந்து கொல்லுந்) தன்மையைப்போல,—அவுணர் தம் கோன் இருந்த உறையுளிற் குலாய காவலாளராம் சேனை வெள்ளம் ஐம்பதும் - அசுரராஜனு

கிய சூரபன்மனிருக்கப்பெற்ற கோயிலை வளைந்திருக்கின்ற காவலாளராகிய ஐம்பது வெள்ளம் அசுரசேனைகளையும்,—சினத்தின் வல்லை சிந்தினன் - (வீரவாகுதேவர்)கோப த்தோடு விரைந்து அழித்தார். எ — று.

தான் அசை. தன், தம் சாரியை. உம்மை முற்று. குலாவல் - வளைதல். (உசு)

27. முறிந்தனருறுப்பியாக்கைமுற்றும்வேறுவேறவாய்ப்
பிறிந்தனர்தகர்ந்தனர்பிறங்குசென்னிசோரியுட்
செறிந்தனர்புதைந்தனர்சிதைந்தனருருண்டனர்
மறிந்தனரிறந்தனர்மடிந்தனர்கிடந்தனர்.

இ - ள். உறுப்பு முறிந்தனர் - (வீரவாகுதேவர் செய்த போரினால் அசுரர்கள்)அவயவங்கள் முறிந்தார்கள்,—யாக்கை முற்றும் வேறு வேறவாய் பிரிந்தனர் - சரீரமுழுவதும் வேறு வேறாகப்பிரிந்தார்கள்,—பிறங்கு சென்னி தகர்ந்தனர் - விளங்குகின்ற தலையுடைந்தார்கள்,—சோரியுள் செறிந்தனர் புதைந்தனர் - இரத்தவெள்ளத்துள் மூழ்கி அழுந்தினார்கள்,—சிதைந்தனர் உருண்டனர் - சிதைந்து உருண்டார்கள்,—மறிந்தனர் இறந்தனர் - விழுந்திறந்தார்கள்,—மடிந்தனர் கிடந்தனர் - இறந்துகிடந்தார்கள். எ — று.

உம்மை முற்று. மடிதல் - மயங்குதல் எனினுமாம். சிதைதல் - தலைமுதலிய உறுப்புக்களழிதல். (உஎ)

28. இன்னபான்மைவீற்றுவீற்றினவுணர்தானையாவையுஞ்
சின்னபின்னமாகியேசிதைந்துவீழ்ந்துலந்திட
வுன்னுகின்றமுன்னமட்டுலம்பினன்சிலம்பினின்
மன்னன்மங்கைநூபுரத்தின்வந்தவீரவாகுவே.

இ - ள். சிலம்பினின் மன்னன் மங்கை நூபுரத்தின் வந்த வீரவாகு - மலையரசன் புத்திரியாராகிய உமாதேவியாரது திருவடிச்சிலம்பினின்றுந்தோன்றியவீரவாகுதேவர்,—இன்ன பான்மை வீற்று வீற்று அவுணர் தானை யாவையும் - இத்தன்மையாக வேறுவேறாய் அசுரசேனைகளெல்லாம்,—சின்ன பின்ன மாகி சிதைந்து வீழ்ந்து உலந்திட - சின்னபின்னமாய் (உறுப்புகள்) அழிந்து வீழ்ந்து இறக்கும்படி,—உன்னுகின்ற முன்னம் அட்டு உலம்பினன் - நினைக்கின்ற அளவுக்குமுன் கொன்று (வீராவேசராய்) ஆரவாரித்தார். எ — று.

ஏகாரங்கள் அசை. இன் சாரியை. உம்மை முற்று. உலம்பல் - ஓசை. (உஅ)

29. வள்ளனின்றுசமரிழைப்பமாண்டவீரர்யாக்கையி
னுள்ளதாதுவானவேழுமுருவம்வேறுகாண்கிலா
தள்ளலாகியொன்றுபட்டதங்கிதன்னினுருகியே
வெள்ளியாதியுலகம்யாவும்விரவும்வண்ணமென்னவே.

இ - ள். வள்ளல் நின்று சமர் இழைப்ப மாண்ட வீரர் யாக்கையின் உள்ள - வீரவாகுதேவர் நின்று போர்செய்தலால் இறந்த அசுரவீரர்களுடைய தேகத்திலுள்ள,—தாதுவான ஏழும் - சத்ததாதுக்களும்,—வெள்ளி ஆதி உலகம் யாவும் அங்கி தன்னின் உருகியே விரவும் வண்ணம் என்ன - வெள்ளிமுதலிய உலோகங்களெல்லாம் நெருப்பிலுருகி ஒன்றாய்க்கலந்ததன்மைபோல,—அள்ளலாகி ஒன்று பட்டது - சேறாயொன்று பட்டன. எ — று.

ஏகாரம் இரண்டும் அசை. தன் சாரியை. உம்மைகள் முற்று. (உகூ)

காவலாளர்வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுஅகூ.

---

# நகரழி படலம்.



1. ஆசுறுமவுணவெள்ளமைம்பதுமுடித்தோனைஞ்ஞூ
றோசனையளவையான்றேயொராயிரமும்பரேகித்
தேசுறுமேருவென்னச்சிகரமோரிலக்கஞ்சூடி
வீசுபொன்சுடரநின்றவேரமொன்றங்கட்கண்டான்.

இ - ள். ஆசுறும் அவுண வெள்ளம் ஐம்பதும் முடித்தோன் - குற்றம்பொருந்திய ஐம்பதுவெள்ளம் அசுரசேனைகளையுமழித்த வீரவாகுதேவர்,—ஐஞ்ஞூறு ஓசனை அளவை ஆன்று - ஐஞ்ஞூறுயோசனைதூரம் அகலமாய்,—ஓராயிரம் உம்பர் ஏகி - ஆயிரயோசனைதூரம் மேலாகப்போய்,—தேசுறு மேரு என்ன - ஒளிபொருந்திய மேருமலையைப் போல,—சிகரம் ஓர் இலக்கம் சூடி - ஓரிலக்கஞ் சிகரங்களைத்தரித்து,—வீசுபொன் சுடர நின்ற வேரம் ஒன்று அங்கண் கண்டான் - வீசுகின்ற பொன்னொளியையுடையதாய் நின்ற ஒரு உபரிகையை அவ்விடத்துக்கண்டார். எ — று.

உம்மை முற்று. ஏ அசை. உபரிகை - சிகரமுள்ளமேல்வீடு. (க)

2. புறத்திருளிரியவைகும்பொலஞ்சுடர்ப்பொன்செய்வேரந்
திறத்தியல்கோயின்முன்னஞ்சேர்ந்ததுதன்னைவீரன்
பறித்தொருகரத்தினேந்திப்பதகனுஞ்சூரபன்ம
னறத்தியலிழுக்கிவைகுமவைக்களம்வீசியார்த்தான்.

இ - ள். புறத்து இருள் இரிய வைகும் பொலஞ்சுடர் பொன்செய்வேரம் - வெளியிலுள்ள இருள் நீங்கும்படி நிற்கின்ற அழகிய ஒளியையுடைய பொன்னாற்செய்யப்பட்ட உபரிகையானது,—திறத்து இயல் கோயில் முன்னம் சேர்ந்தது தன்னை - அழகாகச்செய்யப்பட்ட அரண்மனைக்கெதிரிலுள்ளது அதனை,—வீரன் பறித்து ஒரு கரத்தின் ஏந்தி - வீரவாகுதேவர்பிடுங்கி ஒருகையிலேந்தி,—பதகனும் சூரபன்மன் அறத்து இயல் இழுக்கி வைகும் அவை களம் வீசி ஆர்த்தான் - கீழ்மகனாகிய சூரபன்மன் தருமமுறையைத் தவறி அரசுவீற்றிருக்கின்ற இராசசபையில் எறிந்து ஆரவாரித்தார். எ — று.

அத்து மூன்றும் தன்னும் சாரியை. திறம் - அழகு, உயரம். (உ)

3. பன்மணிசெறிந்தபொற்பிற்பாயொளியெரிபொன்வேர
மன்னவனுறையுஞ்செம்பொன்மாயிருமன்றிற்போதன்
மின்னவிர்மேருவாதிவெற்பெலாமிகலினொன்றிப்
பொன்னகர்பொடிப்பச்செல்லுந்தன்மையைப்போலுமம்மா.

இ - ள். பன்மணி செறிந்த பொற்பில் பாய் ஒளி எரி பொன் வேரம் - பல இரத்தினங்கள் அழுத்தப்பட்ட அழகையும் பரந்த ஒளியையும் உடையதாய் விளங்குகின்ற பொன்னாற்செய்யப்பட்ட வேரமானது,—மன்னவன் உறையும் செம்பொன் மாயிரு மன்றில் போதல் - அரசனாகிய சூரபன்மன் வீற்றிருக்கின்ற செம்பொன்னாற் செய்யப்பட்ட மிகப்பெரிய இராசசபையிற் செல்லுதல் (எப்படியெனில்),—மின் அவிர் மேரு ஆதி வெற்பு எலாம் - ஒளிவிளங்குகின்ற மேருமுதலிய மலைகளெல்லாம்,—இகலின் ஒன்றி பொன் நகர் பொடிப்ப செல்லும் தன்மையைப் போலும் - பகையோடும் ஒருமித்து பொன்னுலகத்தையழிக்கும் பொருட்டுப் போகின்ற தன்மையைப்போலும். எ-று.

அம்மா அசை. (ங)

4. வார்த்தருகழற்கால்வீரன்வானுருமேறுமுட்க
வார்த்திடுதுழனியேகியரசன்மேவியவத்தாணி
சேர்த்தவர்கன்னத்தூடுசெறியுமுன்னெறிதலுற்ற
பேர்த்திடுசெம்பொன்வேரம்பேரவைமிசையுற்றன்றே.

இ - ள். வார்தரு கழல்கால் வீரன் - வார்பொருந்திய வீரக்கழலையணிந்த காலையுடைய வீரவாகுதேவர்,—வான் உருமேறும் உட்க ஆர்த்திடு துழனி ஏகி - மேகத்திலுள்ள இடியேறும்பயப்படும்படி ஆரவாரித்த ஓசைசென்று,—அரசன் மேவிய அத்தாணி சேர்த்தவர் கன்னத்தூடு செறியுமுன் - சூரபன்மன் வீற்றிருக்கின்ற சபாமண்டபத்திலிருந்த சனங்களுடைய காதினிடத்தில் செல்லுமுன்னம்,—எறிதலுற்ற பேர்த்திடு செம்பொன் வேரம் பேர் அவை மிசை உற்ற - அவராற்பிடுங்கி யெறியப்பட்ட செம்பொன் மயமாகிய வேரமானது சபாமண்டபத்தில் விழுந்தது. எ - று.

அன்று, ஏ அசை. உம்மை உயர்வுசிறப்பு. சேர்த்தவர் வலித்தல்விகாரம். (௪)

5. விற்செறிதூபிச்செம்பொன்வியன்மணிகளுலும்வேரங்
கற்செறிபெருந்தோள்வீரனெறிதலுங்கடிதுநண்ணிப்
பொற்செறிமார்பிற்சூரும்புதல்வருஞ்சிலரும்வைகுஞ்
சிற்சிலவிடையேயன்றிமன்றெலாஞ்சிந்திற்றுமால்.

இ - ள். வில் செறி தூபி செம்பொன் வியன் மணி களுலும் வேரம் - ஒளிபொருந்தியதூபியையுடையதாய்ச் செம்பொன்னாற்செய்து மேலான அரதனங்கள் அழுத்தப்பட்டவேரத்தை,—கல் செறி பெரும் தோள் வீரன் எறிதலும் - மலையைப்போல இறுகிய புயங்களையுடைய வீரவாகுதேவர் எறிய,—கடிது நண்ணி - (அவ்வேரம்) சீக்கிரத்திற் சென்று,—பொன்செறி மார்பின் சூரும் புதல்வரும் சிலரும் வைகும் சில் சில இடையே அன்றி - பொன்னாபரணங்கள் நெருங்கியிருக்கின்ற மார்பையுடைய சூரபன்மனும் அவனது மக்களும் சில பிரதானசனங்களும் இருந்த சிலசில இடங்கள்தவிர,—மன்று எலாம் சிந்திற்று - சபைமுழுதையும் அழித்தது. எ — று.

ஆம், ஆல் அசை. ஏகாரம் பிரிநிலை உம்மைகள் எண்ணுப்பொருளன. (௫)

6. தடத்தனிவேரங்கீண்டுதபனியத்தவைக்கணோச்சி
யிடித்தனனொருதானிற்குமெம்பிரானேவற்றூதன்
படைத்தளித்திறுதிவேலைப்பசும்பொனார்தசும்பினண்ட
முடைத்துலகழித்துநிற்குமொருபெருங்கடவுளொத்தான்.

இ - ள். தடம் தனி வேரம் கீண்டு - விசாலமான பெரிய வேரத்தை யெடுத்து,—தபனியத்து அவைக்கண் ஓச்சி - செம்பொன்மயமாகிய சபையின்மேலெறிந்து,—இடித்தனன் ஒருதானிற்கும் எம்பிரான் ஏவல் தூதன் - ஆரவாரித்து ஒருதனியேநிற்கின்ற எம்பெருமானது ஏவற்றூதராகிய வீரவாகுதேவர்,—பசும் பொன்னார் தசும்பின் அண்டம் படைத்து அளித்து - பசும்பொற்குடம்போன்ற பிரமாண்டத்தைப் படைத்துக் காத்து,—இறுதி வேலை - சங்காரகாலத்திலே,—உடைத்து உலகு அழித்து நிற்கும் ஒரு பெரும் கடவுள் ஒத்தான் - (அவ்வுண்டத்தை) உடைத்து உலகத்தை அழித்து நிற்கின்ற ஒப்பற்ற பெருங்கடவுளாகிய உருத்திரமூர்த்தியை ஒத்தார். எ — று. (௬)

7. புலவுகொளலகுவெவ்வாய்ப்புட்செறிபொதும்பர்தன்னிற்
பலமுடையுருமுவீழப்பட்டதோர்பரிசதென்னத்
தொலைவுகன்மைந்தன்விட்டசூளிகைதகர்ப்பத்தொல்சீர்
மலிவுறுசனங்களோடமன்றமங்குற்றதம்மா

இ - ள். புலவு கொள் அலகு வெவ்வாய் புள் செறி பொதும்பர் தன்னில் - புலாலைக்கவருகின்ற அலகாகிய கொடிய வாயினையுடைய பறவைகள் நெருங்கியிருக்கின்ற சோலையில்,—பலமுடை உருமு வீழ பட்டதோர் பரிசு அது என்ன - வலிமையையுடைய இடிவீழ (அதனால் அச்சோலை) அழிந்ததன்மையைப்போல,—தொலைவகல் மைந்தன் விட்ட சூளிகை தகர்ப்ப - அழிவற்ற பலசாலியான வீரவாகுதேவர் (பிடுங்கி) எறிந்த சூளிகை உடைத்தலால்,—தொல் சீர் மலிவுறு சனங்களோடு மன்றம் மங்குற்றது - பெருஞ்சிறப்பு மிகப்பெற்ற பிரதானசனங்களோடு சபாமண்டபம் அழிந்தது. எ — று.

அம்மா,ஓர் அசை. தன் சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. தொல்சீர்மலிவுறுஎன்பதற்கு பேராசையதிகரிக்கப்பெற்ற எனினுமாம். பிரதானசனங்கள் மந்திரிமாராதியோர்

8. இடிந்தனமிசையினெல்லையிற்றபித்திகையின்சூழல்
பொடிந்தனவுத்திரங்கள்போதிகைபூழியாகி
முடிந்தனமதலையாவுமுரிந்தனகபோதம்வீழ்ந்த
மடிந்தனதிருவுஞ்சீருமன்றழிவுற்றதன்றே.

இ - ள். மிசையின் எல்லை இடிந்தன - (அச்சபாமண்டபத்தின் மேலிடங்களாகிய) முகடுகள் அழிந்தன,—பித்திகையின் சூழல் இற்ற - சுவரின் சுற்றிடங்கள் அழிந்தன,—உத்திரங்கள் பொடிந்தன - உத்திரங்கள் துகளாயின,—போதிகை பூழி ஆகி முடிந்தன - போதிகைகள் துகளாயழிந்தன,—மதலை யாவும் முரிந்தன - தூண்களெல்லாமுரிந்தன,—கபோதம் வீழ்ந்த - கபோதமெனப்படுகின்ற மேலுறுப்புக்கள் விழுந்தன,—திருவும் சீரும் மடிந்தன-இலக்குமிவிலாசமும் சிறப்பும் அழிந்தன,—மன்று அழிவுற்றது - (இங்ஙனம் உறுப்புக்கள் சிதைதலால்) சபாமண்டபம் உருவழிந்தது. எ — று.

அன்று, ஏ அசை. உம்மை முன்னையது முற்று; பின்னைய எண். உத்திரம் - வளை, மாளிகையினோருறுப்பு. கபோதம் - சித்திரக்கம்பி. (அ)

9. பீடிகைபுரைந்தபொற்பிற்பேரவைதகர்தலோடும்
பாடுறவரசற்சூழ்ந்தபரிசனர்தம்முட்சில்லோ
ரோடினர்சிலவர்மெய்யூறுற்றனர்சிலவர்நெக்கு
வீடினர்சிலவராற்றமெலிந்தனர்புலம்பலுற்றார்.

இ - ள். பீடிகை புரைந்த பொற்பில் பேரவை தகர்த லோடும் - (பிரதானிகள் இருக்கும்பொருட்டுப்) பீடங்கள் செய்யப்பட்டிருக்கின்ற சிறப்பினையுடைய இராசசபை யழிதலும்,—பாடுற அரசன் சூழ்ந்த பரிசனர் தம்முள் சில்லோர் ஓடினர் - பக்கத்தில் அரசனாகிய சூரபன்மனைச்சூழ்ந்து நிற்கின்ற ஏவலாளருட் சிலரோடினார்கள்,—சிலவர் மெய் ஊறு உற்றனர் - சிலர் சரீரத்திற் காயமடைந்தார்கள்,—சிலவர் நெக்கு வீடினர் - சிலர் (சரீரம்) நசுங்கியிறந்தார்கள்,—சிலவர் ஆற்ற மெலிந்தனர் புலம்பலுற்றார் - சிலர் மிகவும்வருந்திப் புலம்புவாராயினர். எ — று.

தம் சாரியை. பீடிகை புரைந்த என்பதற்கு-கடைவீதியைப்போன்ற என்றலுமாம்; ஆபரணப்பெட்டியையிகர்த்த எனப்பொருள் கூறுவாருமுளர். மெலிதல் - இளைத்தலெனினுமாம். (௯)

10. நெக்கதுபொதியிலாகநிரந்ததுசெம்பொற்பூழி
திக்கொடுபுவியும்வானுஞ்செறிந்தனவவுணராகித்
தொக்கனருடைந்துமாய்ந்துதொகைபிரிந்தழிந்தார்தொல்லைத்
தக்கனினுணர்வுதீர்ந்ததகுவர்கோனிவற்றைக்கண்டான்.

இ - ள். நெக்கது பொதியிலாக - சபாமண்டபம் உடைந்து போக,—(அதனால்) செம்பொன் பூழி நிரந்தது - சிவந்தபொற்றுகள் நிறைந்து,—திக்கொடு புவியும் வானும்

செறிந்தன - திசைகளிலும் பூமியிலும் ஆகாயத்திலும் நெருங்கின,—அவுணராகி தொக்கனர்-அவுணராக அங்கே கூடினவர்கள்,—உடைந்து - (அவ்விடத்தினின்றும்) விலகி,-மாய்ந்து - அறிவு மயங்கி,—தொகைபிரிந்து - கூட்டங்கலைந்து,—அழிந்தார் - வலியழிந்தோடினார்கள்,—தொல்லை தக்கனின் உணர்வு தீர்ந்த தகுவர்கோன் - முற்காலத்திலே (சிவபெருமானை மதியாது அறிவிழந்த) தக்கனைப்போலச் (சுப்பிரமணியப்பெருமானை மதியாத) அசுரராசனாகிய சூரபன்மன்,—இவற்றை கண்டான் - இவைகளைப்பார்த்தான்.

உம்மைகள் எண். உடைதல் - தளர்தலுமாம். (க0)

11. ஆயிரநாமத்தண்ணலனையவன்வன்மைகாணா
வாயிரம்வடவையேபோலழன்றுதன்னயலினின்ற
வாயிரநெடுந்தோளைஞ்ஞூறானனங்கொண்டதீயோ
ராயிரர்தம்மைநோக்கியடலுருமேற்றிற்சொல்வான்.

இ - ள். (அங்ஙனம்பார்த்தசூரபன்மன்) ஆயிரநாமத்து அண்ணல் அனையவன் வன்மைகாணா-ஆயிரந்திருநாமங்களையுடைய சிவபெருமானுக்கொப்பானவராகிய வீரவாகுதேவருடைய வல்லபத்தைக்கண்டு,—ஆயிரம் வடவையே போல் அழன்று - ஆயிரக்கணக்கான வடவாமுகாக்கினியைப்போலக் கோபித்து,—தன் அயலில் நின்ற நெடு ஆயிரம் தோள் ஐஞ்ஞூறு ஆனனம் கொண்ட தீயோர் ஆயிரர் தம்மை நோக்கி - தன்னருகில் நின்ற நெடிய ஆயிரம்புயங்களையும் ஐஞ்ஞூறு முகங்களையுமுடைய கொடிய ஆயிரம் அசுரரைப்பார்த்து,—அடல் உருமேற்றில் சொல்வான் - வலிமைபொருந்திய இடியேறுபோலச் சொல்லுகின்றான். எ — று.

அத்து, தம் சாரியை. ஏகாரம் பிரிநிலை. (கக)

12. விழிப்பருநிவப்பினோங்கும்வேரமொன்றதனைக்கீண்டே
தெழிப்பொடுகுமரன்றூதன்செலுத்தினன்செம்பொன்மன்ற
மிழிப்புறத்தளர்ந்துவீழ்ந்ததீண்டுசில்லிடமேயன்றிப்
பழிப்பெனக்கிதன்மேலுண்டோபட்டதென்புகழுமன்னோ.

இ - ள். குமரன் தூதன் தெழிப்பொடு - குமாரஸ்வாமியினது தூதுவராகிய வீரவாகுதேவர் ஆரவாரிப்போடு,—விழிப்பு அரு நிவப்பின் ஓங்கும் ஒன்று வேரம் அதனை கீண்டு - கண்ணுக்கெட்டாத கிளர்ச்சியோடுயர்ந்து நின்ற ஒரு வேரத்தை அசைத்தெடுத்து,—செலுத்தினன் - அதனால் எறிந்தான்,—ஈண்டு சில் இடமே அன்றி - இங்கே சில விடமேயல்லாமல்,—செம்பொன் மன்றம் இழிப்புற தளர்ந்து வீழ்ந்தது - மாற்றுயர்ந்த பொன்னாலமைக்கப்பட்ட சபாமண்டபம் மற்றிடங்களெல்லாம் இழிவுபடும்படி அழிந்துவிழுந்தது,—இதன் மேல் பழிப்பு எனக்கு உண்டோ - இதற்குமேலான ஒரு அவமானம் எனக்கு வேறே உண்டோ (இதனால்),—என் புகழும் மன் பட்டது - எனது கீர்த்தியும் முழுதும் அழிந்தது.

ஏகாரம் கீண்டே என்பதில் அசை; இடமே என்பதில் பிரிநிலை. உண்டோவென்பதில் ஓகாரம் எதிர்மறை. உம்மை உயர்வுசிறப்பு. மன் மிகுதிப்பொருட்கண்வந்தது; இங்கே முழுதும், என்னும் குறிப்புணர்த்திற்று. ஓ அசை. (கஉ)

13. கோறலேகொற்றமன்றாலொற்றனைக்குறுகிநீவிர்
மாறுபோரியற்றியேனுமற்றவன்வழாதவாற்றா
வீறுசெய்திடாதுபற்றியெம்முனர்த்தருதிர்மெய்யி
னூறுசெய்தவனைவானோருடன்சிறையுய்ப்பனென்றான்.

இ - ள். ஒற்றனை கோறல் கொற்றமன்று - தூதாகவந்தவனைக் கொல்லுதல் வெற்றியல்ல (ஆதலால்),—நீவிர் குறுகி - நீங்கள் சென்று,—மாறுபோர் இயற்றி யேனும் - பகைத்துப்போர்செய்தாவது,—அவன் வழாத ஆற்றால் - அவன் தப்பிப்போகாதபடி,—

ஈறு செய்திடாது பற்றி எம் முனர் தருதிர் - கொல்லாது பிடித்து எமக்குமுன்னே கொண்டுவந்துதாருங்கள்,—மெய்யின் ஊறு செய்து அவனை வானோருடன் சிறை உய்ப்பன் என்றான் - சரீரத்திலே ஊறுபடுத்தி அவனை (முன்னே சிறையிலிருக்கின்ற) தேவர்களோடு சிறையில்வைப்பேனென்று கூறினான். எ — று. ஆல், ஏ அசை. (கரு)

14. அன்னவரதனைக்கேளாவரசவீதருளிக்கேண்மோ
வொன்னலன்றூதன்சோரியுயிரொடுகுடித்தற்குற்றா
நின்னருளாணைநாடிநெஞ்சகம்புழுங்கியஞ்சி
யின்னதோர்பொழுதுந்தாழ்த்தேமினியதுபுரிதுமென்றார்.

இ - ள். (இங்ஙனம் சூரபன்மன் கூறுதலும்) அன்னவர் அதனை கேளா - அவர்கள் அவ்வார்த்தையைக் கேட்டு,—அரச - இராசனே,—ஈது அருளி கேண்மோ - இதனை அருள் செய்து கேளும்,—ஒன்னலன் தூதன் சோரி உயிரொடு குடித்தற்கு உற்றாம் - பகைவனாகிய ஒற்றனது உதிரத்தை உயிருடனே பருகும் பொருட்டு இருக்கின்றோம்,—நின் அருள் ஆணை நாடி - உம்முடைய தயவோடுகூடிய கட்டளை (எப்போதுகிடைக்குமோவென்று) எதிர்பார்த்து,—நெஞ்சகம் புழுங்கி - மனம்புழுங்கி,—அஞ்சி - பயந்து,—இன்னதோர் பொழுதும் தாழ்த்தேம் - இதுவரையுந் தாமதித்தோம்,—இனி அது புரிதும் என்றார் - இனி அக்காரியத்தைச்செய்து முடிக்கின்றோமென்றார்கள். எ — று.

மோ முன்னிலையசைச்சொல்; ஓர் அசை. நாடி-என்பதற்கு விரும்பி என்பாருமுளர். ஒன்னலன் தூதன் - என்பதற்குப் பகைவராகியகந்தஸ்வாமியின்தூதுவர் என்றலுமாம்.

15. என்றனர்வணக்கஞ்செய்யவினிதெனவுவகைபூத்துக்
கன்றியவவுணர்தங்கள்காவலன்விடுப்பவங்கட்
சென்றனர்பத்துநூற்றுத்திறலுடைமொய்ம்பர்முன்ன
நின்றிடுவீரவாகுநிலைமையையுரைக்கலுற்றாம்.

இ - ள். என்றனர் வணக்கம் செய்ய - என்றுகூறி நமஸ்காரஞ்செய்ய,—கன்றிய அவுணர் தங்கள் காவலன் - கோபம்பொருந்திய அசுரர்க்குத்தலைவனாகிய சூரபன்மன்,—இனிது என உவகை பூத்து - நல்லதென்று மகிழ்ச்சிகொண்டு,—விடுப்ப - (போங்களென்று) அனுமதிகொடுக்க,—திறல் உடை பத்து நூறு மொய்ம்பர் சென்றனர் - வலிமையையுடைய சகத்திரவாகுகள் சென்றார்கள் (அவர்கள் அப்படிச் செல்லுதலும்),—முன்னம் நின்றிடு வீரவாகு நிலைமையை உரைக்கல் உற்றாம் - முன்நின்ற வீரவாகுதேவர் (செய்த) தன்மையைக்கூறுகின்றாம். எ — று. (கசு)

வேறு.

16. வேரமதெறிந்தவைவீட்டிநின்றுளான்
சூருறைநகர்வளந்தொலைச்சிச்சூழுநர்
சேருறுமிருக்கையுஞ்சிதைப்பனின்றெனா
வோருறுபுந்தியிலுன்னினானரோ.

இ - ள். வேரமது எறிந்து அவை வீட்டி நின்றுளான் - முன்வேரத்தைப் பிடுங்கியெறிந்து சபையை அழித்துநின்ற வீரவாகுதேவர்,—சூர் உறை வளம் நகர் தொலைச்சி - சூரபன்மனிருக்கின்ற செல்வத்தையுடைய அகநகரத்தையழித்து,—சூழுநர் சேர் உறும் இருக்கையும் இன்று அழிப்பன் எனா - அவனைச்சூழ்ந்த பரிவாரங்களாயுள்ள அசுரர்கள் இருக்கின்ற இருப்பிடங்களையும் இப்பொழுதே அழிப்பேன் என்று,—ஓருறு புந்தியில் உன்னினான் - ஆராய்கின்ற மனதில் நினைத்தார். எ — று.

அரோ அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை இறந்ததுதழீஇயது. (கஎ)

17. மறிப்பிணைமுதலியமான்கள்புள்ளினஞ்
சிறப்புறுதண்டலைமணியிற்செம்பொனிற்
குறிப்பினர்குயிற்றுசெய்குன்றம்யாவையும்
பறித்தனன்றிசைதொறும்பரவவீசினான்.

இ - ள். (அங்ஙனம் மனசில் நினைத்த வீரவாகுதேவர்) மறி பிணை முதலிய மான்கள் புள் இனம் சிறப்பு உறு தண்டலை - பெண்மான் முதலிய மான்களும் பக்ஷிக்கூட்டங்களும் சிறப்புற்று வாழ்கின்ற சோலைகளையும்,—மணியில் செம் பொனில் குறிப்பினர் குயிற்று செய்குன்றம் யாவையும் - இரத்தினங்களாலும் மாற்றுயர்ந்த பொன்னினாலும் சிற்பர்கள் செய்த செய்குன்றங்களெல்லாவற்றையும்,—பறித்தனன் திசைதொறும் பரவ வீசினான் - பிடுங்கித்திக்குகடோறும் பரவும்படி எறிந்தார். எ — று.

செய்யவேண்டும் வேலைகளை மனத்திற்சிந்தித்துச் செய்வோராதலிற் சிற்பர்களைக் குறிப்பினர் என்றார். மான் - மிருகங்களெனினுமாம். இப்பொருட்கு எவ்வணந்தது. உம்மை முற்று. (கஎ)

18. வரைவயிறுயிர்த்திடுமாசில்பல்வகை
யரதனநிரைகளினணியசெம்பொனின்
மரபினிலியற்றியவரம்பிறெற்றிகள்
விரைவொடுதொட்டனனெடுத்துவீசினான்.

இ - ள். வரை வயிறு உயிர்த்திடும் மாசு இல் பலவகை அரதனம் நிரைகளின்-மலையினுள்ளே தோன்றிய களங்கமில்லாத பலவிதமான இரத்தினவரிசைகளாலும்,—அணிய செம் பொனின் - அழகிய செம்பொன்னினாலும்,—மரபினில் இயற்றிய - சிற்பநூல் முறைப்படி) செய்யப்பட்ட,—வரம்பு இல் தெற்றிகள் - கணக்கில்லாத திண்ணைகளை,—விரைவொடு தொட்டனன் எடுத்து வீசினான் - சீக்கிரமாகத்தோண்டி எடுத்தெறிந்தார்.

மலைநடுவிற்றோன்றலால் "வரைவயிறுயிர்த்திடு" மென்றார். அரதனம் - தெய்வமணி. தெற்றி - சித்திரகூடமெனினுமாம். தொடுதல் - தோண்டுதல். (கஅ)

19. முடிவகல்பேழையின்மூட்டுநீக்கியே
யடியுறுகொள்கலமவற்றைச்சாய்த்தெனப்
படியுறுமண்டபம்பலவுந்தொட்டெடா
விடிபுரையோதையான்யாண்டும்வீசினான்.

இ - ள். முடிவு அகல் பேழையின் மூட்டு நீக்கி அடி உறு கொள் கலம் அவற்றை சாய்த்த என - அழிவில்லாத பெட்டியினது பூட்டைத்திறந்து அடிப்புறத்திலுள்ள பாத்திரத்தைக் கவிழ்த்தாற்போல,—இடி புரை ஓதையான் - இடியிடித்தாற்போன்ற ஓசையையுடையராகிய வீரவாகுதேவர்,—படி உறு மண்டபம் பலவும் தொட்டு எடா - பூமியிலிருக்கின்ற மண்டபங்கள்பலவற்றையும் தோண்டியெடுத்து,—யாண்டும் வீசினார்-எவ்விடத்தும் எறிந்தார். எ — று.

கொள்கலமும் அதிலுள்ள பொருள்களும் விழுதல்போல மண்டபமும் அதிலுள்ள பொருள்களும் விழுந்தன என்பது கருத்து. அடியிலிருக்கின்ற பாத்திரத்திலுள்ள ஆபரணங்களைக்கவிழ்த்துக் கொட்டினாற்போல எனப்பொருள் கூறுவாருமுளர். சாய்த்தால் என்னும் வினையெச்சம் சாய்த்து எனத்திரிந்துநின்றது.

ஏகாரம் அசைநிலை. உம்மைகள் முற்றுப்பொருளன. (கக)

20. மலாயன்மிசையுறுமாயற்புல்லுவா
னிலமகள்கைகளைநீட்டியென்னவா
னுலகெலாமிகந்துமேலோங்குகோபுரம்
பலபலபறித்தனன்பாங்கரோச்சினான்.

இ - ள். மலர் அயன் மிசை உறு மாயன் புல்லுவான் - தாமரைப்பூவாகிய ஆசனத்திலிருக்கின்ற பிரமாவினது சத்தியலோகத்திற்கு மேலுள்ள (நாயகராகிய) விஷ்ணு வைத்தழுவும்படி,—நிலமகள் கைகளை நீட்டி என்ன - பூமிதேவியானவள் தனது கைகளை நீட்டினாற்போல,—வான் உலகு எலாம் இகந்து மேல் ஓங்கு பல பல கோபுரம் பறித்தனன் பாங்கர் ஓச்சினான் - ஆகாயவுலகமெல்லாவற்றையுங் கடந்து மேலாகவுயர்ந்திருக்கின்ற பலபல கோபுரங்களைப் பிடுங்கிப் பக்கங்களிலெறிந்தார். எ — று. (உ0)

21. மூளுறுமெரிசிகைமுடித்துத்தானவர்
கோளொடுதமித்தமிகெழுமியுற்றெனை
வாளுறுமாமணிவயங்குதூபிகைச்
சூளிகைபலபலதொட்டுவீசினான்.

இ - ள். தானவர் மூள் உறும் எரிசிகை முடித்து கோள் ஒடு தமி தமி கெழுமி உற்று என - அவுணர்கள் பற்றுகின்ற அக்கினியைக் குடுமியாக முடித்துக்கொண்டு சுற்றத்தோடும் தனித்தனியிருந்தாற் போல,—வாள் உறு மாமணி வயங்கு தூபிகை பல பல தொட்டு வீசினான் - ஒளிபொருந்திய மாணிக்கங்கள் விளங்காநின்ற தூபிகைகளையுடைய சூளிகைகள் பலபலவற்றை எடுத்தெறிந்தார். எ — று.

எரிசிகை உவமைத்தொகையெனக்கொண்டு பொருளுரைப்பினுமமையும். (உக)

22. கற்றிடும்விஞ்சையின்கழகம்பல்கடைத்
தெற்றிகள்வேதிகைசிறந்தசாலைக
டுற்றிடுபழுமரச்சோலைவாவிகண்
மற்றுளபிறவொடுமட்டித்தானரோ.

இ - ள். கற்றிடும் விஞ்சையின் கழகம் - வித்தைகளைப்படிக்கின்ற பள்ளிக்கூடங்களையும்,—பல் கடை தெற்றிகள் வேதிகை சிறந்த சாலைகள் - பல அங்காடித்திண்ணைகளையும் மேடைகளையும் சிறந்த சாலைகளையும்,—துற்றிடு பழுமரச் சோலை - நெருங்கிய முதிர்ந்த மரச்சோலைகளையும,—வாவிகள் - தடாகங்களையும்,—மற்றுள பிறவொடு - இன்னுமுள்ளனவாகிய பிறவற்றோடு,—மட்டித்தான் - அழித்தார். எ — று.

அரோ அசை. பழுமரம் - பழுத்தமரமெனினும் ஆலமரமெனினுமாம். (உஉ)

23. கந்துகவியனிரைகரிகடேர்த்தொகை
பந்தியிற்சாலையிற்பயின்றுநின்றன
வந்தமின்றாயினவள்ளியள்ளியே
யுந்தினன்றிசைதொறுமூறற்றிவீழவே.

இ - ள். பந்தியில் சாலையில் பயின்று நின்றன - இலாயங்களிலுங் கூடங்களிலும் பழகிநின்றனவாகிய,—வியன் கந்துக நிரை கரிகள் தேர்த்தொகை - பெரிய குதிரைக் கூட்டங்களையும் யானைக்கூட்டங்களையும் தேர்க்கூட்டங்களையும்,—அந்தம் இன்று ஆயின அள்ளி அள்ளி - அளவில்லாதனவாக வாரிவாரி,—திசை தொறும் உறற்றி வீழ உந்தினன் - திக்குகடோறுங் குழறிக்கொண்டு விழும்படி எறிந்தார். எ — று.

ஏகாரங்கள் அசை. (உ௩)

24. நிலவரைசூழ்தருநேமிவெற்பென
மலிதருசெம்மணிவகையிற்பண்ணிய
பலவகையியந்திரப்பதணவிஞ்சிக
ளொலிகழற்காலினானுதைத்துவீட்டினான்.

இ - ள். நிலவரை சூழ்தரு நேமி வெற்பு என - பூமியினெல்லையிற் சூழ்ந்திருக்கின்ற சக்கரவாளமலையைப்போல,—மலி தரு செம்மணி வகையில் பண்ணிய - மிகுந்த மாணிக்கங்களாற் செய்யப்பட்ட,—பலவகை இயந்திரம் பதணம் இஞ்சிகள் - பலவிதமான பொறிகளும் உண்மேடைப்பரப்பும் (அமைந்துள்ள) மதில்களை,—ஒலி கழல் காலினன் உதைத்து வீட்டினன் - ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த வீரவாகுதேவர் உதைத்துவிழுத்தினர். எ - று.

மாணிக்கம், சாதரங்கம் குருவிந்தம் சௌகந்திகம் கோவாங்கம் என நால்வகைப்படுதலின் செம்மணிவகை என்றார். 'பல்வகையியந்திரப் பதண விஞ்சிகள்' எனவே ''மாற்றவர் மறப்படை மலைந்து மதில்பற்''றுவண்ணம், ''நூற்று வரைக் கொல்லி யொடு நூக்கியெறி பொறியுந்—தோற்றமுறு பேய்கழுகு தூற்றுபெரும் பாம்பும்'' என்றித்தொடக்கத்தனவாகிய பொறிகளையும், அகத்தார்விட்ட ஆயுதமுதலிய புறத்தார்மேல் எளிதிற்சேறலும் அவர்விட்டன அகத்தார்மேற் செல்லாமையுமாகிய நிலைக்கெளிதாநீர்மையுமுடைய மதில்கள் என்பதுபெற்றும்.

25. பூழியம்பொற்புயப்புனிதன்வெய்யசூர்
வாழுறுகோநகர்வளத்தையின்னணம்
மூழியின்மருத்தெனவுலாவியட்டபின்
சூழுறுகிடங்கரும்தூர்த்திட்டானரோ.

இ - ள். பூழி அம் பொன் புயம் புனிதன் - விபூதியைத்தரித்த அழகிய பொன்மயமான புயங்களையுடைய பரிசுத்தரான வீரவாகுதேவர்,—வெய்யசூர் வாழுறு கோநகர் வளத்தை - கொடிய சூரபன்மன்வாழ்ந்திருக்கின்ற கோயிலின் சிறப்புப்பொருள்களை,—இன்னணம் - இந்தவிதமாக,—ஊழியின் மருத்து என உலாவி அட்டபின் - ஊழிக்காலத்தில் (உலகத்தையழிக்கத்தோன்றும்) பிரசண்டவாயுவைப்போன்ற (வேகத்தோடு) உலாவி அழித்தபின்னர்,—சூழுறு கிடங்கரும் தூர்த்திட்டான் - (அவனுடையகோயிலைச்) சூழ்ந்திருக்கின்ற (உள்) அகழியையும் தூர்த்தார். எ - று.

அரோ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (உரு)

26. அறந்தலைநின்றிடாவரசன்கோயினின்
றெறிந்திடுசிகரிகளிலங்குசூளிகை
நிறைந்திடுமண்டபநெருங்குகாமர்காச்
செறிந்தனபிறவொடுசென்றுசேணெலாம்.

இ - ள். அறம் தலை நின்றிடா அரசன் கோயில் நின்று எறிந்திடு சிகரிகள் - தருமநீதியிலே நில்லாத பாவியாகிய சூரபன்மனது அரண்மனையினின்றும் (வீரவாகுதேவராலெறியப்பட்ட கோபுரங்களும்,—இலங்கு சூளிகை - விளங்காநின்ற மேல்வீடுகளும்,—நிறைந்திடு மண்டபம் - (கால்கள்) நிறைந்த மண்டபங்களும்,—நெருங்கு காமர் கா - (மரங்கள்) செறிந்த அழகிய சோலைகளும்,—பிறவொடு சென்று சேண் எலாம் செறிந்தன - மற்றுள்ளனவற்றோடு சென்று ஆகாயமெல்லாம் நெருங்கின. எ - று.

மனு முதலிய நீதிநூல்களில் விதித்த விதிகடந்து கொடுங்கோனடாத்துவோனாகலின் ''அறந்தலைநின்றிடா அரசன்'' என்றார். (உசு)

27. உளர்ந்திடுவரியளியுலாவுதொங்கலான்
வளர்ந்திடுபாணியான்மன்னன்செல்வமாய்க்
களைந்தெறிகின்றனகணிப்பிலாதவுங்
கிளர்ந்திடுநெடுமுகில்கிழித்துச்சென்றவே.

இ-ள். ஊர்ந்திடு வரி அளி உலாவு தொங்கலான்-(பூவைக்)குடைகின்ற வரிபொருந்தியவண்டுகள் உலாவப்பெற்றமலர்மாலையணிந்தவீரவாகுதேவர்,—வளர்ந்திடு பாணியால்-

வளர்ந்தகைகளால்,—மன்னன் செல்வமாய் - (அவுணர்க்கரசனுகிய) சூரபன்மனது செல்வப்பொருளாய்,—களைந்தெறி கின்றன கணிப்பிலாதவும் - பிடுங்கி எறியப்படுகின்றனவாகிய அளவில்லாத அப்பொருள்களெல்லாம்,—கிளர்ந்திடு நெடு முகில் கிழித்து சென்றன - உயர்ந்த பெரிய மேகமண்டலத்தைக் கிழித்து (மேலாகச்) சென்றன. எ — று.

ஏகாரம் அசை. (உஎ)

28. சூரெனுமவுணர்கோன்படைத்ததொல்வளஞ்
சேரியமிசைவரத்தெரிந்துவானிடைச்
சாருறுகடவுளர்தம்முளேங்கியே
யேரியறொகைபிரிந்திரியல்போயினர்.

இ - ள். சூர் எனும் அவுணர் கோன் படைத்த தொல் வளம் சேரிய மிசை வர - சூரபன்மனென்னும் பெயரையுடைய அசுரராஜன் பெற்றுள்ள பழைய செல்வப்பொருள்கள் சேர்ந்து மேலாகவர,—வான் இடை சார் உறு கடவுளர் தெரிந்து - ஆகாய பதவியிலிருக்கின்ற சூரியன் முதலிய தேவர்கள் அறிந்து,—தம் உள் ஏங்கி - தம்மனவேக்கங் கொண்டு,—ஏர் இயல் தொகை பிரிந்து இரியல் போயினர் - சிறப்புப்பொருந்திய கூட்டம் பிரிந்து அஞ்சியோடினார்கள். எ — று.

ஏகாரம் அசை. சேரிய என்பது எச்சத்திரிபு. 'வானிடைச்-சார் உறு கடவுளர் தம்முள் ஏங்கி' என்பதற்கு ஆகாயத்திற்செல்லுகின்ற தேவர்கள் தம்முள்ளே ஏக்கங்கொண்டு என்றலுமொன்று. சார் முதனிலைத்தொழிற்பெயர். (உஅ)

29. ஊனிவர்குருதிவேலொருவனோச்சிய
தானவர்கோன்வளந்தகைந்துவிண்ணவர்
மேனிகழ்பதங்களைவீட்டியேகியே
வானதிதன்னையும்வல்லைதூர்த்தவே.

இ - ள். ஊன் இவர் குருதிவேல் ஒருவன் ஓச்சிய தானவர் கோன் வளம் - தசைப்பற்றுப்பொருந்திய இரத்தந்தோய்ந்த வேலையுடைய வீரவாகுதேவர் எடுத்தெறிந்த சூரபன்மனது (மண்டபமுதலிய) செல்வப்பொருள்கள்,—தகைந்து - ஒன்றையொன்று தடுத்து,—மேல் நிகழ் விண்ணவர் பதங்களை வீட்டி ஏகி - மேலாக விளங்காநின்ற தேவபதவிகளை யழித்துக்கொண்டு சென்று,—வான் நதி தன்னையும் வல்லை தூர்த்த - ஆகாய கங்கையையும் விரைந்து நிரப்பின. எ - று.

வீரவாகுதேவர் கந்தஸ்சுவாமிக்குத் தம்பியாதலின் ஒற்றுமைபற்றி அவரையும் வேலினன் என்றார். வேல் ஆயுதப்பொதுவுக்கும்பெயராதலின் வாட்படையெனப்பொருள் கோடலும் ஒன்று. இவர்தல்-வடிதலெனினுமாம். ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு.

30. வெறித்திடுதார்ப்புயவிடலைநொய்தினிற்
பறித்தெறியவுணர்கோன்பலவளங்களு
மெறித்திடுதீங்கதிரெல்லைவேந்தனை
மறைத்தனபணிபலமயங்கிச்சூழ்ந்தபோல்.

இ - ள். வெறித்திடு தார் புயம் விடலை - வாசனைபொருந்திய மாலையணிந்த புயங்களையுடைய வீரவாகுதேவர்,—நொய்தினில் பறித்தெறி அவுணர் கோன் பலவளங்களும் - விரைவாகப்பிடுங்கியெறிந்த சூரபன்மனுடைய பல பொருள்களும்,—எறித்திடு தீம் கதிர் எல்லை வேந்தனை - எறிக்கின்ற உஷ்ணகிரணங்களையுடைய பகற்காலத்துக்குத் தலைவனாகிய சூரியனை,—பல் பணி மயங்கி சூழ்ந்தபோல் மறைத்தன - பலபாம்புகள் கலந்து சூழ்ந்துகொண்டாற்போல மறைத்தன. எ — று.

உம்மை முற்று. விடலை-ஆண்மையுள்ளவன், வாலிபன். நொய்து-இலேசுமாம். ()

31. சோலையின்மண்டபத்தொகையிற்சூளிகைப்
பாலினிற்சிகரியிற்பயின்றபுள்ளெலா
மேலுறுசெலவினில்விரைவினேகியே
மாலயன்புள்ளொடுமருவிவைகிய.

இ - ள். சோலையில் - சோலைகளிலும்,—மண்டபத் தொகையில் - மண்டபக்கூட்டங்களிலும்,—சூளிகைப் பாலினில் - தூபியுள்ள மாளிகைகளிலும்,—சிகரியில் - கோபுரங்களிலும்,—பயின்ற புள் எலாம் - இருந்தபட்சிகளெல்லாம்,—மேல் உறு செலவினில் விரைவின் ஏகி - மேலாகப்போன போக்கினால் விரைவாகச்சென்று,—மால் அயன் புள்ளொடு மருவி வைகிய - விஷ்ணுவினது வாகனமாகிய கருடனோடும் பிரமதேவரது வாகனமாகிய அன்னத்தோடும் பொருந்தியிருந்தன. எ — று.

ஏகாரம் அசை. மேல் - ஆகாயம் எனக்கொள்வாருமுளர். (௩௧)

32. செஞ்சுடர்ச்சூளிகைசிகரமாதிகள்
விஞ்சியமிசைவரவிழித்துத்தாளிலோ
னெஞ்சியவுடலமுமிறுங்கொலின்றென
வஞ்சினனழுங்கினனலரிபாகனே.

இ - ள். செம் சுடர் சூளிகை சிகரம் ஆதிகள் - செவ்வொளியை வீசாநின்ற மண்டபங்களும் கோபுரமுதலானவைகளும்,—விஞ்சிய மிசை வர - அதிகமாக மேலேவருதலால்,—அலரி பாகன் தாளிலோன் விழித்து - சூரியனுடைய சாரதியுங் காலில்லாதவனுமாகிய அருணன் பார்த்து,—எஞ்சிய உடலமும் இன்று இறுங்கொல் என அஞ்சினன் அழுங்கினன் - (காலில்லாத நமக்கு இவைகள்வந்து மேலேவிழுந்தால்) மிச்சமாயுள்ள சரீரமும் இன்றைக்கு அழியுமோவென்று பயந்து வருந்தினன். எ — று.

ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௩௨)

33. வள்ளுறுவசிகெழுவயிரமாமுடி
யுள்ளபல்சூளிகையும்பர்செல்வன
பிள்ளைகளெறிந்திடப்பிறங்குபம்பரம்
பொள்ளெனவீண்டிவான்போவபோன்றவே.

இ - ள். வள் உறு வசி கெழு வயிர மாமுடி உள்ள பல் சூளிகை உம்பர் செல்வன - வன்மையாகிய கூர்மைபொருந்திய வயிரமணிகள் பதிக்கப்பட்ட பெரிய முடிகள் உள்ள பலமண்டபங்கள் மேலாகச் செல்லுகின்றன(அங்ஙனஞ்செல்லுதல்),—பிள்ளைகள் எறிந்திட பிறங்கு பம்பரம் - (விளையாடும்) பிள்ளைகள் எறிய விளங்காநின்ற பம்பரங்களானவை,—பொள்ளென ஈண்டி வான் போவ போன்ற - விரைவாகநெருங்கி மேலாகச் (சுழன்று) போதலை யொத்திருந்தன. எ — று.

ஏகாரம் அசை. வான் - ஆகாயமெனினுமாம். (௩௩)

34. மீப்படுவியன்முகில்கிழித்துவிண்மிசை
மாப்பெருஞ்சிகரிகள்வல்லைசெல்வன
கீப்பருங்ககனமானெடுங்கதுப்பினிற்
சீப்பிடுகின்றதோர்செய்கைபோலுமால்.

இ - ள். மீபடு வியன் முகில் கிழித்து - மேலாகப்பொருந்திய பெரியமேகங்களைக் கிழித்துக்கொண்டு,—விண் மிசை மா பெரும் சிகரிகள் வல்லை செல்வன - அம்மேகமண்

டலத்துக்குமேலாகிய ஆகாயத்தில் அழகிய பெரிய கோபுரங்கள் விரைவாகச் செல்லுந் தன்மை (எப்படியெனின்)—நீப்ப அரும் ககனமான் நெடும் கதுப்பினில் சீப்பு இடுகின்றது ஓர் செய்கைபோலும் - நீக்குதற்கரிய ஆகாயமாகிய பெண்ணானவள் (தன்னுடைய நீண்ட கூந்தலிலே சீப்பிட்டுவாருகின்ற தன்மையை ஒத்தது. எ - று.

ஓர், ஆல் அசை. ககனமான் உருவகம். மான் உவமவாகுபெயர். (௩௪)

35. பய்னுறுபழுமரப்பைம்பொற்காமர்கா
வயனெறிதந்திடவகல்விண்செல்வன
நயனறுமவுணனூர்நணியகற்பகம்
வியனுலகிருந்திடமீள்வபோன்றவே.

இ - ள். பயன் உறு பைம்பொன் காமர் பழுமரம் கா - (காய்கனிமுதலிய) பயன்களைக்கொடுக்கின்ற பசிய பொன்மயமான அழகுபொருந்திய பழுத்தமரச்சோலைகள்,—அயன் எறிதந்திட அகல் விண் செல்வன - வீரவாகுதேவர் எடுத்தெறிய அகன்ற ஆகாயத்திற் செல்லுந்தன்மை (எப்படியெனில்),—நயன் அறும் அவுணர் ஊர் நணிய கற்பகம் - நீதியில்லாத சூரபன்மனது மகேந்திரபுரியில் வந்திருந்த கற்பகச்சோலைகள்,—வியன் உலகு இருந்திட மீள்வ போன்ற - (தமது பழைய) சுவர்க்கத்தில் இருக்கும்பொருட்டுத் திரும்பிச்செல்லுதலை ஒத்தன. எ - று.

ஏகாரம் அசை. ஐயன் அயன் எனப்போலியாயிற்று. நயன் — நீதி. (௩௫)

36. ஐயனதொற்றுவனள்ளிவீசிய
செய்யபல்பொருள்களுஞ்செறிந்துசேணெலாங்
கொய்யுளைவயப்பரிக்கொடிஞ்சித்தேர்மிசை
வெய்யவன்செலவினைவிலக்குகின்றவே.

இ - ள். ஐயனது ஒற்றுவன் அள்ளி வீசிய செய்ய பல் பொருள்களும் சேண் எலாம் செறிந்து,—பெருமையிற்சிறந்தவராகிய கந்தஸ்வாமியினது தூதுவரான வீரவாகுதேவர் அள்ளியெறிந்த செப்பமாகிய பலவகைப்பொருள்களும் ஆகாயமெங்கும் நெருங்கி,—கொய் உளை வயம் பரி கொடிஞ்சி தேர் மிசை வெய்யவன் செலவினை விலக்குகின்ற - கொய்யப்பட்ட புறமயிரையுடைய வெற்றிபொருந்திய குதிரைகள் கட்டப்பட்டதும் மேன்மொட்டினையுடையதுமாகிய தேரின்மீது செல்லுகின்ற சூரியனது செல்லுகையைத் தடுக்கின்றன. எ - று. ஏகாரம் அசை. (௩௬)

37. திருமிகுசூளிகைசிகரமாதிக
ணிரல்படவேகியேநிரந்தபல்வகைப்
பருமணியெரிசுடர்பரப்பிவான்பட
ரிரவிதன்கதிரையுமிகலிவென்றவே.

இ - ள். திருமிகு சூளிகை சிகரம் ஆதிகள் - அழகுமிகுந்த சூளிகைகளும் கோபுரமுதலானவைகளும்,—நிரல் பட ஏகி - வரிசையாகப்போய்,—நிரந்த பல்வகை பருமணி எரிசுடர் பரப்பி - பரம்பிய பலவிதமான பருத்தமணிகளின் விளங்காநின்ற ஒளியைப் பரவச்செய்து,—வான் படர் இரவிதன் கதிரையும் இகலி வென்ற - ஆகாயவழியாகச் செல்லுகின்ற சூரியனதுகிரணங்களையும் பகைத்து வென்றன. எ — று.

ஏகாரங்கள் அசை. தன் சாரியை. உம்மை உயர்வுசிறப்பு. (௩௭)

38. மின்னவிர்சிகரிபொன்வேரமாதிக
ளென்னவும்வான்படர்ந்தெழாலின்விஞ்சைய
ருன்னுறுமோங்கலுமுவணவைப்பெனும்
பொன்னெயில்வட்டமும்பூழிசெய்தவே.

இ - ள். மின் அவிர் சிகரி பொன் வேரம் ஆதிகள் என்னவும் வான் படர்ந்து-ஒளி விளங்குகின்ற கோபுரங்கள் பொன்மயமான வேரம் முதலானவைகளெல்லாம் மேலாகச் சென்று,—எழாலின் விஞ்சையர் உன்னு உறும் ஓங்கலும் - யாழ்ப்பயிற்சியையுடைய கந்தருவரது மதிக்கப்படுகின்ற வெள்ளிமலையையும்,—உவண வைப்பு எனும் பொன் எயில் வட்டமும் பூழிசெய்த - (அருகதேவன்வசிக்கின்ற) உயர்ந்த இடமென்று சொல்லப்படும் பொன்னெயில்வட்டத்தையும் துகளாக்கின. எ — று.

ஏகாரம் அசை. உம்மை முன்னையது முற்று; பின்னையவை எண். "உவண***** வட்டமும் என்பதற்கு" உயர்ந்த இடமென்று சொல்லப்படும் பொன்னாற் செய்யப்பட்ட மதிலையுடைய மேலுலகத்தையும் எனப் பொருள்கூறுவாருமுளர். (௩௮)

39. குன்றொடுசூளிகைகோபுரம்பிற
வொன்றுடனொன்றுபட்டுரிஞ்சியாயிடைத்
துன்றியமணிதிசைதோறுஞ்சிந்துவ
மின்றிகழ்தாரகைவிளிந்துவீழ்வபோல்.

இ - ள். மின் திகழ் தாரகை விளிந்து வீழ்வபோல் - ஒளிவிளங்காநின்ற நக்ஷத்திரங்கள் (ஆகாயத்தினின்றும்) சிதைந்து விழுந்தாற்போல,—குன்றொடு சூளிகை கோபுரம் பிற - செய்குன்றுகளுஞ் சிகரமுள்ளமாளிகைகளும் மற்றவைகளும்,—ஒன்றுடன் ஒன்று பட்டு உரிஞ்சி - ஒன்றோடொன்சேர்ந்து உரிஞ்சுதலால்,—ஆயிடை துன்றிய மணி திசை தோறும் சிந்துவ - அவைகளிற்பொருந்திய இரத்னங்கள் திக்குகடோறும் சிந்துகின்றன. எ — று. (௩௯)

40. பொற்றைகள்சிகரகோபுரங்கடத்தமி
லெற்றுழிப்புகையெனவெழுந்துபூழிகள்
சுற்றியபுலிங்கமுந்தோன்றுகின்றன
வெற்றவெம்புயல்களுமின்னும்போலவே.

இ — ள். வெற்ற வெம் புயல்களும் மின்னும் போல - வெவ்விய வெறுமேகங்களையும் மின்னையும்போல,—பொற்றைகள் சிகர கோபுரங்கள் தம் தமில் எற்றுழி-சிறுமலைகளும் சிகரங்களையுடைய கோபுரங்களும் ஒன்றோடொன்று தட்டுப்படும்பொழுது,—புகை என எழுந்து பூழிகள் சுற்றின - புகையைப்போலப் புழுதிகளெழுந்துசூழ்ந்தன,—(அதுவுமன்றி) புலிங்கமும் தோன்றுகின்றன - பொறிகளுந்தோன்றுகின்றன. எ - று.

ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். நீராகிய உள்ளீடின்மையின் வெறும்புயலென்றார். அக்கினிமயமாகிய இடியுடைமையால் வெம்புயலென்றார். (௪௦)

41. ஏழுயர்களிறனுனெறிந்தயாவையுஞ்
சூழுறவானிடைத்துவன்றவெற்றலிற்
கேழுறுநுண்டுகள்கெழுமிச்சிந்துவ
பூழியினெடுமழைபொழியுந்தன்மைபோல்.

இ - ள். ஏழ் உயர் களிறு அனுன் - (தைரியத்தால்) ஏழிடமுயர்ந்த யானையையொத்தவராகிய வீரவாகுதேவர்,—எறிந்த யாவையும் - எடுத்தெறிந்த பொருள்களெல்லாம்,—சூழ் உற வான் இடை துவன்ற எற்றலில் - சுற்றிக்கொண்டு ஆகாயத்தினெருங்கி (ஒன்றோடொன்று) மோதுதலால்,—பூழியின் நெடுமழை பொழிந்த தன்மைபோல் - புழுதியாகிய பெருமழையைப்பெய்தாற்போல,—கேழ் உறு நுண் துகள் கெழுமி சிந்துவ - நிறம்பொருந்திய நுண்ணிய துகள்கள் செறிந்து சிந்துகின்றன. எ — று.

சூழுற, துவன்ற என்னும் எச்சங்கள் திரித்துப் பொருள்கொள்ளப்பட்டது. (௪௧)

42. ஆரியனோச்சியவணிகொண்மண்டபம்
வேரமொடகன்பொழில்பிறவும்விண்ணுறீஇத்
தாரகைமுதற்சுடர்த்தனுக்கள்சார்ந்திடச்
சோரியுமிடையிடைத்துளித்தவென்பவே.

இ — ள். ஆரியன் ஓச்சிய அணிகொள் மண்டபம் வேரமொடு அகன் பொழில் பிற வும் விண் உறீஇ - அறிவுடையராகிய வீரவாகுதேவர் (எடுத்தெறிந்த) அலங்காரமான மண்டபங்களும் செய்குன்றுகளும் விசாலமான சோலைகளும் மற்றுள்ளனவும் ஆகாயத் திற்சென்று,—தாரகை முதல் சுடர் தனுக்கள் சார்ந்திட - நக்ஷத்திரமுதலிய ஒளிபொ ருந்திய கிரகங்களினுடம்புகளிற் படுதலால்,—சோரியும் இடை இடை துளித்த என்ப— இரத்தத்தையும் இடையிடையே துளியாகச்சிந்தின என்றுகூறுவர். எ — று.

ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (சஉ)

43. புந்திபிலான்மகம்புகுந்ததீமையா
லிந்திரனாதியோர்யாருஞ்சூரனா
னொந்தனரவனகர்வளமுநோவுற
வந்தரத்தவரையுமலக்கண்செய்தவே.

இ — ள். புந்தி இலான் மகம் புகுந்த தீமையால் - புத்திகெட்டவனாகிய தக்கனது யாகத்திற்போயிருந்தபாவத்தால்,—இந்திரன் ஆதியோர் யாரும் சூரனால் நொந்தனர் - இந்திரன்முதலிய தேவர்களனைவரும் சூரபன்மனால் வருந்தினார்கள்,—(அதுவுமன்றி) அவன் நகர் வளமும் நோவுற - அச்சூரபன்மனது மகேந்திரத்திலுள்ள (கோபுரம் மண் டபம் முதலிய) சம்பத்துக்களும் வருந்தும்படி (வீரவாகுதேவரா லெடுத்தெறியப்பட்ட போது அவைகளும் மேற்சென்று),—அந்தரத்தவரையும் அலக்கண் செய்த - அங்கிருந் ததேவர்களையும் துன்பப்படுத்தின. எ — று.

ஏகாரம் அசை. உம்மை யாரும் என்பதில் முற்றும், வளமும் என்பதில் இறந்தது தழீஇயவெச்சமும், அந்தரத்தவரையும் என்பதில் உயர்வு சிறப்புமாம். (சங)

44. வெற்புறழ்மொய்ம்பினன்விடுத்தசூளிகை
பற்பலபொருந்தலும்பட்டவன்னிபோ
யெற்படுகதிருடையிரவிபச்சைமாப்
பொற்புறுகொய்யுளைபூழிசெய்ததே.

இ - ள். வெற்பு உறழ் மொய்ம்பினன் விடுத்த சூளிகை - மலையையொத்த புயங்க ளையுடைய வீரவாகுதேவர் எடுத்தெறிந்தசூளிகைகள்,—பலபல பொருந்தலும் - அனே கம் ஒன்றோடொன்று முட்டுதலால்,—பட்ட வன்னிபோய் - தோன்றியதீயானது சென்று,—எல்படு கதிர் உடை இரவி பச்சை மா பொற்புறு கொய் உளை பூழிசெய்தது- ஒளிபொருந்திய கிரணங்களையுடைய சூரியனது பச்சைக்குதிரைகளின் அழகுபொருந் திய கொய்யப்படுகின்றபுறமயிர்களை (எரித்துச்) சாம்பராக்கியது. எ—று. ஏகாரம் அசை.

45. பொன்னவிர்சிகரகோபுரங்களாதிய
துன்னியதாக்கலிற்றோன்றித்தீப்பொறி
யின்னுயிர்வழங்கியவெல்லையெங்கணும்
வன்னிபெய்மழையெனமயங்கிவீழ்பவே.

இ - ள். பொன் அவிர் சிகர கோபுரங்கள் ஆதிய துன்னிய தாக்கலில் - பொற்பிர காசம்பொருந்திய சிகரங்களையுடைய கோபுரமுதலிய பலபொருள்களும் ஒன்றோடொன்

றுநெருங்கி முட்டிக்கொள்ளுதலால்,—தீ பொறி தோன்றி இன் உயிர் வழங்கிய எல்லை எங்கணும் - தீப்பொறிதோன்றி இனிய உயிர்க்கூட்டங்கள் சஞ்சரிக்கின்ற இடங்கள் எங்கும்,—பெய் வன்னி மழை என மயங்கி வீழ்ப - வருஷிக்கின்ற அக்கினிமழை யென்று சொல்லும்படி (ஒன்ரேடொன்று) கலந்து விழுகின்றன. எ — று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. (சரு)

46. வழுவுறுமவுணர்கோன்வளங்கள்யாவையுங்
கெழுதகுவிசும்பினைக்கிழித்துச்சேறலி
னெழிலிகள்வயிறுடைந்திரங்கியாற்றலா
தழுதெனவுலகெலாமறல்சிந்துற்றவே.

இ - ள். வழு உறும் அவுணர்கோன் வளங்கள் யாவையும் - (நீதிவழியினின்றும்) தவறிநடக்கின்ற அசுரராஜனுகிய சூரபன்மனது செல்வப்பொருள்களெல்லாம்,—கெழு தகு விசும்பினை கிழித்து செல்தலின் - செறிந்த ஆகாயத்தைப்பிளந்துகொண்டு மேற் செல்லுதலால்,—எழிலிகள் வயிறு உடைந்து இரங்கி ஆற்றலாது அழுது என - மேகங் கள் வயிறுகிழிந்து பரிதபித்துப் பொறுக்கமுடியாமல் அழுதாற்போல,—உலகு எலாம் அறல் சிந்துற்ற - உலகமுழுதினும் (வயிற்றைக்கிழித்தவழியாகவே) நீரைச்சொரிந்தன.

ஏகாரம் அசை. உம்மை முற்று. கெழுதகு என்பதற்கு சுடர்களுடைய பிரகாசம் பொருந்திய எனினும்பொருந்தும். அழுதாலென்ன என்பது அழுதெனநின்றது. (சகூ)

வே று.

47. ஏசிலாவறிவன்விட்டவின்னபல்வெறுக்கையாவு
மாசகல்விசும்பினேகிமதிமுடியருள்பெற்றுள்ள
கோசிகன்றுறக்கமுய்த்தகொற்றவன்றவறியென்ன
வாசுறமீண்டுஞாலத்தகிலமும்வீழ்ந்தவன்றே.

இ - ள். ஏசு இலா அறிவன் விட்ட இன்ன பல் வெறுக்கை யாவும் - குற்றமில் லாத அறிவினையுடைய வீரவாகுதேவர் எடுத்தெறிந்த இத்தன்மையவாகிய பல செல்வப் பொருள்களெல்லாம்,—மாசு அகல் விசும்பின் ஏகி - களங்கமில்லாத ஆகாயத்திற்செ ன்று,—மதி முடி அருள் பெற்றுள்ள கோசிகன் துறக்கம் உய்த்த கொற்றவன் தவறி என்ன - சந்திரசேகரராகிய சிவபெருமானது திருவருளைப்பெற்ற விசுவாமித்திரரால் சுவர்க்கத்துக்கனுப்பப்பட்ட திரிசங்குமகாராஜன் (அங்குள்ளதேவர்கள் ஏற்றுக்கொள்ளா மையினுலே) தவறிப் பூமியைநோக்கி வந்தாற்போல,—ஆசு உற மீண்டு ஞாலத்து அகி லமும் வீழ்ந்த - விரைவாகக்கீழ்நோக்கிப் பூமியெங்கும் விழுந்தன. எ — று.

அன்று, ஏ அசை. ஆசு உற என்பதற்கு (ஒன்ரேடொன்று முட்டி உடைந்து) அற்பமாகவெனப்பொருள்கூறினும் அமையும். (சஎ)

48. படிதனிற்றிசையின்பாலிற்பௌவத்திற்பழுவந்தன்னிற்
றடவரைதன்னிலின்னதகையனபிறவிற்சூர
னுடையபல்வளங்களெல்லாமுரற்றியேவீழவாண்டு
மிடைதருமுயிரின்பொம்மல்வெருவிவீழ்ந்திரிதலுற்ற.

இ - ள். படிதனில் திசையின் பாலில் பௌவத்தில் பழுவம் தன்னில் தடவரை தன்னில் இன்ன தகையன பிறவில் - பூமியிலும் திக்குகளிடத்திலும் கடலிலும் காட்டி லும் பெரியமலைகளிலும் இவைபோன்ற மற்றையவைகளிலும்,—சூரன் உடைய பல்வ ளங்கள் எல்லாம் உரற்றியே வீழ - சூரபன்மனுடைய பலவகையான செல்வப்பொருள்க

ளெல்லாம் இசைந்துகொண்டு விழுதலும்,—ஆண்டு மிடைதரும் உயிரின் பொம்மல் வெருவி வீழ்ந்து இரிதல் உற்ற - அவ்விடத்து நெருங்கிய உயிர்க்கூட்டங்கள் பயந்து விழுந்தோடின. எ - று.

ஏகாரம் அசை. தன் மூன்றும் சாரியை. எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன.

49. அலைந்தது பரிதியோங்கலதிர்ந்ததுமேருச்சையங்
குலைந்ததுசூழுங்குன்றங்குலுங்கியவசலமேழுங்
கலைந்ததுநாகர்வைப்புங்கலங்கியகடலும்பாரு
முலைந்தனவுயிர்கண்முற்றுமோடினதிசையின்யானை.

இ - ள். பரிதி ஓங்கல் அலைந்தது - சக்கிரவாளமலை அலைந்தது,—மேருச் சையம் அதிர்ந்தது - (அசையாத) மகாமேருமலையும் நடுங்கியது,—சூழும் குன்றம் குலைந்தது - (அம்மேருமலையைச் சூழ்ந்துநிற்கின்ற) நான்கு மலைகளும் அசைந்தன,—அசலம் ஏழும் குலுங்கிய - (இவையன்றிச்) சத்தகுலாசலங்களும் குலைந்தன,—நாகர்வைப்பும் கலைந்தது - நாகலோகமும் நிலைகுலைந்தது,—கடலும் பாரும் கலங்கிய - சமுத்திரமும் பூமியும் கலங்கின,—உயிர்கண் முற்றும் உலைந்தன-உயிர்களெல்லாம் (அறிவழிந்து) வருந்தின,—திசையின் யானை ஓடின - திக்குகளிலுள்ளயானைகள் (இடம்பெயர்ந்து) ஓடின. எ - று.

உம்மைகள் முறையே முற்றும் இறந்ததுதழீஇயவெச்சமும் எண்ணுமாம். நாகர் வைப்பு என்பதற்கு தேவலோகமெனக்கூறினுமமையும். (சகூ)

50. தண்படுதொடலைமார்பன்றுனெறிந்தவற்றிற்பல்வே
றொண்புவிமுழுதுஞ்சிந்திற்றொழிந்தனவுலப்பிலாத
வெண்பதினுயிரப்பேர்யோசனையெல்லைத்தாகிக்
கண்படுசூரனூரிற்கல்லெனவீழ்ந்தமாதோ.

இ - ள். தண் படு தொடலை மார்பன் எறிந்தவற்றில் பல்வேறு ஒண் புவி முழுதும் சிந்திற்று - குளிர்ச்சிபொருந்திய மலர்மாலையணிந்த மார்பினையுடைய வீரவாகுதேவர் பிடுங்கியெறிந்த பொருள்களுள் அனேகம் அழகிய பூமியெங்குஞ் சிதறிவீழ்ந்தன,—ஒழிந்தன உலப்பு இலாத எண்பதின் ஆயிரம் பேர் யோசனை எல்லைத்தாகி - மற்றவைக ளெல்லாம் எண்பதினுயிரம் யோசனை என்னும் பெயருள்ள எல்லையையுடையதாய்,—கண் படு சூரன் ஊரில் கல் என வீழ்ந்த - இடமகன்ற சூரபன்மனது மகேந்திரபுரத்தி லே கன்மழைவீழ்வதுபோல விழுந்தன. எ - று.

தான், மாது, ஓ அசை. கல் என என்பதற்கு கல்லென்னுமொலியோடு எனக் கூறினுமாம். (ருo)

51. முடிந்திடலரியசூரன்மொய்வளமவனூர்முற்றுந்
தடிந்தெறியுருமேறென்னத்தணப்பறவீழ்தலோடு
மிடிந்தனமாடவீதியாவையுங்கடிகாவிற்ற
பொடிந்தனசிகரியாதிபுரிசைகண்மறிந்துமாண்ட.

இ - ள். முடிந்திடல் அரிய சூரன் மொய் வளம் - அழிவில்லாத சூரபன்மனது பெருமையாகிய செல்வப்பொருள்கள்,—அவன் ஊர் முற்றும் - அவனிருக்கப்பெற்ற மகேந்திரபுரமெங்கும்,—தடிந்து எறி உருமு ஏறு என்ன - இடித்துவிழுகின்ற இடியை ப்போல,—தணப்பு அற வீழ்தலோடும் - நீக்கமில்லாமல் விழுதலும் (அதனால்),—மாடவீதி யாவையும் இடிந்தன - மாடவீதிகளெல்லா மிடிந்துபோயின,—கடி கா இற்ற-

வாசனைபொருந்திய சோலையிலுள்ள மரங்கள் முறிந்து விழுந்தன,—சிகரி ஆதி பொடிந்தன - கோபுரமுதலியவைகள் தூளாயின,—புரிசைகள் மறிந்து மாண்ட - மதில்கள் விழுந்து அழிந்தன. எ — று. உம்மைகள் முற்று. (௫௧)

52. மண்டபஞ்சிகரிவேரமணிமதின்மாடகூட
மெண்டகுபொதியின்முற்றுமிடிபடவெழுபொற்பூழி
விண்டொடுதிசைபார்யாண்டும்வெறுக்கையின்வடிவமாக்கி
யண்டர்தமுலகீதென்றேயறிகுறுவகைசெய்தன்றே.

இ — ள். மண்டபம் சிகரி வேரம் மணி மதில் மாடம் கூடம் எண் தகு பொதியில் முற்றும் இடிபட - மண்டபங்களும் கோபுரங்களும் செய்குன்றுகளும் அழகிய மதில்களும் மாடங்களும் கூடங்களும் எண்ணத்தக்க சபைகளுமாகிய இவைகளெல்லாம் இடிபடுதலால்,—எழு பொன் பூழி - எழுந்த பொற்றுகளானது,—விண்டொடு திசை பார் முற்றும் வெறுக்கையின் வடிவம் ஆக்கி - ஆகாயமும் திக்குகளும் பூமியுமாகிய எவ்விடங்களையும் பொன்மயமாகச்செய்து,—அண்டர் தம் உலகு ஈது என்று அறிகுறுவகை செய்தன்று-தேவர்கள் வசிக்கின்ற சுவர்க்க உலகம் இது என்றுசொல்லும் வேற்றுமை தெரியாவண்ணஞ்செய்தது. எ — று.

ஏ அசை. ஈதென்றே என்பதின் ஏகாரம் தேற்றம். தம் சாரியை. உம்மை முற்று. விண்டு என்பதற்கு மேகமண்டலமெனவும் மலையெனவும் பொருள்கூறுவார்சிலர்.

53. புடையகல்பொன்செய்மூதூர்பொள்ளெனத்தகர்ந்துவீழ
மிடைதருவீதிமுற்றுமேயினசனங்கள்பூசல்
கடைவருநாளதெல்லைக்ககனமூதண்டகூட
முடைதலுமுடியுமாவியரற்றுமாறொத்ததன்றே.

இ - ள். புடை அகல் பொன் செய் மூதூர் பொள் என தகர்ந்து வீழ-பக்கத்திலே விசாலித்ததும் பொன்மயமாகச் செய்யப்பட்டதுமாகிய பழைய அந்நகரத்திலுள்ள கோபுரமுதலானவை விரைவாகப்பொடிந்து விழுதலால்,—மிடை தரு வீதி முற்றும் சனங்கள் பூசல் மேயின - நெருங்கியவீதிகளெல்லாவற்றிலும் ஜனங்களுடைய பேரொலியுண்டாயினது (எப்படியெனின்),—கடை வருநாள் அது எல்லை - உலகமெல்லா முடியுங் காலத்தில்,—ககனம் மூது அண்ட கூடம் உடைதலும் - ஆகாயத்திலுள்ள பழமையான அண்டகடாகம்உடைந்து விழுதலும் (அதனால்),—முடியும் ஆவி அரற்று மாறு ஒத்தது-இறக்கின்ற உயிர்கள் அழாநின்ற ஓசையையொத்தது. எ — று.

அன்று, ஏ அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை முற்று. (௫௩)

வே று.

54. நாகமுந்துநறுநிழன்மாதவி
நாகமுந்துநறுநிழற்பொற்கணி
சேகரம்பலசிந்திடுகாழுடைச்
சேகரம்பலவோடுசிதைந்தவே.

இ - ள். நாகம் உந்து - ஆகாயம்வரையுமுயர்ந்த,—நறு நிழல் மாதவி - சுகத்துக்கேதுவாகிய நிழலையுடைய குருக்கத்திமரங்களும்,—நாகம் - புன்னைமரங்களும்,—முந்து நறு நிழல் பொற்கணி - பழமையான நல்ல குளிர்ச்சிபொருந்திய பொன்மயமாகிய வேங்கைமரங்களும்,—பல சேகரம் சிந்திடு காழுடை சேகரம் - பல கொம்பர்களைப்பரப்பிய வயிரத்தையுடைய மாமரங்களும்,—பல வோடு சிதைந்த-பல்மரங்களுடனே அழிந்தன.

ஏகாரம் அசை. உந்தல் - உயர்தல். மூந்து - முற்பட்ட, பழமையான, முதிர்ந்த. நாகம் உந்து என்பதற்கு. குரங்குகள் பாயப்பெற்ற எனப்பொருள்கோடலுமாம். (௫௪)

55. கோடரங்குலவுற்றிடவான்றொடுங்
கோடரங்குலவுற்றிடுதண்டலைக்
கோடரங்குலங்கோலஞ்செய்பொன்வரைக்
கோடரங்குலவுற்றிறைகொண்டவே.

இ - ள். கோள் தரங்கு - கிரகங்கள்வழிக்கொண்டு,—உலவுற்றிடு அ வான் - உலாவுகின்ற அந்த ஆகாயத்தை,—தொடும் கோடரம் குலவுற்றிடு - முட்டாநின்ற கொம்பர்கள் விளங்கப்பெற்ற,—தண் தலை கோடரம் - குளிர்ந்ததலையையுடைய பூஞ்சோலைகளும்,—குலம் - கோயில்களும்,—கோலம் செய் பொன் வரைக்கோடு - அழகாகச்செய்யப்பட்ட பொன்மயமான மலையின் சிகரங்களும்,—அரங்கு - சபைகளும்,—உலவுற்று இறை கொண்ட - அழிந்து துகளாயின. எ — று.

ஏகாரம் அசை. கோள் தரம் குலவுற்றிட - நக்ஷத்திரமண்டலம் வரைக்கும் விளங்கும்படி,—வான் தொடும் - ஆகாயத்தைத்தொடுகின்ற,—கோடரம் குலவுற்றிடு - குரங்குகள் உலாவப்பெற்ற,—தண்டலைக்கோடரம் - சோலையிலுள்ள கொம்பர்களும், எனப்பொருள்கோடலுமொன்று. தரங்கு - வழி. (௫௫)

56. ஓடும்வாவியின்மீனினமோங்குபுள்
ளோடும்வாவிவிண் ணுற்றிடவீதியின்
மாடமாலைவரிசையின்மல்கிய
மாடமாலைமறிந்திடிபட்டதே.

இ - ள். வாவியில் ஓடும் மீன் இனம் - குளத்திலோடுகின்ற மீன்கூட்டங்கள்,—ஓங்கு புள்ளோடும் - உயர்ந்து பறக்கின்ற பக்ஷிகளோடும்,—வாவி விண் உற்றிட - பாய்ந்து ஆகாயத்திலே போக,—மாடு - பக்கத்தில்,—அம்மாலை - அழகிய பூமாலைகள்,—வரிசையின் மல்கிய - வரிசையாக நெருங்கப்பெற்ற,—மாட மாலை - மாளிகை ஒழுங்கு,—மறிந்து இடி பட்டது - விழுந்து இடிந்தது. எ — று. ஏகாரம் அசை. (௫௬)

57. அண்டரண்டருமந்நகர்மாண்டன
வண்டரண்டமளவிடுசூளிகை
மண்டபம்மதின்மாடந்தரித்தயர்
மண்டபம்மதின்மாதவம்யாவதே.

இ - ள். அண்டு அரண் தரும் - (ஒருவரும் அணுகக்கூடாத) நெருங்கிய காவலையுடைய,—அ நகர் - அந்நகரத்தில்,—மாண்டன - மாட்சிமையுற்றனவாகிய,—அண்டர் அண்டம் அளவிடு சூளிகை - தேவர்கள்வசிக்கப்பெற்ற அண்டங்களை அளவிடுகின்ற சிகரமுள்ள மேல்வீடுகளையும்,—மண்டபம் - மண்டபங்களையும்,—மதில் - மதில்களையும்,—மாடம் - வீடுகளையும்,—தரித்து அயர் - சுமந்து வருந்தும்,—மண் தபம் அதின் - பூமிதேவிசெய்த தவத்தின்பார்க்க,—மாதவம் யாவது - பெருந்தவம் வேறென்ன (ஒன்றுமில்லையென்றபடி). எ - று.

ஏகாரம் அசை. சுமைநீங்கினமையால் பூமிதேவி மகிழ்ச்சியுற்றனள் என்பது தாற்பரியம். அண்டரண்டரும் என்பதற்கு பகைவருமணுகுதற்கரிய எனப்பொருள்கூறுவாருமுளர். (௫௭)

58. பூவையன்னமணிமயில்பொற்புறு
புவையன்னமணிமயில்பொற்புறு
வாவியோடைவண்டானமழிந்திட
வாவியோடைவண்டானமழியுமால்.

இ - ள். பூவை அன்ன மணி மயில் - காயாம்பூவையொத்த நீலவர்ணமான மயில்களும்,—பொற்புறு பூவை - அழகுபொருந்திய நாகணவாய்களும்,—அன்னம் - அன்னங்களும்,—அணிமையில் பொற்புறு - அணுகப்பெறாத பொன்மயமான புறாக்களும்,—வாவி ஓடு ஐ வண்டானம் அழிந்திட - வாவியோடுகின்ற அழகிய கொய்யடிநாரைகளும் அழியும்படி,—வாவி ஓடை வண் தானம் அழியும் - வாவிகளும் ஓடைகளும் வளவிய இருப்பிடங்களும் அழியும். எ - று.

ஆல் அசை. மை இல் அணி பொன் புறா - குற்றமில்லாத அலங்காரத்தையுடைய புறா எனப்பொருள்கோடலுமொன்று. (ருஅ)

59. மொய்யுடைத்தறிமோதித்தளைபரீஇ
மையுடைப்பெருமால்கரிசோரிநீர்
மெய்யிடத்துகவிண்முகிலச்சுறக்
கையெடுத்துக்கதறியுடைந்தவே.

இ - ள். மை உடை பெரு மால் கரி - கரியநிறம்பொருந்திய பெரியயானைகள்,—மொய்யுடை தறி மோதி - வலிமையையுடைய கட்டுந்தூணைத்தாக்கி,—தளை பரீஇ - விலங்கையறுத்து,—சோரி நீர் மெய்யிடத்து உக - இரத்தவெள்ளம் சரீரத்தில் நின்றும் சிந்த,—விண் முகில் அச்சுற - ஆகாயத்திலுள்ள மேகமும் அஞ்சும்படி,—கை எடுத்து கதறி உடைந்த - துதிக்கையைமேலாக எடுத்துப்பிளிறிக்கொண்டு ஓடிப்போயின. எ-று.

ஏகாரம் அசை. (ருகூ)

60. ஈடுசான்றவெருத்தமுரிந்திட
நீடுபூநுதனெக்குறக்கிம்புரிக்
கோடுசிந்தக்குருதியுகுத்தரோ
வோடிவீழ்வவுவாக்களரற்றியே.

இ - ள். ஈடு சான்ற எருத்தம் முரிந்திட - வலிமையிருந்த பிடர்த்தலையொடியவும்,—பூ நீடு நுதல் நெக்குற - பொலிவாகிய நெடிய நெற்றி நெக்கவும்,—கிம்புரிக் கோடு சிந்த - பூண்கட்டப்பட்ட கொம்புகள் சிதறவும்,—குருதி உகுத்து - இரத்தநீரைச்சொரிந்து,—உவாக்கள் அரற்றி ஓடி வீழ்வ - யானைகள் பிளிறிக்கொண்டு ஓடிவிழுகின்றன.

அரோ, ஏ அசை. (சுo)

61. கார்கொள்சிந்துரங்காயத்திடையிடைச்
சோரிசோர்தரத்தோன்றுவவீற்றினின்
மேருவாதிவிலங்கலெமெய்க்கனல்
சாரும்வெம்புகைதன்னொடுஞ்சூழ்ந்தபோல்.

இ - ள். ஈற்றினின் - முடிவுகாலத்தில்,—மேரு ஆதி விலங்கலை - மேருமுதலிய மலைகளை,—மெய் கனல் - மெய்மையாகிய பிரளயாக்கினியானது,—சாரும் வெம்புகை தன்னொடும் சூழ்ந்த போல் - (தன்னிடத்துப்) பொருந்திய கடும்புகையோடு சுற்றிக்கொண்டாற்போல,—கார் கொள் சிந்துரம் - கரியநிறம்பொருந்திய யானைகள்,—காயத்து இடை இடை சோரி சோர்தர தோன்றுவ - (தமது) உடலினின்றும் இடையிடையே இரத்தநீரொழுகத் தோன்றுகின்றன. எ – று. தன் சாரியை. (சுக)

62. கொடிகளிற்றகொடிஞ்சிமுரிந்தன
விடைகொள்பீடிகையெல்லைகணெக்கன
வடிகொள்சில்லியுமாருஞ்சிதைந்தன
பொடியதாகிப்புரண்டனதேர்களே.

இ - ள். கொடிகள் இற்ற - கொடிகள் அறுந்தன,—கொடிஞ்சி முரிந்தன - கூம்புகள் முரிந்தன,—இடைகொள் பீடிகை எல்லைகள் நெக்கன - இடையிலுள்ள பீடங்களின் விளிம்புகள் நெகிழ்ந்தன,—அடிகொள் சில்லியும் ஆரும் சிதைந்தன - அடியிற் பொருந்திய சில்லுகளும் அச்சாணிகளும் அழிந்தன,—தேர்கள் பொடியது ஆகி புரண்டன - (அப்படியழியவே) தேர்கள் தூளாகிப் புரண்டு விழுந்தன. எ - று.

ஏகாரம் அசை. உம்மைகள் எண். (௬உ)

63. பந்திதோறும்பராவியவைங்கதிக்
கந்துகங்கள்கலங்கிநெரிந்திட
நொந்துமேனிநொறில்வருசெம்புனல்
சிந்தியோடச்சிதறியதிக்கெலாம்.

இ - ள். பந்தி தோறும் பராவிய ஐங்கதிக் கந்துகங்கள் - சாலைகடோறும் பரவிநிற்கின்ற பஞ்சகதிகளையுடைய குதிரைகள்,—கலங்கி நெரிந்திட நொந்து-கலங்கிநெரிதலால் வருந்தி,—மேனி நொறில் வரு செம் புனல் சிந்தி ஓட - உடலிலிருந்து விரைவாக வருகின்ற இரத்தநீர் சிந்தியோட,—திக்கு எலாம் சிதறிய - திக்குகளெல்லாவற்றினும் சிதறியோடின. எ — று. (௬௩)

64. சிதவல்கொண்டிடுசெம்மயிர்க்கொய்யுளை
மதுகைவெம்பரிவாய்களின்வீழ்தரு
முதிரவாரியொலிகடற்புக்கதா
லிதுகொலோவடவைக்கனலென்னவே.

இ - ள். சிதவல் கொண்டிடு செம்மயிர் - சிதறியிருக்கின்ற செம்மயிரையும்,—கொய் உளை - கொய்யப்பட்ட புறமயிரையுமுடைய,—மதுகை வெம் பரி வாய்களின் வீழ்தரும் உதிர வாரி - வலிய வேகம்பொருந்திய குதிரைகளின் வாய்களினின்றும் விழுகின்ற இரத்தவெள்ளம்,—இது கொலோ வடவைக்கனல் என்ன - இதுதானோ வடவாமுகாக்கினி என்று (கண்டவர்கள்) சொல்லும்படி,—ஒலி கடல் புக்கது - ஒலிக்கின்ற கடலிற்போனது. எ - று.

ஆல், ஓ, ஏ அசை. கொல் ஐயம். (௬௪)

65. காளவெங்கரிக்காலின்வயப்பரித்
தாளினூடகப்பட்டுத்தரைபுகா
மூளைசிந்தமுழுதுடல்பூழியாய்
மாளுகின்றனர்மாநகரோர்சிலர்.

இ - ள். மாநகரோர் சிலர் - பெரியமகேந்திரத்திலுள்ள அசுரர் சிலர்,—காள வெம் கரிக் காலின் - கருமைபொருந்திய கொடிய யானைகளினுடைய கால்களினூடும்,—வயப் பரித் தாளின் ஊடு - வெற்றிபொருந்திய குதிரைகளின்கால்களினூடும்,—அகப்பட்டு - சிக்குண்டு,—தரை புகா - பூமிக்குட்புகுந்து,—மூளை சிந்த - மூளைகள் சிதற,—முழுதுடல் பூழியாய் மாளுகின்றனர் - சரீரமுழுதுந்தூளாய்ப்போக இறக்கின்றார்கள். எ — று.

66. ஆளிமொய்ம்புடையண்ணன்முன்வீசின
நீளுமாநகர்ஞெள்ளலின்வீழ்தலுந்
தோளிழந்துசுவன்முரிந்தொய்யெனத்
தாளிழந்துதரங்கமுற்றார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்,—ஆளி மொய்ம்பு உடை அண்ணல் - சிங்கேறுபோலும் வன்மைபொருந்திய வீரவாகுதேவர்,—முன் வீசின - முன் எடுத்தெறிந்தவைகள்,—நீளும் மா நகர் ஞெள்ளலின் வீழ்தலும் - நெடிய பெரிய வீரமகேந்திரத்தின் வீதியிலே விழ,—தோள் இழந்து - புயங்கள் ஒடிந்து,—சுவல் முரிந்து - பிடர் முரிந்து,—ஒய்யென தாள் இழந்து தரங்கம் உற்றார் - விரைவாகக்கால்கள் இழந்து துன்பங்கொண்டார்கள்.

தரங்கம் — துன்பம். (௬௬)

67. பொற்றையன்னபொலன்மணிமாளிகை
யிற்றுவீழ்தலுமென்னிதுவென்றெழீஇ
வெற்றவெள்ளிடைமேவுதன்முன்னியே
முற்றம்வந்திடுமுன்மறிந்தார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்,—பொற்றை அன்ன பொலன் மணி மாளிகை - மலைபோன்ற பொன்னாலும் இரத்தினங்களாலுஞ் செய்யப்பட்ட மாளிகைகள்,—இற்று வீழ்தலும் - அழிந்து வீழ்தலும்,—இது என் என்று எழீஇ - இது என்ன என்று எழுந்து,—வெற்ற வெள் இடை மேவுதன் முன்னி - வெறுமையாகிய வெளியிடத்தில் வருதற்கு நினைத்து,—முற்றம் வந்திடு முன் மறிந்தார் - முற்றத்தில்வருதற்குமுன் விழுந்திறந்தார். எ — று. ஏகாரம் அசை. (௬௭)

68. ஊடுமைந்தருமொண்டொடிமாதரு
மாடமோடுமறிந்தனர்தம்முடல்
வீடிவிண்மிசைவேற்றுருவெய்தியே
கூடியேவழிக்கொண்டனரோர்சிலர்.

இ - ள். ஓர் சிலர் ஊடு மைந்தரும் ஒண்டொடி மாதரும் - பிணங்குகின்ற சில ஆடவர்களும் ஒளிபொருந்திய வளையலையணிந்த பெண்களும்,—மாடமோடு மறிந்தனர் - தாமிருந்தமாடத்தோடு மறிதலால்,—தம் உடல் வீடி - தம் உடம்பு அழிந்து,—விண் மிசை வேற்று உரு எய்தி - ஆகாயத்தில் வேற்றுவடிவமடைந்து,—கூடி வழிக்கொண்டனர் - கூடிவழிக்கொண்டார்கள். எ - று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மைகள் எண். (௬அ)

69. உவமனில்லவனோச்சினவெங்கணு
மவதியின்றிப்பொழியவவைதெரீஇத்
தவறிலாதுசெய்தாழ்வரைகீண்டெடாக்
கவிகையாத்தமைக்காத்துநிற்பார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—உவமன் இல்லவன் ஓச்சின - வீரத்தினாலே தமக்கொருவரும் ஒப்பில்லாதவராகிய வீரவாகுதேவர் எடுத்தெறிந்தவைகள்,—அவதி இன்றி எங்கணும் பொழிய - அளவில்லாமல் எவ்விடங்களினுஞ் சிதறிவிழ,— அவை தெரீஇ - அவைகளையறிந்து,—தவறு இலாது செய் தாழ்வரை கீண்டு எடா - குற்றமில்லாமற் செய்யப்பட்ட தாழ்ந்த மலைகளைக்கிண்டியெடுத்து,—கவிகையா தமை காத்து நிற்பார் - குடையாகப்பிடித்துத் தங்களைக் காத்துக்கொண்டு நிற்பார்கள். எ — று. (௬௯)

70. விறற்கொள்வாகுவிடுத்தனகல்லக
வுறைப்பின்வீழவொதுங்கிடமின்மையிற்
சிறக்குமாநகர்ச்செந்தரைக்கொண்டகீ
ழறைக்குளேபுக்கலமருவார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—விறல்கொள் வாகு விடுத்தன கல்லக உறைப்பின் வீழ - வீரவாகுதேவர் எடுத்தெறிந்தவைகள் கன்மழையைப்போல வந்துவீழ்தலால்,—ஒதுங்கு இடம் இன்மையின் - ஒதுங்குதற்கு இடமின்மையால்,—சிறக்கு மாநகர் செம் தரை கொண்ட-சிறந்த லக்குமிவிலாசம்பொருந்திய வீரமகேந்திரத்திலே சிவந்த நிலத்தினுள்ள,—கீழ் அறைக்கு உளே புக்கு அலமருவார்-கீழறைக்குட்புகுந்து தடுமாறுவார்கள்.

71. மாதர்தங்களைமக்களையன்னையைத்
தாதைமாரைத்தமதுகைப்பற்றியே
யேதின்மாடமிகந்துகச்சோரிநீர்
வீதிபோந்துவெருவிநிற்பார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—மாதர் தங்களை மக்களை அன்னையை தாதைமாரை - மனைவியர்களையும் பிள்ளைகளையும் தாயர்களையும் தந்தையர்களையும்,—தமது கை பற்றி - தமது கைகளிற் பிடித்துக்கொண்டு,—ஏது இல் மாடம் இகந்து - குற்றமில்லாத மாளிகைகளை விட்டு,—சோரி நீர் உக - (தமதுசரீரத்திலிருந்து) இரத்தநீர்சொரிய,—வீதி போந்து வெருவி நிற்பார் - வீதியிற் போய்ப்பயந்து நிற்பார்கள். எ — று.

ஏகாரம் அசை. (எக)

72. கருவிவானினுங்கண்ணகன்றிக்கினுந்
தாணிதன்னினுந்தாவிலன்வீசிய
திருவளங்கள்செறிந்தனவீழ்தலும்
வெருவிப்போய்க்கடல்வீழ்ந்தொளிப்பார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—கருவி வானினும் - மேகங்கள் சஞ்சரிக்கப்பெற்ற ஆகாயத்தினும்,—கண் அகல் திக்கினும் - இடமகன்ற திக்குகளினும்,—தரணி தன்னினும் - பூமியினும்,—தாவிலன் வீசிய திருவளங்கள் செறிந்தன வீழ்தலும் - குற்றமில்லாதவராகிய வீரவாகுதேவர் எடுத்தெறிந்த சிறந்தபல பொருள்கள் நெருங்கிவிழுதலும்,—வெருவி போய் கடல் வீழ்ந்து ஒளிப்பார்-பயந்துபோய்க் கடலில் விழுந்து ஒளிப்பார்கள். எ - று. உம்மைகள் எண். தன் சாரியை. (எஉ)

73. கிழிந்தசென்னியிற்கேழ்படுசெம்புனல்
கழிந்துதோன்றவுங்கண்டனரையுறுப்
பொழிந்துமெய்ப்புறம்போர்த்தலுந்தேற்றியே
யழிந்திரங்குறவாகுலிப்பார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—கிழிந்த சென்னியில் கேழ்படு செம்புனல் கழிந்து தோன்றவும் - உடைந்ததலையினின்றும் இரத்தநீர் மிகத்தோன்றவும்,—கண்டனர் ஐயுறு - அதனைக்கண்டவர்கள் சந்தேகித்து,—அழிந்து இரங்குற - நெஞ்சழிந்து வருந்த,—பொழிந்து மெய்ப்புறம் போர்த்தலும் - அவ்விரத்தமொழுகிச்சரீரமுழுவதும் மூடுதலும்,—தேற்றி - (நமதுதலையுடைந்து இரத்தம் வருகின்றதென்று) அறிந்து,—ஆகுலிப்பார் - துன்பங்கொள்ளுவார்கள். எ — று.

ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு. (எங)

74. ஆடன்மொய்ம்பினனார்த்துமுன்வீசிய
மாடவீதிவளநகரெங்கணு
நீடவீழ்தலுநிற்றலையஞ்சியே
யோடியூறுற்றுயிர்துறப்பார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—ஆடல் மொய்ம்பினன் ஆர்த்து முன் வீசிய - வீரவாகுதேவர் ஆரவாரித்துமுன்பு எடுத்தெறிந்தவைகள்,—மாடவீதி வளநகர் எங்கணும் நீட வீழ்தலும் - மாடவீதிகளோடு கூடிய செல்வத்தையுடைய நகரங்களெவ்விடத்தும் மிக வீழ்தலால்,—நிற்றலை அஞ்சி - அவ்விடத்தில் நிற்கப்பயந்து,—ஓடி ஊறுற்று உயிர் துறப்பார் - ஓடிக் காயமடைந்து உயிரை விடுவார்கள். எ — று. ஏகாரம் அசை. ()

75. திங்கள்சூடிதிருமகன்விட்டன
வெங்கும்வீழுமிறப்பினைநோக்கியே
யங்கிவெங்கணைதொட்டறுத்தன்னவை
தங்களாருயிர்தாங்கிநிற்பார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—திங்கள் சூடி திருமகன் விட்டன - சந்திரசேகரராகிய சிவபெருமானது திருக்குமாரரான வீரவாகுதேவர் எடுத்தெறிந்தவைகள்,—எங்கும் வீழும் இறப்பினை - எவ்விடத்தும் விழுகின்ற மிகுதியை,—நோக்கி - பார்த்து,—அங்கி வெம் கணை தொட்டு - வெம்மையாகிய அக்கினியஸ்திரங்களைப் பிரயோகித்து,—அன்னவை அறுத்து - அவைகளையழித்து,—தங்கள் ஆருயிர் தாங்கி நிற்பார் - தங்களுடைய அரிய உயிரைத்தாங்கி நிற்பார்கள். எ - று. ஏகாரம் அசை. (எரு)

76. மையன்மாதருமைந்தருமாவியும்
பொய்யில்புந்தியுமொன்றிப்புணர்தலுஞ்
செய்யமாடஞ்சிகரமொடேவிழ
மெய்யுமொன்றிவிளிந்திடுவார்சிலர்.

இ - ள். மையல் மாதரும் - விகாரத்தால் மயக்கம்பொருந்திய பெண்களும்,—மைந்தரும் - வாலிபர்களும் (ஆகிய),—சிலர் - சில அசுரர்கள்,—ஆவியும் - உயிரும்,—பொய்யில் புந்தியும் - உண்மையான மனமும்,—ஒன்றி புணர்தலும் - ஒருமித்துச்சேருதலும்,—செய்யமாடம் சிகரமொடே விழ - அழகியமாளிகை சிகரத்தோடுவிழுதலால்,—மெய்யும் ஒன்றி விளிந்திடுவார் - (உயிருமனமுமொன்றாயினாற்போலச்)சரீரமுமொன்றாகியிறப்பார்கள். எ — று.

ஏகாரம் அசை. மெய்யும் என்பதின் உம்மை இறந்தததுதழீஇயவெச்சம். ஏனைய எண்.

77. அந்தண்மாடத்தறிவன்விடுத்தன
வந்துவீழமறிந்துருமேறெனச்
சிந்தவேயுகுசெம்பொறிமெய்ப்பட
வெந்துசின்னம்விரவுறுவார்சிலர்.

இ - ள். சிலர் - சில அசுரர்கள்,—அறிவன் விடுத்தன - அறிவுடையவராகிய வீரவாகுதேவர் எடுத்தெறிந்தவைகள்,—அம் தண் மாடத்து வந்து வீழ - அழகிய குளிர்ச்சியையுடைய மாளிகையின்மீது வந்துவீழ்தலால்,—மறிந்து உருமு ஏறு என சிந்த - (அம்மாளிகை) விழுந்து இடியேறுபோலச் சிதற,—உகு செம் பொறி - அதனால் சொரிகின்ற சிவந்ததீப்பொறிகள்,—மெய் பட - சரீரத்திற்படலால்,—வெந்து - (அச்சரீரம்) வெந்து,—சின்னம் விரவுறுவார் - அடையாளமானகாயங்களைப் பெறுவார்கள். எ - று.

ஏகாரம் அசைநிலை. (எஎ)

78. வரங்கொள்வீரமகேந்திரத்தின்னணந்
தரங்கமெய்திச்சனங்களெல்லாமிரீஇ
யுரங்கள்சிந்தியழிந்தழியொல்லென
விரங்குமோதையெழுகடலுண்டதே.

இ - ள். வரம் கொள் வீரமகேந்திரத்து - மேன்மைபொருந்தியவீரமகேந்திரத்தில்,— இன்னணம் - இத்தன்மையதாக,—தரங்கமெய்தி - கலக்கமடைந்து,—சனங்கள் எல்லாம் இரீஇ - சனங்களெல்லாம் விலகியோடி,—உரங்கள் சிந்தி அழிந்தழி - தைரியமிழந்து அழிந்தபோது,—ஒல்லெனா இரங்கும் ஓதை - ஒல்லென்னும் ஒலிக்குறிப்போடு அழுகின்ற ஓசையானது,—எழுகடல் உண்டது-எழுகடலினோசையையும் அடக்கிவிட்டது.

ஏகாரம் அசை. தரங்கம் - கலக்கம். (எஅ)

79. மன்றினிற்கரிபொய்த்துமனுநெறி
கொன்றுவாழுங்கொடியர்தம்மில்லெனத்
துன்றுமாடத்தொகைவெள்ளிடையதாய்ப்
பொன்றிவீழ்ந்தனபுல்லெனவாகியே.

இ - ள். மன்றினில் கரி பொய்த்து - நியாயசபையில் பொய்ச்சாட்சிசொல்லி,— மனுநெறி கொன்று - மனுநீதியைக் கெடுத்து,—வாழும் கொடியர்தம் இல் என - வாழுகின்ற கொடிய பாவிகளுடைய வீடு எப்படியழியுமோ அது போல,—துன்று மாடத் தொகை - நெருங்கியிருந்த மாளிகைவரிசைகள்,—புல் என ஆகி - புன்மையாய் இடிந்து,—பொன்றி வெள்ளிடையதாய் வீழ்ந்தன - அழிந்து வெளியிடமாகவே வீழ்ந்தன.

ஏ அசை. (எகூ)

80. நீறுபட்டநெடுநகரெங்கணு
மூறுபட்டவுயிர்கடஞ்சோரிநீ
ராறுபட்டிடவங்கவையோடளாய்ச்
சேறுபட்டனசெக்கர்விண்போலவே.

இ - ள். நீறு பட்ட நெடுநகர் எங்கணும் - துகளாய்ப்போன பெரிய நகரமெவ்விடத்தும்,—ஊறுபட்ட உயிர்கள் தம் சோரிநீர் ஆறுபட்டிட - காயம்பொருந்திய உயிர்களுடைய இரத்தவெள்ளம் ஆறாய்ச்செல்ல,—அவையோடு அளாய் - அத்துகள்களோடு கலந்து,—செக்கர் விண் போல சேறுபட்டன - செவ்வானம்போலச்(சிவந்து)சேறாயின.

அங்கு, ஏ அசை. தம் சாரியை. உம்மை முற்றுப்பொருளது. (அ0)

81. மலிந்தசீர்த்திமகேந்திரமாபுர
மலைந்துதொல்லைத்திருமுழுதற்றதான்
மெலிந்திடும்படிவிண்ணவர்தம்மெலா
நலிந்தவன்வளநன்றுறுமேகொலாம்.

இ - ள். மலிந்த சீர்த்தி மகேந்திர மா புரம் - மிகுந்த கீர்த்திபொருந்திய பெரிய மகேந்திர நகரம்,—அலைந்து - நிலைகுலைந்து,—தொல்லை திரு முழுதும் அற்றது-பழைய செல்வமெல்லாம் அழியப்பெற்றது,—மெலிந்திடும்படி விண்ணவர் தம் எலாம் நலிந்தவன் வளம் நன்று உறுமே கொல் - மெலியும்படி தேவர்களெல்லாரையும் வருத்தினவனாகிய சூரபன்மனது செல்வம் நன்றாகவிருக்குமோ (இராது என்றபடி). எ — று.

தம் சாரியை. ஆல், கொல், ஆம் அசைநிலை. ஏகாரம் எதிர்மறை. தேவர்களைச் சிறையிட்டு வருத்தியபடியாற்றான் நகரழிந்தது என்பது தாற்பரியம். (அக)

நகரழிபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எஅ0.

---

# சகத்திரவாகுகள்வதைப்படலம்.

1. ஏயினபான்மையினிவன்மூதூர்
மாய்தருமெல்லையின்வருகின்ற
வாயிரவாகுளவடல்வீரர்
மேயினதன்மைவிளம்புற்றாம்.

இ - ள். ஏயின பான்மையின் இவன் மூதூர் மாய்தரும் எல்லையின் - பொருந்திய இத்தன்மையாகச் சூரபன்மனுடைய பழைய நகரானது அழிகின்ற சமயத்தில்,—வருகின்ற ஆயிரம் வாகு உள அடல் வீரர் - (போரைக்குறித்து) வருகின்ற ஆயிரம் புயங்களையுடைய வலிய வீரர்,—மேயின தன்மை விளம்புற்றாம் - அடைந்ததன்மையைச் சொல்லுகின்றாம். எ — று.

"இன்ன" என்பது "இன" என இடைகுறைந்துநின்றது. (க)

2. ஓலமுடைக்கடலுமிழ்கின்ற
நீலவிடத்தினைநிகர்மெய்யார்
மாலையுடைப்பலவடவைத்தீக்
கோலமெனச்சிகைகொண்டுற்றார்.

இ - ள். ஓலம் உடை கடல் உமிழ்கின்ற நீல விடத்தினை நிகர் மெய்யார் - ஓசையையுடைய பாற்கடல் (தன்னிடத்தினின்றும்) தோற்றுவித்த கரியநிறம்பொருந்திய விஷத்தை யொத்த சரீரத்தையுடையவர்களும்,—மாலை உடை பல் வடவைத்தீ கோலம் என சிகை கொண்டுற்றார் - மாலையையுடைய பல வடவாமுகாக்கினி வடிவம் என்று சொல்லத்தக்க மயிர்முடியைக் கொண்டிருக்கின்றவர்களும். எ — று. (உ)

3. தீங்களிறாதியதிறன்மாக்க
டாங்குவையோடுதலைப்பெய்தே
யாங்குளசோரியறாதீமப்
பாங்கர்களன்னதொர்பகுவாயார்.

இ -ள். தீம் களிறு ஆதிய திறல் மாக்கள் தாம் குவையோடு தலைப்பெய்தே - கொடிய யானைமுதலாகிய வலிய மிருகங்களைக் கூட்டமாக வாரி வாயிலிட்டு விழுங்குவதால்,—ஆங்கு உள சோரி அறாது ஈமம் பாங்கர்கள் அன்னது ஓர் பகுவாயார் - அம்மிருகங்களினுள்ள இரத்தநீங்காத மசானத்தின் வெளி இடங்களையொத்த பெருவாயையுடையவர்களும். எ — று. தாம் சாரியை. ஏகாரம் அசை. (௩)

4. எல்லையினேமிகள்யாவுந்தா
மொல்லொலிநீரினுடைந்தென்னக்
கல்லுறைசிந்துகருங்கொண்மூச்
செல்லெனவார்த்தனர்செல்கின்றார்.

இ - ள். எல்லையில் நேமிகள் யாவும் தாம் ஒல் ஒலி நீரின் உடைந்து என்ன - அளவில்லாத சமுத்திரங்களெல்லாம் மிக்க ஒலித்தன்மையோடு கட்டுவிட்டுடைந்தாற்போலவும்,—கல் உறை சிந்து கரும் கொண்மூ செல் என ஆர்த்தனர் செல்கின்றார் - கன்மழையைப்பொழிகின்ற கரிய மேகத்திலுள்ள இடிமுழக்கம்போலவும் ஆரவாரித்துக்கொண்டு செல்லுகின்றவர்களும். எ — று.

தாம் சாரியை. உம்மை முற்றுப்பொருளது. (௪)

வேறு.

5. மைவருநீலமலைத்தொகைதாங்கு
மொய்வருகின்றமுடிக்குழுவென்ன
வைவகைநூற்றினமர்ந்தகல்வானைத்
தைவருகின்றதலைத்தொகைகொண்டார்.

இ - ள். மைவரு நீல மலைத்தொகை தாங்கும் மொய் வருகின்ற முடிக்குழு என்ன - மேகம்படிகின்ற கரிய மலைக்கூட்டங்கள் சுமக்கின்ற பலம்பொருந்திய சிகரக் கூட்டங்களைப்போல,— ஐவகை நூற்றின் அமர்ந்து அகல் வானை தைவருகின்ற தலைத்தொகை கொண்டார் - ஐஞ்ஞூறென்னுங் கணக்கினமைந்து அகன்ற ஆகாயத்தைத் தடவுகின்ற தலைக்கூட்டங்களையுடையவர்களும். எ — று. (ரு)

6. மாராமரமானவைமாதிரமெங்கும்
பராவவிடுத்திடுபல்கவடென்ன
விராவியவங்கதமேவிவிளங்கு
மோராயிரமாகியவொண்புயமுள்ளார்.

இ - ள். மராமரம் ஆனவை மாதிரம் எங்கும் பராவ விடுத்திடு பல் கவடு என்ன - மராமரங்களானவை திசைகளெல்லாம் பரவும்படி விடுத்த பலகிளைகளைப்போல,— விராவிய அங்கதம் மேவி விளங்கும் ஓராயிரம் ஆகிய ஒண் புயம் உடையார் - பொருந்திய வாகுவலயம் இருந்து விளங்குகின்ற ஓராயிரமாகிய அழகிய புயங்களையுடையவர்களும். எ — று. (சு)

7. எழுக்கொடுமுத்தலையெஃகம்வினாஞ்சில்
கழுக்கடைசங்கொடுகப்பணம்வெவ்வாண்
மழுக்கதைசக்கரம்வச்சிரமாதி
விழுப்படையாவும்விராவியகையார்.

இ - ள். எழு கொடு முத்தலை எஃகம் வில் நாஞ்சில் கழுக்கடை சங்கொடு கப்பணம் வெவ்வாள் மழு கதை சக்கரம் வச்சிரம் ஆதி விழு படை யாவும் விராவிய கையார் - எழு வளைந்த திரிசூலம் கைவேல் வில்லு கலப்பை ஈட்டி சங்கு இருப்புநெரிஞ்சிமுள் கொடியவாள் மழு தண்டு சக்கரம் குலிசம் முதலிய சிறந்த படைக்கலங்களெல்லாம் நெருங்கியிருக்கின்ற கைகளையுடையவர்களும். எ — று. உம்மை முற்று. (எ)

8. எண்டகுநேமிகளேழுமளக்கர்
மண்டலமானவுமன்னுயிர்யாவுங்
கொண்டிடினுங்குறைவின்றிநிரம்பா
தண்டமதென்னவகன்றவயிற்றார்.

இ - ள். எண் தகு நேமிகள் ஏழும் - மதிக்கத்தக்க எழுகடல்களையும்,— அளக்கர் மண்டலம் ஆனவும் - கடல்சூழ்ந்த பூமண்டலத்தையும்,— மன் உயிர் யாவும் - நிலைபெற்ற உயிர்களெல்லாவற்றையும்,— கொண்டிடினும் - உட்கொண்டாலும்,— குறைவு இன்றி நிரம்பாது அண்டமது என்ன அகன்ற வயிற்றார் - பூரணமாக நிரம்பாது அண்டத்தைப் போல விசாலித்த வயிற்றையுடையவர்களும். எ — று.

நிரம்பாது அகன்ற வயிறென்க. உம்மைகள் முற்றும் எண்ணுமாம். (அ)

9. விழுமியபல்றலைவெம்பணியேனைக்
குழுவொடுபோற்றினர்கொண்டுறலாற்ரு
தழுதிடநாடியதற்கயர்வார்போற்
கழல்களரற்றுகழற்றுணைகொண்டார்.

இ - ள். விழுமிய பல்தலை வெம்பணி - சிறந்த பலதலைகளையுடைய வெவ்விய ஆதி சேடன்,—ஏனை குழுவொடு போற்றினர் கொண்டு உறல் ஆற்ருது அழுதிட-மற்றைய பாம்புகளோடு சுமந்துகொண்டிருப்பதைப் பொறுக்கமுடியாமல் அழ,—நாடி அதற்கு அயர்வார் போல் கழல்கள் அரற்று கழல் துணை கொண்டார் - அங்ஙனம் அழுவதைய றிந்து அதற்கு வருந்துவாரைப்போல வீரக்கழல்கள் முழங்குகின்ற இரண்டுகாலையு டையவர்களும். எ — று. (௯)

10. இருபுயமோர்முகமெய்தியவானே
ஞெருவனைவெல்லவொராயிரானேம்
பொருவகைசென்றிடல்புன்மையதென்று
வருபழியுன்னிமனந்தளர்கின்ருர்.

இ - ள். இருபுயம் ஓர் முகம் எய்திய வானோன் ஒருவனை வெல்ல - இரண்டு புயங் களையும் ஓர் முகத்தையுமுடைய ஒருதேவனைவெல்லுதற்கு,—ஒரு ஆயிரர் ஆனேம் பொருவகை சென்றிடல் புன்மையது என்று - ஓராயிரக்கணக்காகிய நாம் போர் செய் யும்படி குறித்துச் செல்லுதல் இழிவானசெய்கை என்று,—வரு பழி உன்னி மனம் தளர்கின்ருர் - அதனுல் வரும் வசையைநினைத்து மனஞ் சோர்வடைகின்றவர்களும். ()

11. மாகரவான்முனமாயையின்வந்தா
ஞகையினுலிவனைதெனவானிற்
போகுவனுலிதுபொய்யலவல்லே
யேகுமினேகுமினென்றுசெல்கின்ருர்.

இ - ள். இவன் மாயையின் மா கரவால் முனம் வந்தான் - இவன் (தான் பழகியி ருக்கின்ற) மாயவித்தையினுலே பெருங்களவாக முன்னம் (இராஜசபைக்கு)வந்தான்,— ஆகையினுல் ஐதென வானில் போகுவன் - ஆதலால் (இப்பொழுது எங்களைக்கண்டு பயந்து) விரைவாக ஆகாயத்தில் (ஒளித்து) ஓடுவான்,—இது பொய் அல - இது பொய் யல்ல,—வல்லே ஏகுமின் ஏகுமின் என்று செல் கின்ருர் - சீக்கிரம் நடவுங்கள் நடவுங் கள் என்று சொல்லிக்கொண்டு வருகின்றவர்களும். எ — று. (௧௧)

12. மீளிகையாலெறிமேதகுவேர
மாளிகைகோபுரமண்டபம்வீழ்வ
காளிகரன்னகரங்கள்கொடேற்றுத்
தூளிகள்செய்தனர்தூர்த்திடுகின்ருர்.

இ - ள். மீளி கையால் எறி மேதகு வேரம் மாளிகை கோபுரம் மண்டபம் வீழ்வ - வீரவாகுதேவர் கையாலெடுத்தெறியப்பட்ட உயர்ந்த கட்டுமலைகளும் மாளிகைகளும் கோபுரங்களும் மண்டபங்களும் விழுகின்றன (அவைகளை),—காளிகர் அன்ன கரங் கொடு ஏற்று தூளிகள் செய்தனர் தூர்த்திடுகின்ருர் - பாம்புகளைநிகர்த்த கைகளினுற் பிடித்துத் துகளாக்கி உதிர்த்துக்கொண்டுவருகின்றவர்களும். எ - று.

காளிகர் கருநிறத்தையுடைய அசுரர்களுமாம். (௧௨)

13. எய்யெனமெய்யிடையெங்கும்வியர்ப்பச்
செய்யனகண்வழிசெந்தழல்சிந்த
வெய்யவுயிர்ப்பெழவேர்வுளமூள
வொய்யெனவோடினருற்றிடுகின்றார்.

இ - ள். எய் என மெய் இடை எங்கும் வியர்ப்ப - முட்பன்றியைப்போலச் சரீரத்திலெங்கும் வியர்வையுண்டாகவும்,—செய்யன கண் வழி செந்தழல் சிந்த - சிவந்த கண்களின்வழியாகச் சிவந்ததீப்பொறிகள் சிதறவும்,—வெய்ய உயிர்ப்பு எழ-சுடுமூச்சுண்டாகவும்,—வேர்வு உளம் மூள - கோபம் மனத்தில் மூளவும்,—ஒய்யென ஓடினர் உற்றிடுகின்றார் - விரைந்தோடிவருகின்றவர்களும். எ — று. (கங)

14. நாகர்தமக்கொர்நமன்றனையன்னோ
ராகியவாயிரராயிரமொய்ம்பர்
வேகமதாகிவிழுத்தகுவீர
வாகுவையெய்திமடங்கலினார்த்தார்.

இ - ள். நாகர் தமக்கு ஓர் நமன் தனை அன்னோர் - தேவர்களுக்கு ஓர் இயமனை ஒத்தவர்களும்,—ஆகிய ஆயிரர் ஆயிரமொய்ம்பர் - ஆகிய ஆயிரக்கணக்கான சகத்திரவாகுகள்,—வேகமது ஆகி - வேகமாகவந்து,—விழு தகு வீரவாகுவை எய்தி மடங்கலின் ஆர்த்தார் - மேன்மைபொருந்திய வீரவாகுதேவரை யணுகிச் சிங்கத்தைப்போல ஆரவாரித்தார்கள். எ — று. தன் சாரியை. (கச)

15. ஆர்த்திடுமோதையகன்செவிசெல்லத்
தார்த்தொகைதூங்குதடம்புயவீரன்
பார்த்தனன்மூவெயில்பண்டெரிசெய்த
தீர்த்தனெனச்சிறிதேநகைசெய்தான்.

இ - ள். ஆர்த்திடும் ஓதை அகன் செவி செல்ல - அங்ஙனம் அவர்கள் ஆரவாரித்த ஓசை அகன்ற காதிற் கேட்ட பொழுது,—தார் தொகை தூங்கு தடம்புய வீரன் - மாலைவரிசைகள் அசைகின்ற விசாலித்த புயங்களையுடைய வீரவாகுதேவர்,—பார்த்தனன் மூஎயில் பண்டு எரிசெய்த தீர்த்தன் என சிறிது நகை செய்தான் - திரும்பி அவர்களைப் பார்த்து முன்னாளிலே திரிபுரங்களையெரித்த சிவபெருமானைப்போலச் சற்றேசிரித்தார்.

ஏகாரம் அசை. (கரு)

16. மேனிமிர்மந்தரவெற்பெனநின்றே
வானளவோங்குமராமரமொன்றைத்
தேனினம்வான்றிசைசிந்தியரற்ற
வூன்முதிர்கைகொடொசித்தனன்மன்னே.

இ - ள். மேல் நிமிர் மந்தர வெற்பு என நின்றே வான் அளவு ஓங்கு மராமரம் ஒன்றை - மேலாக உயர்ந்த மந்தரமலையைப்போல நின்று ஆகாயம்வரைக்கும் உயர்ந்த ஒரு மராமரத்தை,—தேன் இனம் வான் திசை சிந்தி அரற்ற - (அதின்மொய்த்திருந்த)வண்டின்கூட்டங்கள் ஆகாயத்திலும் திக்குகளிலும் சிதறி ஒலிக்க,—ஊன் முதிர் கை கொடு ஒசித்தனன் - தசைமுதிர்ந்த கையினால் (வீரவாகுதேவர்) பிடுங்கி எடுத்தார். எ — று.

ஏகாரம், மன், ஓ அசை. (கசு)

17. அண்டமிருண்டிடவாதவரானோர்
மிண்டியபேரொளிவீந்திடவீரன்
வண்டழைதுன்றுமராமரமங்கை
கொண்டதுபன்முறைகொட்புறல்செய்தான்.

இ - ள். அண்டம் இருண்டிட ஆதவரானோர் மிண்டிய பேரொளி வீந்திட - ஆகாயம் இருளடையவும் சூரியர்களுடைய நெருங்கிய பெரிய ஒளிகெடவும்,—வீரன் வண்தழை துன்று மராமரம் அங்கை கொண்டு அது பன்முறை கொட்புறல் செய்தான் - வீரவாகுதேவர் அழகிய இலைகள்நிரம்பிய மராமரத்தை அகங்கையிற்கொண்டு அதனைப்பலதரஞ் சுழற்றினர். எ — று. (௧௭)

வேறு.

18. மாயிருமருப்புளமராமரமிறுத்தே
தூயனமராடன்முயறொன்னிலைமைநோக்கி
யாயிரமடுத்தபுயராயிரருமங்கண்
மொய்யினர்களண்ணலைமுரட்படைசொரிந்தார்.

இ - ள். தூயன் மா இரு மருப்பு உள மராமரம் இறுத்தே அமர் ஆடல் முயல் தொல் நிலைமை நோக்கி - பரிசுத்தமாகிய வீரவாகுதேவர் மிகவும் பெருங்கொம்பர்களையுடைய மராமரத்தை முரித்தெடுத்துப் போர்செய்யத் தொடங்கும் பெருந்தன்மையைப் பார்த்து,—ஆயிரம் அடுத்த புயர் ஆயிரரும் - சகத்திரவாகுகள் ஆயிரம்பேரும்,—அங்கண் அண்ணலை மொய்யினர்கள் - அவ்விடத்து வீரவாகுதேவரை மொய்த்து,—முரண் படை சொரிந்தார் - வலியபடைக்கலங்களைப் பிரயோகித்தார்கள். எ — று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. (௧௮)

19. தொடுத்தனர்கள்வார்கணைகடொட்டனர்கள்வைவே
லெடுத்தபலதோமரமெறிந்தனர்களாலம்
விடுத்தனர்கண்முத்தலைவியன்கழுமுளுய்த்தா
ரடற்குலிசம்வீசினர்களாழிகடுரந்தார்.

இ - ள். வார் கணைகள் தொடுத்தனர் - நெடிய அம்புகளை எய்தார்கள்,—வை வேல் தொட்டனர் - கூரியவேல்களை விட்டார்கள்,—எடுத்த பல தோமரம் எறிந்தனர்கள் - (தெரிந்)தெடுக்கப்பட்ட பல இருப்புலக்கைகளை யெறிந்தார்கள்,—ஆலம் விடுத்தனர்கள் - மழுக்களை விடுத்தார்கள்,—வியன் முத்தலை கழுமுள் உய்த்தார் - மேலாக மூன்று நுதிகளையுடைய சூலங்களைச் செலுத்தினார்கள்,—அடல் குலிசம் வீசினர்கள்-வலிய வச்சிராயுதங்களை வீசினார்கள்,—ஆழிகள் துரந்தார் - சக்கரங்களைச்(சுழற்றி) யெறிந்தார்கள்.

ஆலம் கலப்பைக்கும், தோமரம் தண்டத்துக்கும் பெருஞ்சவளத்துக்கும் பெயர். சவளமென்பது ஈட்டி. எடுத்த என்பதற்கு, கையில் எடுத்த எனவும் உயர்ந்த எனவும் பொருள்கொள்ளலாம். (௧௯)

20. இப்பரிசினுள்ளபடையாவுமுறைதூங்கு
மைப்புயல்களென்னவரைவின்றிவிரைவாக
வொப்பரியவீரன்மிசையுய்த்திடலுமன்னோ
னுப்பொடுமரந்தனிசுழற்றியடலுற்றான்.

இ - ள். இப்பரிசின் உள்ள படை யாவும் - இத்தன்மையாகத் (தங்கள் கைகளின்) உள்ள ஆயுதங்களெல்லாவற்றையும்,—உறை தூங்கும் மை புயல்கள் என்ன - மழையைப் பெய்கின்ற கரியமேகங்களைப்போல,—வரைவு இன்றி விரைவாக - அளவில்லாமல்

விரைவாக,—ஒப்பரிய வீரன் மிசை உய்த்திடலும் - (திடத்தினாலும் அறிவினாலும் தமக்கொருவரும்) ஒப்பில்லாதவராகிய வீரவாகுதேவர்மேல் விடுத்தலும்,—அன்னோன் துப்பொடு மரம் தனி சுழற்றி அடல் உற்றான் - அவர் (போர்செய்கின்ற சாதுரிய)வல்லமையினால் தனிமையாக நின்று மராமரத்தைச் சுழற்றி (அப்படைகளை) அழித்தார். எ — று.

உம்மை முற்று. உறை - மழை. துப்பு - வலிமை. (உ0)

21. விட்டபடையாவும்வெறுந்துகளவாகப்
பட்டிடமரங்கொடுபராகமவைசெய்ய
வுட்டெளிவின்மானவரோராயிரரும்வீரற்
கிட்டினர்வளைந்தனர்கிளர்ந்தமர்முயன்றார்.

இ - ள். விட்டபடை யாவும் வெறும் துகளவாக பட்டிட மரங்கொடு பராகம் அவை செய்ய - (அவர்கள்) விட்ட ஆயுதங்களெல்லாம் வெறுந்துகளாக அழியும்படி மராமரத்தால் (அடித்துத்) துகள்செய்ய,—உள் தெளிவு இல் மானவர் ஓராயிரரும் - மனத்தெளிவில்லாத ஆயிரம் வீரரும்,—வீரன் கிட்டினர் வளைந்தனர் கிளர்ந்து அமர் முயன்றார் - வீரவாகுதேவரை நெருங்கிச் சூழ்ந்துகொண்டு உற்சாகத்தோடு போர்செய்தார்கள். எ-று.

உம்மைகள் முற்று. துகள என்பதில் அகரம் அசை. (உக)

22. ஒட்டியமராடியவொராயிரவர்தாமுங்
கெட்டிரியமேருநிகர்கேழ்கிளர்புயத்தோன்
மட்டுநனைவார்சினைமரங்கொடுபுடைத்தே
சட்டகமிறந்துபடுதன்மைபுரிகுற்றான்.

இ - ள். ஒட்டி அமர் ஆடிய ஓராயிரவர் தாமும் கெட்டு இரிய - சபதங்கூறிப்போர் செய்த ஆயிரம்வீரரும் அழிந்து தோற்றோட,—மேரு நிகர் கேழ் கிளர் புயத்தோன் - மேருமலையைப்போல நிறம்விளங்கும் புயங்களையுடைய வீரவாகுதேவர்,—மட்டு நனை வார் சினை மரங்கொடு புடைத்து - தேனையுடைய அரும்புகளும் நெடிய கிளைகளும்பொருந்திய மராமரத்தால் அடித்து,—சட்டகம் இறந்துபடு தன்மை புரிகுற்றான் - அவர்கள் உடம்பழியும்படிசெய்தார். எ — று.

தாம் சாரியை. ஏகாரம் அசை. உம்மை முற்று. ஒட்டி என்பதற்கு நெருங்கி எனினுமாம். (உஉ)

23. செக்கர்புரைகுஞ்சிகெழுசென்னிகள்கிழிந்தார்
நெக்கனர்கபோலவகைநெற்றிபிளவுற்றா
ரக்கநிரைசிந்தினரலங்குகுழையற்றா
ருக்கனர்கள்பல்லெயிறுடைந்தனர்கடுண்டம்.

இ - ள். செக்கர் புரை குஞ்சி கெழு சென்னிகள் கிழிந்தார் - (இங்ஙனம் வீரவாகுதேவர் அடித்தபொழுது) செவ்வானத்தையொத்த சிவந்தரோமம்பொருந்திய தலைகள் கிழியப்பெற்றார்கள்,—கபோலவகை நெக்கனர் - கன்னங்களெல்லாம் உடைந்தார்கள்,—நெற்றி பிளவுற்றார் - நெற்றிகள் பிளக்கப்பெற்றார்கள்,—அக்கநிரை சிந்தினர் - கண்வரிசைகள் சிதறினார்கள்,—அலங்கு குழை அற்றார் - விளங்குகின்ற காதுகள் அறுபட்டார்கள்,—பல் எயிறு உக்கனர்கள் - பற்களும் எயிறுகளும் உதிரப்பெற்றார்கள்,—துண்டம் உடைந்தனர்கள் - மூக்குகளுமுடைந்தார்கள். எ — று.

எயிறு - கடைவாயிலிருந்து வளைந்து வெளியே தோன்றும்பற்கள். அவை வக்கிர தந்தங்கள் எனப்படும். (உ௩)

24. வாய்நிரைபகிர்ந்தனர்கண்மாழைதிகழ்கண்ட
மானவுமுரிந்தனர்களற்றனர்கள்பொற்றோ
ளூனமகலங்கைகளொசிந்தனர்தசைந்தே
பீனமுறுமார்பிடைபிளந்தனர்தளர்ந்தார்.

இ - ள். வாய் நிரை பகிர்ந்தனர்கள் - வாய்வரிசைகள் பிளவுண்டார்கள்,—மாழை திகழ் கண்ட மானவும் முரிந்தனர்கள் - பொன்னொளிவிளங்குகின்ற கழுத்துக்களும் முறிந்தார்கள்,—பொன் தோள் அற்றனர்கள் - பொலிவாகிய புயங்களை யிழந்தார்கள்,—ஊனம் அகல் அங்கைகள் ஒசிந்தனர் - குற்றமில்லாத அழகிய கைகள் முறிந்தார்கள்,—தசைந்து பீனம் உறு மார்பு இடை பிளந்தனர் தளர்ந்தார் - தசைப்பற்றோடு பருத்திருக்கின்ற மார்புநடுவே பிளந்து தளர்வடைந்தார்கள். எ — று.

மாழை ஆகுபெயராய் அணியெனினும் ஒக்கும், பகர்ந்துமுரிந்து அற்று ஒசிந்து பிளந்து தளர்ந்தார் என முடிப்பினுமமையும். (உச)

25. உந்திகள்குடங்கரினுடைந்துகுடர்யாவுஞ்
சிந்தினர்மருங்கெழில்சிதைந்தனர்புறங்கண்
முந்துதொடரென்பொடுமுரிந்தனர்கள்வாமஞ்
சந்துபொருகின்றமுழந்தாளடிகளற்றார்.

இ - ள். உந்திகள் குடங்கரின் உடைந்து குடர்யாவும் சிந்தினர் - வயிறுகள் குடமுடைந்தாற்போல உடைந்து குடரெல்லாஞ் சிந்தினார்கள்,—மருங்கு எழில் சிதைந்தனர் - இடையின் அழகழிந்தார்கள்,—புறங்கள் முந்து தொடர் என்பொடு முரிந்தனர்கள் - முதுகுகள் முன்தொடுத்திருக்கின்ற எலும்போடு முரிந்தார்கள்,—வாமம் சந்து பொருகின்ற முழந்தாள் அடிகள் அற்றார் - தொடைகளும் பொருத்துகளும் (தம்மி) லொத்த முழந்தாள்களும் கால்களும் இழந்தார்கள். எ — று.

உம்மை முற்று. எழில் மருங்கு சிதைந்தனர் என மாற்றிப் பொருள்கொள்ளினுமாம். முந்து தொடரென்பு - முதுகந்தண்டெலும்பு. (உரு)

26. வீந்தனர்களோர்சிலவர்வீழ்ந்துமிதிபட்டுத்
தேய்ந்தனர்களோர்சிலவர்செய்யகுடர்சிந்திச்
சாய்ந்தனர்களோர்சிலவர்தங்குருதியாற்றுட்
டோய்ந்தனர்களோர்சிலர்துடித்தனர்கள்சில்லோர்.

இ - ள். ஓர் சிலவர் வீந்தனர்கள் - (சகத்திரவாகுகளில்) ஒரு சிலர் இறந்தார்கள்,—ஓர் சிலவர் வீழ்ந்து மிதிபட்டு தேய்ந்தனர்கள் - ஒரு சிலர் வீழ்ந்து மிதிபட்டு இறந்தார்கள்,—ஓர் சிலவர் செய்ய குடர் சிந்தி சாய்ந்தனர்கள் - ஒரு சிலர் சிவந்த குடல்சிதறுண்டுவிழுந்தார்கள்,—ஓர் சிலர் தம் குருதி ஆற்றுள் தோய்ந்தனர்கள் - ஒரு சிலர் தமது இரத்தவெள்ளத்துள் அழுந்தினார்கள்,—சில்லோர் துடித்தனர்கள்-சிலர் பதைப்தைத்தார்கள்.

27. எறிந்திடுபடைத்தொகுதியேகுமுனம்வீழ்ந்து
மறிந்தனர்களோர்சிலவர்மாய்ந்துககனம்போய்ச்
செறிந்தனர்களோர்சிலர்சிதைந்துதலைபோயு
முறிந்தவுடல்கொண்டமர்முயன்றனர்கள்சில்லோர்.

இ - ள். ஓர் சிலவர் எறிந்திடு படைத் தொகுதி ஏகு முனம் வீழ்ந்து மறிந்தனர்கள் - ஒரு சிலர் தம்மால்விடப்பட்ட ஆயுதக்கூட்டங்கள் செல்லுதற்குமுன் விழுந்திறந்தார்கள்,—ஓர் சிலர் மாய்ந்து ககனம் போய் செறிந்தனர்கள் - ஒரு சிலர் இறந்து (தேவர்க

ளாய்ச்) சுவர்க்கத்திற் சென்று நெருங்கியிருந்தார்கள்,—சில்லோர் தலை சிதைந்து போயும் - வேறுசிலர் தலைகள் அழிந்து போனபின்னும்,—முறிந்த உடல் கொண்டு அமர் முயன்றனர் - முண்டமாகிய சரீரத்தைக்கொண்டு போருக்கு எத்தனித்தார்கள். எ — று.

உம்மை உயர்வுசிறப்பு. (உஎ)

28. ஏரகலும்வீரர்தமியாக்கையிதுவண்ணஞ்
சேரவிறலுற்றுடையசெவ்வியினெழுந்த
சோரிநதிமாநகர்தொலைத்துவளன்வாரி
வாரிதிநிறைந்தவனிமீதினுமடுத்த.

இ - ள். ஏர் அகலும் வீரர் தம் யாக்கை இது வண்ணம் சேர இறலுற்றுடைய செவ்வியின் - அழகுநீங்கப்பெற்ற வீரர்களுடைய சரீரங்கள் இவ்வாறாக ஒருங்கு அழிந்த சமயத்தில்,—எழுந்த சோரி நதி மாநகர் தொலைத்து-உண்டான இரத்த ஆறானது பெரிய வீரமகேந்திரத்தை அழித்து,—வளன் வாரி வாரிதி நிறைந்து - (அதிலுள்ள) செல்வங்களைவாரிச்சமுத்திரத்தில் நிறைந்து,—அவனி மீதினும் மடுத்த - பூமியினும் நிரம்பின.

தம் சாரியை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (உஅ)

வேறு.

29. அறந்தெரிந்துணராண்டகையகன்மரம்புடைப்பக்
குறைந்தசென்னிவான்றிரிவனவெயிற்றொடுகுலவிச்
செறிந்ததேவரோடமிர்தொளித்துண்டவர்சென்னி
நிறைந்திடாமதித்துணைகலந்துலவுதனேரும்.

இ — ள். அறம் தெரிந்து உணர் ஆண்டகை அகல் மரம் புடைப்ப - தருமநீதியைத் தெரிந்தறிந்தவராகிய ஆண்டன்மையிற்சிறந்த வீரவாகுதேவர் பெரிய மராமரத்தாலடிக்க,—குறைந்த சென்னி எயிற்றொடு குலவி வான் திரிவன - (அதனால்) முறிந்ததலைகள் வக்கிரதந்தங்களோடு விளங்கி ஆகாயத்திலுலாவுவன,—(அங்ஙனமுலாவுதல்)செறிந்த தேவரோடு ஒளித்து அமிர்து உண்டவர் சென்னி - நெருங்கிய தேவர்களோடு தமதுருவத்தை மறைத்திருந்து அமிர்தத்தையுண்ட அசுரர்களுடைய தலைகள்,—நிறைந்திடா துணை மதி கவர்ந்து உலவுதல் நேரும் - இரண்டு பிறைகளைக் கவ்விக்கொண்டு உலாவுவதை ஒப்பாகும். எ — று. அறம் ஆகுபெயராய்த் தருமசாஸ்திரங்கள் எனினுமாம். ()

30. அடல்கொண்மொய்ம்பினன்மரம்புடைத்தலுஞ்சிலவவுண
ருடல்சினப்பரிமுகத்தவர்தலைதுமிந்துதிர
நெடிதும்வாய்வழிசிந்தவீழ்ந்தனர்நெடுங்கடலுள்
வடவைமாமுகமங்கிகான்றிடுவதேமான.

இ — ள். அடல் கொள் மொய்ம்பினன் புடைத்தலும் - வீரவாகுதேவர் (மராமரத்தால்)அடித்தபொழுது,—நெடும் கடலுள் வடவை மாமுகம் அங்கி கான்றிடுவதே மான - பெரியகடலினுள்ளே வடவாமுகம் அக்கினியைச்சொரிவதுபோல,—சில அவுணர் உடல் சினம் பரி முகத்தவர் தலை துமிந்து நெடிதும் உதிரம் வாய்வழி சிந்த வீழ்ந்தனர் - சில அசுரர் மாறுபட்ட கோபம்பொருந்திய குதிரைமுகத்தையுடையவர்கள் தலைவெட்டுப்பட்டு மிகவும் இரத்தம் வாய்வழியொழுக வீழ்ந்தார்கள். எ—று. ஏகாரம் பிரிநிலை. ()

31. வள்ளன்மாமரத்தண்டுகொண்டடித்தலும்வலியோர்
பிள்ளைமாமதியெயிற்றணிசிந்திவிண்பெயர்ந்தே
யள்ளல்வேலையின்முறைமுறைவீழ்வனவதன்கட்
டுள்ளுமீன்கணமுகண்டுவீழ்கின்றதோர்தொடர்பின்.

இ - ள். வள்ளல் மாமரம் தண்டு கொண்டு அடித்தலும் - வீரவாகுதேவர் மராமரத் தண்டால் அடிக்க,—அதன் கண் துள்ளு மீன் கணம் உகண்டு வீழ்கின்றது ஓர் தொடர்பின் - அச்சமுத்திரத்தில் (மேலெழுந்து) துள்ளுகின்ற மீன் கூட்டங்கள் (வரிசைவரிசையாகப்) புரண்டுவிழுகின்ற தன்மையைப்போல,—வலியோர் பிள்ளை மாமதி எயிற்று அணி சிந்தி விண் பெயர்ந்து - சகத்திரவாகுகளுடைய சிறந்த இளம்பிறைபோன்ற வக்கிரதந்தவரிசைகள் சிதறி மேலாகச் சென்று,—அள்ளல் வேலையின் முறை முறை வீழ்வன - சேறுபொருந்திய கடலில் வரிசைவரிசையாக விழுகின்றன. எ - று.

ஏ, ஓர் அசை. (௩௧)

32. வலிந்தவூழ்முறையாவரேகடந்தவர்மரத்தாற்
பொலந்தயங்குபூண்மார்பினனெற்றிடும்பொழுதிற்
கலந்துபோர்செய்தாரோர்சிலர்வாளொடுகரம்போய்த்
தொலைந்துளார்செலுநெறியின்வீழ்ந்தவர்சிரந்துணிப்ப.

இ - ள். வலிந்த ஊழ் முறை யாவரே கடந்தவர் - வலிமைபொருந்திய விதிவசத்தை யார்தான் வென்றவர்,—பொலம் தயங்கு பூண் மார்பினன் மரத்தால் எற்றிடும் பொழுதில் - பொன்மயமாக விளங்கும் ஆபரணத்தையணிந்த மார்பினையுடைய வீரவாகுதேவர் மராமரத்தாலடித்தபொழுது,—கலந்து போர் செய்தார் ஓர் சிலர் கரம் வாளொடுபோய் - நெருங்கிநின்று போர்செய்தவர்களிற் சிலருடைய கைகள் (அறுபட்டு)வாளோடுபோய்,—தொலைந்துளார் செலும் நெறியின் வீழ்ந்து அவர் சிரம் துணிப்ப - தோற்ற அசுரர் செல்லுகின்ற வழியில் விழுந்து அவர்களுடைய தலையை வெட்டுகின்றன. எ – று.

ஏகாரம் அசை. (௩௨)

33. இனையபற்பலநிகழ்ந்திடவிணையிலாவொருவன்
றினையின்வேலையிலாயிரம்புயமுடைத்திறலோ
ரனைவர்தம்மையும்பஃறுணிபடுந்திறனட்டுத்
தனிமைதன்னொடுநின்றனனமர்க்களந்தன்னில்.

இ - ள். இனைய பலபல நிகழ்ந்திட இணையிலா ஒருவன் - இத்தன்மையாகிய பற்பல சிறப்புக்கள் நடக்க ஒப்பில்லாத வீரவாகுதேவர்,—தினையின் வேலையில் - தினையளவு நேரத்தில்,—திறலோர் ஆயிரம் புயம் உடை அனைவர் தம்மையும் - வலிமையுடையோராகிய சகத்திரவாகுகளனைவரையும்,—பல் துணி படும் திறன் அட்டு - பலதுண்டங்களாகும்படி அடித்துக் கொன்று,—தனிமை தன்னொடு அமர்க்களம் தன்னில் நின்றனன் - தான் ஒருவராகவே போர்க்களத்தில் நின்றார். எ -- று.

தம் தன் சாரியை. உம்மை முற்று. (௩௩)

சகத்திரவாகுகள்வதைப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௮௦௩.

---

# வச்சிரவாகுவதைப்படலம்.

1. கூடியாரமரியற்றினூர்தம்வலிகுறைந்து
வீடியாவிபோய்விளிதலுமன்னதுவிரைவி
னேடிவிண்ணிடைநணுகியதூதுவர்நில்லா
தோடியாளுடையவுணர்கோன்முன்புசென்றுரைப்பார்.

இ-ள். கூடி ஆர் அமர் இயற்றினூர் தம் வலி குறைந்து வீடி ஆவிபோய் விளிதலும் - ஒருங்குசேர்ந்துவந்து போரைச்செய்த வீரர்கள் தமது வலிஇழந்து விழுந்து உயிர் நீங்கி இறந்துபடுதலும்,—விண் இடை நணுகிய தூதுவர் அன்னது விரைவின் நேடி - ஆகாயவழியிற் சென்ற தூதுவர்கள் அதனைவிரைவாக அறிந்து,—நில்லாது ஓடி ஆள் உடை அவுணர் கோன் முன்பு சென்று உரைப்பார் - நில்லாமலோடித் தம்மையாளுந் தன்மையையுடைய அவுணர்க்கரசனுகிய சூரபன்மனுக்கு முன்னுகவந்துநின்று சொல்லுகின்றூர்கள். எ — று.

ஆளுடை-அரசாளுந்தலைமையையுடைய வெனினுமொக்கும். ஓடி என்னும் வினையெச்சம் சென்று என்னும் வினையெச்சத்தையடுத்து உரைப்பார் என்னும் வினைமுற்றோடுமுடியும். (க)

2. துன்றுமாயிரமொய்ம்புடைநின்படைத்தொகைஞர்
சென்றுசில்லமர்புரிந்தனரவனதுதெரியா
வொன்றொர்பாதவம்பறித்தனன்புடைத்தலுமொருங்கே
பொன்றிவீழ்ந்தனர்புகுந்தவாறீதெனப்புகன்றூர்.

இ-ள். நின்படை துன்றும் ஆயிரம் மொய்ம்பு உடை தொகைஞர் - (இராஜனே) உமது சேனுவீரராகி நெருங்கிநின்ற சகத்திரவாகுகள்,—சென்று சில் அமர் புரிந்தனர் - போய் (அத்தூதுவனுடன்) சற்றேபோர்செய்தார்கள்,—அவன் அது தெரியா - அவன் (அவர்கள்போர்செய்தலைப்பார்த்து,—ஒன்று ஓர் பாதவம் பறித்தனன் புடைத்தலும் - ஒருமரத்தைப்பிடுங்கி யடிக்க,—ஒருங்கே பொன்றி வீழ்ந்தனர் - (அவ்வாயிரம்பேரும்) ஒருசேர இறந்து விழுந்தார்கள்,—ஈது புகுந்தவாறு என புகன்றூர் - இதுதான் நடந்த சங்கதியென்று சொன்னூர்கள். எ — று.

ஏகாரம் அசை. ஒன்று ஓர் என்பன ஒருபொருட்பன்மொழி. (உ)

3. புகன்றவேலையிலவுணர்கோன்புரையிலோன்வன்மை
புகன்றவேலையின்வடவையாரழலெனப்பொங்கி
யகன்றனன்பெருமிதத்துடனூணையுந்திறலு
மகன்றனன்பெருந்துயர்கொளீஇயினையனவறைவான்.

இ-ள். புரை இலோன் வன்மை புகன்ற வேலையின் - (அங்ஙனம் தூதுவர்கள்) ஒப்பில்லாத வீரவாகுதேவருடைய வலிமையைச் சொல்லியபொழுது,—அவுணர் கோன்-சூரபன்மன்,—புகு அன்று அவ் வேலையின் ஆர் வடவை அழலென பொங்கி-(உலகத்தை அழிக்க வரும்) அக்காலத்துஅக்கடலினின்று கிளருகின்ற வடவாமுகாக்கினியைப்போலப் பெருங்கோபங்கொண்டு,-அகன்ற நன் பெருமிதத்துடன் ஆணையும் திறலும் அகன்றனன் - பரந்த மிகு களிப்போடு ஆஞ்ஞையும் வெற்றியும் நீங்கினவனுய்,—பெரும் துயர் கொளீஇ - பெருந்துன்பங்கொண்டு,—இனையன அறைவான் - இவ்வாருகக் கூறுகின்றுன். எ — று. உம்மைகள் எண். அகன்றனன் என்பது எதுகைநோக்கிற்று.

4. உமையளித்திடுசிறுமகன்றூதுவனொருவ
னெமதுமுன்னம்வந்தவமதிசெய்தனனேகி
யமரில்யாரையுமட்டுநின்றின்னமுமகலா
னமதுகொற்றமுநன்றுநன்றுமெனநகைத்தான்.

இ - ள். உமை அளித்திடு சிறுமகன் தூதுவன் ஒருவன் - உமாதேவிபெற்ற சிறுபு தல்வனது ஒரு தூதுவன்,—எமது முன்னம் வந்து அவமதி செய்தனன் ஏகி - எமக்கெ திராகவந்து (இருந்து எம்மை யொருபொருளாகமதியாது) அவமானஞ்செய்து (இவ்வி டத்தினின்றும்)போய்,—அமரில் யாரையும் அட்டு நின்று இன்னமும் அகலான் - போரி லெதிர்த்தவர்களெல்லாரையுங் கொன்று இன்னமும் போகாமல் நிற்கின்றுன்,—நமது கொற்றமும் நன்று நன்று என நகைத்தான் - (ஆதலால்) நமது வெற்றியும் நல்லது நல் லது என்று சிரித்தான். எ - று.

ஆல் அசை. உம்மைகள் முறையே முற்றும் இறந்ததுதழீஇயவெச்சமும் இழிவு சிறப்புமாம். பெருந்தேவர்களென்று மதிக்கப்படும் அரிபிரமேந்திராதி தேவர்களைத் திக் குவிஜயஞ்செய்த நாண்முதல் இந்நாள்வரையும் பெற்றுக்கொண்ட வெற்றியென்பது போதர "நமது கொற்றமும்" என்றுன். (ச)

5. முச்சகம்புகழவுணர்கோன்முனிவினைமுன்னி
யச்செனக்கிளர்ந்தெழுந்துசென்றவனடிவணங்கி
மெய்ச்சிரங்களோரையிருதிறலுடைவிறல்சேர்
வச்சிரத்திருமொய்ம்புடைக்காதலன்வகுப்பான்.

இ - ள். மெய் சிரங்கள் ஓர் ஐயிரு திறல் உடை விறல் சேர் வச்சிரத் திரு மொய்ம் புடை காதலன் - உடம்பிலுள்ள பத்துத்தலைகளையுடையவனும் தைரியசாலியும் வெற்றி யைப்பெற்றவனுமாகிய அழகிய வச்சிரவாகு என்னும் இளையமகன்,—முச்சகம் புகழ் அவுணர் கோன் முனிவினை முன்னி - மூன்றுலகத்திலுள்ளவர்களாலும் புகழப்படுகின்ற அசுரராஜனுகிய சூரபன்மனது கோபத்தைப்பார்த்து,—அச்சு என கிளர்ந்து எழுந்து சென்று அவனடி வணங்கி வகுப்பான் - (தானிருந்த ஆசனத்தினின்றும்) மிகவிரைந்து எழுந்து போய் அச்சூரபன்மனது பாதங்களைவணங்கிக் கூறுகின்றுன். எ — று.

முச்சகம்—சுவர்க்கமத்தியபாதலம். (ரு)

6. நொய்யதூதுவன்பொருட்டினுலித்திறநுவற
லையகேட்கநிற்கியலுமோயிறையிவணமர்தி
மொய்யில்யான்சென்றுமற்றவன்பெருமுரண்முருக்கிக்
கையகப்படுத்துய்ப்பனுலன்னதுகாண்டி.

இ - ள். ஐய கேட்க - பிதாவே நான்சொல்லுவதைக் கேட்டருளுக,—நொய்ய தூதுவன் பொருட்டினுல் இ திறம் நுவறல் நிற்கு இயலுமோ - அற்பனுகிய ஒரு தூது வன் பொருட்டு இவ்வாறு கூறுதல் தங்களுக்குத்தகுமோ?—இறை இவண் அமர்தி - சற்றுநேரம் இங்கே இருப்பீராக,—மொய்யில் யான் சென்று - வலிமையோடும் நான் போய்,—அவன் பெருமுரண் முருக்கி - அவனது மிக்க வலிமையையடக்கி,—கை யகப்படுத்து உய்ப்பன் அன்னது காண்டி - அவனைப் பிடித்துக்கொண்டுவந்து விடுகின் றேன் அதனைப்படிச்செய்தலை நீர் பாரும். எ — று.

மற்று, ஆல் அசை. ஏகாரம் வினு. முருக்கி என்பதற்கு அழித்து எனினுமாம்.(சு)

வேறு.

7. என்னலோடுமிறப்பெதிருற்றிடா
மன்னன்மைந்தனைநோக்கிமகிழ்வுறு
வன்னதன்மையையாற்றுதிநீயெனப்
பன்னியேகும்படிபணித்தானரோ.

இ - ள். என்னலோடும் - என்று சொல்லுதலும்,—மன்னன் - அரசனாகிய சூரபன்மன்,—இறப்பு எதிர் உற்றிடா மைந்தனை நோக்கி மகிழ்வு உறு - மரணநேரவரப்பெறுகின்ற மகனாகிய வச்சிரவாகுவைப்பார்த்து மகிழ்ந்து,—அன்னதன்மையை நீ ஆற்றுதி என பன்னி - அதனை நீ செய்யக்கடவை யென்று சொல்லி,—ஏகும்படி பணித்தான் - (போருக்குச்) செல்லுமாறு அனுமதிகொடுத்தான். எ — று.

அரோ - அசை. இறப்பெதிரேயணுகப்பெறாத மன்னன் எனக்கூறுவாருமுளர். ()

8. விடைபுரிந்திடமெய்வழித்தாதைத
னடிவணங்கியகன்றுமன்கோயிலிற்
புடையிருந்தனபோர்ப்படைச்சாலையி
னிடைபுகுந்தனன்யாரும்வழுத்தவே.

இ - ள். விடை புரிந்திட மெய்வழி தாதை தன் அடிவணங்கி அகன்று - (பிதாவாகிய சூரபன்மன்) அனுமதிகொடுக்க (வச்சிரவாகு) உண்மையானபயபத்தியோடு அப்பிதாவினது பாதங்களைத்தொழுது (சபையினின்றும்) நீங்கி,—மன் கோயிலில் புடையிருந்தன போர் படைச் சாலையின் இடை யாரும் வழுத்த புகுந்தனன் - சூரபன்மனது அரண்மனைக் கொருபுறத்திலுள்ள ஆயுதசாலையில் யாவரும் துதிக்கப்போனான். எ - று.

தன் சாரியை. ஏகாரம் அசை. (அ)

9. அட்டலின்றியமர்தருசாலிகை
யிட்டுமார்பினிறுக்கிவயத்தகு
பட்டிகைக்கலன்பாலத்துறுத்தியே
புட்டிலங்குலிபூண்டுபொருக்கென.

இ — ள். அட்டல் இன்றி அமர்தரு சாலிகை மார்பின் இட்டு இறுக்கி - (வச்சிரவாகு) அழிவில்லாமலிருக்கின்ற கவசத்தை மார்பிலணிந்து இறுக்கிக் கட்டி,—வயத்தகு பட்டிகை கலன் பாலத்து உறுத்தி - வீரபட்டமென்னு மாபரணத்தை நெற்றியிலழுந்தும்படிதரித்து,—புட்டில் அங்குலி பொருக்கென பூண்டு - விரலுறைகளை விரைந்து விரல்களிற்றரித்து. எ — று. ஏகாரம் அசை. (கூ)

10. ஆணிகொண்டவயிற்கணைபெய்தபொற்
றூணிகொண்டுபின்றும்பைமிலைச்சியே
நாணிகொண்டுநலந்தருகார்முகம்
பாணிகொண்டுபடைபிறவேந்தியே.

இ - ள். ஆணி கொண்ட அயில் கணை பெய்த பொன் தூணி பின் கொண்டு-ஆணி கொண்டிருக்கப்பட்டுள்ள கூரிய அம்புகள்நிறைத்த பொன்மயமான கூட்டை முதுகிற் கட்டி,—தும்பை மிலைச்சி - தும்பைப்பூமாலையைச்சூடி,—நாணி கொண்டு நலம் தரு கார்முகம் பாணி கொண்டு - நாணியைக்கொண்டு (வெற்றியென்னும்) நன்மையைத்தருகின்ற வில்லைக் கையிலெடுத்து,—பிற படை ஏந்தி - மற்றையபடைகளையுந்தாங்கி.

ஏகாரமிரண்டும் அசை. ஆணி - ஆணியைப்போன்ற எனப்பொருள்கூறினுமமையும். ()

11. கொற்றமாரமர்க்கோலங்களுள்ளன
முற்றவேகொண்டுமூரிவில்வெஞ்சமர்
கற்றகாளைகதுமெனநோக்கியே
சுற்றுகம்மியர்க்கின்னனசொல்லுவான்.

இ - ள். மூரி வெம் வில் சமர் கற்ற காளை - வலிமைபொருந்திய கொடியவிற்போரைப்பயின்ற வாலிபனாகிய வச்சிரவாகு,—கொற்றம் ஆர் அமர் கோலங்கள் உள்ளன முற்றவே கொண்டு - வெற்றிபொருந்திய போருக்குரிய அலங்காரங்களாயுள்ளன எவையோ அவைகளெல்லாவற்றையுஞ் செய்து,—கதுமென நோக்கி - சீக்கிரம் பார்த்து,—சுற்று கம்மியர்க்கு இன்னன சொல்லுவான் - தன்னைச்சூழ்ந்துநிற்கின்ற ஏவலாளர்க்கு இவ்வாறு கூறுகின்றான். எ — று. ஏகாரமிரண்டும் அசை. (கக)

12. மிக்கநம்படைவெள்ளத்திலோர்சில
தொக்கபூசற்றொழிலினைமுற்றிய
விக்கணந்தருவீரிவணென்றலுந்
தக்கதேயெனத்தாழ்ந்தவர்போயினார்.

இ - ள். மிக்க நம் படை வெள்ளத்தில் ஓர் சில தொக்க பூசல் தொழிலினை முற்றிய - மேம்பட்ட நமது சேனைவெள்ளங்களுக்குள் ஒருசில சைனியங்களைப் பொருந்திய போர்த்தொழிலை முடிக்கும்படி,—இவண் இக்கணம் தருவீர் என்றலும் - இங்கே இப்பொழுது அழைத்துத் தருவீராக வென்று சொல்ல,—தக்கதே என தாழ்ந்து அவர் போயினார் - இப்பணி தகுதியானவிஷயமே என்று வணங்கிக்கொண்டு போனார்கள்.

ஏகாரம் தேற்றம். (கஉ)

13. ஆங்குநின்றிடுமேவலரப்பணி
தாங்கியேகத்தகுவர்தங்கோமக
னீங்கலின்றுதன்னீழலின்வந்திடும்
பாங்கர்யாரையுநோக்கிப்பகருவான்.

இ - ள். ஆங்கு நின்றிடும் ஏவலர் அப்பணி தாங்கி ஏக - அவ்விடத்துநின்ற ஏவலாளர் அவ்வனுமதியை யேற்றுக்கொண்டு போக,—தகுவர் தம் கோமகன் - அசுரர்க்கரசனாகிய சூரபன்மன் மகனான வச்சிரவாகு,—நீங்கல் இன்றி தன் நீழலின் வந்திடும் பாங்கர் யாரையும் நோக்கி பகருவான் - விட்டுநீங்காத நிழலைப்போலத் தன்னுடன் வருகின்ற தோழர்களெல்லாரையும் பார்த்துக் கூறுகின்றான். எ — று.

தம் சாரியை. உம்மை முற்று. (கங)

14. குமரவேள்விடுகோற்றொழிற்றூதனைச்
சமரில்வென்றொருதாம்பிற்றளைபுரீஇ
யிமையொடுங்குமுனெந்தைமுனுய்க்குவ
னமைதிர்போருக்கனைவிருமென்றனன்.

இ - ள். குமரவேள் விடு கோல் தொழில் தூதனை - குமாரக்கடவுள் அனுப்பிய கொலைத்தொழிலையுடைய தூதவனை,—சமரில் வென்று ஒரு தாம்பில் தளைபுரீஇ - நான் போரில் வென்று ஒருகயிற்றினாற்கட்டி,—இமை ஒடுங்குமுன் எந்தை முன் உய்க்குவன் - இமைப்பொழுது செல்லுமுன் என்பிதாவுக்கெதிரே கொண்டுவந்துவிடுவேன்,—அனைவிரும் போருக்கு அமைதிர் என்றனன் - (ஆதலால்) நீங்கள் அனைவரும் போர்க்கோலங் கொள்ளுங்கள் என்றான். எ — று.

கொல் என்பது கோலென நீட்டல்விகாரம்பெற்றது. கோற்றொழில் என்பதற்கு, பாணப்பிரயோகஞ்செய்யுந்தொழில் எனவும் பொருள் கூறுவர். (கச)

15. பாலன்மற்றிவைபன்னலுநன்கெனு
வேலுகின்றவிளைஞருமள்ளரு
மேலைவெஞ்சமர்செய்யவிரைந்துபோர்க்
கோலமெய்திக்குழீஇயினர்கொட்புற.

இ - ள். பாலன் இவை பன்னலும் நன்கு எனு - இளங்குமாரனாகியவச்சிரவாகு இவற்றைக் கூறுதலும் நல்லதென்று,—ஏலுகின்ற இளைஞரும் மள்ளரும் - கூடவருகின்ற வாலிபர்களும் வீரர்களும்,—மேலை வெம் சமர் செய்ய - முற்குறித்த போரைச் செய்யும்பொருட்டு,—விரைந்து போர்க்கோலம் எய்தி கொட்பு உற குழீஇயினர் - விரைவாகப்போர்க்கோலங்கொண்டு (வச்சிரவாகுவைச்) சூழும்படி கூடினார்கள். எ – று.

மற்று அசை. உம்மைகள் எண். (கரு)

16. தாறுகொண்டவன்றன்குறிப்பிற்செலு
நூறுநூறுநொறில்பரிமான்பெறீஇ
வீறுபண்ணமைதேரொன்றின்வெய்தென
வேறினான்மொய்ம்பிருபதுகொண்டுளான்.

இ - ள். தாறு கொண்டவன் தன் குறிப்பில் செலும் நூறு நூறு நொறில் பரிமான் பெறீஇ - சவுக்கைக் கையிற்கொண்ட சாரதியின் எண்ணப்படியே செல்லுகின்ற வேகத்தையுடைய பதினாயிரங்குதிரைகள் (பூட்டப்) பெற்று,—வீறு பண்ணமை தேர் ஒன்றின் - உயர்வாக அலங்கரிக்கப்பட்ட ஒருதேரில்,—இருபது மொய்ம்பு கொண்டுளான் வெய்தென ஏறினான் - இருபதுபுயங்களையுடைய வச்சிரவாகு சீக்கிரம் ஏறினான். எ—று.

தன் சாரியை. (கசு)

17. தந்திரத்துத்தலைவர்தமைந்தரு
மந்திரத்துமதிஞர்தமைந்தருஞ்
சுந்தரத்துத்தொடர்பினிற்சுற்றுறு
மெந்திரப்பெருந்தேர்களிலேறினார்.

இ - ள். தந்திரத்து தலைவர் தம் மைந்தரும் - சேனாதிபதிகளின் புத்திரர்களும்,—மந்திரத்து மதிஞர் தம் மைந்தரும் - புத்திசாலிகளாகிய மந்திரிமார் குமாரர்களும்,—சுந்தரத்து தொடர்பினில் சுற்றுறு - அழகுடன் தொடர்ச்சியாக (வச்சிரவாகுவின்தேர்ப் புறத்திற்) சூழ்ந்துள்ள,—எந்திரப் பெரும் தேர்களில் ஏறினார் - உருளைபூண்ட பெரிய ரதங்களில் ஏறினார்கள். எ – று.

தம் இரண்டும் சாரியை. உம்மைகள் எண். (கஎ)

18. ஆனவேலையரசன்சுதன்விடப்
போனகம்மியர்போர்வினைகூறியே
யானைமேற்கொண்டிரும்பணையெற்றலுஞ்
சேனைதம்முட்சிலதிரண்டுற்றவே.

இ - ள். ஆன வேலை அரசன் சுதன்விட போன கம்மியர் - அப்பொழுது அரசகுமாரனாகிய வச்சிரவாகு உத்தரவுகொடுத்தனுப்பப் போன ஏவலாளர்கள்,—யானைமேல் கொண்டு போர்வினை கூறி இரும்பணை எற்றலும் - யானையின்மேலேறிப் போர்த்தொ

முழுவ யறிவித்துப் பெரிய பறையை யடித்தலும்,—சேனை தம்முன் சில திரண்டு உற்ற - சேனைகளுக்குட் சில கூட்டமாகவந்து சேர்ந்தன. எ — று.

தம் சாரியை. ஏகாரம் இரண்டும் அசை. பணை - போர்முரசு. (கஅ)

19. ஒருங்குதாம்பலவோடலினன்னவை
பாரங்கொளற்கரிதாகிப்படிமகள்
புரங்கிழிந்திடுபுண்கொண்டாற்றல்போ
லிரங்குமோதைகொண்டேகுவதேர்களே.

இ - ள். ஒருங்கு பல ஓடலின் அன்னவை பாரம் கொளற்கு அரிதாகி படிமகள் - ஒருசேர அனேகமாய் ஓடுதலினால் அவைகளின் பாரத்தைச்சுமக்க வல்லமையில்லாதவளாய்ப் பூமிதேவியானவள்,—புரம கிழிந்திடு புண் கொண்டு அரற்றல் போல் - தன் சரீரங் கிழியப்படுகின்ற புண்ணினால் அழுதல்போல,—தேர்கள் இரஙகும் ஓதை கொண்டு ஏகுவ - தேர்கள் இரைகின்ற ஓசையுடனே செல்லுகின்றன. எ — று. ஏ, தாம் அசை.

20. கருவிவானங்கடலுண்டுசெல்லுறும்
வரைகளாமெனவந்துதம்மேலுறீஇ
யுருமினத்தையுகுத்தொலிகேட்டலும்
வெருவிவீழவிரைவனவேழமே.

இ - ள். கருவி வானம் கடல் உண்டு செல்லுறும் வரைகள் ஆமென வந்து - (உலகத்திற்குத்) துணைக்காரணமாயுள்ள மேகங்கள் கடனீரைபபருகி (இவைகள்) நடைமலைகளாகுமென நினைத்துவந்து,—தம்மேல் உறீஇ - தம்மீதுபடிந்து,—உருமு இனத்தை உகுத்து - இடிக்கூட்டங்களைக்கக்க,—ஒலி கேட்டலும் வெருவி வீழ வேழம் விரைவன - (அதனாலுளதாகிய)வொலியைக்கேட்டவுடன் அவைகள் பயந்து கீழேவிழும்படி யானைகள் விரைந்துசெல்லுகின்றன. எ - று.

ஏகாரம் அசை. உகுத்து எச்சத்திரிபு. ஒலிகேட்டலும் வெருவிவீழ வேழம் இரைவன எனக்கொண்டு முழக்கத்தைக் கேட்டபொழுது வெருவி விழும்படி யானைகள் பிளிற்றொலிசெய்கின்றன எனப் பொருள்கோடலுமாகும். கருவி - மின்னு முதலியவற்றின் தொகுதியெனினும் பொருந்தும். (உ0)

21. கிட்டிநாடுநயனமுங்கேடுசெய்
தொட்டலார்தமுளமுஞ்சுழன்றிட
வெட்டுமாதிரத்தெல்லையுஞ்சாரிகை
வட்டமாகிவருவனவாசியே.

இ - ள். கிட்டி நாடு நயனமும் கேடு செய்து ஒட்டலார் தம் உளமும் சுழன்றிட - உற்றுபபார்க்கின்ற கண்களையுங் கெடுத்துப் பகைவர்களுடைய மனமும் சுழலும்படி,—வாசி - குதிரைகள்,—எட்டு மாதிரத்து எல்லையும் சாரிகை வட்டமாகி வருவன - அட்டதிக்குவரையும் இடம் வலமாகச் சுற்றிவருகின்றன. எ - று.

தம் சாரியை. ஏகாரம் அசை. உம்மை முன்னையன எண்; பின்னையது முற்று. சாரிகை வட்டமாகி என்பதற்கு, சுழல்காற்றைப்போல வட்டமாகி எனினுமமையும். ()

22. ஆடல்வேல்கதையாழியலப்படை
புடைசேர்ந்தபலகையொள்வாள்சிலை
நீடுசூலநெடுமழுவாதியாக்
கூடுபல்படைகொண்டிடுகையினர்.

இ - ள். ஆடல் வேல் கதை ஆழி அலப்படை பாடு சேர்ந்த பலகை ஒள் வாள் சிலை நீடு சூலம் நெடு மழு ஆதியா கூடு பல் படை கொண்டிடு கையினர் - வெற்றிபொருந்திய வேல் தண்டு சக்கரம் கலப்பை பெருமைபொருந்திய பரிசை ஒளியமைந்த வாள் வில்லு கொடியசூலம் பெரியகோடரி முதலாகப் பொருந்திய பல ஆயுதங்களைத் தாங்கிய கைகளையுடையவர்களும். எ - று. (உஉ)

23. இடித்தசொல்லரிமையவர்போர்பல
முடித்தமொய்ம்பர்முரணியபல்படை
வடித்தகற்பினர்மால்வரையானவை
படித்தலத்திற்படர்ந்தன்னகாட்சியார்.

இ - ள். இடித்த சொல்லர் - இடிபோன்றசொல்லையுடையவர்களும்,—இமையவர் போர் பல முடித்த மொய்ம்பர் - தேவர்களோடு பல போரைச்செய்து முடித்த பலசாலிகளும்,—முரணிய பல் படை வடித்த கற்பினர் - வலிய பலபடைகளைத்தெளிந்த கல்வியையுடையவர்களும்,—மால் வரை ஆனவை படி தலத்தில் படர்ந்து அன்ன காட்சியார் - பெரியமலைகளானவை பூமியில்நடந்துசென்றாற்போன்ற தோற்றத்தையுடையவர்களும்.

வடித்த முரணிய பல்படைக் கற்பினர் என இயைத்து தெளிந்த வலிய படைக்கலக்கல்வியையுடையவர் எனப் பொருள்கோடலுமமையும். (உங)

24. விசும்பின்மாலைமிலைச்சியகுஞ்சியர்
பசும்பொன்வீரமெய்ப்பட்டிகைநெற்றியர்
நிசும்பரன்னதோர்நேரலர்சோரியி
னசும்பறாதவகன்பிலவாயினர்.

இ - ள். விசும்பின் மாலை மிலைச்சிய குஞ்சியர் - கற்பகமலர்மாலைகளைத்தரித்த குடுமியையுடையவர்களும்,—மெய் பசும் பொன் வீரபட்டிகை நெற்றியர் - நிறம்பொருந்திய பசும்பொன்னாற் செய்யப்பட்ட வீரபட்டமணிந்த நெற்றியையுடையவர்களும்,—நிசும்பர் - கொலையாளர்களும்,—அன்னது ஓர் நேரலர் சோரியின் அசும்பு அறாத அகன் பில வாயினர் - அந்தப்பகைவர்களுடைய இரத்தக்கசிவு நீங்காத அகன்ற குகைபோன்றவாயையுடையவர்களும். எ — று.

விசும்பு ஆகுபெயர். விசும்பின்மாலை - மின்மாலையெனவும் நிசும்பரன்னதோர் நேரலர் - நிசும்பரென்னும் அசுரரையொத்த நேரலரெனவும் பொருள்கூறுவர். நேரலர் - நீதியில்லாதவர், ஒப்பில்லாதவர். அசும்பு - ஊற்று. (உச)

25. தீமடங்கற்றிறலினர்தென்புலக்
கோமடங்கலின்கொள்கையர்தங்கிளை
தாமடங்கத்தறிபிளந்தார்த்தெழு
மாமடங்கறனைப்பொரும்வன்மையார்.

இ - ள். தீமடங்கல் திறலினர் - ஊழித்தீயையொத்த வலிமையையுடையவர்களும்,—தென்புலம் கோமடங்கலின் கொள்கையர் - யாமியபுரத்தரசனாகிய இயமனைப் போன்ற செயலையுடையவர்களும்,—தம் கிளை தாம் அடங்க தறி பிளந்து ஆர்த்து எழும் மா மடங்கல் தனை பொரும் வன்மையார் - தமதுசுற்றத்தவர்கள் அழியும்படி கற்றூணைப்பிளந்துகொண்டு ஆரவாரித்துத் தோன்றிய நரசிங்கத்தை ஒப்பான வலிமையையுடையவர்களும். எ — று. (உரு)

26. ஏகும்வெஞ்சமர்க்கென்றலும்பூண்பரீஇ
மாகமஞ்சவளர்ந்தெழுதோளினர்
மோகமில்லவர்மொய்ம்பினின்மேலவ
ராகும்வீரரளப்பிலரெய்தினர்.

இ - ள். வெம் சமர்க்கு ஏகும் என்றலும் - கொடியபோருக்குச் செல்லுங்கள் என்றுசொல்லுதலும்,—பூண் பரீஇ மாகம் அஞ்ச வளர்ந்து எழு தோளினர் - ஆபரணங்களை அறுத்து ஆகாயம் அஞ்சும்படி வளர்ந்தெழுகின்ற புயங்களையுடையவர்களும்,—மோகம் இல்லவர் மொய்ம்பினில் மேலவர் ஆகும் வீரர் அளப்பிலர் எய்தினர் - மயக்கமில்லாதவர்களும் வலிமையிற்சிறந்தவர்களுமாகிய அனேகவீரர்கள் வந்தார்கள். எ — று.

மோகமில்லவர் - புத்திசாலிகள் எனினுமமையும். (உசு)

27. ஐந்துநூறெனும்வெள்ளமழுங்குதேர்
தந்தியின்குழுத்தானுமனையதே
யுந்துமாக்களொராயிரவெள்ளமாம்
பந்தமிக்கபதாதியிரட்டியே.

இ - ள். ஐந்து நூறு எனும் வெள்ளம் அழுங்குதேர் - ஐந்நூறென்று சொல்லப்படுகின்ற வெள்ளக்கணக்கான அசைகின்றதேர்களும்,—அனையது தந்தியின் குழுத்தானும் அக்கணக்காகிய யானைக்கூட்டங்களும்,—உந்து மாக்கள் ஓராயிரம் வெள்ளம் ஆம் - உயர்ந்த குதிரைகள் ஓராயிரம் வெள்ளங்களுமாகும்,—பந்தம் மிக்க பதாதி இரட்டி - சிறப்பு மிகுந்த காலாட்படை இரண்டாயிரம் வெள்ளங்களாகும். எ — று. (உஎ)

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை இறந்ததுதழீஇயது.

28. இத்தொகைப்படுமீரிருதானையு
மைத்திரைக்கடல்வாரியினார்ப்புறீஇ
பத்திரட்டிபடர்புயத்தண்ணலைத்
தத்தமிற்கலந்தொன்றித்தழீஇயின.

இ - ள். இ தொகை படும் ஈர் இரு தானையும் மை திரை கடல் வாரியின் ஆர்ப்பு உறீஇ - இந்தக்கணக்கையுடையனவாகிய சதுரங்கசேனைகளும் அலைபொருந்திய கருங்கடல் வெள்ளம்போல ஆரவாரித்து,—பத்து இரட்டி படர் புயத்து அண்ணலை - அகன்ற இருபது புயங்களையுடைய வச்சிரவாகுவை,—தத்தமில் கலந்து ஒன்றி தழீஇயின - ஒன்றோடொன்று கலந்து ஒருங்குசேர்ந்து சூழ்ந்து சென்றன. எ — று. உம்மை முற்று. ()

29. துடிவலம்புரிதுந்துபிசச்சரி
கடிகொண்மொந்தைகாடிகைதண்ணுமை
யிடிகொள்பேரியிரலைகளாதியா
முடிவிலாவியமுற்றுமுழங்கிய.

இ - ள். துடி வலம்புரி துந்துபி சச்சரி கடிகொள் மொந்தை காடிகை தண்ணுமை இடிகொள் பேரி இரலைகள் ஆதியா முடிவு இலா இயம் முற்றும் முழங்கிய - உடுக்கை வலம்புரிச்சங்கு துந்துபி சச்சரி சிறந்த ஒரு கட்பறை காடிகை மத்தளம் இடியைப்போல ஓசையைக்கொண்ட பேரிகை கொம்பு முதலாகிய அளவற்ற வாத்தியங்களெல்லாம் முழங்கின. எ — று. உம்மை முற்று. (உகூ)

30. இற்றவெல்லையினீரிருதானையு
நெற்றியேகடைநீடயலிற்செல
மற்றுளார்களும்வந்திடவச்சிரப்
பொற்றடம்புயன்பொள்ளெனவேகினன்.

இ - ள். இற்ற எல்லேயில் ஈர் இருதானேயும் நெற்றி கடை நீடு அயலிற் செல் - இத்தன்மையாகிய சமயத்தில் (இரத கஜ துரக பதாதி யென்று சொல்லப்படும்) சதுரங்கசேனைகளும் முன்னும் பின்னும் பக்கத்துஞ் செல்ல,—மற்றுளார்களும் வந்திட - வேறுகவுள்ள மந்திரிகுமாரர் முதலானவர்களும் வர,—பொன் தடம் வச்சிரப்புயன் பொன்னென ஏகினன் - பொன்மயமான விசாலித்த புயங்களேயுடைய வச்சிரவாகு விரைவாகச் சென்றான். எ - று.

ஏகாரம் அசை. உம்மை முன்னேயது முற்று;பின்னேயது இறந்ததுதழீஇயவெச்சம்.

31. வல்லியக்கடுமான்பொருமானவர்
செல்லியக்கமுஞ்செல்லினேமாறுகொள்
சொல்லியக்கமுந்துண்ணெனத்தொக்கெழு
பல்லியக்கடலார்ப்பும்பரந்தவே.

இ — ள். கடு வல்லிய மான் பொரு மானவர் செல் இயக்கமும் - கொடிய பெரும்புலிபோன்ற வீரர்கள் செல்லும் ஓசையும்,—செல்லினே மாறுகொள் சொல் இயக்கமும் - இடியைப் பகைகொள்ளுகின்ற பேச்சிரைவாரமும்,—துண்ணென தொக்கு எழு பல் இயம் கடல் ஆர்ப்பும் பரந்த - விரைந்து கூட்டமாக எழுகின்ற பல வாத்தியங்களாகிய கடல்முழக்கமும் (எங்கும்) பரந்தன. எ — று.

ஏகாரம் அசை. உம்மைகள் எண். பல்லியக்கடல் உருவகம். கடல் தொகுதி.(௩௧)

32. ஊழிமால்படையொல்லெனவேயெழப்
பூழியீண்டிவிண்பொள்ளெனமூடிய
வேழமால்வரைவீழ்தருதானநீ
ராழியென்னவகன்புவிகொள்ளவே.

இ - ள். வேழ மால் வரை வீழ்தரு தானம் நீர் ஆழி என்ன அகன்புவி கொள்ள - யானேகளாகிய பெரியமலேகளினின்றும் விழுகின்ற மதநீர்கள் கடலேப்போலப் பெரிய உலகத்தை மூடிக்கொள்ளும்படி,—ஊழி மால் படை ஒல்லெனவே எழ - பழமையான பெரிய சைனியங்கள் சீக்கிரம் எழுந்து செல்லுதலால்,—பூழி ஈண்டி விண் பொள்ளென மூடிய - புழுதிகள்நெருங்கி ஆகாயத்தை விரைவில் அடைந்து மூடின எ — று.

ஏகாரங்கள் அசை. ஊழிமால்—உலகமுதல்வனுகிய சூரன் எனினுமமையும். ஊழி - பூமி. மால் சூரனுக்கு ஆகுபெயராய்வந்தது. ஒல்லென - ஒல்லென்னுமொலியோடு என்றலுமாம். மால்வரை வேழம்வீழ்தரு என இயைத்து பெரிய மலேபோன்ற யானேகளின்(கன்னம்முதலியஇடங்களினின்றும்) விழுகின்ற எனவும் பொருளுரைப்பினும் அமையும்.

33. திகந்தமெட்டுந்திருநிழலோச்சியே
யுகந்ததேர்களினெண்கொடியாடுவ
குகன்விடுத்திடுகொற்றவனுற்றல்கண்
டகன்சிரங்களசைப்பனபோன்றவே.

இ - ள். திக்கு அந்தம் எட்டும் திருநிழல் ஓச்சி உகந்த தேர்களின் ஒண் கொடி ஆடுவ - அட்டதிக்கினும் அழகிய ஒளியைப்பரப்பிக்கொண்டு உயர்ந்த தேர்களிற் கட்டப்பட்ட சிறந்த கொடிச்சீலேகள் அசைகின்றன (எப்படியெனில்)—குகன் விடுத்திடு கொற்றவன் ஆற்றல் கண்டு அகன் சிரங்கள் அசைப்பன போன்ற - கந்தஸ்வாமியனுப்பிய தலேவராகிய வீரவாகுதேவரது வலிமையைநோக்கிப் பெரிய தலேகளே யசைக்குந்தன்மையைப்போலிருந்தன. எ - று.

ஏகாரமிரண்டும் அசை. நிழல் — சாயை எனினுமாம். (௩௩)

34. ஆகுமெல்லையவுணர்மன்றேர்மிசைப்
பேய்கள்சூழ்ந்துபிணங்கிமலைந்தன
காகம்யாவுங்கழுகும்வெஞ்சேனமுங்
கூகையோடுகுழீயிரங்குற்றவே.

இ - ள். ஆகும் எல்லை அவுணர் மன் தேர் மிசை பேய்கள் சூழ்ந்து பிணங்கி மலைந்தன - அவ்வாறாகிய சமயத்தில் அசுரராஜனாகிய வச்சிரவாகுவின் தேர்மீது பைசாசங்கள் வந்து சுற்றி (ஒன்றுக்கொன்று) மாறுகொண்டு சண்டையிட்டன,—காகம் யாவும் கழுகும் வெம் சேனமும் கூகையோடு குழீஇ இரங் குற்ற - எல்லாக்காக்கைகளும் கழுகுகளும் கொடிய பருந்துகளும் கூகைகளுடனே கலந்துகத்தின. எ – று.

ஏகாரம் அசை. உம்மைகள் முற்றும் எண்ணுமாம். (ருச)

35. மடித்தவாயுடைவச்சிரமொய்ம்பினன்
பிடித்தகையிற்பெருஞ்சிலைவீழ்ந்தது
தொடுத்தவெந்நுறுதூணியுமிற்றதாற்
றுடித்தவாலிடக்கண்களுந்தோள்களும்.

இ - ள். மடித்த வாயுடை வச்சிர மொய்ம்பினன் கையில் பிடித்த பெரும் சிலை வீழ்ந்தது - மடித்திருக்கின்ற வாயையுடைய வச்சிரவாகு கைபிற்பிடித்த பெரிய வில்லு (நழுவிக்கீழே) விழுந்தது,—வெந் தொடுத்த உறு தூணியும் இற்றது - முதுகில் கட்டப் பட்டிருந்த அம்புக்கூடும் அறுந்து விழுந்தது,—இடக்கண்களும் தோள்களும் துடித்த - இடக்கண்களும் இடப்புயங்களும் துடித்தன. எ – று.

ஆல் இரண்டும் அசை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇய வெச்சமும் பின்னையன எண்ணுமாம். இவைகள் இவன் மரணத்துக்கேதுவாகியதுற்சகுனங்களெனவுணர்க.

36. அண்ணன்மைந்தனதாழியந்தேர்மிசைக்
கண்ணகன்கொடிகையறவீழ்ந்தன
விண்ணினேறுவிசும்பின்றியார்ப்பன
வெண்ணிறீக்குறியிவ்வகையுற்றவே.

இ - ள். அண்ணல் மைந்தனது ஆழி அம் தேர்மிசை கண் அகன் கொடி கையற வீழ்ந்தன - பெருமையிற்சிறந்த சூரபன்மன் மகனாகிய வச்சிரவாகுவின் உருளைபொருந்திய அழகிய தேர்மீது கட்டப்பட்ட மிகுதியான கொடிகள் பற்றுக்கோடின்றி அறுந்து விழுந்தன,—விண்ணின் விசும்பு இன்றி ஏறு ஆர்ப்பன - ஆகாயத்தில் 'மேகமில்லாமல் வெள்ளிடியிடிக்கின்றன,—இவ்வகை எண்ணில் தீ குறி உற்ற - இத்தன்மையாக அளவற்ற உற்பாதங்கள் உண்டாயின. எ – று. ஏகாரம் அசை. (ருரு)

37. உற்றகாலவையுள்ளுறக்கொள்கிலன்
செற்றமேற்கொண்டுசென்னியோர்பத்துளான்
மற்றோர்தூணியும்வார்சிலையுங்கொளாப்
பொற்றடங்கைபுறந்தனிற்சேர்த்தினன்.

இ – ள். உற்ற கால் - இத்தன்மையாகக்கெட்டசகுனங்கள் உண்டானபொழுது,— சென்னி ஓர் பத்து உளான் அவை உள் உற கொள்கிலன் - வச்சிரவாகு அவைகளைப்பற்றித் தன்மனசில் (நமக்கிவை ஆகாதனவாகிய சகுனங்களென்று சிறிதும்) நினையாதவனாய்,— செற்றம் மேல் கொண்டு - கோபத்தையே மேற்கொண்டு,—மற்று ஓர்தூணியும் வார்

சிலையும் கொளா-வேறு ஒரு அம்புக்கூட்டையும் நெடிய வில்லையும் எடுத்து, — பொன் தடம் கை புறம் தனில் சேர்த்தினன் - அழகிய விசாலித்த கையிலும் முதுகிலுந்தரித் தான். எ — று. தன் சாரியை. உம்மைகள் எண். (௩௭)

38. மொய்கொள்வச்சிரமொய்ம்பனித்தன்மையால்
வெய்யதன்படைவெள்ளமொடேகியே
செய்யவேலுடைச்சேவகனேவல்செய்
யையனின்றவடுகளமெய்தினன்.

இ - ள். மொய்கொள் வச்சிர மொய்ம்பன் இத்தன்மையால் வெய்ய தன் படை வெள்ளமொடு ஏகி - வலிமைபொருந்திய வச்சிரவாகு இத்தன்மையாகக் கொடிய தனது சேனைவெள்ளத்தோடுஞ் சென்று,—செய்ய வேலுடை சேவகன் ஏவல் செய் ஐயன் நின்ற ஆடுகளம் எய்தினன் - சிறந்த வேற்படையையுடைய வீரராகிய கந்தஸ்வாமியின் ஏவலைச்செய்கின்ற வீரவாகுதேவர் நின்ற போர்க்களத்தை அடைந்தான். எ — று.

ஏகாரம் அசை. செய்யவேலென்பதற்கு பகைவருடைய உதிரந்தோய்தலாற் சிவந்தவேலென்றும், செவ்வொளிபொருந்திய வேலென்றும் பொருள்கூறுவாருமுளர். (௩௮)

39. வண்டுலாந்தொடைவச்சிரவாகுதன்
றண்டமோடுசமர்க்களஞ்சேர்தலு
மண்டர்நாயகன்றூதுவனன்னவை
கண்டுநின்றுகழறுதன்மேயினன்.

இ - ள். வண்டு உலாம் தொடை வச்சிரவாகு தன் தண்டமோடு சமர்க்களம் சேர்தலும் - வண்டுலாவப்பெற்ற மலர்மாலையணிந்த வச்சிரவாகு தனது சேனைகளுடனே போர்க்களத்தில் வருதலும்,—அண்டர் நாயகன் தூதுவன் அன்னவை கண்டு நின்று கழறுதல் மேயினன் - வீரவாகுதேவர் அவர்களைப்பார்த்துக்கொண்டுநின்று சொல்லுவாராயினர். எ — று. (௩௯)

வேறு.

40. இந்திரஞாலவையத்திறைவனேயல்லன்மற்றை
மைந்தரிலொருவனாகும்வருபவன்வருவான்றன்னை
முந்தியதானையோடுமுரணறமுருக்கிவீட்டி
யந்திவான்புகுமுனெந்தையடிதொழப்போவனென்றான்.

இ - ள். வருபவன் - இங்கேபோருக்குவருபவன்,—இந்திர ஞால வையத்து இறைவனே யல்லன் - இந்திரஞாலமென்னும் பெயருள்ள தேரையுடையனாகிய தலைவனாஞ் சூரபன்மனல்லன்,—மற்றை மைந்தரில் ஒருவனாகும் - பின்பு அவன்புத்திரர்களில் ஒருவனேயாகும்,—வருவான் தன்னை - வருகின்ற இவனை,—முந்திய தானையோடு முரண் அற முருக்கி வீட்டி - முற்படுகின்ற சேனைகளோடு வலிமைகெடும்படி கொன்று அழித்து,—வான் அந்தி புகுமுன் எந்தை அடிதொழ போவன் என்றான் - செவ்வானத்தையுடைய மாலைப்பொழுது வருதற்குமுன்னே எம்பெருமானது திருவடிகளைவணங்கச் செல்வேனென்றார். எ — று. தன் சாரியை. ஏகாரம் தேற்றம். (௪0)

41. எறிதிரையளக்கரென்னவீண்டுறுமனிகம்யாவு
முறைமுறைசாடிவந்தமுதல்வனைமுடித்துமாலை
யுறுதன்முன்விசயமோடுமொய்யெனமீளேனென்னி
னறுமுகவையன்றூதனுவனோவடியனென்றான்.

இ - ள். திரை எறி அளக்கர் என்ன ஈண்டு உறும் அனிகம் யாவும் முறை முறை சாடி - அலைவீசுகின்ற சமுத்திரம்போல இங்கே வருகின்ற சேனைகளெல்லாவற்றையுங் கொன்று,—வந்த முதல்வனை முடித்து - (இவர்களுடன்) வந்த தலைவனையுங்கொன்று,— மாலை உறுதல் முன் விசயமோடும் ஒய்யென மீளேன் என்னின் - மாலைப்பொழுதுவரு முன்னே வெற்றியோடுந் திரும்பிச்செல்லேனாயின்,—அடியன் அறுமுக ஐயன் தூதன் ஆவனோ என்றான் - அடிமைபூண்டொழுகுந் தமியேன் அவ்வறுமுகப்பெருமானுக்குத் தூதவனாவேனோ (ஆகமாட்டேன்) என்று கூறினார். எ — று. உம்மை முற்று. ஓகாரம் எதிர்மறை. (சக)

42. எண்டிசைபுகழும்வீரனினையனவிளம்பிச்செவ்வேள்
புண்டரீகத்துப்பொற்றாள்புந்தியாலிறைஞ்சிப்போற்றி
மண்டமர்முயன்றுநேமிமறிதரவரைகள்கீற
வண்டமுந்திசையும்வானுங்குலுங்கத்தோள்கொட்டியார்த்தான்.

இ - ள். எண் திசை புகழும் வீரன் இனையன விளம்பி செவ்வேள் புண்டரீகத்து பொன் தாள் புந்தியால் இறைஞ்சி போற்றி - அட்டதிக்கிலுள்ளவர்கள் புகழப்பெற்ற வீரவாகுதேவர் இவ்வாறு கூறிச் சுப்பிரமணியப்பெருமானது செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை மனசால் தியானித்து வணங்கித் துதித்து,—மண்டு அமர் முயன்று - பெரும்போர்செய்ய முயற்சிசெய்து,—நேமி மறிதர - கடல்கள் (தம்மோசை) மடங்கவும்,— வரைகள் கீற - மலைகள் வெடிக்கவும்,—அண்டமும் திசையும் வானும் குலுங்க - அண்டமும் திக்குகளும் மேலுலகமும் நிலைகுலுங்கவும்,—தோள் கொட்டி ஆர்த்தான் - தமது புயங்களிற்றட்டியாரவாரித்தார். எ — று. அத்து சாரியை. உம்மைகள் எண். (சஉ)

43. ஆர்த்திடுமோதைகேளாவமர்குறித்தெழுதேர்மேலோர்
கார்த்திடுதந்திமேலோர்கவனமாப்புரவிமேலோர்
போர்த்திடுநிலத்தின்மேலோர்பிறங்குசீரவுணர்யாரும்
வேர்த்தனர்திரிந்துசிந்தைவெருவினர்விளம்புகின்றார்.

இ - ள். ஆர்த்திடும் ஓதை கேளா அமர் குறித்து எழுதேர் மேலோர் - (வீரவாகு தேவர்) ஆரவாரிக்கின்ற பேரோசையைக்கேட்டுப் போரை உத்தேசித்துவந்து தேரின் மேலிருப்பவர்களும்,—கார்த்திடு தந்தி மேலோர் - கருமைபொருந்திய யானையின்மேலி ருப்பவர்களும்,—கவன மா புரவி மேலோர் - வேகமாகநடக்கின்ற குதிரையின் மேலிரு ப்பவர்களும்,—போர்த்திடு நிலத்தின் மேலோர் - பூமியின்மேல் நடப்பவரும் (ஆகிய),— பிறங்குசீர் அவுணர் யாரும் - விளங்காநின்ற சிறப்பினையுடைய அசுரரனைவரும்,—வேர் த்தனர் சிந்தை திரிந்து வெருவினர் விளம்புகின்றார் - சரீரம் வேர்த்து மனம் வேறுபட்டு அச்சங்கொண்டு (இவ்வாறு) கூறுகின்றார். எ - று.

உம்மை முற்று. எண்ணும்மை விகாரத்தாற்றொக்கன. (சங)

44. வாழியவுலகம்யாவுமன்னுயிர்த்தொகையுமாய
வூழியிற்றனிநின்றார்க்குமுருத்திரனார்ப்போவன்றே
லாழிகட்கரசனார்ப்போவண்டங்கணெக்கவார்ப்போ
வேழ்கடலுடைந்தவார்ப்போவித்திறமார்ப்பதென்றார்.

இ - ள். உலகம் யாவும் மன் உயிர் தொகையும் மாய - உலகம்முழுவதும் (அவ்வுல கங்களிலுள்ள) நிலைபெற்ற உயிர்க்கூட்டங்களும் அழியும்படி,—ஊழியில் தனிநின்று ஆர் க்கும் உருத்திரன் ஆர்ப்போ - ஊழிகாலத்தில் தனியேநின்று ஆரவாரிக்கின்ற உருத்திர மூர்த்தியின் ஆரவாரமோ,—அன்றேல் - அன்றாயின்,—ஆழிகட்கு அரசன் ஆர்ப்போ - சமுத்திரங்களுக்குத் தலைவனாகிய வருணனது ஆரவாரமோ,—அண்டங்கள் நெக்க ஆர்ப்

போ - (அல்லது) அண்டங்களுடைந்த ஆரவாரமோ,—ஏழ்கடல் உடைந்த ஆர்ப்போ - (அல்லது) ஏழுகடல்களும் கட்டுவிட்டு உடைதலாலுண்டாகிய ஆரவாரமோ,—இ திறம் ஆர்ப்பது என்றார் - இவ்வாறு ஆரவாரிப்பது என்று சொன்னார்கள். எ – று.

வாழிய அசை. ஓகாரங்கள் ஐயப்பொருளின்வந்தன. உம்மை முற்று. (சச)

45. செருவலிகொண்டசீற்றச்செங்கணானார்க்குமோதை
மருமலர்த்தொடையலாகவச்சிரவாகுவென்போ
னிருபதுசெவியினூடுமிரவியம்புழைகள்புக்க
வுருமெனச்சேறலோடுமுளம்பனித்துரைக்கலுற்றான்.

இ - ள். செரு வலி கொண்ட சீற்றம் செம் கணன் ஆர்க்கும் ஓதை - போர்வலிமையைக்கொண்ட கோபத்தினாற் சிவந்த கண்களையுடைய வீரவாகுதேவர் ஆரவாரிக்கின்ற பெருந்தொனியானது,—மருமலர் தொடையல் ஆக வச்சிரவாகு என்போன் - வாசனைபொருந்திய மலர்மாலையணிந்த மார்பினையுடைய வச்சிரவாகு என்பவனது,—இருபது செவியின் ஊடும்-இருபதுகாதின் துவாரங்களிலும்,—இரவியம் புழைகள் புக்க உருமு என செல்தலோடும் - மலைமுழைஞ்சில் விழுந்த இடியைப்போலச் செல்லுதலும்,—உளம் பனித்து உரைக்கல் உற்றான் - மனம் நடுங்கி (இவ்வாறு) கூறுகின்றான்.

உம்மை முற்றுப்பொருளில்வந்தது. (சரு)

46. ஈரெழுதிறத்தவானவுலகினுளின்றுகாறிப்
பேரொலிகேட்டதின்றாற்பிறந்ததித்துழனியாதோ
தேருதிரென்றுபாங்கருழையரிற்செப்பத்திண்டேர்ச்
சாரதிவிசயனென்பான்றாழ்ந்திவைபுகலலுற்றான்.

இ - ள். ஈர் எழு திறத்தவான உலகினுள் இன்றுகாறும் இ பேர் ஒலி கேட்டது இன்று - பதினான்குவகையனவாகிய உலகங்களுக்குள் இந்நாள்வரையும் இப்பேரோசையை நான் கேட்டதில்லை,—பிறந்தது இ துழனி யாதோ - இப்போதுண்டான இப்பேரோசை என்னவோ,—தேருதிர் என்று பாங்கர் உழையரில் செப்ப - (நீங்கள்) ஆராய்ந்தறியுங்கள் என்று பக்கத்திலுள்ள ஏவல்செய்வோரிடத்திற்சொல்ல,—திண் தேர் சாரதி விசயன் என்பான் தாழ்ந்து இவை செப்பல் உற்றான் - வலிய தேரைச் செலுத்துகின்ற பாகனாகிய விசயன் என்பவன் வணங்கி இவ்வாறு சொல்லுகின்றான். எ – று.

ஆல் அசை. ஓகாரம் ஐயம். (சசு)

47. தெற்றெனவுணர்திமான்றேர்செலுத்தியவலவனென்றே
மற்றெனதுரையையெள்ளல்வல்லைமேற்காண்டியெந்தை
யற்றமில்படையினோடுமமர்செயவருதனாடி
யொற்றெனநின்றோன்போர்வேட்டார்த்திடுமொலியீதென்றான்.

இ - ள். தெற்றென உணர்தி - தெளிவாக அறிந்து கொள்ளும்,—மான் தேர்செலுத்திய வலவன் என்றே எனது உரையை எள்ளல் - (இவன்)குதிரைபூண்டதேரைச்செலுத்துகின்ற பாகனென்று என் வசனத்தை இகழ்ந்து விடாதேயும்;—வல்லை மேல்காண்டி - (நான் சொல்வதே உண்மை யென்பதைப்) பின் விரைவாக அறிவீர்,— எந்தை அற்றமில் படையின் ஓடும் அமர்செய வருதல் நாடி - நீர் அளவற்ற சேனைகளோடும் போர் செய்ய வருதலை அறிந்து,—ஒற்றென நின்றோன் போர் வேட்டு ஆர்த்திடும் ஒலி ஈது என்றான் - இங்கே தூதாகவந்து நின்றவன் போரைவிரும்பி ஆரவாரிக்கின்ற அட்டகாசமே இந்த ஓசையென்றான். எ – று.

மற்று, ஏ அசை. எந்தை அண்மைவிளி. அட்டகாசம் — நகையோடுகூடியபெருந் தொனி. (௪௭)

48. தூதுவனார்ப்பிதென்றுசொல்லுமுனுருத்துக்கண்கண்
மீதெரிபொங்கநக்குவெய்துயிர்த்தூரப்பியான்போ
யீதொருகணத்தினன்னனிகன்முரணழித்துப்பற்றித்
தாதைமுனுய்ப்பன்காண்டிசரதமித்தன்மையென்றான்.

இ - ள். ஈது தூதுவன் ஆர்ப்பு என்று சொல்லு முன் - (விசயனாகியபாகன்) இத் தொனி தூதுவனுடைய ஆரவாரம் என்று சொல்லி முடிக்குமுன்,—கண்கள் மீது எரி பொங்க உருத்து - (வச்சிரவாகுவானவன்) கண்களிலிருந்து தீப்பொறி பறக்கக் கோபங் கொண்டு,—நக்கு - சிரித்து,—வெய்துயிர்த்து - பெருமூச்சுவிட்டு,—உரப்பி - அதட்டி,— யான் போய் ஈது ஒரு கணத்தின் அன்னான் இகல் முரண் அழித்து பற்றி - (விசயனே) நான் சென்று இந்த ஒருகணப்பொழுதில் அவனது போர்வலியை அடக்கிப் பிடித்துக் கொண்டு போய்,—தாதை முன் உய்ப்பன் - என்பிதாவுக்கு முன்னே விடுவேன்,— இ தன்மை சரதம் என்றான் - இவ்விதம் (செய்தல்) நிச்சயம் என்று கூறினான். எ — று.

காண்டி முன்னிலையசை. (௪அ)

49. என்றிவையுரைத்துப்போதுமெல்லையின்முன்னமாகச்
சென்றிடுமவுணவீரர்சேனையைவகுத்துச்சீறித்
தன்றுணைத்தாளுந்தோளுந்தடக்கையுமனிகமாக
நின்றதோர்வீரன்றன்னைநேமியிற்சுற்றியார்த்தார்.

இ - ள். என்று இவை உரைத்து போதும் எல்லையில் - என்று இந்தவசனங்களை (வச்சிரவாகு) சொல்லிக்கொண்டு செல்லும்போது,—முன்னம் ஆக சென்றிடும் அவுண வீரர் - முன்னே செல்லாநின்ற அவுணவீரர்கள்,—சேனையை வகுத்து - சேனைகளை வகைப்படுத்தி,—சீறி - கோபங்கொண்டு,—தன் துணை தாளும் தோளும் தடம் கையும் அனிகம் ஆக நின்றது ஓர் வீரன் தன்னை - (அவன் சேனைகளையழித்தற்கு) தமது இர ண்டுகால்களையும் இரண்டுபுயங்களையும் பெரியகைகளையும் சேனைகளாகக்கொண்டு நின்ற வீரவாகுதேவரை,—நேமியில் சுற்றி ஆர்த்தார் - கடல்சூழ்ந்தாற்போலச் சூழ்ந்து ஆரவா ரித்தார். எ — று. ஓர் அசை. தன் சாரியை. உம்மைகள் எண். (௪௯)

50. கைதனிலிருந்தசெம்பொற்கார்முகங்குனித்துவெங்கோ
லெய்தனர்முசலநாஞ்சிலெறிந்தனர்தண்டஞ்சூலம்
பெய்தனர்கணிச்சிவிட்டார்பிண்டிபாலங்கடூர்த்தார்
நெய்தவழயில்வேறொட்டார்நேமிகளுருட்டுகின்றார்.

இ - ள். கைதனில் இருந்த செம் பொன் கார்முகம் குனித்து - (அங்ஙனம் வீரவா குதேவரைச் சூழ்ந்து ஆரவாரித்த அசுரவீரர்களிற் சிலர்) கையிலிருந்த செம்பொன்மய மான வில்லை வளைத்து,—வெம் கோல் எய்தனர் - கொடிய அம்புகளைவிட்டார்கள்,— முசலம் நாஞ்சில் எறிந்தனர் - (சிலர்) இருப்புலக்கைகளையும் கலப்பைகளையும் எறிந்தார் கள்,—தண்டம் சூலம் பெய்தனர் - (சிலர்) தண்டங்களையும் சூலங்களையும் விட்டார் கள்,—கணிச்சிவிட்டார் - (சிலர்) மழுக்களைவிட்டார்கள்,—பிண்டி பாலங்கள் தூர்த் தார் - (சிலர்) பிண்டிபாலங்களையெறிந்தார்கள்,—நெய் தவழ் அயில் வேல் தொட்டார் - (சிலர்நச்சு) நெய்பூசப்பட்ட கூரியவேற்படைகளை விட்டார்கள்,—நேமிகள் உருட்டுகின் றார் - (சிலர்) சக்கரங்களைவிட்டார்கள். எ — று.

தன் சாரியை. கணிச்சி - கோடரிக்கும்பெயர். (௫0)

வேறு.

51. தஞ்செனக்கொடுமைசெய்தானவப்படைஞர்கள்
வெஞ்சினத்தன்மையால்விடுபடைக்கலமெலாங்
கஞ்சனைச்சிறைசெயுங்காரணன்றூதுவன்
செஞ்சுடர்ப்படிவமேற்செவ்வண்வந்துற்றவே.

இ - ள். தஞ்சு என கொடுமை செய் தானவர் படைஞர்கள் - (தமக்குத்) துணையென்று கொடியகாரியங்களைச்செய்கின்ற அசுரசைனியத்தோர்,—வெம் சினத் தன்மையால் விடுபடைக்கலம் எலாம் - மிகுந்த கோபத்தினால் விட்ட ஆயுதங்களெல்லாம்,—கஞ்சனை சிறை செயும் காரணன் தூதுவன் - பிரமதேவரைச்சிறையில் வைத்தஉலகத்திற்குநிமித்த காரணராகிய குமாரஸ்வாமியின் தூதுவரான வீரவாகுதேவருடைய,—செம் சுடர் படிவம் மேல் செவ்வண் வந்து உற்ற - செவ்வொளிபொருந்திய சரீரத்தில் நேரேவந்து பட்டன. எ - று.

ஏகாரம் அசை. தஞ்சம் என்பது தஞ்சு எனக்கடைகுறைந்து நின்றது. (ருக)

52. துய்யன்மேல்வெம்படைத்தொகுதிவந்தடைதலு
மெய்யெலாமுற்றதான்மிக்கசோரிப்புனன்
மையறீர்காலையின்வந்தெழும்பரிதிபாற்
பையவேசெய்யதண்கதிர்வரும்பான்மைபோல்.

இ - ள். மையல் தீர் காலையின் வந்து எழும் பரிதிபால் பைய செய்ய தண் கதிர்வரும் பான்மைபோல் - (உயிர்கள்நித்திரை) மயக்கந் தெளிந்து எழுதற்கேதுவாகிய உதயகாலத்தில் வந்துதிக்கின்ற சூரியனிடத்தில் மெல்லெனவாகச் சிவந்த குளிர்ச்சியாகிய கிரணங்கள் வருகின்ற தன்மையைப்போல,—துய்யன் மேல் வெம்படை தொகுதி வந்தடைதலும் - பரிசுத்தராகிய வீரவாகுதேவரிடத்தில் கொடியபடைக்கலக்கூட்டங்கள் வந்து படுதலும்,—மிக்க சோரி புனல் மெய் எலாம் உற்றது - மிகுந்த ரத்தவெள்ளம் அவரது மேனிமுழுவதினின்றும் ஒழுகியது. எ — று.

ஆல், ஏ அசை. உதயகாலத்தில் சூரியகிரணஞ்சூடின்மையால் 'தண்கதிர்'என்றார்

53. ஆனதோர்காலையெம்மையன்வெஞ்சினமுறா
மானினம்பலபலமருவியேசெறிவுழி
மேனிவந்தேகியோர்வேங்கைபாய்ந்தடுதல்போற்
றானவப்படையினைத்தாக்குதன்மேயினான்.

இ - ள். ஆனது ஓர் காலையில் ஐயன் வெம் சினம் உறா - இத்தன்மையாகிய சமயத்தில் வீரவாகுதேவர் பெருங்கோபங்கொண்டு,—பலபல மான் இனம் மருவி செறிவுழி - அனேகமான்கூட்டங்கள் பொருந்தி நெருங்கியிருக்குமிடத்தில்,—மேல் நிவந்து ஏகி ஓர் வேங்கை பாய்ந்து அடுதல் போல் - மேலாக எழுந்துசென்று ஒருபுலியானது பாய்ந்து (அவைகளையெல்லாங்) கொல்லுவதுபோல,—தானவர் படையினை தாக்குதல் மேயினான் - அசுரசேனைகளைக் கொல்லத்தொடங்கினார். எ — று.

ஏகாரம் அசை. நிவந்து என்பதற்கு உயர்ந்து எனினும் அமையும். (ருங)

54. ஆயிரமாயிரமவுதிசேரவுணர்தஞ்
சேயதண்குஞ்சியைச்செங்கையாற்பற்றியே
பாயிருந்தரையினும்பாற்படுகிரியினு
மேயெனுமளவைமுன்னெற்றியேயெறியுமால்.

இ - ள். ஆயிரம் ஆயிரம் அவதி சேர் அவுணர்தம் சேய தண் குஞ்சியை செம் கையால் பற்றி - (வீரவாகுதேவர்) ஆயிரமாயிரக்கணக்கான அசுரர்களுடைய சிவந்த குளிர்மையாகிய குடுமிகளை செவ்வியகைகளாற் பிடித்து,—பாயிரும் தரையினும் பால் படு கிரியினும் ஏ எனும் அளவை முன் எற்றி எறியும் - பரந்த பெரிய பூமியினும் பக்கத்திலுள்ள மலைகளிலும் ஒருகணப்பொழுதில் அடித்து எறிவார். எ — று.

ஏகாரமிரண்டும் ஆலும் அசை. தம் சாரியை. உம்மைகள் எண். சுகந்ததைலந்தடவிமுடிக்கப்பெற்றமயிராதலால் 'தண்குஞ்சி' யென்றார். (ருச)

55. எய்யும்வெம்படைகளுமெறியும்வெம்படைகளுங்
கையினிற்பற்றியேகனலெழப்பிசைதரு
மொய்யெனப்பதைபதைத்தோலமிட்டுயிருகச்
செய்யபொற்றாள்களாற்சிலவரைத்தேய்த்திடும்.

இ - ள். எய்யும் வெம் படைகளும் எறியும் வெம்படைகளும் கையினில் பற்றி கனல் எழ பிசைதரும் - எய்யப்படுகின்ற கொடிய ஆயுதங்களையும் எறியப்படுகின்ற கொடிய ஆயுதங்களையும் தமது கைகளாற் பிடித்துத் தீப்பறக்கப் பிசைவார்,—சிலவரை ஒய்யென பதைபதைத்து ஓலம் இட்டு உயிர் உக செய்ய பொன் தாள்களால் தேய்த்திடும் - சிலவசுரரை விரைவாகக் குளறிக்கொண்டு பிராணனைவிடும்படி செம்பொன்மயமானபாதங்களால் நிலத்திலே அரைப்பார். எ — று.

ஏ அசை. உம்மைகள் எண். ஓலம் - அபயமிட்டழைத்தல். (ருரு)

56. மத்தமால்கரிகளும்வாம்பரித்தொகுதியுஞ்
சித்திரந்திகழ்மணித்தேர்களுமவுணர்தங்
கொத்தொடேவீழ்தரக்கோலமாலடிதனக்
கொத்ததன்றாள்களாலுதைபுரிந்துலவுறும்.

இ - ள். மத்தம் மால் கரிகளும் வாம்பரி தொகுதியும் சித்திரம் திகழ் மணி தேர்களும் அவுணர்தம் கொத்தொடு வீழ்தர - மதம்பொருந்திய பெரியயானைகளும் தாவுகின்ற குதிரைக்கூட்டங்களும் அழகுவிளங்குகின்ற மணிகள் அழுத்தப்பட்டதேர்களும் அவுணகூட்டங்களுடன் கீழே விழும்படி,—கோலம் மால் அடி தனக்கு ஒத்ததன் தாள்களால் உதைபுரிந்து உலவுறும் - பெரியவடிவத்தையுடைய விட்டுணுவின்பாதங்களுக்கு ஒத்த தமது பாதங்களால் உதைத்துத்தள்ளி உலவுவார். எ — று.

ஏ அசை. தம், தன் சாரியை. உம்மைகள் எண். சித்திரம் திகழ் மணித்தேர் - சித்திரங்கள் விளங்குகின்ற மணிகள்கட்டப்பட்டிருக்கின்ற தேர் எனினுமமையும். (ருசு)

57. கிடைத்திடுஞ்சிலவரைக்கீண்டனனீண்டமெய்
துடித்திடக்கழல்களாற்றுகைத்தனன்சிலவரை
யடித்தனன்சிலவரையரைத்தனன்சிலவரைப்
புடைத்தனன்சிலவரைப்புதுமரத்தண்டினால்.

இ - ள். கிடைத்திடும் சிலவரை கீண்டனன் - தமக்கெதிரில்வந்த சிலரைப்பிளந்தார்,—சிலவரை நீண்ட மெய் துடித்திட கழல்களால் துகைத்தனன் - சிலரை நெடிய சரீரமானது துடிக்கும்படி தமது கால்களால் உழக்கினார்,—சிலவரை அடித்தனன் - சிலரை அடித்தார்,—சிலவரை அரைத்தனன் - சிலரை அரைத்தார்,—சிலவரை புதுமரத் தண்டினால் புடைத்தனன் - சிலரை புதியமரத்தண்டினால் அடித்தார். எ — று.

கிடைத்திடும் என்பதற்கு நெருங்கிவந்த எனினுமமையும். (ருஎ)

58. மத்தவெங்கரிபரிவயவர்தோராயின
பத்துநூறொருதலைப்படநெடும்பாணியாற்
குத்திடுஞ்சிகரமேற்கோளரிபாய்ந்தெனத்
தத்தியேதிரிதருந்தலைமலைக்குலமிசை.

இ - ள். மத்த வெம் கரி பரி வயவர் தேர் ஆயின - மதயானைகளும் குதிரைகளும் வீரர்களும் தேர்களும் ஆகிய சதுரங்கசேனைகள்,—ஒருதலை பத்து நூறுபட - ஒவ்வொருமுறையிலும் ஆயிரக்கணக்காக இறக்கும்படி,—நெடும் பாணியால் குத்திடும் - நெடிய கைகளாற்குத்துவார்,—சிகரம் மேல் கோளரி பாய்ந்து என - மலைச்சிகரங்களிற் சிங்கங் குதித்தாற்போல,—தலை மலை குலமிசை தத்தி திரிதரும் - தலைகளாகிய மலைக்குவியல் மேல் தத்தியுலாவுவார். எ — று. ஏ அசை. தத்தல் - பாய்தல். (ருஅ)

59. தேரெலாமிற்றனதிண்டிறற்கவனமாப்
பேரெலாமிற்றனபிளிறுமால்கரிகளின்
றாரெலாமிற்றனதானவத்தலைவர்செய்
போரெலாமிற்றனபுகழெலாமிற்றதே.

இ - ள். தேர் எலாம் இற்றன - தேர்களெல்லாம் அழிந்தன,—திண் திறல் கவனம் மா பேர் எலாம் இற்றன - மிக்க வலிமைபொருந்திய வேகத்தையுடைய குதிரைகளெனப்படும் பேரெல்லாம் போயின,—பிளிறு மால் கரிகளின் தார் எலாம் இற்றன - பிளிறுகின்ற மதமயக்கம்பொருந்தியயானைகளின் அணிவகுப்புக்களெல்லாம் அழிந்தன,—தானவர் தலைவர் செய் போர் எலாம் இற்றன - அசுரத்தலைவர் செய்த போரெல்லாம் ஒழிந்தன,—புகழ் எலாம் இற்றது - புகழ்முழும் அழிந்தது. எ — று.

ஏ அசை. மாப்பேரெலாம் என்பதற்குக் குதிரைகளின்மேலிருந்த சனங்கள் எனவும், தாரென்பதற்குக் கிண்கிணிமாலையெனவும் பொருள் கூறுவாருமுளர். (ருகூ)

60. ஆங்கதோர்பொழுதினிலவுணருக்கிறைமகன்
பாங்கராய்வந்திடும்பல்பெருங்குமாரு
மோங்குநாற்படையொடுமொருவனைச்சுற்றியே
தாங்குபல்படையினாற்சமர்முயன்றாற்றினார்.

இ - ள். ஆங்கு அது பொழுதினில் அவுணருக்கு இறை மகன் பாங்கராய் வந்திடும் பல் பெரும் குமாரரும் - அவ்விடத்து அச்சமயத்தில் சூரபன்மன்மகனாகிய வச்சிரவாகுவுக்குத் தோழர்களாய் வந்த பெருமைபொருந்திய அனேகம் வாலிபர்களும்,—ஓங்கு நால் படையொடும் ஒருவனை சுற்றி தாங்கு பல் படையினால் முயன்று சமர் ஆற்றினார் - மிக்க சதுரங்கசேனைகளுடன் ஒருவராகிய வீரவாகுதேவரைச்சூழ்ந்து வைத்திருக்கின்ற பலபடைகளால் முயற்சிசெய்து போர் செய்தார்கள். எ — று.

ஏ, ஓர் அசை. உம்மை முற்று. பாங்கர் - பக்கமெனினும் அமையும். (சுo)

வே று.

61. அன்னகாலையில்வீரவாகுப்பெயரறிஞன்
றன்னதோர்காத்திருந்திடுபெழுமாத்தண்டான்
முன்னர்வந்துசூழ்மைந்தர்கண்முரட்படையோடுஞ்
சின்னமாகியேவிளிவுறப்புடைத்தனன்றிரிந்தான்.

இ - ள். அன்ன காலையின் வீரவாகு பெயர் அறிஞன் - அப்பொழுது வீரவாகு என்னும் பெயரையுடைய அறிவிற்சிறந்தவர்,—தன்னது ஓர் காத்து இருந்திடு பழுமாத்

தண்டால் - தமது ஒருகையிலிருந்த முதிர்ந்த மரத்தண்டினால்,—முன்னர் வந்து சூழ் மைந்தர்கள் முரண் படையோடும் சின்னம் ஆகியே விளிவு உற புடைத்தனன் திரிந்தான் - தம்மெதிரேவந்து சூழ்ந்துநின்று போர்செய்கின்ற வாலிபவீரர்கள் வலியசேனையோடும் சேதப்பட்டு அழியும்படி அடித்துக்கொன்று உலாவினார். ஏகாரம் அசை. (கூக)

62. செய்யமத்தகமிற்றனவிற்றனசெழுந்தாள்
கைகளிற்றனமருப்பிணையிற்றனகரிகள்
வெய்யகாலுடனெருத்தமுமிற்றனமிலைச்சுங்
கொய்யுளைத்தலையிற்றனகுரகதக்குழுவே.

இ - ள். கரிகள் செய்ய மத்தகம் இற்றன - (இவ்வாறு வீரவாகுதேவர் அடித்துக் கொன்று திரியும் பொழுது) யானைகளின் சிறந்தமத்தகம் உடைந்தன,—செழும் தாள் இற்றன - அழகியகால்கள் அழிந்தன,—கைகள் இற்றன - கைகள் அழிந்தன,—மருப்பு இணை இற்றன - இரண்டுகொம்புகளும் அழிந்தன,—குரகதம் குழு வெய்ய காலுடன் எருத்தமும் இற்றன - கூட்டமான குதிரைகளின் வேகமாக நடக்கின்ற கால்களுடன் பிடரியும் அழிந்தன,—மிலைச்சும் கொய் உளை தலை இற்றன - அணிந்த கொய்யப்பட்ட பிடர்மயிரையுடைய தலைகளும் அழிந்தன. எ — று.

ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். செழுந்தாள் - கொழுப்புள்ள தாள் எனினும் அமையும். மிலைச்சும் என்பதற்கு அலங்காரமாகவாரிவிடப்பட்ட எனப் பொருள்கூறுவாருமுளர். (கூஉ)

63. தட்டழிந்தனபாரகமழிந்தனசகடு
கெட்டழிந்தனகேதனமழிந்தனகிளர்ந்த
மொட்டழிந்தனபாகினமழிந்தனமுரண்மாக்
கட்டழிந்தனவொழிந்தனகனைகுரற்பஃறேர்.

இ - ள். கனை குரல் பல் தேர் - மிக்க ஓசையையுடைய பலதேர்களின்,—தட்டு அழிந்தன - நடுத்தட்டழிந்தன,—பாரகம் அழிந்தன - பரப்புக்களழிந்தன,—சகடு கெட்டு அழிந்தன - உருளைகள் சேதப்பட்டு அழிந்தன,—கேதனம் அழிந்தன - கொடிகள் அழிந்தன,—கிளர்ந்த மொட்டு அழிந்தன - உயர்ந்தகூம்புகள் அழிந்தன,—பாகு இனம் அழிந்தன - சாரதிக்கூட்டங்களழிந்தன,—முரண் மா கட்டழிந்தன ஒழிந்தன - வலிமை பொருந்திய குதிரைச்சேனைகள் அழிந்து ஒழிந்தன. எ — று. (கூங)

64. கால்களுற்றிடும்வெஞ்சிலையிற்றனகடிய
கோல்களிற்றனபரிதிகளிற்றனகொட்பார்
தோல்களிற்றனநாந்தகமிற்றனதூண்டும்
வேல்களிற்றனநாஞ்சில்களிற்றனவிரைவில்.

இ - ள். விரைவில் - சீக்கிரத்தில்,—கால்கள் உற்றிடு வெம் சிலை இற்றன - நுனி பொருந்திய கொடிய விற்கள் முரிந்தன,—கடிய கோல்கள் இற்றன - கூர்மையுடைய அம்புகள் அழிந்தன,—பரிதிகள் இற்றன - சக்கரங்கள் அழிந்தன,—கொட்பார் தோல்கள் இற்றன - சுழலாநின்ற பரிசைகள் அழிந்தன,—நாந்தகம் இற்றன - வாள்கள் ஒடிந்தன,—தூண்டும் வேல்கள் இற்றன - விடப்படுகின்ற வேலாயுதங்கள் அழிந்தன,—நாஞ்சில்கள் இற்றன - கலப்பைப்படைகள் அழிந்தன. எ — று.

கால், குதை, முனை, நுனி என்பன ஒருபொருட்கிளவி. (கூச)

65. நெரிந்தசென்னிகணெரிந்தனமார்பகநெடிது
சரிந்தவெங்குடர்சரிந்தனவிழுக்குடைத்தசைகள்
சொரிந்தமூளைகள்சொரிந்தனவிரிந்தெழுசோரி
திரிந்தகூளிகடிரிந்துமாய்வுற்றனசேனை.

இ - ள். சென்னிகள் நெரிந்த - தலைகள் நெரிந்தன,—மார்பகம் நெரிந்தன - மார்புகள் நெரிந்தன,—நெடிது வெம் குடர் சரிந்த - மிகவும் வெவ்விய குடர்கள் சரிந்தன,—விழுக்குடை தசைகள் சரிந்தன - நிணத்தையுடைய தசைகள் சரிந்தன,—மூளைகள் சொரிந்த - மூளைகள் சிதறின,—விரிந்தெழு சோரி சொரிந்தன - பரந்துவருகின்ற இரத்தவெள்ளம் சொரிந்தன,—கூளிகள் திரிந்த - பேய்கள் உலாவின,—சேனை திரிந்து மாய்வுற்றன - சைனியங்கள் (இவ்விதமாகக்) கெட்டழிந்தன. எ — று.

விழுக்கு — நிணம்; அது கொழுப்பு. (கூரு)

66. கரந்துணிந்தனர்புயங்களுந்துணிந்தனர்காமர்
சிரந்துணிந்தனர்நாசிகடுணிந்தனர்செழும்பூ
ணுரந்துணிந்தனர்கழலடிதுணிந்தனருளதொல்
வரந்துணிந்தனர்வன்மையுந்துணிந்தனர்மைந்தர்.

இ - ள். மைந்தர் - வாலிபர்களாகிய வீரர்கள்,—கரம் துணிந்தனர் - கைகள் முரியப்பெற்றார்கள்,—புயங்களும் துணிந்தனர் - புயங்களும் முரியப்பெற்றார்கள்,—காமர் சிரந்துணிந்தனர் - அழகிய தலைகளிழந்தார்கள்,—நாசிகள் துணிந்தனர் - மூக்குகள் இழந்தார்கள்,—செழும் பூண் உரம் துணிந்தனர் - அழகிய ஆபரணமணிந்த மார்புபிளந்தார்கள்,—கழல் அடி துணிந்தனர் - வீரக்கழலணிந்த கால்களிழந்தார்கள்,—உள தொல்வரம் துணிந்தனர் - உள்ள பழைய மேன்மைகளும் இழந்தார்கள்,—வன்மையும் துணிந்தனர் - வலிமையும் இழந்தார்கள். எ — று.

உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். துணிதல் என்பது வெட்டுதல் அறுத்தல்களுக்குப்பெயராயினும் வாண் முதலிய படைகளாலவ்வாறு செய்யாது மரத்தண்டாலடிக்க முரிதலின் இவ்வாறு பொருளுரைத்தாம் எனவுணர்க. (கூகூ)

67. வாக்கினாற்சிலர்தம்முயிருண்டிடும்வன்கைத்
தாக்கினாற்சிலர்தம்முயிருண்டிடும்சமர்செய்
யூக்கினாற்சிலர்தம்முயிருண்டிடுமுலம்பு
நோக்கினாற்சிலர்தம்முயிருண்டிடுநொய்தின்.

இ - ள். வாக்கினால் சிலர் தம் உயிர் உண்டிடும் - (வீரவாகுதேவர்) பேசும் பேச்சினால் சிலருடைய உயிரைப்போக்குவார்,—வன்கை தாக்கினால் சிலர் தம் உயிர் உண்டிடும் - வலியகைக்குத்தினாலே சிலருடைய உயிரைப் போக்குவார்,—சமர் செய் ஊக்கினால் சிலர் தம் உயிர் உண்டிடும் - போர்செய்கின்ற உற்சாகத்தால் சிலருடைய உயிரை நீக்குவார்,—உலம்பும் நோக்கினாற் சிலர் தம் உயிர் நொய்தின் உண்டிடும் - அச்சத்தை விளைவிக்கின்ற பார்வையினால் சிலருடைய உயிரை விரைவில் நீக்குவார். எ — று.

தம் நான்கும் சாரியை. உண்ணல் இலக்கணை. (கூஎ)

68. அங்கணோர்சிலவவுணரையாடல்வெம்பரியை
வெங்கண்யானையையிரதத்தைவாரினன்விரைவின்
மங்குல்வானினுந்தரையினுங்கடலினும்வரைக
ளெங்குமாகியேவீழ்தரவீரனார்த்தெறிந்தான்.

இ - ள். வீரன் ஆர்த்து - வீரவாகுதேவர் வீராவேசத்தால் கர்ச்சனைசெய்து,—அங்கண் ஓர் சில அவுணரை ஆடல் வெம்பரியை வெம்கண் யானையை இரதத்தை விரைவில் வாரினன் - போர்க்களத்தில் ஒரு சில அசுரரையும் போர் செய்கின்ற வேகம்பொருந்திய குதிரைகளையும் தறுகண்மையுடைய யானைகளையும் தேர்களையும் விரைவாக வாரி எடுத்து,—மங்குல் வானினும் தரையினும் கடலினும் வரைகள் எங்குமாகியே வீழ்தர எறிந்தான் - மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாயத்தினும் பூமியினும் சமுத்திரத்தினும் மலைகளெவ்விடங்களினுமாக விழும்படி எறிந்தார். எ — று.

ஏ அசை. உம்மைகள் எண். தறுகண் - அஞ்சாமை. ஆடல் - வெற்றியெனினுமமையும். (சுஅ)

69. அன்புலப்புறுகொடுந்தொழிலவுணர்களமரும்
வன்புலத்துயிர்கொளவருமறலிதன்றூதர்
துன்புமச்சமுமணங்குடனகன்றுதற்றுதிப்பத்
தென்புலத்தவன்முன்னுறவீசினன்சிலரை.

இ - ள் அன்பு உலப்புறு கொடும் தொழில் அவுணர்கள் அமரும் வன்புலத்து உயிர் கொள வரு மறலிதன் தூதர் - அன்பில்லாத கொடிய தொழிலையுடைய அசுரர்கள் நிற்கின்ற போர்க்களத்தில் (அவர்களுடைய) சீவனை எடுக்க வருகின்ற யமதூதர்கள்,—துன்பும் அச்சமும் அணங்குடன் அகன்று தன் துதிப்ப - துன்பமும் பயங்கரமும் தேக வருத்தமும் நீங்கித் தம்மைத்துதிக்கும்படி,—சிலரை தென்புலத்தவன் முன் உற வீசினன் - சிலவசுரரையமனுக்கெதிரே போகும்படி அள்ளி எறிந்தார். எ — று.

தன் சாரியை. உம்மைகள் எண். வன்புலம் - மகேந்திரமெனவுங்கூறுவர். (சுகூ)

70. ஒருதலைப்படுங்கேளிரைத்துன்னுவானுய்ப்பக்
கருதினன்கொலோசிற்சிலவவுணர்தங்கணத்தை
நிருதிமாநகர்புகுந்திடவீசினனிகரில்
சுருதிநாயகனேவலாற்றியதனித்தூதன்.

இ - ள். நிகர் இல் சுருதி நாயகன் ஏவலாற்றிய தனி தூதன் - ஒப்பில்லாத வேத முதல்வரான கந்தஸ்வாமியினது ஏவலைச்செய்து தனிநின்ற வீரவாகுதேவர்,—ஒருதலைப்படும் கேளிரை துன்னுவான் உய்ப்ப கருதினன் கொலோ - ஒருபகுதியாகிய இனத்தாரைச்சேரும்படி விட நினைத்தாரோ,—சிலசில அவுணர்தம் கணத்தை நிருதிமா நகர் புகுந்திட வீசினன் - சிலசில அசுரகூட்டங்களை நிருதியின்பெரிய நகரத்திற் சென்று விழும்படி அள்ளி யெறிந்தார். எ — று.

தம் சாரியை. ஓகாரம் அசை. கொல் ஐயம். (எ௦)

71. நேர்ந்துபோர்புரிந்துயிர்தனைவிடாததந்நிலைமை
யோர்ந்துவிண்ணவர்மானங்கள்விடுத்திடாதுயர்வான்
சார்ந்தஞாயிறுபிளந்திடாதாடலின்றன்மை
சேர்ந்துளார்பெறுந்துறக்கமேல்வீசினன்சிலரை.

இ - ள். நேர்ந்து போர்புரிந்து உயிர்தனை விடாத தம் நிலைமை ஓர்ந்து - எதிர்த்துப் போர்செய்து உயிரைவிடாத தமது தன்மையை அறிந்து,—விண்ணவர் மானங்கள் விடுத்திடாது - தேவர்கள் விமானங்களை யனுப்பாமலும்,—உயர் வான் சார்ந்து ஞாயிறு பிளந்திடாது - உயர்ந்த ஆகாயத்தில் வருகின்ற சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு

செல்லாமலும்,—ஆடலின் தன்மை சேர்ந்துளார் பெறும் துறக்கமேல் சிலரை வீசினன்-பகைவர்களுக்குப்பின் வாங்காதுநின்று போர்செய்து இறந்த சுத்தவீரர்கள் பெறுகின்ற வீரசுவர்க்கத்தில் சிலவசுரரையள்ளியெறிந்தார். எ — று.

எனவே இலகுவாய்ச் சேரும்படி எறிந்தார் என்பது கருத்து. பகைவர்களுக்குப் புறங்கொடாது எதிர்த்து நின்று யுத்தஞ்செய்து இறந்த சுத்தவீரர்களுக்கு விமானம் வருதலும், அவர்கள் சூரியமண்டலத்தைக் கிழித்துக்கொண்டு சென்று வீரசுவர்க்கமடைதலும் உண்மையாதலின் இங்ஙனங்கூறினர். (எக)

72. எண்டிசைப்புறந்தாங்கியேபெயர்கிலாதிரக்கங்
கொண்டவெங்கரிக்கிரையெனச்சிலவரைக்கொடுக்குந்
தெண்டிரைப்புனல்பருகியநிரப்பதுதீர
வுண்டியாகவேசிலவரைவடவைபாலுய்க்கும்.

இ - ள். எண் திசை புறம் தாங்கி பெயர்கிலாது இரக்கம் கொண்ட வெம் கரிக்கு இரை என சிலவரை கொடுக்கும் - அட்டதிக்காகிய இடங்களைச்சுமந்து அசையமாட்டாமல் வருத்தங்கொண்டுநின்ற வெவ்விய யானைகளுக்கு உணவாகச்சிலரை எடுத்தெறிவார்,—தெண் திரை புனல் பருகிய நிரப்பது தீர - தெளிந்த அலைகளையுடைய சமுத்திரத்து நீரைக்குடித்த வறுமைதீரும்படி,—உண்டியாகவே வடவைபால் சிலவரை உய்க்கும் - உணவாக வடவாமுகாக்கினியிடத்திற் சிலவசுரரை அள்ளி எறிவார். எ — று.

ஏகாரங்கள் அசை. (எஉ)

73. ஏந்தலின்னபல்வகையினலடுதலுமிமைப்பின்
வீந்ததானைகடுணைவரும்பொன்றினர்மிக்கோ
ரோய்ந்துவானினுங்கடலினுந்திசையினுமுலைந்து
சாய்ந்துபோயினர்மானமும்வன்மையுந்தவறி.

இ - ள். ஏந்தல் இன்னபல் வகையினல் அடுதலும் - பெருமையிற்சிறந்தவராகிய வீரவாகுதேவர் இப்படிப்பலவிதமாகக் கொலைசெய்தலும்,—இமைப்பின் தானைகள் வீந்த - இமைப்பொழுது நேரத்தில் சேனைகளிறந்தன,—துணைவரும் பொன்றினர் - சினேகிதர்களாக வந்த குமாரர்களும் இறந்தார்கள்,—மிக்கோர் - இறவாமலெஞ்சிநின்ற அசுரர்கள்,—ஓய்ந்து மானமும் வன்மையுந் தவறி - இளைத்துத் தங்கள் அபிமானமும் ஆண்மையும் இழந்து,—வானினும் கடலினும் திசையினும் உலைந்து சாய்ந்து போயினர்-ஆகாயத்திலும்சமுத்திரத்திலும் திக்குகளிலும் மனங்கலங்கிப் பின்னிட்டு ஓடிப்போனர்கள். எ — று. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையன எண். (எஈ)

74. மற்றிங்கீர்மையைக்காண்டலும்வச்சிரவாகு
விற்றதேகொலாநம்பெருந்தானையென்றிரங்கிச்
செற்றமீக்கொண்டுவலவனைநோக்கியித்தேரை
யொற்றன்முன்னுறவிடுத்தியாற்கடிதெனவுரைத்தான்.

இ - ள். மற்று இ சீர்மையை வச்சிரவாகு காண்டலும் - பின்பு (வீரவாகுதேவர்) இத்தன்மையாகக் கொன்ற தன்மையை வச்சிரவாகுகண்டபோது,—நம் பெரும் தானை இற்றதே கொல் ஆம் என்று இரங்கி - நமது பெரியசேனை அழிந்ததா என்றுவருந்தி,—செற்றமீ கொண்டு வலவனை நோக்கி - பெருங்கோபங்கொண்டு சாரதியைப்பார்த்து,—இ தேரை ஒற்றன் முன்னுற கடிது விடுத்தி என உரைத்தான் - நீ இத்தேரைத் தூதுவனுக்கு எதிரே போகும்படி விரைவாக விடு என்று சொன்னன். எ - று.

ஏ, ஆல், ஆம் அசை. கொல் வியப்புக்குறிப்பு. (எச)

75. உரைக்கும்வாசகங்கேட்டலுந்தொழுதுமுன்னுற்ற
பரிக்குலங்களின்மத்திகைவீசியேபாக
னருக்கனுழியந்திகிரியூர்வலவனுமஞ்சி
வெருக்கொளும்படிதேரினைவீரன்முன்விடுத்தான்.

இ - ள். உரைக்கும் வாசகம் கேட்டலும் - (வச்சிரவாகு) கூறிய வசனத்தைக்கேட்டபொழுது,—பாகன் தொழுது - சாரதிவணங்கி,—முன் உற்ற பரி குலங்களில் மத்திகை வீசி - தனக்கு நேராகநிற்கின்ற குதிரைக்கூட்டங்களைச் சவுக்கினலடித்து,—அருக்கன் ஆழி அம் திகிரி ஊர் வலவனும் அஞ்சி வெரு கொளும்படி - சூரியனது ஒரு சில்லமைந்துள்ள அழகியதேரை நடாத்துகின்ற சாரதியாகிய அருணனும் அச்சமுற்றுத்திகைக்கும்படி,—தேரினை வீரன் முன் விடுத்தான் - தேரை வீரவாகுதேவர் முன்னே விட்டான். எ — று.

ஏ அசை. உம்மை உயர்வு சிறப்பு. அஞ்சிவெருக்கொளும்படி என்பதை ஒருபொருட்பன்மொழியாகவுங்கொள்வர். வெருளுதல் - மயங்கல். (எரு)

76. கொடியவெஞ்சினந்திருகியேசூர்தருகுமரன்
கடிதுபோர்செய்வான்வருவதுமேலையோன்காணு
முடிவிலாமகிழ்வெய்தியேமுழுதுலகளந்த
நெடியமாலினுநெடியன்மற்றிவனெனநிமிர்ந்தான்.

இ - ள். கொடிய வெம் சினம் திருகி சூர்தரு குமரன் கடிது போர் செய்வான் வருவது மேலையோன் காணு - மிகவுங் கடுங்கோபமுறுகி சூர்பன்மன் பெற்ற மகனுகிய வச்சிரவாகு விரைந்து போர் செய்யும்படி வருவதைப் பெருமையிற்சிறந்தவராகிய வீரவாகுதேவர் கண்டு, - முடிவு இலா மகிழ்வு எய்தி - அளவில்லாத மகிழ்ச்சியடைந்து,—முழுது உலகு அளந்த நெடிய மாலினும் இவன் நெடியன் என நிமிர்ந்தான் - உலகமெல்லாவற்றையும் ஓரடியினல் அளந்த பெரிய வடிவமைந்துள்ள திருமாலினும் பார்க்க இவனே பெரியவடிவமுள்ளவன் என்று (பிறர்) சொல்லும்படி உன்னதமாக நின்றார். எ — று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை உயர்வுசிறப்பு. அடங்காதமகிழ்ச்சியென்பார் "முடிவிலாமகிழ்" வென்றார். (எசு)

77. நெடியதாள்புவியளந்திடப்புயங்கள்விண்ணெருக்க
முடியெலாங்கடந்தண்டகோளகைதனைமுட்ட
வடிவமைந்திடுதிறலினுன்பணிபதிமயங்க
வடிபெயர்ந்துபார்வெடிபடவிடிபடவார்த்தான்.

இ - ள். நெடிய தாள் புவி அளந்திட - நீண்டகால்கள்பூமியை அளக்கவும்,—புயங்கள் விண் நெருக்க - புயங்கள் ஆகாயவெளியை நெருக்கவும்,—முடி எலாம் கடந்து அண்ட கோளகை தனை முட்ட - முடியானது எல்லாவுலகங்களையுங்கடந்து அண்டகடாகத்தை முட்டவும்,—வடிவு அமைந்திடு திறலினுன் - பெரிய வடிவங்கொண்டுநின்ற வீரவாகுதேவர்,—பணி பதி மயங்க அடிபெயர்த்து - ஆதிசேடனும் மயங்கும்படி கால் வைத்து,—பார் வெடிபட - பூமிவெடிக்கவும்,—இடி பட - இடிமுழக்கம்போலப் பேரொலியுண்டாகவும்,—ஆர்த்தார் - ஆரவாரித்தார். எ - று. தன் சாரியை. இடிபட என்பதற்கு இடியொலி குன்ற என்றலுமொன்று. (எஎ)

78. புரமடங்கலுந்தெறுகணைபோன்றுளான்பொன்னேன்
வரமடங்கலுஞ்சோரியதடங்கலும்வானு
ளூரமடங்கலுமுண்டிடத்தறியின்வந்துதித்த
நரமடங்கலும்வெருவரவெரியெழநகைத்தான்.

இ - ள். புரம் அடங்கலும் தெறுகணை போன்றுளான் - முப்புரங்களைத்(தப்பாமல்) முழுதும் அழித்த (விஷ்ணுவாகிய) பாணத்தைப்போன்ற (அத்துணைப்பலசாலியாகிய) வீரவாகுதேவர்,—பொன்னேன் வரம் அடங்கலும் - இரணியன்பெற்ற எல்லாவரங்களையும்,—சோரி அது அடங்கலும் - இரத்தமுழுவதையும், வாழ் நாள் - ஆயுளையும்,—உரம் அடங்கலும் - வலிமுழுவதையும்,—உண்டிட - உண்ணும்படி,—தறியின் வந்து உதித்த - (அவனடித்த) கற்றூணிலிருந்து தோன்றிய,—நரமடங்கலும் வெருவர - நரசிங்கமும் பயப்படும்படி,—எரி எழ - தீப்பொறிகள் பறக்க,—நகைத்தான் - பெருநகை செய்தார். எ — று.

உம்மை முன்னையநான்கும் முற்று; பின்னையது உயர்வு சிறப்பு. (எஅ)

79. முச்சகம்புகழ்திறலினுன்முறுவலுமுழக்கும்
வச்சிரத்தடமொய்ம்பினுன்கேட்டலுமறுகி
மெய்ச்சிரத்தொகைதுளக்கியாரழலெழவிழித்து
நச்செயிற்றரவாமெனச்செயிர்த்திவைநவில்வான்.

இ - ள். முச்சகம் புகழ் திறலினன் முறுவலும் முழக்கும் தடம் வச்சிர மொய்ம்பினன் கேட்டலும் - மூன்றுலகத்திலுள்ளவர்களும் புகழ்கின்ற வீரவாகுதேவருடைய பெருஞ்சிரிப்பையும் பெருமுழக்கத்தையும் பெருமைபொருந்திய வச்சிரவாகுவானவன் கேட்டபொழுது,—மறுகி - அச்சங்கொண்டு,—மெய் சிரம் தொகை துளக்கி - தன்னுடம்பிலுள்ள கூட்டமானதலைகளை யசைத்து,—ஆர் அழல் எழ விழித்து - நுண்மையாகிய தீப்பொறிகள் உண்டாகப்பார்த்து,—எயிற்று அரவு நச்சு ஆம் என செயிர்த்து இவை நவில்வான்-(உயிர்போமளவுஞ்சென்று கோபமாறும்) எயிற்றரவின் நஞ்சுபோலும் என்று கூறும்படி கோபித்து இந்தவசனங்களைச் சொல்வானாயினன். எ — று.

உம்மைகள் எண். தடம் புயத்தின்விசாலிப்பைவிளக்கிநின்றது. ஆர் - நுண்மை. நஞ்சு என்பது நச்சு என வலித்தல்விகாரம்பெற்றது. ஆம் உவமவுருபு. (எகூ)

80. வீரநன்றுநின்னாண்மையுநன்றுமேதக்க
பேருநன்றுபேராற்றலுநன்றுநீபெற்ற
சீருநன்றுநின்விஞ்சையுநன்றுசெய்கின்ற
போருநன்றுநிற்கேற்பதிவ்வார்ப்பெனப்புகன்றான்.

இ - ள். (நின்) வீரம் நன்று - (தூதுவனே) உன் வீரமும் நல்லது,—நின் ஆண்மையும் நன்று - உன் ஆண்டன்மையும் நல்லது,—மேதக்க (நின்) பேரும் நன்று - மேன்மை பொருந்திய உன்பேரும் நல்லது,—(நின்) பேராற்றலும் நன்று - உனது மிக்கவல்லபமும் நல்லது,—நீ பெற்ற சீரும் நன்று - உனது சிறப்பும் நல்லது,—நின் விஞ்சையும் நன்று - உன்வித்தையும் நல்லது,—செய்கின்ற போரும் நன்று - நீ செய்கின்ற போரும் நல்லது,—இவ் ஆர்ப்பு நிற்கு ஏற்பது என புகன்றான் - (ஆதலால்) நீசெய்கின்ற இந்த அட்டகாசம் உன்னியல்புக்குத் தக்கதுதான் என்று கூறினன். எ — று.

இது புகழ்வதுபோலப்பழித்தல். உம்மைகள் எண்ணுப்பொருளில்வந்தன. (அ0)

81. மற்றுமோருரைபுகலுவான்வந்தெதிர்மலைந்த
கொற்றவீரரைப்படுத்தனமென்றுளங்கொண்டா
யற்றெலாமினிவிடுமதிநின்மிடலலைத்துப்
பற்றியெந்தைமுன்விடுப்பனுலுனையெனப்பகர்ந்தான்.

இ - ள். மற்றும் ஓர் உரை புகலுவான் - பின்னும் ஒருவார்த்தை கூறுகின்றான்,— வந்து எதிர் மலைந்த கொற்ற வீரரை படுத்தனம் என்று உளங் கொண்டாய் - நீ உனக்கு முன்வந்து போர்செய்த வெற்றிபொருந்திய வீரர்களைக்கொன்றோம் என்று மனசில் நினைத்திருக்கின்றாய்,— அற்று எலாம் இனி விடு மதி - அத்தன்மையான எண்ணங்களை யெல்லாம் இனிவிட்டுவிடு,— நின் மிடல் அலைத்து - உன்வலிமையை அடக்கி,— உனை பற்றி எந்தை முன் விடுப்பன் என பகர்ந்தான் - உன்னைப்பிடித்து என்பிதாவுக்குமுன் னே கொண்டுபோய் விடுவேன் என்று சொன்னான். எ — று.

மதி முன்னிலையசை. ஆல் அசை. (அக)

82. நின்னைவென்றிடமுயலுவன்றமியனுநீயு
மென்னைவென்றிடமுயலுதியிருவருமதனைப்
பன்னிநிற்பதிற்பயனெவன்கடிதமர்பயிறி
பின்னைவென்றுளார்வெல்லுகவென்றனன்பெரியோன்.

இ - ள். தமியனும் நின்னை வென்றிட முயலுவன் - தனித்தவனாகியயானும்உன்னை வெல்லுதற்குத்தக்க முயற்சியைச் செய்கின்றேன்,— நீயும் என்னை வென்றிட முயலுதி- நீயும் என்னை வெல்லுமாறு முயற்சிசெய்யக்கடவை,— இருவரும் அதனை பன்னிநிற்ப தில் பயன் எவன் - நாமிருவரும் அவ்வெல்லுமாற்றலைப் பேசிக்கொண்டுநிற்பதாற் பய னென்னை,— கடிது அமர் பயில்தி - விரைந்து போரைச்செய்,— பின்னை வென்றுளார் வெல்லுக - பின்பு வென்றவர்கள் வெல்லட்டும்,— என்றனன் பெரியோன் - என்று வீர வாகுதேவர் சொல்லினர். எ - று. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். (அஉ)

83. என்னுமுன்னரேவச்சிரவாகுவென்றிசைக்கு
மன்னன்மாமகன்றனதுகைக்கார்முகம்வாங்கிப்
பொன்னினாணொலிகொண்டோராயிரங்கணைபூட்டி
மின்னுலாந்தனிவேலவன்றூதன்மேல்விடுத்தான்.

இ - ள். என்னும் முன்னரே வச்சிரவாகு என்று இசைக்கும் மன்னன் மாமகன் - (வீரவாகுதேவர்) என்று சொல்லி முடிப்பதற்குமுன் சூரபன்மன் மகனாகிய வச்சிரவாகு என்பவன்,— தனது கை கார்முகம் வாங்கி - தனது கையிலுள்ள வில்லைவ ளைத்து,— பொன்னின் நாண் ஒலி கொண்டு - பொன்மயமாகிய நாணிலே ஓசையை எழுப்பி,— ஓராயிரம் கணை பூட்டி - ஆயிரம் அம்புகளைத் தொடுத்து,— மின் உலாம் தனி வேலவன் தூதன்மேல் விடுத்தான் - ஒளிவீசுகின்ற ஒப்பற்ற வேற்படையையுடையரா கிய கந்தஸ்வாமியின் தூதுவரான வீரவாகுதேவர்மீது விட்டான். எ — று. ஏ அசை. ()

84. விடுத்தவாயிரம்பகழியும்விடலைதன்மிசையே
யடுத்தவெல்லையிற்காணுறுவங்கையொன்றதனை
யெடுத்துமுன்னுறவோச்சியேயங்கவையனைத்தும்
பிடித்துவல்லையினுண்டுகள்பட்டிடப்பிசைந்தான்.

இ — ள். விடுத்த ஆயிரம் பகழியும் தன்மிசை அடுத்த எல்லையில் - வச்சிரவாகு விட்ட ஆயிரம் அம்புகளும் தம்மிடத்துவந்து சமீபித்தபொழுது,— விடலை காணுறா-வீர வாகுதேவர் அதனைக்கண்டு,— அங்கை ஒன்று அதனை எடுத்து - அழகிய ஒருகையை யெடுத்து,— முன் உற ஓச்சி - முன்னாக நீட்டி,— அவை அனைத்தும் பிடித்து - அந்த அம்புகளெல்லாவற்றையும் பிடித்து,— வல்லையில் நுண் துகள் பட்டிட பிசைந்தான் - சீக்கிரம் நுண்ணிய துகளாகும்படி பிசைந்தார். எ - று.

ஏகாரம் இரண்டும் அங்கும் அசை. தன் சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மைகள் முற்று. விடலை ஆண்மகன். (அச)

85. விட்டவாளிகள்பூழிபட்டிடுதலும்வெகுண்டு
மட்டுவாகைவெஞ்சிலையினைப்பின்னரும்வணக்கி
நெட்டிலைச்சரமொருபதினாயிரநிறத்திற்
பட்டிடும்படிதொட்டனனவுணர்கோன்பாலன்.

இ - ள். அவுணர் கோன் பாலன் விட்ட வாளிகள் பூழிபட் டிடுதலும் - அசுரராசனாகிய சூரபன்மனது குமாரனான வச்சிரவாகு தான்விட்டபாணங்கள் துகளாய்ப்போக (அதனைக்கண்டு),—வெகுண்டு - கோபங்கொண்டு,—மட்டு வாகை வெம் சிலையினை பின்னரும் வணக்கி - தேன்பொருந்திய வாகைப்பூமாலையையணிந்த கொடிய வில்லைப்பின்னரும்வளைத்து,—நெடு இலை ஒருபதினாயிரம் சரம் நிறத்தில் பட்டிடும்படி தொட்டனன் - நெடிய இலைபோலுந் தகட்டுவடிவினையுடைய ஒருபதினாயிரம் அம்புகளை மார்பில் புதையும்படி விட்டான். எ — று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். நிறம்—மார்பு. (அரு)

86. அசைவிலானதுநோக்கியேமுந்துபோரகத்தி
லிசைமைநீங்கியேமுடிந்திடுதானவரிட்ட
முசலமாகியதொன்றினையெடுத்துமுன்வந்த
விசிகம்யாவையுந்புடைத்தனன்றிசைதொறும்வீழ.

இ - ள். அசை விலான் அது நோக்கி - சோர்வில்லாதவராகிய வீரவாகுதேவர் அதனைப்பார்த்து,—முந்து போர் அகத்தில் - முன்செய்த போரில்,—இசைமை நீங்கி முடிந்திடு தானவர் இட்ட முசலம் ஆகியது ஒன்றினை எடுத்து - கீர்த்திஒழிந்து இறந்த அசுரர்கள் கைவிட்ட ஒரு இருப்புலக்கையை எடுத்து,—முன்வந்த விசிகம் யாவையும் திசை தொறும் வீழ புடைத்தனன்—தமக்கெதிராகவந்த அம்புகளெல்லாவற்றையும் திக்குகடோறும் விழும்படி அடித்தார். எ - று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை முற்று. அசைவு - சோர்வு. (அசு)

87. வழுவில்வாளிகள்வறிதுபட்டிடுதலுமற்றும்
விழுமிதாகியவொருபதினாயிரம்விசிகம்
பழுதுறுதனதூண்டியேயாண்டகைபரித்த
வெழுவைநுண்டுகளாக்கியேபின்னருமெய்வான்.

இ - ள். வழு இல் வாளிகள் வறிது பட்டிடுதலும் - தவறாத அம்புகள்வீணாக அழிந்துபோதலும்,—மற்றும் விழுமிதாகிய ஒருபதினாயிரம் விசிகம் - பின்பும் சிறந்த ஒருபதினாயிரமம்புகளை,—பழுது உறுதன தூண்டி - பழுதில்லாதனவாகச் செலுத்தி,—ஆண்டகை பரித்த - ஆண்மக்களிற்சிறந்த வீரவாகுதேவர் (கையிற்) பிடித்த,—எழுவை நுண் துகள் ஆக்கி - முசலத்தை நுண்ணிய துகளாகச்செய்து,—பின்னரும் எய்வான் - பின்பும் (பாணங்களை) விடத்தொடங்கினான். எ - று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (அஎ)

88. தலையிலாயிரங்களத்தினிலாயிரந்தடந்தோண்
மலையிலாயிரமூரத்தினிலாயிரமவயத்தா
ணிலையிலாயிரங்கணைகளாத்தூண்டினனீடுங்
கொலையிலாயிரங்கூற்றினைப்போலுறுங்கொடியோன்.

இ - ள். நீடும் கொலையின் ஆயிரம் கூற்றினை போல் உறும் கொடியோன் - மிகுந்த கொலைத்தொழிலினால் ஆயிரக்கணக்கான யமர்களைப்போல வந்து நிற்கின்ற கொடியோனாகிய வச்சிரவாகு,—தலையில் ஆயிரம் களத்தினில் ஆயிரம் தடம் தோள் மலையில் ஆயிரம் உரத்தினில் ஆயிரம் வயம் நிலை தாளில் ஆயிரம் கணைகளா தூண்டினன் - தலையிலாயிரமும் கழுத்தில் ஆயிரமும் பருத்தபுயங்களாகிய மலையிலாயிரமும் நெஞ்சிலாயிரமும் வெற்றிபொருந்திய நிலையினையுடைய கால்களில் ஆயிரமுமாக பாணங்களைப்பிரயோகித்தான். எ — று. தோண்மலை உருவகம். ஆக என்பது ஆ என ஈறுகெட்டது. (அஅ)

89. கையிலேந்தியபேரெழுமுரிந்திடக்காமர்
செய்யமெய்ம்முழுதீண்டியேபகழிகள்செறிய
வையனின்றனனோரிறைவருந்தியேயதற்பின்
னொய்யெனச்சென்றுவெய்யவன்றேரினையுதைத்தான்.

இ - ள். கையில் ஏந்திய பேர் எழு முரிந்திட - (வச்சிரவாகு பாணப்பிரயோகஞ் செய்தலால்) தமதுகையிற்பிடித்த முசலமுறிந்துவிழ,—காமர் செய்ய மெய் முழுது ஈண்டியே பகழிகள் செறிய - அழகிய சிவந்த மேனிமுழுவதும் நெருங்கி அம்புகள் புதைதலால்,—ஐயன் ஓர் இறை வருந்தியே நின்றனன் - வீரவாகுதேவர் ஒருகணப்பொழுது வருந்திநின்று,—அதன்பின் - அவ்வருத்தமொழிந்தபின்,—ஒய்யென சென்று வெய்யவன் தேரினை உதைத்தான் - விரைந்துபோய் கொடியவனாகிய வச்சிரவாகுவின் தேரையுதைத்தார். எ - று. ஏகாரங்கள் அசை. (அகூ)

90. உதைத்தகாலையிற்பண்ணுறுபரியெலாமொருங்கே
பதைத்துவீழ்ந்தனபாகனுமுருண்டனன்பட்டான்
கதித்தவையமுமழிந்ததுவன்னதுகாணு
மதித்துவேறொருதேரிடைப்பாய்ந்தனன்மறவோன்.

இ - ள். உதைத்த காலையில் பண் உறு பரி எலாம் ஒருங்கே பதைத்து வீழ்ந்தன - (அங்ஙனம் வீரவாகுதேவர்) உதைத்தபோது அலங்கரிக்கப்பட்டுள்ள குதிரைகளெல்லாம் ஒருசேரப்பதைபதைத்து வீழ்ந்திறந்தன,—பாகனும் உருண்டனன் பட்டான் - சாரதியும் உருண்டு விழுந்து இறந்தான்,—கதித்த வையமும் அழிந்தது - உயர்ந்திருக்கின்ற தேரும் அழிந்தது,—மறவோன் அன்னது காணு மதித்து வேறு ஒரு தேரிடை பாய்ந்தனன் - பாவியாகிய வச்சிரவாகு அதுகண்டு உத்தேசித்து வேறொருதேரிற்பாய்ந்தேறினான். எ - று.

ஏகாரம் தேற்றம். உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். பண்ணுறுத்தல் - சீர்ப்படுத்தல். கதித்தல் - உயர்தல். (கூ0)

91. பாய்ந்துவச்சிரவாகுவாந்தொல்பெயர்படைத்தோன்
றேய்ந்தவொண்பிறைபணியொடுசேர்ந்தனசிலையி
னாய்ந்தோராயிரமயிற்கணைபூட்டியேயடுபோ
ரேந்தனெற்றியுட்செறித்தனனமார்களிரங்க.

இ - ள். வச்சிரவாகு ஆம் தொல் பெயர் படைத்தோன் பாய்ந்து - வச்சிரவாகு என்னும் பெரிய பெயரைப்பெற்றிருக்கின்ற அவுணன் சேமத்தேரில் பாய்ந்தேறி,—தேய்ந்த ஒண் பிறை பணியொடு சேர்ந்தன சிலையின் - கலைகுறைந்த அழகிய பிறையானது கரும்பாம்போடு சேர்ந்தாற்போன்ற வில்லில்,—ஆய்ந்து ஓராயிரம் அயில் கணை பூட்டி - ஆராய்ந்து ஓராயிரக்கணக்கான கூரியபாணங்களை (எடுத்துத்) தொடுத்து,—

அடு போர் ஏந்தல் நெற்றியுள் அமரர்கள் இரங்க செறித்தனன் - கொலைத்தொழில்பொருந்திய போரைச்செய்கின்ற வீரவாகுதேவருடைய நெற்றியில் தேவர்கள் வருந்தும்படி அழுத்தினான். எ - று.

ஏகாரம் அசை. பிறை வில்லுக்கொப்பு. பணி - நாணுக்கொப்பு. (கூக)

92. ஆயிரங்கணை நுதலிடையழுத்தலுமடல்வேற்
றூயவன்றிருத்தூதுவன்சூரருள்புரிந்த
தீயவன்றடந்தேரினைச்செங்கையாலெடுத்து
மீயுயர்ந்திடும்விண்ணிடையெறிந்தனன்விடுத்தான்.

இ - ள். ஆயிரம் கணை நுதலிடை அழுத்தலும் - (வச்சிரவாகு) ஆயிரம்பாணங்களை ஏவி நெற்றியிலழுத்துதலும்,—அடல் வேல் தூயவன் திரு தூதுவன் - வெற்றிபொருந்திய வேற்படையுடைய பரிசுத்தராகிய குமாரஸ்வாமியினது சிறந்த தூதரான வீரவாகு தேவர்,—சூர் அருள் புரிந்த தீயவன் தடம் தேரினை செம் கையால் எடுத்து - சூரபன் மன்பெற்ற கொடியவனாகிய வங்சிரவாகுவினது விசாலித்த தேரைச் சிவந்தகையினாலெடுத்து,—மீ உயர்ந்திடும் விண் இடை எறிந்தனன் விடுத்தான் - மேலாகவுயர்ந்த ஆகாயத்தில் (செல்லும்வண்ணம்) எறிந்து விட்டார். எ - று.

செம்மை - அழகெனினும் செப்பமெனினும் அமையும். அடல் - வலிமைக்கும் பெயர். (கூஉ)

93. விண்ணகத்திடையெறிந்தபின்வீரவாகுப்பெய
ரண்ணல்வச்சிரவாகுவந்தேறுவானமைந்து
பண்ணுறுத்தியவேமமாய்நின்றதேர்பலவுந்
துண்ணெனப்புடைத்தெறிந்துதைத்தொல்லையிற்றொலைத்தான்.

இ - ள். வீரவாகுப் பெயர் அண்ணல் விண்ணகத்திடை எறிந்தபின் - வீரவாகு என்னும் பெயரையுடைய தலைவர் (வச்சிரவாகுவினதுரதத்தையெடுத்து) ஆகாயத்திலெறிந்தபின்,—வச்சிரவாகு வந்து ஏறுவான் அமைந்து பண் உறுத்திய ஏமமாய் நின்ற தேர் பலவும் - வச்சிரவாகு வந்தேறும்பொருட்டு அமைதியாய் அலங்கரிக்கப்பட்டுக் காவலாய்ப் (பக்கத்தில்) நின்ற தேர் பலவற்றையும்,—துண்ணென புடைத்து எறிந்து உதைத்து ஒல்லையில் தொலைத்தான் - விரைந்து அடித்தும் எடுத்தெறிந்தும் காலினால் உதைத்தும் ஒருகணப்பொழுதில் அழித்தார். எ — று. உம்மை முற்று. (கூங)

94. தொலைக்குமெல்லையினவுணர்கோன்மதலைதொல்புவிக்கோ
ரிலக்கம்யோசனையெல்லையின்காறும்விண்ணேகி
யலக்கணுற்றுமீண்டழிதருதேருடனமரில்
வெலற்கருந்திறலறுமுகன்றூதன்முன்வீழ்ந்தான்.

இ - ள். தொலைக்கும் எல்லையின் - (வீரவாகுதேவர் அவனதுசேமத்தேர்களை மேற்கூறியபடி) அழிக்கும்பொழுது,—அவுணர் கோன் மதலை தொல் புவிக்கு ஓர் இலக்கம் யோசனை எல்லையின் காறும் விண் ஏகி - அசுரர்க்கரசனாகிய சூரபன்மனது மகனான வச்சிரவாகு பெரிய பூமியிலிருந்து ஓரிலக்கம்யோசனை அளவுவரைக்கும் மேலாகச் சென்று,—அலக்கண் உற்று மீண்டு அழிதரு தேருடன் - துன்பங்கொண்டு திரும்பி அழிந்ததேருடனே,—அமரில் வெலற்கு அரும் திறல் அறுமுகன் தூதன் முன் வீழ்ந்தான் - போரிலே (பகைவரால்) வெல்லக்கூடாத வலிமையையுடைய அறுமுகப்பெருமானது தூதுவராகிய வீரவாகுதேவருக்குமுன் விழுந்தான். எ — று. (கூச)

95. நிலவரைப்புறுஞ்சூர்மகனெழுந்துதன்னெடிய
சிலேவளைத்தமர்செய்திடமுன்னலுந்திறலின்
றலேமைபெற்றவன்கண்டுகையோச்சியத்தனுவை
வலிதுபற்றியேமுரித்தனன்பேரொலிமயங்க.

இ - ள். நில வரைப்பு உறும் சூர் மகன் எழுந்து தன் நெடிய சிலே வளைத்து அமர் செய்திட முன்னலும் - பூமியிடத்துவந்து விழுந்த வச்சிரவாகு எழுந்து தனது நெடிய வில்லேவளைத்து யுத்தஞ்செய்தற்கு உத்தேசிக்க,—திறலின் தலேமை பெற்றவன் - வலிமையினல் முதன்மைபெற்றிருக்கின்ற வீரவாகுதேவர்,—கண்டு கை ஓச்சி - அதனைக் கண்டு கையைநீட்டி,—அ தனுவை வலிது பற்றி - அவ்வில்லே வலாற்காரமாகப் பிடித்து,—பேர் ஒலி மயங்க முரித்தனன் - இடியொலியுந்திகைக்க முரித்தெறிந்தார்.எ—று.

ஏகாரம் அசை. பேரொலி — இடியொலி; உயர்வுசிறப்பும்மை தொக்கது. (கூ௫)

96. ஏந்துகார்முகந்தனைமுரித்திடுதலுமெரியிற்
காந்துகண்ணுடைவச்சிரமொய்ம்பனோர்கரத்தின்
வாய்ந்தவாள்கொடேயெதிர்தலுந்தன்னுடைமருங்கி
ஞந்தகந்தனையுறைகழித்தறிவன்மேனடந்தான்

இ - ள். அறிவன் - வீரவாகுதேவர்,—ஏந்து கார் முகம் தனை முரித்திடுதலும் - தான் கையிற்பிடித்த வில்லேப் பிடுங்கி முரித்தலும்,—எரியில் காந்து கண் உடை வச்சிர மொய்ம்பன்-அக்கினியைப்போல எரிகின்ற கண்களையுடையவனுகிய வச்சிரவாகு,—ஓர் கரத்தின் வாய்ந்த வாள்கொடே எதிர்தலும் - ஒருகையிலிருக்கின்ற வாட்படையைக் கொண்டு எதிர்க்க,—தன் உடை மருங்கில் நாந்தகம் தனை உறை கழித்து மேல் நடந்தான் - தம்முடைய இடையிலணிந்த வாளை உறையினின்றும் உருவிக்கொண்டு அவன் மேற்சென்றுர். எ — று. தன் இரண்டும் சாரியை. ஏகாரம் அசை. (கூ௬)

97. நடந்துவச்சிரவாகுமுன்னுய்த்திடநனிதோ
ளடைந்தவாளினைவிலக்கியேயறிவரிலறிவன்
கடந்தபோர்வலிகொண்டதன்வாளினுற்கடிது
தடிந்துவீட்டினனவுணர்கோனுந்தகத்தடக்கை.

இ - ள். அறிவரில் அறிவன் - அறிவுடையவரெல்லாரினும் சிறந்த அறிவுடையவராகிய வீரவாகுதேவர்,—நடந்து - சென்று,—வச்சிரவாகு முன் உய்த்திட - வச்சிரவாகு முன்னர் வாளை ஓங்கிவீச,—நனி தோள் அடைந்த வாளினை விலக்கி - பெருமைபொருந்திய புயத்திற்பட்ட அந்த வாளைத்தடுத்து,—கடந்த போர் வலி கொண்ட தன் வாளினுல் - மேம்பட்ட போர்வலிமையைக்கொண்ட தமது வாளினுல்,—அவுணர் கோன் நாந்தகம் தடம் கை கடிது தடிந்து வீட்டினன் - வச்சிரவாகுவினது வாள்பிடித்த பெரிய கையை விரைவாக வெட்டி விழுத்தினுர். எ — று.

ஏகாரம் அசை. நனி பெருமை. நடந்து விலக்கி தடிந்து வீட்டினன் என முடிக்க.

98. செய்யதோர்கரந்துணிபடத்தீயவன்செறுத்தோர்
கையிருந்திடுதண்டினையெறிதலுங்கண்டு
மையில்கேள்வியன்றுணிபடுத்தவுணர்கோன்மதலே
யையிரண்டவாந்தலேயையும்வாளினுலறுத்தான்.

இ - ள். செய்யது ஓர் கரம் துணிபட - செப்பமாகிய ஒருகை வெட்டுப்பட,—தீயன் செறுத்து ஓர் கை இருந்திடு தண்டினை யெறிதலும் - கொடியவனுகிய வச்சிரவாகு

கோபங்கொண்டு தனது வேறோர் கையிலிருந்த தண்டத்தையெறிந்தான் (அங்ஙனமெறிதலும்),—மை இல் கேள்வியன் கண்டு - குற்றமில்லாத கேள்வியையுடைய வீரவாகுதேவர் அதனைப்பார்த்து,—துணி படுத்து - அத்தண்டைத் துண்டாகவெட்டி,—அவுணர்கோன் மதலை ஐ இரண்டு தலையையும் வாளினால் அறுத்தான் - அவுணராசனாகிய சூரபன்மனது மகனான வச்சிரவாகுவினது பத்துத்தலைகளையும் வாளினால்வெட்டினார். எ — று. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். அ, ஆம் சாரியை. (கூஅ)

வேறு.

99. எந்தைதன்றூதுவனெறிந்தவாளினா
லைந்திருசென்னியுமற்றுவீழ்தலு
மைந்தியல்வச்சிரவாகுவாகிய
வெந்திறலவுணர்கோன்வீடினானரோ.

இ - ள். எந்தை தன் தூதுவன் எறிந்த வாளினால் - எமது பிதாவான கந்தஸ்வாமியின் தூதுவரான வீரவாகுதேவர்வீசிய வாளினால்,—ஐந்திரு சென்னியும் அற்று வீழ்தலும் - பத்துத்தலைகளும் வெட்டுப்பட்டு விழுதலும்,—மைந்து இயல் வச்சிரவாகு ஆகிய வெம் திறல் அவுணர் கோன் வீடினான் - வலிமைபொருந்திய வச்சிரவாகுவென்னும் பெயரையுடைய மிகுந்த தைரியசாலியாகிய அவுணராசன் இறந்தான். எ — று.

உம்மை முற்று. அரோ அசை. திறல் - மேன்மையெனினும் அமையும். (கூகூ)

100. ஆடியலவுணர்தம்மண்ணறன்மகன்
வீடியகாலையின்வெருவிப்பாங்கரி
னாடியவவுணர்கணனிபுலம்புறீஇ
யோடினர்திசைதொறுமுடைந்துபோயினார்.

இ - ள். ஆடு இயல் அவுணர் தம் அண்ணல் தன் மகன் - வெற்றிபொருந்திய அசுரர்க்கரசனாகிய சூரபன்மன் மகனான வச்சிரவாகு,—வீடியகாலையில் - இறந்தபொழுது,—பாங்கரின் நாடிய அவுணர்கள் - பக்கத்தில்நின்று அதனையறிந்த அசுரர்கள்,—வெருவி - பயந்து,—நனி புலம்புறீஇ - மிகவும் அழுது,—உடைந்து - பின்னிட்டு,—திசைதொறும் ஓடினர் போயினார் - நாலுதிசைகளிலும் ஓடிப்போனார்கள்.எ—று. தன் தம் சாரியை.

101. துஞ்சினன்வச்சிரத்தோளன்கண்டிது
நெஞ்சகமகிழ்ந்திவணிற்பனேயெனின்
வெஞ்சினவவுணர்கோன்வினவிற்றீமையென்
றஞ்சினன்கரந்தெனவருக்கன்போயினான்.

இ - ள். வச்சிரத் தோளன் துஞ்சினன் - வச்சிரவாகு இறந்தான்,—இது கண்டு நெஞ்சகம் மகிழ்ந்து இவண் நிற்பன் எனின் - இதனைப்பார்த்து மனமகிழ்ந்து இவ்விடத்தில் நிற்பேனானால்,—வெம் சின அவுணர்கோன் வினவில் - கடுங்கோபத்தையுடைய அசுரராசனாகிய சூரபன்மன் கேட்டறிந்தால்,—தீமை என்று அஞ்சினன் கரந்து என அருக்கன் போயினான் - தீமையாகுமென்று பயந்து மறைந்தாற்போலச் சூரியன் அஸ்தமனமானான். எ — று. ஏகாரம் தேற்றம். (கூ0க)

வச்சிரவாகுவதைப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூ0ச.

# யாளிமுகன்வதைப்படலம்.

1. திண்டிறலவுணர்கோன்சிறுவன்வீந்தது
மண்டமரியற்றிடவருனரின்மையுந்
தண்டமதுடைந்ததுந்தபனன்மாய்ந்ததுங்
கண்டனனினையனகருதன்மேயினன்.

இ - ள். திண் திறல் அவுணர்கோன் சிறுவன் வீந்ததும் - (வீரவாகுதேவர்) மிக்க வலிமையையுடைய அசுரராசனாகிய சூரபன்மன் மகனான வச்சிரவாகு இறந்ததும்,—மண்டு அமர் இயற்றிட வருநர் இன்மையும் - எதிர்த்து யுத்தஞ்செய்ய வருவாரில்லாமையும்,—தண்டம் அது உடைந்ததும் - சேனைகள் தோற்றுப்போனதும்,—தபனன் மாய்ந்ததும் கண்டனன் - சூரியன் அஸ்தமித்ததும் (ஆகிய எல்லாவற்றையும்) பார்த்து,—இனையன கருதல் மேயினன் - இத்தன்மையாக நினைப்பாராயினர். எ — று.

அது பகுதிப்பொருள்விகுதி. உம்மைகள் எண். கண்டனன் முற்றெச்சம். (௧)

2. எந்தையையெள்ளினனிருந்தகோநகர்
சிந்தினன்புரத்தையுஞ்சிறிதுவீட்டினன்
வந்தவர்யாரையுமாய்வுசெய்தனன்
புந்தியின்வெகுளியிற்சிறிதுபோக்கினேன்.

இ - ள். எந்தையை எள்ளினன் இருந்த கோ நகர் சிந்தினன் - எம்பெருமானாகிய கந்தஸ்வாமியைப் (பரம்பொருளென்றுமதியாது) நிந்தித்த சூரபன்மன் இருந்த கோயிலை அழித்தேன்,—புரத்தையும் சிறிது வீட்டினன் - (அதுவுமன்றி) நகரத்தையுஞ் சற்றே அழித்தேன்,—வந்தவர் யாரையும் மாய்வு செய்தனன் - (போருக்கு) வந்த அசுரர் யாவரையுங்கொன்றேன் (அங்ஙனங்கொன்றமையினால்),—புந்தியின் வெகுளியில் சிறிது போக்கினேன் - மனத்திலிருந்தகோபத்திற் சிறிது நீங்கினேன். எ — று.

உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையது முற்று. எள்ளினன், வந்தவர் என்பன வினையாலணையும் பெயர். (௨)

3. ஏலவெம்போர்செயவெவரும்வந்திலர்
ஞாலமதவிரொளிநடாத்துஞாயிறு
மேல்கடனீந்தினன்விரையப்போயினன்
மாலையுமிவ்விடைவந்துநேர்ந்ததே.

இ - ள். ஏல வெம் போர் செய எவரும் வந்திலர் - இயையுமாறு கொடியபோரைச் செய்தற்கு எவர்களும் வரவில்லை,—ஞாலம் அது அவிர் ஒளி நடாத்து ஞாயிறும் மேல் கடல் நீந்தினன்-உலகத்துக்கு விளங்கும் ஒளியைநடாத்துகின்ற சூரியனும் மேலைச்சமுத்திரத்தைக்கடந்து,—விரைய போயினன்-விரைவாகப்போயினன்,—மாலையும் இ இடை வந்து நேர்ந்தது - மாலைக்காலமும் இவ்விடத்தில்வந்து சேர்ந்தது. எ — று.

ஏகாரம் அசை. உம்மை முன்னையது முற்று; பின்னையன இறந்ததுதழீஇயவெச்சம்.

4. அறந்தனைநினைகிலாதல்லல்செய்பவ
ருறைந்திடுநகரிதினொற்றிற்போந்தயான்
சிறந்திடுமறுமுகத்தேவதேவனை
மறந்திடலாங்கொலிம்மாலைகாறுமே.

இ - ள். அறம் தனை நினைகிலாது அல்லல் செய்பவர் உறைந்திடு நகரிதின் - தரும முறையை எண்ணாது (பிறருக்குத்) துன்பத்தைச்செய்பவர்களாகிய அவுணர்களிருக்கின்ற இந்நகரத்தில்,—ஒற்றில் போந்த யான் - தூதாகவந்தயான்,—சிறந்திடும் அறுமுக தேவ தேவனை இ மாலை காறும் மறந்திடலாம் கொல் - பெருமைபொருந்திய மகாதேவராகிய அறுமுகப்பெருமானை இம்மாலைக்காலம் வரைக்கும் மறந்திருக்கலாமோ. எ – று.

கொல் ஐயம். (ச)

5. ஏவரும்வழுத்தியவெந்தைகந்தவேள்
பூவடிதணந்திடுபுலம்புமிவ்விடைத்
தேவர்கள்புன்மையுந்தீரவல்லையிற்
போவதுதுணிவெனப்புந்திதேற்றினான்.

இ - ள். ஏவரும் வழுத்திய எந்தை கந்தவேள் பூ அடி தணந்திடு புலம்பும் - எவர்களாலுந் துதிக்கப்படுகின்ற எம்பெருமானாகிய கந்தஸ்வாமியினது செந்தாமரைமலர்போன்ற திருவடிகளைப்பிரிந்துநிற்குந் தனிமையும்,— இ இடை தேவர்கள் புன்மையும் தீர - இவ்விடத்திற் சிறையிலிருக்கின்ற தேவர்களுடைய துன்பமும் நீங்கும்படி,—வல்லையில் போவது துணிவு என புந்தி தேற்றினான் - விரைந்துபோவதே துணிவென்று மனந்தெளிந்தார். எ – று.

உம்மை முன்னையது முற்றோடு கூடிய உயர்வுசிறப்பு; பின்னையன எண். போவதே என்பதில் தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. (இ)

6. தேற்றியதிறலுடைச்செம்மலிம்மென
மாற்றலர்படுநிலவரைப்புநீங்கியே
காற்றெனக்கனலெனக்காலனென்னவெங்
கூற்றெனமறுகிடைக்குலவியேகினான்.

இ - ள். தேற்றிய திறல் உடை செம்மல் - இவ்வாறு மனந்தெளிந்த வீரவாகுதேவர்,—இம்மென மாற்றலர் படு நில வரைப்பு நீங்கி - விரைவாகச் சத்துருக்களான அசுரர்கள் இறந்துகிடக்கின்ற படுகளத்தைவிட்டு நீங்கி,—காற்று என கனல் என காலன் என்ன வெம் கூற்று என மறுகிடை குலவி ஏகினான் - (வேகத்தினால்) காற்றைப்போலவும் (அசுரரையழித்தலால்) அக்கினியைப்போலவும் காலனைப்போலவும் கொடிய யமனைப்போலவும் வீதியில் விளங்கிச்சென்றார் எ - று. ஏகாரம் அசை. (சு)

7. திறல்கெழுமொய்ம்புடைச்செல்வன்செல்லுழி
மறுகிடையவுணர்கண்மறலிமற்றிவன்
குறுகலிர்நுங்களைக்கொல்வன்கொல்வனென்
றறைகுநர்முறைமுறையரற்றியோடினார்.

இ - ள். திறல் கெழு மொய்ம்புடை செல்வன் செல் உழி - வீரவாகுதேவர் (அங்ஙனம்) செல்லும்போது,—மறுகிடை அவுணர்கள் - (அவர்போதலைக்கண்ட) வீதியிலுள்ள அசுரர்கள்,—இவன் மறலி - இவன் யமனாகும்,—குறுகலிர் நுங்களை கொல்வன் கொல்வன் என்று - (எதிரே) வாராதொழிமின் (வந்தால்) உங்களைக் கொல்லுவான் கொல்லுவான் என்று,—முறை முறை அறைகுநர் அரற்றி ஓடினார் - (ஒருவருக்கொருவர்) முறைமுறையாகச் சொல்லுகின்றவராகிக் கூக்குரலிட்டுக்கொண்டோடினார்கள். எ - று

மற்று அசை. (எ)

8. எஞ்சியவவுணர்கள்யாருமிவ்வகை
யஞ்சினரிரிந்திடவழிந்துமுன்னையா
டுஞ்சியவாவணத்தொகைகடந்தோராய்
விஞ்சியமகேந்திரம்விடுத்துநீங்கினான்.

இ - ள். எஞ்சிய அவுணர்கள்யாரும் - இறவாது நின்ற அசுரரனைவரும்,—அழிந்து இ வகை அஞ்சினர் இரிந்திட - மனந்தடுமாறி இத்தன்மையாகக் கூறிக்கொண்டு பயந்து ஓடிப்போக,—முன்னையாள் துஞ்சிய ஆவண தொகை கடந்து ஓராய் - (வீரவாகுதேவர்) மூதேவிவாசஞ்செய்கின்ற அனேகவீதிகளைக்கடந்து நீங்கி,—விஞ்சிய மகேந்திரம் விடுத்து நீங்கினான் - செல்வத்தானுஞ் சிறப்பானும் மேலான மகேந்திரபுரத்தைவிட்டுச் சென்றார். எ — று.

உம்மை முற்று. அழிந்து - சிறப்புநீங்கி என வீதிக்கடையாக்கினுமமையும். (அ)

9. புடையகன்மகேந்திரபுரத்தைநீத்தபின்
விடைபொருவலியினான்விண்ணின்பாலெழீஇ
முடுகினன்வழிக்கொடுமுருகற்போற்றியே
வடதிசையிலங்கையின்வரைப்புநண்ணினான்.

இ - ள். புடை அகல் மகேந்திர புரத்தை நீத்தபின் - இடமகன்ரமகேந்திரபுரியை விட்டுவந்தபின்,—விடைபொரு வலியினான் விண்ணின் பால் எழீஇ - இடபத்தையொத்தவலிமையையுடையராகிய வீரவாகுதேவர் ஆகாயமார்க்கமாகக் கிளம்பிச்சென்று,—முடுகினன் - விரைந்து,—வழிக்கொடு - சென்று,—முருகன் போற்றி - கந்தஸ்வாமியைத்துதித்து,—வடதிசை இலங்கையின் வரைப்பு நண்ணினான் - (மகேந்திரத்திற்கு) வடதிசையெல்லையாகிய இலங்கைமாநகரத்தில் வந்தார். எ — று.

ஏகாரம் அசை. முடுகினன் முற்றெச்சம். (கூ)

வே று.

10. ஆங்கதுகாலையிலனைய, பாங்கரின்மேவருபழையோ
னோங்கியமூவெயிலுள்ளோர், தாங்கியவன்மைதரித்தோன்.

இ - ள். அது காலையில் - வீரவாகுதேவர் வருகின்ற அப்பொழுது,—பாங்கரில் மேவரு பழையோன் - அந்த இலங்கைநகரத்திலிருக்கின்ற பழையவன்,—ஓங்கிய மூ எயில் உள்ளோர் தாங்கிய வன்மை தரித்தோன் - உயர்ச்சிபொருந்திய முப்புரங்களில் வாழ்ந்தவராகிய அசுரர்கள்பொருந்திய வலிமையையுடையவன். எ — று.

ஆங்கு அசை. மூன்று என்பது மூவென்றாயிற்று. (க0)

11. முடியுமகேந்திரமூதூர், வடதிசையாரரண்மன்னி
யுடையவிலங்கையினோம்பும், படியறுகாவல்பரித்தோன்.

இ - ள். முடியும் முது மகேந்திர ஊர் வட்திசை ஆர் அரண் மன்னி உடைய இலங்கையின் ஓம்பும் படியறு காவல் பரித்தோன் - அழிகின்ற பெரிய மகேந்திரபுரத்துக்கு வடதிக்கில் அரிய காவலாக நிலைபெற்றுடைய இலங்கைமாநகரத்தைக்காக்கின்ற ஒப்பற்ற காவற்றொழிலைப்பெற்றவன். எ - று.

வடதிசை யாரரண் மன்னியுடைய - வடக்கிலுள்ள மதிலோடு நிலைபெற்றுடைய எனினும் அமையும். முது என்பது மூது என நீட்டல்விகாரம்பெற்றது. (கக)

12. ஆயிரமாமுகனடுதோ, ளோய்விலிராயிரமுடையோன்
ஞாயிறுதன்மகனகரின், வாயில்களன்னதொர்வாயான்.

இ - ள். ஆயிரம் மாமுகன் - ஆயிரம்யாளிமுகமுள்ளவன்,—அடு தோள் ஓய்வு இல் இரு ஆயிரம் உடையோன் - (பகைவரை) வெல்லுகின்ற சோர்வில்லாத இரண்டாயிரம் புயங்களையுடையவன்,—ஞாயிறு தன் மகன் நகரின் வாயில்கள் அன்னது ஓர் வாயான் - சூரியன்மகனாகிய யமனது நகரத்திலுள்ள வாயில்களை ஒத்த வாய்களையுடையவன். எ-று.

இரண்டு என்பது இரு என்றாயிற்று. மா என்பது விலங்கின் பொதுப்பெயர் இங்கே யாளியையுணர்த்திற்று. (கஉ)

13. வடவரையாயிரம்வந்தோ, ருடல்கொடுமேவியதொப்பான்
படைபலபாணிபரித்தான், கடையழல்கான்றிடுகண்ணான்.

இ - ள். வடவரை ஆயிரம் வந்து ஓர் உடல் கொடு மேவியது ஒப்பான் - ஆயிரம் மேருமலைகள் (ஒருங்குசேர்ந்து) வந்து ஒருடம்பைக்கொண்டு பொருந்தியதைப்போன்றவன்,—பலபடை பாணி பரித்தான் - அனேகவாயுதங்களைக் கைகளிற்றரித்தவன்,—கடை அழல் கான்றிடு கண்ணான் - வடவாமுகாக்கினியைச் சொரிகின்ற கண்களையுடையவன். எ — று. (க௩)

14. தண்ணளியோரிறைதானு, முண்ணிகழ்வற்றவுளத்தா
னெண்ணரும்வெம்பவம்யாவும், பண்ணினனன்றுபயின்றான்.

இ - ள். தண் அளி ஓர் இறை தானும் உள் நிகழ்வு அற்ற உளத்தான் - ஓரணுவளவேனும் அன்பு உள்ளே தோன்றப்பெறாத மனசையுடையவன்,—எண் அரும் வெம் பவம் யாவும் பண்ணினன் நன்று பயின்றான் - அளவிடப்படாத கொடிய பாவங்களெல்லாவற்றையும் செய்து நன்றாய்ப்பழகினவன். எ — று.

உம்மை முன்னையது இழிவுசிறப்பு; பின்னையது முற்று. எண்ண அரும் என்பது எண்ணரும் என நின்றது. நிகழ்தல் - உண்டாதல். பண்ணினன் முற்று வினையெச்சம்.

15. மீளில்சினத்ததிவேகக், கோளரியைத்தருகொடியோன்
யாளிமுகத்தவனென்போன், வாள்வயமுற்றிடுவலியோன்.

இ - ள். மீள் இல் சினத்து அதிவேக கோளரியை தரு கொடியோன் - நீங்காத கோபத்தையுடைய அதிவேகனென்னுஞ் சிங்கத்தைப்பெற்ற கொடியோன்,—வாள் வய முற்றிடு வலியோன் - வாட்போரிலே வெற்றியைப்பெற்ற வலியவன்,—யாளி முகத்தவன் என்போன் - யாளிமுகன் என்னும் பெயரையுடையவன். எ — று.

அதிவேகக்கோளரி உருவகம். பழையோனும் தரித்தோனும் பரித்தோனும் உடையோனும் வாயானும் ஒப்பானும் பரித்தானும் கண்ணானும் உளத்தானும் பயின்றானும் கொடியோனும் வலியோனும் ஆகிய யாளிமுகனென்றுசொல்லப்படும் பெயரையுடையவன் என முடிக்க. (க௫)

வே று.

16. பெருந்தகையாங்கவன்பெயர்ந்தகாலையி
னருந்திறற்சூரனையடைந்துமீண்டுபின்
மருந்துறழ்தன்மகன்மாட்சிதேர்வுறீஇ
யிருந்தனன்வருந்தியேயிலங்கைதன்னிடை.

இ - ள். பெருந்தகையவன் ஆங்கு பெயர்ந்த காலையில் - பெருமையையுடைய வீர வாகுதேவர் அவ்விடத்துவந்த சமயத்தில்,—அரும் திறல் சூரனை அடைந்து மீண்டபின்- (யாளிமுகன்) மிக்க வலிமையையுடைய சூரபன்மனிடஞ்சென்று திரும்பிவந்தபின்,— மருந்து உறழ் தன் மகன் மாட்சி தேர்வுறீஇ - மருந்துபோன்ற தன்மகனாகிய அதிவீரன் இறந்ததையறிந்து,—வருந்தி இலங்கை தன்னிடை இருந்தனன் - வருத்தமுற்று இலங் காநகரத்திலிருந்தான். எ — று.

ஏ அசை. தன் சாரியை. மருந்து - அமிர்தமெனினுமாம். (கசு)

17. சண்டவெங்கதிகொடுதமியன்சேறலுங்
கண்டனன்யாரிவன்கள்வன்போலுமால்
விண்டலநீந்தியேமேவுவானெனத்
தொண்டுசெயுழையரிலொருவன்சொல்லுவான்.

இ - ள். சண்டவெம் கதிகொடு தமியன் சேறலும் - (அவன் அங்ஙனமிருக்க) வீர வாகுதேவர் மிக்கவேகத்தோடு (அம்மார்க்கமாகவருதலும்),—கண்டனன் இவன் யார் கள்வன் போலும் விண்டலம் நீந்தி மேவுவான் என - (அவர்வரவைப்) பார்த்து இவன் ஆர் கள்வன்போலும் ஆகாயவழியானீங்கி (இங்கே) வருகின்றானென்றுசொல்ல,— தொண்டு செய் உழையரில் ஒருவன் சொல்லுவான் - ஏவல்செய்கின்ற ஏவலாளருள் ஒருவன் சொல்லத்தொடங்கினான். எ - று.

ஏகாரம் அசை. தேற்றமென்பாருமுளர். போலும் ஐயப்பொருளுணர்த்துமசை மொழி. செல்தல் என்பது சேறலெனமுதனீண்டு லகாங்கெடநின்றதகரம்றகரமாயிற்று

18. நங்குலநாயகநவில்வன்கேட்டிநீ
செங்கதிர்முளைத்துழிச்செல்வற்காணிய
பொங்கொளிமகேந்திரபுரத்திற்போந்தனை
யிங்குநின்றிருமகனிருந்துகாப்பவே.

இ - ள். நம் குலநாயக - எங்கள் அசுரகுலத்துக்குராசனே,—நவில்வன் கேட்டி - நான்சொல்லக்கேளும்,—நீ செம் கதிர் முளைத்துழி - நீர் இன்று சூரியோதயமான போது,—இங்கு நின் திருமகன் இருந்து காப்ப - நீரிருந்தவிடத்திலே உமதுசிறந்தமகன் இருந்து (இந்நகரத்தைக்) காவல்செய்ய,—செல்வன் காணிய - சூரபன்மனைக்காணும் பொருட்டு,—பொங்கு ஒளி மகேந்திரபுரத்தில் போந்தனை - மிக்கபுகழமைந்த மகேந்திர புரத்திற்குப்போனீர். எ — று.

நவில்வன் முற்றெச்சம். ஏகாரம் அசை. ஒளி - பிரகாசமெனினுமாம். செல்வன் - சகல ஐசுவரியமுமுடையவன். (கஎ)

19. போந்திடுகின்றபின்புணரிதன்னுள்வா
னீந்தினனீங்கிவனேரவன்னதை
வாய்ந்திடுபெருந்திறன்மடங்கற்பேரினான்
காந்தியகனலெனக்கண்டுசீறினான்.

இ - ள். போந்திடு கின்றபின் - (நீர் அவ்வாறு) சென்றபின்பு,—இவன் புணரிதன் னுள் வான் நீந்தினன் ஈங்கு நேர - இவன்சமுத்திரத்தினுள்ளே ஆகாயவழியைக்கடந்து இவ்விடத்தில்வர,—அன்னதை - இவனது வரவை,—வாய்ந்திடு பேரும் திறல் மடங் கல் பேரினான் கண்டு - பெருமைபொருந்திய வீரசிங்கன்பார்த்து,—காந்திய கனல் என சீறினான் - எரிகின்ற அக்கினியைப்போலக்கோபித்தான். எ — று. தன் சாரியை. (கஅ)

20. சீறினன்படையொடுசென்றுதாக்கலும்
வீறொடுவருமவன்வெகுண்டுவாளுரீஇ
மாறமரியற்றியேமற்றவன்றனைக்
கோறல்செய்தொருவிறல்கொண்டுமேயினான்.

இ - ள். சீறினன் படையொடு சென்று தாக்கலும் - கோபித்தவனாகிய வீரசிங்கன் சேனைகளுடன்சென்றுபோர்செய்தலும்,—வீறொடு வரும் அவன் வெகுண்டு வாளுரீஇ - பெருமையோடுவருகின்ற இவன் கோபங்கொண்டு வாளை உறையினின்றும் உருவியெடுத்து,—மாறு அமர் இயற்றி - (அவனோடு) எதிர்த்துப்போர்புரிந்து,—அவன் தனை கோறல் செய்து ஒரு விறல் கொண்டு மேயினான் - அவனையழித்து ஒரு வெற்றிகொண்டு போயினான். எ - று.

மற்று, ஏ அசை. தன் சாரியை. சீறினன் வினையாலணைம் பெயர். (உ0)

21. மின்னவிர்பூணுடைவீரமொய்ம்பினு
னின்னதோரிலங்கையினிடைக்கட்பாய்ந்தன
னன்னவனடிபொறாதாழியுற்றதாற்
பொன்னகர்வளனொடுமங்கட்புக்கபோல்.

இ - ள். மின் அவிர் பூண் உடை வீர மொய்ம்பினன் - ஒளிவிளங்காநின்ற ஆபரணங்களையுடைய வீரவாகு என்னு மிவன்,—இன்னது ஓர் இலங்கையின் இடைக்கண் பாய்ந்தனன் - இந்த இலங்கைமாநகரத்தின் மத்தியிற்குதித்தான்,—அன்னவன் அடி பொறாது - குதித்த இவனது பாதங்களைச் சுமக்கலாற்றாது,—பொன் நகர் வளனொடும் அங்கண் புக்க போல் ஆழி உற்றது - சுவர்க்கலோகம் செல்வத்தோடு கடலின்மூழ்கினாற்போல (இந்நகரமுங் கடலில்மூழ்ந்தியது.) எ - று.

ஓர் ஆல் அசை. அங்கண் மெலித்தல் விகாரம்; அகரம் ஆழியைச்சுட்டிற்று. (உக)

22. புக்கிடவளப்பிலர்பொன்றவேனையோ
ரக்கணமெழுந்தனரவற்கண்டஞ்சியே
திக்கொடுவானமுஞ்சிந்தநின்மகன்
மைக்கடலகமொரீஇவல்லையெய்தினான்.

இ - ள். புக்கிட - மேற்கூறியபடி இலங்கைமாநகர் கடலுள்ளேதாழுதலும்,—அளப்பிலர் பொன்ற - (அதனால்) அனேகரிறக்கவும்,—ஏனையோர் அ கணம் எழுந்தனர் அவன் கண்டு அஞ்சி திக்கொடு வானமும் சிந்த - இறவாதமற்றையோர் உடனேயெழுந்து இவனைக்கண்டுபயந்து திசைகளிலும் ஆகாயத்திலுஞ்சிதறி யோடவும்,—நின் மகன் மை கடல் அகம் ஒரீஇ வல்லை எய்தினான் - (அப்பொழுது) உமது மகனான அதிவீரன் கரியகடலின்மூழ்ந்துதலைவிட்டு விரைந்து எழுந்து கரையேறினான். எ - று.

ஏகாரம் அசை. உம்மை எண். (உஉ)

23. வெய்தெனவிவண்வரும்வீரனோடமர்
செய்தனன்வாள்கொடுசெவ்வியன்னதின்
மைதவழ்மேனியின்மதலைமார்புதாள்
கைதலையொருதலைகண்டமாக்கினான்.

இ - ள். வெய்தென இவண் வரும் வீரனோடு அமர் செய்தனன் - (அங்ஙனங்கரையேறிய அதிவீரன்) சீக்கிரம் இவ்விடத்தில் வந்த வீரவாகுவுடன் போர்செய்தான்,—

செவ்வி யன்னதில் - அப்பொழுது,—வாள்கொடு - வாளினால்,—மைதவழ் மேனியின் மதலை மார்பு தாள் கை தலை ஒருதலை கண்டம் ஆக்கினான் - கருமைபொருந்திய மேனியையுடைய உமது மகனின் மார்பையும் கால்களையும் கைகளையும் தலையையும் ஒரேமுறையில் வெட்டினான். எ — று.

எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. (உங)

24. பூழியம்புயமுடைப்பொருநன்பின்னுறக்
கேழுறுவானெறிகிளர்ந்துபோந்திடா
வாழியமகேந்திரவரைப்பிற்புக்கன
னாழுறுமிலங்கையுமாழிமேலெழ.

இ - ள். ஆழுறும் இலங்கையும் ஆழிமேல் எழ - கடலினுள்ளே அழுந்தும் இலங்கைமாநகரமும் (சுமைகுறைதலால்) அக்கடலின்மேலெழும்ப,—பூழி அம் புயம் உடை பொருநன் - விபூதியணிந்த அழகியபுயங்களையுடைய வீரவாகு,—பின்னுற - பின்பு,—கேழ் உறு வான் நெறிகிளர்ந்து போந்திடா - ஒளிபொருந்திய ஆகாயமார்க்கமாக எழுந்துபோய்,—மகேந்திர வரைப்பில் புக்கனன் - மகேந்திரபுரத்திற் புகுந்தான். எ — று.

வாழிய அசை. உம்மை எதிரதுதழீஇயவெச்சம். (உச)

25. சூருறைதிருநகர்துன்னியாயிடைச்
சீரினைமுழுவதுஞ்சிந்திநங்குல
வீரரொடேயமர்விளைத்துவென்றவ
னேருநரின்மையினீங்கினானரோ.

இ — ள். சூர் உறை திருநகர் துன்னி - சூரபன்மனிருக்கின்ற இலக்ஷ்மிவிலாசம் பொருந்திய நகரத்தினுள்ளேசென்று,—ஆயிடை சீரினை முழுவதும் சிந்தி - அவ்விடத்தினுள்ள செல்வங்களெல்லாவற்றையும் அழித்து,—நம் குல வீரரொடே அமர் விளைத்து வென்று - நமது குலத்திலுள்ள வீரருடனே போர்செய்து அவர்களை வெற்றிகொண்டு,—அவண் நேருநர் இன்மையின் நீங்கினான் - அங்கே தன்னோடெதிர்ப்பாரில்லாமையால் அந்நகரத்தினின்றும் திரும்பிவந்தான். எ — று.

அரோ அசை. உம்மை முற்று. (உரு)

26. என்னலுமுருமினுமிடித்தசொல்லினன்
வன்னிகொளுயிர்ப்பினன்மடித்தவாயினன்
றுன்னியவியர்ப்பினன்சுழலுங்கண்ணினன்
மெய்ந்நிறைவெகுட்சியன்விளம்பன்மேயினான்.

இ - ள். என்னலும் - என்று இத்தன்மையாக ஏவற்காரன் கூறுதலும்,—உருமினும் இடித்த சொல்லினன் - (அவ்வசனங்களைக்கேட்ட யாளிமுகன்) இடிமுழக்கத்தினும்பார்க்க அதிக ஓசையோடுபொருந்தியசொல்லையுடையவனும்,—வன்னிகொள் உயிர்ப்பினன் - தீப்பொறிகளைக்காலுகின்ற சுவாசத்தையுடையவனும்,—மடித்த வாயினன் - மடிக்கப்பட்ட வாயையுடையவனும்,—துன்னிய வியர்ப்பினன் - செறிந்த வெயர்வையுடையவனும்,—சுழலும் கண்ணினன் - சுழலுகின்ற கண்களையுடையவனும்,—மெய்ந்நிறை வெகுட்சியன் - சரீரத்தில் நிறைந்த கோபமுடையவனும் (ஆகி),—விளம்பல் மேயினான் - சொல்லுவானாயினான். எ - று.

இக்குணங்களெல்லாம் கோபமிகுதியாற் றோன்றினவென்க. உம்மைஉயர்வுசிறப்பு.

27. காண்டியென்கடிமுறைகடந்துமைந்தனை
யீண்டுயிர்வவ்வியேயிறைவனூர்புகா
மீண்டிடுகள்வனிவ்வீரந்தன்னொடே
மாண்டிடவடுகுவன்வன்மையாலென்றான்.

இ - ள். காண்டி - காவற்காரனே காண்பாயாக,—என் கடிமுறை கடந்து மைந்தனை ஈண்டு உயிர் வவ்வி இறைவன் ஊர் புகா மீண்டிடு கள்வன் - எனது காவன்முறையைக்கடந்து என்மகனுடைய உயிரைவாங்கி இராசனாகிய சூரபன்மனிருக்கின்ற நகரத்துட் பிரவேசித்துத் திரும்பிவந்த சோரனே,— இ வீரம் தன்னொடே மாண்டிட வன்மையால் அடுகுவன் என்றான் - (இதுவரையுமிவன்) பெற்றுள்ள வீரத்தோடும் இறக்கும்படி கொல்லுவேனென்று கூறினான். எ — று.

தன் சாரியை. ஏகாரம் முன்னையது அசை; பின்னையது தேற்றம். (உஎ)

28. என்றிவைவிளம்பியேயாளிமாமுகன்
குன்றெனவெழுந்தொருகொற்றவாள்கொளீஇ
நின்றசில்படையொடுநேர்ந்துவீரன்முன்
சென்றனனினையனசெப்பன்மேயினான்.

இ - ள். என்று இவை யாளிமாமுகன் விளம்பி - என்றிந்தவசனங்களை யாளிமுகன் கூறி,—குன்று என எழுந்து - மலையெழுந்தாற்போலெழுந்து,—ஒரு கொற்றவாள் கொளீஇ - வெற்றிபொருந்திய ஒருவாட்படையைக் கையிலெடுத்து,—நின்ற சில் படையொடு நேர்ந்து - பக்கத்தில்நின்ற சில சேனைகளோடும் எதிர்த்து,—வீரன் முன் சென்றனன் இனையன செப்பல் மேயினான் - வீரவாகுதேவருக்கு முன்னரே போய் இத்தன்மையாகச் சொல்லுகின்றான். எ — று. ஏ அசை. (உஅ)

29. நங்கடன்முறையினைநடாத்துமைந்தனை
யிங்கடல்செய்தனையினையகாப்பொரீஇ
யங்கடற்போந்தனையழிவுசெய்தனை
வெங்கடல்கடந்தனைமீடியேகொலாம்.

இ - ள். நம் கடன் முறையினை நடாத்து மைந்தனை இங்கு அடல் செய்தனை - (அடா வீரனேகேள்)நமது கடமையாகியகாத்தல் முறையைநடாத்திக்கொண்டிருந்த மகனாகிய அதிவேகனை இவ்விடத்திற்கொன்றனை,—இனைய காப்பு ஒரீஇ - இந்தக்காவலைக் கடந்து,—அங்கு அடல் போந்தனை அழிவு செய்தனை - மகேந்திரத்தில் தைரியத்தோடு சென்று (அந்நகரத்தையும் நம்மவரையும்) அழித்தாய்,—வெம் கடல் கடந்தனை மீள்தியே கொல் - (இனிநீ) உவர்க்கடலைத்தாண்டித் திரும்பிப்போவாயோ (போகமாட்டாய்.)
கொல், ஆம் அசை. ஏகாரம்.வினா. (உகூ)

30. ஒல்லொலியளக்கரையுகண்டுநிற்கினிச்
செல்லுதலரிதியான்செருவினேர்ந்தனன்
கொல்லுவன்பெருவயங்கொள்வனீயிவண்
வல்லதுபுரிமதிமதியிலாயென்றான்.

இ - ள். ஒல்லொலி அளக்கரை உகண்டு இனி நிற்கு செல்லுதல் அரிது - ஒல்லென்னுமொலியினையுடைய கடலைக்கடந்து இனி உனக்குப்போதல்கூடாது,—யான் செருவில் நேர்ந்தனன் - (ஏனென்னில்) நான் போருக்குவந்துவிட்டேன்,—கொல்லுவன் பெரு

வயம் கொள்வன் - உன்னைக்கொல்லுவேன் பெரியவெற்றியையடைவேன்,—மதி இலாய் - புத்தியில்லாதவனே,—நீ இவண் வல்லது புரிமதி - உன்னாலாகிய போர் எதுவோ அதை நீ இவ்விடத்திற்செய் என்று சொன்னான். எ – று.

மதி முன்னிலையசைச்சொல். (௩௰)

31. சொற்றதுகேட்டலுந்துழனிப்பேரொலி
யுற்றெரிகனலெனவுயிர்ப்புமூரலுஞ்
செற்றமுமெய்தியேதுளக்கிச்சென்னியைக்
கொற்றமொய்ம்புடையதோர்குரிசில்கூறுவான்.

இ - ள். சொற்றது கேட்டலும் - (இவ்வாறுயாளிமுகன்)சொல்லியவார்த்தையைக் கேட்டபின்,—துழனிப்பேர் ஒலி உற்று எரி கனல் என உயிர்ப்பும் மூரலும் செற்றமும் எய்தி - கர்ச்சிதமாகிய பேரோசையைச்செய்து எரிகின்ற அக்கினியைப்போல வருகின்ற சுவாசமும் சிரிப்பும் கோபமும் கொண்டு,—சென்னியை துளக்கி - தலையையசைத்து,—கொற்ற மொய்ம்பு உடையது ஓர் குரிசில் கூறுவான் - வீரவாகுதேவர் சொல்லுகின்றார். எ – று. ஏ, ஓர் அசை. உம்மைகள் எண். (௩௧)

32. ஒருதலையுடையவென்னுயர்வுமாயிரந்
தருதலையுடையநின்றாழ்வும்யாமிவட்
பொருதலையிழைத்திடும்போதுகாண்புறுங்
கருதலைபெருவடிவமைந்தகாட்சியே.

இ – ள். ஒருதலை உடைய என் உயர்வும் - (யாளிமுகனே கேட்பாயாக) ஒருதலையையுடைய எனது மேன்மையையும்,—ஆயிரம் தருதலை உடைய நின் தாழ்வும் - ஆயிரமென்னுங் கணக்கைத் தருகின்ற தலைகளையுடைய உனது எளிமையையும்,—யா இவண் பொருதலை இழைத்திடும் போது காண்புறும் - நாம் இங்கே போர்செய்யும் பொழுது பார்ப்போம்,—பெருவடிவு அமைந்த காட்சி கருதலை - நீ பெருவடிவமைந்துள்ள காட்சியை (ஒருபொருளாக) மதியாதே. எ – று. ஏகாரம் அசை. உம்மைகள் எண். (௩௨)

33. தீயவவிம்மொழிதிண்ணந்திண்ணமுன்
மாயிரும்புழைக்கையின்மாமுகங்களோ
ராயிரந்தன்னையுமறுத்துவீட்டியே
நாயினங்கவரியநல்குவேனென்றான்.

இ - ள். தீயவ இ மொழி திண்ணம் திண்ணம் - கொடியவனே இவ்வார்த்தை நிச்சயம் நிச்சயம்,—உன் மா இரும் புழைக்கையின் மாமுகங்கள் ஓராயிரம் தன்னையும் - உனது மிகப்பெரிய துவாரங்களோடு கூடிய கைகளையுடைய ஆயிரம் முகங்களையும்,—அறுத்து வீட்டி நாய் இனம் கவரிய நல்குவேன் என்றான் - (வாளினால்) வெட்டிவீழ்த்தி நாய்க்கூட்டங்களுண்ணும்படி கொடுப்பேனென்று கூறினார். எ - று.

தன் சாரியை. ஏகாரம் அசை. உம்மை முற்று. (௩௩)

34. கருணைகொணந்தியங்கணத்தனிவ்வகை
யுரைதருமெல்லையினுததிமேருமால்
வரையினைவிழுங்கியவளைந்ததேயென
விரைவொடுபடைஞர்கள்வீரற்சுற்றினார்.

இ - ள். கருணை கொள் நந்தி அம் கணத்தன் இவ்வகை உரைதரும் எல்லையில் - பெருங்கருணையுடைய நந்திகணத்தலைவராகிய வீரவாகுதேவர் இங்ஙனஞ் சொல்லியபொழுது,—உததி மால் மேருவரையினை விழுங்கிய வளைந்தது என - கடலானது பெரியமேருமலையை அமிழ்த்தும்பொருட்டுச் சூழ்ந்ததுபோல,—விரைவொடு படைஞர்கள் வீரன் சுற்றினர் - விரைவாக அசுரவீரர்கள் வீரவாகுதேவரைச் சூழ்ந்தார்கள். எ — று.

ஏகாரம் அசை; 'தேற்றமென்பாருமுளர். (௩௪)

35. சுற்றியதானையர்தோன்றன்மீதுதாம்
பற்றியபடைக்கலம்பலவுந்தூண்டியே
செற்றமொடமர்வினைசெய்யச்சூறைபோன்
மற்றவர்சூழலுள்வாள்கொண்டெய்தினன்.

இ - ள். சுற்றிய தானையர் - (அவ்வாறு) சூழ்ந்த அசுரவீரர்கள்,—தோன்றல் மீது தாம் பற்றிய படைக்கலம் பலவும் தூண்டி செற்றமொடு அமர் வினை செய்ய - வீரவாகுதேவர்மேல் தாங்கள் பிடித்த படைக்கலங்கள் பலவற்றையும் ஏவிக் கோபத்தோடு போர் செய்தலும்,—சூறைபோல் - சுழல்காற்றைப்போல,—அவர் சூழலுள் வாள் கொண்டு எய்தினன் - அவர்கள் கூட்டத்துள் வாட்படையுடன் பிரவேசித்தார். எ - று.

மற்று, ஏ அசை. உம்மை முற்று. (௩௫)

36. துண்டமுமகலமுந்தோளுந்தாளுமொண்
கண்டமுஞ்சென்னியுங்கரமுமானவை
விண்டுவிண்டழிவுறவெய்யதானவர்
தண்டமதனைத்தையுந்தடிந்திட்டானரோ.

இ - ள். துண்டமும் அகலமும் தோளும் தாளும் ஒண் கண்டமும் சென்னியும் கரமும் ஆனவை - (அங்ஙனஞ்சென்ற வீரவாகுதேவர்) மூக்கும் மார்பும் புயங்களும் கால்களும் அழகியகழுத்தும் தலையும் கைகளும் ஆகிய இந்த உறுப்புக்கள்,—விண்டு விண்டு அழிவு உற - வேறுவேறாகத் துணிந்தழிய,—வெய்ய தானவர் தண்டம் அது அனைத்தையும் தடிந்திட்டான் - கொடிய அசுரசைனியங்கள் முழுவதையுங்கொன்றார். எ — று.

அரோ அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை முன்னைய எண்; பின்னையது முற்று. (௩௬)

வே று.

37. அறுகுமாமுகத்தண்ணலாற்றவுங்
கறுவுபெற்றிடுங்கருத்தின்வீரனைக்
குறுகியாயிரங்கொண்டகைகளா
லிறுதியூழிநாளிடியினெற்றினன்.

இ - ள். அறுகு மாமுகத்து அண்ணல் - (தனதுசேனைவீரரெல்லாம் அழிந்துபோனதைக்கண்ட) யாளிமுகன்,—ஆற்றவும் கறுவு பெற்றிடும் கருத்தின் - மிகவுங் கோபம் பொருந்திய மனசோடும்,—வீரனை குறுகி - வீரவாகுதேவரருகிற்சென்று,—ஆயிரம் கொண்டகைகளால் - ஆயிரமென்னுங்கணக்கைக்கொண்ட கைகளால்,—இறுதி ஊழி நாள் இடியின் எற்றினன் - ஈற்றில்வருகின்ற மகா ஊழிக்காலத்தில் உண்டாகும் இடியோசையைப்போல (ஓசையுண்டாகும்படி) அடித்தான். எ — று. உம்மை உயர்வுசிறப்பு.

38. அடித்தகைகளையங்கையொன்றினாற்
பிடித்துமேலவன்பெருங்கைவாளினா
லுடைத்தசோரிநீருகுத்துவீழ்ந்திறை
துடித்திடும்படிதுண்டமாக்கினான்.

இ - ள். மேலவன் அடித்த கைகளை ஒன்று அங்கையினால் பிடித்து - வீரவாகுதேவர் (அங்ஙனந்தம்மேல்) அடித்த (யாளிமுகனது) கைகளைத் தமது ஒருகையினாற்பிடித்து,—பெரும் கை வாளினால் - பெரிய மற்றக்கையிலிருக்கின்ற வாட்படையினால்,—உடைத்த சோரிநீர் உகுத்து வீழ்ந்து இறை துடித்திடும்படி துண்டம் ஆக்கினான் - கட்டுவிட்ட இரத்தநீரைச்சொரிந்து வீழ்ந்து சற்றேதுடிக்கும்படி துண்டாகவெட்டினார்.

39. ஆயிரங்கரமறலுமற்றுள
வாயிரங்கரமவைகணீட்டியே
யாயிரங்கிரியவைபறித்தன
னாயிரங்கணனாடல்கொண்டுளான்.

இ - ள். ஆயிரம்கணன் ஆடல் கொண்டுளான் - இந்திரனை வெற்றிகொண்டுள்ள யாளிமுகன்,—ஆயிரம் கரம் அறலும் - ஆயிரங்கைகளும் வெட்டுப்பட்டுவிழ,—மற்றுள ஆயிரம்கரம் அவைகள் நீட்டி - மற்றப்பக்கத்திலுள்ள ஆயிரங்கைகளையும் நீட்டி,—ஆயிரம் கிரி அவை பறித்தனன் - ஆயிரம் மலைகளைப்பிடுங்கினான். எ - று.

ஏகாரம் அசை. உளான் குறிப்புவினையாலணையும்பெயர். (கூகூ)

40. பறித்தவாயிரம்பருப்பதத்தையுங்
கறுத்துவீரன்மேற்கடிதுவீசலு
மிறத்தல்கொண்டுமெய்யெங்குமெய்தியே
புறத்துவீழ்ந்தனவுடைந்துபூழியாய்.

இ - ள். பறித்த ஆயிரம் பருப்பதத்தையும் கறுத்து வீரன்மேல் கடிது வீசலும் - தான்பிடுங்கி எடுத்த ஆயிரம் மலைகளையுங் கோபங்கொண்டு வீரவாகுதேவர்மேற் படும்படி விரைந்தெறிதலும்,—இறத்தல் கொண்டு மெய் எங்கும் எய்தி - (அவன் எறிந்த ஆயிரம்மலைகளும்) மிகுதியாகவந்து மேனிமுழுவதினும் பட்டு,—உடைந்து பூழியாய் புறத்து வீழ்ந்தன - உடைந்து தூளாய்ப்பக்கத்தில் வீழ்ந்தன. எ - று. ஏகாரம் அசை. உம்மை முற்று. இறத்தல் - மிகுதி. (சு0)

41. பொற்றையாவையும்பூழியாகியே
யற்றகாலையிலையன்றூதுவன்
மற்றையாயிரம்வான்கரத்தையுங்
கொற்றவாள்கொடேகுறைத்துவீட்டினான்.

இ - ள். பொற்றை யாவையும் பூழி ஆகியே அற்றகாலையில் - மலைகள்முழுதும்துகளாய் அழிந்தபொழுது,—ஐயன் தூதுவன் - கந்தசுவாமியின்தூதுவராகிய வீரவாகுதேவர்,—மற்றை ஆயிரம் வான் கரத்தையும் கொற்றவாள் கொடு குறைத்து வீட்டினான் - மற்றப்பக்கத்திலுள்ள பெரிய ஆயிரங்கைகளையும் வெற்றிபொருந்தியவாளினால் அறுத்து வீழ்த்தினார். எ – று.

ஏகாரம் இரண்டும் அசை. உம்மை இரண்டும் முற்றுப்பொருளன. (சக)

42. இழைக்குமெல்லையினெய்துங்கூற்றினை
யழைக்குமாறெனவார்த்துத்தானவன்
றழைக்குமொய்ம்பினுன்றன்னைப்பற்றுவான்
புழைக்கைமுற்றவும்பொள்ளென்றுய்த்தனன்.

இ - ள். இழைக்கும் எல்லையில் எய்தும் கூற்றினை அழைக்குமாறு என - (தனக்கு) விதித்த முடிவுகாலத்தில் வருகின்ற யமனை (வா என்று) அழைக்குந்தன்மையைப் போல,—தானவன் ஆர்த்து - யாளிமுகாசுரன் ஆரவாரித்து,—தழைக்கும் மொய்ம்பினுன் தன்னை பற்றுவான் - வளர்கின்ற புயங்களையுடைய வீரவாகுதேவரைப் பிடிக்கும்படி,—புழைக்கை முற்றவும் பொள்ளென்று உய்த்தனன் - தனது துதிக்கைகளெல்லாவற்றையும் விரைவாக நீட்டினுன். எ – று. தன் சாரியை. உம்மை முற்று. ()

43. உய்த்தகாலையினொருதன்வாளினு
லெய்த்தவன்மைசேர்யாளிமாமுகன்
பத்துநூறெனப்பட்டசென்னியுங்
கொத்தொடேவிழக்குறைத்திட்டானரோ.

இ - ள். உய்த்தகாலையில் - (ஆயிரங்கைகளையும்) நீட்டியபொழுது,—தன் ஒருவாளினுல் - தமது ஒரு வாட்படையினுல்,—எய்த்த வன்மை சேர் யாளிமாமுகன் பத்து நூறு என பட்ட சென்னியும் - இளைத்த வலிமைபொருந்திய பெரிய யாளிமுகாசுரனுடைய ஆயிரம் என்று சொல்லப்பட்ட தலைகளையும்,—கொத்தொடே விழ குறைத்திட்டான் - கூட்டத்தோடும் அறுந்துவிழும்படி சேதித்தார். எ - று.

அரோ, ஏ அசை. உம்மை முற்று. (சங)

யாளிமுகன்வதைப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௪௭.

---

# வீரவாகுமீட்சிப்படலம்.

1. இன்னபான்மையால்யாளிமாமுகன்
றன்னையட்டபின்றன்கைவாளினைப்
பொன்னுலாவுறைபுகுத்திச்சென்றனன்
மின்னுசெஞ்சுடர்மேனிவீரனே.

இ - ள். மின்னு செம் சுடர் மேனி வீரன் இன்ன பான்மையால் யாளிமாமுகன் தன்னை அட்டபின் - விளங்குகின்ற செவ்வொளிபொருந்திய மேனியையுடைய வீரவாகுதேவர் இத்தன்மையாக யாளிமுகனைக்கொன்றபின்,—தன்கை வாளினை பொன் உலாவு உறை புகுத்தி சென்றனன்-தமதுகையிலுள்ள வாட்படையைப் பொன்மயமாகிய உறையிலிட்டுச் சென்முர். எ – று. தன் சாரியை. ஏகாரம் அசை. (க)

2. இந்திரத்திருவிலங்கைநீங்கியே
யூந்திரைக்கடலழுவம்வாவியே
கந்தமாதனங்கவின்றவேலைசேர்
செந்திமாநகர்சென்றுபுக்கனன்.

இ - ள். இந்திர திரு இலங்கை நீங்கி - (அப்படிச்சென்ற வீரவாகுதேவர்) இந்திர பாக்கிய நிறைந்துள்ள இலங்கையைவிட்டு நீங்கி,—அம் திரை கடல் அழுவம் வாவி - நீர்த்திரைகளையுடைய கடற்பரப்பையுங்கடந்து,—கந்தமாதனம் கவின்ற வேலைசேர் செந்திமாநகர் சென்று புக்கனன் - கந்தமாதனமலை விளங்கிநிற்கின்ற கடற்கரையிலுள்ள திருச்செந்தூரில் வந்துசேர்ந்தார். எ – று.

*ஏகாரம் இரண்டும் அசை. அழுவம் - ஆழமெனினுமாம். (உ)

3. புக்ககாலையிற்பொருவிலாற்றலான்
மிக்கசேவகன்மேவல்காணுறுத்
தொக்கபாரிடஞ்சோமற்காணுறு
மைக்கருங்கடன்மானவார்த்தவே.

இ - ள். புக்க காலையில் - (அங்ஙனம் திருச்செந்தூரில்) புகுந்தபொழுது,—பொரு இல் ஆற்றலால் மிக்க சேவகன் - ஒப்பில்லாத வலிமையினன்மேம்பட்ட வீரவாகுதேவர்,—மேவல் காணுறு - வந்ததைக்கண்டு,—தொக்க பாரிடம் சோமன் காணுறும் மை கரும் கடல் மான ஆர்த்த - கூடிநின்றபூதசேனைகள் சந்திரோதயத்தைக்கண்ட கருங்கடலானது (எவ்வாறு கொந்தளித்தாரவாரிக்குமோ) அவ்வாறு (மகிழ்ச்சியினல்) ஆரவாரித்தன. எ – று. மைக்கரும் - ஒருபொருட்பன்மொழி. ஏ அசை. (ங)

4. பாரிடத்தொகைபரிக்குமன்னவர்
சேரவந்துதஞ்செங்கைகூப்பியே
வீரவாகுவைமெய்யுறத்தழீஇ
யார்வமெய்தினான்புகூறினார்.

இ - ள். பாரிடத்தவர் பரிக்கு மன்னவர் சேரவந்துதம் செங்கை கூப்பி - பூதசைநியங்களைப் பாதுகாக்கின்ற தலைவர்கள் ஒருங்கேவந்து தமது செப்பமாகிய கைகளைக்குவித்துவணங்கி,—வீரவாகுவை மெய் உற தழீஇ - வீரவாகுதேவரைத் தங்கள் சரீரத்தோடு பொருந்தும்படி கட்டித்தழுவி,—ஆர்வம் எய்தினர் அன்பு கூறினர் - விருப்பங்கொண்டு பிரியவசனங்களைச் சொல்லினர். எ – று. ஏ அசை. (௪)

5. தழுவுவோர்தமைத்தானும்புல்லியே
யிழிஞர்தம்பதிக்கேகும்வெம்பவ
மொழிவதாயினனுமைக்கண்டேயெனு
முழுவலன்பினன்முகமன்கூறினன்.

இ - ள். தழுவுவோர் தமை தானும் புல்லி - (அங்ஙனந்தம்மைவந்துதழுவிய) சேனைதிபதிகளைத் தாமுந்தழுவி,—இழிஞர்தம் பதிக்கு ஏகும் வெம்பவம் - கீழ்மக்களாகிய அவுணர்களிருக்கின்ற மகேந்திரபுரிக்குப் போன கொடியபாவமானது,—உமைக்கண்டே ஒழிவது ஆயினேன் எனு முழுவல் அன்பினல் முகமன் கூறினன் - புண்ணியசாலிகளாகிய உங்களைக்கண்டதனற்றான் நீங்கப்பெற்றேனென்று எழுமையுந் தொடர்ந்தவன்போடு உபசாரவார்த்தைகளைச் சொன்னர். எ – று.

ஏகாரம் முன்னையது அசை; பின்னையது தேற்றம். தம் சாரியை. (ரு)

6. விலக்கில்வன்மைகொள்வீரவாகுவை
யிலக்கத்தெண்மருமெதிர்ந்துமற்றவன்
மலர்க்கருங்கழல்வணங்கிக்கைதொழ
வலக்கணீங்குமாறனையர்ப்புல்லினன்.

இ - ள். விலக்கு இல் வன்மைகொள் வீரவாகுவை - (அப்பொழுது எவர்களாலும்) தடுத்தற்கரிய வலிமைபொருந்திய வீரவாகுதேவரை,—இலக்கத்து எண்மரும் எதிர்ந்து - இலக்ஷத்தெட்டு வீரர்களும் எதிரேவந்து,—அவன் மலர் கரும் கழல் வணங்கி கைதொழு- அவருடைய மலர்போன்ற பெரிய பாதங்களை நமஸ்கரித்து (எழுந்து) கைகுவித்துவணங்க,—அலக்கண் நீங்குமாறு அனையர் புல்லினன் - (தம்மைப்பிரிந்தமையினாலுண்டான) துன்பமொழியும்படி அவர்களைத்தழுவினார். எ – று.

மற்று அசை. உம்மை முற்று. கருமை என்னும் பண்புச்சொல் விகுதிகுறைந்தது.

7\. அமைவில்பாரிடத்தனிகவேந்தருந்
தமர்களாயினோர்தாமுஞ்சூழ்வர
விமலனாகியேவீற்றிருந்திடுங்
குமாரநாயகன்கோயின்மேயினான்.

இ - ள். அமைவு இல் பாரிடத்து அனிக வேந்தரும் - (சந்தோஷத்தினால்) அமையாது கிளர்ச்சிகொண்டுள்ள பூதசேனாதிபதிகளும்,—தமர்கள் ஆயினோர் தாமும் சூழ்வர- தம்மவர்களாகிய தம்பிமார்களுஞ் சூழ்ந்துவர,—விமலன் ஆகியே வீற்றிருந்திடும் குமரநாயகன் கோயில் மேயினான் - பரிசுத்தராயெழுந்தருளியிருக்கின்ற குமாரஸ்வாமியினது திருக்கோவிலுக்குட்போயினார். எ - று. ஏ அசை. தாம் சாரியை. உம்மைகள் எண். (எ)

8\. விண்டுவானுளோர்விரிஞ்சன்மாதவர்
கொண்டலூர்பவன்குழுமிப்பாங்குற
வண்டர்நாயகனமருந்தன்மையைக்
கண்டுமுந்துகண்களிப்பின்மேயினான்.

இ - ள். விண்டு வானுளோர் விரிஞ்சன் மாதவர் கொண்டல் ஊர்பவன் குழுமி பாங்குற - விஷ்ணுமூர்த்தியும் தேவர்களும் பிரமதேவரும் முனிவர்களும் இந்திரனும் கூட்டமாகச் (சேவித்துப்) பக்கத்தில் நிற்க,—அண்டர் நாயகன் அமரும் தன்மையை கண்டு - (வீரவாகுதேவர்) தேவர்களுக்குத்தலைவராகிய கந்தஸ்வாமி வீற்றிருக்குந்தன்மையைத் தரிசித்து,—முந்து கண் களிப்பின்மேயினான் - சிறந்தநேத்திரானந்தத்தோடு சன்னிதானத்திற்சென்றார். எ – று.

கண்களால் நேரேதரிசித்து ஆனந்தமடைந்தார் எனவுங் கூறுவர். (அ)

9\. உள்ளமென்புடனுருகத்தூயநீர்
வெள்ளங்கண்ணுறவிதிர்ப்புமேவாப்
பொள்ளெனப்புரம்பொடிப்பச்சூரடும்
வள்ளல்சேவடிவணங்கினனரோ.

இ - ள். உள்ளம் என்புடன் உருக தூயநீர் வெள்ளம் கண் உற - (ஆனந்தபாவசத்தினாலே) மனமானது (நெகிழ்ந்து) எலும்புடனுருகவும் பரிசுத்தமாகிய நீரானது வெள்ளமாகக் கண்களிலிருந்துசிந்தவும்,—விதிர்ப்பு மேவா - நடுக்கமுண்டாகவும்,—பொள்ளென புரம் பொடிப்ப - உடனே சரீரம் ரோமப்புளகமுறவும்,—சூர் அடும் வள்ளல்சே அடி வணங்கினன் - சூரபன்மனைச் சங்கரிக்கும் (அருட்) கொடையாளராகிய சுப்பிரமணியப்பெருமானது செவ்வியபாதங்களை நமஸ்காரஞ்செய்தார். எ–று. அரோ அசை. எண்ணும்மைகள் தொக்கன. (கூ)

10. அணங்குசால்வுறுமந்தண்சேவடி
வணங்கிமும்முறைமகிழ்ச்சியன்பிவை
யிணங்கவஞ்சலித்தேத்திநிற்றலுங்
குணங்கண்மேற்படுங்குமரன்கூறுவான்.

இ - ள். அணங்கு சால்வு உறும் அம் தண் சே அடி மும்முறை வணங்கி - தெய்வத் தன்மையிருந்துள்ள அழகிய குளிர்ச்சிபொருந்திய செவ்விய பாதங்களை மூன்றுதரம் விழுந்து நமஸ்காரஞ்செய்து (எழுந்து),—மகிழ்ச்சி அன்பு இவை இணங்க அஞ்சலித்து ஏத்தி நிற்றலும் - சந்தோஷமும் அன்புமாகிய இவ்விரண்டும் பொருந்த இரண்டுகைகளை யுங்குவித்து துதிசெய்து நிற்கவும்,—குணங்கள் மேல் படும் குமரன் கூறுவான் - குணாதீத ராகிய குமாரக்கடவுள் (பின்வருமாறு) திருவாய்மலர்ந்தருளுவார். எ - று.

எண்ணும்மைகள் தொக்கன. (௧௦)

11. சுரரைவாட்டுறுஞ்சூரன்முன்புபோய்
விரைவினம்மொழிவிளம்பமற்றவ
னுரைசெய்திட்டதுமொல்லைமீண்டது
மரபினிவ்விடைவகுத்தியாலென்றான்.

இ - ள். சுரரை வாட்டுறும் சூரன் முன்புபோய் விரைவின் நம்மொழி விளம்ப (வீரவாகுவே) தேவர்களைவருத்துகின்ற சூரபன்மனுக்கு முன்னாகப்போய் விரைவாக நமது வசனங்களை நீசொல்ல,—அவன் உரை செய்திட்டதும் ஒல்லை மீண்டதும் மரபின் இவ்விடை வகுத்தி என்றான் - (அதற்குப்பதிலாக) அவன் சொன்னதும் நீ விரைந்து திரும்பிவந்ததும் முறைப்படி இவ்விடத்திற் சொல்வாயாக என்று கேட்டருளினார்.எ-று

உம்மைகள் எண். மற்று, ஆல் அசை. (௧௧)

12. வீரன்கூறுவான்விமலநின்மொழி
சூரன்முன்புபோய்ச்சொல்லவிண்ணுளோ
ராரிருஞ்சிறையதனைவீடலே
காரியம்மெனக்கருத்திற்கொண்டிலன்.

இ - ள். (அங்ஙனங்கந்தஸ்வாமிகேட்டருள) வீரன் கூறுவான் - வீரவாகுசொல்லு கின்றார்,—விமல - மலரகிதராகிய பெருமானே,—நின்மொழி சூரன் முன்புபோய் சொல்ல - தேவரீருடைய வார்த்தையைச் சூரபன்மனுக்கு முன்னாகப்போய்ச் சொல்ல (அதற்கு அவன்),—விண் உளோர் ஆர் இரும் சிறை அதனை வீடலே காரியம் என கருத்தில்கொண்டிலன் - தேவர்களிருக்கின்ற பெரிய சிறையை விடுதலே செய்யத்தக்கதெ ன்று மனதில் நினைத்தானில்லை. எ - று. ஏ தேற்றம். அது பகுதிப்பொருள்விகுதி. ()

13. கெடலருஞ்சுரர்கிளையைவெஞ்சிறை
விடுகிலேனெனாவெகுண்டுகூறினா
னடிகளன்னதாலாண்டுநீங்கியே
கடிதுவந்தனன்கருமமீதென்றான்.

இ - ள். கெடல் அரும் சுரர் கிளையை வெம் சிறை விடுகிலேன் எனா வெகுண்டு கூறினான்-கெடுதலில்லாத தேவகூட்டத்தைக் கொடிய சிறையினின்றும்விடேனென்று கோபித்துச் சொன்னான்,—அடிகள் - ஸ்வாமீ,—அன்னதால் - அதனால்,—ஆண்டு நீங்கி கடிதுவந்தனன் ஈது கருமம் என்றான் - (அடியேன்) அவ்விடத்தில்நின்று நீங்கி விரைந்து திரும்பிவந்தேன் இதுவேநடந்தகாரியமென்று சொன்னார். எ - று.

ஏ அசை. ஆண்டென்றது மகேந்திரத்தை. (௧௩)

14. என்றகாலையின்யாண்டுமாகியே
நின்றுமுற்றொருங்குணர்ந்தநீர்மையா
னுன்றன்செய்கையுளொன்றுஞ்சொற்றிலை
நன்றுமற்றதுநவிறியாலென்றான்.

இ - ள். என்றகாலையில் - என்றிப்படி வீரவாகுதேவர் சொல்லியபோது,—யாண்டும் ஆகி நின்று முற்று ஒருங்கு உணர்ந்த நீர்மையான் - எவ்விடத்தும் வியாபகராய் நின்று (அவரவர்) செயல்களனைத்தும் ஒருங்கறிந்தருளுந் தன்மையையுடைய குமாரஸ்வாமி,— உன்தன் செய்கையுள் ஒன்றும் சொற்றிலை அது நன்று நவில்தி என்றான் - தம்பீ உன் வெற்றிச்செய்கைகளுள் ஒன்றுஞ் சொன்னாயில்லை அதனைநன்றாகச்சொல்லு என்றார். எ - று.

யாண்டுமாகிநின்று முழுதொருங்குணர்ந்த நீர்மையான் எனவே ஸர்வவியாபகமும் ஸர்வஞ்ஞத்துவமுமுடைய ரென்பது பெறப்படும்; படவே உபலக்ஷணத்தான் மற்றைய குணங்களுடையரென்பதுந் தானேபோதரும். எ, ஆல், மற்று அசை. (கச)

15. தொடக்கமுற்றுவாழ்சூரன்மாநக
ரடுத்தகாலையினகன்றவேலையிற்
றடுத்துளோரைநின்சரணவன்மையாற்
படுத்துவந்தனன்பான்மையீதென்றான்.

இ - ள். தொடக்கம் உற்று வாழ் சூரன் மாநகர் அடுத்த காலையின் அகன்ற வேலையின்.- (பெருமானே,) சகலசெல்வங்களையும் பெற்றுவாழுகின்ற சூரபன்மனது சிறந்த நகரத்திற்கு(அடியேன்)போனபோதும் (அந்நகரத்தைவிடுத்துத்) திரும்பிவந்தபோதும்,— தடுத்துளோரை - வந்து தடைசெய்த அசுரர்களை,—நின் சரணவன்மையால் படுத்து வந்தனன் ஈது பான்மை என்றான் - தேவரீரது திருவடிவலிமையினால் கொன்றுவந்தேன் இதுதான் அடியேன்செய்த விஷயமென்று சொன்னார். எ — று. (கரு)

16. அருந்திறற்புயனனையசெப்பலு
மிருந்தகந்தவேளிகலினோர்களால்
வருந்தினாய்கொலோமன்றவென்றுதன்
றிருந்துபேரருள்செய்தன்மேயினான்.

இ - ள். அரும் திறல் புயன் அனைய செப்பலும் - அருமையாகிய வீரவாகு தேவர் இவ்வாறு கூறுதலும்,—இருந்த கந்தவேள் - சிம்மாசனத்திலெழுந்தருளியிருந்த கந்தஸ்வாமி,— இகலினோர்களால் மன்ற வருந்தினாய் கொலோ என்று - (தம்பீ, வந்து)போர் செய்தவராகிய அசுரர்களால் மிகவும் வருத்தமடைந்தனையோ என்று திருவாய்மலர்ந்து,— தன் திருந்து பேரருள் செய்தன் மேயினான் - தமது சிறந்தபெருங்கருணையைப் பாலித்தருளினார். எ,— று.

இகலினோர் — பகைவரெனினும் வலியோரெனினுமாம். கொல் அசை. ஓ வினா.()

17. அங்கவ்வெல்லையினாயிரம்பெயர்ச்
செங்கண்மாயவன்றிசைமுகத்தவன்
மங்குல்மேலவன்வதனநோக்கியே
யெங்கணாயகனினையகூறுவான்.

இ - ள். அவ் எல்லையின் - அப்பொழுது,—ஆயிரம் பெயர் செங்கண் மாயவன் திசைமுகத்தவன் மங்குல் மேலவன் வதனம் நோக்கி எங்கள் நாயகன் இனைய கூறுவான்

ஆயிரநாமங்களையுடைய சிவந்த கண்ணினராகிய விஷ்ணுவும் பிரமதேவரும் முகில்வாகனனாகிய இந்திரனும் (ஆகிய இவர்களுடைய) முகத்தைப்பார்த்து எம்பெருமானாகிய கந்தஸ்வாமி இவ்வாறு கூறுவாராயினர். எ - று. அங்கு, ஏ அசை. (கஎ)

18. தேவரைச்செயுஞ்சிறைவிடுத்துநீ
மேவுநன்கெனவெய்யசூரனுக்
கேவுதூதைவிட்டியம்புவித்தனம்
பாவியன்னதுபயனென்றுன்னலான்.

இ - ள். தேவரை செயும் சிறை விடுத்து நீ நன்கு மேவு என வெய்ய சூரனுக்கு ஏவு தூதைவிட்டு இயம்புவித்தனம் - நாம் சூரபன்மனுக்கு அனுப்புந் தூது விட்டுத் தேவர்களைவைத்த சிறையினின்றும்விடுத்து நீசுகமாகவிருவென்று சொல்லுவித்தோம்,— பாவி அன்னது பயன் என்று உன்னலான் - பாவியாகிய அவன் அதனை ஒருபிரயோசனமானவசனமாக நினைத்தானில்லை. எ – று. ஏவு தூது சாதியடை. (கஅ)

19. வீதலேயவன்விதியதாதலிற்
றீதில்விண்ணவர்சிறைவிடோமென
வோதினனவனுயர்வுநீக்குவான்
போதுநாளையாமெனப்புகன்றனன்.

இ - ள். வீதலே அவன் விதியது ஆதலில் தீது இல் விண்ணவர் சிறைவிடோமென ஓதினன் - (அவனுக்கு எவ்வளவோபோதனைகளைச்செய்தவழியும்) இறந்துபோதலே அப்பாவிக்கு விதியாதலின்குற்றமில்லாததேவர்களைச்சிறையினின்றும் விடோமென்று சொன்னான் (ஆதலால்),—அவன் உயர்வு நீக்குவான் யாம் நாளை போதும் எனபுகன்றனன்- அச்சூரபன்மனுடைய மேன்மையை நீக்கும் பொருட்டு நாளைக்குப்போவோமென்று கூறினர். எ – று.

ஏ தேற்றம். அது பகுதிப்பொருள்விகுதி. உயர்வு - இறுமாப்பெனவுங்கூறுவர். (கக)

20. ஆறுமாமுகத்தையனிவ்வகை
கூறக்கேட்டுளோர்கொடியசூர்மிசைச்
சேறுமென்றசொற்றெளிவினந்துயர்
மாறிற்றென்றனர்மகிழ்ச்சியெய்தினர்.

இ - ள். ஆறுமாமுகத்து ஐயன் இவ்வகை கூற கேட்டுளோர் - ஆறுதிருமுகங்களையுடைய கந்தஸ்வாமி இவ்விதமாகச்சொல்லியருள அத்திருவாக்கைக்கேட்ட அரிபிரமேந்திராதிதேவர்கள்,—கொடிய சூர் மிசை சேறும் என்றசொல் தெளிவின் - (எம்பெருமான்) கொடும்பாவியாகிய சூரபன்மனிடத்தில் (போர்செய்யப் போவோம்) என்று திருவாய்மலர்ந்தருளிய அருமைத்திருவாக்கின்றெளிவினாலே,—நம்துயர் மாறிற்று என்றனர் மகிழ்ச்சி எய்தினர் - நமதுதுக்கமொழிந்தது என்று சொல்லிப்பேரானந்தமடைந்தார்.

ஐயன் - யாவரானும் பூசிக்கத்தக்கவன். தெளிதலில்லாத நந்துயரைச் சொல்மாற்றிற்றென்றலுமாம்; இப்பொருட்கு மாற்றிற்று என்பது எதுகைநோக்கி மாறிற்று என நின்ற தென்க. (உ0)

21. ஆனவத்துணையாடன்மொய்ம்பினன்
றானவப்பதிச்சயந்தனுற்றது
மேனைச்செய்கையுமெடுத்துக்கூறியே
வானவர்க்கிறைமனத்தைத்தேற்றினன்.

இ - ள். ஆன அ துணை ஆடல் மொய்ம்பினன் - அவ்வாறாகிய அப்பொழுது வீரவாகுதேவர்,—தானவர் பதி சயந்தன் உற்றதும் ஏனை செய்கையும் எடுத்துக் கூறி - அசுரர்களுக்கிருப்பிடமாகிய மகேந்திரபுரியில் சயந்தன் சிறையிலிருப்பதையும் மற்றுள்ள விஷயங்களையும் எடுத்துச்சொல்லி,—வானவர்க்கு இறை மனத்தை தேற்றினன் - தேவராஜனாகிய இந்திரனது மனத்தைத் தெளிவித்தார். எ — று.

தானவர் பதி என்பது ஈற்றுமெய்கெட்டுத் தானவப்பதியென்றாயிற்று. உம்மைகள் எண். ஏகாரம் அசை. (உக)

22. சீருலாமகேந்திரபுரத்தினும்
வீரவாகுமீண்டதுவிளம்பினம்
மாரனூர்க்கடலலைப்பவாண்டுறுஞ்
சூரனுற்றதும்பிறவும்சொல்லுவாம்.

இ - ள். சீர் உலாம் மகேந்திர புரத்தினும் வீரவாகு மீண்டது விளம்பினம் - சிறப்புப்பொருந்திய மகேந்திரபுரத்தினின்றும் வீரவாகுதேவர் திரும்பிவந்தவிஷயத்தைச் சொன்னோம் (இனி),—ஆர் அனூர் கடல் அலைப்ப - பெருந்துக்கமாகிய சமுத்திரம் புடையலைப்ப,—ஆண்டு உறும் சூரன் உற்றதும் பிறவும் சொல்லுவாம் - அங்கிருக்கின்ற சூரபன்மன் (தன்மகனாகிய வச்சிரவாகு இறந்தமையால்) அடைந்தவருத்தத்தையும் நகர் புரிதன்முதலியவற்றையுங் கூறுகின்றோம். எ — று.

உம்மை நீக்கப்பொருள். ஆரனூர்க்கடல் - ரூபகம். (உஉ)

வீரவாகுமீட்சிப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூசுகூ.

---

# ரனகர்புரிபடலம்.

1. ஊகவான்படையுலப்பவச்சிர
வாகுமாண்டதும்வாகைமொய்ம்பின
னேகுந்தன்மையுமேவற்றூதுவர்
சோகமோடுபோய்ச்சூர்முன்கூறினர்.

இ - ள். ஊக வான்படை உலப்ப வச்சிரவாகு மாண்டதும் வாகை மொய்ம்பினன் ஏகும் தன்மையும் ஏவல் தூதுவர் சோகமோடு போய் சூர்முன் கூறினர் - வகுப்புப்பொருந்திய பெருந்தொகையான சேனைகளிறக்க வச்சிரவாகு இறந்தமையும் வீரவாகுதேவர் (நகரழித்தன்முதலிய செயல்களைச்செய்து திரும்பிச்) சென்றதன்மையையும் (நியமித்த) ஏவல்களைச்செய்கின்ற தூதுவர்கள் துன்பத்தோடுபோய்ச் சூரபன்மனிடத்தில் சொன்னார்கள். எ — று. உம்மைகள் எண். (க)

2. ஈரைஞ்சென்னிசேரிளையகான்முளை
வீரஞ்சிந்தியேவிளிந்தவாற்றினைச்
சூரன்கேட்டலுந்துளங்கித்துன்பெனும்
வாரியுள்ளுறமயங்கிவீழ்ந்தனன்.

இ - ள். ஈர் ஐம் சென்னிசேர் இளையகான்முளை வீரம் சிந்தி விளிந்த ஆற்றினை - பத்துத்தலைகளையுடைய இளையமகனாகிய வச்சிரவாகு சௌரியமிழந்து இறந்ததன்மையை,—சூரன் கேட்டலும் - சூரபன்மன் (தூதுவர்வழியாகக்) கேட்டலும்,—துளங்கி துன்பு எனும் வாரி உள் உற மயங்கி வீழ்ந்தனன் - நடுக்கங்கொண்டு துக்கமாகிய கடலினுள்ளே மிக அறிவுமயங்கிவீழ்ந்தான். எ — று. ஏ அசை. (உ)

வே று.

3. கண்ணிடைநெடும்புனல்காலமைந்தன்மே
லுண்ணிகழன்புசென்றுயிரையீர்ந்திடத்
துண்ணெனவுயிர்ப்பெனும்புகையுஞ்சுற்றிட
வெண்ணருஞ்செல்லல்கொண்டிரங்கியேங்கினான்.

இ - ள். கண்ணிடை நெடும் புனல் கால - கண்களிலிருந்து சோகபாஷ்பமாகிய மிக்க நீர்சிந்தவும்,—மைந்தன்மேல் உள் நிகழ் அன்பு சென்று உயிரை ஈர்ந்திட - இளைய மகனாகிய வச்சிரவாகுமீது மனத்தில்விளங்கும் அன்பாகிய வாளானதுவந்து உயிரை அறுக்கவும்,—துண்ணென உயிர்ப்பு எனும் புகையும் சுற்றிட எண் அரும் செல்லல் கொண்டு இரங்கி ஏங்கினான் - விரைவாகப் பெருமூச்சென்று சொல்லப்படும் புகையும் சூழவும் அளவிடப்படாத பெருந்துக்கங்கொண்டு அழுது ஏக்கமடைந்தான். எ — று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். ஈர்தல் வினைக்கு ஏற்ப அன்பு வாளாகவுருவகிக்கப்பட்டது; உயிராகிய மரமென்க. உயிர்ப்பெனும்புகை ரூபகம். (ங)

4. ஏங்கினன்புலம்பலுமினையவெய்யசூர்
பாங்கமர்தமர்களும்பரிசனத்தரும்
தீங்குசெயரக்கருந்தெரிவைமார்களு
நீங்கறவழுதனர்நெடுங்கணீருக.

இ - ள். ஏங்கினன் புலம்பலும் - சூரபன்மன் (புத்திரசோகத்தினால்) மனமேங்கி அழுதலும்,—இனைய வெய்ய சூர் பாங்கு அமர் தமர்களும் பரிசனத்தரும் தீங்குசெய் அரக்கரும் தெரிவைமார்களும் நெடுங்கண் நீர் உக நீங்கற அழுதனர் - இந்தக்கொடிய சூரபன்மனுக்குப் பக்கத்திலிருந்த உறவினரும் பரிவாரசனங்களும் (பிறருக்குத்) தீமையையே செய்கின்ற அரக்கர்களும் பெண்களும் நெடியகண்களினின்றும் நீர்சிந்த விடாமலழுதார்கள். எ — று

உம்மைகள் எண். பிரிநிலை யேகாரம் விகாரத்தாற்றொக்கது. (௪)

5. பழிதவிர்கற்புடைப்பதுமைதன்மக
னொழிவுறுதன்மையையோர்ந்துமாமலர்க்
குழலவிழ்ந்தலமரக்கொங்கைமேற்புடைத்
தழுதனள்வீழ்ந்தனண்மறிக்குமங்கையாள்.

இ - ள். பழிதவிர் கற்புடை பதுமை - குற்றமில்லாத கற்பினையுடைய பதுமகோமளையானவள்,—தன்மகன் ஒழிவு உறு தன்மையை ஓர்ந்து - தனது இளையகுமாரனாகிய வச்சிரவாகு இறந்ததன்மையைக்கேள்விப்பட்டு,—மறிக்கும் அங்கையாள் - கைகுலைத்தவளாய்,—மாமலர் குழல் அவிழ்ந்து அலமர கொங்கைமேற்புடைத்து அழுதனள் வீழ்ந்தனள்-சுகந்தமலர்களையணிந்த கூந்தல் அவிழ்ந்து அசையத் (தனது) ஸ்தனங்களிலடித்து அழுது (மயங்கி) விழுந்தாள். எ — று.

சூரபன்மனொருவனையே யன்றி எத்துணைப்பேரழகுடையவரையேனும் மனத்தா லிச்சித்து நோக்காத பதிவிரதாதருமபத்தினி என்பதுபோதர 'பழிதவிர்கற்புடைப் பதுமை' என விசேடணமொழி புணர்த்திக்கூறினர். (ரு)

6. தொல்லியலிழுக்கியசூரனென்பவன்
புல்லியபின்முறைப்புணர்வின்மாதருஞ்
சில்லியற்கூந்தறாழ்சேடிமார்களு
மெல்லவருந்தழீஇயிரங்கன்மேயினார்.

இ - ள். தொல் இயல் இழுக்கிய சூரனென்பவன் - பழமையாகிய ஒழுக்கத்தினின் றுந் தவறிய சூரனென்றுசொல்லப்படும் அரசன்,—புல்லிய பின்முறை புணர்வின் மாத ரும் - தழுவும்பொருட்டுப் பின்பு முறையாகவந்த வதுவைக் கிழத்தியரும்,— சில் இயல் கூந்தல் தாழ் சேடிமார்களும் - பொன்வட்டத்தகட்டணியணிந்த தாழ்ந்த கூந்தலையுடைய தோழிமார்களும் (ஆகிய),—எல்லவரும் தழீஇ இரங்கல் மேயினார் - எல்லாருந்தழுவி அழத்தொடங்கினார்கள். எ – று.

உம்மை முன்னையன எண். பின்னையது முற்று. (சு)

7. களமெழுமிசையொலிகடிநல்யாழொலி
துளையொலிவயிரொலிதூரியத்தொலி
யளமருமொழியொலியடங்கியப்பெரு
வளநகர்புலம்பொலிமயங்கிற்றென்பவே.

இ - ள். களம் எழும் இசை ஒலி கடிநல் யாழ் ஒலி - (அந்நகரத்திலுள்ளார்) கண் டத்தினின்றும் எழும்புகின்ற சங்கீதவொலியும் சிறந்த நல்ல யாழினின்றும் உண்டாகும் ஓசையும்,—துளையொலி வயிரொலி தூரியத்தொலி - (புல்லாங்குழல் முதலிய) துளைக் கருவிகளின் ஓசையும் கொம்பினோசையும் மற்றைய வாத்தியங்களினோசையும்,—அளமரு மொழியொலி அடங்கி - சுழன்று துயர்கூறும் மொழியும் அடங்க,—அ பெரு வளநகர் புலம்பு ஒலி மயங்கிற்று - அந்தப்பெரிய செல்வத்தினையுடைய நகரத்தில் அழுகை ஓசையே பொருந்திற்று. எ – று.

பிரிநிலை ஏகாரமு மெண்ணும்மைகளுந்தொக்கன. அலமரு என்பது அளமருவென எதுகைநோக்கிப் போலியாயிற்று. செய்தெனெச்சம் திரித்துப்பொருள் கூறப்பட்டது. என்ப, ஏ அசை. (எ)

8. அன்னதுபோழ்தினிலறத்தைக்காய்தரு
துன்னெறிமந்திரிசூரபன்மனு
மன்னவன்முன்னுறவந்துகைதொழு
தின்னனகேண்மெனவிசைத்தன்மேயினான்.

இ - ள். அன்னது போழ்தினில் - அச்சமயத்தில்,—அறத்தை காய்தரு துன்னெறி மந்திரி-தருமகோபன் என்று கூறப்படுந் துன்மார்க்கத்தை உடைய மந்திரியானவன்,— சூரபன்மனும் மன்னவன் முன் உற வந்து - சூரபன்மனாகிய அரசனுக்கு முன்னாக வந்து,—கை தொழுது - இரண்டு கைகளையுங் குவித்து வணங்கி,—இன்னன கேண் மென இசைத்தல் மேயினான் - இவைகளைக் கேளுமென்று சொல்வானாயினான். எ – று.

அறத்தைக் காய்தரு மந்திரி துன்னெறி மந்திரி எனத் தனித்தனி இயையும். தன்னைவைத்தாளு மரசனுக்கு நற்புத்திகூறி நல்வழிச்செலுத்துதல் மந்திரிக்கியல்பாத

லின், இவன் அப்படிச்செய்யாது துர்ப்போதனைசெய்து துன்னெறியிற் செலுத்துவோ னுதலால் 'துன்னெறி மந்திரி' என்றார். கேளும் என்பது கேண்ம் என விகாரமாயிற்று.

9. மெய்ப்புவியண்டங்கள்பரித்தமேன்மையை
யொப்பருந்திருவினையுலப்பிலாயுளை
செப்பருந்திறலினைசிறந்தசீர்த்தியை
யிப்பரிசழுங்குதலியற்கையாகுமோ.

இ - ள். மெய் புவி அண்டங்கள் பரித்த மேன்மையை - (இராசனே) உண்மை யான பிருதுவியிலுள்ள அண்டங்களை ஆளுகின்ற மேன்மை உடையீர்,—ஒப்பு அரும் திருவினை - உயர்வொப்பில்லாத செல்வத்தையுடையீர்,—உலப்பு இல் ஆயுளை - அழிவில் லாத ஆயுளையுடையீர்,—செப்ப அரும் திறலினை - சொல்லமுடியாத வல்லமையை யுடையீர்,—சிறந்த சீர்த்தியை - சிறந்த மிகுபுகழை உடையீர் (இவ்வியல்பினையுடைய மகாராசாதிராசனுகிய நீர்),—இப்பரிசு அழுங்குதல் இயற்கை ஆகுமோ - இப்படிவரு ந்துதல் முறைமையாகுமோ ஆகாது. ஒகாரம் எதிர்மறை. (௯)

10. தெண்டிரைநேமிவான்செறிந்துகொள்ளினு
மண்டமதழியினுமனைத்துமாயினும்
விண்டிடலின்றிவாழ்வீரநீமனங்
கொண்டிடுதிண்மையுங்குன்றற்பாலதோ.

இ - ள். தெள் திரை நேமி வான் செறிந்து கொள்ளினும் - தெளிந்த அலைகளையு டைய கடலானது (பிரளயமாகி) ஆகாயத்தை மூடிக்கொண்டாலும்,—அண்டம் அது அழியினும் - அண்டங்கள் அழிந்தாலும்,—அனைத்தும் மாயினும் - எல்லாப்பொருளும் அழிந்தாலும்,—விண்டிடல் இன்றி வாழ் வீர - (ஒருகாலத்தும்) அழியாமல் இருக்கின்ற பெருவாழ்வைப்பெற்ற வீரனே,—நீ மனம் கொண்டிடு திண்மையும் குன்றற்பாலதோ - நீர் மனத்திற்கொண்ட தைரியமுங் குறையத்தக்கதோ தக்கதன்று. உம்மை முன்னை யன எண்ணேடுகூடிய உயர்வுசிறப்பு; பின்னையது உயர்வுசிறப்பு. ஒகாரம் எதிர்மறை.

11. ஏவரும்வியத்தருமிறைவநீயிவ
ணோவெனவரற்றியேயுயங்குற்றுயெனின்
மூவருநகைப்பர்கண்முன்னமேவல்செய்
தேவருநகைப்பர்கள்புகழுந்தேயுமால்.

இ - ள். ஏவரும் வியத்தரும் இறைவநீ இவண் ஓ என அரற்றி உயங்குவாயெனில் - எல்லாராலும் புகழத்தக்க மகாராசனே நீ இவ்விடத்தில் ஓவென்று அழுதுகொண்டு வருந்துவீரேயானுல்,—மூவரும் நகைப்பர்கள் - மும்மூர்த்திகளுஞ் சிரிப்பார்கள்,—முன் னம் ஏவல்செய் தேவரும் நகைப்பர்கள் புகழும் தேயும் - உமக்குமுன்னோ ஏவலைச் செய்த தேவர்களுஞ் சிரிப்பார்கள் (அம்மட்டோ) உம்முடைய கீர்த்தியுங்குறையும். எ-று.

உம்மை முன்னைய இரண்டும் முற்று; பின்னையவை இறந்ததுதழீஇயவெச்சம். ஆல், ஏ அசை. தேவரும் என்ற உம்மை இழிவுசிறப்பென்பாருமுளர். (௧௧)

12. பூதர்தம்படையலபுராரிநல்கிய
காதலனேயலகழறவிட்டதோர்
தூதுவன்செய்தபுன்றொழிலுக்காற்றலை
பேதுறலாகுமோபெருமைக்கீறிலாய்.

இ - ள். பூதர்தம் படை அல புராரி நல்கிய காதலனே அல - பூதசேனைகளல்ல சிவ பெருமான் பெற்ற மகனாகிய குமாரனல்ல,—கழற விட்டது ஓர் தூதுவன் செய்த புன் தொழிலுக்கு ஆற்றலை - அவன் உன்னிடத்தில் (தேவச்சிறையை விடு என்னும் விஷயத்தைச்) சொல்லும்படி அனுப்பிய ஒரு தூதன்செய்த அற்பகாரியத்தைச் சகிக்கின்றீரில்லை,—பெருமைக்கு ஈறு இலாய் - பெருமைக்கு முடிவில்லாத ராசனே,—பேதுறல் ஆகுமோ - (இதற்காக) மனங்கலங்கலாகுமோ. எ — று.

ஏ, ஓர் அசை. தம் சாரியை. ஓகாரம் எதிர்மறை. நான்கனுருபு இரண்டனுருபாக வுரைக்கப்பட்டது. (௧௨)

13. தந்தையர்துஞ்சினுந்தம்முன்பின்னவர்
மைந்தர்கடுஞ்சினுமற்றுஞ்சார்ந்தவர்
தந்தொகைதுஞ்சினுஞ்சயத்தின்மேலையோர்
சிந்தைகொள்வன்மையிற்சிறிதுந்தேயுமோ.

இ-ள். தந்தையர் துஞ்சினும்-பிதாக்கள் இறந்தாலும்,—தம் முன்னவர்(துஞ்சினும்) - தமையன்மார் இறந்தாலும்,—(தம்)பின்னவர் (துஞ்சினும்)-தம்பிமார் இறந்தாலும்,—மைந்தர்கள் துஞ்சினும் - புத்திரர்கள் இறந்தாலும்,—மற்றும் சார்ந்தவர் தம் தொகை துஞ்சினும் - வேறும் சேர்ந்திருப்பவர்களின் சமூகமழிந்தாலும்,—சயத்தின் மேலையோர் - வெற்றியினன் மேம்பட்ட சுத்தவீரர்கள்,—சிந்தைகொள் வன்மையில் சிறிதும் தேயுமோ - மனத்திற்கொண்டிருக்கின்ற திடத்திற் சற்றேனுங் குறையுமோ குறையாது. எ — று.

தம் சாரியை. ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையன எண்; பின்னையது உயர்வு சிறப்பு. (௧௩)

14. மேதகுபெருந்திறல்வீரர்தம்மையு
மாதரும்வெல்வரான்மாயுமூழ்வரி
னாதலினின்மகற்காயுள்குன்றலிற்
றூதனுமட்டனனாகித்தோன்றினன்.

இ - ள். மாயும் ஊழ் வரின் மேதகு பெரும் திறல் வீரர் தம்மையும் மாதரும் வெல்வர் - இறக்கின்ற விதிவந்தால் மேன்மைபொருந்திய சிறந்த வெற்றியையுடைய வீரர்களையும் பெண்களும் வெல்லுவார்,—ஆதலின் நின் மகற்கு ஆயுள் குன்றலில் தூதனும் அட்டனன் ஆகி தோன்றினன் - ஆதலால் உமது மகனாகிய வச்சிரவாகுவுக்கு வயது குறைந்தபடியால் தூதாகவந்த வீரவாகுவும் (அவனைக்) கொன்றவனாகத் தோற்றப்பட்டான். எ — று.

உம்மை முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது இழிவுசிறப்பு. தம் சாரியை. ஆல் அசை. (௧௪)

15. வெவ்வியவொன்னலர்வினையும்வன்மையுங்
கைவருநெல்லியங்கனியினாடியே
செய்வகைதேற்றினஞ்செய்கலாதிவ
ணைவதுமாண்மையினலத்திற்காகுமோ.

இ - ள். வெவ்விய ஒன்னலர் வினையும் வன்மையும் கைவரு நெல்லியம் கனியின் நாடி - கொடிய பகைவர்களுடைய செய்கைகளையும் வலிமையையும் உள்ளங்கையிலிருக்கின்ற நெல்லிப்பழத்தைப்போல ஆராய்ந்தறிந்து,—செய்வகை தேற்றினம் செய்கலாது - செய்யவேண்டிய காரியங்களைத் தெளிந்து செய்யாமல்,—இவண் நைவதும் ஆண்மையின் நலத்திற்கு ஆகுமோ - இவ்விடத்தில் வருந்துவதும் ஆண்மையினன்மைக்குத் தகுமா தகாது. எ — று.

உம்மை முன்னைய எண்; பின்னையது இழிவுசிறப்பு. ஏ அசை. ஓ எதிர்மறை. தேற்றினம்: வினைமுற்றெச்சம். (கடு)

16. வரங்களுமதுகையும்வரம்பின்றெய்தியே
யுரங்கிளர்சூரனென்றொருபேர்பெற்றநீ
தரங்கமதடைவதுந்தலைமைக்கேற்பதோ
விரங்கலையிரங்கலையென்றுதேற்றினன்.

இ - ள். வரங்களும் மதுகையும் வரம்பு இன்று எய்தி உரம் கிளர் சூரன் என்று ஒரு பேர் பெற்ற நீ - (சிவபெருமானிடத்தில்) வரங்களையும் வலிமையையும் அளவில்லாமல் பெற்று வலிமை விளங்குகின்ற சூரனென்னு மொருபெயரைப் பெற்றிருக்கின்ற நீர் (அவைகளை நினையாது),—தரங்கமது அடைவதும் தலைமைக்கு ஏற்பதோ - (அற்ப காரியத்தைக்குறித்து) மனக்கலக்கமடைவதும் (மேற்கூறப்பட்ட) முதன்மைக்குத்தகுமா தகாது,—இரங்கலை இரங்கலை என்று தேற்றினன் - வருந்தவேண்டாம் வருந்தவேண்டாமென்று கூறித்தெளிவித்தான். எ — று.

உம்மை முன்னையன எண்; பின்னையது இழிவுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் தேற்றம். அது பகுதிப்பொருள்விகுதி. (கசு)

17. மேற்றிகழறத்தினைவெருளுநாமத்தான்
தேற்றலுமவுணர்கோன்றெளிவுபெற்றெழீஇ
யாற்றருந்துயரினையடக்கித்தன்பணிக்
கூற்றியலுமையரைநோக்கிக்கூறுவான்.

இ - ள். மேல் திகழ் அறத்தினை வெருளும் நாமத்தான் - மேன்மைவிளங்குந் தருமகோபன்,—தேற்றலும் அவுணர் கோன் தெளிவு பெற்று எழீஇ - (இவ்வாறு போதனைசெய்து) தெளிவித்தலும் அவுணர்க்கரசனாகிய சூரபன்மன் மனத்தெளிவுபெற்றெழுந்து,—ஆற்ற அரும் துயரினை அடக்கி - சகிக்கமுடியாத துக்கத்தைச் சகித்துக்கொண்டு,—தன் பணி கூறு இயல் உமையரை நோக்கி கூறுவான் - தன்னேவற்பகுதியிலொழுகின்ற ஏவற்காரரைப்பார்த்துச் சொல்லுகின்றான். எ — று.

ஆற்ற அரும் என்பது 'ஆற்றரும்' என அகரந்தொக்கது. 'தன் பணி கூற்று இயல் - தன்னேவலைச்செய்கின்ற இயமனையொத்த' எனப்பொருள் கூறுவாருமுளர். மேற்றிகழ் அறமென்க.

18. சேயுயிர்வெளவியேசிறந்தவிந்நகர்
மாய்வதுபுணர்த்திடுவலியதூதுவன்
போயதுதெரிந்திரோபுகலக்கேட்டிரோ
நீயிர்கள்வாய்மையைநிகழ்த்துமென்னவே.

இ - ள். சேய் உயிர் வெளவி சிறந்த இ நகர் மாய்வது புணர்த்திடும் வலிய தூதுவன் - என் மகனது பிராணனைக்கவர்ந்து சிறந்த இந்நகரத்தை அழித்த வலியவனாகிய தூதுவன்,—போயது தெரிந்திரோ புகலக் கேட்டிரோ - போனது தெரியுமா (அல்லது) யாரேனுஞ் சொல்லக்கேட்டீர்களா,—நீயிர்கள் வாய்மையை நிகழ்த்தும் என்ன - நீங்கள் உண்மையைச்சொல்லுங்கள் என்று கேட்க. எ — று.

ஏகாரம் இரண்டும் அசை. ஓகாரம் இரண்டும் வினா. (கஅ)

19. துப்புடனிவ்வழிதூதிற்சென்றுளா
னிப்புரமகன்றனனிலங்கைநோக்குறு
வப்புறமேகினனதனைக்கண்டன
மெய்ப்பரிசிஃதெனவிளம்பினாரோ.

இ - ள். தூப்புடன் இவ்வழி தூதில் சென்றுளான் - வலிமையுடன் இவ்விடத்தில் தூதாகவந்தவன்,—இ புரம் அகன்றனன் இலங்கை நோக்குறு அ புறம் ஏகினன் - இந்நக ரத்தைவிட்டு இலங்கையை நோக்கிச்சென்று அப்பாற்போயினன்,—அதனை கண்டனம் - அதை யாம் பார்த்தோம்,—இஃது மெய்ப்பரிசு என விளம்பினர் - இது உண்மையான விஷயமென்று சொன்னார்கள். எ — று. அரோ அசை. (௧௯)

வேறு.

20. அம்மொழிவினவலோடுமவுணர்கோன்றன்பானின்ற
கம்மியர்தம்மைநோக்கிக்கடிதுபோயகிலநல்கிச்
செம்மலர்மிசையேவைகுந்திசைமுகத்தொருவன்றன்னை
யிம்மெனக்கொணர்திரென்னவனையவரிசைக்கலுற்றார்.

இ - ள். அ மொழி வினவலோடும் - இங்ஙனந் தூதுவர்கள் சொன்ன வார்த்தை யைக்கேட்டலும்,—அவுணர்கோன் தன் பால் நின்ற கம்மியர் தம்மை நோக்கி - சூரபன் மன் தன் பக்கத்துநின்ற ஏவற்காரரைப்பார்த்து,—கடிது போய் - விரைந்து சென்று,— செம் மலர் மிசை வைகும் திசை முகத்து ஒருவன் தன்னை - உலகத்தைப் படைத்துக் கொண்டு செந்தாமரைப்பூவிலிருக்கின்ற நான்குமுகங்களையுடைய பிரமனை,—இம்மென கொணர்திர் என்ன - சீக்கிரத்தில் கொண்டுவாருங்களென்று பணிக்க,—அனையவர் இசைக்கல் உற்றார் - அவர்கள் சொல்லுகின்றார்கள். எ - று.

ஏகாரம் அசைநிலை. தம், அத்து, தன் சாரியை. (௨0)

21. ஈங்கிதுகேட்டிமன்னவினையமுதண்டநல்குந்
தேங்கமழ்பதுமத்தண்ணறேவர்கோனாதியான
பாங்கினரோடுமேவிப்படையொடும்புவியில்வந்த
காங்கெயன்றன்கணுற்றானென்பராற்கண்டோரென்றார்.

இ - ள். மன்ன - இராசனே,—ஈங்கு இது கேட்டி - நாஞ்சொல்வதைக் கேட்டரு ளுக,—இனையமுது அண்டம் நல்கும் தேம் கமழ் பதுமத்து அண்ணல் - இந்தப்பெரிய அண்டத்தைப்படைத்த வாசனைகமழாநின்ற பதுமாசனராகிய பிரமதேவர்,— தேவர் கோன் ஆதியான பாங்கினரோடு மேவி - தேவராசனாகிய இந்திரன் முதலிய தேவர்க ளோடுஞ்சேர்ந்து,—படை யொடும் புவியில் வந்த காங்கெயன் தன் கண் உற்றான் என் பர் கண்டோர் என்றார் - சேனையுடன் பூமியில்வந்த கந்தஸ்வாமியிடத்திற் சென்றிருக் கின்றாரென்று கண்டவர்கள் (இச்சங்கதியை) யறிவித்தார்களென்று சொன்னார். எ - று.

, ஆல் அசை. அத்து, தன் சாரியை. (௨௧)

22. தொழுவர்களினையமாற்றஞ்சொற்றலுஞ்சூரன்கேளா
விழுமிதுவிழுமிதென்னாவெய்துயிர்ப்பெய்திச்சீறி
யழலெழநகைத்துமற்றையண்டத்தினிருந்துநல்குஞ்
செழுமலரயனைப்பற்றிச்செல்லுமின்வல்லையென்றான்.

இ - ள். தொழுவர்கள் இனைய மாற்றம் சொற்றலும் - ஏவலாளர் இவ்வார்த்தை யைக்கூறுதலும்,—சூரன் கேளா விழுமிது விழுமிது என்னா - சூரபன்மன் கேட்டு நன்று நன்றென்றுகூறி,—வெய்துயிர்ப்பு எய்தி சீறி - சுடுமூச்செறிந்து கோபங்கொ ண்டு,—அழல் எழ நகைத்து - நெருப்புண்டாகும்படி சிரித்து,—மற்றை அண்டத்தின் இருந்து நல்கும் செழுமலர் அயனை பற்றி வல்லை செல்லுமின் என்றான் - மற்றை யண் டத்திலிருந்து சிருட்டித்தொழிலைச்செய்கின்ற அழகிய பதுமாசனராகிய பிரமதேவரைப் பிடித்துக்கொண்டு சீக்கிரம் வாருங்களென்று ஆஞ்ஞாபித்தான். எ — று. (௨௨)

23. கொற்றவனினையமாற்றங்கூறலுமுழையர்கேளா
விற்றிதுசெய்துமென்றுவிசைவுகொண்டொல்லையேகி
மற்றையண்டத்திற்சென்றுவானவர்முதுவன்றன்னைப்
பற்றினர்கொணர்ந்தார்தங்கோன்பணித்திடுபரிசுகூறி.

இ - ள். கொற்றவன் இனைய மாற்றம் கூறலும் - அரசனாகிய சூரபன்மன் இவ்வாறு ஆஞ்ஞாபித்தலும்,—உழையர் கேளா - ஏவலாளர் கேட்டு,—இற்றிது செய்தும் என்று இசைவு கொண்டு ஒல்லை ஏகி - இதனைச் செய்வேமென்று சம்மதித்து விரைந்து சென்று,—மற்றை அண்டத்தில் சென்று - அப்பாலண்டத்திற்போய்ப் (பிரமதேவரைக் கண்டு),—தம் கோன் பணித்திடு பரிசு கூறி - தமது அரசன் ஆஞ்ஞாபித்த கட்டளையைச் சொல்லி யறிவித்து,—வானவர் முதுவன் தன்னை பற்றினர் கொணர்ந்தார் - அப்பிரம தேவரைப்பிடித்துக்கொண்டுவந்தார்கள். எ – று. தன் சாரியை. (உ௩)

24. பரிசனர்பலருமீண்டிப்பார்புகழ்சூரனென்னு
மரசன்முற்கொணர்ந்துவேறோரண்டத்தினயனையுய்ப்ப
வரிசையாலவனைநோக்கிமாணழிவுற்றமற்றித்
திருநகரதனைத்தொன்மைபோலவேசெய்தியென்றான்.

இ - ள். பரிசனர் பலரும் ஈண்டி வேறு ஓர் அண்டத்தின் அயனை பார் புகழ் சூரன் என்னும் அரசன் முன் கொணர்ந்து உய்ப்ப - ஏவலாளர் பலரும் நெருங்கிச்சென்று மற்றையண்டத்திலிருக்கின்ற பிரமதேவரை உலகத்தாரால் புகழப்படுகின்ற சூரபன்மனென்னும் பெயரையுடைய அரசனுக்கு முன்னாகக்கொண்டுவந்துவிட,—வரிசையால் அவனை நோக்கி - (அவ்வரசன்)முறைமையாக அவரைப்பார்த்து,—மாண் அழிவு உற்ற இ திரு நகர் அதனை தொன்மைபோல செய்தி என்றான் - நீர் சிறப்புக்குறைந்தழிந்த இந்தத் திருநகரத்தை முன்போலமையும்படி செய்வீராக என்றான். எ – று.

வரிசை - முறைமை. மற்று, ஏ அசை. தொன்மைபோல என்றது பொன்னாலமைந்து ரத்தினங்களழுத்தப்பட்டு எவ்வாறு இருந்ததோ அவ்வாறுபோல என்க. அது பகுதிப்பொருள்விகுதி. (உ௪)

25. சூரன்மற்றிதனைச்செப்பச்சொற்பணிதலைக்கொண்டைய
வோரிறையொடுங்குமுன்னருனதுதொன்னகரமாற்ற
வேருறமுன்னமேபோலியற்றுவன்யானேயென்னாப்
பேருலகுதவுகின்றபெற்றியைநினைந்துசெய்வான்.

இ - ள். சூரன் இதனை செப்ப - சூரபன்மன் இந்த வார்த்தையைச்சொல்லுதலும்,— சொல் பணி தலை கொண்டு – அவன் சொல்லிய கட்டளையைச் சிரசின்மேல் வகித்து,—ஐய - அரசனே,—ஓர் இறை ஒடுங்கு முன்னர் உனது தொல் நகரம் - ஓரிறைப்பொழுது நீங்குமுன் உனது பழமையாகிய நகரத்தை,—ஆற்ற ஏர் உற - மிகவும் அழகுபொருந்தும்படி,—முன்னமே போல யானே இயற்றுவன் என்னா - முன்னிருந்த தன்மையைப்போல நானே செய்வேனென்று,—பேர் உலகு உதவுகின்ற பெற்றியை நினைந்து செய்வான் - பெருமையாகிய உலகங்களைச் சிருட்டிக்கின்ற தன்மையை அவதானித்துக்கொண்டு செய்வாராயினர். எ – று.

மற்று அசை. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது பிரிநிலை. உலகசிருட்டி செய்யும்பொழுது சிவபிரானுடைய திவ்விய சொரூபத்தைத் தியானித்துக்கொண்டே செய்பவராதலால், ‘நினைந்து செய்வானெ’ன்றதுமது. (உ௫)

26. பொன்மதின்மாடவீதிப்பொலன்மணிச்சிகரம்வேர
மன்மதன்விழையுஞ்சோலைமண்டபம்வாவிபொய்கை
சென்மலியரங்கமன்றந்தெற்றியேமுதலவெல்லாந்
தொன்மைபோலாகத்தன்கைத்தொழின்முறைபடைத்தான்மன்னே.

இ - ள். பொன் மதில் மாடவீதி பொலன் மணி சிகரம் வேரம் - பொன்மயமாகிய மதில்கள் மாளிகையமைந்த வீதிகள் செம்பொன்னாலமைத்து மணிகளழுத்தப்பட்ட தூபிகள் செய்குன்றுகள்,—மன்மதன் விழையும் சோலை மண்டபம் வாவி பொய்கை - மன்மதனும் விரும்பத்தக்க சோலைகள் மண்டபங்கள் வாவிகள் பொய்கைகள்,—செல்மலி அரங்கம் மன்றம் தெற்றி முதல எல்லாம் - மேகங்கள் நிரம்பிப்படிந்த நடனசாலைகள் சபைகள் திண்ணைகள் முதலிய வெல்லாவற்றையும்,—தொன்மைபோலாக தன் கைத் தொழில் முறை படைத்தான் - முன்போலமையும்படி தமது கைத்தொழின் முறையால் சிருட்டித்தார். எ — று.

அரங்கமென்பது நடனசாலைக்குங் கூத்துப்பயிலிடத்துக்கும் சூதுபயிலிடத்திற்கும் பெயராதலின் பொதுப்பட அரங்கமென்றார். தெற்றி-சித்திரகூடத்துக்கும் பெயர். எ, மன், ஒ அசை. மன்மதனும் என்ற உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. (உசு)

27. இவ்வகைநகரமுற்றுமெழில்பெறப்படைத்தபின்றை
மைவரைமேனிமன்னன்மாபெருங்கோயிறன்னைச்
செவ்விதின்முதுமைபோலச்சிறப்பினாற்றிருத்தல்செய்தா
னைவகையிருபான்கொண்டவல்லியங்கமலத்தண்ணல்.

இ - ள். ஐவகை இருபான் கொண்ட அல்லி அம் கமலத்து அண்ணல் - நூறு அக விதழ்பொருந்திய அழகிய செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற பிரமதேவர்,—இ வகை நகரம் முற்றும் எழில்பெற படைத்த பின்றை - இந்தவிதமாக நகரமுழுவதும் அலங்கார மமையும்படி சிருட்டித்தபின்பு,—மை வரை மேனி மன்னன் மாபெரும் கோயில் தன்னை - கரியமலைபோன்ற சரீரத்தையுடைய சூரபன்மராசனது மாளிகையை,—செவ்விதின் முதுமை போல சிறப்பினால் திருத்தல் செய்தான் - ஒழுங்காக முன்னிருந்தபடியே சிறப்பாகச்செய்தார். எ - று

தன் சாரியை. முதுமையேபோல என்னுந் தேற்றேகாரந் தொக்கது. (உஎ)

28. கொன்பெருநகருமந்தண்கோயிலும்படைத்தலோடு
மன்பெருந்தகையசூரன்மற்றவன்செய்கைநோக்கி
யன்புசெய்துவகையாகியவுணர்கள்யாரும்போற்ற
முன்புபோலரிமானேற்றுமுழுமணித்தவிசினுற்றான்.

இ - ள். கொன் பெரு நகரும் அம் தண் கோயிலும் படைத்தலோடும் - மிகப் பெருமையாகிய நகரத்தையும் சிறந்த சீதளமமைந்த அரண்மனையையும் படைத்தபொழுது,—மன் பெரும் தகைய சூரன் - அரசாளும் பெருந்தன்மையையுடைய சூரபன்மன்,—அவன் செய்கை நோக்கி - அப்பிரமதேவரது படைப்பின் வல்லபத்தைப்பார்த்து,—அன்பு செய்து உவகை ஆகி - அன்புவைத்து மகிழ்ச்சியடைந்து,—அவுணர்கள் யாரும் போற்ற - அசுரர்களனைவருந் துதிக்க,—முன்பு போல் அரி மான் ஏற்று முழு மணி தவிசின் உற்றான் - முன்னிருந்தபடி ஆண்சிங்கத்தாற் சுமக்கப்படுகின்ற முழுதும் இரத்தினமிழைத் துள்ள ஆசனத்தில் வீற்றிருந்தான். எ — று.

மற்று அசை. உம்மை முன்னையன எண்; பின்னையது முற்று. (உஅ)

29. உற்றனனாகிப்பின்னரோதிமத்திறையைநோக்கி
மற்றுநின்னண்டஞ்சென்றுவைகுதிநல்கியென்னாச்
சொற்றனனேவவன்னோன்றுண்ணெனவிடைபெற்றேகிப்
பெற்றதன்னண்டஞ்சென்றுபிறங்குதன்னுலகம்புக்கான்.

இ - ள். உற்றனன் ஆகி பின்னர் ஓதிமத்து இறையை நோக்கி - (அங்ஙனஞ் சிம்மாசனத்தில்) வீற்றிருந்து பின்பு அன்னத்தை வாகனமாகவுடைய பிரமதேவரைப்பார்த்து,—நின் அண்டம் சென்று நல்கி வைகுதி என்னா சொற்றனன் ஏவ - உமது அண்டத்திற்போய்ச் சிருட்டித்தொழிலைச் செய்துகொண்டிருமென்று சொல்லியனுப்ப,—அன்னோன் துண்ணென விடை பெற்று ஏகி - அப்பிரமதேவர் சீக்கிரம் அனுமதிபெற்றுக்கொண்டு சென்று,—பெற்ற தன் அண்டம் சென்று பிறங்கு தன்னுலகம் புக்கான் - தமக்குக்கிடைத்த அண்டத்திற்போய் விளங்காநின்ற தமது உலகத்திற்புகுந்தார். எ - று.

மற்று அசை. அத்து சாரியை. சொற்றனன் வினைமுற்றெச்சம். (உகூ)

சூரநகர்புரிபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூகூஅ.

---

# சூரனமைச்சியற்படலம்.

1. அந்தநல்லமையந்தன்னினவுணர்கோனேவல்போற்றி
முந்துசெல்லொற்றரானோர்மூரிநீர்க்கடலைவாவிச்
செந்தியிற்சென்றுகந்தன்சேனையும்பிறவுந்தேர்ந்து
வந்தனர்விரைவினங்கண்மன்னனைவணங்கிச்சொல்வார்.

இ - ள். அந்த நல் அமயம் தன்னில் - அந்த நல்லசமயத்தில்,—அவுணர் கோன் ஏவல் போற்றி - அவுணராசனாகிய சூரபன்மனது ஆஞ்ஞையை அங்கீகரித்து,—முந்து செல் ஒற்றர் ஆனோர் - முன்சென்ற தூதுவர்,—மூரி நீர் கடலை வாவி - வலிய நீரையுடைய கடலைக்கடந்து,—செந்தியில் சென்று - திருச்செந்தூரிற்போய்,—கந்தன் சேனையும் பிறவும் தேர்ந்து - கந்தஸ்வாமியினது சைனியங்களையும் மற்றுள்ள விஷயங்களையும் அறிந்துகொண்டு,—விரைவின் அங்கண் வந்தனர் - விரைவாக அவ்விடத்தில்வந்து,—மன்னனை வணங்கி சொல்வார் - அரசனாகிய சூரபன்மனை வணக்கஞ்செய்து (இவ்வாறு) சொல்லுகின்றார்கள். எ - று.

தன் சாரியை. உம்மைகள் எண். வந்தனர் - வினைமுற்றெச்சம். மூரி - பெருமைக்கும் பெயர். (க)

2. ஏற்றவெம்பூதவெள்ளமிராயிரம்படையின்வேந்தர்
நூற்றுடனெண்மர்பின்னுநுவலருஞ்சிறப்பின்மிக்கோர்
மேற்றிகழிலக்கத்தொன்பான்வீரர்மற்றினையரோடுந்
தோற்றமில்பரமன்மைந்தன்றொடுகடலுலகின்வந்தான்.

இ - ள். ஏற்ற வெம் இராயிரம் பூத வெள்ளம் - உயர்ச்சிபொருந்திய கொடிய இரண்டாயிரம் வெள்ளம் பூதசேனைகளும்,—நூற்றுடன் எண்மர் படையின் வேந்தர் - நூற்றெட்டுப் (பூத) சேனாதிபதிகளும்,—பின்னும் - பின்னரும்,—நுவல அரும் சிறப்பின் மிக்கோர் மேல் திகழ் இலக்கத்து ஒன்பான் வீரர் - சொல்லுதற்கரிய சிறப்பின் மேம்

பட்டவராகிய மேன்மைவிளங்கும் இலக்கத்தொன்பது வீரர்களும் (ஆகிய),—இனைய ரோடும் - இவர்களோடும்,—தோற்றம் இல் பரமன் மைந்தன் தொடு கடல் உலகின் வந்தான் - உற்பத்தி நாசரகிதராகிய சிவகுமாரராங் கந்தஸ்வாமி (சகராற்) றேண்டப்பட்ட சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தில் வந்தார். எ - று.

மற்று அசை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையது முற்று தோற்றமில் எனவே உபலக்கணத்தால் முடிவுமில் என்பது தானேபோதரும். புண்ணியம் விசேடித்திருப்பின் சுவர்க்காதி மேலுலகங்களிற்றோன்றி இன்பமனுபவித்தலும், புண்ணியபாவமாகிய இருவினைகளும் ஒத்திருப்பின் பூமியிற்றோன்றிச் சுகதுக்கங்களையனுபவித்தலும், பாவம் விசேடித்திருப்பின் நரகத்தையடைந்து பெருந்துயரனுபவித்தலும் ஆன்மாக்களுக்கு உண்மையாகவே உள்ளன. அவைகளொன்றுந் தமக்கில்லாது நித்தியானந்தராயிருத்தலின் 'தோற்றமில் பரமன் மைந்தன்' என்றார். (உ)

3. சாதமீதவுணர்கோவேதாரகவீரன்றன்னைக்
கரையறுமாயைபோற்றுங்காமருபிறங்கறன்னை
யிருபிளவாகவேலாலெறிந்தனனீறுசெய்து
திரைபொருமளக்கர்வேலைச்செந்திமாநகரினுற்றான்.

இ - ள். அவுணர் கோவே ஈது சாதம் - அசுரர்களுக்கு அரசனே இது உண்மை,—தாரக வீரன் தன்னை கரை அறு மாயை போற்றும் காமரு பிறங்கல் தன்னை - தாரகனெ கிய வீரனையும் அளவிறந்த மாயங்கள்செய்தலாற் சிறந்த கிரவுஞ்சமலையையும்,—இரு பிளவு ஆக - இருபாதியாகப் பிளக்கும்படி,—வேலால் எறிந்தனன் ஈறு செய்து - வேலாயுதத்தைவிட்டு அழித்து,—திரை பொரும் அளக்கர் வேலை செந்திமாநகரின் உற்றான் - அலைமோதுகின்ற கடற்கரையிலுள்ள பெருமைபொருந்திய திருச்செந்தூரில் வந்திருக்கின்றார். எ - று.

தாரகவீரன் பண்புத்தொகை. போற்றல் - ஈண்டுச்செய்த என்னும்பொருட்டு. காமரு என்பதிலுள்ள உகரம் சாரியை. எறிந்தனன் வினைமுற்றெச்சம். ஆல் உருபுமயக்கம். எண்ணும்மைதொக்கன. தன் இரண்டும் சாரியை. (௩)

4. விலங்கியகதிர்வேலண்ணல்விரைந்திவண்மேவுமாற்றா
லுலங்கிளர்மொய்ம்பிற்றூதனொருவனைவிடுத்தானன்னா
னிலங்கையையழித்துவந்தான்யாளிமாமுகவன்றன்னை
வலங்கையின்வாளாற்செற்றுவாரிதிகடந்துபோனான்.

இ - ள். விலங்கிய கதிர் வேல் அண்ணல் விரைந்து இவண் மேவும் ஆற்றால் - விட்டுவிட்டு ஒளிவீசுகின்ற வேற்படையையுடைய பெருமையிற் சிறந்தவராகிய கந்தஸ்வாமி சீக்கிரமாக இந்த வீரமகேந்திரத்தில் வரும்பொருட்டு,—உலம் கிளர் மொய்ம்பில் தூதன் ஒருவனை விடுத்தான் - திரண்ட கல்லைப்போல விளங்குகின்ற புயங்களையுடைய ஒரு தூதுவனை அனுப்பினார்;—அன்னான் - அவன்,—இலங்கையை அழித்து வந்தான் - (வரும்போது) இலங்கையை அழித்துவிட்டு (இங்கே) வந்தான்,—யாளிமா முகவன் தன்னை வலம் கையின் வாளால் செற்று வாரிதி கடந்து போனான் - (அவ்விலங்கை மாநகரத்திற் காவலாயிருந்த) யாளிமுகனை வலக்கையிலுள்ள வாட்படையினால் வெட்டிக் கொன்று கடலைக்கடந்துபோனான். எ - று. தன் சாரியை. (௪)

5. செங்கதிரயில்வேன்மைந்தன்றெண்டிரைப்புணரிவாவிப்
பொங்குமேவங்கணங்களோடும்போர்ப்படைவீரரோடு
மிங்குவந்தாடல்செய்வானெண்ணினனிருந்தானீது
சங்கையென்றுன்னல்வாய்மைதகுவனவுணர்தியென்றான்.

இ - ள். செம் கதிர் அயில் வேல் மைந்தன் - செவ்வொளிபொருந்திய கூரிய வேற்படையையுடைய கந்தஸ்வாமி,—தெள் திரை புணரி வாவி - தெளிந்த அலைகளையுடைய கடலைக்கடந்து,—பொங்கு வெம் கணங்களோடும் - (கோபத்தினாலே மனங்கொதித்துக்) கிளருகின்ற கொடிய பூதசேனைகளோடும்,—போர் படை வீரரோடும் - போர்க்குரிய ஆயுதங்களைத்தாங்கிய வீரர்களோடும்,—இங்கு வந்து ஆடல் செய்வான் எண்ணினன் இருந்தான் - இவ்விடத்தில்வந்து போர்செய்யும்படி நினைத்திருக்கின்றார்,—ஈது சங்கை என்று உன்னல் - இதனைச் சந்தேகமானவார்த்தையென்று நினைக்கவேண்டாம்,—வாய்மை - (நாங்கள் சொல்லியது) உண்மையே,—தகுவன உணர்தி என்றார் - (இனி) இதற்குத்தகுந்தவற்றை ஆலோசித்துக்கொள்ளும் என்றார்கள். எ — று.

எண்ணினன் வினைமுற்றெச்சம். வாய்மையே என்பதில் தேற்றேகாரந்தொக்கது. ஓடு உடனிகழ்ச்சிப்பொருள். உம்மைகள் எண். (ரு)

6. ஒற்றர்சொல்வினவிமன்னனொருதனியிளவறன்னை
யற்றமில்கேள்விசான்றவமைச்சரைமைந்தர்தம்மைச்
சுற்றமொடமைந்ததானைத்தொல்பெருந்தலைமையோரை
மற்றொருகணத்தின்முன்னர்மரபொடுகொணருவித்தான்.

இ - ள். மன்னன் ஒற்றர் சொல் வினவி - சூரபன்மன் தூதுவர்சொன்ன வசனத்தைக்கேட்டு,—ஒரு தனி இளவல் தன்னை - ஒப்பற்ற தம்பியாகிய சிங்கமுகாசுரனையும்,—அற்றம் இல் கேள்வி சான்ற அமைச்சரை - சோர்வற்ற சாஸ்திரக்கேள்வியிற் சிறந்துள்ள (தருமகோபன் முதலிய) மந்திரிகளையும்,—மைந்தர் தம்மை - (பானுகோபன் முதலிய) புதல்வர்களையும்,—சுற்றமொடு அமைந்த தொல்பெரும் தானை தலைமையோரை - சுற்றத்தோடு அமைந்து வாழ்கின்ற மிக்க பெருமையையுடைய (புலிமுகன் முதலிய) சேனாதிபதிகளையும்,—ஒரு கணத்தின் முன்னர் மரபொடு கொணருவித்தான் - ஒருகணப்பொழுதுசெல்லுமுன் முறைப்படி அழைத்துக்கொண்டுவரும்படி செய்தான். எ — று.

மற்று அசைநிலை. தன், தம் சாரியை. எண்ணும்மை விகாரத்தாற்றொக்கன. மரபு என்றது அவரவரையழைக்கு முறைமையை. (சு)

வேறு.

7. ஆங்கவர்யாவருமவுணர்மன்னவன்
பூங்கழல்கைதொழூஉப்புடையின்வைகலுந்
தீங்கனல்சுடுவதோர்சீற்றமுள்ளெழ
வீங்கியவுயிர்ப்பினன்விளம்பன்மேயினன்.

இ - ள். ஆங்கவர் யாவரும் அவுணர் மன்னவன் பூ கழல் கைதொழூஉ புடையில் வைகலும் - (அங்ஙனம் வந்தவர்களாகிய) அவர்களனைவரும் அவுணர்க்கரசனாகிய சூரபன்மனது மலர்போன்ற பாதங்களைக் கைகுவித்துவணங்கிப் பக்கங்களிலிருத்தலும்,—தீ கனல் சுடுவது ஓர் சீற்றம் உள் எழ - வெம்மையுடைய அக்கினியையுஞ் சுடத்தக்க ஒரு கோபம் தன்மனத்திற் றோன்றுதலால்,—வீங்கிய உயிர்ப்பினன் விளம்பல் மேயினன் - பெருமூச்செறிந்து சொல்வானாயினன். எ — று.

உம்மை முற்று. பூப்பெயர்முன் இனமென்மை தோன்றியது. தீங்கனலென்பதும் அது. கனலையும் என்ற உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கனல்போல என உவமைத்தொகைப் பொருளுங் கூறுவர். அது இத்துணைச்சிறப்பினதன்று. செயவெனெச்சம் காரணப்பொருளில் வந்தது. உயிர்ப்புடையவனாய் எனினும் அமையும். (எ)

8. போற்றலராகியபுலவர்யாரையு
மாற்றருஞ்சிறையில்யான்வைத்தபான்மையைத்
தேற்றியமகபதிசென்றுசென்னிமே
லாற்றினைவைத்திடுமமலற்கோதினன்.

இ - ள். போற்றலர் ஆகிய புலவர் யாரையும் - நமது குலப்பகைவர்களாகிய தேவர்களனைவரையும்,—யான் ஆற்ற அரும் சிறையில் வைத்த பான்மையை,—நான் சகிக்கக்கூடாத சிறையில்வைத்த தன்மையை,—தேற்றிய மகபதி சென்று சென்னி மேல் ஆற்றினை வைத்திடும் அமலற்கு ஓதினன் - அறிந்தவனாகிய இந்திரன்போய் முடியின்மேல் கங்கையைத்தரித்த சிவபெருமானுக்கு அறிவித்தான். எ — று.

போற்றலராகிய - வணங்காதவராகிய எனவும் பொருள்கூறுவர்; அது பொருந்தாதென விடுக்க. யாரையும் என்னுமும்மை முற்றுப்பொருளில்வந்தது. ஆற்றரும் என்பதில் அகரம் தொக்கது. இடு பகுதிப்பொருள் விகுதியாகிநின்றது. (அ)

9. கண்ணுதலுடையதோர்கடவுள்வல்லையோ
ரண்ணலங்குமரனையளித்துமைந்தநீ
விண்ணவர்சிறையினைவீட்டிச்செல்கெனத்
துண்ணெனநம்மிசைத்தூண்டினனரோ.

இ - ள். கண் நுதல் உடையதோர் கடவுள் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான்,—வல்லை ஓர் அண்ணல் அம் குமரனை அளித்து-விரைவாகப் பெருமையிற்சிறந்துள்ள அழகமைந்த ஒரு புத்திரனைத்தோற்றுவித்து,—மைந்த நீ விண்ணவர் சிறையினை வீட்டி செல்க என - மகனே, நீ தேவர்களுடைய சிறையை நீக்கிவாவென்று சொல்லி;—துண்ணென நம்மிசை தூண்டினன் - விரைவாக நம்மிடத்தில் அனுப்பினர். எ — று.

ஓர் அரோ அசை. செல்க என என்பதில் அகரந்தொகுத்தல்விகாரம். கடவுள் - கடந்தவர்; எனவே தத்துவாதீதர் என்பது பொருள். விண்ணவர் - மேலுலகத்தில் வசிப்பவர். குமரன் - எக்காலத்தும் இளமைப்பருவமுடையவன்; இரட்டுறமொழிதலால் மெய்யன்பர்களுடைய குற்றிதங்களை யழிப்பவனெனவும் பொருள்படும். (கூ)

10. வாய்த்திடுகயிலைமால்வரையைவைகலுங்
காத்திடுநந்திதன்கணத்துவீரரு
மீத்தகுபூதரும்விரவமாலய
னேத்திடவரன்மகனிம்பரெய்தினன்.

இ - ள். மால் வாய்த்திடு கயிலை வரையை வைகலும் காத்திடு நந்திதன் கணத்து வீரரும் மீதகு பூதரும் விரவ - (அங்ஙனஞ் சிவபெருமான் அனுப்ப) மகிமைபொருந்திய திருக்கைலாசமலையை எப்பொழுதும் காவல்செய்கின்ற நந்திகணத்தலைவர்களாகிய வீரர்களும் மேன்மைபொருந்திய பூதர்களும் உடன்வர,—மால் அயன் ஏத்திட - (பெருந்தேவர்களெனப்படுகின்ற) பிரமவிஷ்ணுக்கள் துதிக்க,—அரன் மகன் இம்பர் எய்தினன் - சிவகுமாரரான கந்தஸ்வாமி இவ்வுலகத்தில் வந்தார். எ - று.

உம்மை வைகலும் என்பதில் முற்றும், ஏனையவற்றில் எண்ணுமாம். செயவெனெச்சங்கள் காரியப்பொருட்டு. வாய்த்திடு என்பதற்கு சிவபிரான் எழுந்தருளிய என அவாய் நிலைபற்றிப் பொருள்கூறுவார் சிலர். ஹரஃ என்னும் வடமொழி தற்பவமாயிற்று. அது பக்குவான்மாக்களுடைய மலசத்தியைக்கெடுப்பவன் என்னும் பொருளுடையது. (க0)

11. பாரிடையுற்றுளான்பாணிகொண்டதோர்
கூருடைவேலினுற்கொடியகுன்றொடு
தாரகவிளவலைத்தடிந்துபின்னுற
வாரிதியகன்கரைவந்துவைகினுன்.

இ - ள். பாரிடை உற்றுளான் - பூவுலகத்தில்வந்த அச்சிவகுமாரர்,—பாணி கொண்டது ஓர் கூர் உடை வேலினுல் - (தமது) கையிலுள்ள கூரியவேலாயுதத்தினுல்,—கொடிய குன்றொடு தாரக இளவலை தடிந்து - கொடிய மாயங்களைவிளைக்கின்ற கிரவுஞ்சகிரியுடன் தம்பியாகிய தாரகனையுஞ்சங்கரித்து,—பின்னுற வாரிதி அகன் கரை வந்து வைகினுன் - பின்பு பெரிய சமுத்திரக்கரையில் வந்திருந்தார். எ - று.

ஓர் அசை. உற்றுளான் வினையாலணையும்பெயர். ஒடு எண்ணில் வந்தது. கொடிய ஆகுபெயர். கொடிகளையுடைய எனவும் பொருள் கூறுவார். (கக)

12. அன்னதோராறுமுகனுங்கொர்தூதனை
யென்னிடைவிடுத்தலுமேகிமற்றவன்
மைந்நிறநெடுங்கடல்வரைப்பிற்பாய்ந்தொராய்ப்
பொன்னவிரிலங்கைமாபுரத்தைவீட்டினுன்.

இ - ள். அன்னது ஓர் அறுமுகன் - அந்தச்சண்முகமுள்ள குமாரர்,—ஆங்கு ஓர் தூதனை என்னிடை விடுத்தலும் - அவ்விடத்தினின்றும் ஒரு தூதுவனை யென்னிடத்திலனுப்புதலும்,—அவன் ஏகி - அத்தூதுவனுனவன் வந்து,—மை நிற நெடும் கடல் வரைப்பில் பாய்ந்து ஒராய் - கரிய நிறம்பொருந்திய நெடிய கடற்கரையினின்றும் பாய்ந்து நீங்கி,—பொன் அவிர் மா இலங்கை புரத்தை வீட்டினுன் - பொன்னெளியை வீசுகின்ற பெரிய இலங்காபுரத்தை யழித்தான். எ — று.

மற்று, ஓர் அசை. பொன்னவிர் - இலக்குமிவிலாசம் விளங்கும் எனினும் அமையும். ஒராய் ஒருவுதலின் விகாரம். (கஉ)

13. இலங்கையங்காவலுமிகப்புற்றின்னதோர்
பொலங்கெழுதிருநகர்நடுவட்புக்குலாய்
நலங்கிளரென்னவைக்களத்தினண்ணினுன்
கலங்கலனிறையதுமாயைக்கற்பினுன்.

இ - ள். இலங்கை அம் காவலும் இகப்புற்று - (இலங்காபுரத்தை யழித்ததுமன்றி) அவ்விலங்கையிலுள்ள காவல்களையுங்கடந்து,—இன்னது ஓர் பொலம் கெழு திரு நகர் நடுவண் புக்கு உலாய் - இந்த ஒப்பற்ற பொன்மயமான சிறந்த நகரத்தின் நடுவுட்புகுந்து உலாவி,—நலம் கிளர் என் அவைக்களத்தில் நண்ணினுன் - அழகுவிளங்காநின்ற எனது சபாமண்டபத்தில் வந்தான்,—மாயைக் கற்பினுன் இறையதும் கலங்கலன் - (அப்படி வந்தவன்) மாயவித்தையையறிந்தவனுதலால் ஒருசிறிதும் மனங்கலங்கினுனில்லை. எ-று.

அம், ஓர் அசை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சமும், பின்னையது உயர்வுசிறப்புமாம். உலாய் என்பது உலவுதலின் விகாரம். என்னவைக்களத்தில் மாயைக் கற்பினுன் இறையதும் கலங்கலன் நண்ணினுன் எனினும் அமையும். பிறரால் கடத்தற்கரியனவாயமைத்துள்ள காவல்களையுங்கடந்து என்னும்வழி உம்மை உயர்வுசிறப்புமாம்.()

14. நண்ணினனெதிருறநவையில்வீரர்போல்
விண்ணவர்பாங்கராச்சிலவிளம்பியென்
கண்முனஞ்சிலருயிர்களைந்துவன்மையா
லெண்ணலன்பின்னுறவெழுந்துபோயினுன்.

இ - ள். நவை இல் வீரர்போல் எதிர் உற நண்ணினன் - குற்றமில்லாத வீரரைப் போல் எனக்கு முன்வந்து,—விண்ணவர் பாங்கரா சில விளம்பி - தேவர்கள்சார்பாகச் சில் வார்த்தைகளைப்பேசி,—என் கண் முனம் சிலர் உயிர்களைந்து - என்கண்ணெதிரே சிலரைக்கொன்று,—வன்மையால் எண்ணலன் பின்னுற எழுந்து போயினன்-தைரியத் தோடும் (என்னைச் சற்றும்) மதியாதவனாய் பின்பு சபையை விட்டெழுந்துபோனான்.

பகைவரைக்கண்டு அஞ்சுதல், பின்வாங்குதல் முதலிய குற்றமில்லாதவரே நவையில் வீரர், இவன் அத்துணைச்சிறப்புள்ள சுத்தவீரனல்லவென்பது போதர 'வீரர் போல்' என்றுகூறினான். நண்ணினன் வினைமுற்றெச்சம். பாங்கராகவென்பது பாங்கராவென ஈற்றுயிர்மெய் தொக்குநின்றது. (௧௪)

15. போயவனிந்நகர்பொடித்துச்சிந்தியா
னேயினவேயினபடைஞர்யாரையு
மாயுறுவித்தனன்மற்றுமென்னிளஞ்
சேயுயிர்கொண்டனன்செருக்குநீங்கலான்.

இ - ள். போயவன் இ நகர் பொடித்து சிந்தி - அப்படிப்போன தூதன் இந்த நகரத்தைப் பொடியாகவழித்து எங்குஞ்சிந்தி,—செருக்கு நீங்கலான் - அகங்காரம் நீங்காதவனாகி,—யான் ஏயின ஏயின படைஞர் யாரையும் மாயுறுவித்தனன் - நானனுப்பிய அனுப்பிய படைவீரரையெல்லாங் கொன்றான்,—மற்றும் என் இளம் சேய் உயிர்கொண்டனன் - பின்னும் எனது இளையமகனாகிய வச்சிரவாகுவினது பிராணனையும் வாங்கினான். எ - று.

உம்மை முற்று. உயிரையும் என்னும் இறந்தததுதழீஇயவெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. சகத்திரவாகுகள் சதமுகன் முதலிய வீரர்களிறந்த பரிதாபத்தினுந் தன்மகன் இறந்தது பெரும்பரிதாபமாதலின் 'என்னிளஞ்சேயுயிர் கொண்டனன்' எனப் பிரித்துக்கூறினான். (௧௫)

16. அழிந்ததித்திருநகரளப்பிறானைகள்
கழிந்தனசெறிந்ததுகளேபரத்தொகை
கிழிந்ததுபாரகங்கெழீஇயசோரியா
றொழிந்ததென்னாணையுமுயர்வுந்தீர்ந்ததால்.

இ - ள். இ திருநகர் அழிந்தது - எல்லாச்செல்வங்களுநிரம்பிய இந்நகரமழிந்தது,—அளப்பு இல் தானைகள் கழிந்தன - அளவில்லாத சேனைகள் இறந்தன,—களேபரத்தொகை செறிந்தது - பிணக்கூட்டம் (எங்கும்) நெருங்கிக்கிடந்தது,—பாரகம் கிழிந்தது - (அதனால்) பூமிபிளந்தது,—சோரி யாறு கெழீஇயது - இரத்தவெள்ளம் ஆறாகப் பெருகியது,—என் ஆணையும் ஒழிந்தது - எனததிகாரமு மொழிந்தது,—உயர்வும் தீர்ந்தது - எனது மகிமையுந்தொலைந்தது. எ - று.

ஆல் அசை. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம்; உயர்வுசிறப்பெனினுமாம். தான் மகுடாபிஷேகஞ்செய்த நாள்முதல் இந்நாள்வரையும் யாதொரு வகையானும் அழியாத நகரம் அழிந்தமைபற்றி அதிகாரமும் தன்சிறப்பும் நீங்கியது என்பான் 'ஒழிந்ததென்னாணையு முயர்வுந்தீர்ந்தது' என்று கூறினான். (௧௬)

17. ஒற்றெனவந்தவவ்வொருவன்றன்னையும்
பற்றிவெஞ்சிறையிடைப்படுத்தினேனலேன்
செற்றில்னூறதேயெனினுஞ்செய்திலே
னெற்றினிவசையுரைக்கிறுகூறுகேன்.

இ - ள். ஒற்று என வந்த அ ஒருவன் தன்னையும் பற்றி வெம் சிறை இடை படுத்திலேன் அலேன் - (என்னிடத்தில்) தூதாகவந்த ஒருவனையும் பிடித்துக் கொடியசிறையில் வைத்தேனில்லை,—செற்றிலன் - கொன்றேனுமில்லை,—ஊறதே எனினும் செய்திலேன் - அவனுறுப்புக்களையாவது குறைத்துவிட்டேனுமில்லை,—இனி வசை உரைக்கு எற்று ஈறு கூறுகேன் - எனக்குண்டான இவ்வசைமொழிக்கு இனி என்ன முடிவு சொல்லுவேன். எ – று.

தன் சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. ஏகாரம் பிரிநிலை. உம்மை முன்னையது முற்று; பின்னது இழிவுசிறப்பு. பிறராற் கூடாதாயினும் தூதுவனைப்பிடிக்கவும் சிறையில்வைக்கவும் இன்னும் எத்தண்டனைகளைச் செய்யவும் என்னாற்றகுமென்பான் 'பற்றி*****செய்திலேன்' எனக்கூறினான். (௧௭)

18. இம்பரினிவையெலாமிழைத்ததூதுவ
னம்பதியிகந்துபோயிலங்கைநண்ணிய
மொய்ம்புடையாளிமாமுகவற்சாடியே
யம்புதிகடந்தனனவனியெய்தினான்.

இ - ள். இம்பரின் இவையெலாம் இழைத்த தூதுவன் - இவ்விடத்தில் இவைகளையெல்லாஞ்செய்த தூதுவன்,—நம் பதி இகந்து போய் - நமது வீரமகேந்திரத்தி னெல்லையைக்கடந்து சென்று,—இலங்கை நண்ணிய மொய்ம்புடை யாளி மாமுகவன் சாடி - இலங்காநகரத்திலிருந்த பலசாலியாகிய யாளிமுகனையுங்கொன்று,—அம்புதி கடந்தனன் அவனி எய்தினான் - கடலைக்கடந்து பூவுலகத்திற்சென்றான். எ – று.

ஏகாரம் அசை. யாளிமுகனையும் என்ற இறந்ததுதழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அவனி என்றது குறிப்பினால் திருச்செந்தூரை. இங்கே அத்தூதுவனுக்குத் தக்க தண்டனை செய்வித்திருப்பேனாயின் யாளிமுகன் இறந்துபடான் என்னுங் கருத்துடையனாதலின், 'நம்பதி யிகந்துபோய் யாளிமா முகவற்சாடி' என்று குறிப்பித்தான்.

19. கார்பொருமிடற்றவன்காதன்மாமகன்
வாரிதிகடந்திவண்வந்துநம்மொடும்
போர்பொரநினைகுவான்போலுமிவ்வெலாஞ்
சாரணர்மொழிந்தனர்சரதமாகுமால்.

இ - ள். கார் பொரு மிடற்றவன் காதல் மாமகன் - கரிய மேகத்தையொத்த கண்டத்தினையுடைய சிவபெருமானுக் காசைமீதூரப்பெற்ற மகனாகிய கந்தசுவாமி,—வாரிதி கடந்து இவண் வந்து நம்மொடும் போர் பொர நினைகுவான் போலும் - கடலைக்கடந்து இவ்விடத்தில் வந்து நம்மோடு போர்செய்தற்கு நினைத்திருப்பான்போலும்,—இவ்வெலாம் சாரணர் மொழிந்தனர் - இவைகளெல்லாவற்றையும் தூதுவர்கள் சொன்னார்கள்,—சரதம் ஆகும் - (அவர்கள் சொல்லிய அனைத்தும்) உண்மையே. எ – று.

ஆல் அசை. தேற்றேகாரம் தொக்கது. இவ்வளவுதூரம் வந்தவன் நம்முடைய வலிமை வீரம் அரசாட்சிப்பெருமை முதலியவற்றை யுணராது யுத்தத்திற்கு வந்தாலும் வருவன் என்னுங்கருத்துப்போதரப் 'போர்பொர நினைகுவான் போலும்' என ஐயத்தில் வைத்துக்கூறினான். போலும் ஐயப்பொருளைத் தருமோரிடைச்சொல். (௧௮)

20. நெற்றியிலனிகமாய்நின்றபூதரைச்
செற்றிகல்வீரரைச்செகுத்துச்சேயினை
வெற்றிகொண்டேனையர்தமையும்வீட்டியே
மற்றொருவிகலைமுன்வரவல்லேனியான்.

இ - ள். நெற்றியில் அனிகமாய் நின்ற பூதரை செற்று - முன்னணியிலே சேனைகளாய்நின்ற பூதர்களைக்கொன்று,—இகல் வீரரை செகுத்து - வலிய வீரரையழித்து,—சேயினை வெற்றிகொண்டு - சிறுபாலனை ஜெயித்து,—ஏனையர் தமையும் வீட்டி - மற்றுள்ளவர்களையுங்கொன்று,—ஒரு விகலைமுன் வர வல்லேன் யான் - ஒருகணத்தில் வரத்தக்க சாமார்த்தியமுடையேன் யான். எ — று.

மற்று, ஏ அசை.* தம் சாரியை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். 'நெற்றியில்*****யான் எனவே' அவர்களை ஒருபொருளாக மதியாது தனது பெருமிதங்கூறினான் எனவுணர்க. (உ0)

21. சூரனென்றொருபெயர்படைத்ததொல்லையேன்
பாரிடர்தம்மொடும்பாலன்றன்னொடும்
போரினையிழைத்தடல்புரிந்துவெல்லினும்
வீரமதன்றெனுவறிதுமேவினேன்.

இ - ள். சூரன் என்று ஒரு பெயர் படைத்த தொல்லையேன் - சூரனென்று ஒரு பெயரைப் பெற்றுள்ளபழையோனாகிய நான்,—பாரிடர் தம்மொடும் பாலன் தன்னொடும்-(ஒன்றுக்கும்பற்றாத) பூதர்களோடும் சிறுகுழந்தையோடும்,—போரினை இழைத்து அடல் புரிந்து வெல்லினும்-போரைச்செய்துகொன்று வெற்றிகொண்டாலும்,—வீரமது அன்று எனு வறிதுமேவினேன்—(மகாராஜாதிராஜனாகிய எனது பெருந்தன்மைக்கு) இதொருவீரமல்ல வென்று சும்மாவிருந்தேன். எ — று.

தம், தன் சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை முன்னையவை எண்; பின்னையது இழிவுசிறப்பு.

தான்போயவர்களோடு போர்செய்து வென்றாலும் வீரமுமேன்மையு மாகாது அபகீர்த்தியே விளையுமாதலின் வாளாவிருந்தேனென்பான். 'வறிதுமேவினேன்' என்றான்.

22. துய்த்திடுந்திருவினில்வலியிற்சூழ்ச்சியி
லெத்துணைப்பெரியர்தாமெனினுமேலையோர்
கைத்தொருவினைசெயக்கருதிற்றம்முடை
மெய்த்துணையோரைமுன்வினவிச்செய்வரால்.

இ - ள். துய்த்திடும் திருவினில் வலியில் சூழ்ச்சியில் எ துணை பெரியர் எனினும் - அனுபவிக்கின்ற செல்வத்தினாலும் பலத்தினாலும் ஆலோசனையினாலும் எவ்வளவு சிறந்தவர்களாகவிருந்தாலும்,—மேலையோர் - பெரியோர்கள்,—கைத்து - (ஒருவரோடு) வெறுத்து,—ஒருவினை செய கருதில் - ஒருகாரியத்தைச்செய்ய நினைக்குங்கால்,—தம்முடை மெய்த் துணையோரை முன் வினவி செய்வர் - தம்முடையவுற்றசுற்றத்தாரை முன்னே கேட்டாலோசித்துப் பின் அக்கருமத்தைச்செய்வார்கள். எ — று.

தாம், ஆல் அசை. உம்மை உயர்வுசிறப்பு. உடையவென்பது உடையெண உயிர்மெய் யீறுதொக்கது. கைத்தல் - வெறுத்தல். அரசர்க்குற்ற சுற்றத்தார் தம்பிமார் மக்கள் அமைச்சர் சேனுதிபதிகள் என்க. அரசர்கள் ஒரு காரியஞ்செய்யத்தொடங்குமுன் மந்திரிமார் தம்பிமார் மக்கள் முதலியவர்களோடு ஆலோசித்துச்செய்யவேண்டுமாதலின் நானும் உங்களை வினவுகின்றேன் என்பான் 'மெய்த்துணையோரை முன் வினவிச் செய்வர்' என்றான். (உஉ.)

23. ஆதலின்வினவினன்யானுமாற்றுத
லீதெனவுரைத்திராலென்றுமன்னவ
னோதினனன்னதையுணர்ந்துகைதொழூஉ
மேதியம்பெயரினனிவைவிளம்பினன்.

இ - ள். ஆதலின் - (ஆன்றோர்வழக்கமிங்ஙன) மாதலால்,—யானும் வினவினன் - நானும் உசாத்துணைவர்களாகிய உங்களைக்கேட்டேன்,—ஆற்றுதல் ஈதென உரைத்திர் என்று மன்னவன் ஓதினன் - நான் இனிச்செய்யுங்காரியத்தை இதுதானென்று (யோசித்துக்) கூறுங்கள் என்று அரசனாகிய சூரபன்மன் சொல்ல,—அன்னதை உணர்ந்து கை தொழூஉ மேதியம் பெயரினான் இவை விளம்பினான் - அவ்வசனத்தைக்கேட்டு (அச்சபையிலிருந்த) மந்திரிமார்களில் ஒருவனாகிய மகிடன் என்பவன் (எழுந்து அரசனைக்) கைகுவித்து வணங்கிப் பின் வருமாறு இவைகளைக்கூறினான்.

ஆல் அசை. மேதியம்பெயரினான் என்றது எருமைமுகமுள்ள ஓரசுரனை. அவன் மந்திரிகளிலொருவன் என வுணர்க. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௨௩)

24. மேலுயர்மாயைகள்விளைக்கும்வெற்பினை
மாலினைவென்றநின்வலியதம்பியை
யேலவோர்கணத்தின்முன்னெறிந்தவீரனைப்
பாலனென்றுரைப்பதுமுணர்வின்பாலதோ.

இ - ள். மேலுயர் மாயைகள் விளைக்கும் வெற்பினை - மிகவுஞ்சிறந்த மாயைகளைச் செய்து கைவந்த கிரவுஞ்சமலையையும்,—மாலினை வென்ற நின் வலிய தம்பியை - விஷ்ணுவைவெற்றிகொண்ட பலசாலியாகிய உமது தம்பியான தாரகனையும்,—ஏல ஓர் கணத்தின் முன் எறிந்த வீரனை - முன்னே ஒருகணப்பொழுதினுள் (வேலாயுதம் விட்டு) அழித்த வீரனாயுள்ளவனை,—பாலன் என்று உரைப்பதும் உணர்வின் பாலதோ - சிறுபாலனென்று சொல்லுதலும் விவேகத்திற்கு இலக்கணமோ (இலக்கணமல்ல.) எ - று.

ஓகாரம் எதிர்மறை. எண்ணும்மைகள் தொக்கன. உம்மை எதிர்மறை. உமது பகைவர்களை இழிந்தவர்களென்றும் சிறியவர்களென்றுங் கூறுதல் அழகல்ல வென்றானென்க.

25. மேதகுதாரகவீரன்றானையை
யாதிபர்தம்முடனட்டதீரரை
யேதுமோர்வலியிலாவெளியரென்பதும்
பூதரென்றிகழ்வதும்புலமைப்பாலவோ.

இ - ள். மேதகு தாரக வீரன் தானையை ஆதிபர் தம்முடன் அட்ட தீரரை - மேன்மைபொருந்திய வீரனாகிய தாரகனது சேனைகளைச் சேனாதிபதிகளுடன் கொன்ற வீரர்களாகிய அவர்களை,—ஏதும் ஓர் வலியிலா எளியர் என்பதும் - சற்றும் வலிமையில்லாத எளியவர்களென்று சொல்லுதலும்,—பூதர் என்று இகழ்வதும் - பூதர்களென்று பழித்துப் பேசுதலும்,—புலமைப் பாலவோ - அறிவின்பகுதியனவோ (அன்று.) எ — று.

ஓர் அசை. தம் சாரியை. ஓகாரம் எதிர்மறை. உம்மைகள் எண். தாரகன் சிறந்த வீரனாதலின் அவன் சைனியங்களும் வீரமுடையன. அத்துணைச்சிறந்த வீரனாகிய தாரகனையும் சைனியங்களையுங் கொன்றவர்கள் மகாவீரர்களேயன்றித் தாழ்ந்தவர்களல்லவென்பது அவன் கருத்தெனவறிக. (௨௫)

26. மீதெழுதிரைக்கடல்விரைவிற்பாய்ந்துநம்
மூதெயில்வளநகர்முடித்துநின்னுடைக்
காதலனுயிரையுங்கவர்ந்தகள்வனைத்
தூதனென்றுரைப்பதுமறிஞர்சூழ்ச்சியோ.

இ - ள். மீதெழு திரைக்கடல் விரைவில் பாய்ந்து - மேலாகவெழுந்து மோதுகின்ற அலைகளையுடைய சமுத்திரத்தைச் சீக்கிரமாகக்கடந்து வந்து,—நம் மூது எயில்

வளநகர் முடித்து - நமது பெரிய மதில்சூழ்ந்த செல்வங்களமைந்துள்ளதாகிய நகரத்தை அழித்து,—நின் உடை காதலன் உயிரையும் கவர்ந்த கள்வனை - உமது இளையமகனாகிய வச்சிரவாகுவினுயிரையுங் கவர்ந்த திருடனை,—தூதன் என்று உரைப்பதும் அறிஞர் சூழ்ச்சியோ - (அற்ப) தூதுவனென்று இழித்துக் கூறுவதும் அறிவிற்சிறந்தவர்களுக்கு விவேகமோ (விவேகமன்று.) எ—று.

ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையது எதிர்மறை. கள்வன் - மாயாசாலங்களையுடையவன்; திருடன். (உசு)

27. கற்றையஞ்சிறையுடைக்கலுழனூர்தரு
கொற்றவன்றிசைமுகனமரர்கோமகன்
மற்றொருருவடிவமாய்வந்ததேயலா
லொற்றுவனிலைமைவேறுணரற்பாலதோ.

இ - ள். கற்றை அம் சிறை உடை கலுழன் ஊர்தரு கொற்றவன் - கூட்டமான அழகமைந்துள்ள இறகினையுடைய கருடனை வாகனமாகக்கொண்டு ஏறி நடாத்துகின்ற விட்டுணுவும்,—திசைமுகன் - பிரமதேவரும்,—அமரர்கோமகன் - தேவர்களுக்கரசனாகிய இந்திரனும் (ஆகிய மூவரும்),—ஒருவடிவமாய் வந்ததே அலால் - ஓர்வடிவமாய்வந்ததேயல்லாமல்,—ஒற்றுவன் நிலைமை வேறு உணரற் பாலதோ - தூதுவனாகிய அவன் (இங்கேவந்து செய்த) காரியங்களைப்பார்க்குமிடத்து வேறொருவிதமாக அறியத்தகுமா (தகாது.) எ — று.

மற்று அசை. ஏகாரம் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. எண்ணும்மைகள் தொக்கன. அரிபிரமேந்திராதிகள் தனித்தனி வரமாட்டார்களென்று துணிந்தவனாதலால் தூதனை அவர்கள் உருவமென்று கூறினான். (உஎ)

28. உன்றனியிளவலுமொருநின்னோங்கலும்
பொன்றியகாலையேபுராரிமைந்தன்மேற்
சென்றிலையல்லதுன்சேனைதூண்டியும்
வென்றிலைதாழ்த்திவண்வறிதுமேவினாய்.

இ - ள். உன் தனி இளவலும் நின் ஒரு ஓங்கலும் பொன்றிய காலையே - ஒப்பில்லாத உமது தம்பியாகிய தாரகனும் உமது கிரவுஞ்சமலையும் அழிந்தபொழுதே,—புராரி மைந்தன்மேல் சென்றிலை - சிவகுமாரன்மீது போருக்குப் போனீரில்லை,—அல்லது உன் சேனை தூண்டியும் வென்றிலை - நீர் போகாதுவிடினும் உமது சைனியங்களையனுப்பியாவது வெற்றிபெற்றிலீர்,—தாழ்த்து இவண் வறிது மேவினாய் - தாமதித்து இவ்விடத்திற் சும்மாவிருந்தீர். எ — று.

ஏகாரம் பிரிநிலை. உம்மை முன்னையன எண்; பின்னையது இழிவுசிறப்பு. அப்பொழுதுபோனால் இவ்வளவு கேடுவிளையாதென்பது அவன்கருத்தாதலின் 'தாழ்த்திவண் வறிதுமேவினை' யென்றான். (உஅ)

29. தீயழல்வறியதேயெனினுஞ்சீரியோ
ரேயிதுசிறிதெனவெள்ளற்பாலரோ
வாயதனூற்றலையடக்கலாரெனின்
மாயிரும்புவியெலாமிறையின்மாய்க்குமால்.

இ - ள். தீ அழல் வறியதே எனினும் - வெம்மையுடைய அக்கினிப்பொறி மிகச் சிறிதாக விருப்பினும்,—சீரியோர் இது சிறிதென எள்ளல் பாலரோ - புத்திசாலிகள்

இது ஒரு சிறுபொறியென்று இகழ்ந்து தள்ளுவார்களா? (தள்ளமாட்டார்கள்),—ஆய தன் ஆற்றலை அடக்கலார் எனின் - தீயென்றறிந்தபோதே அவ்வக்கினிப்பொறியின் வலியை அடக்கிவிடாராயின் (அற்பமாகக்காணப்பட்ட அவ்வக்கினிபெருகிவளர்ந்து),— மாயிரும் புவி எலாம் இறையின் மாய்க்கும் - மிகப்பெரிய உலகங்களையெல்லாம் ஒரு இறைப்பொழுதுள் அழித்துவிடும்.

ஆல் அசை. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது அசை. ஓகாரம் எதிர்மறை. பகைவர் அற்பர்களாக விருப்பினும் அற்பர்களென்று பராமுகமாயிராது அவர்கள் வலியை அடக்கவேண்டும்; அடக்காராயின் அவராற்றப்பாமற் கேடுவிளையுமென உவமை முகத்தாற் கூறினன். 'ஆயதன்' என்பது செய்யுளாதலின் சுட்டுநீண்டு யகரந்தோன்றியது. உம்மை இழிவுசிறப்பு. (உக)

30. மாற்றலர்சூழ்ச்சியதெனினுமாறதாய்
வீற்றொருநிலைமையதெனினுமேவுமுன்
னேற்றெதிர்காப்பரேயென்னினன்னவர்க்
காற்றருமிடுக்கண்வந்தடைதற்பாலதோ.

இ - ள். மாற்றலர் சூழ்ச்சியது எனினும் - பகைவர்களுடைய உபாயமாயினும்,— மாறதாய் வீற்று ஒரு நிலைமையது எனினும் - (அல்லது) மாறாகவேறொருகாரியமாயினும்,—மேவு முன் - வருதற்குமுன்னே,—ஏற்றெதிர் காப்பரே என்னின் - (தாமே) எதிர்சென்று (அவை தம்மையணுகாதபடி) காத்துக்கொள்ளுவாரானால்,—அன்னவர்க்கு ஆற்ற அரும் இடுக்கண் வந்து அடைதற்பாலதோ - அவர்களுக்குச் சகிக்கக்கூடாத துன்பம் வந்து சேருமோ (சேராது.) எ – று.

ஏகாரம் அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மைகள் எண். அது இரண்டும் பகுதிப்பொருள்விகுதி. ஆற்ற அரும் என்பது அற்றரும் என ஆகாரந்தொக்கது. 'வெள்ளம்வருமுன் னணைபோடவேண்டும்' என்னு முதுமொழியையனுசரித்துத் தீங்குவருமுன் அதுவாராமற் காத்துக்கொண்டவர்களுக்குத் துக்கம் வாராது என்று கூறினன் என்க. ()

31. துறந்திடாவளந்தனைத்துய்த்துச்செய்வகை
மறந்தனமாகியேவன்மையாளரை
யெறிந்தவர்தமையிகழ்ந்திங்ஙன்வாழ்துமேற்
சிறந்தவர்யாமலாலேவர்சீரியோய்.

இ - ள். சீரியோய் - கீர்த்தியினுன்மேம்பட்ட எங்கள்ராசனே,—துறந்திடா வளந்தனை துய்த்து செய்வகை மறந்தன மாகி - நீங்காதசெல்வத்தையனுபவித்துக் (காலங்களிற்) செய்யவேண்டிய காரியங்களை மறந்தேமாய்,—வன்மையாளரை எறிந்தவர் தமை இகழ்ந்து இங்ஙன் வாழ்துமேல் - வீரரைக்கொன்ற மகாவீரரை (அற்பர்களென்று) இகழ்ந்துகொண்டு இவ்விடத்தில் வாழுவோமானல்,—யாம் அலால் சிறந்தவர் ஏவர் - நாமல்லாமற் சிறந்த வீரர்கள் வேறுயாவர். எ – று.

ஏகாரம் அசை. தம் சாரியை. சிறந்தவர் என்பது குறிப்பால் கீழ்மையையுணர்த்தினது. நாம் என்று சூரன்முதலியோரை உளப்படுத்திப் பன்மையாகக்கூறினன். பகைவரை அற்பர்களென்று மதித்து அடக்காமல் வாழுவோமேயானல் பின்னர்ப்பிழையாகுமென்பது போதர 'வன்மையாளரை****யாமலாலேவர்' எனப்பரிகாசமாகக்கூறினன்.

32. முன்னமக்குமரன்மேன்முனிந்துசேறியே
லுன்னகர்க்கேகுமோவொற்றுமற்றுநீ
யன்னதுபுரிந்திலையாடன்மைந்தனோ
டிந்நகரழிந்ததென்றிரங்கற்பாலையோ.

இ - ள். முன்னம் அ குமரன்மேல் முனிந்து சேறியேல் உன் நகர்க்கு ஒற்று எகுமோ - (இராசனே) நீர் முதலிலே அக்குமாரன்மீது சினந்து போருக்குப் போவீரானல் உமது நகரத்திற்குத் தூதன்வருவானு,—நீ அன்னது புரிந்திலை - நீர் அப்படிச்செய்திரில்லை(ஆதலால்),—ஆடல் மைந்தனொடு இ நகர் அழிந்தது என்று இரங்கற் பாலையோ- விளையாட்டுப்பருவமுள்ள உமது மகனுடன் இந்த நகரமழிந்ததென்று வருந்தலாமா (வருந்தக்கூடாது.) எ — று.

மற்று வினைமாற்று. ஓகாரங்கள் எதிர்மறை. நம்முடைய பராமுகத்தால் வந்தபிழைக்கு நாம் வருந்தக்கூடாதென்பான் 'ஆடன்மைந்தனொ*****பாலையோ' என்றான். ()

33. மொய்யுடைநின்மகன்முடிந்ததன்மையு
மையநின்றிருநகரழிவதானதுஞ்
செய்யுறுநிலைமைகடெரிந்துசெய்திடார்
மையலின்கீழ்மையால்வந்தவாகுமால்.

இ - ள். ஐய - ராசனே,—மொய்யுடை நின் மகன் முடிந்த தன்மையும் - வலிமையையுடைய உமது இளயமகன் இறந்ததன்மையும்,—நின் திரு நகர் அழிவதானதும் - உமது இச்சிறந்த நகரமழிந்ததும்,—செய்யுறு நிலைமைகள் தெரிந்து செய்திடா மையலின் கீழ்மையால் வந்த வாகும் - செய்யவேண்டிய காரியங்களை யாலோசித்துச்செய்யாத மயக்கத்தின் தாழ்வால் வந்ததேயன்றி வேறொன்றுமில்லை. எ — று.

ஆல் அசை. உம்மைகள் எண். செய்திடாத என்பது செய்திடா என ஈறு தொக்கது. செய்யவேண்டுங் காரியங்களை ஆலோசித்துச் செய்யவேண்டும்; அங்ஙனஞ் செய்யாதொழியின் தப்பாது கேடுவிளையுமெனப் பின்னும் வற்புறுத்திக்கூறினன் என்க. ()

34. கழிந்திடுபிழையினைக்கருதிச்சாலவுள்
ளழிந்திடலியற்கையன்றறிஞர்க்காதலா
லொழிந்தனபோகவொன்றுரைப்பன்கேண்மியா
விழிந்ததென்றுன்னலையிமைப்பிற்செய்திநீ.

இ - ள். கழிந்திடு பிழையினைக் கருதி சால உள் அழிந்திடல் அறிஞர்க்கு இயற்கை அன்று ஆதலால் - நடந்தேறிப்போன தவறுகளைக்குறித்து மிகவும் மனம்வருந்துதல் விவேகிகளுக்குக் குணமல்ல ஆதலால்,—ஒழிந்தன போக - போனவை போகட்டும்,— ஒன்று உரைப்பன் கேள் - ஒருபுத்தி சொல்லுகின்றேன் கேளும்,—இழிந்தது என்று உன்னலை - குற்றமான விஷயமென்று எண்ணவேண்டாம்,—நீ இமைப்பில் செய்தி - நீர் (நான் சொல்லுகிறபடி) விரைந்து செய்வீராக. எ — று.

மியா முன்னிலையசை. நான் சொல்லுகிறபடி நடந்தால் உமக்கு நன்மையுண்டாகும், தாமதியாது அதனை விரைந்து செய்யவேண்டுமென்பான் 'இமைப்பிற் செய்தி' யென்றான். (௩௪)

35. ஆயதுபிறவிலையவுணர்தம்மொடு
மேயினபடையொடும்விரைந்துகண்ணுதற்
சேயினைவளைந்தமர்செய்யப்போதியா
னீயினித்தாழ்க்கலைநெருநல்போலவே.

இ - ள். ஆயது பிற இலை - நான் சொல்லுகின்ற புத்தி வேறொன்றுமில்லை,—நீ அவுணர் தம்மொடும் மேயின படையொடும் - நீர் அசுரர்களோடும் பொருந்திய சேனைகளோடும்,—விரைந்து கண்ணுதல் சேயினை வளைந்து அமர் செய்ய போதி - சீக்கிரமாக

நெற்றிக்கண்ணையுடைய சிவகுமாரனைவளைத்துப் போர்செய்யும்படி போகக்கடவீர்,—நெருநல் போல இனி தாழ்க்கலை - நேற்றைத்தினம்போல இனிச்சிறிதுந் தாமதித்திருக்கக்கூடாது. எ — று.

ஆல், ஏ அசை. உம்மைகள் எண். காலதாமதஞ்செய்யாமல் போருக்குப்போகவேண்டும் என்னுங் கருத்துப்போதர 'நெருநல்போல நீயினித் தாழ்க்கலை போதி' யென்றான். சிவபிரானைப்போலவே கந்தஸ்வாமிக்கும் மூன்று கண் உண்மையின் நெற்றிக்கண்ணையுடைய குமாரக்கடவுள் எனினுமாம். (௩௫)

36. என்றிவைமேதியனிசைப்பக்கேட்டலு
நன்றிதுவாமெனநவின்றுகையெறிந்
தொன்றியமுறுவலுமுதிப்பநல்லறங்
கொன்றிடுதுர்க்குணனினையகூறுவான்.

இ - ள். என்று இவை மேதியன் இசைப்ப - என்று இந்தப்போதனைகளை மகிடன் சொல்ல,—நல்லறம் கொன்றிடு துர்க்குணன் - நல்ல தருமநீதியை யழித்தவனாகிய துர்க்குணன் என்னும் மந்திரி,—கேட்டலும் - (அவைகளைக்) கேட்டலும்,—இது நன்று ஆம் என நவின்று - இது நல்ல புத்தியாகுமென்று (பரிகாசமாகச்) சொல்லி,—கை எறிந்து - கைகொட்டி,—ஒன்றிய முறுவலும் உதிப்ப - பொருந்திய சிரிப்புந்தோன்ற,—இனைய கூறுவான் - இவைகளைச் சொல்லுகின்றான். எ — று.

மகிடன் கூறிய புத்திகள் தனக்குச் சிறிதுஞ் சம்மதமில்லாமையால் பரிகசித்துக் கூறினன் என்பார். 'கையெறிந்தொன்றிய முறுவலு முதிப்ப' என்றும், கெட்டகுணமுடையவனென்பார். 'அறங்கொன்றிடு' எனவுங் கூறினர். கேட்டலும் உம்மீற்றுவினையெச்சம். (௩௬)

37. வன்திறலுவணன்மேல்வந்தமாயன்மே
னின்றிடுமமரர்மேனேர்ந்துபோர்செயச்
சென்றிலையிளையராற்றிறல்கொண்டேகினை
யின்றினிப்பாலன்மேலேகலாகுமோ.

இ - ள். வன் திறல் உவணன் மேல் வந்த மாயன் மேல் - (இராசனே,) மிக்க வலிமைபொருந்திய கருடவாகனத்திலேறிவந்த விட்டுணுவின்மேலும்,—நின்றிடும் அமரர் மேல் - மற்றைய இந்திராதிதேவர் மேலும்,—நேர்ந்து போர் செய சென்றிலை - எதிர்த்துப் போர்செய்யும்பொருட்டுச் சென்றீரில்லை,—இளையரால் திறல் கொண்டு ஏகினை - தம்பிமார்களாலே வெற்றிபெற்று வந்தீர்,—இனி - (அப்படியெல்லாமிருந்த மகாவீரராகிய நீர்) இனிமேல்,—இன்று பாலன்மேல் ஏகலாகுமோ - இந்நாளிலே ஒரு சிறு குழந்தைமேல் (போருக்குப்) போகலாமா (போகக்கூடாது.) எ — று.

ஓகாரம் எதிர்மறை. எண்ணும்மைகள்தொக்கன. விட்டுணு முதலிய தேவர்களினும் அக்குமாரர் வலிகுறைந்தவரென்பது அவன் கருத்தாதலின் 'ஏகலாகுமோ' எனமறுத்துரைத்தான். (௩௭)

38. இறுதியிலாயுளுமிலங்குமாழியு
மறுவிலாவெறுக்கையும்வலியும்வீரமும்
பிறவுளதிறங்களுந்தவத்திற்பெற்றனை
சிறுவனோடேயமர்செய்தற்கேகொலாம்.

இ - ள். இறுதி இல் ஆயுளும் இலங்கும் ஆழியும் மறுவிலா வெறுக்கையும் வலியும் வீரமும் பிறவுள திறங்களும் தவத்தில் பெற்றனை - அழிவில்லாத நிறைந்த வயசும் விளங்

காரின்ற ஆஞ்ஞாசக்கரமும் குற்றமில்லாத செல்வமும் வல்லமையும் வீரமும் இன்னுமனேக வரங்களும் (செய்த அருந்) தவப்பேற்றினால் (சிவபெருமான்றாப்) பெற்றுக்கொண்டீர்,—சிறுவனோடே அமர்செய்தற்கே - இவற்றையெல்லாம் பெற்றது (மகாராசனாகிய நீர்) ஒரு குழந்தையொடு போர்செய்யத்தானோ (போர்செய்யக்கூடாது.) எ — று.

கொல், ஆம், ஏ அசை. செய்தற்கே என்பதின் ஏகாரம் எதிர்மறை. உம்மைகள் எண்ணோடு உயர்வுசிறப்பு. தபோபலத்தா லருமையாகப்பெற்ற பொருள்களை ஒன்றுக்கும் பற்றாத அற்பர்களிடத்தில் உபயோகிக்கப்படாதென்பது அவன் கருத்து. (௩௮)

39. மேதகுபசிப்பிணியலைப்பவெம்பலிக்
காதல்கொண்டலமருங்கணங்கடம்மையுந்
தூதுவன்றன்னையுந்தொடர்ந்துபோர்செயப்
போதியோவமரரைப்புறங்கண்டுற்றுளாய்.

இ - ள். அமரரை புறம் கண்டு உற்றுளாய் - (நம்மைக் கண்டமாத்திரத்தே அஞ்சியோட்டெடுக்கும்) தேவாது முதுகைப்பார்த்துப் (போர்செய்யாது வாளா) விருந்தநீர்,—மேதகு பசிப்பிணி அலைப்ப - மிகுந்த பசியாகிய நோய் வருத்துதலால்,—வெம்பலி காதல் கொண்டு அலமரும் கணங்கள் தம்மையும் - கொடிய வுணவின்பொருட்டு விருப்பங்கொண்டு சுழன்று திரிகின்ற பூதங்களையும்,—தூதுவன் தன்னையும் - தூதுவனையும் (ஒருபொருளாக மதித்து),—தொடர்ந்து போர் செய போதியோ - பின்றொடர்ந்து போர்செய்யும்பொருட்டுப் போகின்றாயோ (போகக்கூடாது.) எ - று.

, தம், தன் சாரியை. உம்மைகள் எண்ணோடிழிவுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. வெம்பலி - கெட்டவுணவு. முன்னாளிலே தேவரெல்லாம் கண்டு பயந்து புறங்கொடுத்தோடும்படி இருந்த நீர் அற்பர்களாகிய பூதர்களையுந் தூதனையும் ஒரு பொருட்படுத்திப் போருக்குப்போதல் சிறப்பல்லவென்பான் 'போதியோ வமரரைப் புறங்கண்டுற்றுளாய்' என மறுத்துரைத்தான். (௩௯)

40. இன்றுநின்பெரும்படைக்கிறைவர்யாரையுஞ்
சென்றிடவிடுக்குதிசிறிதுபோழ்தினிற்
குன்றெறிபகைஞனைக்கூளிதம்மொடும்
வென்றிவண்மீள்குவர்வினையமீதென்றான்.

இ - ள். இன்று நின் பெரும் படைக்கு இறைவர் யாரையும் சென்றிட விடுக்குதி - (இராசனே,) இத்தினத்தில் உம்முடைய பெரிய சேனாதிபதிகளனைவரையும் (போருக்குச்) செல்லும்படி யனுப்பும் (அங்ஙனம் அனுப்பிவைப்பீராயின்),—சிறிது போழ்தினில் - (அவர்கள்) ஒருநிமிஷத்தில்,—குன்று எறி பகைஞனை கூளி தம்மொடும் வென்று இவண் மீள்குவர் - கிரவுஞ்சகிரியைப் பிளந்து துகட்படுத்திய சத்துருவாகிய சிவகுமாரனைப் பூதசேனைகளோடும் வெற்றிகொண்டு இவ்விடத்தில் திரும்பிவருவார்கள்,—ஈது வினையம் என்றான் - இதுவே என் கருத்தென்று கூறினான். எ — று.

தம் சாரியை. உம்மைகள் முற்று. உமது சேனாதிபதிகளை யனுப்பினாற்போதும் நீர் போகக்கூடாது எனத் தன்னபிப்பிராயம் உணர்த்துவான் 'வினையமீதென்றான்' (௪0)

41. கருதிடுதுர்க்குணக்கயவனின்னன
வுரைதருமுடிவினிலொழிகவிங்கெனக்
கருமமீதியாழியங்கையமைத்தரோ
தருமவெம்பகையுடையமைச்சன்சாற்றுவான்.

இ - ள். கருதிடு தூர்க்குணக் கயவன் இன்னன உரை தரும் முடிவினில் - (மந்திரிகளில் ஒருவனாக) மதிக்கப்படுகின்ற தூர்க்குணனாகிய கீழ்மகன் இந்தப்புத்திகளைச் சொல்லிமுடித்த அளவில்,—இங்கு ஒழிக எனா - இனி உன்பேச்சை விடு என்று,—கருமணி ஆழி அம் கை அமைத்து - நீலரத்தினமழுத்தப்பட்ட மோதிரமணிந்த அழகிய கையாலடக்கி,—தரும வெம்பகையுடை அமைச்சன் சாற்றுவான் - தருமகோபனாகிய மந்திரி கூறுகின்றான். எ - று.

அரோ அசை. தருமநீதிக்கு விரோதமாகிய துர்ப்போதனைகளைப் போதிப்பவன் ஆதலால் 'தரும வெம்பகையுடை யமைச்சன்' என்றார். (௪௧)

42. குலம்படுநவமணிகுயின்றுபொன்புனை
யலம்படைகொண்டுபுன்முதிரையாக்கத்தாற்
புலம்படக்கிறுவபோலும்வீரநீ
சிலம்படிமைந்தனோடாடல்செய்வதே.

இ - ள். வீர - மகாவீரனாகிய ராசனே,—நீ சிலம்பு அடி மைந்தனோடு ஆடல் செய்வது - நீர் சிலம்பையணிந்த காலினையுடைய சிறுபாலனோடு போர்செய்தல் (எதுபோலுமெனில்),—குலம்படு நவமணி குயின்று பொன்புனை அலம்படை கொண்டு - சாதியாகிய நவரத்தினங்களை அழுத்திச் செம்பொன்னாற்செய்யப்பட்ட கலப்பையைக்கொண்டு,—புன் முதிரை ஆக்கத்தால் புலம்பட கீறுவபோலும் - (அவரை துவரை கொள்ளு முதலிய) சிறு தானியப்பொருள்களின்பொருட்டு புன்செய்நிலத்திலே யுழுதலையொப்பாகும். எ — று.

ஏகாரம் அசை. இந்த உபமான உபமேயத்தால் மகாவீரராகவிருக்கின்ற நீர் ஒரு குழந்தையோடு போர்செய்தல் தகாதென்பது விளங்கக் கூறினானென்க. குலம் - சாதியெனினும் கூட்டமெனினும் சிரேஷ்டமெனினும் ஒக்கும். (௪௨)

43. மேலுயர்கண்ணுதல்விமலனன்றெனி
னாலவனன்றெனினயனுமன்றெனிற்
காலனுமன்றெனிற்காவல்வீரநீ
பாலனொடமர்செயிற்பயனுண்டாகுமோ.

இ - ள். மேல் உயர் கண்ணுதல் விமலன் அன்று எனின் - மேலாகவுயர்ந்த கண்பொருந்திய நெற்றியையுடைய மலரகிதராகிய சிவபிரான் அல்லரானால்,—ஆலவன் அன்று எனின் - ஆலிலையிற்றுயிலும் விட்டுணு அல்லரானால்,—அயனும் அன்று எனின் - பிரமதேவருமல்லரானால்,—காலனும் அன்று எனின் - இயமனுமல்லனானால்,—காவல் வீர நீ - (எவர்களையு மாணைக்குள்ளடக்கிக்) காக்கின்ற வீரராகிய நீர்,—பாலனொடு அமர் செயில் பலன் உண்டாகுமோ - ஒரு சிறுவனோடு போர்செய்தால் (உமக்குப்) புகழ் வருமா (வராது). எ — று.

ஓகாரம் எதிர்மறை. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். எப்பொருட்கு மிறைவராதலின் சிவபெருமானை முன்வைத்தும் அதிகாரமுறைமைபற்றி மற்றவர்களைப் பின்வைத்தும் இவர்களோடு போருக்குப்போனாலுந் தகுமெனவும் சிறுவனோடு போருக்குப் போதல் தகாதெனவும் அங்ஙனஞ் செல்லின் இகழ்வேயன்றிப் புகழ்முதலியன இல்லையென்றுந் தன் கருத்துப்புலப்படக் கூறினான் என்க. (௪௩)

44. மன்னிளங்குதலைவாய்மதலைமீதினு
மின்னினியமர்செயவிறத்தியென்னினு
மன்னவனினதுபோராற்றல்காண்பனேல்
வென்னிடுமெதிர்ந்துபோர்விளைக்கவல்லனோ.

இ - ள். மன் இளம் குதலை வாய் மதலை மீதினும் - பெரிதும் இளமைப்பருவத்தையும் நிரம்பா மென்மொழியைப்பேசும் வாயையுமுடைய சிறுகுழந்தையோடும்,—இன்னினி அமர் செய இறத்தி என்னினும் - இப்பொழுது போர்செய்தற்குப் போவீராயினும்,—அன்னவன் நினது போர் ஆற்றல் காண்பனேல் - அச்சிறுவன் உமது போர் செய்யும் வல்லபத்தைக் காண்பானுனல்,—வென்னிடும் - (அஞ்சிப்) புறங்கொடுத்தோடுவான்,—எதிர்ந்து போர் விளைக்க வல்லனே - (மகாவீரராகிய உம்மோடு)எதிர்ந்து போர் செய்தற்கு வல்லனே (வல்லனல்லன்.) எ — று.

ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது இழிவுசிறப்பு; பின்னையது ஐயம். நீர் சென்றாலும் அவன் உமக்கெதிரேநின்று பொரத்தக்க வன்மையுள்ளவனல்லன் ஆதலால் நீர் சென்றும் பயனில்லையென்பான் 'எதிர்ந்து போர்விளைக்க வல்லனே' என்றான். மிக்க இளமைப்பருவமுடையரென்பான், 'மன்னிளங்குமரன்' என்றான். (௪௪)

45. நேரலர்தங்களைநேர்ந்துளாரெனப்
பேரிகலாற்றியேபெரிதுமாய்வதும்
பூரியர்கடனலாற்புலமைக்கேற்பதோ
சீரியர்கடனவைதெரிந்துசெய்வதே.

இ - ள். நேர் அலர் தங்களை நேர்ந்துளார் என - தமக்கொத்தவர்களல்லாத அற்பர்களைத் தமக்கொத்தவர்களென்றெண்ணி,—பேர் இகல் ஆற்றி பெரிது மாய்வதும் பெரும்போரைச்செய்து மிக வருந்துவதும்,—பூரியர் கடன் அலால் புலமைக்கு ஏற்பதோ - கீழ்மக்களின் கடமையேயன்றி அறிவுடையார்க்குத் தகுமா,—அவை தெரிந்து செய்வது சீரியர் கடன் - பகைவர்களுடைய தாரதம்மியங்களை அறிந்தொருகருமத்தைச் செய்தல் விவேகிகளுடைய கடமையேயாம். எ - று.

தம் சாரியை. ஏகாரம் முன்னையது அசை; பின்னையது தேற்றம். உம்மை இழிவு சிறப்பு. தமக்கு மேலோர், ஒத்தோர், கீழோர் என்னும் மூவருள் மேலோர் கருத்துக் கியைய ஒழுகாவழி வருங்கேடும், ஒத்தோர் கருத்தறிந்து சாம பேத தானங்களு ளொன்றைச்செய்தலும் அவை இணங்காவழிப் படையெடுத்துப் பொருதலு முண்மையின் அவைகளை யறிந்தொழுகல் சீரியோர் கடனென்றும் அறியாதொழுகல் பூரியர்கடனென்றுங் குறிப்பித்தான். (௪௫)

46. எரிமுகனிரணியனெனுமுன்மைந்தரி
லொருவனுக்காற்றலரிலக்கத்தொன்பது
பொருதிறல்வயவரும்பூதர்யாவரு
மரனருள்புரிதருமறுமுகத்தனும்.

இ - ள். பொரு திறல் இலக்கத்து ஒன்பது வயவரும் - போர்செய்யத்தக்க வலிமையையுடைய இலக்கத்தொன்பது வீரர்களும்,—பூதர் யாவரும்-பூதர்களனைவரும்,—அரன் அருள் புரி தரும் அறுமுகத்தனும் - சிவபெருமான் அருளாற்பெற்ற அறுமுகமுள்ள சிறுவனும்,—எரிமுகன் இரணியன் எனும் உன் மைந்தரில் ஒருவனுக்கு ஆற்றலர் - அக்கினிமுகாசுரன் இரணியன் என்னும் பெயரையுடைய உமது பிள்ளைகளுள் ஒருவனுக்கெதிர் நிற்கப் போதாதவர்களா யோடுவார்கள். எ — று.

உம்மைகள் எண்ணோடு முற்று. பானுகோபனது அதிபலபராக்கிரம சாதுரிய சாமர்த்தியங்களைப் பாலியத்திலேயே யறிந்தவனாதலால் அவனைச் சூரனொடொத்த மகாவீரனென மதித்து, அறுமுகனையும் வீரர்களையும் பூதர்களையும் வெல்லுதற்கு நீரும் வேண்டாம் பானுகோபனும் வேண்டாம் பின் அக்கினிமுகன் இரணியனென்னும் மக்களுள் ஒருவனே போதுமென்று கூறினன் எனவுணர்க. (௪௬)

47. கீள்கொடுநகங்கொடுகிள்ளுமொன்றினை
வாள்கொடுதடியுமோவன்மைசான்றதோ
ராள்கொடுமுடித்திடுமவரைவென்றிட
நீள்கொடுமரங்கொடுநீயுஞ்சேறியோ.

இ - ள். கீள் கொடு நகங்கொடு கிள்ளும் ஒன்றினை வாள்கொடு தடியுமோ - கிழிக்கின்ற விளைந்தநகத்தாற் கிள்ளவேண்டிய ஒருபொருளை வாள்கொண்டு வெட்டுவோர்களா (அதுபோல),—வன்மை சான்றது ஓர் ஆள்கொடு முடித்திடும் அவரை வென்றிட - வலிமையான் மேம்பட்ட ஓராளைக்கொண்டு கொல்லவேண்டிய அவர்களை வெல்லுதற்கு,—நீள் கொடு மரங்கொடு நீயும் சேறியோ - நெடிய வில்லையெடுத்துக்கொண்டு (மகாவீரராகிய) நீரும் போகின்றீரா. எ – று.

ஓர் அசை. ஓகாரங்கள் எதிர்மறை. உம்மை உயர்வுசிறப்பு. நகத்தாற் கிள்ளியெறிய வேண்டிய தொன்றினை விவேகிகள் வாளினால் வெட்டமாட்டார்கள்; அதுபோல இளம் புதல்வனையும் அவனுடன் வந்தவர்களையும் வெல்லுதற்கு இராசனே, நீர் போகவேண்டியதில்லை. ஒருவீரனை அனுப்பினாற்போதும் என்று கந்தஸ்வாமியின் சிறுபருவத்தையும் அரசனது முதிர்ச்சியையும் எடுத்துப்பேசி அலக்ஷியமாகக்காட்டுவான் 'கொடுமரங்கொடு நீயுஞ்சேறியோ' வெனக் கூறினான். (௪௭)

48. மாணிமைகூடுறுமகவுதன்னொடு
மேணறுசாரதரினங்கடம்மொடும்
பூணுதிசெருவெனும்புகற்சிகேட்பரே
னாணுவர்நமரெலாநகுவர்தேவரும்.

இ-ள். மாணிமை கூடுறு மகவு தன்னொடும் - மாட்சிமைத்தன்மைபொருந்தாத சிறு குழந்தையோடும்,—ஏண் அறு சாரதர் இனங்கள் தம்மொடும் - வலிமையில்லாத பூதகூட்டங்களோடும்,—செரு பூணுதி எனும் புகற்சி கேட்பரேல் - போருக்குப்போகின்றீரென்ற சொல்லைக்கேட்பார்களானால்,—நமரெலாம் நாணுவர் - நம்மவரெல்லாம் வெட்கமடைவார்கள்,—தேவரும் நகுவர் - (எங்களுக்கேவல்செய்கின்ற) தேவருஞ்சிரிப்பார்கள்.

தன், தம் சாரியை. உம்மை முன்னைய எண்; பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம். மாண் இமை கூடுறு - மாட்சிமையாகிய இமையும் பொருந்தப்பெறுத எனவும் பொருள் கூறுவர். அவ்வளவு சிறுவனென்பது கருத்து. அறுமுகப்பெருமானது போற்றலை யொருசிறிதுமறியாது தம்மரசனாகிய சூரபன்மனையே போராற்றலுடையானென நன்குமதித்தவனாதலால், தருமகோபன் முருகக்கடவுளைப்பாலனென்றும் மதலையென்றும் மகவு என்றும் பன்முறை இகழ்ந்துகூறினான். அன்றியும், ஆயிரத்தெட்டண்டங்களையும் அரசாட்சிபுரியும் அத்துணைப்பெருஞ் சிறப்பினையுடைய மகாராஜனாகிய் நீர் ஒரு சிறுகுழந்தையுடனே பொருதற்கு உத்தேசித்திருக்கின்றீர் என்னுஞ் சொல்லைக்கேட்டால் நம்மவரெல்லாம் உமது வெற்றியைத் தமது வெற்றியாக மதித்திருந்த இறுமாப்பொழிந்து நாணத்தால் தலைகவிழ்ந்துகொள்ளுவார்களென்றும், ஒருசாமானிய வசுரனாலும் நீர் குழந்தையோடு செய்யும்பொருட்டு உத்தேசித்திருக்கின்ற போரை மெச்சானென்றும், அங்ஙனம் இனத்தாரை நாணச்செய்வது அரசனாகிய உமக்கழகல்லவென்றுந் தெரிவிக்க 'நமரெலாநாணுவ' ரென்றும், இவ்வுத்தேசத்தைக் கேள்விப்பட்டால் எங்கள் எவலைச்செய்து திரிகின்ற அற்பர்களாகிய தேவருஞ்சிரிப்பார்கள், அது உமது பெருமைக்குச் சிறந்ததல்லவென்று தெரிவிப்பான் 'தேவருநகுவ' ரென்றுங் கூறினான். (௪௮)

49. பொற்றையைமுடித்தனன்பொருவிறம்பியைச்
செற்றனனென்றிளஞ்சிறுவன்றன்னையும்
வெற்றிகொள்புதல்வனைவீட்டினானெனா
வொற்றையுமதித்தனைதொன்மையுன்னலாய்.

இ - ள். தொன்மை உன்னலாய் - (அரசனே,) உமது பெருந்தன்மையைக் கவனியாது,—பொற்றையை முடித்தனன் - கிரவுஞ்சமலையை யழித்தான்,—பொருவில் தம்பியை செற்றனன் என்று - ஒப்பில்லாத தம்பியைக்கொன்றான் என்று,—இளம் சிறுவன் தன்னையும் - சிறு குழந்தையையும்,—வெற்றிகொள் புதல்வனை வீட்டினான் எனா - வெற்றிபொருந்திய இளையமகனைக்கொன்றானென்று,—ஒற்றையும் மதித்தனை - தூதனையும் (பெரும்பொருளாக) மதித்தீர். எ - று. தன் சாரியை. உம்மைகள் எண்.

தொன்மை உன்னலாய் - பழைய விதிவசமின்னதென்பதை யறியாமல் எனவும் பொருள் கூறுவர். இராசனே, நீர் உம்முடைய மகாபலத்துக்கும் சாமர்த்தியத்திற்கும் சிறுவனது பலம் எவ்வளவென்று உற்றுநோக்காமல் மாயங்களுக்கெல்லாம் இடமாகிய கிரவுஞ்சத்தையும் திருமாலாதி தேவர்களைச்செயித்த ஒப்பற்றவனாகிய தாரகனையும் அழித்தானே என்று நினைப்பது உமக்குச் சிறப்பன்று; ஏனெனில் அப்படி யழித்தானாயினும் அச்சிறுவன் உமக்குச் சிறிதுமீடல்லன். ஆதலால் நீர் அவனை ஒருபொருளாக மதித்தலும் அனேகரை வெற்றிகொண்ட மகனைக்கொன்றானென்று தூதனை ஒருபொருளாக மதித்தலும் உமது பெருந்தன்மைக்குக் கூடாதென்பான் 'மதித்தனை' யென்றான்.

50. ஆறணிசெஞ்சடையண்ணறந்திடும்
பேறுடைவேலினைப்பிள்ளையுய்த்தலு
மாறுளபடையினான்மாற்றலாமையா
லீறதுவாயினனிளவறாரகன்.

இ - ள். ஆறு அணி செம் சடை அண்ணல் தந்திடும் பேறுடை வேலினை பிள்ளை உய்த்தலும் - கங்கையைத்தரித்த சிவந்த சடையையுடைய சிவபெருமான் கொடுத்தருளிய ஒரு வேலாயுதத்தைச் சிறுவன் விடுத்தலும்,—மாறுள படையினால் மாற்றலாமையால் - வேறொரு படைக்கலத்தால் நீக்கக்கூடாமையால்,—இளவல் தாரகன் ஈறு அது ஆயினன்-தம்பியாகிய தாரகன் இறந்தான். எ - று.

அது பகுதிப்பொருள்விகுதி. பேறு - வரமெனினுமாம். சிறுவனுக்கு வல்லமையில்லை; உமக்கு வரமளித்த சிவபெருமான் ஆசீர்வதித்துக்கொடுத்தருளிய வேலை விடுதலும் அதற்கொப்பான ஆயுதமொன்றும் விட்டுத் தடுக்காமையால் அவ்வேல்பட்டுத் தாரகனிறந்தானேயன்றி வேறில்லை யென்றுணராமல் சிறுவனை மிகவும் மதிக்கின்றீரென்பான் 'மாறுளபடையினான் மாற்றலாமையா லீறதுவாயின' னென்றான். சிவபெருமானிடத்தில் மாத்திரம் மதிப்புள்ளவனாதலின் அப்பெருமானை யுயர்த்திக்கூறுவான் 'அண்ணல்' எனப் பிரயோகித்தான். (௫௰)

51. குறுமுனிதொல்லைநாட்கூறும்வாய்மையா
லிறுதியையடைந்ததாங்கிருந்தமால்வரை
யறிகிலையீதெலாமாற்றல்கூடுறாச்
சிறுவனசெய்கையேசிந்தைகோடியால்.

இ - ள். ஆங்கு இருந்த மால் வரை - அம்மாயாபுரியினருகிலிருந்த பெரிய கிரவுஞ்சமலை,—குறுமுனி தொல்லைநாள் கூறும் வாய்மையால் இறுதியை அடைந்தது-அகத்திய முனிவர் முன்னாளிற் சொல்லிய சாபத்தினால் அழிந்துபோனது,—ஈது எலாம் அறி

கிலை-நீர் இவைகளையெல்லாம் எண்ணினீரில்லை,—ஆற்றல் கூடுறு சிறுவன செய்கையே சிந்தை கோடி - வல்லமையில்லாத சிறு குழந்தையினது செய்கைகளையே மனசில் ஒரு பொருளாக மதித்துக்கொண்டீர். எ — று.

ஆல் அசை. ஏகாரம் பிரிநிலை. அகத்தியர்கூறிய சாபத்தான் மலையழிந்தமையையும் மேற்கூறியவைகளையும் ஆலோசியாமல் சிறுவனது வல்லமையையே மதித்துக்கொண்டீர், இது உமக்குத் தகாதெனக் கூறினான் என்க. 'சிறுவன செய்கையே சிந்தைகோடி' என்பதற்குச் சிறுவனது செய்கையன்று இதனை உளத்துவைக்குதிர் என்றலுமொன்று; ஏகாரம் எதிர்மறை. (ருக)

52. எச்சமொடழிவுறுவிரதஞ்சாலிகை
கைச்சிலைபெற்றிலன்கருதிநீயவை
யச்சொடுபுரிந்திலையதனிற்றூதனால்
வச்சிரவாகுவாமகனுந்துஞ்சினான்.

இ - ள். எச்சமொடு அழிவு உறா இரதம் சாலிகை கைச்சிலை பெற்றிலன் - யாகத்தில் அழியாத தேரையும் கவசத்தையும் கையிற்பிடிக்கும் வில்லையும் பெற்றானில்லை,— கருதி நீ அவை அச்சொடு புரிந்திலை - ஆலோசித்து நீரும் அவைகளை அடுக்காகக்கொடுத்தீரில்லை,—அதனில் - அதனால்,—தூதனால் வச்சிரவாகுவாம் மகனும் துஞ்சினான் - தூதனால் வச்சிரவாகுவாகிய மகனும் இறந்துபோனான். எ — று.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். ஒடு உருபுமயக்கம். அச்சொடு - விரைவாக எனினுமாம். எண்ணும்மைகள் தொக்கன. நீர் யாகஞ்செய்து வச்சிரகாயத்தையும் படை முதலியவைகளையும் பெற்றதுபோல நும் மகனும் யாகஞ்செய்து அவைகளைப் பெற்றானில்லை. நீரும் இரதமுதலியவைகளைக் கொடுத்தீரில்லை. அல்லது அவைகளைப் பெறும்படி யாகஞ்செய்யும் முறைகளைப் போதித்தீருமில்லை. ஆதலாற்றான் மகனிறந்தான் அல்லதிறக்கமாட்டான் எனக் கூறினானென்பது கருத்து. (ருஉ)

53. பலவினிமொழிவதென்படியிறானவத்
தலைவரிலொருவனைவிளித்துத்தானையோ
டிலையயின்முருகன்மேலேவுவாயெனி
னலைவுசெய்தொல்லையினடல்பெற்றேகுவான்.

இ - ள். இனி பல மொழிவது என் - (இராசனே, கேளும்) இனிப்பலவகையாகச் சொல்வதினாற் பயனென்னை,—படி இல் தானவத் தலைவரில் ஒருவனை விளித்து - ஒப்பில்லாத அசுரவீரர்களி லொருவனையழைத்து,—தானையோடு - சேனைகளுடன்,—இலை அயில் முருகன் மேல் ஏவுவாய் எனின் - தகட்டுவடிவாகிய வேற்படையையுடைய அச்சிறுவன்மேல் (போருக்கு) அனுப்புவீராயின்,—அலைவு செய்து ஒல்லையின் அடல் பெற்று ஏகுவான் - (அவனை) அலைத்துச் சீக்கிரம் வெற்றிகொண்டுவருவான். எ — று.

இலை - இலைமுகம்போன்ற எனினுமாம். சிறுவனைவெல்லற் கித்துணைப்பேராலோசனை வேண்டுவதில்லை யெனவும், உம்மோடொத்த வீரனானால் நீர் போகலாம் அல்லது போகக்கூடாது எனவும், உமக்குப் பகைவனாகவந்தவன் சிறுகுழந்தையாதலின் ஓரசுரத்தலைவனை யனுப்பி வெற்றிபெறலாமெனவும் போதித்தானெனவுணர்க. அலைத்தல் - அழித்தல். (ருங)

54. அன்னதுசெய்கெனவறத்தைச்சீறுவான்
சொன்னதோரிறுதியின்முறுவறோன்றிடக்
கன்னிகர்மொய்ம்புடைக்காலசித்தெனுங்
கொன்னவில்வேலினானினையகூறுவான்.

இ - ள். அன்னது செய்க என அறத்தை சீறுவான் சொன்னது ஓர் இறுதியில் - நான் போதித்தபடியே செய்கவென்றும் (இதுவே என்சம்மதமென்றும்) தருமகோபன் சொல்லி முடித்தவுடன்,—முறுவல் தோன்றிட - (அவன் கூறிய புத்திகள் தன் கருத்துக்கிசையாமையால்) சிரிப்புண்டாக,—கல் நிகர் மொய்ம்புடை காலசித்து எனும் கொல்நவில் வேலினன் இனைய கூறுவான் - மலைபோன்ற புயங்களையுடைய காலசித்தெனும் பெயருள்ள கொலைத்தொழிலமைந்த வேற்படையையுடையனாகிய வேறொரு மந்திரியானவன் இவ்வாறு சொல்லுகின்றான். எ - று.

ஓர் அசை. தருமகோபன் போதித்த புத்திகள் தனக்கு அங்கீகாரமில்லையென்பது விளங்கச் சிரிப்புண்டாகப் பேசினனென்பார் 'முறுவறோன்றிடக் கூறுவா'னென்றார். உடைய என்பது உடை என ஈற்றுயிர்மெய் கெட்டுநின்றது. நவிலல் - செய்தல். கொன்னவில்வேல் இடைப்பிறவரல். (டுச)

55. செந்தியினிருந்திடுஞ்சிறுவன்சாரதர்
தந்தொகைதன்னொடுமீண்டுசாருமே
லெந்தையொர்சிலவரையேவலல்லது
மந்திரம்வேண்டுமோமற்றிதற்குமே.

இ - ள். செந்தியின் இருந்திடும் சிறுவன் சாரதர்தந் தொகை தன்னொடும் ஈண்டு சாருமேல் - (எம்மரசனே,) திருச்செந்தூரிலிருக்கின்ற குமாரன் பூதகூட்டங்களுடன் இவ்விடத்திற்கு வருவானாயின்,—எந்தை ஓர் சிலவரை ஏவல் அல்லது - எம்பெருமான் ஒரு சில அசுரவீரரை யனுப்புவதன்றி,—இதற்கும் மந்திரம் வேண்டுமோ - இதற்குமொரு மந்திராலோசனை வேண்டுமா. எ — று.

மற்று, ஏ அசை. தம், தன் சாரியை. ஓகாரம் எதிர்மறை. உம்மை இழிவுசிறப்பு. தருமகோபன் ஆரையாவது ஒரு சேனாதிபதியைச் சேனைகளுடனனுப்பி வெல்லலாம் என்றதற்கு மாறாகச் சிறுவனை வெல்லுதற்கு அவ்விடத்திற்போதல் தக்கதன்று அவன் இங்குவந்தால் அப்பொழுது ஆரையாவது சிலரைவிட்டு வெற்றிகொள்ளலாம் அச்சிறுமதலைக்காக ஒரு மந்திராலோசனை வேண்டுமா என்பான் 'மந்திரம் வேண்டுமோ மற்றிதற்குமே' யென அலக்ஷியமாகக் கூறினான். (டுடு)

56. வயந்தனதையனைவாசவன்றனைச்
சயந்தனைப்பிறர்தமைச்சமரின்வென்றநா
ளியைந்தெமைவினவலையின்றோர்பாலற்கா
வியன்பெருமந்திரம்வேண்டிற்றாங்கொலோ.

இ - ள். வயந்தனது ஐயனை வாசவன்தனை சயந்தனை பிறர் தமை சமரின் வென்ற நாள் - மன்மதனுக்குப்பிதாவாகிய விட்டுணுவையும் இந்திரனையுஞ் சயந்தனையும் மற்றுள்ளவர்களையும் போரிலே வெற்றிகொண்டகாலத்தில்,—இயைந்து - கூட்டங்கூடி,—எமை வினவலை - எங்களையோராலோசனை கேட்டீரில்லை,—இன்று ஓர் பாலற்கா வியன்பெரு மந்திரம் வேண்டிற்று - இத்தினத்தில் ஒரு சிறுவனுக்காகவா மிகப்பெரிய மந்திராலோசனைச்சங்கம் வேண்டியதாயிற்று. எ — று.

ஆம், கொல் அசை. தன், தம் சாரியை. ஓகாரம் எதிர்மறை. எண்ணும்மைகள் தொக்கன. வசந்தன் என்பது வயந்தன் என்றாயிற்று; காலத்தால்வந்த பெயர். பெருந்தேவர்களென்று மதிக்கப்படுகின்ற அரிபிரமேந்திராதிகளை வென்றநாளில் ஓர் கூட்டங்கூடி ஆலோசிக்கவில்லை. இன்றொரு பாலனுக்கா மந்திராலோசனை வேண்டும் அது வேண்டாமென்பான் 'இன்றோர் பாலற்கா வியன்பெருமந்திரம் வேண்டிற்றாங்கொலோ' என்றான். இயைந்தெமை என்பதை இயைந்த எமை எனப்பிரித்து, (உசாத்துணைச் சுற்றமாகப்) பொருந்திய எம்மை என்றலுமாம். (டுசு)

57. அண்டர்களோடுங்கினரரக்கரஞ்சின
ரெண்டிசைக்கிழவருமேவலாற்றுவர்
மண்டமரவுணரின்வலியர்பூதராங்
கண்டனமின்றியாங்கலியின்வண்ணமே.

இ - ள். அண்டர்கள் ஓடுங்கினர் - தேவர்களெல்லாருமஞ்சி யொடுங்கினார்கள்,—அரக்கர் அஞ்சினர் - அரக்கரனைவரும் அச்சமுற்றார்கள்,—எண் திசை கிழவரும் ஏவல் ஆற்றுவர் - (அவ்வளவோ! அவர்களினும் மேம்பட்டவராகிய) அட்டபாலகரும் (நியமிக்கப்பட்ட) தொண்டுகளைச்செய்கின்றார்கள்,—மண்டு அமர் அவுணரின் பூதர் வலியராம் - நெருங்கிநின்று போரைச்செய்கின்ற (வீரர்களாகிய) அசுரரிலும் (அற்ப) பூதர்கள் வலியவர்களாம்,—யாம் கலியின் வண்ணம் இன்று கண்டனம் - நாம் இனிவருங் கலியுகத்தின் தன்மையை (இந்தயுகத்தில்) இன்றேகண்டேம். எ — று.

ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். கலியுகத்திலே குலங்களெல்லாந் தடுமாறித் தாழ்ந்தவர் உயர்ந்தவராகவும் உயர்ந்தவர் தாழ்ந்தவராகவும் வருவார்களென்பதைப் பௌடியபுராணத்தால் உணர்ந்தானாகலின் தன்னினத்தை உயர்ந்தவர்கள் என்றும், நீதிமான்களென்றும், பலசாலிகளென்றும், கந்தஸ்வாமியும் அவரது பூதசைனியங்களும் தாழ்ந்தவர்களென்றுங்கருதி நான் கலியிலுள்ள நூதன விஷயத்தை இன்று கண்டேனென்பான் 'மண்டமரவுணரின் வலியர் பூதராங், கண்டன மின்றியாங் கலியின் வண்ணமே' என்றான். (௫௭)

58. பணிக்குதிதமியனைப்பரமன்மைந்தனைக்
கணத்தொகைவீரரைக்காலபாசத்தாற்
பிணித்திவண்வருகுவனென்றுபேசலுந்
துணுக்கெனச்சண்டனென்றொருவன்சொல்லுவான்.

இ - ள். தமியனை பணிக்குதி - அடியேனுக் கனுமதிகொடும்,—பரமன் மைந்தனை கணத்தொகை வீரரை காலபாசத்தால் பிணித்து இவண் வருகுவன் என்று பேசலும் - சிவகுமாரனையும் பூதகண வீரர்களையும் (என்னிடத்திலுள்ள) காலபாசத்தாற் கட்டிக்கொண்டு இவ்விடத்தில் வருவேனென்று சொல்லுதலும்,—துணுக்கென சண்டன் என்று ஒருவன் சொல்லுவான் - விரைந்து எழுந்து சண்டனென்னும் ஒரு சேனாதிபதி சொல்லுகின்றான். எ — று.

உம்மைகள் தொக்கன. கந்தஸ்வாமியும் சைனியங்களும் காலபாசத்தை வெல்ல வல்லவர்களென்று கருதாது காலபாசந் தன்னிடத்திருத்தலால் தன்னை யொருவரும் வெல்லமாட்டார்கள் என்னுந் துணிவுபற்றி யிறுமாப்புடன் 'பணிக்குதி தமியனை' யென்றான். காலசித்தன் இப்படிப்பேசி முடித்ததும் முடியாததுமாகவிருக்கும்பொழுதே அவனுக்கருகிலுள்ள ஆசனத்திருந்த சண்டன் விரைந்தெழுந்து இடையிற் பேசினனென்பார் 'துணுக்கென' வென்றார். துணுக்கு - விரைவுக்குறிப்பு. (௫௮)

59. கழிபசிநோயடக்கவலும்பூதரு
மழலையம்பிள்ளையுமற்றவற்குறு
தொழில்புரிசில்வருஞ்சூழ்ச்சிப்பாலரோ
வழகிதுமந்திரமவுணர்க்காற்றவே.

இ - ள். கழி பசி நோய் அட கவலும் பூதரும் - மிக்க பசிநோய் வருத்த (அதனால்) வருந்தும் பூதர்களும்,—மழலை அம் பிள்ளையும் - நிரம்பாத மென்மொழியைப்பேசுகின்ற சிறுகுழந்தையும்,—அவற்கு உறு தொழில் புரி சிலவரும் சூழ்ச்சிப்பாலரோ - அச்சிறுவனுக்குப் பெருந்தொண்டுகளைச் செய்கின்ற சிலரும் (இங்ஙனம்) ஆலோசனை செய்யத்

தக்க தைரியசாலிகளா,—அவுணர்க்கு மந்திரம் ஆற்ற அழகிது - (அவர்கள் பொருட்டுச் செய்கின்ற) மந்திராலோசனை அசுரர்களுக்கு மிகச் சிறப்புடைத்து. எ — று.

அம், மற்று, ஏ அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மைகள் எண். பசியினால் வருந்து கிறவர்கள் குழந்தைகள் ஏவலாளர்கள் என்னும் இவர்பொருட்டு மந்திராலோசனை வேண்டுவதில்லை யென்பான் 'கழிபசிநோயட*****வழகிதுமந்திரமவுணர்க் காற்றவே' என்றான். (௫௯)

60. கொல்லுவன்பூதரைக்குமரன்றன்னையும்
வெல்லுவன்பிறரையும்விளிவுசெய்வனான்
மல்லலந்தோளுடைமன்னர்மன்னவுன்
சொல்லதின்றென்னவித்துணையுந்தாழ்த்துளேன்.

இ - ள். மல்லல் அம் தோள் உடை மன்னர் மன்ன - வலிமைபொருந்திய அழகிய புயங்களையுடைய அரசர்க்கரசனே,—உன் சொல்லது இன்று என்ன இத்துணையும் தாழ்த்துளேன் - நான் உம்முடைய அனுமதியில்லையேயென்று இதுவரையுந் தாமதமாக விருந்தேன்,—பூதரை கொல்லுவன் - (இப்பொழுதனுமதிகொடுத்தால்) பூதர்களைக் கொல்லுவேன்,—குமரன் தன்னையும் வெல்லுவன் - சிறுவனையும் வெல்லுவேன்,—பிறரையும் விளிவு செய்வன் - மற்றுள்ள வீரர்களையுமழிப்பேன். எ — று.

எனக்கெல்லாவகையினுஞ் சாமர்த்தியமிருப்பினும் நான் எசமானாகிய தங்கள் கட்டளைப்படி நடக்கவேண்டியவனாதலால் பொறுத்தேனென்பான் 'மன்னர் மன்னவுன்*****தாழ்த்துளேன்' என்று கூறினான். ஆல் அசை. தன் சாரியை. அது பகுதிப் பொருள்விகுதி. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். (௬0)

61. ஏவுதிதமியனையிமைப்பிற்சென்றியான்
மூவர்கள்காப்பினுமுரணிற்றாக்கியே
தாவுறுசாரதத்தொகுதிதன்னொடு
மேவலன்றனையிவண்வென்றுமீள்வனால்.

இ - ள். தமியனை ஏவுதி - (இராசனே,) அடியேனை அனுப்பும்,—யான் இமைப்பில் சென்று - (அனுப்பினால்) நான் ஓரிமைப்பொழுதிற் (பகைவரிடத்திற்) போய்,—மூவர்கள் காப்பினும் முரணில் தாக்கி - திரிமூர்த்திகள் காவல்செய்தாலும் வலிமையோடு போர்செய்து,—தா உறு சாரதத்தொகுதி தன்னொடு - தசைப்பற்றை விரும்பி திரிகின்ற பூதகணங்களுடன்,—மேவலன் தனை இவண் வென்று மீள்வன் - பகைவனாகிய அச்சிறுவனை வெற்றிகொண்டு இவ்விடத்திற்குத்திரும்பிவருவேன். எ - று.

ஆல், ஏ அசை. தன் இரண்டும் சாரியை. உம்மை உயர்வுசிறப்பும் எதிர்மறையும். தம்மையன்றி மற்றுள்ளவரிற் சிறந்தவர்கள் திரிமூர்த்திகளென்பது அவன் கருத்தாதலின் எளியவர்களாகிய பூதர் முதலானவருடன் நானெதிர்க்குங்கால் திரிமூர்த்திகள் வந்து காக்கமாட்டார்கள்; ஒருபோது காப்பினும் அவர்களையும் வெல்வேனென்பான் 'மூவர்கள் காப்பினு முரணிற் றாக்கியே' என்று கூறினான். (௬௧)

62. எனவிவைசண்டனுங்கிசைத்தவெல்லையி
னனலியென்றுரைத்திடும்வுணர்காவலன்
சினமொடுமுறுவலுஞ்சிறிதுதோன்றிட
வினையமொடிம்மொழிவிளம்பல்செய்குவான்.

இ - ள். என இவை சண்டன் ஆங்கு இசைத்த எல்லையின் - என்றிவ்வார்த்தைகளைச் சண்டன் அச்சபையில் சொன்னவுடனே,—அனலி என்று உரைத்திடும் அவுணர் காவலன் - அனலியென்று சொல்லப்படும் அசுரசேனாதிபதி,—சினமொடு முறுவலும் சிறிது தோன்றிட - கோபமும் சற்றே சிரிப்பும் உண்டாக,—வினய மொடு இமொழி விளம்பல் செய்குவான் - (சூரபன்மனுக்குமுன்னாக வெழுந்துநின்று) வணக்கத்தோடும் இந்தவசனங்களைச் சொல்வானாயினான். எ – று.

அரசசபையில் தன்கோபத்தைக்காட்டின் குற்றமாகுமென்று சிந்தித்து அக்கோபத்தையுஞ் சிரிப்பையும் மறைக்கும்பொருட்டுச் சாதுரியவணக்கமாகப் பேசினானென்பது போதர 'வினயமொடிம்மொழி விளம்பல் செய்குவான்' என்க. (௬௨)

63. தெம்முனைமரபிலோர்சிறுவனென்னினும்
வெம்மையொடேற்குமேல்வெகுண்டுமேற்செலா
தெம்மொடுமந்திரத்திருப்பரேயெனி
னம்மவோசூரருக்கழகிதாற்றலே.

இ - ள். தெம்முனை மரபில் ஓர் சிறுவன் என்னினும் வெம்மையொடு ஏற்குமேல் - பகைமுறையாக ஒருசிறுபிள்ளையானாலும் கோபத்தோடு எதிர்ப்பானாயின்,—வெகுண்டு மேற்செலாது - கோபங்கொண்டு அவன்மீது போருக்குப்போகாமல்,—எம்மொடு மந்திரத்து இருப்பரே யெனின் - எம்மோடு ஆலோசனைச்சங்கத்திலிருப்பார்களேயானால்,—சூரருக்கு இது ஆற்றல் அழகு - சூரர்களுக்கு இப்படிப்பட்ட சாமர்த்தியம் நல்லது.எ-று

அம்ம, ஓ, ஏகாரங்கள் அசை. உம்மை இழிவு சிறப்பு. நான் போகின்றேன் நான் போகின்றேன் என்று சபைகூட்டிப் பேசிக்கொண்டிருப்பது சௌரியமுள்ளவர்களுக்கு இலக்ஷணமல்ல; எவனாயினும் முறைப்படி போருக்குவரின் சூரராயுள்ளவர் போயெதிர்க்கவேண்டும்; என்று அங்குள்ளவர்களை இழித்துக் கூறுவான் 'அம்மவோ சூரருக்கழகிதாற்றலே' என்றான். (௬௩)

64. என்றிதுமொழிதலுமெரியுங்கண்ணின
னொன்றியமுறுவலனுயிர்க்குநாசியன்
கன்றியமனத்தினன்கறித்துமெல்லிதழ்
தின்றிடுமெயிற்றினன்சிங்கன்கூறுவான்.

இ - ள். என்று இது மொழிதலும் - என்றிந்தவசனத்தை (அனலியென்பவன்) கூறுதலும்,—எரியும் கண்ணினன் - தீப்பொறிபறக்கின்ற கண்களையுடையவனும்,—ஒன்றிய முறுவலன் - பொருந்திய சிரிப்பையுடையவனும்,—உயிர்க்கும் நாசியன் - பெருமூச்சுவிடுகின்ற நாசியையுடையவனும்,—கன்றிய மனத்தினன் - புழுங்குகின்ற மனத்தையுடையவனும்,—மெல் இதழ் கறித்து தின்றிடும் எயிற்றினன் - மெல்லிய கீழுதட்டைக் கடித்து மறைக்கின்ற பற்களையுடையவனுமாகி,—சிங்கன் கூறுவான் - சிங்கனென்பவன் சொல்லுகின்றான். எ – று.

ஆகி யென்னும் வினையெச்சம் கூறுவானென்பதனோடியையும். எண்ணும்மைகள் தொக்கன. தின்றல் இலக்கணை. அனலிகூறிய வசனம் சிறிதும் சிறப்பின்மையால் விரைவில் அவனைக்கோபத்தோடும் அடக்கினனென்பார் 'என்றிதுமொழிதலும்' என்றார். அனலியின் அறியாமையைக்குறித்துச் சிரித்தானென்க. (௬௪)

65. வெந்தொழின்மறவரைவிளித்ததன்மையு
மந்திரமிருந்ததுமனங்கொள்சூழ்ச்சியு
மிந்திரனுதவிசெய்பிளையன்வன்மையைச்
சிந்திடவேகொலாநினைந்தசெய்கையே.

இ - ள். வெம் தொழில் மறவரை விளித்த தன்மையும் - கொடுந்தொழிலையுடைய வீரர்களை அழைத்ததன்மையும்,—மந்திரம் இருந்ததும் - ஆலோசனைசெய்யும்பொருட்டுச் சங்கமிருந்ததும்,—மனம் கொள் சூழ்ச்சியும் - மனசில்நினைக்கின்ற வுபாயங்களும்,—இந்திரன் உதவிசெய் இளையன் வன்மையை - இந்திரனுக்குதவிசெய்கின்ற குமாரனது வல்லபத்தை,—சிந்திடவே கொல் - அடக்குதற்குத்தானு,—நினைந்த செய்கை - எண்ணிய செய்கைகளெல்லாம் (நன்றாயிருந்தன.) எ — று.

ஆம், ஏகாரங்கள் அசை. கொல் ஐயம். உம்மைகள் எண். இந்திரனுக்குச் சகாயமாகவந்தவன் நமது பாரம்பரியமகிமையை யறியாத சிறுவனுதலின் அவனுல் நமக்கொரு தீமையுஞ் சம்பவிக்கமாட்டாது; ஆதலால் இதற்கொரு ஆலோசனைச்சங்கம் வேண்டுவதில்லை யெனக்குறிப்பித்தானென்பார் 'இந்திரனுதவி*****செய்கையே' என்றான். ()

66. இருநிலவண்டமேலிருந்துளோரெலா
மருவலராகியேவருகவந்திடி
னொருதமியேன்பொருதுலையச்செய்வனுற்
றெரியலைபோலுநின்னடியன்றிண்மையே.

இ - ள். இரு நில அண்டம் மேல் இருந்துளோர் எலாம் மருவலராகியே வருக - (இராசனே,) பெரிய பிருதுவியண்டங்களிலிருந்தவர்களெல்லாரும் சத்துருக்களாகவே வரட்டும்,—வந்திடின் - வந்தால்,—ஒரு தமியேன் பொருது உலைய செய்வன் - நானொருவனே (அவர்களெல்லாரோடும்) போர்செய்து தோற்கச்செய்வேன்,—நின் அடியன் திண்மை தெரியலை போலும் - தேவரீருக் கடியேனுகிய எனது சௌரியத்தை நீர் அறியவில்லைபோலும். எ — று.

ஆல், ஏகாரங்கள் அசை. எல்லா அண்டங்களினு முள்ளவர்களெல்லோரும் ஒருமித்து வரினும் நான் வெல்லுவேன் அப்படிப்பட்ட சௌரியமுடைய வெனக்கு இவர்கள் எம்மாத்திரமென்பான் 'தெரியலை போலு நின்னடியன் றிண்மையே' என்றான். ()

67. வன்மையையுரைப்பதுமரபன்றுலெனைச்
சென்மெனவிடுக்குதிசேனையோடுபோ
யுன்முனிவுற்றிடுமொன்னலாரையட்
டின்மையதாக்கியேவருவனீண்டென்றான்.

இ - ள். வன்மையை உரைப்பது மரபு அன்று - (தனது) சௌரியத்தை எடுத்துப் பேசுதல் (வீரர்களுக்கு) முறையல்ல,—எனை செல்மென விடுக்குதி - என்னைப்போவென்று அனுப்பும்,—சேனையோடு போய் - சேனைகளோடு நான்மாத்திரம் போய்,—உன் முனிவு உற்றிடும் ஒன்னலாரை அட்டு - உம்மால் கோபிக்கப்பட்டிருக்கின்ற பகைவர்களைக்கொன்று,—இன்மையது ஆக்கி ஈண்டு வருவன் என்றான் - இல்லையென்று சொல்லும்படி செய்து இங்கே வருவேனென்று சிங்கன் சொன்னான். எ — று.

ஆல், ஏ அசை. அது பகுதிப்பொருள்விகுதி. தன்னை எல்லாரினுமதிகவலிமையுள்ளவனுக மதித்தலின் 'வன்மையையுரைப்பது மரபன்று' என்றான். (௬௭)

68. இன்னனபோல்வனவியல்பினேனைய
துன்னெறியமைச்சருஞ்சூழ்ச்சித்தொல்படை
மன்னருமிசைத்தலும்வயங்குசெங்கதி
ரொன்னலன்கையமைத்துரைத்தன்மேயினன்.

இ - ள். இன்னன போல்வன - இப்படியிவைபோல்வனவாகிய நியாயப்பிரமாண வசனங்களையும் தங்கள் தங்கள் பராக்கிரமவசனங்களையும் எடுத்து,—இயல்பின் - பேசு

முறைப்படி,—ஏனைய துன்னெறி அமைச்சரும் - மற்றைய துன்மார்க்கத்தையுடையமந் திரிமார்களும்,—சூழ்ச்சி தொல் படை மன்னரும் - உபாயத்தில்வல்லவர்களாகிய பெரிய சேனுதிபதிகளும்,—இசைத்தலும் - சொல்ல,—வயங்கு செங்கதிர் ஒன்னலன் கை அமைத்து உரைத்தல் மேயினன் - பானுகோபன் (அவர்களை இனிநில்லுங்கள் என்று) கையமைத்துச் சொல்லத்தொடங்கினன். எ - று.

உம்மைகள் எண். இவர்களனைவரும் இதுவரையுஞ் சொல்லியபுத்திகளொன்றும் பிரயோசனமுள்ளவைகளாகத் தோற்றாமையால் நில்லுங்களென்றானென்பார் 'கையமை த்தென்றார்' வயங்கு என்னும் பெயரெச்சம் சூரியனுக்கு விசேடணமாய் நின்றது. கதி ருக்குப்பகைவனெனவே பானுகோபனென்பது கருத்து. (௬௮)

69. சென்றிடுமுனிவார்தியங்கமாயைசெய்
குன்றுடனிளவலைக்குமரன்கொன்றிடு
மன்றெனைவிடுத்திலையழைத்தொன்றோர்ந்திலை
யின்றிதுவினவுவதென்னையெந்தைநீ.

இ - ள். எந்தைநீ - பிதாவே நீர்,—சென்றிடு முனிவரர் தியங்க மாயை செய் குன்றுடன் - (அம்மார்க்கமாகச்) செல்லாநின்ற மேலானமுனிவர்கள் அறிவு மயங்கும்படி மாயங்களைச்செய்த கிரவுஞ்சமலையுடனே,—இளவலை குமரன் கொன்றிடும் அன்று - உம துதம்பியாகிய தாரகனைக் குமாரன் அழித்தவந்நாளிலே,—எனை விடுத்திலை - (அவுன் மீது போருக்குப்போவென்று) என்னை (யழைத்து) அனுப்பினீரில்லை,—அழைத்து ஒன்று ஓர்ந்திலை - (என்னை) யழைத்து (இதற்கு என்னசெய்யவேண்டுமென்று) ஓரா லோசனை செய்தீருமில்லை,—இன்று இது வினவுவது என்னை - (அங்ஙனமாக) இத்தி னத்தில் இதனைக்குறித்துப் புத்திகேட்பதென்னை. எ - று.

ஒன்றும் என்னும் இறந்ததுதழீஇயவெச்சவும்மை தொக்கது. முனிவர் - தேகாதி பிரபஞ்சத்தை வெறுத்தவர். அப்படிப்பட்ட முனிவரும் மயங்கும்படி மாயை செய் என வே கிரவுஞ்சகிரியின் மாயாவல்லபசாதுரியத்தை விளக்கினன். உமது மகனுகிய நான் இவர்களைப்போன்றவனல்லன்; சொல்லியபடி செய்வேனென்று தன்னை மிகமதித்தவ னாய் 'அன்றெனை விடுத்திலை' என்றான். என்னையழைத்துச் சொல்லியிருந்தால் இப்ப டியொன்று நிகழாது என்பான் 'இன்றிது வினவுவதென்னை' என்றான். (௬௯)

70. உள்ளுறுகரவினனொருவனும்பரா
னெள்ளருமொற்றுவந்தீண்டுபோர்செயின்
முள்ளெயிறின்னமுமுற்றுந்தோன்றிலாப்
பிள்ளையைவிடுக்குமோபெரியைசாலநீ.

இ - ள். சால பெரியை நீ - மிகப்பெரியவராகியநீர்,—உள் உறு கரவினன் ஒரு வன் உம்பரான் - மனதிற் பொருந்திய கபடத்தையுடையவனுகிய ஒருதேவன்,—எள்ள அரும் ஒற்று வந்து ஈண்டு போர் செயின் - இகழ்ச்சியில்லாத தூதனுகவந்து இவ்விடத் தில் போர்செய்தால்,—முள் எயிறு இன்னமும் முற்றும் தோன்றிலா பிள்ளையைவிடுக் குமோ - முட்போன்றபற்கள் இன்னும் முழுதும் முளையாத பிள்ளையைவிடலாமா. எ-று.

முள்ளெயிறின்னமு முற்றுந்தோன்றிலாப் பிள்ளை யெனவே மிகச்சிறுபிள்ளையெ ன்பது கருத்து. விடலைப்பருவமுள்ள நானிருக்கும் பொழுது சிறுகுழந்தையையனுப்பி யது புத்தியீனமென்பான் 'பெரியைசாலநீ பிள்ளையை விடுக்குமோ' என்றான். ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது இழிவுசிறப்பு; பின்னையது முற்று. (எ0)

71. இழித்தகுதூதனுலிடர்ப்பட்டாயெனும்
பழித்திறம்பூண்டனைபாலனுவியை
யொழித்தனைநகரமுமொருங்குசீரற
வழித்தனைநீயுனதறிவிலாமையால்.

இ - ள். நீ உனது அறிவிலாமையால்-ஐயா நீர் உம்முடைய அறிவின்மையால்,—இழிதகு தூதனுல் இடர்ப்பட்டாய் எனும்|பழித்திறம் பூண்டனை - இகழத்தக்க தூதனுல் வருத்தமடைந்தீர் என்கின்ற வசையைப்பெற்றீர்,—பாலன் ஆவியை ஒழித்தனை - குழந்தையாகிய வச்சிரவாகுவினதுயிரைப் போக்கினீர்—நகரமும் ஒருங்கு சீர் அற அழித்தனை - (அவைகளேயன்றி) நகரத்தையும் எல்லாச்சிறப்பும் நீங்கும்வண்ணமழித்தீர்.எ-று

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். பெரும்பழியென்பது போதர 'பழித்திற' மென்ருன். அன்று என்னையழைத்துப் போருக்கனுப்பாத குற்றத்தால் இவ்வளவு துக்கத்தையுமடைந்தீரென்பான் 'அழித்தனை நீயுனதறிவிலாமையால்' என்ருன். (எக)

72. பொருளலதொன்றினைப்பொருளெனக்கொடு
வெருவுதல்செய்வதும்வினையமோர்கிலா
தொருசெயல்விரைந்துசெய்துயங்கிவாழ்தலும்
பெரியவர்கடமையோபேதைத்தன்மையே.

இ - ள். பொருளலது ஒன்றினை பொருள் என கொடு வெருவுதல் செய்வதும்-பொருளல்லாததொன்றைப் பொருளென்றெண்ணிப் பயப்படுவதும்,—வினையம் ஓர்கிலாது ஒருசெயல் விரைந்து செய்து உயங்கி வாழ்தலும் - ஆகவேண்டியகாரியங்களை யாலோசியாமல் ஒருகாரியத்தைச் சீக்கிரஞ்செய்து பின்பு (அதனுல்) வருந்திக்கொண்டிருத்தலும்,—பெரியவர் கடமையோ - பெரியவர்களுடைய கடமையோ,—பேதை தன்மையே - அறிவீனருடைய கடமையேயாம். எ – று.

உம்மைகள் எண். ஏகாரம் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. வினையம் ஓர்கிலாது—பகைவருடைய வுபாயங்களையறியாது எனப்பொருள்கூறினுமமையும். உமது நிலைக்கு மேற்கூறியவாறுசெய்தல் கூடாதென்பான் 'பெரியவர்கடமையோ' வென்ருன். (எஉ)

73. பொற்றையொடிளவலைப்பொன்றவீட்டினேன்
கொற்றமும்பூதர்தங்குழாத்தினுற்றலு
மொற்றுவனிலைமையுமுணரிற்சென்றியான்
பற்றிமுன்னுய்க்குவன்பிணித்துப்பாசத்தால்.

இ - ள். பொற்றையொடு இளவலை பொன்ற வீட்டினேன் கொற்றமும் பூதர்தம் குழாத்தின் ஆற்றலும் ஒற்றுவன் நிலைமையும் உணரில் - கிரவுஞ்சகிரியோடு உமது தம்பியாகிய தாரகாசுரனை அழியும்படி யழித்த குமாரனது வெற்றியும் பூதகூட்டங்களின் வலிமையும் தூதுவனது தன்மையும் அறிந்தால்,—யான் சென்று பற்றி பாசத்தால் பிணித்து முன் உய்க்குவன் - நான்போய் (அவர்களைப்) பிடித்துப் பாசத்தாற்கட்டிக்கொண்டுவந்து உமக்குமுன் விடுவேன், எ – று.

தம் சாரியை. உம்மைகள் எண். எனக்கிதுவரையு நடந்த விஷயமொன்றுந் தெரியாதென்பான் 'உணரில்' என்ருன். (எ௩)

74. ஆயிரத்தெட்டெனுமண்டத்துக்கெலா
நாயகமுதல்வனீநம்பனல்கிய
சேயர்குறித்தெழல்சீரிதன்றெனை
யேயினைவெற்றிகொண்டிருத்தியெம்பிரான்.

இ - ள். எம்பிரான் - எம்பெருமானே,—நீ ஆயிரத்து எட்டு எனும் அண்டத்துக்கு எலாம் நாயக முதல்வன் - நீர் ஆயிரத்தெட்டென்னுங் கணக்கினையுடைய அண்டங்களுக்கெல்லாம் அதிபதி (ஆகலின்),—நம்பன் நல்கிய சேய் அமர் குறித்து எழல் சீரிது அன்று - சிவபெருமான் பெற்றருளிய சிறுபிள்ளையுடனே போர்செய்யவேண்டுமென்றுநினைத்துப்போதல் சிறப்பன்று,—எனை ஏயினை வெற்றிகொண்டு இருத்தி - என்னையனுப்பி வெற்றிபெற்றுக்கொண்டிருக்கக்கடவீர். எ – று.

ஆயிரத்தெட்டண்டங்களுக்கெல்லாம் நாயகனான மகாராஜனே, தங்கள் மகனாகிய யானில்லாதபோதன்றோ தாங்கள் சிறுவனோடு போர்செய்யச்செல்வது. இப்பொழுது நானிருத்தலால் அது கூடாதென்பான் 'சேயமர் குறித்தெழல் சீரி தன்று' என்றான். நம்பன்-அடியார்களால் நம்பத்தக்கவன். (எச)

75. ஆண்டெனைவிடுத்தியேலமரதாற்றிட
மூண்டிடுமவர்தொகைமுருக்கித்தேவரா
யீண்டுறுவோரையுமிமைப்பில்வென்றுபின்
மீண்டிடுவேனெனவிளம்பினனரோ.

இ - ள். ஆண்டு எனை விடுத்தியேல் - (எனக்கனுமதிகொடுத்து) என்னை அவ்விடத்தில் அனுப்புவீரானால்,—அமரது ஆற்றிட மூண்டிடும் அவர் தொகை முருக்கி போர்செய்தற்கு முயன்றுநின்றவர்களின் கூட்டத்தையழித்து,—தேவராய் ஈண்டுறுவோரையும் இமைப்பில் வென்று - தேவர்களாகவந்து எதிர்த்தவர்களையும் இமைப்பொழுதுக்குள் வெற்றிகொண்டு,—பின் மீண்டிடுவேன் என விளம்பினன் - பின்பு திரும்பி வருவேனென்று சொன்னான். எ – று.

அரோ அசை. அது பகுதிப்பொருள்விகுதி. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். போர்செய்தற்கு முயலுகின்ற பகைவரை யழிப்பதுமல்லாமல் சிறையிலடைக்கப்பட்டவர்கள்போக இன்னுந் தப்பியிருந்த தேவர்களையும் வெல்லுவேனென்று தனது பழைய வெற்றியைக் குறிப்பிப்பான் 'இமைப்பில் வென்று மீண்டிடுவேன்' என்றான். (எரு)

76. இரவியம்பகையவனினையசிற்சில
வுரைதருமிறுதியினுலைவுறாததோர்
முரணுறுதாதைதன்முகத்தைநோக்கியே
குரைகழலிரணியன்கூறன்மேயினான்.

இ - ள். இரவி அம் பகையவன் இனைய சில சில உரைதரும் இறுதியில்-பானுகோபன் இவ்வாறு சிற்சில வார்த்தைகளைச்சொல்லி முடியுமளவில்,—உலைவு உறாதது ஓர் முரணுறு தாதை தன் முகத்தை நோக்கி - அழியாத வலிமைபொருந்திய பிதாவினது முகத்தைப்பார்த்து,—குரை கழல் இரணியன் கூறல் மேயினான் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய இரணியன் சொல்லத்தொடங்கினான். எ – று.

அம், ஏ அசை. தன் சாரியை. உலைவுறாததோர் முரணுறு - கலங்காத திடசித்தத்தையுடைய எனினுமாம். இவன் பானுகோபனுக்குத் தம்பியாதலின் அவன் பேசிமுடித்தபின் இவன் பேசினானென்பது போதர 'உரைதரும் இறுதியில்' என்றார். (எசு)

வேறு.

77. வள்ளற்றன்மைசேர்வயப்பெருஞ்சூரனேர்மழலைப்
பிள்ளைப்போர்வலிக்கிரங்கினனெனுமொழிபிறக்கி
னுள்ளத்தேதநினைநினைக்கினும்வெருவுமொன்னவிரு
மெள்ளற்கேதுவாம்விடுத்தியான்மந்திரமினியே.

இ - ள். வள்ளல் தன்மைசேர் வயப்பெரும் சூரன் - இரப்போர்க்கு வரையாது கொடுப்பவனாகிய மிக்க வெற்றிபடைத்த சூரபன்மன்,—ஓர் மழலை பிள்ளை போர்வலிக்கு இரங்கினன் எனும் மொழி பிறக்கின் - நிரம்பாமொழியைப்பேசும ஒரு சிறுபிள்ளையின் போர்வலிமையைக்குறித்து வருந்தினான் என்னுஞ் சொல்லானது உண்டாகுமானால்,—உள்ளத்தே நினை நினைக்கினும் வெருவும் ஒன்னலரும் எள்ளற்கு ஏதுவாம் - மனசிலே உம்மை நினைத்தாலும் பயப்படுகின்ற பகைவர்களும் இகழ்ந்துபேசுதற்குக் காரணமாகும்,—இனி மந்திரம் விடுத்தி - (ஆதலால்) இனி மந்திராலோசனையை நிறுத்திவிடும்.

ஆல், ஏகாரங்கள் அசை. உம்மை முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது இழிவுசிறப்பு. உம்முடைய பராக்கிரமத்தை நினைப்பினும் பயப்படுகின்ற பகைவரும் நீர் இங்ஙனந் துயருழத்தலைக்கண்டால் மதியாதிகழ்வார்; ஆதலாலதற்கேதுவாகிய மந்திராலோசனை உசிதமல்லவென்பான் 'விடுத்தியான் மந்திர மினியே' என்றான். (எஎ)

78. மைதிகழ்ந்திடுமிடற்றவன்மதலைமாநிலத்தி
னெய்தினனமர்க்கென்றலுமென்றனைவிளித்து
வெய்தெனப்பொரவிடுத்திலைவெறுத்தியோவினையேன்
செய்திடுந்தவறுண்டுகொலுனக்கொருசிறிது.

இ - ள். மை திகழ்ந்திடு மிடற்றவன் மதலை - கரியநஞ்சு விளங்காநின்ற கண்டத்தையுடைய சிவபெருமானது குமாரன்,—மா நிலத்தில் அமர்க்கு எய்தினன் என்றலும் - பெருமையாகிய பூவுலகத்தில் போருக்குவந்தானென்றவுடனே,—என் தனை விளித்து வெய்தென பொர விடுத்திலை - என்னை யழைத்து விரைந்து போர்செய்யும்படி விட்டீரில்லை,—வெறுத்தியோ - என்னை வெறுத்துவிட்டீரோ,—வினையேன் உனக்கு ஒரு சிறிது செய்திடும் தவறு உண்டு கொல் - பாவியாகிய நான் தேவரீருக்கு ஒருசிறிதாவது செய்த குற்றமுண்டா. எ - று.

தன் சாரியை. கொல் ஐயம். ஓகாரம் வினா. மை ஆகுபெயர். ஐயா என்னிடத்திலெப்பொழுதும் விருப்பம்வைத்துள்ள நீர் இப்போதென்னையழைத்துப் பொரவிடாததென்னை? அவ்விருப்பத்தை விட்டீரோ என்பான் 'வெறுத்தியோ' என்றான். (எஅ)

79. பானல்போலொளிர்மிடற்றினன்பாலன்மேற்பசிநோய்க்
கூனைவேட்டுழல்பூதர்மேலொழிந்துளார்தம்மேன்
மானவெஞ்சமர்க்கெம்முனோன்சேறலும்வசையே
சேனையோடியானேகுவன்செருத்தொழில்புரிய.

இ - ள். பானல் போல் ஒளிர் மிடற்றினன் பாலன் மேல் - கருங்குவளைமலர்போல் நஞ்சுவிளங்குங்கண்டத்தையுடைய சிவகுமாரன்மேலும்,—பசி நோய்க்கு ஊனை வேட்டு உழல் பூதர்மேல் - பசியாகிய நோயைத் தீர்க்கும்பொருட்டு ஊனைவிரும்பித் திரிகின்ற பூதர்மேலும்,—ஒழிந்துளார் தம்மேல் - மற்றுள்ளவர்கண்மேலும்,—மானவெம் சமர்க்கு எம் முனோன் சேறலும் வசையே - அபிமானத்தை விளைவித்தற்கேதுவாகிய கொடிய போருக்கு எமது தமையனார் போதலும் வசையேயாகும்,—செருத்தொழில் புரிய சேனையோடு யான் ஏகுவன் - (ஆதலால்) போர்செய்யும் பொருட்டுச் சைனியங்களுடன் நான் போகின்றேன். எ - று.

தம் சாரியை. ஏகாரம் தேற்றம். உம்மை இழிவுசிறப்பு. பானல் ஆகுபெயர். பொதுவாய்ப் பூதபைசாசங்கள் உணவின்பொருட்டு ஊனை வேட்டுழலலுண்மையின், இவர்களையுமப்படி யெண்ணி 'ஊனைவேட்டுழல்பூதர்' எனக்கூறினான்.

அற்பர்களுடன் நீர் போருக்குப் போவது தகுதியல்ல உம்மை ஒத்தவராதலின் என்ற மையனாகிய பானுகோபனும் போதல் சிறப்பல்ல. பின்னர் அவ்வற்பர்களுடன் போருக்கு நான் போதலே தகுதியென்பான் 'சேனையோடியானேகுவன்' என்றான். (எகூ)

80. வெற்றிப்பேரமராற்றிமேவலர்தொகையைச்
செற்றுத்தேவர்கள்யாரையுந்தடிந்துசெல்குவனு
லிற்றைக்கங்குலினென்றனையேவுதியெனலு
மற்றைத்தம்பியாமெரிமுகனினையனவகுப்பான்.

இ - ள். வெற்றிப் பேர் அமர் ஆற்றி மேவலர் தொகையை செற்று - வெற்றிக்குரிய பெரும்போரைச்செய்து கூட்டமாகிய சத்துருக்களையழித்து—தேவர்கள் யாரையும் தடிந்து செல்குவன்-(தப்பியிருக்கின்ற) தேவர்களனைவரையுங்கொன்றுவருகின்றேன்,— இற்றை கங்குலின் என் தனை ஏவுதி எனலும் - இன்றிரவிலென்னை யனுப்பக்கடவீரென்று வேண்டுதலும்,—மற்றை தம்பியாம் எரிமுகன் இனையன வகுப்பான் - (பானுகோபனது) வேறொருதம்பியாகிய அக்கினிமுகாசுரன் (பின்வருமாறு) இவைகளையெடுத்துச் சொல்லுகின்றான். எ - று.

ஆல் ஏ அசை. உம்மை இறந்தததுதழீஇயவெச்சமும் முற்றுமாம். ஆலோசனைசெய்தகாலம் இராத்திரியாதலால் 'இற்றைக்கங்குலில்' என்றான். (அ0)

81. இணையிலாவண்டமாயிரத்தெட்டினுக்கிறைநீ
துணையதாயொருவீரகேசரியுளன்சுதராய்க்
கணிதமில்லவர்யாமுளங்கரிபரிகடுந்தே
ரணிகொடானவப்படையுளவலகிலாதனவே.

இ - ள். இணை இலா அண்டம் ஆயிரத்து எட்டினுக்கு இறை நீ - (ஐயா கேளும்) ஒப்பில்லாத ஆயிரத்தெட்டண்டங்களுக்கு அரசன் நீர்,—துணையதாய் ஒரு வீரகேசரி உளன் - உமக்குத்தம்பியாக வீரனாகிய ஒரு சிங்கமுகனிருக்கின்றான்,—சுதராய் கணிதம் இல்லவர் யாம் உளம் - பிள்ளைகளாக அளவற்றவர்களாகிய நாங்கள் இருக்கின்றோம்,— கரி பரி கடும் தேர் அணிகொள் தானவப்படை அலகிலாதன உள - யானைகள் குதிரைகள் வேகமாகச்செல்லுகின்ற தேர்கள் வகுப்புப்பொருந்திய அசுரசேனைகள் அளவில்லாதனவாக விருக்கின்றன. எ - று.

ஏகாரம் அசை. துணைவரிருவரில் ஒருவன் வேற்படைக்கிரையானமையால் 'துணையதாயொரு வீரகேசரியுளன்' என்றான். (அக)

82. அழிவில்பாகுளதேருளசிலையுளவஃதான்
றொழிவிலாதமரம்புபெய்தூணியுமுளவா
லிழிவிறெய்வதப்படைகண்முற்றும்முளவிறைமைத்
தொழினடாத்துறுபரிதியுமொன்றுண்டுதொல்லோய்.

இ - ள். தொல்லோய் - பெருமையிற்சிறந்த மகாராசனே,—அழிவு இல் பாகுள தேர் உள - அழிவில்லாத சாரதியையுடைய தேர்களிருக்கின்றன,—சிலை உள - விற்களிருக்கின்றன,—அஃது அன்று - அதுவன்றி,—ஒழிவு இலாது அமர் அம்பு பெய் தூணியும் உள - (எடுக்கவெடுக்கத்) தொலையாமலிருக்கின்ற அம்புக்கூடுகளுமிருக்கின்றன,— இழிவு இல் தெய்வதப்படைகள் முற்றும் உள - குறைவில்லாமல் தேவாஸ்திரங்களெல்லாமிருக்கின்றன,—இறைமை தொழில் நடாத்துறு பரிதியும் ஒன்று உண்டு - அரசியலை நடத்துகின்ற ஆஞ்ஞாசக்கரமு மொன்றிருக்கின்றது. எ — று.

உம்மை முற்றும் என்பதில் முற்றும்; ஏனையவற்றில் இறந்ததுதழீஇயவெச்சமு மாம். அரசியலெனினும் இராச்சியமெனினும் இராசரிகமெனினும் ஒக்கும். இழிவு - குற்றம். விட்டால் தவறுதாதலால் 'இழிவிறெய்வதப்படை' யென்றான். (அஉ)

83. அண்டமாயிரத்தெட்டையுங்கன்னலொன்றதனிற்
கண்டுமீடருமிந்திரஞாலமுங்கவனங்
கொண்டதோர்தனிமடங்கலுமுனக்குளகுறிக்கின்
விண்டுமாலுறுமாயைகள்பலவுளமேலோய்.

இ - ள். மேலோய் - மேம்பட்ட ஐயா,—அண்டம் ஆயிரத்தெட்டையும் ஒன்று கன்னல் தனில் - ஆயிரத்தெட்டண்டங்களையும் ஒருநாழிகையில்,—கண்டு மீள் தரும் இந்திர ஞாலமும் - பார்த்துத்திரும்பிவருகின்ற இந்திரஞாலமென்னுந்தேரும்,—கவனம் கொண்டது ஓர் தனிமடங்கலும் உனக்கு உள - வேகம்பொருந்திய ஒப்பில்லாத ஓர்சிங் கமும் உமக்கிருக்கின்றன;—குறிக்கின் - ஆலோசித்தால்,—விண்டு மால் உறு மாயை கள் பல உள - விஷ்ணுவும் மோகங்கொள்ளத்தக்க மாயாவித்தைகளுமனேக மிருக்கி ன்றன. எ - று.

உம்மை முன்னையது முற்று; பின்னையவை எண். விண்டு என்னும் உயர்வுசிறப்பும் மையும் மாயைகளும் என்னும் இறந்ததுதழீஇயவெச்சவும்மையும் தொக்கன. மற்றுந் தேர்களைப்போலாகாது இந்திரஞாலத்தேர் மிகவிரைந்துசெல்லும்வலிபெற்றிருத்தலின், 'கன்னலொன்றதனிற் கண்டுமீடரும்' என்றான். கவனம்-மனோவேகம் எனவுங்கூறுவர்.

84. இன்னபான்மைசேர்வெறுக்கைபெற்றீறிலாதுறைவு
மன்னர்மன்னநிற்போன்றுளார்யாவரேமலையக்
கன்னிபாலகன்றூதுவன்சிறுதொழில்கருத்தி
னுன்னியுன்னியேயிரங்கவுந்தகுவதோவுனக்கே.

இ - ள். இன்ன பான்மை சேர் வெறுக்கை பெற்று ஈறிலாது உறையும் மன்னர் மன்ன - இத்தன்மையான பலசெல்வங்களைப்பெற்று அழிவில்லாமல் வாழுகின்ற ராசா திராசனே,—நின் போன்றுளார் யாவர் - உமக்கொப்பானவர்கள் யாரிருக்கின்றார்கள்? (ஒருவருமில்லை),—மலைய கன்னி பாலகன் தூதுவன் சிறுதொழில் - இமயமலையில்வளர் ந்த நித்தியகன்னிகையாராகிய உமாதேவியார் குமாரனதுதூதன்செய்த அற்பகாரியத் தை,—கருத்தில் உன்னி உன்னி - மனதில் நினைத்து நினைத்து,—இரங்கவும் உனக்கு தகுவதோ - வருந்துவதும் உமக்குத் தகுமா (தகாது.)

உமக்கொப்பானவர் ஒருவருமில்லாதபோது நீர்வருந்துவது தகுதியல்லவென்பான் இரங்கவுந்தகுவதோவுனக்கே' என்றான். மன்னர்மன்ன என்பது அண்மைவிளி. உம் மை இழிவுசிறப்பு. ஏகாரங்கள் அசை. ஓகாரம் எதிர்மறை. (அச)

85. குழந்தைவெண்பிறைமிலைச்சினோன்மதலையைக்குறுத்தா
ளிழிந்தபூதரைப்பிறர்தமைவென்றிடவெமரில்
விழைந்தமானவரொருவரைவிடுப்பதேயன்றி
யழிந்திரங்கியேவினவுமோவிதுகொலுன்னறிவே.

இ - ள். குழந்தை வெண்பிறை மிலைச்சினோன் மதலையை - வெள்ளியபாலசந்தி ரனையணிந்த சிவபெருமானது சிறுகுழந்தையையும்,—குறும் தாள் இழிந்த பூதரை - சிறு த்தகாலையுடைய எளிய பூதர்களையும்,—பிறர் தமை வென்றிட - மற்றுள்ளவர்களையும் வெல்லும்பொருட்டு,—எமரில் - நம்மவருள்ளே,—விழைந்த மானவர் ஒருவரை விடுப்

பதே அன்றி - விரும்பிய ஓர் வீரரையனுப்புவதல்லாமல்,—அழிந்து இரங்கியே வினவுமோ - மனமழிந்து வருந்தி(இதற்கொருபுத்தி)கேட்கலாமா,—இது கொல் உன் அறிவு - இதுதானு பெரியவராகிய உமது அறிவு. எ - று.

ஏகாரங்கள் அசை. ஓகாரம் எதிர்மறையும் வினவும். தம் சாரியை. கொல் ஐயம். எண்ணும்மைகள் தொக்கன. மிலேச்சிஞேன் வினையாலணையும்பெயர். குறுத்தாள் வலித்தல் விகாரம். அழிதல் - மனநிலைகுலைந்துகலங்கல். (அரு)

86. மூளும்வெஞ்சமர்புரிந்தவென்னிளவல்பன்முடியும்
வாளிஞலடுமொற்றனைமற்றுளார்தம்மைக்
கேளொடுதடிந்தல்லதுகேடில்சீர்நகர்க்கு
மீள்கலேனெனப்பகர்ந்தனன்வெய்யசூளுரையே.

இ - ள். மூளும் வெம் சமர் புரிந்த என் இளவல் பல் முடியும் வாளிஞல் அடும் ஒற்றனை - கோபமூளுதற்கேதுவாகிய கொடியபோரைச்செய்த என் தம்பியினது பத்துத் தலைகளையும் வாளிஞல்வெட்டிய தூதனையும்,—மற்றுளார்தம்மை - மற்றுள்ளவர்களையும்,—கேளொடு தடிந்து அல்லது - அவர்கள்சுற்றத்துடன் கொன்றேயல்லாமல்,—கேடு இல் சீர் நகர்க்கு மீள்கலேன் என வெய்ய சூள் உரை பகர்ந்தனன் - அழிவில்லா தசிறப்பினையுடைய ஊருக்குத்திரும்பிவரேன் என்று கொடிய சபதமொழிகூறிஞன்.

தம் சாரியை. ஏகாரம் அசை. உம்மை முற்று. ஒற்றனையும் மற்றுளார்தம்மையும் என்னும் எண்ணும்மைகளும் தடிந்தே என்னுந் தேற்றேகாரமுந்தொக்கன. மூளும் அவாய்நிலை; முயலுகின்ற எனப் பொருள் கூறினுமாம். நம்மவருள்ளே ஒரு வீரனைவிடுப்பது தகுதியாயினும், எனக்கனுமதிகொடுத்தனுப்பிஞல் எப்படியாவது என்றம்பியைக் கொன்றவனைக் கொல்வேன். மற்றவர்களுக்கென்போல அவ்வளவு சிரத்தையிராதென்று குறிப்பிப்பான் 'மீள்கலேன்' என்றான். (அசு)

87. காந்தைசூடுவான்குமரனைப்பொருதல்காதலியா
விருந்தவீரர்களளப்பிலராயினுமிப்போர்
விரைந்துநீயெனக்குதவுதியேகுவன்மேனாட்
பொருந்துபாதலத்தரக்கர்மேற்சென்றதேபோல.

இ - ள். கரந்தை சூடுவான் குமரனை பொருதல் காதலியா இருந்த வீரர்கள் அளப்பிலர் ஆயினும் - கரந்தையையணிகின்ற சிவகுமாரனுடன்போர்செய்தற்குவிரும்பி இருந்தவீரர்கள் அனேகராஞலும்,—இ போர் விரைந்து நீ எனக்கு உதவுதி - இந்தப்போரைச் சீக்கிரமாக நீர் எனக்குக் கொடும்,—மேல் நாள் பாதலத்து பொருந்து அரக்கர் மேல் சென்றது போல - முற்காலத்திற் பாதலத்திலிருந்த அரக்கர்மேற் படையெடுத்துச் சென்றாற்போல,—ஏகுவன் - செல்லுகின்றேன். எ - று.

ஏகாரம் அசை. உம்மை உயர்வுசிறப்பு. உமக்கனைவரும் பொதுவானவர்களாஞலும் இப்போரைமாத்திரங்கேட்கின்றேனென்பான் 'எனக்குதவுதி' யென்றான். (அஎ)

88. வலியதோர்சிலைபீறிலாக்கவசம்வான்படைக
ளுலகுதந்தவனளித்திடமுன்புபெற்றுடையேன்
குலமடங்கவாளரக்கரைத்தடிந்திசைகொண்டேன்
மெலியனன்றியானறுமுகன்மேலெனைவிடுத்தி.

இ — ள். வலியது ஓர் சிலை ஈறு இலா கவசம் வான்படைகள் உலகு தந்தவன் அளித்திட முன்பு பெற்றுடையேன் - வலிமையையுடைய ஒப்பற்ற வில்லும் அழிவில்லாத சட்டையும் சிறந்த ஆயுதங்களும் உலகத்தைப்படைத்த பிரமதேவர் தர முன்வாங்கியிருக்கின்றேன்,—குலம் மடங்க வாள் அரக்கரை தடிந்து இசை கொண்டேன் - வம்மிசமழியும்படி வாட்படையையுடைய அரக்கர்களைக்கொன்று கீர்த்திபெற்றிருக்கின்றேன்,—யான் மெலியன் அன்று - நான் இளைத்தவனல்லன்,—அறுமுகன் மேல் எனை விடுத்தி - ஆதலால் அறுமுகச்சிறுவன்மேற் போருக்கென்னை யனுப்பும். எ — று.

முன்பு உலகு தந்தவன் எனவுங் கூறுவர். எண்ணும்மைகள் தொக்கன. குலம் அடங்க என்பது பாடமாயின், முழுதும் எனப்பொருள்கொள்க. மெலியனன்று எனவே வலியனென்பது கருத்து. நான் வச்சிரவாகுவைப்போன்றவனல்லன். பிரமாவிடத்தில் போர்க்குவேண்டிய வின் முதலியவைகளைப் பெற்றிருப்பதுமன்றி அரக்கர்களை எதிர்த்துக்கொன்று கீர்த்தியும் பெற்றிருக்கின்றேன். ஆதலால் இந்த அறுமுகன் எனக்கொப்பல்லன் என்பான் 'மெலியனன்றியா னறுமுகன்மேலெனை விடுத்தி' எனத் தன்னை மெச்சிக்கூறினன். (அஅ)

89. என்னுமாற்றங்களெரிமுகமுடையவனிசைப்ப
வன்னவன்றனைவிலக்கியேகரதலமமைத்துச்
சென்னியாயிரம்பெற்றுளசிங்கமாமுகத்தோன்
மன்னர்மன்னனைநோக்கியேவகுத்துரைசெய்வான்.

இ - ள். என்னும் மாற்றங்கள் எரிமுகம் உடையவன் இசைப்ப - என்றிந்தவார்த்தைகளை அக்கினிமுகாசுரன் சொல்ல,—அன்னவன் தனை விலக்கி - அவனைப் (போதும் பேச்சை நிறுத்து என்று) தடுத்து,—கர தலம் அமைத்து - கையமைத்து,—ஆயிரம் சென்னி பெற்றுள மா சிங்கமுகத்தோன் - ஆயிரந்தலைகளைப்பெற்றுள்ள அழகிய சிங்கமுகாசுரன்,—மன்னர் மன்னனை நோக்கி - அரசர்க்கரசனாகிய சூரபன்மனைப்பார்த்து,—வகுத்து உரை செய்வான் - (இத்தன்மையாக) வகுத்துச்சொல்லத்தொடங்கினன். எ-று.

தன் சாரியை ஏகாரங்கள் அசை. அக்கினிமுகாசுரன் பேசிய வார்த்தைகள் ஒன்றுஞ் சரியில்லாமையால் அவனை யிடையிற்றடுத்தானென்பார் 'விலக்கி' யென்றார். (அகூ)

90. மந்திரத்தருந்தானையந்தலைவருமகாருந்
தந்தமக்கியல்வன்மையேசாற்றியதல்லா
லிந்திரப்பெருந்திருவுறுமுன்றனக்கியன்ற
புந்திசொற்றிலரிம்மொழிகேளெனப்புகல்வான்.

இ - ள். மந்திரத்தரும் தானையம் தலைவரும் மகாரும் தம் தமக்கு இயல்வன்மையே சாற்றியது அல்லால் - (இராசனே, கேளும் இதுவரையுமுமக்குப் புத்திசொன்னவர்களாகிய) மந்திரிமார்களும் சேனாதிபதிகளும் மக்களும் தமக்குத்தமக்குள்ள வல்லபங்களை எடுத்துச்சொன்னார்களேயன்றி,—இந்திர பெரும் திரு உறும் உன் தனக்கு இயன்ற புந்தி சொற்றிலர் - முதன்மையாகிய பெருஞ்செல்வத்தை யனுபவித்திருக்கின்ற உமக்குத்தகுந்த புத்திகளைப் போதித்தாரில்லை,—இ மொழி கேள் என புகல்வான் - (ஆதலால் நன்மைபயக்கின்ற) இந்தவார்த்தைகளைக் கேளுமென்று சொல்லத்தொடங்கினன்.

தன் சாரியை. அம், ஏ அசை. உம்மைகள் எண். பெருஞ்செல்வர்களனேகரிருப்பினும் இந்திரனை யெடுத்துக்கூறுதல் உலகவழக்காதலின் சிங்கனும் 'இந்திரப்பெருந்திரு' வென்றான். (கூ0)

வேறு.

91. பெற்றிடு திருவினிற்பிறந்தவெஞ்சினங்
கற்றவருணர்வையுங்கடக்குமன்னது
முற்றுறுகின்றதன்முன்னமன்பிஞே
ருற்றனகூறியேயுணர்த்தல்வேண்டுமால்.

இ - ள். பெற்றிடு திருவினில் பிறந்த வெம் சினம் கற்றவர் உணர்வையும் கடக்கும் - பெற்றனுபவிக்கின்ற செல்வச்செருக்கிலுண்டான கொடிய கோபமானது பல நூல்களையுங் கற்றறிந்த விவேகிகளுடைய அறிவையும் வேறுபடுத்திச்செல்லும்,—அன்னது முற்றுறுகின்றதன் முன்னம் - ஆதலினாலே அக்கோபம் முதிர்தற்குமுன்னர்,—அன்பிஞேர் உற்றன கூறி உணர்த்தல் வேண்டும் - அன்புள்ளவர்கள் தகுந்த மனுநீதிகளையெடுத்துப் போதித்து (ஆகவேண்டிய விஷயங்களை) யறிவித்தல்வேண்டும். எ - று.

ஆல், ஏ அசை. உம்மை உயர்வுசிறப்பு. அரசன் கோபமுதிர்ச்சியால் மனுநீதிகடந்துசெல்லுங்கால் அன்புள்ளார் ஆவசியகம் உண்மை விஷயங்களை யெடுத்துப்போதித்து நல்வழிப்படுத்தல் அவர்கடனாதலின் "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்மேற்சென் றிடித்தற் பொருட்டு" என்னும் நாயனார் வாக்கின்படி 'உற்றன கூறியே யுணர்த்தல் வேண்டும், என்றான். ஈண்டு அன்புள்ளாரென்றது பேரன்புவைத்து நன்னெறிகளை இடித்துரைக்கும் அமைச்சர் முதலாயினாரை. கற்றவர் உணர்வையுங் கடக்கும் எனவே மூடர்களுணர்வைக்கடந்து பெருங்கேட்டை விளைவிக்குமென்பதுதானே போதரும். (௯௧)

92. மன்னவர்செவியழன்மடுத்ததாமென
நன்னெறிதருவதோர்நடுவுநீதியைச்
சொன்னவரமைச்சர்கடுணைவர்மேலையோ
ரொன்னலர்விழைந்தவாறுரைக்கின்றார்களே.

இ - ள். மன்னவர் செவி அழல் மடுத்தது ஆம் என நல் நெறி தருவது ஓர் நடுவு நீதியை - அரசர்களுடைய செவிகளிலே தீக்கோலைச் செருகினாற்போல நல்வழியைத் தருகின்ற ஒப்பற்ற நடுவுநிலைமையான நீதிகளையெடுத்து,—சொன்னவர் அமைச்சர்கள் துணைவர் மேலையோர் - போதித்தவர்களே மந்திரிகளுந் துணைவர்களும் மேலோர்களும்,—விழைந்தவாறு உரைக்கின்றார்கள் ஒன்னலர் - அரசர்கள் விரும்பியபடி யிதமாகச் சொல்லுகின்றவர்கள் பகைவர்கள். எ — று.

ஏகாரம் அசை. எண்ணும்மைகள் தொக்கன. "அறனறிந்தான் றமைந்த சொல்லானெஞ்ஞான்றுந்—திறனறிந்தான் றேர்ச்சித் துணை" என்னும் நாயனார் அருமைத்திருவாக்கியத்தையொத்த நீதிகளையறிந்த சிங்கமுகன் இம்மந்திரி முதலாயினார் எடுத்துப்பேசிய பேச்சுக்கள் நீதியன்று என்பான் 'ஒன்னலர் விழைந்தவா றுரைக்கின்றார்களே' என்றான்.

93. முற்றுறவருவதுமுதலுமன்னதாற்
பெற்றிடுபயன்களும்பிறவுந்தூக்கியே
தெற்றெனவுணர்ந்துபின்பலவுஞ்செய்வரேற்
குற்றமொன்றவர்வயிற்குறுகவல்லதோ.

இ - ள். முற்றுற வருவதும் - (ஒருகாரியத்தைச் செய்யும்போது அக்காரியம்) முடிவுபெற வருவதும்,—முதலும் - அதனைத்தொடங்குதலும்,—அன்னதால் பெற்றிடு பயன்களும் - அச்செயலாற் பெறப்படுகின்ற பிரயோசனங்களும்,—பிறவும் - மற்றுள்ளனவும் ஆகிய இவைகளெல்லாவற்றையும்,—தூக்கி தெற்றென உணர்ந்து - நன்றாக வாராய்ந்து

தெளிவாகவுணர்ந்து,—பின் பலவும் செய்வரேல் - பின்பு எக்கருமத்தையேனுஞ் செய்வாராயின்,—ஒன்று குற்றம் அவர் வயின் குறுக வல்லதோ - (அப்படிச்செய்யு மவர்களிடத்தில்) ஒரு குற்றமேனு மணுகுமோ (அணுகாது.) எ - று.

ஏகாரம் அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையன எண்; பின்னையது முற்று. "முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்—படுபயனும் பார்த்துச் செயல்" என்னுந் திருக்குறளின் கருத்து இச்செய்யுளி னமைந்துகிடத்தலின் இவைபோன்ற நீதிமொழிகளைச் சிங்கன் அறிந்திருந்தானென்பது கருத்து. (௯௩)

94. மால்வருதொடர்பினல்வனத்துச்செல்லுமீன்
கோல்வருமுணவினைக்குறித்துவவ்வியே
பால்வருபுணர்ப்பினிற்படுதல்போலநீ
மேல்வருகின்றதைவினவல்செய்கிலாய்.

இ - ள். மால் வரு தொடர்பினல் வனத்து செல்லு மீன் - மயக்கமாகிய சம்பந்தத்தால் நீரிலுலாவுகின்ற மீனனது,—கோல் வரும் உணவினை குறித்து வவ்வி - தூண்டிலில் வருகின்ற அற்பவுணவை (தனக்கு மெய்ம்மையாகிய வுணவென்று நினைத்துக்) கவ்வி,—பால் வரு - அவ்வுணவுக்குள்ளிருந்த,—புணர்ப்பினில் - தூண்டின் முள்ளுக்குள்,—படுதல்போல - அகப்பட்டுக்கொள்ளுதல்போல,—நீ - நீர்,—மேல் வருகின்றது வினவல் செய்கிலாய் - இனி வரப்போகின்ற காரியங்களொன்றையும் கேட்கின்றீரில்லை.

ஏகாரம் அசை. ஐ சாரியை. ஆய் முன்னிலையொருமை விகுதி. மீனனது அற்பவுணவை விரும்பிக் கவ்வி அதன்கணுள்ள தூண்டிலிலகப்படுதல்போல நீரும் இவர்கள் கூறும் பயனற்ற அற்பவார்த்தைகளைக்கேட்டு மகிழ்கின்றீர் பின்விளைவைவிரும்பிக் கேட்கின்றிலீர் அதனுல் இறந்துபடுவீரெனக் குறிப்பித்தானென்க. (௯௪)

95. இந்திரனாதியாமிறைவர்தங்களை
யந்தரத்தமரரையலைத்ததீயவர்
முந்துறுதிருவொடுமுடிந்ததல்லதை
யுய்ந்துளரிவரெனவுரைக்கவல்லமோ.

இ - ள். இந்திரன் ஆதியாம் இறைவர் தங்களை - இந்திரன்முதலிய விசேட தேவர்களையும்,—அந்தரத்து அமரரை அலைத்த தீயவர் - சுவர்க்கலோகவாசிகளான தேவர்களையும் வருத்திய கொடியவர்கள்,—முந்துறு திருவொடு முடிந்தது அல்லது - மேலான செல்வத்தோடு அழிந்தார்களேயன்றி,—உய்ந்துளர் இவர் என உரைக்க வல்லமோ - உயிரோடிருந்தவர்கள் இவர்களென்று சொல்லுதற்கு வல்லேமா (அல்லேம்.)

தம், ஐ சாரியை. ஓகாரம் எதிர்மறை. எண்ணும்மைகள் தொக்கன. நீர் இப்பொழுது தேவர்களை வருத்துவதுபோல அத்தேவர்களை வருத்திய அசுரரிலொருவரு முயிரோடிருக்கவில்லை. ஆதலால் நீரும் அவ்வாறுவீர். அதனுல் தேவர்களை வருத்துதல் நீதியன்றென்பான் 'உய்ந்துள ரிவரென வுரைக்க வல்லமோ' என்றான். (௯௫)

96. தேவர்கள்யாரையுந்திரைகொள்வேலையின்
மேவருமீன்றொகைவிரைவிற்றம்மென
வேவினையினிதுகொவினையசெய்கைதம்
மாவியில்விருப்பிலாரன்றியார்செய்வார்.

இ - ள். தேவர்கள் யாரையும் திரைகொள் வேலையின் மேவரு மீன் தொகை விரைவில் தம்மென ஏவினை - தேவர்களனைவரையும் அலைபொருந்திய கடலில் வாழ்கின்ற மீன்கூட்டங்களைச் சீக்கிரம் பிடித்துத்தாருங்களென்று கற்பித்தீர்,—இனிது கொல் - (இப்படி யவர்களைக்கொண்டு தகாதபணி செய்வித்தல் உமக்கு) நல்லதா,—இனைய செய்கை தம் ஆவியில் விருப்பு இலார் அன்றி யார் செய்வார் - இப்படிப்பட்ட எளிய செய்கையைத் தம்முயிரில் விருப்பில்லாதவரன்றி வேறு யாவர் செய்விப்பார். எ — று.

உம்மை முற்று. கொல் வினாவாகநின்று மறுதலைப்பொருளில் வந்தது. வைதிக நெறியொழுகும் புனிதசீலர்களாகியதேவர்களைக்கொண்டு அந்நெறிக்கு முழுவிரோதமாக அசுத்தமாகிய கீழ்மைத்தொழில் செய்வித்தல்கூடாது. அங்ஙனஞ் செய்வித்தோர் அழிந்துவிடுவாரென்பது போதர 'ஆவியில் விருப்பிலா ரன்றியார் செய்வார்' என்றான்.

97. அறைகழல்வாசவற்கலக்கணாற்றியே
யிறையினையழித்தனையிருந்தமாநகர்
நிறைதருவளனெலாநீக்குவித்தனை
சிறையிடையுய்த்தனைதேவர்யாரையும்.

இ - ள். அறை கழல் வாசவற்கு அலக்கண் ஆற்றி இறையினை அழித்தனை - சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த இந்திரனுக்குத் துன்பத்தை விளைவித்து அவனது அரசியலைக்கெடுத்தீர்,—இருந்த மா நகர் நிறைதரு வளன் எலாம் நீக்குவித்தனை - அவனிருந்த பெரிய நகரத்திலுள்ள செல்வங்களையெல்லாம் அப்புறப்படுத்தினீர்,—தேவர் யாரையும் சிறையிடை உய்த்தனை - தேவர்களனைவரையும் சிறையில் வைத்தீர். எ — று.

ஏகாரம் அசை. உம்மை முற்று. நிறைதரு வளனென்றது கற்பகங் காமதேனுவாதிகளை. (௬௭)

98. அத்தகுதேவராலெய்நங்களுக்
கித்துணையலக்கண்வந்தெய்திற்றிங்கிது
மெய்த்திறமாமெனவிரைந்துட்கொள்ளலை
பித்தரின்மயங்கினைபேதையாயினாய்.

இ - ள். ஐய - இராசனே,—அ தகு தேவரால் நங்களுக்கு இ துணை அலக்கண் வந்து எய்திற்று - அந்தத் தகுந்த இந்திரன் முதலிய தேவர்களாலேயே நமக்கு இவ்வளவு துன்பங்களுண்டாயின,—இது மெய்த்திறம் ஆம் என விரைந்து உள் கொள்ளலை - இது உண்மையான விஷயமென்று சீக்கிரம் மனதில் கவனித்தீரில்லை,—பித்தரின் மயங்கினை - பைத்தியகாரரைப்போல மயக்கமடைந்தீர்,—பேதை ஆயினாய் - அறிவீனனுமாயினீர். எ — று.

பேதையும் என்னும் இறந்ததுதழீஇயவெச்சவும்மை தொக்கது. இங்கு அசை. மயக்கத்தா லுணர்ந்தீரில்லை யென்றான். (௬௮)

99. பொன்னகரழிந்தநாட்புகுந்ததேவரை
யின்னமும்விட்டிலையிரக்கநீங்கினா
யன்னதற்கல்லவோவாறுமாமுக
னுன்னுடன்போர்செயவுற்றதன்மையே.

இ - ள். பொன் நகர் அழிந்த நாள் புகுந்த தேவரை இன்னமும் விட்டிலை - சுவர்க்கலோகமழிந்ததினத்தில் இவ்விடத்துவந்த தேவர்களை இன்னமும் (சிறையினின்றும்) விட்டீரில்லை,—இரக்கம் நீங்கினாய் - இரக்கத்தை யொழித்துவிட்டீர்,—ஆறுமா முகன்

உனனுடன் போர் செய உற்ற தன்மை அன்னதற்கு அல்லவோ - அறுமுகப்பெருமான் உம்முடன் போர்செய்யும்பொருட்டு வந்த தன்மை அதற்காகவல்லவா. எ — று.

ஏகாரம் அசை. ஓகாரம் வினா. உம்மை இழிவுசிறப்பு. இரக்கமும் என்னும் இறந்ததுதழீஇயவெச்சவும்மை தொக்கது. (௯௯)

வேறு.

100. பேறுதந்திடுபிஞ்ஞகன்பெருந்திருவுடனீர்
நூறுதன்னுடனெட்டுகமிருமெனநுவன்றான்
கூறுகின்றதோர்காலமுங்குறுகியததனைத்
தேறுகின்றிலைவிதிவலியாவரேதீர்ந்தார்.

இ - ள். பேறு தந்திடு பிஞ்ஞகன் - உமக்கு அக்காலத்தில் வரந்தந்தருளிய சிவபெருமான்,—பெரும் திருவுடன் நீர் நூறு தன்னுடன் எட்டுகம் இரும் என நுவன்றான் - நீங்கள் பெருஞ்செல்வத்தோடு நூற்றெட்டுகம் இருங்களென்று கூறியருளினார்,—கூறுகின்றது ஓர் காலமும் குறுகியது - அவாப்போதருளிச்செய்த யுகமுடிவுஞ்சமீபித்தது,—அதனை தேறுகின்றிலை - நீரதனைத்தெளிந்து அறிகின்றீரில்லை,—விதி வலி யாவரே தீர்ந்தார் - விதியின் வல்லபத்தை ஆர்தான் கடந்தவர்கள் (ஒருவருங் கடக்கமாட்டார்.)

ஏ, ஓர் அசை. உம்மை உயர்வுசிறப்போடெச்சமுமாம். (௧00)

101. எத்திறத்தரு நுங்களைவெல்கிலரெமது
சத்திவென்றிடுமென்றனன்கண்ணுதற்றலைவ
னத்திறத்தினலல்லவோவறுமுகக்குமர
னுய்த்தசெய்யவேலுண்டதுதாரகனுயிரை.

இ - ள். கண்ணுதல் தலைவன் - முதல்வராகிய சிவபெருமான்,—நுங்களை எத்திறத்தரும் வெல்கிலர் எமது சத்தி வென்றிடும் என்றனன் - (வரந்தந்தருளியபோது நம்மைப்பார்த்து) உங்களை எந்த வலியவர்களும் வெல்லமாட்டார்கள்; எமது சத்தி ஒன்றே வெல்லுமென்று கூறியருளினார்,—அ திறத்தினல் அல்லவோ - அப்படிக்கூறியருளிய தன்மையினலல்லவா,—அறு முகக் குமரன் - ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுள்,—உய்த்த செய்ய வேல் தாரகன் உயிரை உண்டது - செலுத்திய சிறந்த வேலாயுதம் தாரகனுயிரைப்போக்கிவிட்டது. எ — று.

உம்மை உயர்வுசிறப்போடு முற்றுமாம். ஓகாரம் வினா. உண்டது இலக்கணை. (௧0௧)

102. பேதைவானவர்தங்களைச்சிறையிடைப்பிணித்தா
யாதலாலுனக்கானதென்றுன்பமேயல்லா
லேதுமோர்பயனில்லதோர்சிறுதொழிலியற்றி
வேதனைப்படுகின்றதுமேலவர்கடனே.

இ - ள். பேதைவானவர் தங்களை சிறையிடை பிணித்தாய் - பேதைமையுடையராகிய தேவர்களைச் சிறையிலகப்படுத்தினீர்,—ஆதலால் துன்பமே அல்லால் உனக்கு ஆனது என் - அதனாற் பெருந்துக்கமேயல்லாமல் உமக்குவந்த சுகமென்னை,—ஏதும் ஓர் பயன் இல்லது ஓர் சிறு தொழில் இயற்றி - சிறிதுமுபயோகமில்லாத ஒரு அற்பகாரியத்தைச்செய்து,—வேதனை படுகின்றது மேலவர் கடனே - (பின்பு அதனால்) துக்கத்தை யனுபவித்தலும் பெரியோர்களுக்கு முறைமையோ (முறைமையன்று.) எ — று.

தம் சாரியை. ஏகாரம் பிரிநிலை. ஓகாரம் எதிர்மறை. மேலோர் பிரயோசனமற்ற செயல்களைச்செய்யாரென்பதும், கீழோர் அவைகளைச்செய்து பெருந்துக்கமுறுவரென்பதும் இதனாற்பெறப்பட்டது. (௧0௨.)

103. குரவரைச்சிறுபாலரைமாதரைக்குறைதீர்
விரதநற்றொழில்பூண்டுளோர்தம்மைமேலவரை
யருமறைத்தொழிலாளரையொறுத்தனரன்றே
நிரயமுற்றவுஞ்சென்றுசென்றலமருநெறியோர்.

இ - ள். நிரயம் முற்றவும் சென்று சென்று அலமரும் நெறியோர் - நரகங்களெல்லாவற்றினும் போய்ப்போய்ப் பெருந்துக்கத்தை யனுபவிக்கின்ற பாவிகளாரென்றால்,—குரவரை - தாய்தந்தைமுதலிய குரவர்களையும்,—சிறு பாலரை - சிறு குழந்தைகளையும்,—மாதரை - பெண்களையும்,—குறை தீர் நல் விரத தொழில் பூண்டுளோர் தம்மை - குற்றமில்லாத நன்மையாகிய விரதங்களை யனுட்டித்தலையே தொழிலாகக்கொண்டுள்ள தபஸ்விகளையும்,—மேலவரை - பெரியோர்களையும்,—அருமறைத் தொழிலாளரை - சிறந்த வைதிகக்கிரியைகளை யனுட்டிக்கின்ற பிராமணர்களையும்,—ஒறுத்தனர் அன்றே - தண்டித்த மகாபாவிகளல்லவா. எ — று.

தம் சாரியை. உம்மை முற்று. ஓகாரம் வினா. எண்ணும்மைகள் தொக்கன. மேலவர் - தத்துவவியாபாரமொழிந்து சிவோகம் பாவனைசெய்யும் பெரியோர் என்ப. நூல்கள் பலவற்றுள்ளும் வேதாகமங்கள் முதனூல்களாதலின் அவைகளின் அருமைபெருமை தோன்ற 'அருமறை' யென்றார். பாதகம் அதிபாதகம் மகாபாதகம் என்னும் பாதகங்களையும் பிறபாவங்களையுஞ் செய்தோர் யாதனாசரீரிகளாய்க் கும்பிபாகம், ரௌரவம் காலசூத்திரம் முதலிய ராசநரகங்களினும் மற்றைய நரகங்களினும் அமிழ்ந்திப் பல்லாண்டு பெருந்துயரனுபவித்தல் தப்பாதாகலின் 'நிரயமுற்றவுஞ் சென்றுசென் றலமரு நெறியோர்' எனக்கூறினன். மேலவர் தேவருமாம். (௧0௩)

104. அமரர்தம்பெருஞ்சிறையினைநீக்குதியாயிற்
குமரநாயகனீண்டுபோராற்றிடக்குறியா
னமதுகுற்றமுஞ்சிந்தையிற்கொள்ளலனுளை
யிமையொடுங்குமுன்கயிலையின்மீண்டிடுமெந்தாய்.

இ - ள். எந்தாய் - எம்முடைய அண்ணா,—அமரர் தம் பெரும் சிறையினை நீக்குதியாயின் - தேவர்களுடைய பெரிய சிறையை நீக்குவீராயின்,—குமர நாயகன் ஈண்டு போர் ஆற்றிட குறியான் - குமாரக்கடவுள் இவ்விடத்தில் நம்மனோரோடு போர்செய்ய நினையார்,—நமது குற்றமும் சிந்தையில் கொள்ளலன் - (அன்றியும் நமது குற்றங்களையும் மனதிற்கருதார்,)—நாளை இமை ஒடுங்குமுன் கயிலையில் மீண்டிடும் - நாளைக்கு இமைப்பொழுது முடியுமுன் கயிலாசத்திற்குத் திரும்பிச்செல்லுவார். எ - று.

தம் சாரியை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். 'நமது குற்றமுஞ் சிந்தையிற் கொள்ளலன்' எனவே அவரது பெருங்கருணைத்திறத்தை விளக்கினனென்க. (௧0௪)

105. சிட்டராகியேயமர்தருமிமையவர்சிறையை
விட்டிடாதுநீயிருத்தியேன்மேவலர்புரங்கள்
சுட்டகண்ணுதல்குமரனங்குலமெலாந்தொலைய
வட்டுநின்னையுமுடித்திடுஞ்சாதமென்றறைந்தான்.

இ - ள். சிட்டர் ஆகி அமர் தரும் இமையவர் சிறையை - பெரியோர்களாகவிருக்கின்ற தேவர்களது சிறையை,—விட்டிடாது நீ இருத்தியேல் - விடாமல் நீர் இருப்பீரானால்,—மேவலர் புரங்கள் சுட்ட கண்ணுதல் குமரன் - பகைவர்களுடைய முப்புரங்களையெரித்த நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது குமாரர்,—நம் குலம் எலாம்

தொலைய வீட்டு - நமது வம்மிசமெல்லாம் அறும்படியழித்து,—நின்னையும் முடித்திடும் - உம்மையுங்கொல்லுவார்,—சாதம் என்று அறைந்தான் - இது உண்மையென்று சொன்ஞன். எ — று. ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௧0௫)

106. தடுத்துமற்றிவையுரைத்தலும்வெய்யசூர்தடக்கை
புடைத்துவெய்துயிர்த்துரப்பியேநகைநிலாப்பொடிப்பக்
கடித்துமெல்லிதழதுக்கிமெய்பொறித்திடக்கனன்று
முடித்தனித்தலைதுளக்கியேயின்னனமொழிவான்.

இ - ள். தடுத்து மற்றிவை உரைத்தலும் - (சூரபன்மனுடைய எண்ணத்தைத்தடுத்து) இத்தன்மையனவாகிய உறுதிவார்த்தைகளைப்பேசுதலும்,—வெய்ய சூர் தடக்கை புடைத்து - கொடிய சூரபன்மன் பெரிய கைகளை ஒன்றோடொன்று கொட்டி,—வெய்து உயிர்த்து - சுடுமூச்செறிந்து,—உரப்பி - அதட்டி,—நகை நிலா பொடிப்ப - சிரிப்பாகிய வெண்ணிலாத் தோன்ற,—கடித்து மெல் இதழ் அதுக்கி-(பற்களால்) மெல்லிய கீழுதட்டைக்கடித்து அதுக்கி,—மெய் பொறித்திட - சரீரத்திலிருந்து தீப்பொறி தோன்ற,—கனன்று - கோபித்து,—முடி தனி தலை துளக்கி - மகுடமணிந்த ஒப்பற்ற தலையையசைத்து,—இன்னன மொழிவான் - இன்னோரன்ன வசனங்களைச் சொல்லுகின்றான். எ — று. ஏகாரமிரண்டும் அசை. (௧0௬)

107. ஏவற்றொண்டுசெய்தின்னமுங்கரந்தவிந்திரற்குந்
தேவர்க்குஞ்சிறுபாலற்குஞ்சிவனுறைகயிலைக்
காவற்பூதற்குமஞ்சினைகருத்தழிந்தனையோ
மூவர்க்கும்வெலற்கரியதோர்மொய்ம்புகொண்டுடையோய்.

இ - ள். மூவர்க்கும் வெலற்கு அரியது ஓர் மொய்ம்பு கொண்டுடையோய் - மும்மூர்த்திகளாலும் வெல்லுதற்கு முடியாத ஒப்பற்ற வலிமையைப்பெற்றிருக்கின்ற என்னுடைய தம்பீ,—ஏவல் தொண்டு செய்து இன்னமும் கரந்த இந்திரற்கும் - நாம் நியமித்த வேலைகளைச்செய்துகொண்டிருந்து பின் மறைந்துசென்று இன்னமும் வெளிப்படாத இந்திரனுக்கும்,—தேவர்க்கும் - தேவர்களுக்கும்,—சிறு பாலற்கும் - சிறு குழந்தைக்கும்,—சிவன் உறை கயிலை காவல் பூதர்க்கும் அஞ்சினை - சிவபிரான் வீற்றிருக்கின்ற கைலாசகிரியைக் காவல்செய்யும் பூதர்களுக்கும் பயந்து,—கருத்து அழிந்தனையோ - மனங்கலங்கினையா. எ - று. (௧0௭)

108. எல்லைநாள்வரையிழைத்ததுமெம்பெருஞ்சத்தி
வெல்லுநுங்களையென்றதுங்கண்ணுதல்விமலன்
சொல்லயான்முன்புகேட்டிலன்வஞ்சமுஞ்சூழ்வும்
வல்லைவல்லைகொலெம்பிநீபுதிதொன்றுவகுத்தாய்.

இ - ள். கண்ணுதல் விமலன் - நெற்றிக்கண்ணராகிய சிவபெருமான்,—எல்லை நாள் வரை இழைத்ததும் - (வரங்கொடுத்தபொழுது) முடிவுகாலம் வரையறுத்ததும்,—எம் பெரும் சத்தி நுங்களை வெல்லும் என்றதும் - எமது பெரிய சத்தியொன்றே உங்களை வெல்லும் என்றதும் ஆகிய இந்தவசனங்களை,—சொல்ல - கூற,—யான் முன்பு கேட்டிலன் - நான் முன்னே கேட்கவில்லை,—வஞ்சமும் சூழ்வும் வல்லை வல்லை கொல் - வஞ்சகத்திலும் உபாயப்புத்தியிலும் வல்லபனோ,—எம்பி - தம்பியே,—நீ புதிது ஒன்று வகுத்தாய் - நீ புதிய ஒரு விஷயத்தைப்பேசினாய். எ - று.

உம்மைகள் எண். கொல் ஐயம். (௧0௮)

109. நூற்றின்மேலுமோரெட்டுகநுவலருந்திருவின்
வீற்றிருந்தரசியற்றுதிரென்னினுமேனு
ளாற்றினைச்சடைவைத்தவன்கொடுத்திடுமழியாப்
பேற்றையாவரேவிலக்குவாரதுபிழைபடுமோ.

இ - ள். நூற்றின் மேலும் ஓர் எட்டுகம் நுவல அரும் திருவின் வீற்றிருந்து அரசியற்றுதிர் என்னினும் - நூற்றெட்டுகம்வரையுஞ் சொல்லுதற்கரிய செல்வத்தோடு வாழ்ந்திருந்து அரசாட்சிசெய்யுங்கள் என்று வரையறுப்பினும்,—மேல் நாள் ஆற்றினை சடை வைத்தவன் - முன்னாளிலே கங்காநதியைச் சடையிலே தரித்தவராகிய சிவபெருமான்,—கொடுத்திடும் அழியா பேற்றை - கொடுத்தருளிய அழியாத வரத்தை,—யாவரே விலக்குவார் - யார்தான் மாற்றக்கூடியவர்?,—அது பிழை படுமோ - அவ்வரந்தவறுமோ (தவறாது.) [எனவே ஒருவரானும் ஒருகாலத்தும் அழிவுறாதிங்ஙனமிருப்பேன் என்றானென்க.] எ - று.

உமாதேவியாருடைய திருக்கரங்களினின்றுந்தோன்றி உலகமெங்கும் பரந்து அழிக்கும்பொருட்டு நின்ற கங்கையைத் தேவர்களுடைய வேண்டுகோளால் சடையிற்றரித்தார் என்பான் 'மேனுளாற்றினைச்சடைவைத்தவன்' என்றான். இச்சரித்திரம் தட்சகாண்டத்திற் காண்க.

ஏகாரம் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம் பின்னையது எதிர்மறை. (௲0௯)

110. ஆதிநாயகனெம்பெருஞ்சத்தியேயல்லா
லேதிலார்வெலாரென்னினுஞ்சத்தியுமிறையும்
பேதமோவரங்கொடுத்தவனடுமென்கைபிழையே
யோதலாவதோர்வழக்கமேயுண்மையதன்றால்.

இ - ள். ஆதிநாயகன் - முதல்வராகிய சிவபெருமான்,—எம் பெரும் சத்தியே அல்லால் ஏதிலார் வெலார் என்னினும் - எமது பெரிய சத்தியேயன்றி வேறொருவரும் வெல்லமாட்டார் என்று கூறினும்,—சத்தியும் இறையும் பேதமோ - சத்தியுஞ்சிவமும் வேறானபொருளோ (அன்று,)—வரம் கொடுத்தவன் அடும் என்கை பிழை - வரங்கொடுத்தவர் கொல்வாரென்பது குற்றமாகும்,—ஓதல் ஆவது ஓர் வழக்கமே - சிவமென்றுஞ் சத்தியென்றும் வேறுபடுத்துக்கூறும் வழக்கமேயன்றி,—அது உண்மை அன்று - அப்படிக்கூறுதல் உண்மையல்ல. எ – று.

சத்தியுஞ்சிவமும் வேறுபொருளல்லவெனவும், அதனால்வரமளித்த சிவபிரான்கொல்வாரென்பது பிழையெனவும், சத்தியெனவுஞ் சிவமெனவும் பிரித்துக்கூறுதல் சித்தாந்திகள் வழக்கமெனவும், வேதாந்திகளாகிய நம்மனோர்க்கதுண்மையன்று பிரமமொன்றே சத்துப்பொருளெனவுங்கூறிச் சிங்கனது கொள்கையை மறுத்தானென்க.

ஆல் அசை. ஏகாரம் மூன்றும் தேற்றம். ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னையது எதிர்மறை; பின்னையவை எண். (௧௧0)

111. பழுதுறாதுநம்போலவேவேள்வியைப்பயிலா
தழிவிலாவரம்பெற்றிலன்றாரகனதனு
ஞெழிவதாயினன்வச்சிரவாகுவுமுணர்வில்
குழவியாதலின்மாய்ந்தனனீதுகொல்குறையே.

இ - ள். பழுது உறாது நம் போல வேள்வியை பயிலாது அழிவு இலா வரம் தாரகன் பெற்றிலன் - நம்மைப்போல இடையூறில்லாத யாகத்தைச் செய்யாமையால் அழி

யாதிருககும வரத்தைத் தாரகன்பெற்றானில்லை,—அதனால் ஒழிவது ஆயினன் - அப்ப டியழியாவரம் பெறாமையால் இறந்துபோனான்,—வச்சிரவாகுவும் உணர்வு இல் குழவி ஆதலின் மாய்ந்தனன் - இளையமகனாகிய வச்சிரவாகுவும் அறிவுநிரம்பாத குழந்தையாத லால் இறந்தான்,—ஈது கொல் குறை - இதுதானா ஒருகுறை. எ – று.

உம்மை இறந்ததுதழீஇயது. கொல் ஐயம். ஏகாரம் முன்னையதுதேற்றம்; பின்னை யது அசை. (௧௧௧)

112. அண்டமாயிரத்தெட்டையுந்தனியரசாட்சி
கொண்டுவைகினன்குலத்தொடுமமரர்தங்குழுவைத்
தொண்டுகொண்டனன்யாவர்வந்தெதிர்க்கினுந்தொலையே
னுண்டுகொல்லிவணெனக்குநேராகவேயொருவர்.

இ - ள். அண்டம் ஆயிரத்து எட்டையும் தனி அரசாட்சி கொண்டு வைகினன் - ஆயிரத்தெட்டண்டங்களையும் ஒருதனியே அரசாட்சிசெய்துகொண்டிருக்கின்றேன்,— குலத்தொடும் அமரர்தம் குழுவை தொண்டு கொண்டனன் - வம்மிசத்தோடு தேவர்கூட் டங்களைக்கொண்டு ஊழியஞ்செய்வித்தேன்,—யாவர் வந்து எதிர்க்கினும் தொலையேன் - எப்படிப்பட்டவர்கள் வந்து எதிர்த்தாலும் அழியேன்,—இவண் எனக்கு நேராக ஒருவர் உண்டு கொல் - இவ்விடத்தில் எனக்கொப்பாக யாராயினும் இருக்கின்றார்களா. எ – று

தம் சாரியை. ஏ அசை. கொல் ஐயம். உம்மை முன்னையமுற்று; பின்னையது உய ர்வுசிறப்பு. (௧௧௨)

113. தவமுயன்றுழலமரரினரக்கர்கடம்மி
னவுணர்தங்களினாயிரத்தெட்டெனுமண்டம்
புவனமுற்றவுமொருதனியாழியாற்புரந்தே
யெவரெனக்குநேராகவேயழிவிலாதிருந்தார்.

இ - ள். தவம் முயன்று உழல் அமரரின் அரக்கர்கள் தம்மின் அவுணர் தங்களின் - தவத்தையேமுயன்று உலைகின்ற தேவர்களினும் அரக்கர்களினும் அசுரர்களினும்,— ஆயிரத்து எட்டு எனும் அண்டம் புவன முற்றவும் - ஆயிரத்தெட்டென்று கூறப்படும் அண்ட புவனங்களெல்லாவற்றையும்,—ஒரு தனி ஆழியால் புரந்து - ஒப்பற்ற ஆஞ்ஞா சக்கரத்தால் காத்து,—எவர் எனக்கு நேராக அழிவிலாது இருந்தார் - ஆர் எனக்கொப் பாக அழிவில்லாமலிருந்தார்கள் (ஒருவருமில்லை.) எ – று.

தம் இரண்டும் சாரியை. உம்மை முற்று. ஏகாரம் இரண்டும் அசை. (௧௧௩)

114. மாலயன்முதலாகியமுதுவர்கள்வரம்பில்
காலமாகயானமரரைச்சிறைசெயக்கண்டும்
சாலவென்றனக்கஞ்சியேயிருந்தனர்தனியோர்
பாலனேகொலாமழிவிலாவென்னுயிர்படுப்பான்.

இ - ள். மால் அயன் முதலாகிய முதுவர்கள் - பிரமாவிஷ்ணுமுதலாகிய பெருந் தேவர்கள்,—வரம்பு இல் கால மாக யான் அமரரை சிறைசெய கண்டும் - அனேககால மாக நான் தேவர்களைச்சிறையில்வைத்திருப்பதைப் பார்த்தும்,—சால என் தனக்கு அஞ் சியே இருந்தனர் - எனக்குமிகவும் பயந்தே யிருந்தார்கள்,—தனி ஓர் பாலனே கொல் - (அப்படியிருக்கத்) தனித்த ஒரு சிறுபிள்ளைதானா,—அழிவு இலா என் உயிர் படுப்பான் - அழிவில்லாத என்னுயிரைவாங்குபவன். எ – று.

ஒருகாலத்தினும் அழியாவரம்பெற்றிருக்கின்ற என்னைப் பாலன் கொல்லமாட்டானெனத்துணிந்தானென்க. ஆம் சாரியை. ஏகாரம் முன்னையது தேற்றம்; பின்னையது பிரிநிலை. சொல் ஐயம். உம்மை உயர்வுசிறப்பு. (௧௧௪)

115. வேறுபாடுறுவச்சிரப்படிவமுமிடனு
மீறிலாததோராயுளும்பெற்றிடுமென்னை
யூறுதான்செயக்கூடுறுதொருவர்க்குமென்றான்
மாறுபோர்செய்துபாலனோவெனையடவல்லான்.

இ - ள். வேறுபாடு உறு வச்சிரப்படிவமும் மிடலும் ஈறிலாதது ஓர் ஆயுளும் பெற்றிடும் என்னை - சற்றேனும் வேற்றுமையடையப்பெறாத வச்சிரயாக்கையையும் வலிமையையும் அழிவில்லாத ஆயுளையும் பெற்றிருக்கின்ற என்னை,—ஒருவர்க்கும் ஊறு தான் செய கூடுறாது என்றால் - ஒருவராலும் ஊறுபாடுஞ்செய்ய முடியாதெனின்,—மாறு போர் செய்து பாலனோ எனை அட வல்லான் - பகைத்துப்போர்செய்து ஒருசிறுவனோ என்னைக்கொல்லவல்லவன். எ — று.

அச்சிறுவனென்னைக்கொல்லவும் வெல்லவுமாட்டான் நானவனை வெல்லுவேனென்பது கருத்து. ஒருவர்க்கும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு. எனைய எண். ஓர் அசை. ஓகாரம் வினா. (௧௧௫)

116. எண்ணிலாததோர்பாலகனெனைவெல்வனென்கை
விண்ணிலாதவன்றன்னையோர்கனியெனவெஃகிக்
கண்ணிலாதவன்காட்டிடக்கையிலாதவன்போ
யுண்ணிலாதபேராசையாற்பற்றுமாறொக்கும்.

இ - ள். எண் இலாதது ஓர் பாலகன் எனை வெல்வன் என்கை - வலிமையில்லாத ஒருசிறுவன் என்னை வெல்லுவானென்று சொல்லுதல் (எதுபோலுமெனில்),—விண்ணில் ஆதவன் தன்னை ஓர் கனி என வெஃகி - ஆகாயத்திலுள்ள சூரியனை ஒருபழமென்று விரும்பி,—கண் இலாதவன் காட்டிட கை இலாதவன் போய் - குருடன்காட்டக் கையில்லாதவன் சென்று,—உள் நிலாதபேர் ஆசையால் பற்று மாறு ஒக்கும் - மனசில் அடக்கக்கூடாத விருப்பத்தால் பிடிக்குந்தன்மையை ஒக்கும். எ — று.

எண்—ஆலோசனை, மதியெனினுமாம். இந்தவுபமானவுபமேயத்தால் சிறுவன் தன்னோடுபோருக்குவரின் அபசயமடைந்து ஓடுவானென்பதுந் தான் அவனைத்தபபாதுவெல்லுவேனென்பதுங் கருத்தாயிற்று. தன் சாரியை. இது அபூதவுபமாலங்காரம். (௧௧௬)

117. என்றுமற்றிவைசூரபன்மாவிசைத்திடலுந்
துன்றுபஃறலைச்சியமாமுகமுடைத்துணைவ
னன்றுநன்றெனவினவியேயின்னமுநானிங்
கொன்றுகூறுவன்முனியலைகேட்டியென்றுரைப்பான்

இ - ள். என்று சூரபன்மா இவை இசைத்திடலும் - இவ்வாறே இந்தவார்த்தைகளைச் சூரபன்மன் எடுத்துச்சொல்லுதலும்,—துன்று பல்தலை மா சீயமுகம் உடை துணைவன் - நெருங்கிய பலதலைகளையுடைய பெரிய சிங்கமுகனாகிய தம்பியானவன்,—நன்று நன்று என வினவி - நல்லது நல்லது என்றுகேட்டு,—நான் இன்னமும் ஒன்று இங்கு கூறுவன் - நான் இன்னமும் ஒருவிஷயமெடுத்து இங்கே சொல்லுவேன்,—முனியலை கேட்டி என்று உரைப்பான் - கோபமில்லாமல் அதனைக் கேட்கவேண்டுமென்று சொல்லுகின்றான். எ — று.

மற்று, ஏ அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். அவன்கூறிய பெருமிதமொழிகள் பயனின்மையால் நன்று நன்றென வினவியென்றார். (கக௭)

118. வாலிதாமதிச்சடிலமும்பவளமால்வரையே
போலுமேனியுமுக்கணுநாற்பெரும்புயமு
நீலமாமணிக்கண்டமுங்கொண்டுநின்றனனான்
மூலகாரணமில்லதோர்பராபரமுதல்வன்.

இ - ள். மூலகாரணம் இல்லது ஓர் பராபரமுதல்வன் - தமக்கொரு மூலகாரணமில்லாது பிரபஞ்சங்களுக்கெல்லாந் தாமே முதல்வராய்ச் சுத்தமாயாதீதராய்நின்ற பரமசிவன்,—வாலிதா மதி சடிலமும் - வெண்மையாகிய இளம்பிறையையணிந்த சடையையும்,—பவளமால் வரையே போலு மேனியும் - பெரியபவளமலைபோன்ற திருமேனியையும்,—முக்கணும் - மூன்றுகண்களையும்,—பெரும் நால் புயமும் - பெருமையாகிய சதுர்ப்புயங்களையும்,—நீல மாமணி கண்டமும் கொண்டு நின்றனன் - நீலநிறம்பொருந்திய அழகிய கண்டத்தையுங்கொண்டு நின்றார். எ – று.

எனவே இந்தலக்ஷணமமைந்த ஸ்ரீகண்டசரீரியாய் நின்றார் என்பது கருத்து. இத்திருமேனிகொண்ட காரணம் பின்னர்க்கூறப்படும். பிருதுவியாதி சிவதத்துவாந்தமாயுள்ள தத்துவங்களும் அவைகளுக்கதிட்டானமூர்த்திகளும் தோன்றுதற்கு உபாதானமிருத்தல்போலவர்க்கின்மையால் ‘மூலகாரணமில்லதோர்’ எனவும், மாயாகாரியமாகிய தத்துவங்களெல்லாவற்றையுங் கடந்து வாசாமகோசர சுயஞ்சோதியாகிய சின்மாத்திரஸ்வரூபியாய்ச் சர்வவியாபகராய் நிற்றலின் ‘பராபரமுதல்வன்’ எனவுங் கூறினான். இவ்வடிவம் சொரூபமெனவும் கொண்டருளியவடிவந் தடத்தமெனவும் பெயர்பெறும். மூலகாரணமில்லாத பராபரமுதல்வன் இவ்வியல்புடையரென்பதை,

வாசாதீதம் மநோதீதம் பாவாபாவவிவர்ஜிதம்|
ஸர்வஶூந்யம் நிராபாஸம் நிஶ்சிதம் பரமம் பதம்|| எனச் சந்திரஞானத்தினும்,

அகாரஶ்ச உகாரஶ்ச மகாரோ பிந்துரேவ ச
அர்த்தசந்த்ரோ நிரோதீ ச நாதோ நாதாந்த ஏவ ச
ஶக்திஶ்ச வ்யாபிநீ சைவ ஸமநா உந்மநா ததா
ஸமநாதீதமாஸ்தாய ஞானம் ஸ்வரூபம் பரஶிவம்|| எனப்பிராசாததீபிகையினுங் கூறுதல்காண்க. இங்ஙனமே பிரபல சுருதிகளாகிய உபநிடதங்களுஞ் சிவாகமங்களுங்கூறும். ஆல் அசை. உம்மைகள் எண். ஏ தேற்றம். (கக௮)

119. தன்னைநேரிலாப்பரம்பொருடனியுருக்கொண்ட
தென்னகாரணமென்றியேலைந்தொழிலியற்றி
முன்னையாருயிர்ப்பாசங்கண்முழுவதுமகற்றிப்
பின்னைவீடுபேறருளுவானினைந்தபொருளே.

இ - ள். தன்னை நேர் இலா பரம்பொருள் - தமக்கொப்பாருமிக்காருமில்லாத நிர்க்குணராகிய பரம்பொருளான சிவபெருமான்,—தனி உரு கொண்டது என்ன காரணம் என்றியேல் - ஒப்பில்லாத தமது அருளெனப்படும் சமவேதசத்திகாரிய சகுணத்திருமேனிகொண்டருளியது என்னகாரணமென்று கேட்பீராயின்,—ஐந்தொழில் இயற்றி - (படைத்தன்முதலாகிய) பஞ்சகிருத்தியங்களைச்செய்து,—முன்னை ஆர் உயிர் பாசங்கள்

முழுவதும் அகற்றி - முன்பு அரிய ஆன்மாக்களது பாசத்தடைகளெல்லாவற்றையும் நீக்கி,—பின்னை வீடு பேறு அருளுவான் நினைந்த பேரருளே-பின்பு முத்திப்பேற்றைக் கொடுக்கும்பொருட்டுத் திருவுள்ளத்திற்கொண்ட பெருங்கருணையேயாம். (கககூ)

அகண்டாகாரசச்சிதானந்தபரப்பிரமமாகிய பரமசிவன் தமது சத்திப்பிரேரித ஈசானாதி பஞ்சமந்திரங்களாகிய முப்பத்தெண்கலைகளா னிரம்பப்பட்டுள்ள அருட்டிருமேனி கொண்டகாரணம் அனாதியே ஆன்மாக்களது இச்சாஞானக்கிரியைகளைக் கிளரவிடாது தடுத்து இருவினைகட்கும் பிறவிக்கும் ஏதுவாய்நின்ற ஆணவாதிபஞ்சபாசத்தடைகளைநீக்கிச் சிவமாந்தன்மைப்பெரும்பேறாகிய வீடுபேற்றைக் கொடுத்தருளும்பொருட்டுக் கொண்ட பெருங்கருணையே எனவும், பாசநீக்கம் பெற்று வீடுபேறடைதற்குப் பஞ்சகிருத்திய மேதுவாகலானும் பஞ்சகிருத்திய நிகழ்தலில்வழி அப்பாசநீக்கமும் வீடுபேறும் இல்லையாகலானும் 'ஐந்தொழிலியற்றி' எனவுங் கூறினான். உம்மை முற்று. ஏகாரம் அசை.

120. அப்பரன்றனையுன்னியேயளவைதீர்கால
மெய்ப்பெருந்தவமியற்றினையதுகண்டுவெளிப்பட்
டொப்பிலாவரமுதவியேயாங்கதற்கொழிவுஞ்
செப்பிவைத்தனன்றேர்ந்திலைபோலுமத்திறனே.

இ - ள். அ பரன் தனை உன்னியே அளவை தீர் காலம் மெய் பெரும் தவம் இயற்றினை - அப்படிப்பட்ட பரமபதியாகிய சிவபிரானைத்தியானித்து அளவில்லாத காலமாக மெய்ம்மையாகிய பெருந்தவத்தைச் செய்தீர்,—அது கண்டு வெளிப்பட்டு - (அப்பெருமான்) அதனைக்கண்டு பிரசன்னராய்வந்தருளி,—ஒப்பு இலா வரம் உதவி - ஒப்பில்லாத வரங்களைத்தந்து,—ஆங்கு அதற்கு ஒழிவும் செப்பி வைத்தனன் - அப்பொழுது அவ்வரத்திற்கு முடிவையுஞ் சொல்லியருளினார்,—அ திறன் தேர்ந்திலை - அவர் அவ்வாறு சொல்லியதை நீரறிந்தீரில்லை. எ — று.

ஏகாரம் மூன்றும், போலும் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (கஉ0)

121. பெறலருந்திருவுடையநீயறத்தினைப்பேணி
முறைபுரிந்திடாதாற்றலாலமரரைமுனிந்து
சிறையில்வைத்தனையதுகண்டுநின்வலிசிந்தி
யிறுதிசெய்திடவுன்னினன்யாவர்க்குமீசன்.

இ - ள். பெறல் அரும் திரு உடைய நீ - எவராலும் பெறுதற்கரிய செல்வத்தையுடைய நீர்,—அறத்தினை பேணி - (நீதிநூலிலே விதிக்கப்பட்ட) தருமத்தைவிரும்பி,—முறை புரிந்திடாது - நீதியைச் செய்யாமல்,—ஆற்றலால் அமரரை முனிந்து சிறையில் வைத்தனை - வலிமையினால் தேவர்களைக் கோபித்துச் சிறைச்சாலையில் (விலங்குபூட்டுவித்து) வைத்தீர்,—யாவர்க்கும் ஈசன் அது கண்டு - எவர்களுக்கு முதல்வராகிய சிவபெருமான் அங்ஙனம் தேவர்களைச்சிறை வைத்து வருத்துந்தன்மையைத் திருவுள்ளத்துணர்ந்து,—நின்வலி சிந்தி - உமது ஆண்மையை அழித்து,—இறுதி செய்திட உன்னினன் - உம்மைக்கொல்லும்பொருட்டுத் திருவுளங்கொண்டருளினார். எ — று.

உம்மை முற்று. முறைபுரிதல் - தருமநூல்களிலே விலக்கப்பட்ட பாவச்செயல்களை விடுத்து விதிக்கப்பட்ட புண்ணியச்செயல்களைக் கைக்கொண்டொழுகுதல். தேவரெனப்படுவோர் யாவர்க்கு மேனையோர்க்கும் இறைவராய் ஆளுந்தன்மையுடையராதலின் 'யாவர்க்குமீசன்' என்றான். (கஉக)

122. வரமளித்தயாமழிப்பதுமுறையன்றுவரத்தாற்
பெருமைபெற்றுளசூரனையடுவதுபிறர்க்கு
மரிதெனப்பரனுன்னியேதன்னுருவாகு
மொருமகற்கொடுமுடித்துமென்றுன்னினனுளத்தில்.

இ - ள். வரம் அளித்த யாம் அழிப்பது முறை அன்று - வரங்கொடுத்த நாங் கொல்வது நீதியல்ல,—வரத்தால் பெருமை பெற்றுள சூரனை அடுவது பிறர்க்கும் அரிது என பரன் உன்னி - வரத்தினால் (எவர்களினும்) மிகப்பெருமைபெற்றிருக்கின்ற சூரபன்மனைக்கொல்வது எவர்களுக்குங் கூடாதென்று சிவபிரான் சிந்தித்து,—தன் உரு ஆகும் ஒரு மகன் கொடு முடித்தும் என்று உளத்தில் உன்னினன் - தமதுவடிவாகிய ஒப்பற்ற மகனைக்கொண்டு அழிப்பேமென்று திருவுளத்தில் நினைத்தார். எ — று.

பெருந்தேவர்களென மதிக்கப்படுகின்ற பிரமவிட்டுணுக்களாலும் எவ்வகைப்பட்ட வலியினராலும் அழிக்கப்படமாட்டாத பெருவரமுடையானென்பது போதர 'பிறர்க்குமரிதென' என்றான். பரனது சத்தியாதலின் 'தன்னுருவாகு மொருமகன்'என்றான். தன்னுருவாகுமொருமகன் எனவே சிவபிரானே குமாரக்கடவுளாயினரென்பது பெறப்படும். அது இப்புராணத்தில் அவைபுகுபடலத்தில் ௧௨௬ முதல் ௧௩0 வரையுமுள்ள செய்யுட்களானும்,

"செம்மையஞானசத்தித்திருவுருக்கொண்டசெம்ம
லெம்மின்வேறல்லன்யாமுமவனின்வேறல்லங்கண்டீர்" எனவும்,

"உருவம்வேறன்றியைந்துமுகனறுமுகனென்றேதுந்
திருவுருவிரண்டன்மாட்டுஞ்சிவமெனும்யாமேமன்ற
பொருவிலாருயிராய்நிற்பேம்" எனவும் வருந்தணிகைப்புராணச்செய்யுட்களானுந் தெளிக. இங்ஙனங்கூறியவாற்றால் மேற்கூறிய மூர்த்திகட்கு மூர்த்திமான் பரசிவனென்பது துணியப்படும். ஏ அசை. உம்மை உயர்வுசிறப்பு. (௧௨௨)

123. செந்நிறத்திருமேனியுந்திருமுகமாறு
மன்னதற்கிருதொகையுடைத்தோள்களுமாக
முன்னவர்க்குமுன்னாகியபராபரமுதல்வன்
றன்னுதற்கணாலொருதனிக்குமரனைத்தந்தான்.

இ - ள். செம் நிறத் திருமேனியும் திருமுகம் ஆறும் அன்னதற்கு இரு தொகை உடை தோள்களும் ஆக - செந்நிறம்பொருந்திய திருமேனியும் பன்னிரண்டு திருப்புயங்களுமமைந்துள்ள,—ஒருதனி குமரனை - ஒப்பில்லாத ஒரு திருக்குமாரரை,—முன்னவர்க்கு முன்னாகிய பராபரமுதல்வன் - முதல்வர்க்கெல்லாம்முதல்வராகிய சுத்தமாயாதீதரான சிவபெருமான்,—தன் நுதல் கணால் தந்தான் - தமது நெற்றிக்கண்ணால் உண்டாக்கினார். எ — று.

பிரமாமுதல் நிட்களசிவமீறாக ஒருவரையொருவர் நோக்கச் சோபானமுறையே அதிகாரமுதல்வராதலின் இவர்களுக்கெல்லாந் தனிமுதல்வராயிருத்தலின் 'முன்னவர்க்குமுன்னாகிய பராபரமுதல்வன்' என்றான். உம்மைகள் எண். (௧௨௩).

124. மானுடத்தரின்விலங்கினிற்புட்களின்மற்று
மூனமுற்றுழல்யாக்கையிற்பிறந்துளாரொப்ப
நீநினைக்கலைபரஞ்சுடர்நெற்றியந்தலத்தே
தானுதித்தனன்மறைகளுங்கடந்ததோர்தலைவன்.

இ - ள். மறைகளும் கடந்தது ஓர் தலைவன் - வேதங்களாலும் அறியப்படாத முதல்வராகிய அறுமுகப்பெருமான்,—பரம் சுடர் நெற்றியம் தலத்தே உதித்தனன் - பரஞ்

சோதியாகிய சிவபெருமானது நெற்றிக்கண்ணினின்றுந் திருவவதாரஞ்செய்தார்,— மானுடத்தரின் விலங்கினில் புட்களின் மற்றும் ஊனம் உற்று உழல் யாக்கையில் பிறந்துளார் ஒப்ப நீ நினைக்கலை - (அவரை) மனிதர்களிலும் மிருகங்களிலும் பட்சிகளிலும் இன்னுந் தசைப்பற்றுள்ளதாயுழலுகின்ற சரீரத்திலும் பிறந்தவர்களைப்போல நீர் இழிவாக எண்ணற்க. எ — று.

எனவே பரமபதியாகிய சிவபெருமானே அவர் என்பதும் 'அவருடைய சொரூப லக்ஷணம் வேதங்களாலு மறியப்படாதென்பதும் அவர்கொண்டருளிய வடிவம் சத்திகாரியமாகிய அருட்டிருமேனியென்பதுங் குறிப்பித்தானெனவுணர்க. தான், ஓர் அசை. ஏகாரம் தேற்றமும் பிரிநிலையும். உம்மை உயர்வுசிறப்பு. எண்ணும்மைகள் தொக்கன. ()

125. சீலமில்லவர்க்குணரவொண்ணுதசிற்பரனைப்
பாலனென்றனையவனிடத்திற்பலபொருளு
மேலைநாள்வந்துதோன்றியசிறியதோர்வித்தி
னுலம்யாவையுமொடுங்கியேயவதரித்ததுபோல்.

இ - ள். சீலம் இல்லவர்க்கு உணர ஒண்ணுத சிற்பரனை பாலன் என்றனை - உண்மைஞானமில்லாத பாவிகளாலே அறியப்படாத ஞானவடிவினரான கந்தஸ்வாமியைச் சிறுகுழந்தையென்று (மதிப்பில்லாமல்) பேசினீர்,—சிறியது ஓர் வித்தின் - சிறிய ஒரு விதையில்,—ஆலம் யாவையும் ஒடுங்கி அவதரித்தது போல் - (விழுதுகளும் கிளைகளும் கப்புகளுமுள்ள பெரிய) ஆலவிருக்ஷமுழுவதும் அமைந்து தோன்றினாற்போல,—அவனிடத்தில் பலபொருளும் மேலைநாள் வந்து தோன்றிய - அப்பெருமானிடத்தினின்றும் சித்து அசித்தாகிய பிரபஞ்சங்களெல்லாம் ஆதிகாலத்தில்வந்து உற்பவித்தன. எ — று.

உம்மைகள் முற்று. ஏகாரம் அசை. சீலம் - மெய்யுணர்வு; தவமுமாம். 'சீலமில்லவர்க்குணர வொண்ணுதசிற்பரன்' எனவே சீலமுள்ளவர்களாலே உணரப்படுவோனென்பது தானே போதரும். 'உட்டெளிவுற்றோர் காணுமொப்பிலாமுருகன்' என ஆசிரியர் சூரபன்மன்வதைப்படலத்திற் கூறியவாற்றானுமறிக. (௧௨௫)

126. அருவுமாகுவனுருவமாகுவனருவு
முருவுமில்லதோர்தன்மையுமாகுவனூழின்
கருமமாகுவனிமித்தமுமாகுவன்கண்டாய்
பரமனுடலையாவரேபகர்ந்திடற்பாலார்.

இ - ள். பரமன் - (சுருதிகளிலேபிரதிபாதிக்கப்படும் பரப்பிரமமாகிய) சிவபெருமான்,—அருவும் ஆகுவன் - (நிட்களமாகிய சிவஞ் சத்தியெனப்படும்) அருவத்திருமேனிகளையு மெடுத்தருளுவார்,—உருவமும் ஆகுவன் - (சகளமாகிய மகேச்சுரன் உருத்திரன் விஷ்ணு பிரமா எனப்படும்) உருவத்திருமேனிகளையுமெடுத்தருளுவார் [இன்னும் ஒவ்வோரேதுப்பற்றிச் சுவேச்சையினுல் பற்பல திருமேனிகளைக் கொண்டருளுவார்] அருவும் உருவும் இல்லது ஓர் தன்மையும் ஆகுவன் - நிட்களசகளமாகிய சதாசிவத்திருமேனியையு மெடுத்தருளுவார்,—ஊழின் கருமம் ஆகுவன் - முறையே சமஸ்தப்பிரபஞ்சங்களாயுமிருப்பார்,—நிமித்தமும் ஆகுவன் - அப்பிரபஞ்சகர்த்தாவாயுமிருப்பார்,—ஆடலை யாவர் பகர்ந்திடற்பாலார் - (ஆதலால்) அப்பெருமானுடைய லீலையை ஆர்தான்சொல்லவல்லவர். (ஒருவருமிலர்.) எ — று.

அருவம், அருவுருவம், உருவம் என்பன முறையே லயம், போகம், அதிகாரமெனப்படும். முதல்வன் கலப்பினுல் உடலுயிர்போல் "உலகெலாமாகி" யும் நிற்றலான் கருமமுமாகுவன் என்றான். கருமம்—செயப்படுபொருள்; காரியநிகழ்தற்குக்காரணம் வேண்

டப்படுதலால் 'நிமித்தமுமாகுவன்' என்றான்; காரியத்திற்குக் காரணம் வேண்டப்படுதலே,

"காரியகாரணங்கண்முதறுணேநிமித்தங்கண்டாம்
பாரின்மண்டிரிகைபண்ணுமவன்முதறுணேநிமித்தந்
தேரின்மண்மாயையாகத்திரிகைதன்சத்தியாக
வாரியுன்குலாலனுய்நின்றாக்குவனகிலமெல்லாம்" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுணர்க. 'ஊழின் கருமமாகுவனிமித்தமுமாகுவன்' என்பதற்குச் சிலர், ஊழின் காரியமுமாவார் காரணமுமாவார் எனப் பிறழக்கூறுவர். அம்மட்டோ! அவர் ஆங்காங்கு மனம்போனவாறே விபரீதங்கற்பித்துச் செருக்குற்று மயங்குவர். சூரியனுங் கிரணமும்போலச் சிவபிரானும் கந்தஸ்வாமியுமபேதமாயிருத்தலின் 'பரமனுடலே' யென்றார். அது 'ஆதலி னமதுசத்தி யறுமுக னவனும் யாமும்—பேதக மன்று' என்னுந் திருவிளையாட்டுப்படலச் செய்யுளானுணர்க. உருவமுமாகுவன் எனவே பஞ்சவிம்சதி கேவலவடிவங்களுமமையும். உம்மைகள் எண். ஏகாரம் அசை. கண்டாய் முன்னிலையசை. (௧௨௬)

127. வேதக்காட்சிக்குமுபநிடத்துச்சியில்விரிந்த
போதக்காட்சிக்குங்காணலன்புதியரிற்புதியன்
மூதக்கார்க்குமூதக்கவன்முடிவிற்குமுடிவா
யாதிக்காதியாயுயிர்க்குயிராய்நின்றவமலன்.

இ - ள். புதியரில் புதியன் - (தமக்குப்பின்றோன்றிய யாக்கையையுடையார் எல்லாரு மூப்பவுந்தாம் நிலைபெற்ற விளமையுடையராதலின்) எல்லார்க்கும் புதியவர்,—மூதக்கார்க்கு மூதக்கவன் - (எல்லார் யாக்கைக்கும் முன்னே தமதிச்சையாற் கொள்ளப்பட்ட திருமேனியையுடையராதலின்) எல்லார்க்குந்தான் பழையவர்,—முடிவிற்கு முடிவாய் - உலகத்திற்குப்பின்னாய்,—ஆதிக்கு ஆதியாய் - ஆதிக்கு முன்னுமாய்,—உயிர்க்கு உயிராய் நின்ற அமலன் - சீவான்மாவிற் பரமான்மாவாய் வியாபித்துநின்ற மலரகிதராகிய சுப்பிரமணியப்பெருமான்,—வேதக்காட்சிக்கும் - வேதத்தின் கிரியாகாண்டங்களானுணர்த்தப்பட்ட அறிவிற்கும்,—உச்சி உபநிடதத்தில் விரித்த போதக்காட்சிக்கும் காணலன் - வேதசிரசுகளாகிய உபநிடதங்களிலே விரித்துக்கூறப்பட்ட ஞான அறிவிற்கும் அப்பாற்பட்டுநின்றவர். எ - று.

இனி, உயிர்க்குயிராய் நின்ற அனுதிமுத்த சித்துருவாகிய பெருமான் வேதக்காட்சிக்கும் வேதசிரசுகளாகிய உபநிடதங்களிலே விரித்துக்கூறப்பட்ட போதக்காட்சிக்கு மதீதமாயுள்ளவர், இவர் புதியர் இவர் புதியரென்பார்க்கெல்லாம் தாம் புதியராயுள்ளவர், இவர் முதியரிவர்முதியர் என்பார்க்கெல்லாந் தாம் முதியராயுள்ளவர், இவரிறந்தொழிந்தோர் இவரிறந்தொழிந்தோர் என்பார்க்கெல்லாந் தாமிறவாது எஞ்சிநின்றவர், இவர் முதல்வர் இவர் முதல்வர் என்பார்க்கெல்லாம் தாமுதல்வராய் நின்றவர். எனப்பொருள் கொள்ளினுமமையும். உம்மைகள் எண். (௧௨௭)

128. ஞானந்தானுருவாகியநாயகனியல்பை
யானுநீயுமாயிசைத்துமென்றாலஃதெளிதோ
மோனந்தீர்கலாமுனிவருந்தேற்றிலர்முழுதுந்
தானுங்காண்கிலனின்னமுந்தன்பெருந்தலைமை.

இ - ள். ஞானந்தான் உருவாகிய நாயகன் இயல்பை - ஞானமே திருமேனியாகவுடைய பெருமானது சொரூபலக்ஷண மகிமையை,—யானும் நீயுமாய் இசைத்தும் என்றால் அஃது எளிதோ - நானும் நீருமாகப் பேசுவோமெனின் (நித்தியநிரதிசயானந்த சின்மாத்திர சுயஞ்சோதியாகிய) அச்சொரூபலக்ஷண மகிமை எளிதா (எளிதன்று),—

மோனம் தீர்கலா முனிவரும் தேற்றிலர் - மௌனநிலைநீங்காத சிவத்தியானபரராகிய முனிவர்களுந் தெளிந்தறியார்,—இன்னமும் தன் பெரும் தலைமை முழுதும் தானும் காண்கிலன் - இன்னமுந்தமது பெருந்தலைமையை முற்றும் தாமுங்காண்கின்றிலர்.எ-று.

சிவதத்துவாதி பிருதுவியாந்தமாயுள்ள தத்துவதாத்துவிகப் பிரபஞ்சங்களெல்லாவற்றினும் வியாபித்து நிற்றலால் ஒன்றையுஞ் சுட்டியறியாத முற்றுணர்வுடையராதலின் 'தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை' என்றான். "தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ" என்பது மதம்.எனவே இதுவிதுவென்று சுட்டியறிவதெல்லாம் அசத்தாதலும் அவ்வாறறிவது ஆன்மகுணமென்பதுந் தானேபோதரும்.

சர்வபரிபூரணராதலின் ஒன்றையுஞ் சுட்டியறியாது இயல்பாகவேயுணருஞ் சர்வஞ்ஞர் என்பது இதன்றாற்பரியமாம். இதுபற்றியே,

"பட்டிறந்தகாலமெல்லாம்போதும்பரமேட்டி
சுட்டிறந்தஞானத்தைச்சொல்" என்றார் பட்டினத்தடிகளும். சிவயோக நிட்டாபரராகிய முனிவர்களும் தமது தியானுதிகளால் பொதுவெனப்படுந்தடத்த லக்ஷணத்தை ஒருவாறுணர்ந்தாராயினும் சிறப்பெனப்படுஞ் சொரூபலக்ஷணத்தை யுணரா ரென்பது போதர 'முனிவருந் தேற்றிலர்' என்றான்.

அச்சொரூபலக்கணம்வருமாறு:—

ஶிவஸ்வரூபம் தத்ஸாந்த்ராதீதோ நிரஞ்ஜநः
நிர்மாயோ நிராயாமோ வர்ணரூபவிவர்ஜிதः
ஸர்வஜ்ஞஸ்ஸர்வக்ருச்சர்வஸ்ஸர்வாத்மா ஸர்வதோமவः
ஸுதீர்நித்யோ நிராலம்பஸ்ஸ்வஸம்வேத்யஸ்ஸதாத்ருவः
ஸகலஸ்ஸகலவாந் வ்யாபீ ஸூக்ஷ்மோ ஹ்யநலவஸ்ஸ்திதः
ப்ரஹ்மவிஷ்ண்வாதி நந்திருத்ரைர்விஶ்வஸேவிதः எனச்சர்வ ஞானோத்தரத்தில் ஞானபாதத்திற் கூறியபடியேயாகும். ஓகாரம் எதிர்மறை. உம்மை முன்னைய இரண்டும் எண்; முனிவரும் இன்னமும் என்பவற்றில் உயர்வுசிறப்பு; முழுதும் என்பதில்முற்று; ஏனையது இறந்ததுதழீஇயவெச்சம். (௧௨௮)

129. தத்தமாற்றங்கணிறுவியசமயிகள்பலருங்
கத்துபுன்சொலைவினவினரவன்செயல்காணார்
சுத்தவாதுளமுதலியதந்திரத்தொகுதி
யுய்த்துணர்ந்திடுநீரரேயொருசிறிதுணர்வார்.

இ - ள். தம் தம் மாற்றங்கள் நிறுவிய சமயிகள் பலரும் - தங்கள்தங்கள்பேச்சையே தாபித்த பலசமயத்தாரும்,—கத்து புன் சொலை வினவினர் அவன்செயல்காணார் - பிதற்றுகின்ற புன்சமயநூல்களை (மெய்யென்று) கேட்டொழுகுகின்றவர்கள் அப்பகவானுடையசொரூபலக்ஷணமுதலியவற்றை ஒருசிறிதுமறியார்,-(பின்னர்யாவரறிவரெனின்), சுத்தவாதுளம் முதலிய தந்திரத்தொகுதி உய்த்து உணர்ந்திடு நீரரே ஒருசிறிது உணர்வார் - (சமயாதீதமாகிய சுத்தாத்துவித சைவசித்தாந்த நெறியினராய்) நிட்களங்கமாகிய வாதுளமுதலிய சிவாகமநூற்றொகுதிகளை (ஐயந்திரிபற) ஆராய்ந்தறியும் அறிஞர்களே ஒருபிரகாரமறிவார்கள். எ — று.

நிறுவிய என்பதற்கு வினையெச்சப்பொருளுங் கூறுவர். பதார்த்தவிலக்கணம் முத்தியிலக்கணம் முதலிய ஒவ்வாமையின் சைவசித்தாந்த நூல்களால் நியாயவாயிலாகவே

கண்டிக்கப்பட்டொழிதலின் 'கத்துபுன்சொல்' எனப் பொருட்படுத்தாது கூறினன். இறைவன் வாக்காய், பதி பசு பாச லக்கணங்களையும் முத்தியிலக்கணங்களையும் சிறிதும் மலைவு பிறவாவண்ணம் அங்கை நெல்லிக்கனிபோல உள்ளபடி யறிவித்தலின் 'சுத்த வாதுள முதலிய தந்திரத்தொகுதி' யென்றான். தற்போத மேலீட்டான் ஐயந்திரிபு நிகழ் தலுண்மையின் அருணெறிப்பட் டுணரவேண்டுமென்பார் 'உய்த்துணர்ந்திடு நீரரே யொருசிறி துணர்வார்' எனத் தேற்றேகாரங் கொடுத்தான். ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. (கஉகூ)

130. கருவிமெய்ப்புலன்காட்டுவான்காண்பவன்காட்சிப்
பொருளெனப்படுநான்மையுமைவகைப்பொறியு
மிருதிறத்தியல்வினைகளுங்காலமுமிடனு
மரபில்முற்றுறுபயனுமாய்நின்றனன்வள்ளல்.

இ - ள். காண்பவன் கருவி மெய்ப்புலன் காட்சிப்பொருள் காட்டுவான் எனப்படு நான்மையும் - காண்பவனுங் காட்சியும் காட்சிப்பொருளுங் காட்டுவானும் என்று சொல லப்படுஞ் சதுட்டயங்களும்,—ஐவகைப் பொறியும் - ஐம்பொறிகளும்,—இரு திறத்து இயல் வினைகளும் - இருவினைகளும்,— காலமும் - (இறப்பு நிகழ்வு எதிரெனப்படுங்) காலங்களும்,—இடனும் - (தன்மை முன்னிலை படர்க்கையாகிய)இடங்களும்,—மரபின் முற்றுறு பயனுமாய் - முறையே முற்றுப்பெறுகின்ற பிரயோசனமுமாய்,—வள்ளல் நின்றனன் - கந்தஸ்வாமி நின்றார். எ - று.

உம்மைகள் எண். காண்பவன் - ஆன்மா. கருவி மெய்ப்புலன் - அறிதற்குக் கருவி யாகிய ஞானம். காட்சிப்பொருள் - அறிவாலறியப்படும் பொருள். காட்டுவான் - பதி. கன்னிக்கதலிநார் கழிப்பான்போலத் தத்துவநேதிகளைந்து ஆன்மாவாகிய தன்னையும் தன்னிடத்து வியாபித்துநின்று சேட்டிப்பித்தருளும் பரமான்மாவாகிய சிவத்தையும் அருள்வயத்தானுணர்ந்து அவ்வருளே தாரகமாகத் தன்செயல் யாதொன்றுமிலை யாவுஞ் சிவன்செயலே யென்றுணர்ந்த பரஞானிகளுக்கே இன்னோரன்ன திருவிருத்தங்களின் உண்மைப்பொருள் ஒருவாறு புலப்படுமென்றி அபரஞானிகளுக்குப் புலப்படா. அபரஞா னம்-வாசகஞானம். இன்னும் "எங்குஞ் சிவமொழியவில்லை யவன்றன்னை" எனவும், "ஆர்பெரிய ரார்சிறிய ராருறவ ரார்பகைவர்—சீர்பெரிய சிற்சொரூப ரானந்தர்–பேர்பெ ரியர்—எங்கெங்குந் தானா யிருந்துசட சித்தனைத்து—மங்கங் கியற்றுவத னால்" எனவும், "எல்லாமா யல்லவுமா" யெனவும், 'ஊனா யுயிரா யுலகா யுறைவோன்' எனவும்வரும் இவைவ முதலாகிய சுருதிகளி னுண்மைப்பொருளும் மேற்குறித்த தற்போதமுனைப்பொ ழிந்து சிவமயமாய்நின்ற உண்மையனுபவ ஞானிகளுக்கன்றி மற்றவர்க்குப் புலப்படா தென்பது ஆன்றோர் வாக்காம். (கநo)

131. ஞாலமுள்ளதோர்பரம்பொருணுமெனப்புகலு
மாலும்வேதனுமாயையாம்வரம்பினுட்பட்டார்
மூலமாகியதத்துவமுழுவதுங்கடந்து
மேலுயர்ந்திடுதனிமுதலவனன்றிவேறார்.

இ - ள். ஞாலம் உள்ளது ஓர் பரம்பொருள் நாம் என புகலும் - உலகத்தில் உண் மையாக அறியப்படுகின்ற பரப்பிரமம் நாமே என்று கூறும்,—மாலும் வேதனும் மாயை யாம் வரம்பின் உள்பட்டார் - விஷ்ணுவும் பிரமனும் (அவருடைய) மாயாவியாபகத்தி னுட்பட்டார்கள்,—மூலமாகிய தத்துவம் முழுவதும் கடந்து - பிரபஞ்சசோற்பத்திக்கு

முதலாகவுள்ள தத்துவங்களெல்லாவற்றையுங் கடந்து,—மேல் உயர்ந்திடு தனி முதல் அவன் அன்றி வேறு ஆர் - மேலாக வுயர்ந்துநிற்கின்ற ஒப்பற்ற பிரமமாகிய பொருள் அப்பெருமானேயன்றி வேறு யாவர் [ஒருவருமில்லை.] எ - று.

உம்மை முன்னையது எண்; பின்னையது முற்று. உலகத்தோற்றத்திற்கு முதலாயுள்ள தத்துவங்கள் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை எனப்படும். இவை காரணமாகத்தோன்றுவன சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம். இவை முறையே ஐந்து, ஏழு, இருபத்துநான்கு என விரிந்து முப்பத்தாறு தத்துவங்களாம். இவற்றினுண் பொருளை வேதசிவாகமங்களை ஐயந்திரிபறச் சற்குருமுகமாகவுணர்ந்த வல்லார்வாய்க் கேட்டுத் தெளிக. இதனாற் சுப்பிரமணியப்பெருமான் தத்துவாதீதராகிய பரசிவப்பிரபு என்பது பெற்றாம். சுப்பிரமணியர் - நல்ல பிரமத்துவத்தையடைந்தவர். பிரபல சுருதியும் இவ்வாறே பேசும். தத்துவாதீதரெனினும் விசுவாதீதரெனினும் ஒக்கும். (௧௩௧)

132. தூயபார்முதலாகவேகுடிலையின்றுணையு
மேயவண்டமுமுயிர்களும்வியன்பொருள்பலவு
மாயுநின்றனனல்லனுமாயினனவன்றன்
மாயையாவரேகடந்தனர்மறைகளுமயங்கும்.

இ - ள். தூய பார் முதலாகவே குடிலையின் துணையும் மேய - பரிசுத்தமான பிருதுவிதத்துவமுதல் சுத்தமாயைவரையுமிருக்கின்ற,—அண்டமும் - பலவண்டங்களும்,—உயிர்களும் - அவைகளிலுள்ள பலவகையுயிர்களும்,—வியன் பொருள் பலவு மாயும் நின்றனன் - மேலான பலவகைப்பொருள்களுமாக நின்றார்,—அல்லனும் ஆயினன் - அவைகளல்லனுமாயினார்,—அவன் தன் மாயை யாவரே கடந்தனர் - அப்படிப்பட்ட பெருமானுடைய மாயாவல்லபத்தை ஆர்தான் கடந்தார்கள்,—மறைகளும் மயங்கும் - வேதங்களும் (உண்மையையறியாது) மயங்காநிற்கும். எ — று.

இதனால் விசுவரூபி, விசுவாந்தர்யாமி, விசுவாதீதன் என்னுஞ் சுருதிப்பொருள் தொனித்தல்காண்க. தன் சாரியை. ஏகாரங்கள் அசை. உம்மை துணையும் என்பதில் முற்றும், அல்லனும் என்பதில் எதிர்மறையும், மறைகளும் என்பதில் உயர்வுசிறப்பும்; ஏனையவற்றில் எண்ணும் முற்றுமாம். (௧௩௨)

133. இன்னதன்மைசேர்முதல்வனைச்சிறுவனென்றிகழ்ந்து
பன்னுகின்றனையவுணர்தங்கிளையெலாம்படுத்து
நின்னையுந்தடிந்திடுவனோரிமைப்பினினிரப்புந்
தன்னருட்டிறங்காட்டுவான்வந்தனன்சமர்மேல்.

இ - ள். இன்ன தன்மைசேர் முதல்வனை சிறுவன் என்று இகழ்ந்து பன்னுகின்றனை - இத்தன்மையாகிய மகிமைபொருந்திய பகவானை கந்தஸ்வாமியைச் சிறுகுழந்தையென்று அவமதித்துப்பேசுகின்றீர்,—அவுணர் தம் கிளையெலாம் படுத்து - அசுரகூட்டங்களெல்லாவற்றையு மழித்து,—ஓர் இமைப்பினில் நின்னையும் தடிந்திடுவன் - ஒருகணப்பொழுதில் உம்மையுங்கொல்லுவார்,—நிரப்பும் தன் அருள் திறம் காட்டுவான் சமர்மேல் வந்தனன் - பூரணமாகிய தமது அருட்டன்மையைக் காட்டும்பொருட்டுப் போரைக்குறித்து வந்திருக்கின்றார். எ — று.

இதனால் அனந்தசத்திமான் என்னும் பொருள் தொனித்தல்காண்க. தம் சாரியை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். (௧௩௩)

134. அற்றமில்வகையாயிரத்தெட்டெனுமண்டம்
பெற்றனம்மெனவியந்தனை தத்துவபேத
முற்றுணர்ந்திலைதாணியோவளப்பிலவுளகாண்
மற்றையண்டங்கள்கேட்டியேன்மருளுதிமன்னே.

இ - ள். அற்றம் இல் வகை ஆயிரத்து எட்டு எனும் அண்டம் பெற்றனம் என வியந்தனை - அழிவில்லாதவகையாய் ஆயிரத்தெட்டென்னுந் தொகையினையுடைய அண்டங்களைப்பெற்றோமென்று பாராட்டுகின்றீர்,—தத்துவ பேதம் உற்றுணர்ந்திலை - தத்துவங்களின் பிரிவுகளை ஆராய்ந்தறிந்தீரில்லை,—தாணியோ அளப்பில உள காண் - பிருதுவியிலேயோ (நீர் பெற்ற ஆயிரத்தெட்டண்டங்களேயன்றி) அளவில்லாத அண்டங்களிருக்கின்றன என்றறிந்துகொள்ளும்,—மற்றை அண்டங்கள் கேட்டியேல் மருளுதி - அப்புதத்துவமுதலிய முப்பத்தைந்து தத்துவங்களினுமுள்ள வண்டங்களைப் கேட்பீராஞல் மயக்கமடைவீர். எ - று.

தாணியோ என்பதில் ஓகாரம் வியப்புக்குறிப்பு. மன், ஓ அசை. (கஙௌ)

135. குடிலையீறதாவாரியேமுதலதாக்குழுமி
யுடையவண்டங்களலகிலவென்பரொன்றொன்றி
னடைதலுற்றிடுபுவனத்தின்பெருமையாரறிந்தார்
முடிவிலாதவோர்பொருளினைமுடிவுகூறவற்றோ.

இ - ள். வாரியே முதலதா குடிலை ஈறதாக் குழுமியுடைய அண்டங்கள் அலகில என்பர் - அப்புதத்துவமுதல் சுத்தமாயைவரையுங் கூடியிருக்கின்ற அண்டங்கள் அளவில்லாதன என்று சொல்வார்கள்,—ஒன்று ஒன்றின் அடைதல் உற்றிடு புவனத்தின் பெருமையாரறிந்தார் - ஒவ்வொருதத்துவங்களிலு மிருக்கின்ற புவனங்களின் மிகுதிப்பாட்டையாவரறிந்தார்,—முடிவு உறாதது ஓர் பொருளினை முடிவு கூற வற்றோ - (ஆதலால் முடிவில்லாத வொருபொருளுக்கு முடிவு சொல்லலாமோ (சொல்லப்படாது.)

கஙஉ-ம் செய்யுளில் 'தாயபார்முதலாகவே' என்றதனால் அதனையொழித்து 'வாரியேமுதலதா' வென்றார். ஏகாரம் பிரிநிலை. ஓகாரம் எதிர்மறை. (கங௫)

136. அன்னவாகியவண்டங்களனந்தகோடியையுந்
தன்னதாணையாலோரிமைப்பொழுதினிற்றரவும்
பின்னர்மாற்றவும்வல்லதோராதியம்பிரான்கா
ணுன்னொடேபொருமாடலாற்செந்திவந்துற்றான்.

இ - ள். அன்னவாகிய அனந்தகோடி அண்டங்களையும் - அப்படிப்பட்டனவாகிய அனந்தகோடியண்டங்களையும்,—தன்னது ஆணையால் ஓர் இமைப்பொழுதினில் தரவும் - தமது ஆஞ்ஞையினால் ஓரிமைப்பொழுதிலுண்டாக்கவும்,—பின்னர் மாற்றவும் - பின்பு அழிக்கவும்,—வல்லது ஓர் ஆதி அம்பிரான் - வல்லவராகிய ஒப்பற்ற முழுமுதற்கடவுளே,—உன்னொடே பொரும் ஆடலால் செந்தி வந்து உற்றான் - உம்முடன் போர் செய்யவேண்டுமென்னும் லீலாவபிப்பிராயத்தினால் ஜயந்திபுரத்தில் வந்து எழுந்தருளியிருக்கின்றார். எ - று.

ஏகாரம் அசை. காண் முன்னிலையசை. உம்மை முன்னையது முற்று; பின்னைய எண். தனது - தன்னதென விரிந்தது. (கங௬)

137. வச்சிரத்தனியாக்கைபெற்றனமெனமதித்தா
யிச்சிரத்தையைவிடுமதியிருவினைக்கீடா
யச்செடுத்திடுமுயிர்கண்மாய்ந்திடுமெனவறிஞர்
நிச்சயித்தனர்முடிவுறாதிருத்திகொனீயே.

இ - ள். தனி வச்சிர யாக்கை பெற்றனம் என மதித்தாய் - ஒப்பில்லாத வச்சிரகாயத்தைப் பெற்றுக்கொண்டேமென்று மதித்திருக்கின்றீர்,—இ சிரத்தையை விடுமெதி - இந்த நம்பிக்கையை விட்டுவிடும்,—இருவினைக்கு ஈடாய் அச்சு எடுத்திடும் உயிர்கள் மாய்ந்திடும் என அறிஞர் நிச்சயித்தனர் - (நல்வினை தீவினையென்று கூறப்படும்) இருவினைகட்கீடாக (அவற்றின் சுகதுக்கங்களை யனுபவிக்கும்பொருட்டுச்) சரீரமெடுத்துப் பிறக்கின்ற ஆன்மாக்கள் (அவ்வினைப்பயன்களையனுபவித்துத் தொலைந்தஞான்றே)இறந்துவிடுமென்று அறிவிற்சிறந்த பெரியோர்கள் நிச்சயித்திருக்கின்றார்கள்,—நீ முடிவு உறுது இருத்திகொல் - (ஆதலால்) நீர்மாத்திரம் இறவாமலிருப்பீரோ (இறப்பீரென்பது துணிவு.) எ - று.

கொல் எதிர்மறை ஐயம். ஏகாரம் அசை. சிரத்தை-நம்பிக்கை, எண்ணம். ஶ்ரத்³தா⁴ என்னும் வடமொழி ஈற்றுகாரம் ஐகாரமாகத்திரிந்து தமிழில் சிரத்தையென வந்தது. (கஙஎ)

138. பெருமைபெற்றிடுவானத்தினிலத்திடைப்பிறந்தோ
ரிருமைபெற்றிடுகாயமுமிறந்திடுந்திண்ணம்
பருமிதத்துநின்வச்சிரயாக்கையும்பாரி
னுரிமைபெற்றுளதாதலானழிவின்றியுறுமோ.

இ - ள். பெருமை பெற்றிடு வானத்தில் நிலத்திடை பிறந்தோர் இருமை பெற்றிடு காயமும் இறந்திடும் திண்ணம் - பெருமைபொருந்திய மேலுலகத்தினும் பூமியினும் பிறந்தவர்களுடைய இருபகுதியாகிய சரீரங்களும் நிச்சயமாக அழியும்,—பருமிதத்து நின் வச்சிர யாக்கையும் - இறுமாப்புள்ள உமது வச்சிரயாக்கையும்,—பாரின் உரிமை பெற்றுளது ஆதலால் அழிவு இன்றி உறுமோ - பிருதுவிசம்பந்தம் பெற்றிருக்கின்றதாதலால்அழியாதிருக்குமா (அழிந்துவிடும்.) எ — று.

இருமைபெற்றிடு காயம்:—தேவர்களுக்குப் பூதசார சரீரமும் மனிதர்களுக்குப் பூதபரிணம சரீரமும் எனவறிக. எண்ணும்மைகள் தொக்கன. உம்மை முன்னையது முற்று; பின்னையது உயர்வுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. பருமிதம் - இறுமாப்பு; பெருமை.

139. அழிவின்மெய்வரம்பெற்றனமென்றனையதற்கு
மொழிதரும்பொருள்கேண்மதிமுச்சகந்தன்னுட்
கெழியமன்னுயிர்போற்சிலவைகலிற்கெடாது
கழிபெரும்பகலிருந்திடும்பான்மையேகண்டாய்.

இ - ள். அழிவு இல் மெய் வரம் பெற்றனம் என்றனை - (அரசனே,) அழிவில்லாத மெய்ம்மையாகிய வரம்பெற்றோமென்று கூறினீர்,—அதற்கு மொழி தரும் பொருள் கேள் மதி - அழிவற்ற வரமென்பதற்குச் சொல்லப்படும் பொருளைக்கேட்பீராக,—முச்சகம் தன்னுள் கெழிய மன் உயிர்போல் - மூவுலகங்களிலுமிருக்கின்ற நிலைபெற்ற உயிர்களைப்போல,—சில வைகலில் கெடாது - சிலநாட்களில் அழியாமல்,—கழி பெரும் பகல் இருந்திடும் பான்மையே கண்டாய் - மிக்க அனேககாலத்திற்கு இருக்கின்ற தன்மையே என்றுணர்வீர். எ — று.

மதி முன்னிலையசை. ஏகாரம் தேற்றம். தன் சாரியை. 'அழிவில் மெய்வரம் பெற்றனம் - அழிவில்லாத சரீரத்தையுடையனாக விருக்கும்பொருட்டு வரத்தைப் பெற்றோம்' எனினும் அமையும். (கஙகூ)

140. அச்சுதன்னயனமராராகியபெயரவர்க்கு
நிச்சயம்படுமுகமனேயானபோனினது
வச்சிரத்தனியாக்கையுமழிவிலாவரமு
முச்சகந்தொழப்பல்லுகமிருத்தலாய்முடியும்.

இ - ள். அச்சுதன் அயன் அமரர் ஆகிய பெயர் - அழிவற்றவன் பிறப்பில்லாதவன் இறப்பில்லாதவர் எனப்பொருள்படும் அச்சுதன் அயன் அமரர் என்று கூறப்படுவனவாகிய பெயர்கள்,—அவர்க்கு நிச்சயம்படு முகமனே ஆனபோல் - அவ்வப்பெயரையுடைய விஷ்ணுவுக்கும் பிரமனுக்குந் தேவர்க்கும் நிச்சயமான உபசாரமேயானாற்போல,—நினது வச்சிரத்தனி யாக்கையும் - உம்முடைய ஒப்பற்ற வச்சிரகாயமும்,—அழிவு இலா வரமும் - அழிவில்லாத வரங்களும்,—முச்சகம் தொழ பல் உகம் இருத்தலாய் முடியும் - (சுவர்க்கமத்திய பாதலமெனப்படுகின்ற) மூன்றுலகங்களும் வணங்கும்படி அனேக யுகங்களுக்குச் சீவித்திருத்தலாகவே முடியும். எ — று.

விஷ்ணு முதலியவர்கள் ஒடுக்கமும் உற்பத்தியும் மரிப்பும் உளராதலின் அவர்க்கப் பெயர்கள் துதிவாதமேயாம். அதுபோல வச்சிரயாக்கையும் அழிவில்லாத வரங்களும் துதிவாதமேயன்றி விதிவாதமன்றென்பது தாற்பரியம். அச்சுதன், அமரர் என்பன முறையே ச்யு, ம்ரு என்னுந் தாதுவினடியாகப்பிறந்த வடசொற்கள். அஜ என்பது 'எட்டேயவ்வு' மென்ற விதிப்படி யகரமாகத்திரிந்து அயனென்றாயிற்று. உம்மைகள் எண். ஏகாரம் பிரிநிலை; தேற்றமெனினுமாம். (௧௪௦)

141. வான்செய்தேவரைநீயலைக்கின்றதைமதியா
வூன்செய்கின்றபல்லுயிருக்குமுயிரதாமொருவன்
றான்செய்கின்றதொல்வரத்தினைத்தான்றவிர்த்திடுமே
லேன்செய்தாயெனவினவியேநிறுவுவாரெவரே.

இ - ள். வான் செய் தேவரை நீ அலைக்கின்றதை மதியா - ஆகாயபதவியில் வாழ்கின்ற தேவர்களை நீர் (சிறையில் வைத்து) வருத்துகின்றதை நினைத்து,—ஊன் செய்கின்ற பல் உயிருக்கும் உயிரதாம் ஒருவன் - உடம்பைத்தமக்கு நிலைக்களமாகக்கொண்ட பலவகை யுயிர்களுக்கும் பரமான்மாவாக வியாபித்திருக்கின்ற சிவபிரான்,—தான் செய்கின்ற தொல் வரத்தினை தான் தவிர்த்திடுமேல் - தாந்தந்தருளிய பழமையாகிய வரத்தைத் தாமே மாற்றுவாராயின்,—ஏன் செய்தாய் என வினவி நிறுவுவார் எவர் - அப்பெருமானை ஏன் அப்படிச்செய்தீரென்று கேட்டுப் (பழையபடி) இருக்கச்செய்பவர் யாவர்.

'ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்தி - ஒருபொருளையே அறிஞர் பலவாகக் கூறுகின்றார்கள்' எனவும், 'ஏக ஏவ ருத்ர: - சிவபிரான் ஒருவரே' எனவுஞ் சுருதி கூறுதலின் 'ஒருவனெ'ன்றான். இத்திருவிருத்தத்தானும் சிவபிரானுஞ் சுப்பிரமணியப்பெருமானுஞ் சிறிதும் பேதமில்லாதவர் என்பது தெளித்துரைக்கப்பட்டது. ஊன் ஆகுபெயர். உடம்பிலே உயிர் எவ்வாறு வியாபகமோ அவ்வாறு உயிரிலே சர்வாந்தரியாமியாய் நிற்கின்றார் என்பது கருத்து. ஏகாரங்கள் அசை. உம்மை முற்று. (௧௪௧)

142. கெடுதலில்லதோர்வளனொடுநீயுநின்கிளையும்
படுதலின்றியேவாழ்தியென்றின்னனபகர்ந்தே
விடுதல்கொண்டிடுசிறையிடைத்தேவரையின்னே
விடுதல்செய்குதியென்றனனறிஞரின்மிக்கான்.

இ - ள். கெடுதல் இல்லது ஓர் வளனொடு நீயும் நின்கிளையும் - அழிவில்லாத செல்வத்துடன் நீரும் உமது சுற்றத்தாரும்,—படுதல் இன்றியே வாழ்தி என்று இன்னன

பகர்ந்தேன்-அழிவின்றி வாழ்ந்திருப்பீர் என்று இத்தன்மையாகிய நன்மதிகளைப் போதித்தேன்,—இடுதல் கொண்டிடு சிறையிடை தேவரை இன்னே விடுதல் செய்குதி என்றனன் அறிஞரின் மிக்கான் - நீர்வைத்த சிறையினின்றும் தேவர்களை இப்பொழுதே நீக்கிவிடுமென்று (சாஸ்திரவாராய்ச்சியுள்ள) அறிவுடையோரில் சிறந்தவனாகிய சிங்கமுகன் கூறினான். எ — று.

ஓர், ஏ அசை. உம்மைகள் எண். அகூம் செய்யுள்முதல் கசஉ ம் செய்யுள்வரையும் 'மந்திரிமார்களும் சேனாதிபதிகளும் மக்களும் பிறரும் உமக்குத்தக்க புத்திகளைப் போதித்திலரெனவும், பெற்ற செல்வச்செருக்கிற் பிறந்த கடுங்கோபம் அறிஞரையுங் கடக்கும் அதுமுற்றுமுன் அன்புடையார் உறுதிமொழிகளைப் போதித்தல்வேண்டுமெனவும்,அரசருடைய செவியில் தீக்கோலைச் செருகினாற்போல நீதிமொழிகளைப் போதித்தவரே அமைச்சராதியோரெனவும்,தம்மரசன் விரும்பியபடிபோதித்தவர்பகைவரெனவும், இந்திராதிதேவர்களை வருத்திய கொடியவர் அழிந்தவரேயன்றித் தப்பினவரில்லையெனவும், தேவர்களை மீன்சுமப்பித்தல் மாகபாதகமெனவும், இந்திரன் அரசுரிமையை நீக்கி நகரத்தையழித்துச் செல்வத்தைக்கவர்ந்து தேவர்களைச் சிறைவைத்தது பெருங்குற்றமெனவும், அதனாற்றான் எங்களுக்கித்துன்பம் வந்தது; இதனை உண்மையென்று கொள்ளாது மயங்கிவிட்டீர் எனவும், சுவர்க்கமழிந்தநாட் பிடித்துவந்த தேவரை யின்னமுஞ் சிறைவிட்டிலீர்; இரக்கநீங்கினீர்; அதற்காகவன்றோ அறுமுகப்பெருமான் உம்மோடு போர்செய்யவந்தது எனவும், எங்களுக்குச் சிவபெருமான்குறித்தகாலஞ் சமீபித்துவிட்டது எனவும், சிவபிரான் உங்களை ஒருவரும் வெல்லமாட்டார்கள் நமது சத்தியேவெல்லுமென்றார்; அதனாலன்றோ கந்தஸ்வாமி செலுத்தியவேலாயுதம் தாரகனைக்கொன்றது எனவும், தேவர்களைச் சிறைவைத்தமையால் துக்கமேயன்றி ஒருசுகமுமில்லையெனவும், குரவரையும் பாலரையும் பெண்களையும் தபோதனர்களையும் பெரியோர்களையும் அந்தணர்களையும் வருத்தியபாவிகளல்லவா ரௌரவாதி கொடிய நரகங்களிற்கிடந்து வருந்துகிறவர்களெனவும், மேற்கூறப்பட்டவர்களினும் விசிட்டான்மாக்களாகிய தேவர்களைச் சிறைநீக்குவீரேல் குமாரக்கடவுள் போர்செய்யச்சிந்தியார்; நாஞ்செய்த குற்றங்களையுந் திருவுளத்துக்கொள்ளார்; ஒருகணப்பொழுதில் கயிலைக்குத்திரும்புவார். அங்ஙனம் தேவரைச்சிறைநீக்காது வைத்திருப்பீரேல் நங்குலத்துள்ளாரை முடித்து உம்மையுநிச்சயமாக அழிப்பாரெனவும், இவைகளைக்கேட்ட சூரபன்மன் சிறுபாலன் என்னை வெல்லமாட்டான் என மறுத்துரைத்தவழி அறுமுகப்பெருமானுடைய திவ்வியப்பிரபாவங்களை வேதோபநிஷதசிவாகமப்பிரமாணங்களால் நன்குவிளக்கிச் சிவபிரானே அவரென வற்புறுத்திப்போதித்தானாதலால் 'அறிஞரின்மிக்கான்' எனக்கூறினார். (கசஉ)

143. இன்னபான்மையான்மடங்கலம்பெருமுகத்திளவல்
சொன்னவாசகம்வினவியேமணிமுடிதுளக்கிக்
கன்னமூடுசெங்கனல்செறித்தாலெனக்கனன்று
முன்னையாகியோன்பின்னருஞ்சிற்சிலமொழிவான்.

இ - ள். இன்ன பான்மையால் - இத்தன்மையாக,—மடங்கலம் பெருமுகத்து இளவல் சொன்னவாசகம் வினவி - பெரிய சிங்கமுகத்தையுடைய தம்பியானவன் போதித்த வார்த்தைகளைக் கேட்டு,—மணிமுடி துளக்கி - (அப்புத்திகள் தனக்கு ஒவ்வாமையால்) இரத்தினமயமான கிரீடத்தையசைத்து,—கன்னம் ஊடு செம் கனல் செறித்தால் எனகனன்று - காதின்வழியாய் நெருப்பிற்காய்ச்சிய நாராசத்தைச்செருகியதுபோலக் கோபித்து,—முன்னையாகியோன் பின்னரும் சில சில மொழிவான் - தமையனாகிய சூரபன்மன் பின்னுஞ்சிலசில வார்த்தைகளைச்சொல்லுகின்றான். எ — று.

ஏகாரம் அசை. உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். சிங்கன்போதித்த உறுதிமொழி கள் தீக்கோல்போற் செவிவழிச்சேறலின் 'கன்னமூடுசெங்கனல் செறித்தாலென' என்றார். (கசங)

144. காற்றிற்றள்ளுண்டுநெருப்பினிற்சூடுண்டுகங்கை
யாற்றிற்றாக்குண்டுசாவணம்புக்கலையுண்டு
வேற்றுப்பேர்முலையுண்டழுதேவிளையாடு
நேற்றைப்பாலனையோபரம்பொருளெனநினைந்தாய்.

இ - ள். காற்றில் தள்ளுண்டு - காற்றினால் செலுத்தப்பட்டு,—நெருப்பினில் சூடுண்டு - அக்கினியினால் சூடுபட்டு,—கங்கை ஆற்றில் தாக்குண்டு - கங்காநதியினால் மொத்துண்டு,—சரவணம்புக்கு அலையுண்டு - சரவணவாவியிற்சென்று அலைப்புண்டு,—வேற்றுபேர் முலை உண்டு - (பெற்றதாயின்முலைப்பாலுக்கு வழியின்றி) வேற்றுப்பெண்களின் முலைப்பாலைப்பருகி,—அழுது விளையாடும் நேற்றைப் பாலனையோ - அழுதுகொண்டு விளையாடுகின்ற நேற்றுப்பிறந்த குழந்தையையா,—பரம்பொருள் என நினைந்தாய்- பரமபதியென்று மதித்தாய். எ — று.

ஏகாரம் அசை. ஓகாரம் இழிவுசிறப்பு. இவ்வளவுபோதனைகளைக்கேட்டும் அறிவிலனாதலால் 'பாலன்' என்று மிக அவமதித்துக்கூறினான். (கசச)

145. பிரமமாகியவொருபொருளுயிரெனப்பேர்பெற்
றுருவமெண்ணிலகொண்டுதன்மாயையாலுலப்பில்
கருமபேதங்களாற்றிடும்பல்புனற்கடத்து
ளிரவிதன்னுருத்தனித்தனிகாட்டியவியல்பின்.

இ - ள். பிரமம் ஆகிய ஒருபொருள் உயிர் என பேர் பெற்று - பிரமமென்று சொல்லப்படும் ஒருவஸ்துவானது சீவனென்றுபெயரைப்பெற்று,—தன் மாயையால் எண்ணில உருவம் கொண்டு - தமதுமாயாசத்தியினால் அனேக உருவங்களை யெடுத்து,—உலப்பில் கருமபேதங்கள் ஆற்றிடும் - ஒழிவற்ற தொழில்வேறுபாடுகளைச்செய்யும் (எதுபோலுமெனின்),—பல் புனல் கடத்துள் - நீர்நிறைந்த பலகுடத்துள்,—இரவி தன் உரு தனிதனி காட்டிய இயல்பின் - சூரியன் தனது வடிவத்தை வேறுவேறாகக்காட்டிய தன்மையைப்போல. எ — று. (கசரு)

146. கடந்தகர்ந்துழியவற்றிடைவெளிககனத்தோ
டடைந்தவாறுபோல்யாக்கையின்பேதகமனைத்து
முடிந்தகாலையிற்றொன்மைபோலபேதமாமொழிக்குந்
தொடர்ந்தசிந்தைக்குநாடொணாதமர்பெருஞ்சோதி.

இ - ள். கடம் தகர்ந்துழி - குடமுடைந்தவுடனே,—அவற்று இடை வெளி - அக்கடாகாயமானது,—ககனத்தோடு அடைந்தவாறுபோல் - மகாகாயத்தோடு கலந்ததன்மையைப்போல,—யாக்கையின் பேதகம் அனைத்தும் முடிந்தகாலையில் - சரீரத்தின்வேறுபாடுகளெல்லாம் அழிந்தபோது,—மொழிக்கும் தொடர்ந்த சிந்தைக்கும் நாடொணாது அமர் பெரும் சோதி - வாக்கினாலும் பற்றுகின்ற மனத்தினாலும் அறியப்படாமலிருக்கின்ற பரஞ்சோதியாகிய பிரமம்,—தொன்மைபோல் அபேதமாம் - பழையபடி ஒன்றாகும். எ — று.

உம்மை முன்னையது முற்று; பின்னைய எண். ஏகான்மவாதம்—மாயாவாதமும், பாற்கரியவாதமும், கிரீடாப்பிரமவாதமும், சத்தப்பிரமவாதமும் என நால்வகைப்படும். ஏகான்மவாதநூல் செய்தவர் வியாசர். இவற்றுள், மாயாவாதமாவது பரப்பிரமம் மாயோ

பாதியினாலே வாதிக்கப்பட்டுச் சரீரத்தினுள்ளே சீவான்மாவாக நிற்குமென்றும், சீவான் மாவும் விவேகஞானமடைந்து, மாயாவத்தைகடந்து, பரமான்மாவோடு கடாகாயமும் மகாகாயமும்போல அபேதமாய்விடுமென்றுங் கூறப்படும். இம்மாயாவாதம் பக்குவத்துக் கியையச் சுக்கிரனாற் போதிக்கப்பெற்றசூரபன்மன் அந்நெறியினின்றானாகலின் அதனை எடுத்துக்கூறினான். விசுவரூபியாய்நின்ற அறுமுகப்பெருமான் கொடுத்தருளிய நல்லு ணர்ச்சியினால் மாயாவாதநிலை நழுவி ஸாக்ஷாத்கார விசுவரூபத்தைத்தரிசித்து ஞானானந் தவெள்ளத்தமிழ்ந்தி அவருடைய திவ்வியதேசோமயமாகிய சொரூபலக்ஷணப்பிரபாவங்க ளைத்துதித்துநின்ற சூரபன்மன் தான் பரதந்திரனெனவும், சுவதந்திராதி சுத்தசாட்கு ண்ணிய பரமபதியாய் நின்றவர் கந்தஸ்வாமியெனவும், அவரால் தனக்கு முத்திசித்திக் குமெனவும் தெளிந்துகொண்டானென்பது பின்னர்க் கூறப்படும் சூரபன்மன்வதைப்பட லத்தால் விளங்கும்.

புறச்சமயமாகிய மாயாவாதம் புறப்புறச்சமயமாகிய உலோகாயதமுதலியவற்றோடு சேர்த்துக் கண்டிக்கப்படுதல்,

"மிண்டிய மாயா வாத மென்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்
துலோகா யதனெனு மொண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
யதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்" என்னுந் திருவாசகத்தானுஞ் சித்தாந்தசாத்திரங்களானுந் தெளிக.

வேதத்திலே பூருவபக்கமாகச் சொல்லப்பட்டுப் பின் கண்டிக்கப்பட்ட சில பக்கங் களையே சிலர் சித்தாந்தபக்கமாமெனக்கொண்டு, சித்தாந்தவாக்கியங்களுக்குப் பெரியோர் உரைக்கும் உண்மைப்பொருளை விடுத்து, தாங்கொண்ட விபரீதபக்கங்களுக்கியையப் பொருள்கற்பித்து, அங்ஙனம் தாங்கற்பித்த மீமாஞ்சை, மாயாவாதம், பாஞ்சராத்திரம் முதலிய சமயங்களைத் தனித்தனியே வைதிகசமயங்களாமென முடித்து, அவ்வைதிக சமயங்களை விரித்துணர்த்தி ஒவ்வோர் நூல்செய்தார்கள். வேதத்தின் ஞானகாண்டம் ஆகமத்தின் ஞானகாண்டம் என்னும் இரண்டும் திரிபதார்த்த இலக்கணங்களையே கூறு வனவாயினும், வேதத்தின் ஞானகாண்டத்துண்மைப்பொருள் நிருவாணதீக்ஷைசெய்யப் பெற்றுச் சித்தாந்தத்தையோதியுணர்ந்தோர்க்கே விளங்குமென்க. இவ்வுண்மை சனகாதி நால்வரும் வேதோபநிடதங்களை நெடுநாள்வரையும் ஓதியும் ஞானம் நிலைபெறாதவராயின ரென்றும், பின்பு ஆகமாந்தம் என்னும் பெயரையுடைய சித்தாந்தத்தை ஓதி ஞானம் நிலைபெற்றனர் என்றும் காந்தத்திலே சங்கரசங்கிதையிற் கூறியவாற்றாற்றெளியப்படும். படவே, சித்தாந்தம்வேதாந்தத்தின் சாரமாயுந் தெளிவாயுமுள்ளதென்பது பெறப்பட்டது.

"குடிலையென்னுந்தடவயனுப்ப
ணருள்வித்திட்டுக்கருணைநீர்பாய்ச்சி
வேதமென்னும்பாதவம்வளர்த்தனை
பாதவமதனிற்படுபயன்பலவே
யவற்றுள், இலைகொண்டுவந்தனர்பலரே
யிலையொரீஇத், தளிர்கொண்டுவந்தனர்பலரே
தளிரொரீஇ, யரும்பொடுமலர்பிஞ்சருங்காயென்றிவை
விரும்பினர்கொண்டுவந்தனர்பலரே
யவ்வாறுறுப்புமிவ்வாறுபயப்ப
வோரும்வேதாந்தமென்றுச்சியிற்பழுத்த
வாராவின்பவருங்கனிபிழிந்து
சாரங்கொண்டசைவசித்தாந்தத்

தேனமுதருந்தினர்சிலரேயானவர்
நன்னிலைபெறுதற்கன்னியனுயினு
மன்னவர்கமலப்பொன்னடிவிளக்கியத்
தீம்புனலமுதமார்ந்தனனதனல்
வேம்பெனக்கொண்டனன்விண்ணவரமுதே." என்பது பண்டாரமும்மணிக்கோவை.

உபநிடதங்களை உற்றுநோக்கி வியாசமுனிவர் இயற்றிய சூத்திரரூபமாகிய பிரமமீமாஞ்சை வேதாந்தமெனப்படும்.

"எத்திடுசுருதிகளிசைக்குமாண்பொருண்
மாத்திரைப்படாவெனுமாசில்காட்சியர்
பார்த்துணர்பான்மையாற்பலவகைப்படச்
சூத்திரமானவுஞ்சொற்றுவைகினன்." என்பது பாயிரப்படலம்.

இது உத்தரமீமாஞ்சையெனவுஞ் சாரீரகசூத்திரமெனவும் வேதாந்தசூத்திரமெனவும் பெயர்பெறும். இந்த வேதாந்தசூத்திரம் நான்கு அத்தியாயங்களையும், பதினறு பாதங்களையும், நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும், ஐஞ்ஞூற்றைம்பத்தைந்து சூத்திரங்களையும் உடையது. வேதாந்தசூத்திரத்தின் முதலாம் அத்தியாயத்திலே பிரமமாகிய சிவத்தினியல்பும், இரண்டாம் அத்தியாயத்திலே சாங்கியமுதலிய புறச்சமயவிரோதபரிகாரமும், மூன்றும் அத்தியாயத்திலே வித்தியாசாதனநிர்ணயமும், நான்காம் அத்தியாயத்திலே ஞானசாதனபலமாகிய வீடுபேறும் பேசப்படும்.

முதலாம் அத்தியாயத்தின் முதலாம் பாதத்தின் முதலாஞ்சூத்திரம் பிரமேயவிஷயத்தையும், இரண்டாஞ்சூத்திரம் பிரமாதாவிஷயத்தையும், மூன்றுஞ்சூத்திரம் பிரமாணவிஷயத்தையுஞ் சொல்லும். பிரமாதா, பிரமாணம், பிரமேயம் என்பன முறையே ஞாதிருஞானஞேயங்களை உணர்த்தும். ஞாதிரு-ஆன்மா. ஞானம்-சிவஞானம். ஞேயம்-சிவம். திருவள்ளுவர்குறளும், வேதோபநிடதங்களும், தேவார திருவாசகங்களும், திருக்கோவையாரும், திருமந்திரமும்போல இவ்வேதாந்தசூத்திரமும் பதிபசுபாசங்களை அறிவுறுத்துஞ் சாத்திரமாம் என்க.

"தேவர்குறளுந்திருநான்மறைமுடிவு
மூவர்தமிழுமுனிமொழியும்—கோவை
திருவாசகமுந்திருமூலர்சொல்லு
மொருவாசகமென்றுணர்." என்பது ஔவையார் வாக்கு.

வேதாந்தசூத்திரத்து மெய்ப்பொருள் வேதசிவாகம மிரண்டையு நன்குணர்ந்த நீலகண்டசிவாசாரியர் உரைத்த பாடியத்தா லினிதுவிளங்கும். மற்றைச் சங்கர் இராமானுச மாத்துவ பாடியங்களும் பிரகரணங்களும் சிவாகமத்துக்கு மறுதலைப்பட்ட மாயாவாத வைணவ மாத்துவசமய நூற்பொருளுடையனவாம். வேதம் சாமானிய சுருதியெனவும், வேதோபநிடதங்கள் பிரபல சுருதியெனவும், ஆகமம் விசேடசுருதியெனவும் பெயர்பெறும். இங்ஙனமாக, இவ்வுண்மையை யறியாது சிலர் வேதத்தை விசேடமெனவும், ஆகமம் அத்துணை விசேடமன்றெனவும், ஆகமத்தில் விதிக்கப்பட்ட சமயவிசேட நிருவாண தீக்ஷை சிவார்ச்சனை ஆசாரியாபிடேகங்களைப் பெற்றுக்கொண்டும் அதனைக் கைக்கொண்டு விசுவசித்தொழுகாது வேதக்கிரியையே யமையுமெனவும், ஆசாரியாபிடேகம் முதலியனபிழைப்பினிமித்தம் பெற்றதேயன்றி எங்களுக்கு உரியனவன்று எனவும் பிதற்றுகின்றார்கள். வேதாகமங்களிறைவனருளிச்செய்த நூல்களாகவிருக்கவும் சிவாகமத்தைப் பொருட்படுத்தாது அருவருத்துவிடுதல் பேதமையேயன்றி வேறில்லை யெனவுணர்க. ()

147. பிரமமேயிவரல்லவரிவரெனப்பேதித்
திருமையாகவேகொள்ளலையாக்கையேவேறு
பரமமாகியவுயிரெலாமொன்றுபல்பணியும்
பொருளதாகியேயொருமையாய்முடிந்தவாபோல.

இ - ள். இவர் பிரமமே (என) - இவர்கள் பிரமமானவர்களே என்றும்,—இவர் (பிரமம்) அல்லவர் (ஏ) என - இவர்கள் பிரமமல்லாதவர்களே யென்றும்,—பேதித்து - வேறுபடுத்தி,—இருமையாகவே கொள்ளலை - இரண்டுபட்சமாகக் கொள்ளாதே,—யாக்கையே வேறு - தேகமே வேறாகவுள்ளது,—பரமம் ஆகிய உயிர் எலாம் ஒன்று - பிரமமாகிய உயிரெல்லாம் ஒன்றே,—(அது எதுபோலுமெனின்) ஒருமையாய் பொருளதே - பொன்னொன்றே,—பல் பணியும் ஆகி முடிந்தவாபோல - பலவாபரணங்களுமாகி முடிந்தவாறுபோல. எ - று.

பொன்னொன்றே பலவாபரணங்களானாற்போலப் பிரமமொன்றே பலவுயிர்களாயின என்பது கருத்து. ஏகாரம் முன்னைய பிரிநிலை; எஞ்சியது தேற்றம். உம்மை முற்று. ஒருமையாய் என்பதில் அகரந்தொக்கது. வாறு என்பது வாவென வீறுகெட்டது. (கசஎ)

148. விறலும்வன்மையுமில்லவர்தாழ்வர்மேதக்க
நெறியரோங்குவரீதுலகத்திடைநிகழ்ச்சி
யிறுதியில்லதோர்பெரியன்யானறுமுகனென்போன்
சிறியனாதலினவனையான்வெல்குவன்றிண்ணம்.

இ - ள். விறலும் வன்மையும் இல்லவர் தாழ்வர் - வீரமும் வலிமையுமில்லாதவர்கள் தாழ்வடைவார்கள்,—மேதக்க நெறியர் ஓங்குவர் - (அவ்வீரத்தினும் வலிமையினும்) மேம்பட்ட முறைமையுடையவர்கள் உயர்ச்சியடைவார்கள்,—ஈது உலகத்திடை நிகழ்ச்சி - இதுதான் உலகத்தில் நடக்கின்ற வழக்கம்,—யான் இறுதி இல்லது ஓர் பெரியன் - நான் அழிவில்லாத பெரியவன்,—அறுமுகன் என்போன் - சண்முகன் என்று சொல்லப்படுகின்றவன்,—சிறியன் - சிறியவன்,—ஆதலின் - ஆதலால்,—யான் அவனை வெல்குவன் திண்ணம் - நான் அவனை நிச்சயமாக வெல்லுவேன். எ - று.

தனக்குப்பின்றோன்றிய சிறுபாலகராதலின் வீரமும் வலிமையுமில்லாதவர் என அவமதித்துச் 'சிறியன்' எனவும், தான் அவருக்கு முன்தோன்றி அழியாவரமும் வலிமையும் பெற்றிருக்கின்றேன் என்னுங் கருத்துடையனாதலின் தன்னைப் பொருளாக மதித்துப் 'பெரியன்' எனவுங்கூறினான் எனவுணர்க. உம்மைகள் எண். (கசஅ)

149. தொகைமைசான்றநங்குரவர்பல்லோருயிர்தொலைத்த
பகைஞராதலினமரரைச்சிறையிடைப்படுத்தேன்
மிகைசெய்தார்களைநாடியேவேந்தொறுத்திடுத
றகைமையேயெனமனுமுறைநூல்களுஞ்சாற்றும்.

இ - ள். சான்ற தொகைமை நம் குரவர் பல்லோர் உயிர் தொலைத்த பகைஞராதலின் - மிக்க கூட்டமாகிய எமது பல முன்னோர்களுடைய உயிரைவாங்கிய குலசத்துருக்களாதலால்,—அமரரை சிறையிடை படுத்தேன் - தேவர்களைச் சிறையில் வைத்தேன்,—மிகை செய்தார்களை நாடியே வேந்து ஒறுத்திடுதல் - குற்றஞ்செய்தவர்களைத் தேடிப்பிடித்து அரசன் தண்டித்தல்,—தகைமையே என மனுமுறை நூல்களும் சாற்றும் - நீதியேயென்று முறையாக மனுநூல்களுங் கூறும். எ - று.

ஏகாரம் முன்னையது அசை; பின்னையது தேற்றம். உம்மை உயர்வுசிறப்பு. (கசகூ)

150\. மாகராயுளோர்காப்பினைவிடுகிலன்மற்றைப்
பாகசாதனன்றன்னையுமருஞ்சிறைப்படுப்ப
னேகநாயகனெய்தினுமெதிர்ந்துபோர்புரிவ
னாகையாலினியிச்சிறுமொழிகளையயர்த்தி.

இ - ள். மாகராய் உளோர் காப்பினை விடுகிலன் - (இப்போது நாமகப்படுத்திவைத்திருக்கின்ற) தேவர்களுடைய சிறையைவிடேன்,—மற்றை பாகசாதனன் தன்னையும் அரும் சிறைப் படுப்பன் - இத்தேவர்களையன்றி இந்திரனையும் (பிடித்துக்) கொடிய சிறையில் வைப்பேன்,—ஏகநாயகன் எய்தினும் எதிர்ந்து போர் புரிவன் - சிவபெருமான் வந்தாலும் எதிர்த்துப் போர்செய்வேன்,—ஆகையால் இனி இ சிறு மொழிகளை அயர்த்தி - ஆதலால் இனி இந்த அற்பவார்த்தைகளை மறந்துவிடு. எ — று.

தன் சாரியை. உம்மை முன்னையது இறந்ததுதழீஇயவெச்சம்; பின்னையது உயர்வு சிறப்பு. பசுபதி சிவபெருமான் ஒருவரே என வேதாகமங்கள் கூறுதலின் 'ஏகநாயகன்' என்றான். (௧௫0)

151\. உரைப்பதென்னினியொருவயிற்றென்னுடனுதித்துப்
பெருக்கமுற்றனைநங்குலப்பகைஞரைப்பெரிது
நெருக்கலின்றியேயவர்கள்பாற்பட்டனைநீயே
யிருக்கமற்றொருதெவ்வரும்வேண்டுமோவெனக்கே.

இ - ள். இனி உரைப்பது என் - இனிநான் சொல்லவேண்டுவதென்ன,—என்னுடன் ஒரு வயிற்று உதித்து பெருக்கம் உற்றனை - என்னுடன் சகோதரனாகப்பிறந்து பருத்திருந்தாய்,—நம் குலப்பகைஞரை பெரிதும் நெருக்கலின்றியே அவர்கள் பால் பட்டனை - நமது குலப்பகைவராயுள்ள தேவர்களை மிகவும் வருத்தாமல் அச்சத்துருக்கள் பக்கமாகவிருக்கின்றாய்,—நீயே இருக்க மற்றொரு தெவ்வரும் எனக்கு வேண்டுமோ - நீயிருக்க வேறொரு பகைவரும் எனக்கு வேண்டுமோ (வேண்டாம்.)எ-று.

ஏகாரம் நீயே என்பதில் பிரிநிலை; ஏனையவற்றில் அசை. ஓகாரம் எதிர்மறை. உம்மை இழிவுசிறப்பு. (௧௫௧)

152\. பத்துக்கொண்டநூறுடையதோர்சென்னியும்பலவாங்
கொத்துக்கொண்டமர்தோள்களுங்கரங்களின்குழுவு
மெத்துக்காற்றினைவன்மையும்வீரமுமிழந்தாய்
பித்துக்கொண்டவர்தம்மினும்பேதைமைபிடித்தாய்.

இ - ள். பத்துக்கொண்ட நூறு உடையது ஓர் சென்னியும் - ஆயிரக்கணக்கான தலைகளையும்,—பல ஆம் கொத்து கொண்டு அமர் தோள்களும் - அனேகமான கூட்டம் பொருந்திய புயங்களையும்,—கரங்களின் குழுவும் - கைகளின் கூட்டங்களையும்,—எத்துக்கு ஆற்றினை - எதற்காகச்சுமந்தாய்,—வன்மையும் வீரமும் இழந்தாய் - வலிமையையும் வீரத்தையுமிழந்தாய்,—பித்துக்கொண்டவர் தம்மினும் பேதைமை பிடித்தாய் - பைத்தியம் பிடித்தவர்களினும் பார்க்கப் பெருமூடனாகவிருக்கின்றாய். எ — று.

பலவாங்கொத்துக் கொண்டமர் தோள்களுங் கரங்களின் குழுவும் எனவே இரண்டாயிரம் புயங்களும் இரண்டாயிரங் கைகளுமென்பது பெறப்படும். முன் வீரமும் வன்மையுமுடையனாய் இப்போது அவைகளை யிழந்தனையாகலின் ஆண்மகனல்லன் என்பது போதர இழித்துக்கூறினன். பின் வருவனவும் அன்ன. உம்மை முன்னைய எண்; பின்னையது இழிவுசிறப்பு. (௧௫௨)

வேறு.

153. தானவர்வழிமுறைதன்னைவிட்டனை
வானவர்போன்றனைவன்மைசிந்தினை
மேனிகழ்திட்பமும்விறலுமாண்டனை
மோனமொடருந்தவமுயலப்போதிநீ.

இ - ள். தானவர் வழிமுறை தன்னை விட்டனை - அசுரர்களுடைய குலமுறைமைகளைவிட்டாய்,—வானவர் போன்றனை - தேவர்களைப்போலாயினை,—வன்மை சிந்தினை - வலிமையையிழந்தனை,—மேல் நிகழ் திட்பமும் விறலும் மாண்டனை - மேலாக விளங்குகின்ற தைரியத்தையும் வெற்றியையு நீங்கப்பெற்றனை,—நீ மோனமொடு அரும் தவம் முயல போதி - (ஆதலால் இனி) நீ மௌனத்தோடு அரிய தவத்தை முயன்று செய்யும் பொருட்டுப் போவாயாக. எ — று.

தன் சாரியை. உம்மைகள் எண். பழிபாவங்களுக்கஞ்சாமை, தைரியம்விடாமை, தேவர்களை வருத்துதல் முதலிய கொடுங்குணமுடைய அசுரகுலத்திற் பிறந்தும் அவைகள் சிங்கமுகாசுரனிடத்தில்லாமையால் 'தானவர் வழிமுறை தன்னை விட்டனை' யென்றும், பழிபாவங்களுக்கஞ்சுதல், தைரியமில்லாமை, நீதிநெறியொழுகல் முதலிய குணமுடைய தேவகுலத்தில் அவன் பிறவாதிருந்தும் அக்குணங்கள் அவனிடத்திருத்தலின் 'வானவர்போன்றனை' யென்றும், மௌனந் தவத்திற்கின்றியமையாத விசேடகுணமாதலின் 'மோனமொடருந்தவ முயலப்போதி' யென்றுங் கூறினான். (௧௫௩)

154. மறந்தனையிழந்தனைமானநீங்கினை
சிறந்திடுமவுணர்தஞ்சீர்த்திமாற்றிடப்
பிறந்தனையீண்டொருபயனும்பெற்றிலை
யிறந்தனைபோலுநீயிருந்துளாய்கொலோ.

இ - ள். மறந்தனை இழந்தனை - வீரத்தை இழந்தாய்,—மானம் நீங்கினை - மானத்தைவிட்டாய்,—சிறந்திடும் அவுணர்தம் சீர்த்தி மாற்றிட பிறந்தனை - சிறந்த அசுரர்களுடைய கீர்த்தியை யழிக்கும்பொருட்டுப் பிறந்தாய்,—ஈண்டு ஒரு பயனும் பெற்றிலை - இவ்வுலகத்தில் ஒரு பிரயோசனத்தையும் பெற்றாயில்லை,—நீ இறந்தனைபோலும் - நீ இறந்தாய்போலும்,—இருந்துளாய் கொலோ - நீ உயிருடனிருக்கின்றாயா? எ — று.

தன், தம் சாரியை. கொல் அசை. போலும் ஐயம். ஓகாரம் வினா. உம்மை இழிவுசிறப்பு. (௧௫௪)

155. மந்திரியாதியான்மற்றிதற்குநீ
சிந்தையில்வெருக்கொளிற்றிசைமுகத்தர்போ
லைந்தியலங்கமொன்றங்கைபற்றுதி
வெந்திறலேயெனப்படையும்வீசியே.

இ - ள். மந்திரி ஆதி - (இத்தன்மையனவாகிய புத்திகளை எனக்குப் போதித்ததற்கு) மந்திரியாகவிரு,—இதற்கும் நீ சிந்தையில் வெருக்கொளில்-இப்படியிருத்தற்கும் நீ மனதில் அச்சங்கொண்டால்,—வெம் திறலே என படையும் வீசி - மிக்க வலிமையையிழந்ததுபோல உனதாயுதங்களையும் எறிந்துவிட்டு,—திசை முகத்தர்போல் - பிரமாவைப்போல,—ஐந்தியல் அங்கம் ஒன்று அங்கை பற்றுதி - பஞ்சாங்கமொன்றைக் கையிலெடுத்துக்கொள். எ — று.

தைரியத்தை எவ்வாறு இழந்தனையோ அவ்வாறு படைகளையு மெறிந்துவிட்டுப் பஞ்சாங்கத்தைக் கையிலெடுத்துக்கொள். அதுவே உனக்குத்தகும் என்பது கருத்து. ஆல், மற்று, ஏகாரம் பின்னையது அசை. ஏகாரம் முன்னையது பிரிநிலை. உம்மைகள் இறந்ததுதழீஇயவெச்சம். (கருரு)

156. கிளைத்திடுகள்ளியின்கிளைகளாமென
வளர்த்தனைபலதலைவரம்பில்கைத்தல
நெளித்தனைசுமந்தனைநெடிதுகாலமா
விளைத்தனைவலியிலாயாதுசெய்திநீ.

இ - ள். கிளைத்திடு கள்ளியின் கிளைகள் ஆம் என பல தலை வளர்த்தனை - கிளைத்திருக்கின்ற கள்ளிகளின் கிளைகள் என்று சொல்லும்படி பலதலைகளை வளர்த்தாய்,—வரம்பு இல் கைத்தலம் நெளித்தனை சுமந்தனை நெடிது காலமா இளைத்தனை - அளவில்லாத கைகளை நெளித்துக்கொண்டு சுமந்தமையால் அனேககாலமாக இளைத்தாய்,—வலி இலாய் - தைரியமில்லாதவனே,—நீ யாது செய்தி - நீ என்ன செய்வாய் (உன்னாலொன்றுஞ் செய்யவியலாது.) எ - று. (கருசு)

157. பண்டுணர்வில்லதோர்பருவமாதலிற்
சண்டனைவருணனைத்தளையினிட்டனை
யண்டரையலைத்தனையறிவுகூடலிற்
பெண்டிரினடுங்கினைபேடிபோலுநீ.

இ - ள். பண்டு உணர் வில்லது ஓர் பருவம் ஆதலில் சண்டனை வருணனைத் தளையில் இட்டனை - முன்னாளிலே புத்தியில்லாத சிறுபருவமாதலால் இயமனையும் வருணனையும் பிடித்து விலங்குபூட்டிச் சிறையில்வைத்தாய்,—அண்டரை அலைத்தனை - (அதுவுமன்றித்) தேவர்களையும் வருத்தினாய்,—அறிவு கூடலில் - (இப்பொழுது) புத்திவந்தமையால்,—பெண்டிரின் நடுங்கினை - பெண்களைப்போல நடுக்கமுற்றாய்,—நீ பேடி போலும் - நீ பேடியைப்போலு மிருக்கின்றாய். எ - று.

பேடி - அலி. ஆண்மகனுக்குரிய வீரம் மனத்தைரியம் வலிமை அஞ்சாமை முதலிய குணங்களில்லாது அச்சமடைதலின் 'பேடிபோலு' மென்றான். எண்ணும்மைகள் தொக்கன. (கருஎ)

158. பன்னெடுந்தலையுடைப்பாலனாகுமுன்
வன்மையுமாடலும்வந்துபார்த்திட
வின்னமும்வந்திலள்வருந்தியீன்றதா
யன்னைதன்குறைகொலோவருவமானதே.

இ - ள். பல் நெடும் தலை உடை பாலன் ஆகும் உன் வன்மையும் ஆடலும் வந்து பார்த்திட வருந்தி ஈன்ற தாய் இன்னமும் வந்திலள் - பலநெடிய தலைகளையுடைய புதல்வனாகியவுனது வல்லபத்தையும் வெற்றியையும் வந்து பார்க்கும்பொருட்டு உன்னை வருந்திப்பெற்ற மாதாவாகிய மாயவள் இன்னமும் வந்தாளில்லை,—அன்னை அருவமானது தன் குறை கொலோ - மாதாவாகிய அம்மாயவள் அரூபியாகவிருப்பது அவளுடைய தவக்குறைதானோ. எ — று.

உம்மை முன்னைய எண்; பின்னையது இழிவுசிறப்பு. கொல் அசை. ஓகாரம் வினா. மாதாவின் தவக்குறைதானோ அவளரூபியானது என மாற்றாது பொருளுரைப்பினுமமையும். உருவமுடையளாயின் வந்துபார்த்து மகிழ்ச்சியடைவாள் என்பது தாற்பரியம். பலதலையென்றது ஆயிரந்தலைகளை. (கருஅ)

159. பகையெனவொன்றுறிற்பதைபதைத்தெழீஇச்
சிகையுடைவாலுளைச்சீயஞ்சீறியே
தருவிறல்கொள்ளுமாலவற்றின்றன்மையாய்
மிகுதலைபெற்றதும்வீண்கொலெம்பிநீ.

இ-ள். பகை என ஒன்று உறில் - பகை என்று ஏதேனுமொன்று வந்தால்,—பதைபதைத்து எழீஇ - பதைபதைத்தெழுந்து,—சிகை உடை வால் உளை சீயம் சீறி தருவிறல் கொள்ளும் - குடுமியாகிய வெண்மயிர் செறியப்பெற்ற சிங்கமானது சினந்து தருந்த வெற்றியையடையும்,—எம்பி நீ - என்றம்பியே நீ,—அவற்றின் தன்மையாய் மிகு தலை பெற்றதும் வீண் கொல் - அச்சிங்கங்களின்றன்மையாய் மிகுதியான தலைகளைப்பெற்றதும் வீண்தானோ. எ—று.

ஏ, ஆல் அசை. உம்மை இழிவுசிறப்பு. கொல் ஐயம்; அசையெனினுமாம், வால் - வாலெனினும், உளை - புறமயிரெனினுமமையும். பகையாக மிருகங்கள் தன்மீதுவரின் மிருகராசனாகிய சிங்கஞ்சீறியெழுந்து அம்மிருகங்களையெல்லாந் தப்பாது வெற்றிகொள்ளும். அதுபோல, பகைவர் மாறுகொண்டு போருக்குவரின் எதிர்சென்று அவர்களையெல்லாந் தப்பாதுவெற்றிகொள்ளுதலே எமக்கு முறை. அங்ஙனமில்லாது அஞ்சி உற்சாகாதி குணங்களையிழந்து அவர்கள் சார்பாகச் சில நியாயப்பிரமாணங்கள் எடுத்துப் பேசினை ஆதலால் சிங்கமுகங்களைப்பெற்றும் அவற்றா லொருபயனுமில்லையென்பான் 'அவற்றின் றன்மையாய் மிகுதலைபெற்றதும் வீண்கொலெம்பிநீ' யென்றான். (கருகூ)

160. பூதரைத்தலைவரைப்புராரிமைந்தனை
யேதிலர்யாரையும்யான்வென்றேகுவ
னீதளர்வெய்திடனினதுமாநகர்
போதுதியென்றனன்புலனில்புந்தியான்.

இ-ள். புலன் இல் புந்தியான் - மெய்யுணர்வில்லாத புத்தியையுடைய சூரபன்மன்,—பூதரை தலைவரை புராரி மைந்தனை எதிலர் யாரையும் யான் வென்று எகுவன் - பூதர்களும் சேனாதிபதிகளும் சிவகுமாரனுமாகிய பகைவர்களெல்லாரையும் யான்வென்று திரும்பிவருவேன்,—நீ தளர்வு எய்திடல் - நீ வருந்தாதே,—நினது மாநகர் போதுதி என்றனன் - உனது பெரியநகரத்திற்குப் போகக்கடவை என்று கூறினான். எ—று.

பூதரையும் தலைவரையும் சிவகுமாரனையும் பகைவர்களனைவரையும் எனக்கூறுவாருமுளர். உம்மை முற்று. (கசூ0)

161. என்றிவையவுணர்கோனிசைத்தகாலையி
னன்றிவனுணர்வெனநகைத்துக்கண்டொறுந்
துன்றியபேரழல்சொரியவெஞ்சினத்
தொன்றியதன்னுளத்தினையவுன்னுவான்.

இ-ள். என்று இவை அவுணர்கோன் இசைத்தகாலையில் - என்றிப்படிக்கடும்வார்த்தைகளை அசுரராசனாகிய சூரபன்மன்சொல்லிய பொழுது,—இவன் உணர்வு நன்று என நகைத்து - (சிங்கமுகன்) இவருடையபுத்தி நன்றாக விருக்கின்றதென்று சிரித்து,—கண் தொறும் துன்றிய பேர் அழல் சொரிய - கண்கடோறும் நெருங்கிய மிக்க தீப்பொறிகள் சிதற,—வெம் சினத்து ஒன்றிய தன் மனத்து இனைய உன்னுவான் - கடுங்கோபத்தோடு பொருந்திய தன்மனசில் இவைகளை நினைக்கின்றான். எ—று.

கருகூ ம் செய்யுள்முதல். கசூ0 ம் செய்யுள்வரையுஞ் சூரன் எடுத்துப்பேசியவார்த்தைகள் நியாயவீனமாதலால், 'கண்டொறும்—உன்னுவான்' என்றார். (கசூக)

162. உறுதியையுரைத்தனனுணர்விலாதவன்
வறிதெனையிகழ்ந்தனன்வருவதோர்கில
னிறும்வகைநாடினன்யாதொர்புந்தியை
யறிவிலர்க்குரைப்பவரவரிற்பேதையோர்.

இ - ள். உறுதியை உரைத்தனன் - (நம்முடைய தமையனுய்ந்திருக்கவேண்டுமென்று) உறுதியாகிய புத்திகளை அறிவித்தேன்,—உணர்விலாதவன் வறிது எனை இகழ்ந்தனன் - அறிவில்லாத இவர் வீணுக என்னை நிந்தித்தார்,—வருவது ஓர்கிலன் - மேல்வருங்காரியங்களை யோசித்தாரில்லை,— இறும்வகை நாடினன் - தான்கெடத்தக்கபுத்தியையே நினைத்தார்,—யாது ஓர் புந்தியை அறிவிலர்க்கு உரைப்பவர் அவரிற்பேதையோர் - ஏதேனுமொரு புத்தியை மூடர்களுக்குச் சொல்பவர்கள் அவரினும் மூடர்களே. எ - று.

அறிவில்லாதவர்களுக்குப் போதிக்கும் போதனைகளாலொருபயனுமில்லையென்பது தாற்பரியம். அவரினும் என்னும் இழிவுசிறப்பும்மை தொக்கது. (கசுஉ)

163. உய்த்தனர்தேன்மழையுதவிப்போற்றினுங்
கைத்திடறவிருமோகாஞ்சிரங்கனி
யத்தகவல்லவோவறிவிலாதவன்
சித்தமதுணர்வகைதெருட்டுகின்றதே.

இ - ள். உய்த்தனர் தேன் மழை உதவி போற்றினும் - (காஞ்சிரமரத்தை) வைத்துத் தேனை மழைபோலச் சொரிந்து வளர்த்தாலும்,—காஞ்சிரங்கனிகைத்திடல் தவிருமோ - அக்காஞ்சிரங்கனியானது கைப்பு நீங்குமோ (நீங்காது),—அத்தகவு அல்லவோ - அத்தன்மையல்லவா,—அறிவு இலாதவன் சித்தமது உணர் வகை தெருட்டுகின்றது - விவேகமில்லாதவன் மனந் தெளியுமாறு (நியாயங்களை எடுத்துக்கூறி அவனைத்) தெளியும்படிசெய்தல். எ — று.

மூடனுக்கெதைக்கூறினும் அவன் தான்கொண்ட குணம் விடானென்பது தாற்பரியம். உம்மை இழிவுசிறப்பு. ஓகாரம் முன்னையது எதிர்மறை; பின்னையது தேற்றப்பொருளில்வந்தது. ஏகாரம் அசை. (கசுங)

164. தொலைக்கருந்திருவுடைச்சூரன்புந்தியைக்
கலக்கினுமுய்வகைகருதுகின்றில
னலக்கணுற்றிருந்துநாமிரங்கியாவதென்
விலக்கரும்விதியையாம்வெல்லவல்லமோ.

இ - ள். தொலைக்க அரும் திரு உடை சூரன் புந்தியை - (பிறரொருவராலும்) நீக்கக்கூடாத பெருஞ்செல்வத்தையுடைய சூரபன்மனது மனதை,—கலக்கினும் உய்வகை கருதுகின்றிலன் - (நற்புத்திகூறிக்) கலக்கினும் அவர் உய்ந்திருக்கும்வகையை நினைக்கின்றாரில்லை,—அலக்கண் உற்று இருந்து நாம் இரங்கி ஆவது என் - (ஆகவே) துன்பங்கொண்டிருந்து நாம்வருந்துவதால் ஆகத்தக்கதென்ன(ஒன்றுமில்லை),—வெலற்கு அரும் விதியை யாம் வெல்லவல்லமோ - (எந்தமகான்மாக்களாலும்) வெல்லக்கூடாத விதியை நாம் வெல்லுதற்கு வல்லபமுடையேமா (வல்லபமுடையமல்லேம்.) எ - று.

எத்திறத்தாலுமழிக்கப்படாத திருவுடையான் என்பார் 'தொலைக்கருந் திருவுடைச்சூரன்' என்றான். கலக்கல்வினைக்கு புந்தியாகிய கடலை நற்போதனையாகிய மத்திட்டுக் கலக்கினுமெனச் சிலர் உருவகஞ்செய்வர். விதிவலியை எவரும்வெல்லமாட்டார்களென்பது கருத்து. கலக்கினுமென்னும் உம்மை மனக்கடுமையை விசேடித்தலின் இழிவுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. (கசுச)

165. ஆவதுவிதியெனினனைத்துமாயிடும்
போவதுவிதியெனினெவையும்போகுமாற்
றேவருக்காயினுந்தீர்க்கத்தக்கதோ
வேவருமறியொணுவீசற்கல்லதே.

இ - ள். ஆவது விதி எனின் அனைத்தும் ஆயிடும் - வருவதற்கேதுவாகிய விதியாயின் எல்லாச்செல்வங்களுமாகும்,—போவது விதி யெனின் எவையும் போகும் - அழிதற்கேதுவாகிய விதியாயின் எல்லாச் செல்வங்களும் போகும்,—எவரும் அறிய ஒணு ஈசற்கு அல்லது - எவர்களானுமறியப்படாத பரமபதியாகிய சிவபிரானுக்கன்றி,—தேவருக்கு ஆயினும் தீர்க்கத்தக்கதோ - அரிபிரமாதிதேவர்களுக்காயினும் விதியைவெல்ல முடியுமோ (முடியாது.) எ – று.

ஆவதுவிதி போவதுவிதி என்பன எதிர்காலத்தான் விரிக்கப்பட்டுக் காரணப்பொருளவாய் நின்றன. பண்புத்தொகையெனச் சிலர் கூறுவர். "கேடுவரும்பொழுது மதிகெட்டுவரு" மென்ப துலகவழக்கு. "ஆகூழாற்றோன்றுமசைவின்மைகைப்பொருள்—போகூழாற்றோன்றுமடி" எனநாயனுர் கூறியவாக்கானுமறிக. பெரியோர் நூலளவையானும் தியானுதிகளானும் ஒருவாறு இறைவனது பொதுவிலக்கணங்களை உணரினும் சிறப்பிலக்கணங்கள்வாக்குமனுதீதாகோசரமாதலின் 'எவருமறியொணுவீசற்கல்லதே' என்றுன். உம்மை முன்னையமுற்றொடு எண்; பின்னைய உயர்வுசிறப்பும் முற்றும். ஓகாரம் எதிர்மறை. ஆல், ஏ அசை. (௧௬௫)

166. நீண்டசெஞ்சடைமுடிநிமலனீய்ந்தநாண்
மாண்டதுமாய்ந்திடுமெல்லைவந்ததா
லீண்டுளார்யாவருமிறையுந்துஞ்சுமாற்
பூண்டிடுமமரர்கோன்றவமும்பொய்க்குமோ.

இ - ள். நீண்ட செம் சடை முடி நிமலன் ஈந்தநாள் மாண்டது - நெடிய சிவந்த சடாமுடியையுடைய மலரகிதராகிய சிவபெருமான் கொடுத்தருளிய காலம் முடிந்தது,—மாய்ந்திடும் எல்லை வந்தது - (அதனுல்) இறக்குங்காலஞ் சமீபித்தது,—ஈண்டு உளார் யாவரும் இறையும் துஞ்சும் - (இனி) இவ்விடத்திலுள்ளவர்களனைவரும் அரசனுகிய சூரபன்மனும் இறந்துவிடுவார்கள்,—அமரர் கோன் பூண்டிடு தவமும் பொய்க்குமோ - தேவர்க்கரசனுகிய இந்திரன்செய்த தவமும் பொய்யாகுமோ (பொய்யாகாது.) எ - று.

உம்மை முன்னையவை எண்ணேடுமுற்று; பின்னையது உயர்வுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை. ஆல் அசை. (௧௬௬)

167. இறப்பதுசாதமேலிறைவனென்னுரை
வெறுத்தனனிகழுமேல்வேண்டியின்னும்யான்
மறுத்தெதிர்மொழியலன்மன்னவென்பிழை
பொறுத்தியென்றின்னுரைபுகல்வதல்லதே.

இ - ள். இறைவன் என் உரை வெறுத்தனன் இகழுமேல் - அரசர் என்னுறுதிமொழிகளை வெறுத்திகழ்வாராஞல்,—மேல் இறப்பது சாதம் - இனி இறத்தல் நிச்சயம் (ஆதலால்),—மன்ன என்பிழை பொறுத்தி என்று இன் உரை புகல்வது அல்லது - ராசனே என்குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளுமென்று இனிய வசனங்களைச் சொல்வதே அன்றி,—வேண்டி இன்னும் யான் மறுத்து எதிர்மொழியலன் - பின்சென்று முன்சொன்னதன்றி இன்னமும் நான் மறுத்து எதிர்வார்த்தைபேசேன். எ - று.

என்னுறுதிமொழிகளைக் கேளாதபோது இனியான் தடுத்துப்பேசுதல் மரியாதையல்லவென்பான் 'வேண்டியின்னும் யான்மறுத்தெதிர்மொழியலன்' என்றுன். உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். ஏகாரம் அசை. (௧௬௭)

168. மன்னவர்மன்னவன்வள்ளல்வேலினு
லின்னினியிறந்திடும்இதுவுநோக்கியே
பின்னுமிங்கிருந்திடல்பிழையதாகுமான்
முன்னுறமுடிவதேமுறையதாமெனு.

இ - ள். மன்னவர் மன்னவன் வள்ளல் வேலினால் இன்னினி இறந்திடும் - அரசர்க்கரசனாகிய சூரபன்மன் குமாரஸ்வாமியினது வேலாயுதத்தினால் இனிமேல் இறந்துபோவான்,—இதுவும் நோக்கியே - இவனிறப்பதையும் பார்த்துக்கொண்டு,—பின்னும் இங்கு இருந்திடல் பிழையது ஆகும் - பின்பும் இவ்வுலகத்திலிருந்து வாழுதல் குற்றமாகும்,—முன் உற முடிவதே முறையது ஆம் எனு - இவனுக்குமுன் இறந்துவிடுதலே முறைமையாகுமென்று. எ – று.

அடியார்வேண்டிய வேண்டியவண்ணம்வரையாதுதவும் அருட்பெருங் கொடையாளராகலின் 'வள்ள' லென்றான். ஏகாரம் முன்னையதும் ஆலும் அசை;பின்னையது தேற்றம். அது இரண்டும் பகுதிப்பொருள்விகுதி. உம்மை முன்னையது இழிவுசிறப்பு; பின்னையது இறந்ததுதழீஇயவெச்சம். (௧௬௮)

169. சிந்தனைசெய்திடுசிங்கமாமுகன்
றந்தையைநிகர்வருதம்முன்றாடொழா
வந்தனைசெய்தனன்மன்னசீறிடேல்
புந்தியிலேன்பிழைபொறுத்தல்வேண்டுமால்.

இ - ள். சிந்தனை செய்திடு சிங்கமாமுகன் - (இவ்வாறு) சிந்திக்கின்ற சிங்கமுகாசுரன்,—தந்தையை நிகர் வரு தம்முன் தாள் தொழா - பிதாவை ஒத்த தமையனாகிய சூரபன்மனுடையபாதங்களைவணங்கி,—வந்தனைசெய்தனன் - வழிபாடுசெய்து,—மன்ன சீறிடேல்-ராசனே கோபங்கொள்ளற்க,—புந்தி இலேன் பிழை பொறுத்தல் வேண்டும் - புத்தியில்லாத வெனது பிழையைப் பொறுத்துக்கொள்ளல் வேண்டும். எ - று. ஆல் அசை.

இவ்விரண்டுசெய்யுளுமொருதொடர். (௧௬௯)

170. சிறியவரொருபிழைசெய்யின்மேலவர்
பொறையொடுபின்னரும்போற்றலல்லதை
யிறையதும்வெகுள்வரோயானுஞ்செய்பிழை
யறிவனீயன்றியேயாரதாற்றுவார்.

இ - ள். சிறியவர் ஒரு பிழை செய்யின் - அறிவில்லாதவர்களாகிய சிறியவர்கள் ஒருகுற்றஞ்செய்தால்,—மேலவர் பொறையொடு பின்னரும் போற்றல் அல்லது இறையதும் வெகுள்வரோ - (அறிவிற்சிறந்த) பெரியோர்கள் பொறுமையோடு பின்பும் அவர்களைப்பேணிக்கொள்ளுதலல்லது சற்றேனுங் கோபிப்பார்களா,—யானும் செய் பிழை - (ஆதலால் அச்சிறியாரோடொத்தவனாகிய) நானும் செய்த குற்றத்தை,—அறிவன் நீ அன்றியே ஆர் அது ஆற்றுவார் - அறிவுடையவராகிய நீரேயல்லாமல் வேறு யாவர் அக்குற்றத்தைப் பொறுப்பார்கள். எ - று.

உம்மை இறையதும் என்பதில் இழிவுசிறப்பும், ஏனையவற்றில் [illegible] வெச்சமுமாம். ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் பிரிநிலை.

171. பொறுத்தனைகோடியென்புன்மையுள்ளமே[illegible]
செறுத்தெனையிகழ்ந்திடல்செருவிற்சென்றியான்
மறுத்தெதிர்மலைந்திடுமாற்றலார்தமை
யொறுத்திடுகின்றனனதனையோர்திநீ.

இ - ள். என் புன்மை பொறுத்தனை கோடி - (அரசனே) என் குற்றத்தைப்பொறுத்துக்கொள்ளும்,—உள்ள மேல் செறுத்து எனை இகழ்ந்திடல் - மனதில் வெறுத்து என்னை இகழவேண்டாம்,—யான் செருவில் சென்று - நான் போர்முகத்திற்போய்,—மறுத்து எதிர் மலைந்திடு மாற்றலார் தமை - தடுத்து எதிரேநின்று போர்செய்கின்ற பகைவர்களை,—ஒறுத்திடுகின்றனன் - கொல்லுகின்றேன்,—நீ அதனை ஓர்தி - நீரதனை அறியக்கடவீர். எ - று. ஒறுத்தல் - தண்டித்தல். தம் சாரியை. (௧௭௧)

172. செருவினுக்கேகுவன்செறுநர்தம்மிசைத்
தருதியால்விடையெனத்தம்பிகேட்டலும்
பெரிதுளமகிழ்ந்தனன்பிறங்குகாதலால்
வருதியென்றனையனைமார்பிற்புல்லினான்.

இ - ள். செறுநர் தம்மிசை செருவினுக்கு ஏகுவன் - நான் பகைவர்மேல் போருக்குச்செல்லுகின்றேன்,—விடை தருதியென தம்பி கேட்டலும் - எனக்குத்தரவு கொடுமென்று தம்பியாகிய சிங்கமுகன் கேட்க,—பெரிது உளம் மகிழ்ந்தனன் - (சூரபன்மன் அவ்வார்த்தையைக்கேட்டு) மிகவு மனமகிழ்ந்து,—பிறங்கு காதலால் வருதி என்று - மிகுந்த விருப்பத்தால் வா என்று,—அனையனை மார்பில் புல்லினான் - அவனைத்தன் மார்போடு இறுகத்தழுவினான். எ - று. ஆல் அசை. தம் சாரியை. (௧௭௨)

173. பையரவளித்திடும்பாதலத்தினில்
வையகவரைப்பினிற்றிசையின்வான்களிற்
செய்யவண்டங்களிற்செய்யும்வென்றியு
ளையநிற்கேதுகொலரியதானதே.

அங்ஙனந்தழுவிய சூரபன்மன் ஆனந்தமிகுதியால் தம்பியைநோக்கிக் கூறுகின்றான்.

இ - ள். பை அரவு அளித்திடும் பாதலத்தினில் - படம்பொருந்திய ஆதிசேடனால் காக்கப்படுகின்ற பாதலத்தினும்,—வையக வரைப்பினில் - பூமியினிடத்தும்,—திசையில் - திக்குகளினும்,—வான்களில் - மேலுலகங்களினும்,—செய்ய அண்டங்களில் - சிறந்த அண்டங்களினும்,—செய்யும் வென்றியுள் - செய்கின்ற வெற்றிகளுள்,—ஐய - ஐயனே,—நிற்கு அரியதானது ஏது கொல் - உனக்கருமையான வெற்றி என்னவிருக்கின்றது (ஒன்றுமில்லை.) எ — று. எண்ணும்மைகள் தொக்கன. கொல், ஏ அசை. ()

174. நீக்கமில்கேள்வியாய்நீமுன்சொற்றன
தூக்குறினென்மனத்துணிவுந்திட்பமு
மூக்கமுமுணரவேயொன்னலாரெனு
மாக்களையடுவதோர்மடங்கலல்லையோ.

இ - ள். நீக்கம் இல் கேள்வியாய் - இடையறாத சாஸ்திரக்கேள்வியையுடைய தம்பீ,—நீ முன் சொற்றன தூக்குறின் - நீ முன்னே என்னெண்ணத்திற்குமாறாகப் பேசியவைகளை ஆலோசிக்கும்போது,—என் மனத்துணிவும் திட்பமும் ஊக்கமும் உணரவே - என்மனத்துணிவையும் தைரியத்தையும் உற்சாகத்தையும் அறியும்பொருட்டேயன்றி வேறில்லை,—ஒன்னலார் எனும் மாக்களை அடுவது ஓர் மடங்கல் அல்லையோ - சத்துருக்களாகிய யானைகளைக்கொல்வதற்கு ஒரு சிங்கமல்லவா. எ — று.

மனத்துணிவு - மனக்கருத்தெனினும், திட்பம் - திடமெனினும், ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சியெனினும், மாக்கள் - மிருகங்களெனினுமமையும். உம்மைகள் எண். ஏகாரம் தேற்றம். ஓகாரம் வினா. (௧௭௪)

175. சென்றனர்மாற்றலரென்கைதேர்தியேற்
கொன்றபின்னல்லதுகும்பிட்டோடிட
வென்றபினல்லதுவெகுளிதீர்தியோ
வுன்றனதாற்றலையுணர்கிலேன்கொலோ.

இ - ள். மாற்றலர் சென்றனர் என்கை தேர்தியேல் - சத்துருக்கள் (போருக்கு) வந்தார்களென்பதை அறிவாயாகில்,—கொன்றபின் அல்லது - அவர்களைக் கொன்றபின்னல்லது,—கும்பிட்டு ஓடிட வென்றபின் அல்லது - அவர்கள் இருகைகளையுங்குவித்துக் கும்பிட்டோடிப்போகும்படி வென்றபின்னல்லாமல்,—வெகுளி தீர்தியோ - கோபந் தணிவாயோ (தணியமாட்டாய்),—உன்றனது ஆற்றலை உணர்கிலேன் கொலோ - உன்னுடைய வலிமையை நானறியேனோ. எ — று.

ஓகாரம் முன்னையது எதிர்மறை, பின்னையது வினா. கொல் அசை. (௧௭௫)

176. இற்றைநாணின்னகரேகியாயிடை
யுற்றிடுபடையெலாமொருங்குகொண்டுநீ
கொற்றமொடிருக்குதிகுமரனீண்டுறின்
மற்றுனைவிளிக்குவன்வருதியாலென்றான்.

இ - ள். இற்றை நாள் நின் நகர் ஏகி ஆயிடை உற்றிடு படை எலாம் ஒருங்கு கொண்டு நீ கொற்றமொடு இருக்குதி - இத்தினத்திலே உன்னகரத்திற்சென்று அவ்விடத்திலுள்ள சேனைகளெல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்துக்கொண்டு நீ வெற்றியோடு மிருக்கக்கடவை,—குமரன் ஈண்டு உறின் - சிவகுமாரராகிய கந்தஸ்வாமி இங்கேவந்தால்,—மற்று உனை விளிக்குவன் வருதி என்றான் - உன்னை அழைப்பேன் வா என்று கூறினான்

ஒருங்குகொள்ளல் - ஆயத்தப்படுத்தலெனினுமாம். குமரன் பாலப்பருவமுடையனாயிருப்பவன் எனவும், தமதன்பர்களுடைய குற்சிதங்களை யழிப்பவனெனவும் பொருள்படும். மற்று, ஆல் அசை. (௧௭௬)

177. ஒல்லெனமுருகவேளுனதுமாநகர்
செல்லினுமேகலைசெருவுக்கன்னது
சொல்லினைவிடுத்தியோர்தூதன்றன்னையான்
வல்லையினமர்செயவருகின்றேனென்றான்.

இ - ள். ஒல்லென முருகவேள் உனது மாநகர் செல்லினும் செருவுக்கு ஏகலை விரைவாக கந்தஸ்வாமி உமது நகரத்திற்கு வந்தாலும் நீர் போருக்குப்போகவேண்டாம்,—அன்னது சொல்லினை ஓர் தூதன் தன்னை விடுத்தி - அவ்விஷயத்தைச்சொல்லி ஒரு தூதனை அனுப்பிவையும்,—யான் வல்லையின் அமர்செய வருகின்றேன் என்றான் - நான் சீக்கிரம் போர்செய்தற்கு வருகின்றேனென்று சொன்னான். எ — று.

முருகவேள் ஒருபொருட்பன்மொழி; பண்புத்தொகையென்று பொருள்கூறினுமமையும். உம்மை எதிர்மறை. (௧௭௭)

178. என்றலுமவுணருக்கிறைவனீங்கிது
நன்றெனவிடையதுநல்கத்தாழ்ந்துபோய்த்
தன்றிருமாநகர்சார்ந்துவைகினான்
வன்றிறலுடையதோர்மடங்கற்பேரினான்.

இ - ள். என்றலும் அவுணருக்கு இறைவன் ஈங்கிது நன்று என விடையது நல்க - என்றிப்படிசிங்கமுகன் கூறியபோது அசுரராசனாகிய சூரபன்மன் இவ்வார்த்

தைநல்லதென்று உத்தரவுகொடுக்க,—வன்றிறல் உடையது ஓர் மடங்கற்பேரினன் - மிக்க வலிமையையுடைய ஒப்பற்ற சிங்கமுகாசுரன்,—தாழ்ந்து போய் - வணங்கிச்சென்று,—தன் திரு மா நகர் சார்ந்து வைகினன் - தனது அழகமைந்த பெரியநகரத்தையடைந்து இருந்தான். எ - று. அது பகுதிப்பொருள் விகுதி. (கஎஅ)

179. ஆனதோர்பொழுதினிலரசனாண்டுறை
தானையந்தலைவரைத்தனையர்தங்களை
யேனையர்யாரையுமேகச்செய்துதன்
மாநகரிந்திரவளத்தின்வைகினன்.

இ - ள். ஆனது ஓர் பொழுதினில் - சிங்கமுகன் தன்னகரத்திற்குப்போயிருந்த பொழுது,—அரசன் ஆண்டு உறை தானையந் தலைவரை தனையர் தங்களை ஏனையர் யாரையும் ஏகச்செய்து - சூரபன்மன் அச்சபையிலிருந்த சேனாதிபதிகளையும் புதல்வர்களையும் மற்றுள்ளவர்களனைவரையும் (தங்கள் தங்களிருப்பிடங்களுக்குப்) போகும்படி உத்தரவுகொடுத்து,—தன் மா நகர் இந்திரவளத்தின் வைகினன் - தனது இலக்குமிவிலாசம்பொருந்திய நகரத்திலே தலைமையாகிய செல்வத்தோடு வாழ்ந்திருந்தான். எ-று.

எண்ணும்மைகள் தொக்கன. உம்மை முற்று. அம், தம் சாரியை. (கஎகூ)

180. அந்தமில்வளனுடையவுணர்காவலன்
மந்திரமிருந்ததுவகுத்துக்கூறினு
மிந்திரன்முதலினோர்யாருமேத்திடச்
செந்தியினமர்ந்தவன்செய்கைசெப்புவாம்.

இ - ள். அந்தம் இல் வளன் உடை அவுணர் காவலன் - அளவில்லாத பெருஞ்செல்வத்தையுடைய அவுணர்க்கரசனாகிய சூரபன்மன்,—மந்திரம் இருந்தது வகுத்துக் கூறினும் - மந்திராலோசனை செய்யும்பொருட்டு மக்கண்முதலாயினரை வருவித்துச் சங்கங்கூடியிருந்த சரித்திரத்தை விரித்துரைத்தோம்,—இந்திரன் முதலினோர் யாரும் ஏத்திட - (இனி) இந்திரன்முதலிய தேவர்களனைவருந்துதிக்க,—செந்தியின் அமர்ந்தவன் செய்கை செப்புவாம் - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கின்ற முருகக்கடவுள்செய்த காரியத்தைக் கூறுகின்றேம். எ — று.

வளம் - வளன் எனப்போலியாயிற்று. அவுணர் காவலன் - அவுணரைப் பரிபாலனஞ்செய்ய வல்லவன். வகுத்துக்கூறினும் முடிந்தது முடித்தலென்னும் உத்தி. செய்கை செப்புவாம் நுதலிப்புகுதலென்னும் உத்தி. உம்மை முற்று. அமர்ந்தவன் வினையாலணையும்பெயர். ஒருவராலும் பெறப்படாத மகைசுவரியமுடையனென்பார் 'அந்தமில் வளனுடை யவுணர் காவலன்' என்றார். (கஅ0)

சூ ர ன மை ச் சி ய ற் ப ட ல மு ற் றி ற் று.

ஆ திருவிருத்தம் - ககஎஅ.

---

மகேந்திரகாண்ட மூலமுமுரையும்

மு ற் று ப் பெ ற் ற து.

---

கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் திருவடிவாழ்க.



# பரிசோதநபத்திரம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௫ | ௫ | ௨ | னென்னில் | னென்னின் |
| ௭ | ௯ | ௧ | வுலகை | வுலவை |
| ௧௫ | ௩௬ | ௬ | ஆ இடை | அ இடை |
| ௧௬ | ௩௮ | ௧௨ | நின்ருர் | நின்ருன் |
| ௧௮ | ௪௪ | ௯ | வீழ்ந்து | வீழ்ந்துமான்றனர் |
| ,, | ,, | ௧௦ | மயங்கினுர்கள் | மயங்கிவருந்தினுர்கள் |
| ௧௯ | ௪௬ | ௬ | உறு | உறும் |
| ,, | ௪௭ | ௭ | சுதனம் | சுதனும் |
| ,, | ,, | ௮ | அளப்பில்லோரும் | அளப்பிலோரும் |
| ௨௦ | ௪௮ | ௭ | என்ருர்கள் | என்ருர் |
| ,, | ௫௦ | ௫ | ஆற்றல் | ஆற்ருல் |
| ௨௬ | ௧௩ | ௧௦ | வங்கள் | ங்கள் |
| ௩௦ | ௭ | ௯ | இவன்போயத் | இவன் போய்த் |
| ௩௪ | ௨ | ௧௧ | நடுக்கி | நடுங்கி |
| ௩௭ | ௧௧ | ௨ | சுற்றியவளப்வில | சுற்றியவளப்பில |
| ௩௮ | ௧௪ | ௭ | ஏன | என |
| ,, | ௧௫ | ௬ | ஏற்ற | எற்ற |
| ௪௪ | ௪ | ௮ | தீமைசெய்ாார்கள் | தீமைசெய்யார்கள் |
| ,, | ,, | ௯ | இது | ஈது |
| ௪௬ | ௯ | ௨ | கபாலத்தீனுடு | கபாலத்தினுடு |
| ௫௭ | ௧௧ | ௭ | எல்லாம் | எலாம் |
| ௬௧ | ௨௩ | ௨ | ஏகினுன் | ஏகினன் |
| ௬௫ | ௧௧ | ௫ | ஓர் | ஒர் |
| ,, | ,, | ௭ | ஓர் | ஒர் |
| ,, | ,, | ௧௦ | ஓர் | ஒர் |
| ௬௬ | ௧௫ | ௯ | எவ்வாறுப்பிழைப்பாய் | எவ்வாறுபிழைப்பாய் |
| ௬௮ | ௨௪ | ௮ | போனது | போயது |
| ௭௪ | ௪௪ | ௪ | ஏற்றினுன் | எற்றினுன் |
| ௭௫ | ௪௭ | ௨ | தன்தாளால் | தன் ஒரு தாளால் |
| ௭௮ | ௧ | ௫ | எகாரம் | ஏகாரம் |
| ,, | ௪ | ௧ | மேதகுமடன்மா | மேதகுமடன்மாத் |
| ௮[illegible] | ௧௮ | ௧௪ | குழ்ந்துள்ள | சூழ்ந்துள்ள |
| ௮௯ | ௩௫ | ௧ | மனைவியர்கள் நினைத்து | நினைத்து |
| ௯௧ | ௪௩ | ௭ | தேர்—(அவ்வழியாக) | தேர் (அவ்வழியாக) |
| ,, | ,, | ௧௦ | குழந்தையைக் | குழந்தைகளைக் |
| ௯௩ | ௫௧ | ௯ | கால்வழுக்கும்ப்டி | கால்வழுக்கும்படி |
| ௯௪ | ௫௩ | ௧௨ | நீக்கினர் | நீங்கினர் |
| ௯௯ | ௬௮ | ௧௨ | எல்லாசாதிகளிலும் | எல்லாச்சாதிகளிலும் |
| ,, | ௬௯ | ௧௩ | எனையவற்றில் | ஏனையவற்றில் |
| ௧௦௧ | ௭௩ | ௧௧ | உன்பதற்குத் | என்பதற்குத் |
| ,, | ௭௪ | ௫ | தாருடையவர் | தாருடைவயவர் |
| ௧௦௩ | [illegible] | ௮ | ஔி | ஒளி |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| க0௬ | ௬அ | ௪ | எகாரம் | ஏகாரம் |
| ,, | ௬௬ | கஉ | துயரெனக்கொணடு | துயரெனக்கொண்டு |
| ககஎ | உ௬ | ௬ | யாதோ | யாவதோ |
| ககஅ | ௩உ ம் | பாட்டு | உரையில் "சூரவர்...... இருமுறைபதிக்கப்பட் | மில்லை" என்பது மிகையாக டிருக்கிறது.ஒன்றைநீக்குக. |
| கஉ௩ | ௪௬ | க | ஒருநாள் | ஒருநாள் |
| ,, | ௪அ | கஉ | எகாரம் | ஏகாரம் |
| கஉ௪ | ௪௬ | உ | குடைகிற்பர் | குடைகிற்பார் |
| ,, | ௫க | கஉ | எகாரம் | ஏகாரம் |
| கஉ௬ | ௫௫ | ௬ | ஓர் | ஓர் |
| ,, | ௫எ | எ | தவரு தவர்கனாகிக் | தவரு தவர்களாகிக் |
| கஉஅ | ௬0 | ௪ | நங்க | னங்க |
| க௩0 | ௬எ | ௫ | தேவர்தம்மை | தேவர்தமை |
| க௩உ | எஉ | ௫ | எகாரம் | ஏகாரம் |
| ,, | எ௪ | அ | துயரகத்து | துயரத்து |
| க௩௩ | எ௬ | க௫ | சுவர்ககாதி | சுவர்க்காதி |
| க௩அ | க0 | கஉ | நேரிலாதகடிநர் | நேரிலாதகடிநகர் |
| க௩௬ | க௩ | ௬ | சயந்தன் | சயந்தன |
| க௪௫ | ௬ | எ | ஓவியக்கொள்கை | ஓவியக்கொள்கை |
| க௪௬ | எ | ௪ | ஏன்று | என்று |
| ,, | ,, | ௫ | வள்ளலாரங்கிய | வள்ளலாராகிய |
| ,, | ௬ | ௩ | மசிழ்வெய்தி | மகிழ்வெய்தி |
| க௫0 | உக | க௩ | செதாற்போன். | செய்தாற்போன் |
| க௫க | உ௩ | அ | அறு | ஆறு |
| க௫உ | உ௫ | அ | தண்டிந்தும் | தண்டித்தும் |
| ,, | உ௬ | ௫ | தோளரய் | தோளாய் |
| க௫௪ | ௩க | ௪ | வந்திடுத | வந்தடுத |
| ,, | ,, | ௬ | ,, | ,, |
| க௫௫ | ௩௩ | ௬ | என்பகற்கு | என்பதற்கு |
| ,, | ௩௫ | கக | செய்தாகள் | செய்தார்கள் |
| க௫எ | ௫ | ௬ | ஓர் | ஓர் |
| க௬0 | க௫ | க | ஓர் | ஓர் |
| ,, | ,, | அ | ஓர் | ஓர் |
| க௬உ | உஉ | உ | மன்னர் | மள்ளர் |
| கஎக | ௫௩ | ௬ | பொபன்னின் | பொன்னின் |
| கஎ௬ | அ௪ | ௫ | அரசர்கள் | அசுரர்கள் |
| கஅஉ | ௬உ | ௬ | ஏலாம் | எலாம் |
| கஅ௬ | க0௪ | ௫ | தமரொடு | தமரோடு |
| கஅஎ | க0௬ | ௩ | வருந்திய | வருத்திய |
| கஅஅ | க0௬ | ௬ | ஓர் | ஓர் |
| க௬0 | ககஎ | அ | சிறைசெய் | சிறைசெய |
| ,, | ,, | க௩ | இறந்தது தழீய | இறந்தது தழீஇய |
| க௬௩ | கஉ௬ | கக | பொருனதிலக் | பொருளதிலக் |
| க௬௪ | கஉஅ | ௬ | உருவமாய் | உருவமாய் அருவுருவமாய் |
| ,, | ,, | ,, | (சகளாகளமாய்) | சகளநிஷ்களமாய் |
| ,, | ,, | க௩ | உபலக்ஷ......பட்டன, | என்பதனையும் |
| ,, | ,, | க௬ | ஆய்....கூட்டப்பட்டது | என்பதனையும்நீக்கிவாசிக்குக |
| க௬௬ | க௩௩ | ௪ | எவ்விடங் | எவ்விடங் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௯௮ | ௧௩௯ | ௮ | என்பதில் | என்பதில் |
| ௧௯௯ | ௧௪௩ | ௧0 | விஸ்வரூப | விசுவரூப |
| ௨0௨ | ௧௫௩ | ௧0 | என்ருன் | என்றுன் |
| ,, | ௧௫௪ | ௯ | சிறைபடுத்திர் | சிறைபடுத்திடுதிர் |
| ௨௧0 | ௨0 | ௧௧ | —ஒரு | —மற்று ஒரு |
| ௨௧௯ | ௩ | ௧0 | ஏலாம் | எலாம் |
| ௨௨௩ | ௧௬ | ௭ | அககா | அங்கர |
| ௨௨௫ | ௨௧ | ௫ | கோள் | கேள் |
| ,, | ,, | ௭ | தூபிகை | தூபிகைச்சூளிகை |
| ௨௨௬ | ௨௭ | ௫ | ஊர்ந்திடு | உளர்ந்திடு |
| ௨௨௭ | ,, | ௩ | சென்றன | சென்ற |
| ,, | ௨௯ | ௧௧ | கந்தஸ்சுவாமி | கந்தஸ்வாமி |
| ௨௨௮ | ௩௨ | ௧௧ | — | கொல் - ஐயம். |
| ௨௩0 | ௩௯ | ௮ | ஒன்ருெடொன் | ஒன்ருெடொன்று |
| ,, | ,, | ௯ | இரத்னங்கள் | இரத்தினங்கள் |
| ,, | ௪0 | ௨ | ஏற்றுழி | எற்றுழி |
| ,, | ,, | ௮ | சுற்றின | சுற்றிய |
| ௨௩௧ | ௪௨ | ௪ | யிடைத்துளித்த | யிடைதுளித்த |
| ,, | ,, | ௮ | ஒளி | ஒளி |
| ,, | ,, | ௯ | துளித்த | துளித்தது. |
| ,, | ௪௪ | ௯ | ஒளி | ஒளி |
| ௨௪௨ | ௩ | ௭ | ஓர் | ஒர் |
| ௨௪௩ | ௬ | ௭ | உடையார் | உள்ளார் |
| ,, | ௮ | ௧0 | வயிரென்க. | வயிறென்க. |
| ௨௪௫ | ௧௪ | ௫ | ஓர் | ஒர் |
| ,, | ௧௬ | ௧0 | ஏகாரம் | ஏகாரம் |
| ௨௪௬ | ௧௮ | ௬ | பரிசுத்தமாகிய | பரிசுத்தாகிய |
| ,, | ௧௯ | ௬ | தொட்டனர் | தொட்டனர்கள் |
| ௨௪௯ | ௨௭ | ௩ | முயன்றனர் | முயன்றனர்கள் |
| ௨௫௫ | ௧௫ | ௯ | வச்சிராவாகு | வச்சிரவாகு |
| ௨௫௮ | ௨௮ | ௨ | வாரியிஞர்ப்புறீஇ | வாரியிஞர்ப்புறீஇப் |
| ௨௫௯ | ௩௩ | ௧ | திகநத | திகந்த |
| ௨௬௧ | ௩௮ | ௮ | ஏய்திஞன் | எய்திஞன் |
| ௨௬௩ | ௪௬ | ௧0 | செப்பல் | புகலல் |
| ௨௬௮ | ௬௨ | ௨ | மருப்பினே | மருப்பிணே |
| ௨௭௬ | ௮௮ | ௧ | கொலேயின் | கொலேயில் |
| ,, | ௯0 | ௯ | ஒரு | ஒரு |
| ௨௭[illegible] | ௯௨ | ,, | வங்சிரவாகு | வச்சிரவாகு |
| ௨௮௧ | ௪ | ௫ | ஏ - று. | எ — று. |
| ,, | ,, | ௬ | கொல் ஐயம். | கொல் ஐயம். ஏ அசை. |
| ௨௮௨ | ௯ | ௫ | இடையகன்ர | இடையகன்ற |
| ௨௮௫ | ௨௧ | ௧0 | (இங்கரமுங் கடலிலழுந்தியது) | (இங்கரமுங்) கடலிலழுந்தியது. |
| ,, | ௨௨ | ௯ | ஏய்திஞன் | எய்திஞன் |
| ௨௮௭ | ௨௯ | ௭ | அதிவேகனே | அதிவீரனே |
| ௨௯௧ | ௪௩ | ௫ | உய்த்தகாலேயில் | உய்த்தகாலேயின் |
| ௨௯௬ | ௧௯ | ௯ | மேன்மமையை | மேன்மையை |
| ௩0௫ | ௨[illegible] | ௧௫ | ஓ அசை. | ஓ அசை. |

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩௧௬ | ௨௯ | ௫ | அழித்துவிடும். | அழித்துவிடும். எ — று. |
| ,, | ௩0 | ௧௨ | அற்றரும் | ஆற்றரும் |
| ,, | ,, | ,, | ஆகாரந் | அகாரந் |
| ௩௨௧ | ௪௫ | ௫ | கொத்தவர்களல்தாத | கொத்தவர்களல்லாத |
| ௩௨௬ | ௫௮ | ௧௫ | பெசிஞனென்பார் | பேசிஞனென்பார் |
| ௩௨௯ | ௬௬ | ௧0 | வில்லைபோலும். | வில்லைப்போலும். |
| ௩௩௫ | ௮௪ | ,, | கருத்தில் | கருத்தின் |
| ௩௩௬ | ௮௬ | ௩ | கேளொடுதடிந் | கேளொடுந்தடிந் |
| ௩௪௯ | ௧௧௬ | ௧௨ | வெல்லுவேனென் | வெல்லுவனென் |
| ௩௪௭ | ௧௧௮ | ௨௪ | தாஊ நாஊாஙு | நாஊ நாஊாஙு |
| ௩௫௧ | ௧௨௭ | ௧ | விரிந்த | விரித்த |
| ௩௫௨ | ௧௨௮ | ௧௭ | தவா நதெராதீ தொ | தவா நரதராதீதொ |
| ௩௫௬ | ௧௩௭ | ௧0 | ஶ்ருயா | ஶ்ருயா |
| ௩௫௭ | ௪௧ | ௧௨ | வாஊவிவரா | வாஊ வ்வரா |

அநுஸ்வாரக்குறி, இசையிலிசைக்குறி முதலியபிழைகள் இங்கே குறிக்கப்பட்டில. ஆங்காங்கு ஏற்றபெற்றி திருத்தி வாசித்துக்கொள்க.

---